# மார்க்கண்டேயன்

## கதைப்பாடல்





டாக்டர் ஆ. தசரதன்

# மார்க்கண்டேயன் கதைப்பாடல்

பதிப்பாசிரியர்

**டாக்டர் ஆ. தசரதன்**



**தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம்**

மே/பா தேவி வார இதழ்

727 அண்ணா சாலை

சென்னை 600 006

1992

Title: **Mārkkanṭēyaṉ Kataippāṭal**
(A Palm-leaf Ballad on Mārkkandēya)

Editor: **Dr. A. Thasarathan,** M.A., Ph.D., Dip. in Ling.



| | | |
|---|---|---|
| First edition | : | December 1992 |
| Size | : | Demy Octavo |
| Pages | : | viii + 510 |
| Publication No | : | 1 |
| Price | : | Rs. |
| Typesetting by | : | **Savithri Laser Printing,**<br>37, Periyapalli Street,<br>Mandavelipakkam,<br>Madras 600 028. ☎ 73268 |
| Printed at | : | **Sekar Offset**<br>Madras 600 005 |
| **Copies can be had from** | : | Centre for Preservation<br>of Tamil Palm-leaf<br>Manuscripts,<br>C/o Devi Weekly<br>727, Anna Salai<br>Madras 600 006. |

Printed and Published with the financial assistance from the Government of India, Department of Education, Langauges Division, Vide Sanction letter F.No.04.09.1989. G.-Cell dated 14.12.1990.

பா. இராமச்சந்திர ஆதித்தன் பி.எஸ்சி.
தலைவர்
தமிழ் ஓலைச்சுவடிகள்
பாதுகாப்பு மையம்

நிர்வாக ஆசிரியர்
மாலை முரசு
சென்னை 600 006
ஆசிரியர்
தேவி வார இதழ்
727, அண்ணா சாலை
சென்னை 600 006

# வாழ்த்துரை

''உடல் மண்ணுக்கு; உயிர் தமிழுக்கு'' எனும் கொள்கையின் அடிப்படையில் எங்கள் தந்தையார் சி.பா. ஆதித்தனார் அவர்கள் வாழ்ந்து காட்டினார்கள். பெரும்பான்மையான பாமர மக்கள் படித்து அறிந்து கொள்ளும் விதத்தில் எங்கள் தந்தையார் அவர்கள் நாளிதழ்களையும் வார இதழ்களையும் உருவாக்கினார்கள். அதன் விளைவாக இன்றைய தினம் தமிழகத்தில் கல்வியறிவு பெற்றோர் கணக்கிலர்.

உலகத்திலேயே சிறந்த இலக்கிய வளம் தமிழ் மொழிக்குத் தான் உண்டு என்பதையும், தமிழகத்தின் புராதன கிராமியக் கலைகளிலும் நாட்டுப்புறப் பாடல்களிலும் உள்ள சிறப்புக்களை இன்றைய தமிழ் மக்கள் அறிந்துகொண்டு பெருமிதம் அடைய வேண்டுமென்றும் அவர்கள் விரும்பினார்கள்.

அந்த வகையில் பாமர மக்களிடம் பக்தியுணர்வை வளர்க்கும் கவிதைகள், காவியங்கள், சிற்றிலக்கியங்கள், நீதிப்பாடல்கள், கதைப்பாடல்கள் போன்றவை எழுதிவைக்கப் பெற்ற ஓலைச்சுவடிகள் தமிழகத்தில் மிகுந்திருப்பதையும் அவை பராமரிக்கப்படாமல் இருப்பதையும் அவர்கள் அறிந்திருந்தார்கள். அவற்றையெல்லாம் சேகரித்து, வகைப்படுத்தி, பாதுகாத்து அப் பாமர மக்களிடம் அவ்விலக்கியங்கள் போய்ச்சேர வேண்டுமென்றும் ஆசைகொண்டிருந்தார்கள்.

ஆதித்தனார் அவர்கள் விட்டுச் சென்ற பணிகளைத் தொடர்ந்து மேற்கொள்ளும் விதத்தில் தமிழகத்தில் பாதுகாப்பின்றிக் காணப்படும் ஓலைச்சுவடிகளைச் சேகரிக்கும் திட்டமும், அவற்றைப் பாதுகாக்க ஒரு நூலகம் அமைக்கும் திட்டமும், அரிய ஓலைச்சுவடி நூல்களைப் பதிப்பித்து வெளியிடும் திட்டமும் தொடங்கப்பெற்

றன. அவ்வாறு கிடைத்த ஓலைச் சுவடிகள் வ.உ. சிதம்பரனார் மாவட்டம், ஸ்ரீவைகுண்டத்தில் எங்கள் தந்தையார் வாழ்ந்த 'அமரர் ஆதித்தனார் நினைவு இல்லத்தில்' நூலகத்தில் வைக்கப்பெற்றுப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

இந்நூலகத்திலுள்ள ஓலைச்சுவடிகளில் மிகவும் அரியதாகவும், பக்தி ஒழுக்கத்தை வலியுறுத்துவதாகவும் அமைந்துள்ள 'மார்க்கண்டேயன் கதைப்பாடல்' எனும் சுவடி முதலாவதாக இப்போது பதிப்பித்து வெளியிடப்படுகின்றது. இதனைத் தொடர்ந்து இன்னும் பல அரிய சுவடி நூல்கள் பதிப்பித்து வெளியிடப்படவிருக்கின்றன. இந்நூல்களில் பொதிந்துள்ள கருத்துக்கள் பாமர மக்களிடம் சென்றடையும் விதத்தில் எளிமையாகவும், அழகாகவும் விளக்கப்படும்.

மார்க்கண்டேயன் கதை தமிழகத்தில் எல்லாப் பகுதிகளிலும் வழங்கப்படுகின்ற கதைதான். ஆனால் தென் மாவட்டங்களில் அக்கதை மகா சிவராத்திரி முழுதும் படிக்கப் பெறும் வழக்கமாக இருந்து வருகிறது. இக் கதை பொதிந்த பாட்டை ஓலைச்சுவடியிலிருந்து, நல்ல முறையில் உரையெழுதிப் பதிப்பித்துள்ள டாக்டர் ஆ. தசரதன் அவர்களைப் பாராட்டி வாழ்த்துகின்றேன். இதைப் போன்ற பல நூல்களை அவர் இம் மையத்தின் வழியாக வெளியிடவும் ஆசி வழங்குகின்றேன்.

பாதுகாப்பின்றி இருக்கும் ஓலைச்சுவடிகளை இம் மையத்தின் நூலகத்திற்கு நல்குமாறும், தமிழில் பல அரிய நூல்கள் வெளிவர ஆதரவு தருமாறும் தமிழ் மக்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை இங்ஙனம்
28.12.1992

**பா. இராமச்சந்திர ஆதித்தன்**

**S.K.T. Ramachandran**
MEMBER OF PARLIAMENT
(RAJYA SABHA)
24, Western Court
New Delhi 110 001
Phone: 3712560

H 56/6-HIG Flats, 3rd Main Road,
Kamaraj Nagar, Thiruvanmiyur,
Madras 600 041. Phone: 416041

Madathur, Gunaramanallur Post,
Kizhapuliyoor Via, Tenkasi TK-627814
Phone: 04633-2455

# அறிமுகம்

மார்க்கண்டேயன் கதைப்பாடல் படிக்கும் அனைவரும் உடன் பொருள் தெரிந்து கொள்ளக்கூடிய—எளிய கவிதைத் தொகுப்பு அல்ல. பல இடங்களில் எளிய நடையோடு மிளிகின்றது தான்; ஆயினும் அடிப்படை உண்மை மறைக்கருத்துக்களை விளக்கும் முயற்சியில் ஈடுபடும்போது புலவரின் கவிதைநடை முற்றிலும் மாறுபடுகின்றது. கற்றோரும் எளிதில் புரிந்து கொள்ள இயலாத கடின சொற்களும், சொற்றொடர்களும் கவிதைகளிடை ஊடுருவிப் பாய்ந்து ஒளிர்கின்றன. அனைவரும் புரிந்து, தெரிந்து மகிழ பேராசிரியர் தசரதனின் உரை பெரிதும் துணையாகுகிறது.

ஓலைச்சுவடிக் கவிதைகளை அச்சிட்டு வெளியிடுவதிலும், உரைகூறுவதிலும் இன்னல்கள் ஏராளம். முதலாவதாகப் புலவரே நேரடியாக எழுதிய சுவடிகள் கிடைப்பது அரிது; கிடைப்பினும் கால வெள்ளத்தில் உருக்குலைந்த சுவடிகளைப் படித்தறிவது மிகக் கடினம். இரண்டாவதாகப் புலவர் சொல்லக் கேட்டு அதைச் சிலர் பலருக்குச் சொல்ல கேள்வியாறாக வழக்கில் நின்று பிறிதொரு காலத்தில் எழுத்து வடிவில், சுவடியில் இக்கவிதைகள் ஏறியிருக்க லாம். வழிவழியாகச் சுவடியில் எழுதியவர் பிழைகளோடு எழுதி யிருக்கலாம். பல வார்த்தைகள் மரபுவழி மருவுகின்றன. நடை முறை மொழிக்கலப்பும் ஏற்படுகின்றது. மூன்றாவதாக, சுவடிப் பிரதிகள் மீண்டும் மீண்டும் தோன்றும்போது மேலும் மேலும் பிழைகள் மலிகின்றன.

சுவடிகளிலிருந்து பெயர்த்தெழுதி உரைகூறி அச்சிட்டு வெளி யிடும்போது பிழைகள் களையப்பட வேண்டும். பிழைகளைக் களைந்து தெளிவாக்கி, உரைகூறுவது எத்துணைக் கடினம் என்பதை அனைவரும் உணர்வர்.

முழுமையாய்த் தமிழ்ப்பெயர் தாங்கி நிற்கும் குறும்பலாப் பேரி, தமிழாசிரியர்கள் பலரைத் தமிழ் நல்லுலகிற்கு அளித்துள் ளது. அவ்வொளி மலர்களில் ஒருவரான பேராசிரியர் தசரதன்

எளிதில் அனைவரும் கவிதை முழுப்பொருளை அறிந்திட ஏதுவாகப் போற்றற்குரிய பதவுரை தந்துள்ளார்.

வெறும் உரையினை மட்டும் வழங்கிப் படிப்போரைச் சோர்வு மடியில் கிடத்தாமல், இடத்திற்கேற்ப ஒப்புடைக்கவிநூல்களை மேற்கோள் காட்டிப் படிப்போர்க்கு ஊக்கம் ஊட்டியுள்ளார்.

கடினமான கவிதைகளை எளிதில் புரிந்து கொள்வதோடு, கற்போர் சோர்வின்றி அயராது தொடர்ந்து படிக்க ஏதுவாக, சுவைபட ஒப்புக் கவிநூல்களினின்று மேற்கோள் காட்டியுள்ளது அனைவரையும் கவரும் பாங்குடைத்தாம்.

நாட்டுப் புறங்களில் ஆங்காங்கே தேடுவாரற்றுக் கிடந்த ஓலைச்சுவடிகளை அலைந்து திரிந்து, கண்டு, பெற்று, அவைகளுக்கு உரைகூறி அச்சிட்டு வெளியிடுவதில் பேராசிரியர் தசரதன் தான் பேரின்பம் அடைவதோடு தமிழுக்கும் மனித சமுதாயத்திற்கும் நல்லதோர் தொண்டாற்றுகிறார்.

அவர் பணியாற்றும் தமிழ் ஆய்வுப் பட்டறையின் அண்டை இல்லத்தில் சிறிதுகாலம் வாழ்ந்த நான் அவர்தன் தமிழ்ப்பணி ஆர்வம் கண்டு பெரிதும் மகிழ்ந்துள்ளேன்.

***குறும்பை ஈன்ற கூர்மதிக் கிழவன்***
***எறும்பை வென்ற ஏற்றமிகு உழைப்பினன்***
***கரும்பை மென்று கவிப்பொருள் சாறீந்தான்***
***அருந்தி மகிழ்வீர்! அருந்தமிழ் கற்போரேயால்!***

அச்சேறாக் கன்னியாய் அயர்ந்துறங்கும் ஓலைச்சுவடிகளைத் தேடி உரைகண்டு, அச்சுப் பல்லக்கேற்றி அவனியில் உலவவிட, தொடர்ந்து, தசரதன் ஓடிக் கொண்டேயிருக்கிறார். அவர் தமிழ்ப் பணி சிறக்க வாழ்த்துகிறேன்.

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!

வாழிய பாரத மணித்திருநாடு!

வந்தே மாதரம்! வந்தே மாதரம்!

புது தில்லி,
***31.12.92***

**எஸ்.கே.டி. இராமச்சந்திரன்**

இந்திய நாடாளுமன்ற உறுப்பினர்

# The Story of Markandeyan

The Markandeyan myth is popular and widely referred to in all Indian literature. The oft-repeated story of Markandeyan has its main source in the Sanskrit **Mahapuranas,** particularly the seventh **purana** namely the **Markandeyan purana.** In Tamil, even though its traces are found in the medieaval literature, especially in **Tevaram** hymns, a full narrative form could be traced to about 500 years back. Mr. M. Arunachalam (1947) opines, "**Markandeyan Ammanai** is a very ancient ballad of the **puranic** types". The story which was once popular in the Chola country was revived in the South Pandiyan country by people who migrated to this part of the country. Moreover, before the advent of English education, this was a text book for young students.

The story unfolds thus: Markandeyan was born by the grace of Lord Siva to a Saint's family after hard penance. However he was blessed with only 16 years of life. When he attained the age of 16, he chanted the name of Lord Siva at Kadavur and conducted daily worship by singing and praising Him. Markandeyan a pious boy, eluded the death warrant of the attendants of the God of Death, Yama, because of the divine power he acquired. Finally Yama himself appeared before Markandeyan, and tried to draw him with his rope; but Markandeyan embraced the Linga thereby making the rope fall on both, which resulted in creating a scar on the sacred Linga. Enraged by this, Lord Siva appeared and kicked Yama to death. Markandeyan who fell unconscious before this battle between Lord Siva and Yama, came to know later the blessings of Lord Siva to live as a Siranjivi. He sings hymns on Lord Siva and chants His name while on pilgrimages to the holy places of Lord Siva.

This story is popular in all parts of our country and preaches the value of bakthi to children.

# பொருளடக்கம்


| | |
|---|---|
| வாழ்த்துரை | iii |
| அறிமுகம் | v |
| The Story of Markandeyan | vii |
| மார்க்கண்டேயன் கதைப்பாடல் | |
| முன்னுரை | 1-47 |
| மூலமும் உரையும் | 49-447 |
| சொல்லகராதி | 449-510 |

# முன்னுரை

'மார்க்கண்டேயன் கதை' சிவலிங்க வழிபாட்டின் மேன்மையை வலியுறுத்தும் பழம்புராணக்கதை (myth). இக் கதை சோழ நாட்டில், கடவூர் எனும் சைவத் திருத்தலத்தில் நிகழ்ந்ததாகக் கூறப்படுகிறது. மார்க்கண்டேயன் என்ற சிறுவன் மூலம் சிவபக்தியைப் பரப்பும் உயரிய நோக்கத்துடன் இக் கதை வழங்கப்பெற்று வருகிறது.

**மார்க்கண்டேயன் கதைச்சுருக்கம்**

குச்சர் எனும் முனிவர் மரபில் தோன்றியவன் மார்க்கண்டேயன். பதினாறு வயது ஆயுளையே வரமாகப் பெற்ற அவன் சிறந்த சிவபக்தனாக விளங்கினான். அவன் சிவலிங்க வழிபாட்டிலிருந்தபோது அவனுடைய வாழ்நாள் முடிந்தது. அவ்விடத்திற்கு எமதூதர்கள் அவன் உயிரைப் பறிக்க வந்தனர். இறை அருளால் முதலில் அவ்வாறு செய்ய இயலவில்லை. பின்பு எமனே அவனிடம் வந்து வாதிட்டுப் பாசக்கயிற்றை வீசிப் பற்றினான். மார்க்கண்டேயன் தான் வழிபடும் சிவலிங்கத்தை அணைத்துக்கொண்டதால் பாசக் கயிறு சிவலிங்கத்தையும் சுற்றிக்கொண்டது. எமன் கயிற்றை இழுத்தபோது சிவலிங்கத்துள்ளிருந்து இறைவன் தோன்றி எமனை உதைத்துக் கொன்றார். மார்க்கண்டேயனுக்கு மரணமிலாப் பெருவாழ்வை இறைவன் நல்கினார்.

எமன் இறந்ததால் உயிர்கள் மரணமில்லாதிருந்தன. பூமி பாரம் அதனால் அதிகரித்தது. பூமாதேவி அப் பாரத்தை நீக்குமாறு திருமால் மூலமாக இறைவனை வேண்டினாள். இறைவன் எமனை உயிர் எழுப்பி அவனுக்கு அதிக வரம் அளித்தார். அவன் தன் நகரான எமபுரிக்குச் சென்று மீண்டும் உயிர்களைப் பறிக்கும் தொழிலைச் செய்தான். அதனால் பூமியின் நிலைமை சீரடைந்தது. மார்க்கண்டேயனின் பக்தி மாநிலம் எங்கும் போற்றப்பட்டது.

**தமிழில் மார்க்கண்டேயன் கதை வழங்கல்**

இப் பழம்புராணக்கதை வடமொழியில் 'மார்க்கண்டேய புராணம்' எனும் பெயரில் பாடப்பெற்றுப் பதினெண் புராணங்களுள் ஏழாவதாக அமையுமாறு தொகுக்கப்பெற்றுள்ளது.

தமிழில் தேவாரம் தொடங்கிய பிற சைவத் திருமுறைகளிலும் சிவ பெருமானை நாயகனாகக் கொண்டு எழுந்த பக்தி இலக்கியங் களிலும் இப் பழம்புராணக்கதை நிகழ்ச்சிகள் சிவநெறிச் செல்வர் களால் சுட்டப்பட்டுள்ளன.

இக் கதை, தனி நூல்களாகவும் எழுந்துள்ளது. பாடல்களா லும், உரைநடையாலும் இவ்விரண்டும் அமைந்த நாடகங்களாக வும் இக் கதை எழுந்துள்ளது.

பாமரர்களும் இக் கதையினை நாட்டுப்புறக் கலைஞர்கள் கூறக்கேட்டு இன்புற்றுள்ளனர். அவ்வாறு கூறப்பெற்ற கதை பனையோலைச் சுவடிகளில் எழுதப்பெற்றுப் பாதுகாக்கப்பெற் றுள்ளது. இச் சுவடிகள் இன்றைய நாள்களில் கிடைத்துவருகின்றன.

## வடமொழி மார்க்கண்டேய புராணத் தமிழ் மொழிபெயர்ப்பு

சன்மார்க்க அன்பர் தொழூவூர் வேலாயுத முதலியார் வட மொழியில் முப்பத்திரண்டாயிரம் கிரந்தமுடைய மார்க்கண்டேய புரா ணத்தைத் தமிழில் மொழிபெயர்த்து உரைநடையில் தந்துள்ளார். இருபத்து நான்கு அத்தியாயங்களில் முடியும் இப் புராணத்தின் முதற்பகுதி மட்டுமே அவரால் மொழிபெயர்த்துச் சஞ்சிகையில் வெளியிடப்பட்டது.[1] அவர் காலத்திலேயே அது நூலாக (முதற் பதிப்பு) வெளிவந்தது. கி.பி.1909 ஆம் ஆண்டு அவர் மகனார் தொழூவூர் வே. நாகேஸ்வர முதலியாரால் சென்னையில் அந் நூலின் இரண்டாம் பதிப்பு வெளியிடப்பட்டது. தொழூவூரார் மார்க்கண்டேயன் கதையை மூலநூலில் உள்ளவாறே தந்துள்ளார்.

சைமினி முனிவர் என்பவர் ஐந்து வினாக்களை நல்வினை களால் தரும பட்சிகளாய்ப் பிறந்த இரு பறவைகளிடம் கேட்க, அவற்றிற்கு விடையாக அவை கூறியவையே புராணமாக உருக் கொண்டுள்ளது. இதனால் கிளைக்கதைகள் நிரம்பப்பெற்று மார்க் கண்டேய புராணம் செழித்துள்ளது எனலாம்.

## கந்தபுராணத்தில் மார்க்கண்டேயர் சரித்திரம்

தனிப் புராணமாக மார்க்கண்டேயன் கதை அமைந்தாலும், பிற புராணங்களிலும் அக் கதை எடுத்தாளப்பெற்றுள்ளது. சான்றாக,

---

1 இவை, சஞ்சிகை 1,2,4 இதழ்களில் (ஸி. பாஸ்டர் & கோ, சென்னை) 1880 1881ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ளன.

வடமொழிக் கந்தபுராணத்தில் நான்காவது பாகமாக மார்க்கண்டே யன் சரித்திரம் இடம்பெற்றுள்ளது. இதன் தமிழ்த் தழுவலான கந்தபுராணத்தைப் பதிப்பித்த ஆறுமுக நாவலர் இக் கதையை மட்டும் எடுத்துத் தனி நூலாக வெளியிட்டுள்ளார்.[2] இக் கதை ஒரு கிளைக்கதையாக இப் புராணத்துள் அமைந்துள்ளது.

தவத்தின் பெருமையை உணர்த்த வந்த காசி முனிவர் சூரபதுமன் முதலியோர்க்கு மார்க்கண்டேயர் வரலாற்றைக் கூறுவதாக இப் பகுதி உள்ளது.

1. கடக நகரில் வாழ்ந்த குச்சகர் என்ற முனியும், மிருகண்டேயர் அல்லது கவுச்சிகர் என்ற அவரது மகனின் தவமும், அம் மகனுக்காக அவர் உசத்திய முனிவரின் மகள் விருத்தையினைக் கேட்டலும், யானை ஒன்றால் அவள் இறக்க, குச்சகர் இயமனி டம் வேண்டி உயிரைத் திரும்பப்பெறலும், மிருகண்டுயர் விருத்தை மணம் நடத்தலும் முதலில் கூறப்பட்டுள்ளன
2. யானையாக வந்த தருமதத்தனது வரலாறு; குச்சகரின் தவவலிமையால் அவன் விமோசனம் அடைதல்
3. மிருகண்டு முனிவர் புத்திரனை வேண்டிக் காசியில் தவம் செய்தல், பரமசிவன் வரம் அளித்தல்
4. மிருகண்டு முனிவர் சத்புத்திரனைக் கோர ஈசனும் அருளுதல்
5. மார்க்கண்டேயன் பிறந்து வளர்தல்
6. மார்க்கண்டேயனுக்குப் பதினாறாமாண்டு நெருங்க, பெற்றோர் வருந்திப் புலம்ப, அவர்களை மார்க்கண்டேயன் தேற்றுதல்
7. மார்க்கண்டேயன் காசி சென்று சிவனை வழிபடுதல்
8. பரமசிவன் மார்க்கண்டேயன் முன்பு தோன்றுதல்
9. மறலியை வெல்ல வேண்டிய மார்க்கண்டேயனுக்கு ஈசன் அபயமளித்தல்
10. மார்க்கண்டேயன் பல தலங்களில் ஈசனைத் தொழுத பின்னர் இறுதியில் கடவூர் வந்து பூசை செய்தல்
11. மார்க்கண்டேயனுக்குப் பதினாறு வயதானபோது எமதூதன் வந்து அவனிடம் நெருங்கவியலாது திரும்புதல்; எமன் காலனை ஏவுதல்
12. காலனும் மார்க்கண்டேயனிடம் அணுகமுடியாதிருத்தல்; அவர்களிருவரும் உரையாடுதல்; பின்பு காலனும் திரும்பிச் செல்லுதல்

---

2. ஆறுமுக நாவலர், **மார்க்கண்டேயர்**, விபவ வருசம், சென்னை.

13. காலன் திரும்பியதும் எமனே பெரும்படையுடன் மார்க்கண்டேயனிடம் வருதல்; அதனால் மார்க்கண்டேயன் அச்சமடைதல்; பின்பு அவர்களிருவரும் உரையாடுதல்; இறுதியில் எமன் பாசத்தை வீசுதல்; இலிங்கத்தோடு மார்க்கண்டேயனை இழுத்தல்
14. இலிங்கத்திலிருந்து வெளிப்பட்ட உருத்திர சிவன் உதைக்க எமன் இறத்தல்
15. தன்னைத் துதித்த மார்க்கண்டேயருக்கு ஈசன் என்றும் பதினாறு வயதாயிருக்க வரம் அருளல், இச் சரித்திரத்தைப் படிப்போர், கேட்போர் செல்வம், ஆயுள் முதலியன தழைத்தோங்க வரமருளி ஈசன் மறைதல்
16. அதன் பின் பல சிவ தலங்களையும் தரிசித்து விட்டு இறுதியில் கடக நகர் சென்று மார்க்கண்டேயன் தன் பெற்றோரைப் பணிந்து மகிழ்தல்
17. பின்பு காசி, கயிலை போன்ற தலங்களுக்குச் சென்று மார்க்கண்டேயன் தவத்தில் சிறந்தவராதல்
18. எமன் இறந்ததால் பூமி பாரம் மிகுதல்

என்பன போன்ற பகுதிகளில் மார்க்கண்டேயன் சரித்திரம் கந்த புராணத்துள் விவரிக்கப்பட்டுள்ளது.

### மார்க்கண்டேயன் (தமிழ்ப்) புராணம்

வடமொழிப் புராணத்தைத் தழுவி **மார்க்கண்டேயர் புராணம்** எனும் தலைப்பில் தமிழ்ப் புராண அமைப்புடன் குழந்தைவேலுக் கவிராயர் என்பவர் ஒரு நூல் இயற்றியுள்ளார். இப் புராணம் பத்துச் சுருக்கங்கள் கொண்டது. அறுநூற்று எழுபத்தேழு விருத்தப்பாக்கள் கொண்டது. சிறுபான்மை எடுத்துரை நடையிலும் அமையப்பெற்றது.[3] விருத்தப்பாக்கள் எளிமையாக அமைந்து மார்க்கண்டேயன் கதையினை அறிந்து கொள்ளத் துணைசெய்கின்றன. இப் புராணம் கிளைக்கதைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காது மூலக்கதையை மட்டும் எடுத்தியம்புகின்றது. அதன் சருக்கங்கள் வருமாறு:

1. நாட்டுச் சருக்கம் (சோழநாடு)
2. நகரச் சருக்கம் (கடவூர்)

---

3. மார்க்கண்டேயர் புராணம் (மூலமும் உரையும்) 1871. (ஆசிரியர்: குழந்தைவேலுக் கவிராயர்; உரையாசிரியர்: வி.கோவிந்தப்பிள்ளை), விவேக விளக்க அச்சுக்கூடம், புஞ்சைப்பாக்கம்; வெளியீடு: ஏழுமலைப்பிள்ளை.

3. மிருகண்ட மாமுனிச் சருக்கம்
4. மிருகண்டேயர் தவநிலைச் சருக்கம்
5. மார்க்கண்டேயர் உற்பவச் சருக்கம்
6. மார்க்கண்டேயர் தவம்புரிச் சருக்கம்
7. யமன் தூதரை விடுத்த சருக்கம்
8. நீலிகள் வருகிற சருக்கம்
9. யமன் வருகிற சருக்கம்
10. யமனை எழுப்பிய சருக்கம்
(இதில் யமன் தன் பட்டணத்திற்குப் போதல் வரையும், மார்க்கண்டேயர் கயிலாயம் அடைதலும் உள்ளன).

## மார்க்கண்டேயன் கதை குறித்த பிற நூல்கள்

**மார்க்கண்டேயனார் காஞ்சி** எனும் பெயரில் ஒரு நூலிருந்து மறைந்து போனதாக மு. அருணாசலம்[4] குறிப்பிடுகின்றார். இந் நூல் கி.பி. 1800-இல் இயற்றப்பட்டிருக்கலாம்.

**மார்க்கண்டேயர் விலாசம்** எனும் நூல் வல்லூர் வேங்கட ராம உபாத்தியாயரால் ஐந்தாம் பதிப்பாக 1867-இல் பதிப்பிக்கப் பட்டுள்ளது.[5] இந் நூல் மார்க்கண்டேயன் வரலாற்றை நாடக அமைப்பில் தருவது. புராண நடைக்கு இயையும்படியாகச் சங்கீத சாகித்தியத்தில் சிறந்தவராகிய திருவண்ணாமலை வேங்கடாசல முதலியாரால் பரிசோதிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. கீர்த்தனம், விருத்தம், வசனம் என்பவை கலந்து இந் நாடகம் அமைந்துள்ளது.

சுப்பராமையர் என்பவரால் 1875-இல் மார்க்கண்டேயர் விலாசம் மீண்டும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

## மார்க்கண்டேயர் திவ்விய சரித்திரமாகிய நாடகாலங்காரம்

மார்க்கண்டேயன் கதை நாடகமாக இரு பாகங்களில் கி.பி. 1867-இலும், 1875-இலும் வெளிவந்துள்ளது.[6] முதற்பாகம் செய்யுள்

---

4. மு. அருணாசலம், **இலக்கிய வரலாறு.**

5. மார்க்கண்டேய விலாசம் (முதல் பதிப்பு...), ஐந்தாம் பதிப்பு 1867, வல்லூர் வேங்கடராம உபாத்தியாயர் கலாநிதி அச்சுக்கூடம். ஆறாம் பதிப்பு 1869, பரப்பிரம முத்திராசாலை.

6. **மார்க்கண்டேயர் திவ்விய சரித்திரமாகிய நாடகாலங்காரம்** (முதற்பாகம்), விவேக சந்திரோதய அச்சுக்கூடம், 1867; இரண்டாம் பாகம்; சற்குணாநிதி அச்சுக்கூடம், 1875.

மூலமும் உரைநடையுமாக அமைந்து நரசிம்மையர் என்பவரால் வெளியிடப்பட்டுள்ளது. இரண்டாம் பாகம் வரதராஜ ஐயரால் (?) வெளியிடப்பட்டுள்ளது.

மார்க்கண்டேய நாடகம் எனும் பெயரில் 1876-இல் கோபால கிருஷ்ணய்யரால் இந் நாடகம் பதிப்பிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.

**மார்க்கண்டேயர் சங்கீத சார ஒயிற்கும்மி** என்னும் பெயரில் கும்மி மெட்டில் 304 செய்யுள் மூலத்துடன் மார்க்கண்டேயன் கதை அப்பாவு முதலியாரால் கி.பி. 1887 - இல் வெளியிடப்பட்டுள்ளது.[7]

### மார்க்கண்டேயன் கதைப்பாடல் சுவடிகள்

மார்க்கண்டேய புராணத்தின் மொழிபெயர்ப்பும், புராணக் கதைச்சுருக்கமும், நாடக, புராண முயற்சிகளும் ஒருபுறமிருக்க, நாட்டுப்புறக் கலைஞர்களும் அக் கதையினைப் புனைந்துரைக்கத் தொடங்கியதன் விளைவாக அம்மானை, கும்மி எனும் வடிவங்களிலும் மார்க்கண்டேயன் கதை புதிய நடையில் கதைப்பாடல் அமைப்பில் உருப்பெற்றது. இக் கதைப்பாடல் **மார்க்கண்டேயன் அம்மானை** என்றும், **மார்க்கண்டேயன் தவநிலை** என்றும் **மார்க்கண்டேயன் (தபசு) தவசு** என்றும் இன்னும் பலவாறாகவும் பெயர் பெற்றது. அவை அக் கலைஞர்களால் பனை ஓலைகளில் எழுதி வைக்கப்பெற்றன.

இவ்வாறான ஓலைச்சுவடிகள் சில அண்மையில் கிடைத்தன. ஒவ்வொரு சுவடியும் கதை வேறுபாடு பெற்றுத் திகழ்கின்றது. மொழி நடையாலும் அமைப்பாலும் அவை சிறு சிறு வேறுபாடு பெற்றுள்ளன. இவ்வாறான கதைப்பாடல் சுவடிகளைத் தேடிக் கண்டுபிடித்து அவற்றை ஆய்வு செய்து பதிப்பித்தலின் மூலம் சிறந்த ஆய்வுக் கருத்துக்களைத் தமிழுலகுக்கு அளிக்க முடியும் என்ற உணர்வுடன் இப் பதிப்புமுயற்சி மேற்கொள்ளப்பட்டது.

ஓரளவு கல்விப் பயிற்சி பெற்றோர் மத்தியிலிருந்த மார்க்கண்டேயன் கதையும் அது வலியுறுத்தும் பக்தி ஒழுக்கமும் பெரும் பான்மையினரான பாமர மக்களிடையே பரவத் தொடங்கியதன் காரணமாகச் சுவடிக் கதைப்பாடல் நூல்கள் தமிழில் உருவாயின.

---

7. **மார்க்கண்டேயர் சங்கீத சார ஒயிற் (கும்மி,** மிமோரியல் அச்சுக்கூடம், சென்னை, 1887

கதை கேட்கும் மக்களின் ஆர்வத்திற்கேற்பவும் அவர்கள் அதற்காக ஒதுக்கும் காலத்திற்கேற்பவும் இக் கதைப்பாடல்கள் அளவுபெற்றன. மக்கள் ஈடுபட்டு அனுபவித்தலுக்கேற்ப அவை கட்டுமானம் பெற்றன. கால வரையறைக்கேற்பக் கதையும் கூட்டிக் குறைக்கப்பட்டுள்ளது. உப கதைகள் சேர்த்துக் கொள்ளவோ தள்ளப்படவோ செய்யப்பட்டன. இடையிடையே வசனமோ விருத்தங்களோ இடம்பெற்றன.

மார்க்கண்டேயன் கதை சிவவழிபாட்டுடன் தொடர்புபடுவதால் சிவராத்திரியன்று (இரவு) முழுவதும் வாசிக்கப் பெறும் அளவு அஃது இயற்றப்பட்டது.

இவ்வாறான கதைப்பாடல் சுவடிகள் இம் முன்னுரையில் ஆய்வு செய்யப்படுகின்றன.

## மார்க்கண்டேயன் அம்மானை

அண்மையில், தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையச் சங்க வெளியீடாக **மார்க்கண்டேயன் அம்மானை** (1987) என்ற சுவடிப் பதிப்பு நூல் வெளிவந்துள்ளது. இலக்குமி நாராயணன் என்பவர் இயற்றி, ஏட்டில் எழுதி வைக்கப்பெற்ற இக் கதைப்பாடல் சுவடி வளையற்காரன் புதூரைச் சேர்ந்த ஆர். இராதாகிருஷ்ணன் என்பார் அந் நூலகத்திற்குக் கொடுத்த சுவடியின் (எண்:1566) பதிப்பு ஆகும். இப் பதிப்பைத் திருவையாறு சீனிவாசராவ் மேல்நிலைப்பள்ளியின் முதுநிலைத் தமிழாசிரியர் புலவர் பா.சினிவாசன் மேற்கொண்டு நூலக வெளியீடாக வெளியிட்டுள்ளார்.

மார்க்கண்டேயன் கதைச்சுருக்கம், பொருளகராதி, திருக்கடவூர்த் தலவரலாறு, நூலாசிரியர் வரலாறு, பாடல் முதற்குறிப்பு அகராதியுடன் எடுத்துரை நடையில் விருத்தப்பாக்கள் கலந்து இச் சுவடி பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

நூல், 'நாட்டுப்பாடல் வகையைச் சார்ந்தது' என இதன் பதிப்பாசிரியர் குறிப்பதற்கேற்ப அமைந்திருந்தாலும், கிடைத்துள்ள பிற கதைப்பாடல் பிரதிகளினின்றும் இது வேறுபட்டுள்ளது. பிற பிரதிகளிலில்லாத அளவு விருத்தப்பாக்களும், உப கதைகளும் இதில் இடம்பெற்றுள்ளன. நூலியற்றியவரின் புலமை இதிலிருந்து வெளிப்படுவதோடன்றி ஒரு புராண அமைப்பினை இப் பிரதி பெறுவதன் மூலம் தனித்தன்மைபெற்று விளங்குகிறது.

இந் நூலில் முதலில் கூறப்படும் சில உபகதைகளாவன:

1. மச்சமுனி என்பார் மீன்கள் போல் வாழ்ந்து 1000 மங்கையர்க்ளை மணமுடித்தல்
2. அருந்ததியின் கற்பைச் சிவபெருமான் சோதித்தல்
3. பிக்ஷாடனத் திருக்கோலம் கொண்ட இறைவனைப் பின் தொடர்ந்து தாருகவனத்து முனிவர்களின் பத்தினியர் செல்லுதல்; மோகினித் திருக்கோலம் கொண்ட திருமாலைப் பின் தொடர்ந்து முனிவர்கள் செல்லுதல்
4. மச்சமுனி திருமால் எடுத்த மோகனத்தை எடுத்தல்; அவரின் பாலகர்களில் அறிவிற் சிறந்த குச்சன் என்பான் தவம் இயற்றல்
5. குச்சனின் மகன் மிருகண்டன் எனும் மிருக சிங்க நேசனின் தவத்தின்போது குச்சன் சிவபெருமைகளை (அடி முடி காண முடியாத கதை) விளக்குதல்
6. கனக ரிஷி கதை
7. அமிர்த ரிஷி கதை
8. துர்வாசமுனி மாலை ஒன்றின் காரணமாக இந்திரனைச் சபித்தல்
9. இந்திரனுக்குத் திருமால் கூறும் கதை
10. கருடன் அமிர்தத்தைக் கவர்தல்; திருமால் எடுத்த மோகினி உருவால் அரக்கர் சாதல்; தேவர் அமிர்தம் பருகல்; சிவன் நஞ்சை உண்ணல்
12. பாம்புகளின் கதை
13. சந்திரனை அரன் தன் முடியில் தரித்தல்
14. மிருக சிங்கனுக்கு நான்கு பெண்களைக் குச்சன் மணமுடித்தல்
15. மிருக சிங்கன் தவத்தின் முடிவில் இறைவன் தோன்றி மார்க்கண்டேயன் எனும் சத்புத்திரன் பிறக்க வரம் அருளுதல்

பிற மார்க்கண்டேயன் சுவடிக் கதைப்பாடல் பிரதிகளிலிருந்து வேறுபடும் இந் நூல் முதல் பகுதியில் பல உபகதைகளைச் சேர்த்துக் கொண்டாலும் முடிவில் எமன் முடிசூட்டப்படுதலையும் அதன் பிறகுள்ள செய்திகளையும் மிகச் சுருக்கமாகக் கூறி முடிந்து விடுகிறது. இதனால் மூலக்கதை பாதியாகவும் உபகதைகள் பாதியாகவும் நூல் அமைந்துள்ளது.

சுவடியாகவிருந்த அரியபெரிய நூலொன்று முதன்மையாகப் பதிப்பிக்கப்பெற்று வெளிவந்தாலும் அப் பதிப்பில் பல குறைபாடுகள் உள்ளமையையும் இங்குக் குறிப்பிடுவது கடமையாகும். பலவகையில் சுவடி சிதைந்துள்ளதாகவும் அதனால் பல தொடர்

களைச் சேர்த்ததாகவும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு பதிப்பாசிரியர் எழுதிச் சேர்த்ததின் விளைவாகவும், விருத்தப் பாக்களை முறையாகப் பிரதிசெய்து அச்சிடப்படாமையினாலும் மிகுந்த அச்சுப் பிழைகளைத் தவிர்க்காததினாலும் இந் நூற்பதிப்பு தரமிழந்துள்ளது.

## டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகச்சுவடி

சரசுவதி மகால் நூலகப் பதிப்பின் குறைபாடுகளைத் தெரிந்து கொள்ளும்விதத்தில் சென்னையிலுள்ள டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகச் சுவடியொன்று **மார்க்கண்டன் அம்மானை** என்ற பெயருடன் பாதுகாக்கப்பெற்று வருவதையும் இங்குச் சுட்டவேண்டும்.[8] பாட்டப்பச்சேரி இராமசாமி மகன் நாராயணன் என்பவர் கொல்லம் ஆண்டு 1072 (=கி.பி.1897) மாசி மாதம் 13-ஆம் தேதி சரவெழுதி வாசித்து வந்த இச் சுவடி மிகவும் சிதிலமாக இருந்தாலும் சரசுவதி மகால் நூலக வெளியீட்டுடன் ஒப்புநோக்குவதற்குத் தடையாக இருக்கவில்லை.

டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகச் சுவடி முழுமை என அந் நூலகச் சுவடி விளக்க அட்டவணையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதனடிப்படையில் சென்னை ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தினர் ஆங்கிலத்தில் தயாரித்துள்ள சுவடி விளக்க அட்டவணையிலும்[9] இந் நூலான **மார்க்கண்டன் அம்மானை** முழுமை பெற்றதாகக் குறிப்பிடப்பெற்றிருக்கிறது. ஆயின் நூலின் தொடக்கமான 'சடமறியா மார்க்கண்டன்....' என்பதற்கு முன்பும் சில வரிகள் உள்ளன என்பதும், நூலின் இறுதியான 'பாரம் பெருத்துப் பயந்ததுவும் நீர்தானே...அண்டமுமவையெல்லாம் அணுவணுவாய் நின்றாட' என்பதற்குப் பின்னும் நூற்றுக்கணக்கான வரிகள் உள்ளன என்பதும் இங்குச் சுட்டப்படவேண்டியனவாகும்.

---

8. **மார்க்கண்டன் அம்மானை** (உ.வே.சாமிநாதையர் நூலகம், சுவடி எண் - 765, அளவு 14½" 1½, 64 ஓலைகள்).

9. Mārkkaṇṭaṉ Ammāṉai (S.No. 1026), A Descriptive Catalogue of Palm-leaf Manuscripts. Vol. I, Part II, p. 904.

## ஆசியவியல் ஆய்வு நிறுவனச் சுவடி

சென்னையிலுள்ள ஆசியவியல் ஆய்வு நிறுவன நூலகத்தில் 19-வது எண் இடப்பெற்ற சுவடியொன்று[10] மார்க்கண்டேயன் கதையை எடுத்துரை நடையில் கூறுகின்றது. இச் சுவடியில் மூன்று பிரிவாகக் கதை அமைந்துள்ளது. எமன்-காலன்-தூதன் கதையும், மார்க்கண்டேயன் கதையும், சித்திரபுத்திர நயினார் கதையும் தனித்தனியாகக் கூறப்பட்டுள்ளன. 41 ஓலைகளில் கதைகள் முழு மையாகக் கூறப்பட்டுளளன. 51 X 3.5 செ.மீ. நீள-அகலமுள்ள இந்த ஏடு, குமரி மாவட்டம் அகத்தீசுவரம் கு. ஆறுமுகப் பெருமாள் நாடாரால் கொல்லம் 1101 (=கி.பி. 1926-இல் சரவெழுதி யதும் அவர் படித்ததுமாகும். இதனை ஆசியவியல் ஆய்வு நிறுவனத்துக்காக 15.8.'85-இல், நானும் நண்பர் டாக்டர் சு. தங்கதுரை அவர்களும், அந் நிறுவன இயக்குநர் டாக்டர் ஜி. ஜாண் சாமுவேல் அவர்களும் மறைந்த ஆறுமுகப் பெருமாள் நாடார் மனைவியிடமிருந்து பெற்றுவந்தோம்.

இங்குப் பதிப்பிற்கு எடுத்துக்கொண்ட பிற மார்க்கண்டேயன் கதைப்பாடல் பிரதிகளில் கூறியுள்ள அமைப்பினின்று இச் சுவடி மாறுபடுவதால் இதனை இப் பதிப்பிற்குத் துணையாகக் கொள்ளவில்லை.

## கூடன்குளத்து மார்க்கண்டேயன் கதை ஏடு

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்துத் தென் கீழ் எல்லை நகரான கூடன்குளத்திற்கு நானும் மூலப்பொழி விக்னேசு வரன் அவர்களும் ஏடுதேடிச் சென்றபோது எனது மாமனார் பொன்னம்பல நாடார் அவர்கள் உதவியால் **மார்க்கண்டேயன் கதை** எனும் குறைப் பிரதியொன்று கிடைத்தது. இதில் 3-வது ஓலைமுதல் 24-வது ஓலைவரை 22 ஓலைகள் இருந்தன. தென் பாண்டி நாட்டுச் சுவடிக் கதைப்பாடல் அமைப்பைப் பெற்றிருந்த இச் சுவடி இங்குப் பதிப்பிற்கு எடுத்துக் கொள்ளப்பெற்றப் பிரதிகளினின்று முற்றிலும் வேறுபடுவதால் இதையும் துணையா கக் கொள்ளவில்லை.

---

10. இமயகாலதூதன் மூவர்கள் பிறவி, மார்க்கண்டன் பிறவி, நயினார் கணக்கு, ஆசியவியல் ஆய்வு நிறுவனம், சென்னை-41 (எண் 19, 19-A, 19-B)

## ஆவிடையானூர் (ஆவுடையானூர்) ஓலைச் சுவடிகள்

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம் தென்காசி வட்டத்தைச் சார்ந்த ஆவுடையானூரில் நானும் அவ்வூர் மனோகரனும், தினகரனும் தென்காசி டாக்டர் தங்கபாண்டியன் அவர்கள் தகவலின் பேரில் ஓலைச்சுவடிகள் தேடிச் சென்றபோது வடக்குத் தெருவிலிருந்த திரு. தமேந்திரன் என்ற நண்பர் நல்கிய சுவடிக் கட்டுகளில் இரு மார்க்கண்டேயன் கதைப்பாடல் சுவடிகளும் இருந்தன. இச் சுவடிகள், தம் தாத்தா சண்முக நாடார் அவர்களுக்கு உரியன என்றும் அவர் இவற்றைத் தாமே எழுதினாரா அல்லது யாரிடமிருந்தேனும் பெற்று வைத்திருந்தாரா என்பது தெரியாது என்றும் திரு. தமேந்திரன் கூறினார்.

இச் சுவடிகளில் முதல் சுவடி முழுமை பெற்றிருந்தது. இரண்டாவது சுவடியில் சில ஓலைகள் தவறியிருந்தன. முதல் சுவடியின் முனைகள் மழுங்கியிருந்தாலும் எழுத்துக்கள் தெளிவாகவும் தென்பாண்டித் தமிழ் நடையில் எழுதப்பெற்றும் இருந்தன. அதில் மொத்தம் 106 ஓலைகள் இருந்தன. இதனுடன் ஒப்புநோக்குவதற்கு உதவியாக இரண்டாவது சுவடி விளங்கியது. அதில் 7-வது ஓலை முதல் 92-வது ஓலை முடிய மொத்தம் 85 ஓலைகளே இருந்தன. முதல் சுவடியில் சிதைந்த பகுதிகளைச் செப்பனிட இரண்டாவது சுவடி பேருதவியாக இருந்தது. முதல் சுவடியே இங்குப் பதிப்பிற்கு எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளது. அதைப் பார்த்துப் பிரதி செய்யப்பெற்ற இரண்டாவது சுவடி அதற்குத் துணையாகக் கொள்ளப்பெற்றது.

## காணியாளன் புதூர்ப் பிரதிகள்

வ.உ. சிதம்பரனார் மாவட்டம் மஞ்சள்நீர்க் காயல் மைனர் துரைசாமி நாடார் அவர்களின் பெருமுயற்சியால் திருச்செந்தூர்க் கடலில் இடப்படவிருந்த பல சுவடிகள் அம் மாவட்டத்தின் திருச்செந்தூர் வட்டத்திலுள்ள காணியாளன் புதூரைச் சார்ந்த பொ. சிவபெருமாள் நாடார் அவர்களிடமிருந்து எனக்குக் கிடைத்தன. இவற்றில் இரு மார்க்கண்டேயன் கதைப்பாடல் சுவடிகள் இடம் பெற்றிருந்தன. முதல் சுவடி **மார்க்கண்டேயன் அம்மானை** என்ற பெயரில் முழுமைபெறாது, சில ஓலைகள் மட்டுமே கொண்டிருந்தது. ஆயினும் இச் சுவடி பதிப்பிக்கப்பெறும் சுவடியை ஒட்டி அமைவதால் பதிப்பிற்குத் துணையாக எடுத்துக்கொள்ளப்பெற்றது. இரண்டாவது சுவடி முழுமை பெற்றது. **மார்க்கண்(டர்)டே**

**யன் தவநிலை** எனும் பெயர் பெற்றது. இதில் காணப்படும் குறிப்பாவது:

> இவை 1961(ம்) வருசம் மே மாதம் 12-ம் தேதிக்கு (கொல்லம்) 1136 ஆண்டு பிலபவ வருசம் வைகாசி மாதம் 13(ஆம்) தேதி வெள்ளியன்று யேகாதேசியும் அஸ்த்த நட்ச்சேத்திரமும் அமுதாதியோகமும் அன்று வுதையாதி நாழிகை ஒன்பதுக்கு மேல் பத்தரைக்குள் கடகலக்கணமும் அமைந்து கந்தசாமிபுரம் கிராமம் காணியாளன் புதூர் பெ. பொன்னையா நாடார்க்கு சீரம் சீவக்கிலயேக புத்திரனாகிய பொ. சிவபெருமாள் நாடார் வாசித்து வருகிற மார்க்கண்டர் தவநிலையேடு நீடுழிய காலம் வாழ்க.

பெரும்பான்மை சரசுவதி நூலகச் சுவடிபோன்றும் சிறுபான்மை ஆவிடையானூர்ச் சுவடிகள் போன்றும் அமைந்துள்ள இச் சுவடி முழுமை பெற்றது. மிகவும் அண்மையில் எழுதப் பெற்றதால் தெளிவாகவும் ஆனால், பிழைமலிந்தும் உள்ளது. இச் சுவடியும் இங்கு மேற்கொள்ளப்படும் பதிப்பிற்கு எடுத்துக் கொள் ளப்பட்டது.

## திருமலையப்பபுரம் கையெழுத்துப்பிரதி

காணியாளன் புதூரை அடுத்த திருமலையப்பபுரத்தில் பிரமையா நாடார் அவர்களிடமிருந்து மூலப்பொழி ச. மண்டக் ராஜா நாடார் அவர்கள் உதவியால் மார்க்கண்டேயன் கதைப்பாடலின் கையெழுத்துப் பிரதியொன்று எனக்குக் கிடைத்தது. இதன் விவரம் வருமாறு:

> காணியாளன் புதூர் பொன்னையா நாடார் குமாரர் சிவபெருமாள் நாடாரிடமிருந்த ஏட்டுப் பிரதியும் சோனகன் விளை மா. ஆறுமுக நாடார் அவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியும் ஆராய்ந்து திருமலையப்பபுரம் மா.க. பிரமையா நாடார் வசனமாக எழுதியது. 1148ஆம் ஆண்டு பரிதாபி வருசம் பங்குனி மாதம் 4-ஆம் தேதி.

இக் கையெழுத்துப்பிரதியுள்ள இரு நோட்டுப் புத்தகங்களைப் பிரமையா நாடார் அவர்கள் என்னிடம் தந்தார். அதிலிருந்த குறிப்புப்படி 17.3.'73 இல் அதை அவர் பிரதி செய்யத் தொடங்கியிருக்கலாம் என நினைக்கத் தோன்றுகிறது. இடையிடையே வரும் விருத்தங்கள் மட்டும் தவிர்க்கப்பட்டுள்ளன. காணியாளன் புதூர் **மார்க்கண்டேயன் தவநிலை** என்னும் ஏட்டுப்பிர

தியை அடியொற்றியும், சிற்சில இடங்களில் வேறுபட்டும் திரு மலையப்பபுரத்துக் கையெழுத்துப் பிரதி அமைந்துள்ளது. இங்குப் பதிப்பிக்கப்பெறும் கதைப்பாடலுக்கு இச் சுவடி துணைசேர்ப்ப தால் இதுவும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பெற்றது.

### சோனகநாட்டுவிளை ஏட்டுப் பிரதி

கையெழுத்துப் பிரதியிலுள்ளள குறிப்பிலிருந்து சோனகன் விளை மா. ஆறுமுக நாடார் ஏட்டுப்பிரதி ஒன்றிருந்ததும் தெரிய வந்ததால் அப் பிரதியைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டேன். ஆயினும் அப் பிரதி அழிந்துபட்டதாகக் கூறினர். சோனகன்விளை, காணியாளன் புதூர், திருமலையப்பபுரம் எனும் இம் மூன்று ஊர்களும் ஓரிடத்தில் அமைந்த வெவ்வேறு ஊர்கள். இதனால் மார்க்கண்டேயன் கதை பெரிதும் வேறுபடாதிருப்பதை இங்குக் கிடைத்த சுவடிகளிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

### மார்க்கண்டேயன் கதைப்பாடல் சுவடிகளின் மையம்

ஆய்வுக்குக் கிடைத்துள்ள பிரதிகள் மூன்று பகுதிகளிலிருந்து கிடைத்துள்ளன என்பதைக் கீழ்க்காணும் படத்தால் அறிய முடி யும். இரு சுவடிகள் தென்பாண்டி நாட்டின் வட எல்லையிலும், இரு சுவடிகள் மேல் எல்லையிலும் ஐந்து பிரதிகள் தென் பகுதியிலும் கிடைத்துள்ளன. மார்க்கண்டேயன் கதைப்பாடல் சுவடிகள் தென்பாண்டி நாட்டிலேயே மிகுதியும் கிடைத்திருப்ப தால் இக் கதை அப்பகுதி மக்களிடையே பெரிதும் போற்றப்பட் டது எனத் தெரிகிறது.

மார்க்கண்டேயன் கதை நிகழ்ந்த இடம் சோழநாடு. ஆதலால் அதைச் சோழ நாட்டுக் கதை என்பர். சோழ நாட்டுக் கதை அந் நாட்டுப் பகுதிகளிலுள்ள பாமரமக்களிடையே வழங்கப்படாது தென்பாண்டி நாட்டில் வழங்கப்பட்டதன் காரணம் அரசியல் சூழ்நிலை எனலாம். தென்பாண்டி நாட்டில் வழங்கப்பெறும் மூன்று பகுதிகளில் தென் பகுதியிலிருந்து மக்கள் மேற்குப் பகுதிக்கும் வட பகுதிக்கும் குடியேறியுள்ளனர். இதனால் அக்கதை தென்பாண்டி நாட்டின் தென் பகுதியில் வழங்கப்பெற்றுப் பிற இரு பகுதிகளுக்கும் எடுத்துச்சொல்லப்பெற்றது எனக் கூறலாம். தென் பகுதி என்று கூறப்படுவது திருச்செந்தூர் வட்டத்தைச் சார்ந்த ஊர்களாகும். அதிலும் மானவீர வளநாடு (மாறவீரவளநாடு) எனப் பிற கதைப்பாடல்களிலும் வரலாற்றுக் குறிப்புகளிலும் கூறப்படும்

மாறவீர வளநாடு (மாநாடு) தான் மார்க்கண்டேயன் கதைப்பாடல் சுவடிகளின் பிறப்பிடம் ஆகும்.

சோழ நாட்டுக் கதை மானவீர வள நாட்டில் மட்டும் பாமர மக்களிடையே வழங்கப்பட்டதன் காரணம் மக்கள் குடியேற்றம் எனக்கூறலாம். பிற்காலச் சோழர்கள் பாண்டிய நாட்டையும் சேரநாட்டின் சில பகுதிகளையும் ஆண்டபோது அவ்வப் பகுதி களில் அரசுப் பிரதிநிதிகளாகச் சோழ நாட்டினர் அனுப்பப்பெற்ற னர். அவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் தரை மார்க்கமாக வந்து ஆங்காங்கே குடியேறினர். சோழ நாட்டுப் படைகள் இலங்கைக்கும் சென்றன. பின்பு பாண்டியர் எழுச்சியின் போது இலங்கை சென்ற சோழப் பிரஜைகள் தென்பாண்டி நாட்டில் பாண்டியனால் குடியமர்த்தப்பெற்றனர். இவ்வாறே சோழநாட்டு மார்க்கண்டேயன் கதை தென்பாண்டி நாட்டு மக்களிடம் வழங்கப் பட்டது. மேலும் பல கதைப்பாடல்களின் பிறப்பிடமாகவும் தென்பாண்டி நாட்டுப் பகுதி இருப்பதால் மேலே கூறிய கொள்கை பொருந்துவதாகவும் உள்ளது.[11]




1. ஆவுடையானூர் 2. வளையற்காரன்புதூர், பாட்டப்பச்சேரி 3. காணியாளன் புதூர், திருமலையப்பபுரம், சோனகன்விளை.

11. See my Report submitted to ICSSR, 1993.

## மார்க்கண்டேயன் கதைப்பாடலின் புராண அமைப்பு

''மார்க்கண்டேயர் அம்மானை கதைப்பாடல்களுக்குள் மிகப் பழமையானது; புராணவகை போன்றது''[12] எனத் தமிழறிஞர் மு. அருணாசலம் குறிப்பிடுதல் போன்று இக் கதைப்பாடல் தமிழில் 16-ஆம் நூற்றாண்டில் பெருமளவு பாடப்பெற்றப் புராணங் கள் போன்ற அமைப்பையும் பெற்றுள்ளது. இக் காலகட்டத்துப் புராணங்களில் அமையும் பொதுக் கூறுகளான பதிகம் அல்லது வாழ்த்து, முனிவர்கள், உயிர்களின் தோற்றம்-மரணம், உலகத் தோற்றம்-ஒடுக்கம், தேவாதி தேவர்களின் கால எல்லை, இறை வன் மகிமை, தவச்சிறப்பு, எமதருமராசனின் வரலாறு, நரகங்க ளின் இயல்புகள், தலப்பெருமை, விரதங்கள், யோக நிலைகள், துதிகள் போன்றவை மார்க்கண்டேயன் கதைப்பாடலிலும் அமைந் துள்ளன. இதனால் இக் கதைப்பாடலைப் புராணவகைக் கதைப் பாடல் என்கின்றனர். அதே போன்று, நாட்டுப்புறக் கதைப்பாடல் களுக்குரிய கூறுகள் பல பெற்றும் இது காட்சியளிக்கின்றது.

இவற்றுக்கும் மேலாக இடையிடையே விருத்தப்பாடல்கள் பல பெற்றுச் சிறந்த இலக்கிய நூலாகவும் திகழ்கின்றது. இவ்வா றான காரணங்களால் 'அம்மானை' என்றும், 'தவநிலை' என்றும் 'தவசு' என்றும் இக் கதைப்பாடல் பெயர்பெற்றுள்ளது.

## பதிகம் அல்லது வாழ்த்து

புராணங்களில் நூல் நுதலிய பொருள் கூறும் பதிகத்தைப் போன்று மார்க்கண்டேயன் கதைப்பாடல் சுவடிகளிலும் வாழ்த்து எனும் பகுதி இடம்பெற்றுள்ளது (பார்க்க: காப்பு விளக்கம்). காப்பு, துதி, அவையடக்கம், கதைப்பாடலாசிரியன் என்பவை பற்றி விரிவாக இக் கதைப்பாடல் சுவடிகள் பேசுகின்றன. பதிப்பிக் கப்பெற்றுள்ள ஆவுடையானூர்ச் சுவடியில் அரன் துதி, ஐங்கரன் துதி, அறுமுகன் துதி, கலைமகள் துதி, அவையடக்கம், கதைப்பாட லாசிரியன் எனும் பகுதிகள் இடம்பெறுகின்றன. இக் கதைப்பாட லின் பிற பிரதிகளில் இவ்வாறான பகுதிகள் வேறுபட்டுள்ளன.

முதல் நூறுவரிகள் இவற்றுக்காக இக் கதைப்பாடலில் ஒதுக் கப்பட்டுள்ளன. கி.பி. 16ஆம் நூற்றாண்டில் பாடப்பெற்றதாகக் கருதப்பெறும் வலங்கை மாலை[13]யிலும் இவ்வமைப்பைக்

---

12. M. Arunachalam: **An Introduction to History of Tamil Literature.** "Markandeyar Ammanai is a very ancient ballad of the Puranic type."

13. வலங்கை மாலை (பதிப்பில்) டாக்டர் ஆ. தசரதன், 1993.

காணலாம். ஆனால் பிற்காலத்துப் புராணங்களிலும், கதைப்பாடல் களிலும் இவ்வமைப்பு சிறிது மாறுபடுகின்றது. அவை நாட்டு, நகர, வருணனை போன்றவை பெற்றுத் திகழ்கின்றன.

கதை தொடங்குவதற்கு முன் சிறப்புப் பாயிரப் பகுதியோ, பதிகம் போன்ற பகுதியோ, முன்னுரை போன்ற பகுதியோ தனிப்பகுதியாக அமையுமாறு தொடக்ககாலக் கதைப்பாடல் களில் பாடப்பெற்றிருக்கும். மானவீரவளநாட்டு வில்லுப்பாடல் கள் இதற்குச் சான்றாகும். அகத்தீசுபுரம் நாகமணி மார்த்தாண்ட நாடார் குழுவினர் பாடிய கதைப்பாடல்களும் இவ்வமைப்பைக் கொண்டுள்ளன. இவையெல்லாம் 18-ஆம் நூற்றாண்டின் இறுதியி லும், 19-ஆம் நூற்றாண்டிலும் பாடப்பெற்றவை.

20-ஆம் நூற்றாண்டு வில்லுப் பாடல்களும் கதைப்பாடல் களும் இம் முன்னுரைப் பகுதியைக் கதைப்பகுதியுடன் சேர்த்தே பாடப்பெற்றுள்ளன. இவ்வமைப்பைக் குமரி மாவட்ட வில்லுப் பாடல்களில் காணலாம். குறிப்பாக அகத்தீசுவரம் கு.ஆறுமுகப் பெருமாள் நாடார் இயற்றிய பல கதைப்பாடல்கள் இதற்குச் சான்றாகும்.

வில்லுப்பாடல்களை விடிய விடிய மக்கள் கேட்பதினால் அவை விரிவாக இயற்றப்பெற்றன. இந்நிலை படிப்படியாக மாறி, கேட்கும் நேரம் குறைந்ததால் அவற்றின் நீளமும் குறைக்கப் பட்டது. இதன் காரணமாகவே முன்னுரை போன்ற பகுதிகள் குறைக்கப்பட்டு எடுத்த எடுப்பிலேயே கதை தொடக்கம் பெறுகிறது.

## முனிவர் மரபு

புராணங்களில் கூறப்பெறும் முனிவர் வரலாறுகள் (வருணா சிரமம்) மார்க்கண்டேயன் கதைப்பாடலிலும் வருகின்றன. சூதமா முனி என்பவரே பிற முனிவர்களுக்குத் தல மகிமைகளை நைமிசா ரணியத்தில் கூறியதாகப் பெரும்பாலானப் புராணங்கள் தெரிவிக் கின்றன. சூதருக்கு முன்னுள்ள முனிவர்கள் சிலர் மரபாகத் தலமகிமைகளைக் கேட்டதாகவும், அவற்றைப் பிறருக்குக் கூறியதா கவும் அப் புராணங்களுள் சில கூறுகின்றன. இத் தலங்களில் முனிவர்கள் பலர் தவமிருந்து பெருமை பெற்றதாகவும் புராணங் கள் கூறும் கதைக்ள் வாயிலாகத் தெரிந்துகொள்ள முடிகின்றது.

இவ்வாறு முனிவர்கள் பற்றிக் கூறுவது அவ்வத் தலத்து இறைவனுக்குப் பெருமை சேர்ப்பதற்காகும். மார்க்கண்டேயன்

கதைப்பாடலிலும் பல முனிவர் வரலாறுகள் புனைந்துரைக்கப் பட்டுள்ளன. மார்க்கண்டேயர், நர்மதையாற்றங் கரையில் ஆசிர மம் அமைத்து வாழ்ந்தார் என்றும் அவர் வரலாறுகள் பலவாறாகப் புனைந்துரைக்கப்பெற்றுள்ளன. மார்க்கண்டேயருக்கு ஏற்றம் தரும் வகையில் மச்சமுனி, குச்சர், மிருகண்டர், மிருகசிங்கர் போன் றோர் வரலாறுகளும் இக் கதைப் பாடலில் புனைந்துரைக்கப்பெற் றுள்ளன. இத்தகு பெருமையுடைய மார்க்கண்டேய முனிவரின் முன்னோர் மரபு பற்றி அறிந்து கொள்ளச் சில நூல்கள் துணையாக உள்ளன.

குச்சரின் மகனார் மிருகசிங்கன் (வச்சன்). அவர் உசத்தியர் குமாரியாகிய சுவிர்த்தையை மணந்து மிருகண்டுவைப் பெற்றார். மிருகண்டுவின் மகனே மார்க்கண்டேயன் என்று **மாக புராணம்** கூறுகின்றது.

குச்சரின் மகன் மிருகண்டேயர் (கவுச்சிகர்) என்றும், அவர் உசத்திய முனிவரின் மகள் விருத்தையை மணந்து மார்க்கண்டேய னைப் பெற்றதாகக் **கந்தபுராணத்தில்** கூறப்படுகிறது.

கௌசிகர் மகனான மிருகண்டு முற்கால ரிஷி குமாரியான மருத்துவதியை மணந்து மார்க்கண்டேயனைப் பெற்றதாகவும் குறிப்பிடப்படுகிறது - (பார்க்க: **அபிதான சிந்தாமணி** பக். 1306).

மச்சமுனியின் மரபில் வந்தவர் குச்சர்; அவர் மகன் மிரு கண்டு; மிருகண்டேயரின் மகன் மிருகசிங்கன்; மிருகசிங்கனின் மகன் மார்க்கண்டேயன் — இவ்வாறு **மார்க்கண்டேயன் அம்மானை** (1986) எனும் கதைப்பாடல் கூறுகின்றது. மச்சமுனி நீங்கிய பிற பெயர்களைப் பொதுவாக எல்லாப் பிரதிகளும் கூறுகின்றன. பதிப்பிக்கப்பெற்றுள்ள பிரதி குச்சரைச் 'சனாதன்' எனக் கூறுகிறது.

மார்க்கண்டேய முனிவரின் மரபினைப் பின் வருமாறு கதைப் பாடல் பிரதிகளிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

(மச்சமுனி)
|
சனாதன் (குச்சர்)
|
மிருகண்டன்
|
மிருகசிங்கன்
|
மார்க்கண்டேயன்

இங்குக் காட்டப்பெறும் முனிவர்களுள், மிருகசிங்கனின் பங்கும் மார்க்கண்டேயனின் பங்குமே பதிப்பிக்கப்பெறும் கதைப் பாடலில் மிகுதியாகப் பாடப்பெற்றுள்ளன.

மிருகசிங்கன் தன் பதினாறாமாண்டில் நிலையாமையை உணர்ந்து தவ வாழ்க்கை மேற்கொள்ளும் விருப்பத்தைத் தன் பெற்றோரிடம் கூறினான். அப்போது, அவன் தந்தையார் சிவ மகிமைகளையும், மாக நீராடலின் மகிமையையும் எடுத்துரைத் தார். அவற்றைக் கடைப்பிடித்துத் தவமேற்கொண்டபோது மிருக சிங்கன் முன்பு சிவன் காட்சிதந்து இல்லறத்தின் சிறப்பை அவ னுக்கு எடுத்துரைத்தார். இல்லறம் மேற்கொண்டபின்பு தம் இருப் பிடம் அடையும் வரத்தையும் அவனுக்கு நல்கினார். மிருகசிங்கன் பெற்றோரிடம் வந்து நல்ல இலக்கணம் பொருந்திய பெண்ணைத் திருமணம் செய்து இல்லற வாழ்வை மேற்கொள்ள விரும்புவ தாகக் கூறினான். அதன்படி மூன்று பெண்களை அவனுக்கு மண முடித்தனர். இது மிருகசிங்கமுனியின் வரலாறு ஆகும்.

## உயிர்களின் தோற்றம், ஒடுக்கம் முதலியன

புராணங்களில் கூறப்பெறும் பிண்டோற்பத்தி எனும் பகுதி மிருகசிங்கனின் தவப் பகுதியில் நன்கு புனைந்துரைக்கப்பட்டுள் ளது. பிண்டத்தின் நிலையாமை, வரிகள் 120 முதல் 142 வரை, 151 முதல் 159 வரை, 353 முதல் 369 வரையிலும், 1,2 எண்ணிடப் பெற்ற விருத்தங்களிலும் கூறப்படுகின்றது. மிருகசிங்கன் இறை வன் முன்பு பாடும் சிவதோத்திர விருத்தங்களில் (6 முதல் 19 வரை) உயிர்களின் பிறப்பும், உடலின் நிலையாமையும் உருவக நிலையில் உணர்த்தப்பெற்றுள்ளன.

இறைவனால் எமன் இறந்தபின்பு உயிர்கள் மூப்படைந்தும் சாகாது துடிக்கும் நிலை, வரிகள் 1658 முதல் 1721 வரையிலும், 51 ஆம் விருத்தத்திலும் கூறப்படுகின்றது. எமன் உயிர்த்தெழுந்த போது உயிர்கள் பூமியில் படும் வதை, வரிகள் 2171 முதல் 2200 வரையில், சித்திரிக்கப்பட்டுள்ளது. நரகங்களில் உயிர்கள் படும் வதை, வரிகள் 2202 முதல் 2364 வரையிலும், பாடப்பெற்றுள்ளது. உயிர்களின் பாவ புண்ணியங்களுக்கேற்ப அவை நரகங்களுக்கோ கயிலாயத்துக்கோ செல்லுதலும் அவற்றுள் சில மறுபிறவி எடுத்த லும் கூறப்படுகின்றன. உயிர்களை அயன் சிருஷ்டித்தலும், அரி காத்தலும், உருத்திரன் அழித்தலும், வரிகள் 645 முதல் 664 வரையிலும் 26-ஆம் விருத்தத்திலும், விவரிக்கப்பட்டுள்ளன. இவ் வாறு உயிர்கள் பற்றிய செய்தி இக் கதைப்பாடலில் 500 வரிகளி லும் 20 விருத்தங்களிலும் பாடப்பெற்றுள்ளது. புராணங்களில் இச் செய்தி இடம்பெறுதல் போன்று மிக விரிவாகவே இக் கதைப்பாட லிலும் பாடப்பெற்றுள்ளது. பதிப்பிக்கப்பெறும் கதைப்பாடல்

பிரதியிலேயே இச் சிறப்பைக் காணமுடியும். ஏனைய பிரதிகள் எமன் இறத்தலுக்குப் பின்னுள்ள பகுதியை மிகச் சுருக்கமாகக் கொண்டு முடிவடைந்துள்ளன.

### சிவமகிமை

புராணங்களில் கதைகளாலும் துதிகளாலும் இறைவன் பெருமை பேசப்பெறும். அவ்வாறே மார்க்கண்டேயன் கதைப்பாடலிலும் சிவமகிமை கதைகளாலும், துதிகளாலும் போற்றப்பெற்றுள்ளது. அமுதுகடைந்ததும், சிவராத்திரி ஏற்பட்ட காரணமும், வரிகள் 216 முதல் 260 வரை, கூறப்பட்டுள்ளன. சித்திரபுத்திர நயினார் பிறவி போன்ற கதைகளும் (2367-2370, 2402-2406, 2495-2670), மாக புனலாடலின் சிறப்பு (261-276), மிருகசிங்கன் இறைவனைத் துதித்தல், மார்க்கண்டேயனின் பூசை (760-770, 804-835), என்றும் பதினாறு வயது பெற்ற பின்பு மார்க்கண்டேயன் சிவனைத் துதித்தல் (1585-1600, விருத்தம் 41-50), எமன் மீண்டும் உயிர்த்தெழுந்தபோது இறைவனைப் பாடிப் புகழ்தல் (1929-1948, விருத்தம் 57-66) போன்ற துதிகளும் பதிப்பிக்கப்பெறும் இக் கதைப்பாடலில் உள்ளன.

'மார்க்கண்டேயன் அம்மானை', 'தவநிலை' போன்ற பிரதிகளில் சிவன் பெருமை பேசும் கதைகள் மிகுதியாகப் பயின்று வந்துள்ளன. அவற்றுள் நயினார் பிறவி மிகச் சுருக்கமாகவே இடம்பெறுகின்றது.

சிவமகிமை போற்றவே மார்க்கண்டேயன் கதை பலவாறு புனைந்துரைக்கப்பட்டதால், இந் நூலில் முதலிலிருந்து முடிவு வரை இறைவன் பெருமைகளையே எல்லாக் கதாபாத்திரங்களும் விளக்கும் வண்ணம் பாடப்பெற்றுள்ளனர்.

இறைவனின் தோற்றமும் ஏற்றமும் பலவாறாக இக் கதைப்பாடலில் சித்திரிக்கப்பட்டுள்ளன. மிருகசிங்கனுக்கு இறைவன் காட்சிதருதலிலும் (வரிகள் 300 முதல் 322 வரை), மார்க்கண்டேயன் இறைவன் பெருமைகளை எமனிடம் உரைக்கும் இடத்திலும் (வரிகள் 1165 முதல் 1178 வரை, 1207 - 1227, 1294 - 1297, விருத்தங்கள் எண் 34,34,37), இறைவன் இலிங்கத்துள்ளிருந்து முகிழ்த்தெழுமிடத்திலும் (வரிகள் 1412 முதல் 1414, 1424 - 1460 வரையிலும், விருத்தங்கள் 38,39), சிவனடியார்கள், தேவாதி தேவர்கள், பிற கடவுளருடன் கயிலாயத்தில் இறைவன் இருக்கும் போதிலும்

அவருடைய தோற்றப் பொலிவுகள் மிக வீறுடன் சித்திரிக்கப்பட்டுச் சிறந்த சொல்லோவியங்களாகக் காட்டப்பட்டுள்ளன.

தலபுராணங்களில் தலத்தின் வருணனை அமைதல் போன்று இக் கதைப்பாடலில் கயிலாயத்தின் சிறப்பு நன்கு பாடப்பெற்றுள்ளது (வரிகள் 2372 முதல் 2400 வரை). ஆக, அரன் துதியில் தொடங்கி அடியார்களுடன் அரன் கயிலையில் இனிதே வீற்றிருக்கும் காட்சிவரை இறைவன் புகழை இக் கதைப்பாடல் எடுத்துரைத்த வண்ணம் அமைந்துள்ளது.

**பிரபஞ்ச வருணனை**

பிரபஞ்ச ஆய்வு மார்க்கண்டேயன் கதைப்பாடலில் பரவலாக ஆராயப்பெற்றுள்ள நிலை அதனைப் புராணங்களோடு தொடர்புபடுத்த ஏதுவாக உள்ளது.

மார்க்கண்டேயனிடம் எமன் பிரபஞ்சத்தின் தோற்றத்தைக் கூறுவதிலிருந்தும் (வரிகள் 1234 முதல் 1244 வரை), பிற தெய்வங்கள் இறைவனைத் துதிக்குமிடத்திலும் (1870 - 1878, விருத்தம் 53), காலதூதன் கூற்றிலும் (794 - 796), பாசக்கயிற்றால் இலிங்கத்தையும் மார்க்கண்டேயனையும் எமன் இழுத்தபோதும் (1366 - 1376), இறைவன் இலிங்கத்துள்ளிருந்து முகிழ்த்து வந்த வேகத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளிலும் (1437 - 1440), இறைவன் எமனை உதைத்தபோதும் (1541 - 1553), பூமிபாரம் பெருத்ததால் ஏற்பட்ட விபரீதங்களின் போதும் (1720 - 1735) பிரபஞ்சங்கள் பற்றிய வருணனைகள் அமைந்துள்ளன. கதைப்பாடலாசிரியனின் துதியிலும் (வரிகள் 13 முதல் 25 வரை) இது ஆராயப்பெற்று இக் கதைப் பாடலுக்கு வன்மை சேர்த்துள்ளது.

புராண வகை போன்ற மார்க்கண்டேயன் கதைப்பாடலில் இவ்வாறான பிரபஞ்ச ஆய்வு ஏன் விரிவாகக் கூறப்பட்டுள்ளது என்னும் வினா எழுதல் உண்மை. பூவுலகமன்றிப் பரந்து விரிந்த பிரபஞ்சத்திலுள்ள கோள்களிலும் இறைவன் ஆட்சியின் சிறப்பை எடுத்துரைக்கவே புலவனால் இவ்வாறு இப் பகுதி பாடப்பெற்றது எனக் கூறலாம். இப் பிரபஞ்ச ஆய்வு பற்றிய தனி நூல்களும் உள்ளன என்பது இதை வலியுறுத்தும் மற்றொரு சான்றாகும்.

மார்க்கண்டேயன் கதை மண்ணுலகத்தோடு மட்டும் நின்றுவிடவில்லை. உலகத்துக்கு அப்பாலிருப்பதாகக் கருதப்படும் நரகங்கள், தேவாதிதேவர்கள், திசை காவலர்கள், மும்மூர்த்திகள் என

விரிந்து செல்லும் அளவிற்கு அது பாடப்பெற்றுள்ளது. இவ்வா றான பரந்த கதைக்களன் (இடம்) அமைந்திருப்பது இக் கதைப்பா டலுக்குரிய சிறப்பம்சம் ஆகும்.

## மனுக்கள், தேவர்கள், இந்திரன், மும்மூர்த்திகள் கால அளவு

பரந்த கதைக்களனைப்போல மனிதர்கள், தேவர்கள், கடவு ளர்களின் கால எல்லைகளையும் இக் கதைப்பாடலில் கூறி அதற்கு மேலும் ஏற்றம் தந்துள்ளார் கதைப்பாடலாசிரியர்.

இப் பகுதி எமன் மார்க்கண்டேயனுக்குக் கூறும் பகுதியிலொன் றாக அமைந்துள்ளது. பல கோள்களிலும் பிறந்த உயிர்கள் எமனால் அழிவது பற்றியும் (வரிகள் 1237 முதல் 1249 வரையும்), தேவர்களுக் கும், இந்திரனுக்கும் இரண்டாயிரம் சதிரயுக கால அளவு என்றும் (வரிகள் 1252 - 1255), அவ்வாறு பதினான்காயிரம் சதிரயுகம் பிரமனுக்கு ஒரு பொழுது என்றும் (1256 - 1258), அவ்வாறான நாள் முப்பது சேர்ந்து ஒரு மாதமும், பன்னிரண்டு மாதம் சேர்ந்து ஓர் ஆண்டும், நூறு ஆண்டு சேர்ந்து ஒரு பிரமமும் ஆகும் என்றும் (1260 - 1262), அவ்வாறான ஒரு கோடிப் பிரமம் சேர்ந்தது திருமாலுக்கு ஒரு நாள் ஆகும் என்றும், அவ்வாறான நாள் முந்நூற்றறுபது சென்றால் அவருக்கு ஒரு வயது என்றும், அவ்வாறு ஆயிரம் வயது திருமாலுக்கு முடிந்தால் எல்லாக் கோள்களும் அழிந்துவிடும் என்றும் (1263 - 1276), அவ்வாறு அழியும் காலம் பார்வதிக்கு அவிழ்ந்த கூந்தலைச் சொருகும் காலஅளவு என்றும், பார்வதிக்கு வயது ஆயிரம் என்றும், அவ் வயது நிறையும்போது சிவத்துள் அவள் ஒடுங்குவள் என்றும் (1277 - 1280), அப்போது எமனாகிய தனக்கும் இறுதி நேரும் என்றும் (1282 - 1283), அந் நேரம் இறைவன் தம் ஊழி நடனத்தைத் தொடங்குவார் (1284 - 1285) என்றும் எமன் கூற்றாகக் கால எல்லை கூறப்பட்டுள்ளது.

எக் காலத்திலும் இறைவனின் அழிவில்லா நிலையையே கதைப்பாடலாசிரியன் இப் பகுதியிலும் உணர்த்தி அவர்க்கு மேலும் பெருமை சேர்த்துள்ளான்.

## நரகங்களின் இயல்பு

மானிடர்க்கு எப்போதாகிலும் வந்துறும் மரணம் பற்றியும், அதனால் அவர்களுக்கு ஏற்படும் மரண பயம் பற்றியும், மரணத்துக் குப்பின் சீவன்கள் நரகத்துக்கோ சொர்க்கத்திற்கோ செல்வது பற்றியும் பல புராணங்கள் பாடியுள்ளன. மண்ணுலகில் செய்யும்

செயலுக்கேற்ப மறுவுலகில் விளைவு ஏற்படும் என வலியுறுத் தவே புலவர்கள் இவ்வாறாகப் பாடிவைத்துள்ளனர்.

'உலகில் பாவம் செய்பவர்கள் மிகுந்திருப்பதற்கேற்ப அவர்க ளுக்குரிய நரகங்களும் மிகுந்துள்ளன' என்று நாரதமுனிவர்க்கு நாராயணர் கூறி, இருபத்தெட்டு நரகங்களின் இயல்புகள் பற்றியும், அந் நரகங்களில் சென்றடையும் உயிர்கள் மண்ணுலகில் செய்த கொடிய செயல்கள் எவை என்றும், அவர்களுக்கு அந் நரகங்களில் எவ்வாறான தண்டனைகள் கிடைக்கும் என்பது பற்றியும் அம் முனிவர்க்கு அவர் எடுத்துரைத்ததாகத் தேவி பாகவதத்தில் கூறப் பட்டுள்ளது.[14]

தாமிஸ்ரம், அந்த தாமிஸ்வரம், ரௌரவம், மகாரௌரவம், கும்பீபாகம், கால சூத்திரம், அசி பத்திரம், பன்றி முகம், அந்தகடபம், கிருமிபோஜனம், அக்னிகுண்டம், வஜ்ர கண்டம், சான்மலி,வைதரணி, பூயோதம், பிராணரோதம், விசஸனம், லாலா பக்ஷம், சாரமேயாதனம், அவீசி, பரிபாதனம், க்ஷரகர்த்தமம், ரக்ஷேகணம், சூலப்புரோதம், தந்தசூகம், வடாரோதம், பரீயாவர்த் தனகம் சூசிமுகம் என்பன அவ்விருபத்தெட்டு நரகங்கள் ஆவன.

நரகங்களின் பெயர்கள் புராணங்கள் தோறும் வேறுபடுகின் றன. மகா புராணங்களில் கோரம் முதல் சூசி முகம் வரை இருபத்தெட்டு நரகவியல்புகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. ஏழு நரகங்களேயிருப்பதாகச் சில நூல்கள் குறிப்பிடுகின்றன.

சோழன் பசுக்கதைப்பாடல்[15] எனும் கதைப்பாடலில் இருபத் தொரு நரகங்கள் விவரிக்கப்பெற்றுள்ளன. சித்திரபுத்திர நயினார் கதைப்பாடலிலும் நரகத்தின் இயல்புகள் கூறப்படுகின்றன. நீதி களையுணர்த்தும் பல கதைப்பாடல்களிலும், பல மாந்தர்கள் சரித்திரத்திலும் இந் நரக இயல்புகள் விவரிக்கப்பெற்றுள்ளன.

இவ்வடிப்படையிலேயே மார்க்கண்டேயன் கதைப்பாடலிலும் நரகங்கள் பற்றியும் உயிர்கள் நரகங்களில் வதைபடுதல் பற்றியும் கூறப்பெற்றுள்ளன. எமன் இறந்த பின்பு சீவன்கள் மரணமடையா திருந்தன. அவன் மீண்டும் உயிர்த்தெழுந்து எமபுரத்தில் வீற்றிருந்த போது அவை எமபுரிக்குக் கொண்டு வரக் கட்டளையிடப்பட்டன. எமபுரம் வந்து சேர்ந்த உயிர்கள் எல்லாம் நரகம் செல்பவை

---

14. தேவிபாகவதம் - பாகம் 2 (பதிப்பாசிரியர். அரு. ராமநாதன்) தமிழ்மொழிபெ யர்ப்பு : துர்க்காதாஸ் எஸ்.கே.ஸ்வாமி, பிரேமா பிரசுரம், சென்னை.

15. டாக்டர் ஆ. தசரதன்: சோழன் பசுக்கதைப்பாடல் (பதிப்பில்).

கயிலாயம் (சொர்க்கம்) செல்பவை என்று வகைப்படுத்தப்பட்டன. அவ்வாறு வகைப்படுத்தப்பெற்ற பின்பு அவற்றின் பாவ புண்ணியங்களுக்கேற்பத் தண்டனைகளை அவ்வுயிர்கள் பெற்றன. இப் பகுதியில் ஒன்பது வகையான தண்டனைகளை உயிர்கள் பெறுவதிலிருந்து ஒன்பது நரகங்களின் இயல்புகள் இக் கதைப்பாடலில் விவரிக்கப்பட்டுள்ளன என அறியலாம். செக்கில் உயிர்கள் அரைபடுதல் (2222 - 2229), காதுகளில் ஈயத்தைக் காய்ச்சிவிடுதல் (2230 - 2242), இரும்பைக் காய்ச்சிவிடுதல் (2243 - 2254), உயிர்கள் அழிபடுதல் (2255 - 2269), ஊசித்தூண்களில் உயிர்கள் நிறுத்தப்படுதல் (2270 - 2296), உயிர்கள் சூடு போடப்படுதல் (2297 - 2302), உயிர்கள் தீயில் வீசப்படுதல் (2303.2312), உயிர்கள் அடித்துத் தூள்களாக்கப்படுதல் (2313 - 2332) எனச் சீவன்கள் எமகிங்கிரர்களால் வதைபடுதல் சித்திரிக்கப்பெற்றுள்ளது.

நரகவியல்பு வருமாறு:

அந்த நரக மதின்பெருமை சொல்லுகையில்
எந்த விதமென்று யியம்ப முடியாதெனவே
முழங்கிச் சுருளின் முறைநாத்த யக்கினியால்
விளங்கும் நரகயிவை விஷ்த்தாரமோ ரேழும்
ஆயிர யோசினையி னாழமிகப் பாரில்
ஆயிரங் கோடி யடரும் புழுக்குழியும்

(2337 - 2342)

நிறைந்தது. இவ்வாறான நரகங்களில் உயிர்கள் தங்கள் தீச்செயல்களுக்கேற்பத் தண்டனைகள் பெற்றபின்பு பலவாறாக மறுபிறப்பெடுத்தலையும் இக் கதைப்பாடல் விவரிக்கின்றது.

**எமதருமன்**

புராணங்களில் அரசர் சிறப்புக் கூறப்படுதல் போல் இக் கதைப்பாடலிலும் எமதருமராசனின் மாட்சி எழுச்சியுடன் கூறப்பெற்றுள்ளது. மார்க்கண்டேயன் தொடர்பான கதை ஒருபங்கு எனில் எமதருமன் தொடர்பான கதை ஒரு பங்காக அமையும் விதத்தில் இக் கதைப்பாடல் உள்ளது. சித்திரபுத்திர நயினார் கதை நிகழ்ச்சியும் மூன்றாவது பங்காக அமைந்துள்ளமையையும் சில பிரதிகளில் காணலாம். இதனால் மூன்று தனித்தனிக் கதைகளின் கூட்டாக இக் கதைப்பாடல் அமைந்துள்ளதுபோல் காணப்படுகிறது. சில சுவடிகள் இக் கதைகளைத் தனித்தனியாகவுங் கொண்டுள்ளன.

மார்க்கண்டேயனின் உயிரைப் பறிக்கவியலாது எமதூதர்கள் திரும்பியபோது எமதருமன் கொண்ட கோபமும் (973 - 980), அவனே அப் பணியைச் செய்யப் புறப்படும்போது பலவகை அணிகலன்களால் அலங்கரிக்கப்பட்டுக் காட்சி தருதலும் (1026 -1049), புறப்பட்டு வரும் தோற்றமும் (1066 - 1073), பூமியில் மார்க்கண்டேயன் முன்பு அவன் தோன்றுதலும் (1080 - 1092), அவனிடம் எமதருமத்தை எடுத்துக் கூறும் போதுள்ள பொலிவும் (1318 - 1322), அவன் தன் பலத்தையும், ஆயுளையும் கூறுவதும், இறைவனைக் கண்டபோது அஞ்சுதலும், இறைவனிடம் தன் நியாயத்தை எடுத்துக் கூறும் போதுள்ள பணிவும் (1509 - 1515), இறைவனால் உதையுண்டு வீழ்ந்து இறக்கும் போதுள்ள இரக்க நிலையும் (1534 - 1560), எமனுக்காகத் திருமால் இறைவனிடம் வாதாடுமிடத்தில் அவனது உயர்வும் (1858 - 1878, விருத்தம் 53, 1879 - 1883), எமன் உயிர்த்தெழுந்து மீண்டும் புதுப்பொலிவுடன் வரும்போதுள்ள தோற்றமும் (1909 - 1920), அவன் இறைவன் மீது கூறும் விருத்தத்தின் போதும் (1929 - 1948, விருத்தம் 57 - 66), சிவனடியார்களைத் தீண்டாது தீயோரை மட்டுமே வதைப்பதாக இறைவனிடம் எமன் உறுதியளிக்கும் போதும் (1984 - 1986, விருத்தம் 74), இறைவன் எமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யும் போதும் (1990 - 2001), அதன்பின் தன் பரிவாரங்களுடன் தென் திசைக்குப் புறப்பட்டுச் செல்லும் போதும் (2008 - 2099), எமபுரத்தை அடைந்தபோது அவனது பொலிவும் (2106 - 2123), அங்குக் கொலுவிருந்து கோலோச்சத் தொடங்கும்போது அவனது எழுச்சித் தோற்றமும் (2123-2129) மிகச் சிறப்பாகப் பல்வகைச் சுவையுடன் இக் கதைப்பாடலில் வருணிக்கப்பெற்றுள்ளன. அவனைத் தருமத் துக்கு அரசனாகவே ஆக்கி, அவனுக்குரிய எல்லாவற்றையும் அளித்துத் தனக்கு அடுத்த நிலையில் அவன் அமையுமாறு இறை வன் செய்திருப்பதாக இக் கதைப்பாடலில் கூறப்பட்டுள்ள முறை யானது புராணங்களில் வரும் அரசர்களின் ஏற்றத்துக்கு இணையாக அமைந்துள்ளது.

கதைப்பாடலின் நடுப்பகுதி நாயகனாகவே எமன் படைக்கப் பட்டிருக்கிறான். முதலில் எதிர்பாத்திரமாக வருபவன், இறந்து மீண்டும் எழுந்தபோது தன்னிகரற்ற தலைவனாகவே உருவாக்கப் பெற்றுள்ளான்.

### சித்திரபுத்திர நயினார்

எமனைப்போன்று முக்கியமுள்ளவராகவே நயினாரும் இக் கதைப்பாடலின் இறுதிப்பகுதியில் படைக்கப்பட்டுள்ளார். அவர்

எமதருமனுக்கும் இறைவனுக்கும் இணைப்பாகத் திகழ்கின்றார். எமதருமன் சபையில் தம் உதவியாளர்களுடன் அவர்தம் இருக்கையிலமர்தல் (2130 - 2139), (2367 - 2370), இறைவனருகிலமர்ந்து தம் கணக்கின் திறம் உரைத்தல் (2402 - 2411), நல்லோர் இயல்பை இறைவன் நயினாரிடம் கேட்டபோது அவர் கூறுதல் (2495 0 2509), கலியுகப் பிறப்பின்போது நயினார் திரு அவதாரம் எடுத்தல் (2522 - 2561), பசுவின் பாலகனாய்ப் பிறந்து (2562 - 2568), இந்திரன்-இந்திராணி மகனாய் வளர்ந்து (2569 - 2606), பெற்றோரிடம் விடைபெற்று இறைவனிடம் சென்றடைந்து கணக்குரைத்தல் (2607 - 2653) மீண்டும் பெற்றோரிடம் வந்து மகிழ்ந்து மீளுதல் (2654 - 2660), இறுதியாகக் கயிலையில் ஈசனுடன் இனிதிருத்தல் வரை (2661 - 2669) ஏற்றத்துடன் இக் கதைப்பாடலில் பாடப்பெற்றுள்ளார்.

இத்தகு சிறப்புள்ள சித்திரபுத்திர நயினாரின் வரலாற்றைத் தனி நூலாகவும் தமிழ்ப் புலவர்கள் விரித்துப் பாடி வெளியிட்டுள்ளனர். மார்க்கண்டேயன் கதை சிவராத்திரியன்று பாடப்பெறுதல் போல் நயினார் கதையும் சித்திரை மாதத்தில் நயினார் நோன்பு தினத்தில் தென்பாண்டி நாட்டில் படிக்கப்பெற்று வருதல் இன்றும் வழக்கமாக இருந்து வருகின்றது.

### சமூக, வரலாற்றுச் செய்திகள்

புராணங்களில் புனைந்துரைகள் வாயிலாகவும் வரலாற்றுச் செய்திகளாலும் மக்களுக்கு அறிவுறுத்தல்போல மார்க்கண்டேயன் கதைப்பாடலிலும் சில வரலாற்றுச் செய்திகளும், சமுதாயப் பழக்க வழக்கங்களும் இடம்பெறச் செய்துள்ளார் ஆசிரியர்.

சிவராத்திரியன்று மக்கள் நோன்பிருத்தலுக்காகச் சிவராத்திரி மகிமை இந்நூலில் கூறப்பட்டுள்ளது. மாக புனலாடலின் சிறப்பும் சில இடங்களில் வலியுறுத்தப்பட்டுள்ளது. இவற்றுக்கு மேலாக 'முதுமக்கள் தாழி' பற்றிய வரலாற்றுக்குறிப்பும் இக் கதைப்பாடலில் இடம் பெற்றுள்ளது. இது ஓர் அரிய கருத்தாகும்.

பலனாளைத் துக்கமதில் ஒருநாளைத் துக்கம் நன்று
நலமான பாரிற் தான்புதைக்க வேணுமென்று
முதுமக்கள் தாழி முறைமையுடன் சமைத்து
பதிமொக்க மானிடரைப் பாங்கா யதினுள்வைத்து
விந்தையுடன் மண்ணை விரைவாகவே தோண்டி
சிந்தைமிகு பேரைச் சிறப்பாய்ப் பொதைத்தார்கள்
(1706 - 1711

*பாங்கிணறு தானிறையப் பண்பா மானிடரை*
*தாங்கி மிகப்போட்டுத் தூன்மூடுவார் சிலபேர்*
*(1712 - 1713).*

இவ்வாறு கூறியிருப்பது இந் நூலாசிரியர்க்கிருந்த சமுதாய வரலாற்றுக் கண்ணோட்டத்தைக் காட்டுகின்றது. காலரா, பேதி, பிளேக் போன்ற கொடிய நோய்களில் ஆயிரக்கணக்கான மக்கள் இறந்ததைத் தம் அண்மைக் காலத்தில் கேட்டோ, பார்த்தோ அறிந்திருந்த இக் கதைப்பாடலாசிரியன் அவர்களையெல்லாம் புதைக்கவியலாது மொத்தமாகப் புதைத்த நிலையை இங்கும் சேர்த்துள்ளார். மேலும் வீடுகளில் முதியவர்கள் மரணமெய்தாது தாமும் நொந்து பிறருக்குப் பாரமாகவும் அமைந்து அல்லலுறுவதைப் பார்த்தறிந்த இவர் எமனின்றி உயிர்கள் சாகாது அல்லலுறுமிடத்தில் யதார்த்தமாக வருணித்திருப்பதைக் காணமுடிகின்றது. இதனால் சமூக - வரலாற்றுக்கண்ணோட்டம் இக் கதைப்பாடலில் இடம்பெற்று அதனைச் சிறந்த நூலாக ஆக்கியுள்ளதை அறிந்து கொள்ள முடிகின்றது.

### யோக, ஞான நெறிகள்

மக்கள் நல்வழியில் செல்ல அறிவுறுத்தும் புராணங்களில் அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய சடங்குகள், நோன்புகளுக்கு மேலாகச் சிறந்த யோகிகள் செய்யக் கூடியவையும் கூறப்பட்டிருக்கும். இதைப் போன்றே மார்க்கண்டேயன் கதைப்பாடலிலும் கூறப்பட்டுள்ளது.

மிருகசிங்கன் இறைவனைக் காண வேண்டி மேற்கொண்ட யோக, ஞான முறைகளை இங்கு எடுத்துக்காட்டலாம். 'காலாக்கினி யெழுப்பி' (வரி 182) என்றும்,

......அஞ்செழுத்தை
நெஞ்சகத் துட்சரித்து நேசத்தை வுள்ளிருத்தி
மிஞ்சுந் தவசு விரைந்து விளைக்கவென்று
பாசக்கடலைப் படர்மதியின் தோணிவிட்டு
நேசத்துடன் கடந்து நீண்டமலக் காடுவிட்டு
மலையுங் கேவலனருகில் மால்நகருக்குப் பிறத்தில்
குலையும் பெருவழியில் கூண்ட யிருள்படர்ந்து
கலாக்கினியில் (க்) கனத்த ஒளியூட்டி
மேலாக்கி யுள்ளுருக்கி மீறுங் கசடெரித்து
ஆங்கரஞ் சூறையிட்டு யானவொளியே வழியாய்

ஓங்கார மீறுமுயர்ந்த யருட்(க்) கோவில்
பூட்டுமிகத் திறந்து போயணுகி மேல்வாசல்
தீட்டும் புகழான சிறந்தயருள் நிலையில்
குன்றாதுடலில் நின்று குன்றுமுடல் களைந்து
நின்றான் தவசி நீதிமிருக சிங்கன்

(வரிகள் 282-296)

இதன் சுருக்கவுரை 4-ஆம் விருத்தத்தில் கூறப்பட்டுள்ளது. கதைப் பாடலாசிரியனுக்கிருக்கும் யோக அறிவை இப்பகுதி எடுத்துக் காட்டுகிறது. இவ்வாறு பல்லாற்றானும் மார்க்கண்டேயன் கதைப் பாடல் புராண அமைப்பும் கொண்டு திகழ்ந்துள்ளது.

### மார்க்கண்டேயன் கதையால் விளைந்த பயன்

மார்கண்டேயன் இலிங்கத்தைத் தழுவி நிற்றல் போலவும் எமன் பாசக்கயிற்றை வீசுவது போலவும் சிவன் கோவில்களில் காணப்படும் சிற்பங்கள் யாவும் மார்கண்டேயன் கதையில் விளைந்த பலனை மக்களுக்குத் தெரிவித்த வண்ணமாய் அமைந் துள்ளன. இவ்வாறான நீதியைப் புராணங்களும் தருகின்றன. இக் கதைப்பாடலாசிரியரும் அம் மரபிலிருந்து விலகாது இக் கதை யால் விளையும் பயன்களைக் கீழ்வருமாறு பாடியுள்ளார்.

''இக்கதையை யியம்புவர்க்குங் கேட்டவர்க்கும்
மைந்தன் தனக்கு யாவர்க்காக யீய்ந்தவரம்
ஏமனொரு னாளு மிவர்களிட மணுகான்
சோமனணி யீசர் துணைப்பதந் தான்தப்பாது
மன்றுலகில் தர்மம் வளரும் கயிலைவரும்
குன்று மிருபாவங் கூட்டோடே நாசமறும்
பக்குவமுஞ் செல்வம் பதியும் நிலைக்குமது
தற்குந் தவமேற்குந் தங்கிநிற்(ப்)பா ரீசுபரரும்
பாலன் தனக்காய்ப் படியில் வதையுண்டநமன்
சாலப் புவியோரைத் தான்விட்டான் சங்கைசென்றான்
முந்தப் பிரமன் முகித்தவிதி வருமுன்
சிந்தைமிகு நல்ல தவஞ்செய்தா லிமனணுகான்
செங்கண் நெடுமால்வேதன் தேவரிஷியோ ரெவரும்
தங்கியவர் செய்ததவம் தன்னளவாய் நின்றதுவே
மார்க்கண்டன் யோகதவ மானிலமெல்லாம் வளர்ந்து
தாக்குடனே யண்டந் தரணியெங்கும் வீசியதே

(வரிகள் 1624 - 1639)

சிவனடியார்களும் நல்லோர்களும் கயிலாயத்தில் இறைவனுடன் மகிழ்ந்திருத்தலை இக் கதைப்பாடலின் இறுதியில் கூறியிருப்பதி லிருந்தும் கதைப்பாடலால் விளையும் பயன்வலியுறுத்தப்படுகிறது.

## மார்க்கண்டேயன் கதைப்பாடலில் நாட்டுப்புறக் கூறுகள்

மார்க்கண்டேயன் கதையினைப் பாடிய நூல்கள் பற்றியும், அதைப் புனைந்துரைத்துள்ள கதைப்பாடல் சுவடி வகைகள் பற்றி யும், அவற்றில் புராணங்களை ஒத்து அக் கதைச்செய்திகள் அமைக்கப்பட்டிருத்தலையும் இதுவரை பார்த்தோம். அச் சுவடிக் கதைப்பாடலில் இடம்பெற்றுள்ள நாட்டுப்புறக் கூறுகளையும் அது கதைப்பாடல் வகைகளுள் முதற் காலத்தாகத் திகழ்வதையும் இனிக் காணலாம்.

ஒரு பழம்புராணக்கதை இருவகையான படைப்பாளிகளால் மக்களை வந்தடைந்துள்ளதை இக் கதை வழி அறியலாம். முதல் வகையினர் ஓரளவு கல்வியறிவுள்ள புலவர்கள். இரண்டாம் வகையினர் பாமரக் கலைஞர்கள். இவ்விரு வகையினரும் செய்த நூல்களில் முதல்வகைக் கல்வியறிவுள்ளவர்களுக்குத் தரமுயர்ந்த, இலக்கண வரம்புகளுக்குட்பட்ட இலக்கியங்களாகத் திகழ்கின் றன. இரண்டாம் வகை படிக்காத பாமரர்களும் தெரிந்து கொள்ளக் கூடிய இலக்கிய உத்திகளால் படைக்கப்பட்டுத் திகழ்கின்றன. இக் கருத்தைக் கீழுள்ளவாறு விளக்கலாம்.




இவ்வாறான பழம்புராணக்கதையை மக்களிடம் நிலைக்கச் செய்ய இவ்விரு வகையினரும் தனித்தனியாக முயற்சிகளை மேற்கொண்டனர். முதல் வகையினர் சைவ சமயத்தைப் பரப்பும் சமய இலக்கிய வாதிகள் ஆவர். இரண்டாம் வகையினர் பாமரக் கலைஞர்கள்; சாதாரண மக்களிடம் நீதிகளையும் பக்தியுணர்வுக ளையும் ஏற்படச் செய்யும் தொண்டர்கள் இவர்கள். இவ்வாறு

பழம்புராணக்கதை (myth) இரு வழிகளில் மக்களை வந்தடைகிறது.

இரண்டாம் வகையினரால் செய்யப்பெற்ற மார்க்கண்டேயன் கதைப்பாடல் புராணக் கூறுகளை விட்டு விடாமலும், 18 ஆம், 19 ஆம், 20 ஆம் நூற்றாண்டுகளில் பாடப்பெற்ற பிற நாட்டுப்புறக் கதைப்பாடல்களைப் போலல்லாமலும் ஒரு வகையான உருமாற்ற நிலையில் (Metamorphosis stage) அமைந்துள்ளமையைக் காண முடிகிறது.




புராண வகைக் கதைப்பாடலாயினும் மார்க்கண்டேயன் கதைப்பாடல் காலத்தால் முந்தியும், தனித்தன்மையுடனும் காணப் படுகின்றது. இதைப்போலவே தொடக்க காலத்துப் புராணவகைக் கதைப்பாடலான சித்திரபுத்திரநயினார் கதையும் அமைந்துள்ளது.

மார்க்கண்டேயன் கதைப்பாடல் எந்தக் கதைப்பாடல்வகை (type)யைச் சார்ந்தது, அது பாமர மக்களிடம் நிலைபெறுதற் காரணம். அதன் பெயரமைதி, நடை, கதைசொல்லும் உத்திகள், கதைத் திரிபுகள், கதை படிப்போர் - கேட்போர் நிலை, சொல்லாட்சி, வட்டார வழக்கு, கதைப்பாடல்களில் அமையும் பொதுக்கூறுகள், அது நடைமுறையில் இன்றும் இருக்கும் நிலை போன்ற கருத்துக் கள் கீழே ஆராயப்படுகின்றன.

### மார்க்கண்டேயன் கதைப்பாடல் வகை

இக் கதைப்பாடலில் மூன்று வெவ்வேறான கதைகள் புனைந் துரைக்கப் பட்டுள்ளதாக முன்புகூறப்பட்டது. அவை மார்க்கண்டே யன் கதை, எமதருமராசன் கதை, சித்திரபுத்திர நயினார் கதை என்பன. ஆயினும் இவற்றுக்குள் இறைவனாலேயே தொடர்பு (link) ஏற்பட்டுள்ளது. புராணவகையைச் சார்ந்ததாக உள்ள இக் கதைப்பாடலில் மார்க்கண்டேயன், எமன், நயினார் ஆகியோரின் பிறப்பு (birth) கூறப்படுகிறது. இவர்கள் பிறத்தலுக்கான பின்புலங் கள் (settings) கூறப்படுகின்றன. எமனுடைய இறப்பு (death) கூறப்பட்டாலும் இறுதியில் அவனுக்குப் பிற இருவரைப்போல் இறப்பு இல்லாத நிலையும் கூறப்படுகிறது. மார்க்கண்டேயனுக் கும் எமனுக்கும் உள்ள போராட்டமும் (conflict) அதன் உச்ச

கட்டமும் (climax) அதைத் தொடர்ந்து எமன் வீழ்ச்சியும் முதல் கதை, அதாவது மார்க்கண்டேயன் கதைப்பகுதியில் கூறப்பட்டு, அதை முழுக்க முழுக்க ஒரு முடிந்த (complete) கதைப்பாடலாக அது ஆக்கியுள்ளது. அதைப் போன்றே எமதருமன் பகுதியில் உயிர்களுக்கும் அவனுக்குமுள்ள போராட்டமும், உயிர்களின் வீழ்ச்சியும் கூறப்பட்டு, இறுதியில் அவனது எழுச்சி நிலையும் கூறப்படுகிறது. இறுதியாக அமையும் நயினார் கதை போராட்டம் எதுவுமின்றி இயல்பாக அமைந்துள்ளது.

இவ்வாறு மூன்று வகையான கதைகளின் கோர்வையாக இக் கதைப்பாடல் உள்ளமையைக் காணலாம். தனி நூலாக வந்துள்ள சித்திரபுத்திர நயினார் கதைப்பாடலில் நயினாரின் கதையும், அமராவதி என்ற பெண்ணின் கதையுமாக அமைந்து இரு கதை களின் கோர்வையாகப் பாடப்பெற்றுள்ளது. மார்க்கண்டேயன் கதைப்பாடல் வகையினைக் கீழே உள்ளவாறு விளக்கலாம்.

| வகை | கதைப்பிரிவுகள் | பின்புலம் | பிறப்பு | போ ராட்டம் | வீழ்ச்சி | எழுச்சி |
|---|---|---|---|---|---|---|
| புராண வகை | மார்க்கண்டன் | √ | √ | √ | — | √ |
| | எமன் | √ | √ | √ | √ | √ |
| | சித்திரபுத்திரர் | √ | √ | — | √ | √ |

இவ்வாறு மூன்று பகுதியாக அமையும் இக் கதைப்பாடல் அதன தன் பகுதியின் கதைப்பாடலுக்கு அமைய வேண்டிய அடிப்படைக ளைப் பெற்றுள்ளமையைக் காணலாம்.

**மார்க்கண்டேயன்-எமன்-நயினார் கதைகள் மக்களிடம் நிலைத்தல்**

பழம்புராணக் கதையான மார்க்கண்டேயன் கதையில் பக்தி யின் காரணமாக இறைவன், எமன், நயினார் தொடர்பான இயற்கை இறந்த செய்திகள் வந்துள்ளன. இவை சமயவாதிகளால் போற்றப்பட்டன. இக் கதை தொடர்பான நிகழ்ச்சிகள் முன்பு நடந்தவைதாமா எனும் ஐயப்பாடும் பலரிடையே எழுவதுண்டு.

மார்க்கண்டேயன் பிறந்த இடமான கடவூர், வழிபட்ட கோவில் போன்றவை இன்றும் இருப்பதால் அவ் வரலாறு நடந்த நிகழ்ச்சியாகவே (legend) நம்பப்படுகிறது.

மார்க்கண்டேயனிடம் எமதூதர்களும், எமனும் வந்து வாதிட்டனர் என்பதும், எமன் பாசக்கயிறு இட்டு இழுத்தபோது இறைவன் தோன்றினார் என்பதும், காலன் அவரால் மாண்டான் என்பதும் பிறவும் இயற்கை இறந்த நிகழ்ச்சிகள். பிற்காலத்தில் மக்கள் நம்பத் தகுந்த அளவில் புனைந்துரைக்கப் பட்டதால் மக்கள் மத்தியில் நிலைத்துப் பரவத் தொடங்கின.

இவற்றுடன் இக் கதை தொடர்பான உபகதைகளில் வரும் புராண நிகழ்ச்சிகளும், இங்குப் பேசப்படும் எமபுரம் பற்றிய செய்திகளும், நரகங்களில் உயிர்களடையும் வதைகளும், சித்திரபுத்திர நயினார் பிறந்து உயிர்களின் பாவ-புண்ணியக் கணக்கெழுதுதல் போன்ற செய்திகளும் முழுக்க முழுக்கச் சமய நூலாசிரியர்களின் புனைந்துரைகளே; இவை இயல்பாக நடந்தவை போல் சித்திரிக்கப்பட்டதால் மக்கள் மனத்தில் நிலைத்து விட்டன.

இவ்வாறு நடந்த வரலாற்றையும் நடக்கவியலாத நிகழ்ச்சிகளையும் தொகுத்து மக்கள் நம்பக் கூடிய அளவில் இக் கதைப்பாடல் சித்திரிக்கப்பட்டுள்ளது. இவற்றுடன் பாமர மக்கள் தொடர்பான பல நிகழ்ச்சிகளும் புகுத்தப் பெற்றுள்ளன.

இவ்வாறு மார்க்கண்டேயன் கதை மக்களிடம் எடுத்துச் செல்லப்படுகிறது. அக்கதை இன்றும் வாழுந்தன்மையுடன் (living tradition) விளங்குகிறது. பிறகதைப் பாடல்கள் மக்களால் பரவுதல் போல் வாய்மொழி மரபும் (oral tradition) கொண்டுள்ளது.

### மார்க்கண்டேயன் கதைப்பாடல் சமயச் சடங்கில் படித்தல்

மாசி மாத சிவராத்திரி விரதம் சைவர்களுக்கு ஒரு முக்கிய விரதமாகும். மாசியில் தீர்த்தமாடும் பயனைக் கூறும் மாகபுராணம் வடமொழிப் பாத்ம புராணத்தில் சொல்லப்பெற்றப் பகுதியின் தமிழ் மொழிபெயர்ப்பு. இதில் மார்க்கண்டேயன் கதை நிகழ்ச்சிகளும் கூறப்படுகின்றன. இத் தமிழ்மொழிபெயர்ப்பை அதிவீரராம பாண்டியனார் செய்தார் என்பர். இவர் பிறகாலப் பாண்டியர்களுள் தென்பாண்டி நாட்டுப் பகுதிகள் சிலவற்றை ஆண்ட மன்னர் ஆவார். கி.பி. 16ஆம் நூற்றாண்டில் சைவ சமய வளர்ச்சிக்குப் பெரிதும் பாடுபட்டவர். வடமொழிச் சைவப் புராணங்கள் பலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடியவர். இவரைப்போன்றே இவரின் சகோதரர்களான வரகுணராம பாண்டியன், வரதுங்கராம பாண்டியன் என்போரும் கவிஞர்களே.

சைவப் புராணங்கள் தென்பாண்டி நாட்டில் மன்னர் போன்றோ ரால் பரவத் தொடங்கியதன் விளைவாக அந் நாட்டுப் புலவர்களும் பாமரக் கலைஞர்களும் அவை போன்ற முயற்சிகளில் ஈடுபடத் தொடங்கினர். கி.பி. 1595 இல் காசி நாடன் கவிராயரால் பாடப் பெற்ற முதல் குற்றாலப் புராணம் இதற்கொரு சான்றாகும்.[16]

மக்களின் விருப்பிற்கேற்பப் பாமரக் கலைஞர்களும் புராணக் கூறுகளைத் தேர்ந்தெடுத்து எடுத்துரை நடையில் எளிய சொல்லாட் சிகளுடன், வட்டார வழக்குக்கலந்து பாடினர். அவை அரங்கேற் றப் பெற்றுப் பின்பு விழாக் காலங்களில் வாசிக்கப்பெறும் தகுதியைப் பெற்றன. இவ்வாறாக எழுந்த பல கதைப்பாடல்களில் ஒன்றாகவே மார்க்கண்டேயன் கதைப்பாடல் உருவாயிற்று.

சிவராத்திரியன்று இரவு முழுவதும் கண்விழித்திருப்பதற்கு உதவியாக மார்க்கண்டேயன் கதைப்பாடல் வாசிக்கப்பெற்றது. இதற்கு ஏட்டுச் சுவடிகள் உதவியாக இருந்தன. ஏட்டுச் சுவடிகளைப் படிப்போர்க்கு மானியமும் பாராட்டும் மக்களிடமிருந்து கிடைத்தன.

சிவராத்திரியன்று மார்க்கண்டேயன் கதை ஏடு படிக்கப் பெறும் பொழுது கேட்கவந்திருக்கும் சிறுவர் சிறுமியர்க்குக் காணம், பயிறு போன்றவற்றை அவித்துத் தாம் வழங்குவதாகப் பொ. சிவபெருமாள் நாடார் கூறினார். வேடனொருவன் புலியால் துரத்தப்பெற்று ஒரு வில்வ மரத்தில் ஏறி அமர்ந்து கொண்டானாம். புலி மரத்தடியில் படுத்துக்கொண்டதாம். இரவில் தூங்காதிருக்க வில்வமர இலைகளை ஒவ்வொன்றாகப் பறித்துக் கீழே எறிந்தா னாம்.

விடிந்த போது புலி மறைந்து விட்டதாம். வேடன் மனைவி வேடனுக்காக இரவு முழுவதும் காத்திருந்தாளாம். பார்வதி தேவி ஒரு பெண் உருவில் வந்து காணம், பயிறுகளை அவித்து அவளைத் தூங்கவிடாது செய்தாளாம். புலியாக வந்தது சிவபெருமானாம். அந்த இரவை நினைக்கும் பொருட்டே சிவராத்திரி நோன்பு ஏற்பட்டதாம். அதனால்தான் அந்த இரவில் காணம், பயிறு வழங்குவதாகவும் அவர் கூறினார்.

வில்வமர இலைகள் கீழேயிருந்த சிவலிங்கம் மீது விழுந்தன என்றும் கூறுவர்.

---

16. திருக்குற்றாலப் புராணம் (கி.பி.1595) டாக்டர் ஆ. தசரதன் (பதிப்பில்)

இன்றும் தென்பாண்டி நாட்டின் பல பகுதிகளில் சிவராத்திரி யன்று படிக்கப்பெறும் சமயச் சடங்காகவே மார்க்கண்டேயன் கதைப்பாடல் விளங்குவதைக் காணமுடிகிறது. அவ்வாறான பகுதிகளிலிருந்தே மேற்கண்ட கதைப்பாடல் பிரதிகள் சேகரிக்கப் பெற்றன. இக் கதைப்பாடலின் அச்சுப் பிரதிகள் எளிதில் கிடைக் கப்பெறும் நிலை ஏற்படும்பொது இச் சடங்கு இன்னும் பல ஊர்களில் பின்பற்றப்படும் என்பது திண்ணம்.

## மார்க்கண்டேயன் கதைப்பாடலின் காலம்

தென்பாண்டி நாட்டில் சைவ சமய வளர்ச்சி கி.பி. 16ஆம் நூற்றாண்டில் உச்ச கட்டம் பெற்றது என்பதை மேலே பார்த்தோம். அவ்வாறாயின் மார்க்கண்டேயன் கதைப்பாடலும் அக்கால கட்டத் திலேயே இயற்றப்பட்டது எனக்கூறுவது பொருத்தமாகவே இருக் கும். கி.பி. 16ஆம் நூற்றாண்டின் இறுதியிலோ கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் முதலிலோ இயற்றப்பெற்ற இக் கதைப்பாடல் பின்பு ஓலைச் சுவடிகளிலும் எழுதி வைக்கப்பெற்றிருக்கலாம் என்று கருத இடமுண்டு. ஆனால், 18ஆம் அல்லது 19ஆம் நூற்றாண்டில் இக் கதைப்பாடல் பாடப்பெற்றது எனச் சிலர் கூறுவர்.[17]

கிடைத்துள்ள ஓலைச்சுவடிகளில் பதிப்பிற்கு எடுத்துக்கொள் ளப்பட்ட சுவடியின் வடிவங்களை நோக்கும் பொழுது அச் சுவடி ஒரு நூற்றாண்டிற்கும் முற்பட்டது எனத் தெரிகிறது. அதிலுள்ள எழுத்து முறை கி.பி. 1850 ஐ அடுத்த காலத்தது எனத் தெரிந்து கொள்ள முடிகிறது. இக் கதைப்பாடல்களின் பிற பிரதிகள் அதற்கும் பிற்காலத்தன என்றும் அறிந்து கொள்ளமுடிகிறது.

## மார்க்கண்டேயன் கதைப்பாடலாசிரியர்

இலக்ஷ்மி நாராயணன் என்பவர் 3500வரிகளில், 60 விருத்தங்க ளுடன் **மார்க்கண்டேயர் அம்மானையைப்** பாடியதாகவும், அது கி.பி. 1800-இல் அச்சானது என்றும் மு. அருணாசலம் அவர்கள் குறிப்பிட்

17. M. Arunachalam, 1976:p.158. "This ballad, along with similar puranic ballads, was of course written to help the semi-literates of the 18th and 19th centuriesx with some puranic text in popular language to keep the ancient legends fresh in their minds and to provide a sort of religion-oriented relaxation to the working class people". — Peeps into Tamil literature: Ballad Poetry. Gandhi Vidyalayam, Tiruchitrambalam, Tanjavur District).

டுள்ளார்.[18] இதிலிருந்து இலக்ஷ்மி நாராயணன் பாடிய மார்க்கண் டேயன் கதைப்பாடல் பிரதிகளே பெரும்பாலும் புழக்கத்திலிருந்தன எனத் தெரிகிறது.

ஆனால் பதிப்பிக்கப்பெறும் மார்க்கண்டேயன் கதைப்பாட லைப் பாடிய புலவர் (பார்க்க: வரி விளக்கம் 94-95) முத்துக்கூடன் மகன் நல்ல கூடன் ஆவார். கூடன் என்பது கூத்தன் என்று விரியுமாதலால் இவர் பெயர் நல்லகூத்தன் என்று உறுதிப்படுகி றது. ஆனால் இக் கதைப்பாடலின் பிற பிரதிகள் (இலக்குமி) (லச்சிமி) நாராயணனே கதைப்பாடலாசிரியன் எனத் தெரிவிக்கின் றன. 'முத்து தருசிவ த்ரும புலவன்' என **மார்க்கண்டேயன்** தவ நிலை எனும் பிரதி கூறுவதால் (இ)லக்குமி நாராயணனும் முத்துக் **கூத்தன் மகனேயாவான்.**

இவற்றால் மார்க்கண்டேயன் கதைப்பாடலைப் புனைந் துரைத்தவர்கள் முத்துக்கூத்தனின் புதல்வர்களான நல்லகூத்தனும் (இ)லக்குமி நாராயணனுமாவர் என்பது உறுதிப்படுகின்றது. இதன் காரணமாகவே இக் கதைப்பாடல் இருவகை அமைப்பைப் பெற்றுள்ளது. இப் புலவர்களில் நல்ல கூடனே 'கூத்தன்' எனும் பட்டம் பெற்றவர். இவர் பாடிய பிரதி இதுவரை அச்சில் வெளிவரவில்லை. முதன் முதலாக இப்போது பதிப்பித்து வெளியி டப்படுகிறது.




ஒரே குடும்பத்தைச் சேர்ந்த இரு புலவர்களால் பாடப்பெற்ற மார்க்கண்டேயன் கதைப்பாடலே பெரும்பாலும் சுவடிகளாக நமக்குக் கிடைத்துள்ளன. அல்லது முத்துக்கூத்தன் இயற்றிய மார்க்கண்டேயன் கதைப்பாடலை அவருடைய இரு புதல்வர் களும் கூட்டியும் குறைத்தும் பாடிய இரு கதைவேறுபாடுகளே நமக்குச் சுவடிகளில் கிடைத்துள்ளன எனக்கொள்ளலாம்.

## மார்க்கண்டேயன் கதைப்பாடலின் பெயர்

தொடக்கக் காலத்துக் கதைப்பாடல்கள் 'அம்மானை' என்றோ 'மாலை' என்றோ பெயர்பெற்றிருந்தன. எடுத்துரை நடையில்

---

18. M. Arunachalam, Ibid:p.158.

பாடப்பெறுவதும், அங்கங்கே நிறுத்தி நிறுத்திப் படிக்க வசதியாக 'அம்மானை' என்ற சொல் அமைத்துப் பாடப்பெறுவதும் அவற்றின் இயல்பாயிருந்தன.[19] ஆனால் பிற்காலத்தில் இவ்வழக்கு ஒழிந்து கதை என்றே நாட்டுப்புறக் கலைஞர்களால் வழங்கப்பட்டது.

பதிப்பிக்கப்பெறும் மார்க்கண்டேயன் கதைப்பாடலில் கூட 'அம்மானை' எனும் சொல் நான்கு இடங்களில்தான் வந்துள்ளது (வரிகள் 708, 710, 866, 997). ஆனால் கதை என்ற சொல் பல இடங்களில் பயின்று வந்துள்ளது. இதன் காரணமாகவே 'மார்க்கண்டேயன் அம்மானை', 'தவசு',. 'தவநிலை', என்ற பெயரிலுமிருந்த இக் கதைப்பாடல் இப் பதிப்பில் 'மார்க்கண்டேயன் கதைப்பாடல்' எனக் கொள்ளப்பெற்றது.

'அம்மானை' என்ற மகுடச் சொல்லிற்குப் பதிலாகவும் அது பயன்படுத்தப்பெற்ற நோக்கத்திற்கு இணையாகவும் பல விருத்தங்களை இக் கதைப்பாடலாசிரியர் பாடி 'அம்மானை'யின் பங்கை நிறைவேற்றியுள்ளார்;

## மார்க்கண்டேயன் கதைப்பாடலில் விருத்தங்கள்

எழுபத்தொன்பது விருத்தப்பாக்கள் பதிப்பிக்கப்பெறும் இக் கதைப் பாடலில் சேர்க்கப்பெற்றுள்ளன. ஆனால் இதே கதைப்பாடலின் பிற பிரதிகளில் அவற்றின் எண்ணிக்கை நூற்றுக்கும் மேலாக இருப்பதுடன் பிழை மலிந்தும் காணப்படுகின்றன. இப் பிழைகள் அடிக்குறிப்பில், 'பாடவேறுபாடு' எனக் காட்டப்பெற்றுள்ளன.

பதிப்பிலுள்ள பிரதியில் மிருக சிங்கன் இறைவன் மீது பாடும் சிவதோத்திரம் 15 விருத்தங்களிலும் (5 முதல் 19 வரை), மிருகசிங்கனின் மாமனார் மறலியைத் துதிப்பது 24-ம் விருத்தத்திலும், மார்க்கண்டேயன் சிவபூசையின் போது இறைவனை இரு விருத்தங்களில் துதிப்பதும் (விருத்தங்கள் 28,29), மார்க்கண்டேயன் இறைவன்மீது தமிழ்மாலை சூட்டுவது 10 விருத்தங்களிலும் (41 முதல் 50 வரை), இறைவன் பெருமையைப் பிற கடவுளரும்

---

19. M.Arunachalam, Ibid:, p.19 "...the ballad maker uses the term **ammanai** frequently wherever there is a pause in the story, whenever the writer wants to switch over from one scene to another, and whenever he desires to retrieve a situation where the emotions have been worked into a high pitch, he uses the term as a sort of refrain"

தேவரும் கூறுதல் 53ஆம் விருத்தத்திலும், எமன் இறைவனைத் துதிப்பது 7 விருத்தங்களிலும் (57 முதல் 66 வரை) அமைந்துள்ளன. இவ்வாறு துதித்தல் 36 விருத்தங்களில் இடம்பெறுகின்றது. மீதியுள்ள விருத்தங்கள் பெரும்பாலும் கதை நிகழ்ச்சிகள் முடிவு றும்போதோ தொடங்கும் போதோ பாடப்பெற்றவையாக அமைந் துள்ளன. எடுத்துரை நடையில் கதைப்பாடல் சொல்லி வரும் போது புலவன் ஒரு நிகழ்ச்சியிலிருந்து மறு நிகழ்ச்சிக்கு மாறும்வே ளையில் இத்தகு விருத்தங்களைப் பாடி வைத்துள்ளதாக அறிந்து கொள்ளலாம். மேலும் ஒரு தத்துவத்தையோ அல்லது ஒரு வருணனையோ புலவன் கூறிவரும் போது அதன் பளு அல்லது தரத்தினை மக்கள் கேட்டு அலுப்புறாத நிலையில் விருத்தங்கள் பாடி அடுத்த கட்டத்துக்குச் செல்லுகிறான் என்றும் அறிந்துகொள்ளலாம்.

சான்றாக, நிலையாமைத் தத்துவத்தைக் கூறிவரும் மிருகசிங்க னின் பகுதி அலுப்புறா வகையில் முதல் நான்கு விருத்தங்கள் பாடப்பெற்றுள்ளன; மிருகண்டு முனிவரும் மிருகசிங்கனும் தம் தம் உரையாடல் முடிவின்போது 20,21ஆம் விருத்தங்களில் முறையே முடிக்கின்றனர். திருமணப் பெண்ணுக்கிருக்க வேண்டிய இலக்கண வருணனையின் முடிவின்போது மிருகசிங்கன் 22,23, 23-அ எனும் விருத்தங்களுடன் முடித்தல்; முக் கடவுளரின் பணியைச் சிவன் கூறி முடிக்கும்போது 26ஆம் விருத்தம் பாடப்பெற்றுள்ளது. மார்க்கண்டேயனின் சிறு வயது முடிந்தபோது 27ஆம் விருத்தம் பாடப்பெற்றுள்ளது. ஏவல் நமன் தன் தொழிலை விடுவதாகக் கூறி முடிக்கும்போது 30ஆம் விருத்தமும், எமன் கோபப்பட்டு அடுத்து எருமைக் கடாவின் வருணனை தொடங்கும்போது 31ஆம் விருத்தமும், எமன் வந்து பூமியில் நின்ற வேக வருணனை முடிவில் 32ஆம் விருத்தமும், இறைவன் மார்க்கண்டேயனின் பயத்தை நீக்கி எமனுடன் உரையாடல் தொடங்குவிக்க 33ஆம் விருத்தமும், மார்க்கண்டேயன் இறைவன் இயல்பைக் கூறி முடித்தவுடன் 34,35 ஆம் விருத்தங்களும், எமன் கால எல்லையைக் கூறிமுடித்தவுடன் 36ஆம் விருத்தமும், மார்க்கண்டேயன் உரையா டல் முடிந்ததும் 37ஆம் விருத்தமும், இறைவன் தோன்றுதல் வருணனையின்போது 38, 39ஆம் விருத்தங்களும், எமன் இறந்து வீழ்தல் வருணனைக்கு 40ஆம் விருத்தமும் பாடப்பெற்றுள்ளன.

உயிர்கள் சாகாதிருக்கும் வருணனையின் முடிவில் 51ஆம் விருத்தமும், கடவுளர்கள் கயிலாயம் வந்து சேர்தலின் முடிவில் 52ஆம் விருத்தமும், எமனை இறைவன் உயிர் எழுப்ப முடிவு

செய்தபோது 54ஆம் விருத்தமும், எமன் எழுந்துவரும் வருணனைக்கு முடிவில் 55ஆம் விருத்தமும், கடவுளர்கள் எமனைப் புகழ்தலின்போது 56ஆம் விருத்தமும், நல்லோர் எவர் (விருத்தம் 67,68,69), தீயோர் எவர் (71,72) என முடிவு செய்யும்போது ஐந்து விருத்தங்களும், இறைவன் நல்லோர் பற்றிக் கூறி முடிந்ததும் 73ஆம் விருத்தமும், எமன் இறைவனிடம் நல்லோரைப் பற்றாது தீயோரை வதைப்பதாகக் கூறுமிடத்தில் 74ஆம் விருத்தமும், கடவுளர் மகிழ்ந்து புறப்படும்போது 75ஆம் விருத்தமும், சிவனடியார்க்குச் சிவலோக பதவி கிடைக்கும் எனும் புலவன் கூற்றுக்கு 76,77ஆம் விருத்தங்களும் கதை முடிவடைதலின்போது இறுதி விருத்தமும் பாடப்பெற்றுள்ளன.

இவ்வாறு ஒரு நிகழ்ச்சியிலிருந்து மறு நிகழ்ச்சிக்கு மாறும் போதோ, ஒரு தத்துவத்தைக் கூறிமுடிக்கும் போதோ, ஒரு வருணனையின் முடிவிலோ, ஓர் உரையாடலின் முடிவிலோ விருத்தங்கள் அமைந்துள்ளன. கதைப்பாடலினை எடுத்துச் சொல்லும் போது இத்தகு முறைகள் புலவரால் புகுத்தப்பெற்றுள்ளன.

சில கதைப்பாடல்களில் உரைநடைப் பகுதிகள் விருத்தங்களுக்குப் பதிலாக அமைந்துள்ளன. சித்திரபுத்திர நயினார் கதையில் உரைநடைப்பகுதிகள் விருத்தங்களின் பணியைச் செய்கின்றன. பிற்காலத்துப் பாடப்பெற்ற கதைப் பாடல்களிலும் இந் நிலையைக் காணலாம். மிகவும் சிறிய அளவு கொண்ட கதைப்பாடல்களில் இவ்விரு முறைகளும் இடம் பெறாதிருப்பதையும் காணமுடிகின்றது.

விருத்தங்கள் மேற்கூறப்பட்ட பணியைச் செய்வதுடன் இக் கதைப்பாடலின் இலக்கியத் தரத்தை உயர்த்துவனவாக அமைந்துள்ளன. மார்க்கண்டேயன் கதைப்பாடல் சிறந்த இலக்கியத் தரம் பெற்றுள்ளதால்தான் அதைப் பதிப்பிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது.

## மார்க்கண்டேயன் கதைப்பாடலில் எடுத்துரை நடை

'நடை' என்ற பகுதியும் 'விருத்தம்' என்ற பகுதியுமாகவே இக் கதைப்பாடல் பாடப்பெற்று அமைந்துள்ளது. 'நடை' என்ற பகுதியில் கதை நேரடியாகக் கூறப்படுவதால் அதனை எடுத்துரை நடை என்கிறோம்.

எடுத்துரை நடையிலமையும் கதைப்பாடல் வரி அல்லது அடி நான்கு சீர்கள் பெற்று வரும். ஈரடிகள் சேர்ந்து சேர்ந்து (தாழிசை போல்) அமையும். முதலடியின் முதல் சீரும் மூன்றாம் சீரும் (முதல் எழுத்து) மோனை பெற்று ஓசை ஒழுங்குடன் இயையும். முதலடி முதற் சீரின் இரண்டாம் எழுத்தும் இரண்டாம் அடியின் அதே எழுத்தும் ஒன்றாக — எதுகையாக — அமையும். இதனால் ஈரடிகளால் தொடர்ந்து இக் கதைப்பாடல் எடுத்துரைக்கப்பட்டுள்ள அமைப்பைக் காணமுடிகிறது.

ஒவ்வோரடியிலும் வரும் நாற்சீர்களும் ஈரசைகள் பெற்றோ மூவசைகள் பெற்றோ வந்துள்ளன. மூவசைகளுக்கு மேலும் பெற்ற சில சீர்களும் இக் கதைப்பாடலில் அருகிக் காணப்படுகின்றன. இவ்வாறு சீர்கள் குறைந்தும் மிகுந்தும் வருதல் பாடப்பெறும் கதை நிகழ்ச்சிகளுக்கு ஏற்ப அமைந்துள்ளன. கேட்டுக்கொண்டிருக்கும் மக்களின் தரத்துக்கேற்பவும், கதை நிகழ்ச்சியை அவ்வப் போது நிறுத்துவதற்கேற்பவும் இந் நடை கையாளப்பட்டது.

## மார்க்கண்டேயன் கதைப்பாடலில் நடைக்கூறுகள்

இங்குப் பதிப்பிக்கப்பெறும் கதைப்பாடல் எவ்வாறு ஓலைச் சுவடியில் எழுதப்பெற்றிருந்தது என்பது பற்றியும், அக் கதைப் பாடல் ஆசிரியனின் நடை பற்றியும் இங்கு ஆராய்வது இன்றியமையாதது ஆகும்.

கதைகள் பாமர மக்களுக்கெனப் பாடப்பெறுவதாலும், பாமரக் கலைஞர்களால் பாடப்பெறுவதாலும் அவரவர்களுக்குப் புரியும் சொற்களையும், அவரவர்கள் வழங்கும் தொடர்களையும் எடுத்துரை நடையில் கையாளுவர். மேலும், எளிதாகக் கதையை எடுத்துக் கூறுவதற்கேற்ப இலக்கண வரம்புகள் அதிகமின்றி இந் நடை இருப்பதாலும் இதுபயன்படுத்தப்படுகின்றது. இதனாலும் சொற்களில் மாற்றம் ஏற்படுவதுண்டு.

எடுத்துரை நடையில் வரிகளின் அமைப்பு, சீர்களின் அமைப்பு, எதுகை-மோனை வந்து ஓசை ஒழுங்கு அமைதல் போன்ற காரணங்களாலும் சொற்கள் தம் இயல்பான வடிவங்களிலிருந்து மாற்றம் பெறும். இதனால் சொற்களில் எழுத்து மாற்றம் ஏற்படும். சொற்கள் திரியும்; பேச்சு வழக்குச் சொற்கள் கலந்து வரும்; வட்டார வழக்குச் சொற்களும் இடம்பெறும்.

மார்க்கண்டேயன் கதைப்பாடலிலும் இவ்வாறான இயல்பைக் காணலாம். இந் நடைக் கூறுகள் குறிப்புரையிலும், சொல் அகராதியிலும் ஓரளவு எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன.

மார்க்கண்டேயன் கதைப்பாடலாசிரியன் பயன்படுத்திய பேச்சு வழக்குச் சொற்கள், வட்டார வழக்குகள், பிற நடைக்கூறுகளை யன்றி அக் கதைப்பாடலைச் சுவடியில் எழுதிவைத்தவர் அல்லது பிரதி செய்தவரின் நடைக்கூறுகளும் இடம்பெற்றுவிடுவதுண்டு. கதைப்பாடலைக் கேட்டு எழுதுவதாலும், நினைவிலிருந்து எழுது வதாலும், சுவடிப் பிரதிகளைப் பார்த்து எழுதுவதாலும், போதிய கல்விப் பயிற்சி இல்லாததாலும் இத்தகு நடைக்கூறுகள் சுவடி பெயர்த்தெழுதுவோராலும் ஏற்பட்டு விடுகின்றன. இதனால் இக் கதைப்பாடலின் நடை இருவகையினரின் நடைக்கூறுகளைப் பெற் றுள்ளது எனலாம். இதைக் கீழ்வருமாறு விளக்கலாம்.

கதைப்பாடல்நடை

பாடலாசிரியனின் நடை சுவடி பெயர்த்தெழுதியவனின் நடை

மார்க்கண்டேயன் கதைப்பாடல் தென்பாண்டி நாட்டைச் சார்ந்தது என்றும், அதைப் பாடிய புலவனும் அவ் வட்டாரத்தினன் என்றும், அச் சுவடியும் அப் பகுதியைச் சார்ந்தது என்றும் மேலே பார்த்தோம். இங்குப் பதிப்பிக்கப்பெறும் சுவடி மூலச்சுவடியன்று. அதில் பிழைகள் இருப்பதாலும் வரிகள் விடுபட்டிருப்பதாலும் யாரோ ஒருவரால் பிரதி செய்யப்பெற்றதாக உள்ளது.

இக்கதைப் பாடலைச் சுவடியில் பெயர்த்தெழுதியவர் பெயர் எங்கும் இடம்பெற்றிலது.ஆனால், இவர் பயன்படுத்தியுள்ள ழ/ள, ற/ர திரிபுகள், த்த/ற்ற மாற்றங்கள், ர் - விடுபடல், முதலெழுத்து, இறுதியெழுத்து மாற்றங்கள் போன்றவற்றால் இவ ரும் தென்பாண்டி நாட்டினர் என்பது உறுதிப்படுகிறது. இவ்வா றான சில மாற்றங்கள் ஓரளவு கீழே அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளன.

| திரிந்த வடிவம் | முதலெழுத்து (உயி ரெழுத்து) மாற்றம் | நேரான வடிவம் |
|---|---|---|
| | அ < ஐ மாற்றம் | |
| அஞ்சு | வி. 13, வி.28, வி. 53, 122, 229, 282, 319, 758, 1309, 1443, 1444, 1540, 1882 | ஐந்து |
| அய்ந்து | 576, வி.10 | ஐந்து |

## இடையெழுத்து (உயிர்) மாற்றம்

### -இ- < -அ- மாற்றம்

| | | |
|---|---|---|
| அந்திர லோகம் | 1553 | அந்தரலோகம் |
| உதிரம் | வி. 9, வி. 62 | உதரம் |
| கலிசம் | 1999 | கலசம் |
| கற்பினை | 344, 374, 644, 739,<br>746, 1121, 1187, 2444 | கற்பனை |

### -அ-< -இ- மாற்றம்

| | | |
|---|---|---|
| கயறு | 890, வி. 32, 1378, 13<br>65, 1381, 1382, 1804,<br>1866, 1882, 1888, 2146 | கயிறு |

### -இ- < -உ- மாற்றம்

| | | |
|---|---|---|
| அடிக்கி | 2326 | அடுக்கி |
| ஒதிங்கி | 1549 | ஒதுங்கி |
| குமிறி | வி. 31 | குமுறி |
| சதிர | 1253, 1254 | சதுர |
| பிடிங்கி | 1202, 1206, 2260 | பிடுங்கி |
| பெரிச்சாளி | 39 | பெருச்சாளி |

### -உ- < -இ- மாற்றம்

| | | |
|---|---|---|
| அடுமை | 1340 | அடிமை |
| அருந்துதி | 460 | அருந்ததி |
| அருவையர் | 510, 520, 2056 | அரிவையர் |
| வலுமை | 215 | வலிமை |

### -அ- < -ஐ- மாற்றம்

| | | |
|---|---|---|
| அபயம் | 2286 | அபையம் |
| அரப்பு | 2435 | அரைப்பு |
| இசவு | 1680 | இசைவு |

### -இ- < -அ- மாற்றம்

| | | |
|---|---|---|
| கிடா | 992, 994, 995, 1010 | கடா |
| கிணங்கள் | 2548 | கணங்கள் |
| சிலாகை | 2253 | சலாகை |
| தியக்கம் | 29 | தயக்கம் |
| பிலவான் | 555, 787 | பலவான் |
| பிலன் | வி. 14, வி 20, 1842 | பலன் |

-ஈ- < -ஏ- மாற்றம்

| | | |
|---|---|---|
| சியல் | 258, 898, 968, வி. 75, 2501, 2525 | செயல் |
| சிலவளிவு | 2156 | செலவளிவு |

-ஏ- < -ஆ- மாற்றம்

| | | |
|---|---|---|
| கெங்கை | 1426, 1770 | கங்கை |
| கெசம் | 1545, 1439 | கசம் (கயம்) 352, வி. 44 |
| கெட்டி | 2462 | கட்டி |
| கெணம் | 983, 1981, 2409, 2411, 2626 | கணம் 124, 132, 980, வி. 73, 2614 |
| கெணிதம் | 1426 | கணிதம் |
| கெதி | 587 | கதி |
| கெருடன் | 1476 | கருடன் |
| கெற்பம் | 690, வி. 26 | கற்பம், கர்ப்பம், கருப்பம் |
| செணம் | 1358, 1564 | சணம் |
| செனனம் | 1288, 1861, 2515 | சனனம் |
| தெண்டனிடல் | 144, 279, 333, 395, 398, 594, 673, 683, 786, 1059, 1823 | தண்டனிடல் |

-ஒ- < -உ- மாற்றம்

| | | |
|---|---|---|
| கொளை | 1488 | குளை |
| பொசித்தல் | 129, 196 | புசித்தல் |
| பொத்தகம் | 1453, 2543, 2615 | புத்தகம் |
| பொதைத்தார்கள் | 1711 | புதைத்தார்கள் |

-உ- < -ஒ- மாற்றம்

| | | |
|---|---|---|
| குலை | 887, 1006, 1118, 1128, 1665, 2256, 2261, 22 82, 2304 | கொலை |
| துட | 516 | தொட |
| துடரதாகி | வி. 64 | தொடரதாகி |

**இடையெழுத்து (மெய்) மாற்றம்**

-ட்- < -ன் ற்- மாற்றம்

| | | |
|---|---|---|
| அகண்டு | வி 69, 781, 1103 | அகன்று |

| | | |
|---|---|---|
| ஒண்டி | வி 39 | ஒன்றி |
| கொண்டு | 2187 | கொன்று |
| மூண்டாகி | 710 | மூன்றாகி |

-ன்ற- < -ண்ட்- மாற்றம்

| | | |
|---|---|---|
| அன்றவொட்டு | 906 | அண்டவொட்டு |
| திண்டுமன்று | 783 | திண்டுமுண்டு |

-ற்க- < -க்க- மாற்றம்

| | | |
|---|---|---|
| ஏற்கமுறல் | 1136 | ஏக்கமுறல் |
| ஒற்கும் | 79, 81, 83, 85, 87 | ஒக்கும் |
| காற்க | 151, 1193 | காக்க |
| காற்ப | வி. 26 | காப்ப |
| விற்கும் | 2273 | விக்கும் |

-ற்ற்- < -த்த்- மாற்றம்

| | | |
|---|---|---|
| அமைற்றாய் | 1845 | அமைத்தாய் |
| அரைற்று | 2090 | அரைத்து |
| உடைற்றோர் | 2275 | உடைத்தோர் |
| உதைற்றார் | 1533 | உதைத்தார் |
| உரைற்று | 1281, 1755 | உரைத்து |
| எடுற்று | 1248 | எடுத்து |
| எற்றி | 2299 | எத்தி |
| ஒளிற்றார் | 1657 | ஒளித்தார் |
| ஒற்ற | 85, 87 | ஒத்த |
| காற்று | 1343 | காத்து |
| காற்றிருக்க | 2375 | காத்திருக்க |
| குற்று | 1665 | குத்து |
| கொற்று | 1031, 2584 | கொத்து 2466, வி. 43 |
| சங்கரிற்றார் | 1859 | சங்கரித்தார் |
| சற்றி | 334 | சத்தி 9, 10, 300, வி. 46 |
| சிற்றிரம் | 2441 | சித்திரம் |
| சுற்றம் | 624 | சுத்தம் |
| செற்றார் | 2195, வி. 17 | செத்தார் |
| தவற்றோன் | 532 | தவத்தோன் |
| நச்சேற்றிரம் | 2553 | நட்சத்திரம் |
| பற்றாய் | 692 | பத்தாய் |

| | | |
|---|---|---|
| பொற்றகம் | 2146 | புத்தகம் |
| மற்று | 219 | மத்து |
| முற்று | 697, 1916, 2460, 2465 | முத்து |
| விற்று | 434, 1227 | வித்து 586, வி. 43 |

-த்த்- < -ற்ற்- மாற்றம்

| | | |
|---|---|---|
| அகத்து | 816 | அகற்று |
| அத்து | 1436, 1536, 1891 | அற்று |
| ஆத்த | 1724 | ஆற்ற |
| இயத்து | வி 21, 49, 67, 762, 13 56, 1791, 1827 | இயற்று |
| உத்த | 460, 662, 884, 1198, 1214, 1215, 1222, 12 23, 1365 | உற்ற |
| கத்தவர் | 68 | கற்றவர் |
| கத்தோர் | வி. 68 | கற்றோர் |
| காத்து | வி 60 | காற்று |
| குத்தம் | 67, 1518, 1864, 1881, 1946 | குற்றம் |
| கொத்தவர்கள் | 2105 | கொற்றவர்கள் |
| சத்து | 2443 | சற்று |
| சாத்தி | 537, 2654 | சாற்றி |
| சீத்தம் | 979 | சீற்றம் |
| சுத்தி | 858, 943, 945, 1761 | சுற்றி |
| சுத்து | 896, 1928, 2070, 947, 2470, 2073, 2470, வி. 43, 2070, 2124 | சுற்று |
| தீத்தி | 2089 | தீற்றி |
| தொத்தல் | 359 | தொற்றல் |
| நாத்தம் | 133, 467, 1719 | நாற்றம் |
| நெத்தி | 1042, 1082 | நெற்றி |
| பத்தியுத்தோர் | 1222 | பத்தியுற்றோர் |
| பத்துகை | 1924 | பற்றுகை |
| பீத்தல் | 131 | பீற்றல் |
| புத்து | 1692 | புற்று |
| புதைக்கலுத்தார் | வி. 51 | புதைக்கலுற்றார் |
| பெத்தவன் | 1290 | பெற்றவன் |
| பொத்தல் | வி 12 | பொற்றல் |

| | | |
|---|---|---|
| போத்தி | 547, 959, 1957 | போற்றி |
| மத்தவர்கள் | 1216 | மற்றவர்கள் |
| மாத்து | 1191, 1249, வி. 71 | மாற்று |
| முறைநாத்தம் | 2336 | முடைநாற்றம் |
| வயத்து | 38, 45, 164 | வயற்று |
| வித்தாரம் | 2645 | விற்றாரம் |
| வெத்தி | 1119, 2073, 2563, 1129, 1765 | வெற்றி |
| வேத்துருவம் | 841 | வேற்றுருவம் |

### உயிர்மெய் எழுத்து மாற்றம்

-வ- < -ப- மாற்றம்

| | | |
|---|---|---|
| அவாயம் | 1645 | அபாயம் |
| ஆவத்து | வி 24 | ஆபத்து |
| கோவித்தல் | 876, 973 | கோபித்தல் |
| துளபம் | 2093 | துளவம் |
| பிரவஞ்சம் | 377 | பிரபஞ்சம் |
| வில்பம் | 814 | வில்வம் |

-ய- < -ச- மாற்றம்

| | | |
|---|---|---|
| ஈயல் | 1181 | ஈசல் |

-ச- < -ய- மாற்றம்

| | | |
|---|---|---|
| பிரிசம் | 318, 2524 | பிரியம் |

-ல- < -ர- மாற்றம்

| | | |
|---|---|---|
| ஆலத்தி | 833, 2054, 2124, 2388, 2482 | ஆரத்தி |

-ய- < -வ- மாற்றம்

| | | |
|---|---|---|
| கிங்கிலியர் | 982, 985, 991, 1008, 1011, 2139, 2167 | கிங்கிலிவர் |

### இறுதி எழுத்து மாற்றம்

| | | |
|---|---|---|
| அதிய | 1189 | அதிக |
| இயல்பு | 1791, 1827, 2061, 2682 | இயல்வு |
| சவை | 2238 | சபை |
| சுரவி | 2392 | சுரபி |

-ட்- < -ழ்- மாற்றம்

| | | |
|---|---|---|
| இதட் | 821 | இதழ் |
| தமிட் | 48 | தமிழ் |
| புகட் | 564 | புகழ் |
| மகிட்ச்சி | 501, 704 | மகிழ்ச்சி |

எழுத்து விடுபடல்

-ர்- விடுபடுதல்

| | | |
|---|---|---|
| அடந்த | 1322, 1372 | அடர்ந்த |
| அமத்தி | 251 | அமர்த்தி |
| அயந்த | 1162 | அயர்ந்த |
| ஆத்த | 2334 | ஆர்த்த |
| உசந்த | வி. 39 | உயர்ந்த |
| ஒளிவு | 1324 | ஒளிர்வு |
| கத்தன் | 27, 336, 2134 | கர்த்தன் |
| சமத்தன் | 700 | சமர்த்தன் |
| சேத்த | 1054 | சேர்த்த |
| சொக்கம் | 268, 616, 1335, 2488, 2492, 2512, 2511, 26 86, 2680 | சொர்க்கம் |
| தீத்த | 2571 | தீர்த்த |
| துடந்தே | 1952, 1954 | துடர்ந்தே |
| நிமிந்து | 463 | நிமிர்ந்து |
| பாத்து | 450, 684, 721, 1416, 1489 | பார்த்து |
| வளத்த | வி. 21 | வளர்த்த |

எழுத்துமிகுதல்

-ய்- தோன்றல்

| | | |
|---|---|---|
| எய்யிறு | 1914 | எயிறு |
| கைய்வாளி | 1085 | கைவாளி |

வடமொழி எழுத்துக்கள் வரல்

| | | |
|---|---|---|
| சாஷ்த்திரம் | 2557 | சாத்திரம் |
| சிவதோஷ்த்திரம் | 1078 | சிவதோத்திரம் |
| சூஷ்த்திரம் | வி. 36 | சூத்திரம் |
| திட்டிக்க | 643, 646, 1670 | சிருஷ்டிக்க |
| திறி (திரி) | 1786 | ஸ்திரி |

| | | |
|---|---|---|
| நஷ்சேத்திரம் | 1555 | நட்சத்திரம் |
| வச்சிரம் | 1028 | வஸ்திரம் |
| புற்பரதம் | 2613 | புட்பரதம் |
| விஷ்த்தாரம் | 106, 2340 | வித்தாரம் |

முதலெழுத்து விடுபடல்

| | |
|---|---|
| ரெட்டினம் | 2477 |
| ராச்சதசூரன் | 51 |
| ரேகம் | 317, 2485 |
| லச்சம் | 2023 |
| லச்சிமி | 254, 1767 |
| லட்சித்தல் | 651, 1343 |
| லற்க்கணாள் | 475 |
| லெச்சை | 99 |
| லோகம் | 2034 |
| லோனி | வி 62 |

## பதிப்புமுறைகள்

இவ்வளவும் பாடலாசிரியன் மற்றும் சுவடியைப் பிரதி செய்தவரின் நடையை உணர்த்துபவையாகும். இவற்றுக்கும் மேலாக அப் புலவன் பயன்படுத்தியுள்ள உவமை, உருவகம் போன்றவை அவனின் கவித்துவத்தை அறிய உதவுகின்றன.

சுவடி பெயர்த்தெழுதியவரின் கவனக்குறைவால் சில வரிகள் விடுபட்டுள்ளன. அவை பதிப்பில் புள்ளிகள் (....) இடம்பெற்றுக் காட்டப் பெற்றுள்ளன. அவ்விடத்தில் வருவதான 'அடி' பதிப்பிற்குத் துணையாக அமைந்த பிற பிரதிகளிலிருந்தால் அவை குறிப்புரையில் எடுத்தாளப்பெற்றுள்ளன. சொற்கள் விடுபட்டிருக்குமாயின் தகுதியான சொற்கள் வருவிக்கப்பெற்றுப் பகர அடைப்புக் குறிக்குள் காட்டப்பெற்றுள்ளன.

சுவடி பெயர்த்தெழுதியவர் சில எழுத்துக்களை விட்டுவிடுவதும் சில எழுத்துக்களைக் கூடுதலாகச் சேர்த்துக் கொள்வதும் காணப்படுகின்றது. விடுபட்ட எழுத்துக்கள் பகர அடைப்புக்குறிக்குள் ( [] ) இடப்பெற்றும், கூடுதலான எழுத்துக்கள் பிறை அடைப்புக்குறிக்குள் ( () ) இடப்பெற்றும் இப் பதிப்பில் காட்டப்பெற்றுள்ளன.

அடிகள் இரண்டிரண்டாக வருவதால், பொருள் அவ்வவ்வடிகளில் முற்றுப்பெற்றும் சில இடங்களில் முற்றுப்பெறாது தொடர்ந்

தும் அமையும். சில அடிகளின் ஈற்றுச்சீர்களில் ஒற்றெழுத்துக்கள் இறுதியில் இடம் பெற்றும் இடம்பெறாதும் உள்ளன. அவை அவ்வாறே பெயர்த்தெழுதப்பெற்றுப் பதிப்பிக்கப்பெற்றுள்ளன.

பாடல்வரிகளும் அவற்றிற்கான குறிப்புரையும் வரி எண்கள் கொடுக்கப் பெற்றுப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. இக் குறிப்புரை பெரும்பாலும் 'பதவுரை'யாக அமைந்துள்ளது. பதிப்புச் சுவடியி லுள்ள சொற்களிலிருந்து முற்றிலும் பிரதிகளில் சொற்கள் மாறுபடு மாயின் அவை பா.வே. (பாடவேறுபாடு) என்றும், ஓரிரு எழுத்து மாற்றம் பெற்றிருப்பின் பி.வே. (பிரதிவேறுபாடு) என்றும் குறிக் கப்பெற்றுள்ளன. பாடவேறுபாடும் பிரதிவேறுபாடும், ஒப்பீட்டுப் பகுதிகளும் பதிப்புப் பிரதிவரிகளுக்குக் கீழே குறிப்புரையில் வரிசைப்படுத்தப் பெற்றுள்ளன. ஒரு சொற்பிரயோகம் கதைப்பாட லில் வேறிடங்களிலும் வருமாயின் வரி எண்களுடன் கொடுக்கப் பெற்றுள்ளது.

சொற்களின் திரிந்த வடிவங்களுக்குரிய நேரான வடிவம் வருவிக்கப்பெற்றுக்காட்டப் பெற்றுள்ளன. ஆயின் வட்டார வழக் குகள் இருந்தவாறே பதிப்பிக்கப் பெற்றுள்ளன. வடமொழி எழுத் துக்கள் பயன்படுத்தப் பெற்றிருத்தலையும் இக் கதைப்பாடலில் காணலாம். அவற்றுக்கான தமிழ் எழுத்து வடிவங்கள் தரப்பெற் றுள்ளன.

இக் கதைப்பாடலில் நாட்டுப்புறவியல் கூறுகள் மிகுந்திருப்ப தால் கூடியவரையில் அவை சிதையாவாறு பதிப்பிக்கப் பெற்றுள் ளன.

ஆய்விற்குப் பயன்படும் நோக்கில் விரிவான சொல்-தொடரகராதி தயாரிக்கப்பெற்று இறுதியில் இடம் பெறுகின்றது. இக் கதைப்பாடல் சொல்வளம் பெற்று அமைந்திருப்பதை விரி வான இவ்வகராதியிலிருந்தே தெரிந்து கொள்ள முடியும்.

மார்க்கண்டேயன் கதைப்பாடல் பாடப் பெற்றதன் நோக்கத் தைப் பரப்பவே இப் பதிப்பு முயற்சி இங்கு மேற்கொள்ளப் பெற்றது. மார்க்கண்டேயன் சிரஞ்சீவியாக அருளப் பெற்றதுபோல் இப் பதிப்பு நூலும் அமைய இறைவன் அருளுவாராக. அதற்கு எல்லோரின் ஆதரவும் பாராட்டுதலும் கிடைக்குமென நம்புகிறேன்.

*20.12.92*
சென்னை

டாக்டர் ஆ.தசரதன்

# மார்க்கண்டேயன் கதைப்பாடல்

## காப்பு

அரனார்திருப் பாதமதை யன்பாகவே தொழுது
வரம்பெருகும் மார்க்கண்டன் மகிழ்புராணக் கதையை

### காப்பு

*இந் நூலிலும், சரசுவதி மகால் நூலகப் பதிப்பிலும் (சுவடி எண்.1566, சாதாரண வருடம் = கி.பி. 1850, இனி ச.ம.நூ.), காணியாளன் புதூர் ஓலைச் சுவடியான மார்க்கண்டேயன் அம்மானையிலும் (கி.பி. 1921, இனி மா. அ.), அதே ஊர் மற்றொரு சுவடியான மார்க்கண்டேயன் தவநிலையிலும் (கி.பி. 1961, இனி மா. தவநிலை), திருமலையப்பபுரத் துக் கையெழுத்துப் பிரதியிலும் (கி.பி. 1973, இனி கை.பிரதி), காப்புச் செய்யுளாகக் கீழ்வரும் பாடல் இடம்பெறுகின்றது. ஆயினும் அப் பாடல் மேற்காணும் சுவடிகளில் வெவ்வேறு பாட வேறுபாடுகளுடனும் பிழைபடவும் எழுதப் பெற்றுள்ளது:*

*அம்புலியைச் சடைக்கணிந்து கொன்றை சூடும்*
*அரனிடத்தி லினிதிருக்கும் உமையாள் பாலன்*
*கும்பமுலைக் குறமகளின் வள்ளி பங்கன்*
*குமரகுருபரன் தனக்கு முன்பு வந்த*
*தும்பிமுகன் சீரடியைத் தொழுது வாழ்த்தி*
*சொன்னதமிழ் பெருகிநிற்கத் துலங்கும் செல்வம்*
*செம்பொனடித் தாளிணையைத் தொழுது போற்றித்*
*தினசரியும் மறவாமல் சென்னி வைப்பாம்*

*இந் நூலைத் தவிர ஏனைய பிரதிகளில் தொடக்கமாக மூன்றுவரிகள் இடம் பெற்றுள்ளன. அவை ஓரே சீராக இல்லாது பாடபேதங்களுடன் காணப்படுகின்றன. ச.ம.நூ. பதிப்பில் மட்டும் காப்புச் செய்யுளுடன் வேறு ஆறு அவையடக்கப் பாடல்கள் உள்ளன.*

*1. அரன் - சிவன்; அரன் + ஆர் — ஆர் என்பது மதிப்பு விகுதி; பாதமதை - திருத்தாள்களை; அன்பாகவே தொழுது-விரும்பி வணங்கி; 'திருப்பாதம்' என்பது 'இருபாதம்' எனச் ச.ம.நூ. வெளியீட்டில் பா.வே. ஆக உள்ளது. பின்னால், 'திருப்பாதம்' (1943) என வருதல் காண்க. மா. தவநிலையில் 'திரு பொற்பாத மலர்' எனப் பிரதி வேறுபாடாக உள்ளது;*

*2. வரம் பெருகுதல்-தவத்தால் மேன்மேலும் வரங்கள் மிகுதல்;*

வஞ்சமற்ற மெய்யன்மிகு மார்க்கண்டன் மோச்சகதையை[த்]
தஞ்சமடி யார்பாடச் சங்கரனே காத்தருள்வாய்

**அரனார் துதி**

5 மலைமகளைப் பாகம்வைத்து வாரணனை யீன்றோனே
கலைத்தமிழால் நின்புகழைக் கருத்துவைத்துப் பாடுதற்குச்
சிந்தைகளி கூர்ந்து சிவனார் திருவருளால்

மார்க்கண்டன்-மார்க்கண்டேயன்; மகிழ் புராணக்கதையை - தொன்று தொட்டு வழங்கிவரும் வரலாற்றை; பா.வே.-'அறம் புகழும்' (ச.ம.நூ.); 'இந்த வானுலகெல்லாம் பெருகும்' (மா.தவநிலை). 'மார்க்கண்டன்' என்பது 'மாற்(க்)கண்டன்' என்றும் எழுதப்பெறும். இது தென்பாண்டி நாட்டு வழக்கு. புராணக்கதை—பழங்கதை அல்லது தொன்மைக்கதை. 'அரன்கதை' என்கிறது மா.தவநிலை. 'புராணக்கதை' (2), 'மோச்சக்கதை' (3), 'கதை' (2676, 2683) என வருவதால் இந் நூலுக்கு *மார்க்கண்டேயன் கதைப்பாடல்* எனத் தலைப்பு இடப்பெற்றது. பார்க்க 708 ஆம் வரியின் விளக்கம். விரிவான விளக்கத்திற்கு முன்னுரையைக் காண்க;

3. வஞ்ச மற்ற மெய்யன் - உண்மை அன்பன்; மார்க்கண்டன் மோச்சகதையை - மார்க்கண்டேயன் கதைப் பாடலை; 'மிகு' என்பது அசை. ச.ம.நூ. பதிப்பு நூலிலும் மா.அ. சுவடியிலும் இந்த அசை இல்லை; 'மோச்ச < கதை' மோட்ச கதை;

4. தஞ்சமடியார் பாட - இறைவனிடம் தஞ்சம் அடைந்த அடியார்கள் பாட; இது ச.ம.நூ. இல் 'தஞ்ச மிகு சீர் மதுரம்' என (பா.வே.) உள்ளது; மா.தவநிலையில் 'தஞ்சம் என்று அடியார் பாட' என உள்ளது; சங்கரன் - சிவன்; காத்தருள்வாய் - காத்தருள்வீராக;

5. மலை மகள் - மலையரசனுக்குப் பிறந்தவள்; உமை, பார்வதி. பார்க்க: வி.5-19; பாகம் வைத்தல் - இடது பாகத்தில் வைத்தல்; இதனை, 'சத்தியிடமாக' (9), 'இடமே தரித்தயுமை' (வி.42), 'உமைக்கொரு பாகம்' (வி.54) என்பவற்றாலும் அறியலாம். 'மலை மகளை அன்பாக வைத்து' என மாறுபட மா.தவநிலை கூறுகிறது; வாரணன் - ஆனைமுகன்; வாரணம் - யானை; ஈன்றோனே - மகனாகப் பெற்றவனே;

6. கலைத்தமிழ் - கலைகள் பல மிகுந்துள்ள தமிழ்; ஒப்பிடுக: 'கலை மகள்' (2386). 'கலை யறிவு' என்பது ச.ம.நூ. பாடம்; நின்புகழை -சிவன் பெருமையை கருத்து வைத்துப்பாடுதல் - பொருளுடன் பாடுதல்; 'கருத்துகந்து பாடுதல்' என்பது ச.ம.நூ., மா.தவநிலை என்பவற்றின் பாடம்;

7. சிந்தை களி கூர்தல் - உள்ளத்தில் உவகை அடைதல்; ஒப்பிடுக: 'சிந்தை மகிழல்' (1616, 1621, 1822, 1894, 1991, 2574, 2576, 2588); 'சிந்தை மகிழ்ந்து' என்பது மா.தவநிலை, கை.பிரதி இவற்றிலுள்ள பாடம்; சிவனார் திருவருள் - ஈசன் அருளால்; இது 'சிவனே திருவருளால்'

எந்தன்தனைக் காத்து யிலச்சிக்கவே மகிழ்வாய்
சத்தியிட மாகநின்று தற்சுருபமா விளங்க
எத்திசைக்கு மீறிவிளை யீசுபரனே சத்திபங்கா
பாலில்சிறந்த நெய்போல் பாரெங்குந் தான்பரந்து
வாலமதி சூடி வளருவிரை யாலாய்
அணுவுக் கணுவாய் யண்டரண்ட மூடுருவி
தனுவுக்குள் ளாடிநின்ற சங்கரனே பிஞ்ஞகனே

(ச.ம.நூ.) என்று பிரதி வேறுபாடாக வரும்; ஒப்பிடுக: ''சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை'' — திருவாசகம்.

8. எந்தன்தனைக் காத்து - என்னைப் பாதுகாத்து; 'காற்று' 'கார்த்து' என்றும் வரும். இது தென்பாண்டி நாட்டு நாட்டுப்புற இலக்கிய வழக்கு; இலச்சிக்க < இரட்சிக்க. 'இலட்சிக்க' (2326) என்றும் வரும். 'இரட்சிக்க வந்தருள்வீர்' என்பது ச.ம.நூ. பாடம். '(இ)ரச்சித்துவே மகிழ்வீர்' என்பது மா.தவநிலை, கை.பிரதிகளில் பாடம்.

9. சத்தி - சக்தி, பார்வதி; இடமாகநின்று - ஈசனின் இடது பாகத்தில் இருந்து; தற்சுருபம் < தற்சுரூபம் < தற்சொரூபம் - தன் (சுய ரூபம் — மா.அ.) சுரூபமாய் விளங்க - தனது இயல்பான வடிவுடன் நிற்றல். ஒப்பிடுக: வேதசொரூபம், சிற்சொரூபம் (Winslow: 1978:520). 'சத்தியிட பாகம் நின்ற' என்பது கை.பிரதியின் பாடம். ரூப தற்சு'ரூபமதாய்' என்றும் (மா.தவநிலை, கை.பிரதி) வரும்;

10. எத்திசைக்கு மீறிவிளை ஈசுபரன் - திசைகளையெல்லாம் கடந்து உண்டாய ஈசன்; சத்திபங்கன் - சக்தியைப் பங்காய்க் கொண்டவன்; 'எத்திசையும் நிறைந்த ஈஸ்பரன்' என்பது மா.தவநிலை, கை.பிரதிகளிலுள்ள பாடம்;

11. பாலில் சிறந்த நெய் போல் - இது உவமை. பாலில் மறைந்துள்ள நெய் போல்; சிறந்த - அசை; ஒப்பிடுக: ''விறகில் தீயினன் பாலில் படு நெய்போல் மறைய நின்றுளன்...'' — அப்பர்: தேவாரம். பாரெங்கும் தான் பரந்து - உலக முழுதும் பரவி; 'நிறைந்து' என்பது ஏனைய பிரதிகளிலுள்ள பா.வேறுபாடு. ''கறந்தபால் கன்னலொடு நெய் கலந்தாற் போல''—திருவாசகம்.

12. வாலமதி - இளமதி, பிறைச்சந்திரன்; காண்க: 'வாலமதி சூடி' (804), 'வாலமதி மங்கை' (470), 'வாலமதி சூடுமகாதேவர்' (2668); தக்கன் கோபத்திற்கு அஞ்சி சிவனிடத்தில் சரணடைந்த சந்திரனைத் தலையில் சூடியதால் இப் பெயர் வந்தது; வளருவிரை ஆலாய் - ஆலமர விதை; சிறிய ஆலவிதை பெரிய மரமாய் வளர்தல் காண்க; பா.வே.-'ஆல விதை' (ச.ம.நூ.); 'ஆலின் விதை' (கை.பிரதி, மா.தவநிலை);

13,14. மிகச் சிறிதான பொருளாகியும், விரிந்த அண்டங்களைக் கடந்தும் உடலுக்குள் உயிராயும் நிற்கும் இறைவன்; பா.வே. -

ஆயிரத் தெட்டண்ட மடங்கலும் மண்ணாகாசம்
தாயிரக்கம் போலச் சகல வுலகீ(ர்)ரேழும்
நாலாயிர புவனம் நந்தியஞ்சு பேருமுதல்
காலா யிரமுங் கடலேழு வேதமுதல்
பந்தத்திர ளாறாறும் பக்திமிகு தேவர்களும்
இந்திரரும் நாரதரும் தும்புரரும் சத்திரியும்

'நாடிநின்று' (ச.ம.நூ.); பி.வே. - 'சத்தி சிவசங்கரன்' (ச.ம.நூ. மா.தவ நிலை); பிஞ்ஞகன் - விரிந்த சடையில் பிறையையும் கங்கையையும் கொண்டவன்; ''பிறைகுலாஞ் சடைப் பிஞ்ஞகனே'' —*திருவாசகம்*. இது 'பிஞ்சகன்' (மா.அ.) என்றும் வரும்;

*15.* ஆயிரத்தெட்டண்டம் அடங்கல்-ஆயிரத்தெட்டுக் கோளங்கள் முழுமையும்; (அண்ட கோளலக்ஷணத்தைச் சிவதர்மோத்தரம், தத்வநிஜா நுபோக சாரம் (மேற்கோள்: அபிதான சிந்தாமணி, பக். 36-42) என்பவற் றுள் காண்க); மண் - பூமி, நில உலகு; ஆகாசம் - விண் உலகு; பா.வே. - 'அண்டஆகாசம்' (கை. பிரதி, மா.தவநிலை);

*16.* தாயிரக்கம் போல - உவமை; தாயின் இரக்கத்தை ஒத்தவன்; ஒப்பிடுக: ''பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து''—*திருவாசகம்*. சகல - அனைத்து; உலகு ஈர் ஏழ் - ஈரேழுலகம், பதினான்கு உலகம் - மேலுலகங்கள் ஏழு (பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், ஜனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம்; கீழ் உலகங் கள் ஏழு (அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம்); பா.வே. - 'சகல உயிர்' (மா.தவநிலை, கை.பிரதி);

*17.* நாலாயிர புவனம் - நாலாயிரம் உலகங்கள்; நந்தி யஞ்சு பேர் - நந்தி, சிவயோகமாமுனி, பதஞ்சலி, வியாக்ரபாத முனிவர், திருமூலர்; பி.வே. - 'நாலாயிரத்தின் புவனம்' (ச.ம.நூ.); பா.வே. - 'நாலாயதின் புவனம்' (கை.பிரதி); 'நாலும் ஒரு ஆறும்' (மா.தவநிலை);

*18.* காலாயிரம் - ஆயிரம் காலம். காலத்தின் அளவைக் கணக்கதிகா ரத்தில் காண்க; கடல் ஏழு - ஏழ் கடல்; உவர் நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறுகளாலானவை; வேதம் முதல் - நால்வகை வேதங்கள் முதலாக; பா.வே. - 'மேலாய் வட்ட படிமேல் திசையும் நால்வேதம்' (கை.பிரதி, மா.தவநிலை);

*19.* பந்தத் திரளாறாறு - எரியக் கூடிய திரண்ட 36 கோள்கள்; 'பாசத்திரள்' என்கிறது ச.ம.நூ.; பக்தி மிகு தேவர்களும் - வான் உலகத் தினரும்; 'சக்தி நிறை தேவர்கள்' என்பதும் அதன் வேறு பாடமாகும்; பா.வே. - 'சாஸ்திரமோர் ஆறும்' (கை.பிரதி, மா.தவநிலை);

*20.* இந்திரர் - வானவர் தலைவனும்; நாரதரும் - நாரதமுனியும்; தும்புரர் < கிம்புரர் - கிம்புருடர் என்பதின் மருஉ-இசைக்

அருந்தவசி னனையர் யறு(ப்)பத்து நாற்கோடி
கருவித்த முட்டைபயிர்தான் குருவி வித்துமுதல்
தாபரத்தில் சங்க[ம]ம் சகலவித்தை மந்திரமும்
நீபரத்தில் நின்றாட்ட நின்றெங்குந் தானாடும்
அத்தனே நின்(ஞ்)செயலை யாராலுங் காணரிது

கருவிகள் மீட்டும் கந்தருவர்கள். இப்பெயர் தம்புரா என்ற இசைக் கருவியினடிப்படையில் பிறந்ததாகவும் கொள்ளலாம். இவர்கள் பதினெண் கணத்துள் ஒரு கூட்டத்தினர்; சத்திரி - சத்த (சப்த ரிஷிகள்) இருடிகள்; அங்கிரன், அத்திரி, கிரது, மரீசி, புலகன், புலத்தியன், வசிட்டன் எனும் இவர்கள் ஒரு வகையினர்; அத்திரி, வசிட்டர், சமதக்கினி, கௌசிகன், பரத்துவாசன், கௌதமன், காசிபன் என்போர் மற்றோர் வகையினர்;

21. அருந்தவசினனையர் - அரிய தவவொழுக்கம் நிறைந்த முனிவர்கள்; அறு(ப்)பத்து நாற்கோடி - பெரிய அளவினர்; ஒப்பிடுக: 'அறுபத்து நாற் கோடியான யிருஷி' (வரி 881); பி.வே. - 'அருந்தவசியான அறுபத்து நாற்கோடி' (மா.அ.);

22. கரு வித்து முட்டை - உயிர்கள் தோன்றுவதற்குரிய மூலங்கள்; பயிர் - மரம் செடிகொடிகள் முதலியன; குருவி வித்து முதல் - பறப்பனவாகிய உயிரினங்கள் முதலான அனைத்துப் பொருள்களும்; பி.வே. - 'முட்டைக்குள் கருவிற்கும் முதனுயிராய்த்தானிருக்கும்' (கை.பிரதி, மா.தவநிலை); 'கரு பத்தி முட்டை பயிர் காண்பித்த சீவன் முதல்' (மா.அ.);

23. தாபரம் - பூமி; தாபரன், தாவரன் - இறைவன்; சங்கமம் - அடக்கம். இதனைத் 'தாபர (தாவர) சங்க[ம]ம்' எனக் கொண்டு 'அசையும், அசையா உயிரினங்கள்' என்பாரும் உளர்; ஒப்பிடுக:

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்

—திருவாசகம்.

சகலவித்தை - பலவகையான வித்தைகள், கலைகள்; இவை நான்கு என்றும், பதினான்கு என்றும், முப்பத்திரண்டு என்றும் கூறுவர்; மந்திரம் - சித்தி கைவரப் பெறுதற்குரிய வித்தை;

24. நீ - இறைவன்; பரம் - மேலே; நின்றாட்ட - எங்களை ஆட்டுவிக்க; நின்றெங்கும் தானாடும் - எல்லாம் சுழலும்; காண்க: 'பரலோகம்', 'பரம்' (வரி 618); பா.வே. - 'நிரந்தரமாய் எவ்வுயிர்க்கும் நிறந்தெங்கும் தானாடும்' (மா.தவநிலை).

25. அத்தன் - பிதா, இறைவன்; நின்ஞ்செயலை - இறைவனான உன் வேலையை; யாராலும் காணரிது - பிறரால் அறியவியலாது; 'அத்தர்' (1534) என்றும் வரும்.

பித்தனே பாலனுக்காய்ப் பெரியோனே பூவுலகில்
கத்தனே காலனையுங் காலால்விழ வுதைத்தீர்
சித்தனே நின்செயலைத் தெளிவோ ருளிருந்து
சித்திரம்போ லுள்ளொளியாய்த் தியக்கந்தனை யறுத்து[ப்]
பத்திரமாய்க் காக்கும் பரனேனின் றாள்சரணம்
வன்னெஞ்சர் தன்னிடத்தில் வாராரொரு னாளும்
தன்னெஞ்சாய் னின்றாரை[த்] தான்காப்பா ரென்னாளும்
கண்டோரை யியலாய்க் காணாரிடஞ் சேராய்
பண்டொருனாள் மால்பிரமன் பார்மீதிலே தேடி

26. பித்தன் - சிவன்; ''பித்தா பிறைசூடி பெருமானே'' — சுந்தரர்: *தேவாரம்.* கோலத்தாலும் செயலாலும் வேறுபடுவதால் 'பித்தன்' என இறைவன் அழைக்கப்பெற்றான் ; பாலன் - பதினாறு வயது மார்க்கண்டன்; பெரியோன் - மும்மூர்த்திகளில் பெரியவன்; ஒப்பிடுக: ''பிரமன் மால் காணாப் பெரியோன்'' — திருவாசகம்.

27. கத்தன் < கர்த்தன் - கர்த்தா, எல்லாம் செய்யும் இறைவன்; பார்க்க: 'கத்தனார்' (வி.55), 'கத்தச் சடையார்' (1523), 'கத்தனதிகாரி' (2134); காலனைக் காலால் விழ உதைத்தல் - மார்க்கண்டேயனுக்காகச் செய்தது - இந் நூலின் உச்சகட்டத்தில் நிகழ்வது;

28. சித்தன் - சித்து வேலைகளில் வல்லவனாகிய இறைவன்; காண்க: வரிகள் (1882, 2500, 2524); நின்செயலைத் தெளிவோர் - இறைவனான உன்னைப் புரிந்துகொள்வோர்; உளிருந்து < உள்ளிருந்து - சிந்தனையில் தங்கி; பா.வே. — தெளிவோருளமிருந்து' (மா.அ.);

29. சித்திரம் போல் உள்ளொளியாய் - ஓவியம் போல் மனத்துக்குள்ளே இடம்பெற்று; ஒப்பிடுக: ''உடுக்கும் புவனம் கடந்து நின்ற ஒருவன், திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியமே'' — குமர குருபரர்: *மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.* தியக்கம் - கலக்கம், தேக்கம் - அன்பர்களுக்கு ஏற்படும் கலக்கத்தை நீக்குபவன்.

30. பத்திரமாய்க் காக்கும் - கவனமுடன் பாதுகாப்பவன்; பரனேநின் தாள் சரணம் - இறைவனே உன் பாதங்களுக்கு வணக்கம்; காண்க: 'காப்பார்' (வரி 32) என்னாளும் < எந்நாளும்;

31. வன்னெஞ்சர் - பக்தியில்லாத கடும் சிந்தையினர்; தன்னிடத்தில் - அவ்வாறானவர்களிடம்; வாரார் ஒருநாளும் - ஒருநாளும் வந்துதங்கி இருக்க மாட்டார்;

32. தன்னெஞ்சாய் நின்றாரை - இறைவனை எப்போதும் தம் சிந்தனையுள் வைத்திருப்போரை; தான்காப்பார் எந்நாளும் - எக்காலத்தும் அவரே காப்பாற்றுவார்;

33. கண்டோரை - தெரிந்தோரை; இயலாய் - சேர்வாய்; காணாரிடம் சேராய் - தெரியாதவரிடம் சேரமாட்டாய்;

34 - 35. பண்டொரு நாள் - முன்னொரு காலத்தில்; மால்பிரமன் - அரியும் அயனும்; பார்மீதிலே தேடி - இறைவனை உலகத்தில் காண முயன்று; காணாமல் - பார்க்கமுடியாது; மாயனும் - திருமாலும்;

35 காணாமல் மாயவனும் காசினியில் மாலானார்
பூணப்பணி யின்றிப் பூண்டீர்மிகப் பாம்பை
ஆனை யுரித்த யரனேனின் றாள்மறவேன்

**ஐங்கரன் துதி**

பானை வயத்தய்ங்கரனே பரமனருள் புதல்வாய்
பெரிச்சாளி மேலேறும் பேரின்(ம்)ப வினாயகனே

காசினியில் மாலானார் - ஏக்கமுற்றார்; அடி முடி தேடுதல்: சிவபெருமானின் அடியைத் திருமாலும் முடியைப் பிரமனும் தேடிச் சென்று காணமுடியாது திரும்பினர் எனப் புராணம் கூறும். ''அரியொடு பிரமற் களவறியாதவன்'', ''பிரமன் மால் காணாப் பெரியோன்'', ''கமலநான் முகனுங் கார்முகினிறத்துக் கண்ணனும் நண்ணுதற்கரிய விமலன்'' — திருவாசகம். 'பாதத்தை தேடியே மால்யரி பாரையுண்டிடக் காண்கிலரே' (வரி 176).

36. பூணப் பணியின்றி - அணிகலன் எதுவுமில்லாமல்; பூண்டீர் மிகப் பாம்பை - அரவை அணிகலனாக அணிந்தீர்; ஒப்பிடுக: 'பணி தரித்த அரன்' (வி.42). பணி தரித்த வரலாறு: தாருகவனத்து முனிவர்கள் செருக்குற்றிருந்த காலத்து, திருமாலை மோகினி உருக் கொள்ளச் செய்து முனிவர்களை மயக்கியும், தாம் பைரவக் கோலத்துடன் முனிவர்களின் மனைவியரின் கற்பு கெடும்படியும் நடந்த சிவன் மீது, அம் முனிவர்கள் வேள்வி செய்து அதில் தோன்றிய பல பொருள்களையும் ஏவினர். அவர்கள் ஏவிய பாம்பினைப் பயமுறுத்தித் தன் திருவடியில் அடக்கியவ ராதலால் இப் பெயர் பெற்றார்;

37. ஆனை உரித்த அரன் - யானையின் தோலை உரித்த சிவன்; இதன் வரலாறு வருமாறு: யானை உருக் கொண்டு தேவர்களை வருத்திய கயாசுரனால் விழுங்கப்பட்ட சிவன், பின்பு அவ் யானையின் உடல் பிளந்து வெளிவந்து அதன் தோலை உரித்துப் போர்த்திக் கொண்டார். இதனால் இப் பெயர் ஏற்பட்டது. நின்றாள் - நின் + தாள் - உனது பாதங்களை; மறவேன் - மறக்க மாட்டேன்;

38. பானை வயத்தய்ங்கரனே - விநாயகன்; பரமனருள் புதல்வாய் ஈசன் மகனே; வயத்து < வயற்று - வயறு. ஐங்கரன் (40) என்பது அய்ங்கரன் என்றும் வந்துள்ளது. 'தும்பி முகத் தய்ங்கரனே' (42), 'தொந்தி வயற்றய்ங் கரனே' (45); நான்கு கைகளுடன் தும்பிக் 'கை'யும் இருப்ப தால் இவ்வாறு கூறப்படுகிறான். பானையின் கீழ்ப்பகுதி உருண்டு இருப்பது போல் வயறும் உருண்டிருப்பதால் இப் பெயர் ஏற்பட்டது. இதனைத் 'தொந்தி வயிற்றய்ங்கரனே' (45) என்று கூறுதல் காண்க; அருள் புதல்வன் (45) - அருள் பாலகன் (41); சிவனுடைய கண்டத்திலிருந்து பிறந்தவன் என்பர்;

39. பெரிச்சாளி - எலி வகைகளுள் ஒன்று; மிகப் பெரியது. பெருச்சாளி என்றே வழங்கப்படும். விநாயகனுக்கு வாகனம் ஆகும். மூஷிக (சமஸ்கிருதம்) மூடிகவாகனன் என்றும் கூறுவர். பெருச்சாளி வாகனமாகக் கொண்டது கசமுகனை. இதன் வரலாற்றை 42-ம் வரி

40 மருப்பொடித்து மேருவினில் வரைந்தோனே ஐங்கரனே
பாதிப் பிறைசூடும் பரமனருள் பாலகனே
சோதிப் பொருளே தும்பிமுகத் தய்ங்கரனே

விளக்கத்தில் காண்க; மேலேறும் பேரின்ப வினாயகன் < விநாயகன் - தடைகளை அகற்றுபவன்.

40. மருப்பொடித்து மேருவினில் வரைந்தோனே ' - இவ்வாறு எழுதியது, பாரதத்தை. மருப்பு - தந்தம்.

நீடாழி யுலகத்து மறைநாலொ டொன்றாய் நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராஜன் மாபாரதம் சொன்னநாள்
ஏடாக மாமேரு வெற்பு அம்கூர் எழுத்தாணிதன்
கோடாக எழுதும் பிரானை நினைந்துஅன்பு கூர்வாமே'' — வில்லிபுத்தூரார், வில்லிபாரதம். ஐங்கரன் - (பார்க்க விளக்கம், வரி 38).

41. பாதிப் பிறை சூடும் பரமன் - குறைப் பிறை அணிந்த ஈசன்; சந்திரனுக்குக் குறைப்பிறை ஏற்பட்ட வரலாறு வருமாறு: தக்கன் பெண்கள் இருபத்தேழுபேரையும் சந்திரன் மணந்து, அவர்களுள் கார்த்திகை, உரோகணி என்பவர்களிடம் அன்பு வைத்ததால் பிற மனைவியர் தக்கனிடம் கூற அவனால் சபிக்கப்பட்டவன். அதன்படிச் சந்திர கலைகள் குறைந்து குறைச்சந்திரன் ஆனவன். பயந்து சிவனை அடைக்கலமாக அடைந்து உய்ந்தவன். சந்திரனைத் தலையில் சூடியதால் சிவனுக்கு இப் பெயர் ஏற்பட்டது. காண்க: 'பாதிமதிசூடும் பரமனார்' (வரி 311, 1388); 'பாதிப்பிறையணிந்தபரன்' (வரி 375, 754). ஒப்பிடுக: 'அந்திமதி சூடும் அரன்' (771, 893, 941, 1178, 1190, 1352, 1505, 1591, 1619, 1819, 1934, 2533).

42. சோதிப் பொருள் - சிவன் புத்திரன். 'சோதியருட் புதல்வா' (45); தும்பி முகத்தோன் - கசமுகத்தோன். 'தும்பிமுகன்' (வரி 60). கசம்-கஜன்; தும்பி - யானை. கசமுகர் தோன்றிய வரலாறு: சிவனும் பார்வதியும் சித்திரங்களாகிய ஆண் யானை, பெண் யானைகளைப் பார்க்கக் கசமுகர் பிறந்தார். தேவர்களை வருத்த, அசுரேந்திரன் என்பவனது திட்டப்படி மரகத முனிவரும் விபுதையும் யானைகளாகிப் புணர்ந்ததால் பிறந்தவன் கசமுகாசுரன். இவனைக் கசமுகராகிய விநாயகர் கொன்றார். அதன்பின் அவன் பெருச்சாளியாகி விநாயகனுக்கு வாகனமானான். தலையில் குட்டிக்கொண்டு தோப்புக்கரணம் போடும் வழக்கம் இவனால் வந்தது. தும்பிமுகத்தோன் - தக்கன் யாகத்தை அழித்துவரச் சிவனால் அனுப்பப் பெற்றபோது விநாயகர் தக்கன் உபசரிப்பை ஏற்று ஆங்குத் தங்கிவிட்டார். சிவனால் ஏவப்பட்ட வீரபத்திரன் விநாயகர் தலையையும் அறுத்து மீண்டான். பின் பார்வதி வேண்ட, சிவன் விநாயகருக்கு யானைத் தலையை வெட்டிப் பொருத்துமாறு கூறினார். அவ்வாறு பெற்ற தலை காரணமாகத் தும்பி முகத்தோன் எனப் பெயர் ஏற்பட்டது என்பர்.

கடலூரதனிலே வாழ்ந்து கடவுள்தனைப் பூசைசெய்து
சடமழியா மார்க்கண்டன் தன்கதையை யான்பாட
தொந்திவயிற் றய்ங்கரனேயீசன் சோதியருள் புதல்வா
செந்தில்வளர் கந்தனுக்கு முந்திவந்து மாங்கனியைத்
தாருமென்று வாங்கித் தானருந்தும் புண்ணியனே
வாருமென்றால் நீங்காமல் வந்துதமிட் காத்தருள்வாய்

**முருகன் துதி**

இந்தக்கதையை யியல்புடனே யான்பாடக்
கேட்டவர்க்கும்

*43.* கடலூர் - மார்க்கண்டேயன் இறைவனைப் பூசித்து என்றும் பதினாறு வயது பெற்ற தலம். இதன் விளக்கம் முன்பு காண்க. பார்க்க: வரி 100; அதனிலே வாழ்ந்து - பரம்பரை பரம்பரையாக வந்தவர்கள் வரிசையில் வாழ்ந்து; கடவுள்தனைப் பூசைசெய்து - இறைவனை வழிபட்டு;

*44.* சடம் - உடல். காண்க: வரி 535; அழியா - இறவாத; மார்க்கண்டன்தன் கதையை யான்பாட - இக்கதைப் பாடலை நான் பாடுவதற்கு;

*45.* பார்க்க: விளக்கம் வரி 38.

*46-47.* செந்தில் - திருச்செந்தூர்; படைவீடு. செம்மணல் மேட்டில் இப் படைவீடு இருப்பதால் செந்தில் ஆயிற்று. இங்குள்ள மணல் மேடு சந்தனமலை எனப்படும். இவ்வூர் ஜெயந்தி புரம் என்றும் வழங்கப்படும். கந்தன் - பார்க்க விளக்கம் வரி 61; கந்தனுக்கு முந்திவந்து மாங்கனியை - மாம்பழத்திற்காகப் பெற்றோரைச் சுற்றிவந்து; தாருமென்று வாங்கி - தனக்கே ஈயுமாறுகேட்டு வாங்கி; தானருந்தும் - தான்மட்டும் உண்ணும்; புண்ணியனே - விநாயகனே; இதன் வரலாறு வருமாறு: சிவனுக்குக் கிடைத்த மாங்கனியைப் பார்வதிக்கு அவர் கொடுத்தார். பார்வதியோ அதைப் பிள்ளைகளுக்குக் கொடுக்க எண்ணினாள். கனியைப் பகிர்ந்து கொடுக்காது முழுமையாகக் கொடுக்க வேண்டும் என்பது இறைவனிட்ட கட்டளை. கனியைத் தத்தமக்கே தருமாறு கணபதியும் முருகனும் கேட்டனர். இதனால் ஏற்பட்ட போட்டியில் உலகத்தை யார் முதலில் சுற்றி வருகிறார்களோ அவர்க்கே கனி தரப்படும் என்று முடிவு எடுக்கப்பட்டது. சிவனையும் பார்வதியையும் சுற்றி வந்து கணபதியே முழுமுதற்பொருளாம் ஞானக் கனியைப் பெற்றார் என்பது *விநாயக புராணம்* கூறும் செய்தியாகும்.

*48.* வாரும் - வருக; நீங்காமல் வந்து - தவறாது தோன்றி; தாரும், வாரும் என்பன தென்பாண்டி நாட்டு வழக்குகள்; தமிட் காத்தருள்வாய் - தமிழ் > தமிள் > தமிட் காத்தருள்வாய். *(வீரசோழியம்)*;

*49.* இந்தக் கதை - மார்க்கண்டேயன் கதை. வரி 44 இலும், 1624, 1640, 2676-9 என்னும் வரிகளாலும், 'கதை' என்பதாக வலியுறுத்துவதைக்

50 கந்தனேயித் தமிழ்க்குங் காத்தருள்வாய் யென்னாளும்
நாவில் புகழவரு மிராச்சதசூரன் பகைவா
பூவில் குறமகள்காய்ப் பொன்னடியில் வீழ்ந்தோனே
செந்திக் குமரா திருக்கை வேலாயுதனே
அந்தி மதியை யணியுமரன் புதல்வா

காண்க; இயல்புடனே யான்பாட - பாட்டிலே பாடிப்புகழ; கேட்டவர்க்கும் - அதைக்கேட்டு இன்பம் அடைபவர்களுக்கும்; இயல்புடன்-உண்மையுடன். பார்க்க:வரி 762, 1356, 1791, 1827, 2061;

50. கந்தன் - முருகன் (வரி 61, 96, 161, 742); இத் தமிழ் - இத் தமிழ்க் கதைப் பாடல் (வரி 67); யென்னாளும் - எந்நாளும் (வரி 66); காத்தருள்வாய் - காப்பாற்றுவாயாக;

51. நாவில்புகழ்தல் - நாவால் புகழ்தல்; இராச்சத சூரன் பகைவன்-முருகன். இராச்சத சூரன் < இராக்கதர் சூரன். இராக்கதர், காசிபருக்குச் சுரசையிடம் பிறந்த குமாரர்கள் என்றும், பக்ஷிக்க வேண்டுமென்றதால் பிரமனால் இராக்கதராகப் படைக்கப்பெற்றனர் என்றும் கூறுவர். சூரன் - சூரபத்மன். இவன் வரலாறு: மாயையின் மகனாகிய இவன், தேவர்களை வென்று, மயேந்திரபுரியை ஆண்டு வந்தான். சிவனின் சத்தியொன்றினால் மட்டுமே அழிவு அடைவான் என வரம் பெற்றவன். முருகன், செந்தூர் அருகே படைவீடமைத்து, இவனைச் சம்கரித்து மயிலாகவும் சேவலாகவும் பெற்றான்.

52. பூவில்-பூமியில்; பார்க்க:வரி 934, 1861, 2368, 2670, வி.68; குறமகள் - வள்ளி; பொன்னடியில் வீழ்தல் - வள்ளியின் காதலை வேண்டி நடத்திய விளையாட்டில் அவளது பாதத்தில் விழுந்துகிடத்தல். வள்ளி வரலாறு: வேடர் குலத்தில் பிறந்த இவளது அழகைக் கேள்வியுற்று, முருகன் வேடன் உருவுடன் வந்து அவளுடன் வம்புகள் செய்து, பின்னர் பழுத்த சந்நியாசியாகி விநாயகரால் வள்ளியைப் பயப்படுத்தி மணந்து கொண்டான். இவள் பூர்வத்தில் விஷ்ணுவின் மகளான அமுதவல்லி என்பவளாவாள்— *கந்தபுராணம்.*

53. செந்திக்குமரன்-திருச்செந்தூர் படைவீட்டில் எழுந்தருளியுள்ள முருகன்; செந்தி < செந்தில்; இது செந்தூர் ஆகும். திருக்கை வேலாயுதன் - வேலினைத் திருக்கையில் ஏந்தியுள்ளவன். ''சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி''—*கந்தபுராணம், பாயிரம்.*

54. அந்தி மதி - மாலைமதி, பிறைச்சந்திரன். பார்க்க:விளக்கம் வரி 41; அரன் புதல்வன்-சிவன் மகன். இதன் வரலாறு:சிவனின் நெற்றிக்கண்ணிலிருந்து உதிர்ந்த ஆறுபொறிகளால் உருப்பெற்றவன் ஆறுமுகக் கடவுளான முருகன் ஆதலால் அரன் புதல்வன் எனப்பெற்றான். பார்க்க:'அரன் அருள்மைந்தன்' (வரி 614);

55 சூரன்(ங்)கிளை யறுத்துத் தொல்புவியெல் லாம்வளர
தீரன் மயிலில் சிறந்திருந்த சேவகனே
மூதூரில் அவுணன்தன் முடித்தலைகள் பத்தும்விழ
தூம்பானஞ் செல்ல விடுத்தோன் மருகா
தீதூருசெம் பவளவாயாள் தெய்வானை[ப்] பங்கோனே

55. சூரன்(ங்)கிளை - சூரபத்மனுடைய சுற்றம். இவனுடைய குமாரர்கள் பானுகோபன், அக்நிமுகன், இரணியன், வச்சிரவாகு. சூரன் கடலில் மாமர உரு அடைந்தபோது அதனை இரு கூறாக ஆக்கியதால் - மாமரத்தின் கிளையைறுத்தல் எனக் கொள்ளப்பட்டது எனவும் கொள் ளலாம். தொல்புவி - தொன்மை வாய்ந்த தமிழகம். ஒப்பிடுக:'சூரன்(ங்) கிளையறுத்த சுப்பிரமணியன்' (வரி 880); எல்லாம் வளர - மக்களும் பிறவும்வாழ;

56. தீரன் மயில் - சூரன் மாண்டபின் கொண்ட மயில்வாகனம் என்றும், சூரசம்காரத்தின் போது இந்திரன் கொண்ட மயில் உருவிலி ருந்து போர் செய்ததால் ஏற்பட்டது என்றும் கொள்ளலாம். சிறந்திருந்த- வீற்றிருந்த; சேவகன்-தேவர் படைத்தலைவனாய் இருந்த முருகன்;

57-58. மூதூர் - இலங்கை; தமிழகத்தின் தென்பகுதியிலிருந்ததால் இராவணனிருந்த தொல்புவியான ஊர் மூதூர் எனப்பட்டது. அவுணன்- இராவணன்; முடித்தலைகள் - முடிசுமந்த அல்லது முடித்த - (ஒன்றாகச் சேர்ந்த) தலைகள்; பத்தும் விழ - பத்துத்தலைகளும் அற்று விழ; தூம்பானஞ் செல்லவிடுத்தல் -பாடையில் செல்லவிடுத்தல். (57)-(58)-ல் சொல்லப் பெற்றது இராமாவதாரச் செய்திகள். திருமாலின் அவதாரமான இராமன், இராவணனைக் கொன்றான். திருமாலின் மகள்களான சுந்தரி, அமுதவல்லி என்பார் முறையே இந்திரனிடம் தெய்வயானையாகவும், வேட்டுவக் குலத்தில் வள்ளியாகவும் வளர்ந்தவர்களை மணந்ததால் முருகனைத் திருமாலின் 'மருகா' என்றனர்; மேலும் திருமாலின் தங்கை பார்வதியின் மகன் முருகன் ஆதலால் இந்த உறவுமுறையும் ஏற்பட்டது;

''முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன்மகனே...'' பதினோராந்திருமுறை

59. தீதூரு செம்பவள வாயாள் - ஞானம் நிரம்பிய, சிவந்த, பவளம் போன்ற மென்மையான இதழ்கள் கொண்டவாயினாள்; பங்கோன்- கணவன், தலைவன். தெய்வயானை வரலாறு: திருமாலின் குமாரியாகிய சுந்தரி என்பாள் முருகன் ஆணையால் இந்திரனிடம் சேர்ந்து இந்திரனின் மகளாய் வளர்ந்தவள்; இந்திரனின் யானை ஐராவதத்தால் வளர்க்கப்பட் டவள் ஆதலால் தெய்வயானை (தேவானை) எனப் பெயர் பெற்றாள். முருகன், சூரசம்காரத்திற்குப்பின், திருப்பரங்குன்றத்தில் இந்திரன் அளித்த தெய்வானையை மணந்து கொண்டான்.

தும்பிமுகன் துணைவா சோதியுமை மகனே
கந்தா கடம்பா கருணாகரா முருகா
உந்தன் யடியா ருள்ளமுறையும் மெய்ப்பொருளே
எந்தன் மனத்துள்ளே எரியும் விளக்கொளியே
வந்தென் முன்சொல் வழுவாமல் காத்தருள்வாய்
காங்கையா வேலா கடம்பா குருகுமரா

60. தும்பி முகன் துணைவன் - விநாயகனின் தம்பி; நண்பனுமாம் (பார்க்க வரி 42). விநாயகன், வள்ளியைப் பயப்பிக்க யானை வடிவில் முருகனுக்குத் துணைபோனவன்; சோதியுமை மகன் - சோதிமயமான சிவனுக்கும் உமைக்கும் பிறந்த மகன்;

61. முருகனுக்குரிய திருநாமங்கள் பலவற்றுள் இவை சில. கந்தன்-ஸ்கந்தன்-சேர்க்கப் பெற்றவன். சிவனின் நெற்றிக்கண்ணிலிருந்து வெளிப் பட்ட பொறிகளிலிருந்து உருப்பெற்ற ஆறு உருவங்களைச் ஒன்றாய்ச் சேர்த்ததால் வந்தவன்; கடம்பன்-கடம்ப மரத்தை இடனாகக் கொண்டவ னாதலால் இப் பெயர் பெற்றான். காண்க:வரி 65. கருணாகரன் - கருணை + அகரன் - அருள் இருக்குமிடம் ஆதலால் அவனை இவ்வாறு கூறுவர். அகரம் என்பது ஆகரம் என நீண்டது; முருகன் - அழகன். வரி 65-இலும் சில பெயர்கள் வருதல் காண்க.

62. உந்தன் யடியார் < உந்தன் அடியார்; உள்ளம் உறையும் மெய்ப்பொருள்-அடியார்களின் உள்ளங்களில் தங்கியிருக்கும் உண்மைப் பொருள்.

> ''ஆறு திருப்பதிகண்டு ஆறெழுத்தும் அன்பினுடன்
> கூறுமவர் சிந்தை குடி கொண்டோனே...''
>
> —கந்தர் கலிவெண்பா.

பார்க்க:வரி 1214, 1309, 1431, வி.5;

63. மனத்துள்ளே எரியும் விளக்கொளியே-அகவிருளை அகற்றி உள்ளத்தில் சுடர்விடும் உண்மை ஒளி.

> ''...உளந்தனிற்கண்டு
> ஆதரிப்போர்க்கு ஆருயிராய் அன்பரகத் தாமரையின்
> மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே''—கந்தர் கலிவெண்பா.

64. வந்தென் முன் - என் முன்னே வந்து; சொல் வழுவாமல்-சொற்குற்றமில்லாமல்; காத்தருள்வாய் - காப்பாற்றுவாயாக;

65. காங்கையன்-நெற்றிக்கண் பொறிகளை அக்கினி முதலில் கங்கை யில் விட்டான். கங்கையில் பிறந்தவனாதலால் காங்கேயன் என முருகன் பெயர் பெற்றான். பார்க்க:வரி 90 காண்க:

> ''கங்கைதன் சிறுவன்...'' — கந்தபுராணம், திருநகரப் படலம்.

தாங்கு புகழிருதாள் தான்மறவே னென்னாளும்
இத்தமிழை யானு மியல்வுட(ன்)னே பாடுதற்கு
கத்தவர்க்கு வித்தையருள் கமலை மருமகனே

**கலைமகள் துதி**

கிள்ளைமொழி மாதே கிருபைச் சரசுபதி
வெள்ளைப் பணியணியும் விஷ்த்தாரப் பெண்ணமுதே
தெள்ளுதமிழ்ப் பொருளே தேவி சரசுபதி

வேலன் - சத்தி வேலினையுடையவன்; பார்க்க: வரி 53. குருகுமரன் - சிவமூர்த்திக்குப் பிரணவத்தின் பொருளைக் குருவாக இருந்து உரைத்த வன்;

66. தாங்கு புகழிரு தாள் - புகழ் தங்கியிருக்கும் இணையான பாதங்கள்; பார்க்க:வி.46;

67. இத்தமிழ் - இந்தக் கதைப்பாடல்; பார்க்க வரி 50; ஒப்பிடுக:வரி 2424; இயல்வுடன் < இயல்புடன்; பார்க்க வரி 49;

68. கத்தவர்க்கு < கற்றவர்க்கு-கல்வி கற்பவர்களுக்கு; வித்தை-கலை, கல்வி; கமலை மருமகன் - திருமகள் மருகன்; பார்க்க:விளக்கம் வரி 57-59;

69. கிள்ளை மொழிமாது-கிளி போன்று கொஞ்சும் மொழி பேசும் தமிழ்ப்பெண்; பார்க்க வரி 392; கிருபை - அருள்; வரி 392, 422, 751, 2008; சரசுபதி < சரசுவதி-கலைமகள்; அஞ்ஞானவிருளை அகற்றி வெண் மையுடனிருத்தலால் இப் பெயர் பெற்றாள்; பார்க்க:வரி 71. ஒப்பிடுக: 'கலைமகள்' வரி 254, 2386;

70. வெள்ளைப்பணி - வெண்பட்டுச்சேலை. கலைமகள் - வெண்தா மரை மேல் வீற்றிருப்பவள்; வெண்மை நிறத்தள்; வெண்ணிற ஆடையி னள்; விஷ்த்தாரம் < வித்தாரம் - எல்லை காணமுடியாத ஆழ அகலம் கொண்ட கல்விக்குரிய தெய்வம்; ஒப்பிடுக:'விற்றாரம்' (வரி 2440) 'வித்தாரம்' (2645), 'விஷ்த்தாரம்' (2340), 'பெண் அமுது' - அமிர்தம் போன்ற பெண்ணாள்;

71. தெள்ளு தமிழ்ப்பொருள்-செந்தமிழ்ப்பொருள்; செந்தமிழிலுள்ள இலக்கிய, இலக்கண, புராண நூல்களை அணிகளாக அணிந்து கொண் டுள்ள தமிழ்த்தாயானவள்; தேவி-அரசி, கலைகளுக்கு அதிபதி; பிரம னின் மனைவியுமாம்;

உள்ளமிகு கவிஞர் உயர்நாவிலே யிருப்பாய்
வேதன் விதியால் விரிதமிழைப் பாவலர்க்கு
வெள்ளக்கடல் தமிழை வந்திங்கே காத்தருள்வாய்
எள்ளளவு புன்சொல் லிதற்குநீ முன்னடவாய்
சிலைநுதலின் மாதேநின் திருவருளால் பாடுகிறேன்
கலைத்தமிழின் வல்லோர்கள் கண்டு பொறுத்திடுவீர்

*72. உள்ளமிகு கவிஞர் - கற்பனை விரிந்த உள்ளமுடைய புலவர்கள்; உயர்நாவில் - உயர்வான பாடல்களைப் பாடும் நா.*

''நாவுதொ திருந்திடு நலங்கொள் வாணி...''

—*கந்தபுராணம், கடவுள் வாழ்த்து.*

''... தூய
உருப்பளிங்கு போல்வள்ளன் உள்ளத்தின் உள்ளே
இருப்பள் இங்கு வாரா திடர்''. —*சரசுவதி அந்தாதி.*

73. வேதன்-பிரமன்; வேதத்தை உபதேசித்தவராதலின் இப் பெயர் பெற்றார். வேதவிதி எனவும் கொள்ளலாம். விதி-ஊழ்; பார்க்க:வரி 158; 'வேதனார் விதி' (வி.37); 'வேதன் வகுத்த விதி' (374); விரிதமிழ் -பரந்த, எல்லையிலாத்தமிழ்; பாவலர் - பாவில் வல்லார்; ஒப்பிடுக:'பாவாணர்' (78);

74. வெள்ளக்கடல் தமிழ்-நீர் நிறைந்தகடல் போன்று இலக்கிய இலக்கணங்களும் பிறவும் நிரம்பப்பெற்ற தமிழ்; வந்திங்கே காத்தருள் வாய்-இங்கே வந்து, அவையில் வந்து துன்பம் வராமல் காத்தருளுக;

75. எள்ளளவு < எள் அளவு; ஒப்பிடுக:'எள்ளளவும் விதி' (1512), 'எள்ளளவும் தவம்' (2520), 'எள்ளளவு சென்மம்' (1862); புன்சொல்-மிகச் சாதாரண தமிழ்; பாமரர் பாட்டு என்க. காண்க:'புன்(ஞ்)சொல்' (91). முன்னடவாய் < முன் நடவாய்-முன்னே நடந்து வழிகாட்டுவாய். முன் அடைவாய் என்றும் கூறலாம்;

76. சிலை நுதலின் மாது - வில்போன்று வளைந்த நெற்றியுடைய கலைமகள்; காண்க:'சிலைநுதல்' (1914), 'சிலைநுதலின் மங்கையர்கள்' (2387); நின் திருவருளால் பாடுகிறேன் - உன் வரபலத்தால் இக்கதையை யாத்துப்பாடுகிறேன்;

77. கலைத்தமிழின் வல்லோர்கள் - கலைஞானங்கள் பலவும் நிரம்பிய தமிழ்மொழியில் வல்லுநர்களாகிய அறிஞர்கள்; ஒப்பிடுக: 'கலைஞானம்'(628), 'கலையறிவு'(6), 'கலைவேக நல்லோர்கள்' (84);

(ச.ம.நூ., மா.அ., மா.தவநிலை, கை.பிரதி என்பவற்றுள் மேலே யுள்ள துதிகள் போலல்லாமல் வேறு பாடல்கள் உள்ளன).

## அவையடக்கம்

பரவுதமிழ்ப் பெருகும் பாவாணர் தங்கள்முன்னே
அரவாட னாங்கிழுவு மாடுகின்ற வாறதொ(ற்)க்கும்
சூரியன்றன் பார்வை துலங்குங் கமலம்விரிய
பாரிலெருக் கலையும் பண்புடனே பூத்ததொ(ற்)க்கும்
வானத்திலே மழைக்கால் வந்துபொழிவ தொப்பாய்
தானுமந்த மாசியிலே தண்பனிகள் பெய்வதொ(ற்)க்கும்

78 - 79. பரவு தமிழ் - பரவுகின்ற தமிழ்; ஒருவரிடமிருந்து மற்றவர்க்குச் செல்கின்ற தமிழ்மொழி. இதனால் நம்மொழி வளரும் தன்மை கொண்டது என்று வலியுறுத்தப்படுகிறது; பெருகும் - வளர்வ தோடன்றி விரிவடையவும் செய்யும்; பாவாணர் தங்கள் முன்னே - அவையில். 'பரவு(த்)தமிழ்ப் பெருகும் பரவுரைப் போதகங்கள் முன்னே' எனச் ச.ம.நூ. பதிப்பில் தவறுபட உள்ளது. 'பரவுதமிழ்ப் பெருகும் பாரறுக்கோர் தங்கள் முன்னே' என்பது மா.தவநிலையின் பாடம். அரவாட-பாம்பு ஆடும்போது; நாங்கிழு < நாங்குழு < நாங்கூழ் - மண்புழு; குடல்புழு என்றும் கூறுவர். ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி என்பவற்றுள் 'பூநாகம்' என்று கூறப்பெற்றுள்ளது. ஒப்பிடுக:

''தாங்கிநின்ற சேடன் தரணி சுமந்திடவே
நாங்கூ ழதைக்கண்டு நான்சுமப்பே னென்பதொக்கும்''
—வலங்கை மாலை.

ஆடுகின்றவாற தொ(ற்)க்கும் - ஆடுவது போலாகும்; 'ஒக்கும்' என்பது 'ஒற்க்கும் எனப் பின்னாலும் (81, 83, 85, 87, 89) வந்துள்ளது. இது தென்பாண்டி நாட்டு நாட்டுப்புறக்கவிஞர் வழக்கு.

80-81. சூரியன்றன் பார்வை - சூரியனின் ஒளிக்கதிர்கள்; துலங்கும் - படும்போது; கமலம் விரிய - தாமரை மலரும்; பாரில் - நிலத்தில்; எருக்கலை - எருக்கலைச் செடி. (இது அதிகமாகப் பயன்பெறாது); பண்புடனே பூத்த தொ(ற்)க்கும் - பயன்படுமாறு மலர்தல் போலாகும்; ச.ம.நூ. 'தரும் காந்தி'. பா.வே. — 'விரியும்'. (கை.பிரதி). ஒப்பிடுக:

''தண்டா மரையுடனே தாழ்ந்தகுலத்துட் பிறந்த
அண்டா முடிக்கவொண்ணா வாம்பல்சரி யென்பதொக்கும்''
—வலங்கைமாலை

82 - 83. வானத்திலே - விண்ணில்; மழைக்கால் - மழைமேகம்; இது மழைக் கோள் என்பதன் மரூஉ; வந்து பொழிவது ஒப்பாய் - வானத்தில் மழைமேகங்கள் மழையைப் பொழிவதற்கு இணையாய்; தானுமந்த மாசியிலே - மாசி மாதத்தில்; மாசி மாதம் தமிழ் ஆண்டின் பதினோராவது மாதம். தண்பனிகள் பெய்வ தொ(ற்)க்கும் - குளிர்ந்த பனிமழைகள் பெய்வதற்கு ஒப்பாகும்; பின்பனிக் காலமாதலால் பனி பெய்வது இயல்பு.

ஞானக்கலை வேக நல்லோர்கள் சொல்கேட்டு
தானங்கொரு ஊமை தான்பேசிசொல்வதொ(ற்)க்கும்
பொற்(க்)குடந் தன்னில் புகழ்ந்தெழுதுஞ் சித்திரத்தை
நட்புடனே கண்ணில் னான்கண்டே னென்பதொ(ற்)க்கும்
தங்கநிறை காணுமந்தத் தட்டில்திராசில் மெள்ள
வங்கணமாய்க் குண்டுமணி வந்துகிடந்த தொ(ற்)க்கும்
கந்தன் அறுமுகவன் கங்காங் கயனும்
செந்தமிழோர் புன்(ஞ்)சொலெனுஞ் சித்திரமாய்[த்]தான் பொறுப்பீர்

*84 - 85.* ஞானக்கலை - கலைஞானம்; வேகம் - நிறைந்து; நல்லோர்கள் சொல் - அறிஞர்களின் உரை; ஊமை - வாய் பேசாதவன்; பேசிச் சொல்வதொக்கும் - பொருளில்லாத ஒலிகளை எழுப்புவதற்கு இணையாகும். பி.வே. - 'ஞானம் கலைசிறந்த' (கை.பிரதி); 'ஞான(க்) கலை தெரிந்த' (மா.தவநிலை); 'சொல்வது போல்' (மா.அ.). இதனைச் ச.ம.நூ.பதிப்பு ''தானங்கொரு உண்மை தான் பேசும் வார்த்தோர்க்கும்'' எனப் பிழைபடத்தருகிறது.

*86 - 87.* பொற்குடம் - தங்கத்தாலான குடம்; தன்னில் - குடத்தின் புறப்பகுதியில்; புகழ்ந்தெழுதும் சித்திரம் - மிகச் சிறப்பான ஓவியம் என்று தீட்டுதல். நட்புடனே - விருப்பமுடன்; கண்ணில்லான் - பார்வை யற்றவன்; கண்டேன் என்பதொக்கும் - காணமுடியாததைக் கண்டேன் என்பதற்கு ஒப்பாகும்.

*88 - 89.* தங்க நிறைகாணும் - தங்கத்தை நிறுத்து எடை காணுதற்கு ரிய; தட்டில் திராசில்> தராசுத்தட்டில்; மெள்ள - ஓசையில்லாமல்; வங்கணமாய் - நட்புடன்; குண்டுமணி - மேல்புறம் கறுப்பாயும் மீதிப்பகுதி சிவப்பாயுமுள்ள ஒரு காட்டுச் செடியின் உருண்ட சிறு விதை - நச்சுத் தன்மை உள்ளது; வந்துகிடந்ததொக்கும் - தங்கத்திற்குப் பதிலாகக் கிடத்தலை ஒக்கும். பி.வே. - 'நெறுக்கும்> நிறுக்கும் (மா.தவநிலை) பா.வே.- 'கட்டில் தராசு' (ச.ம.நூ). குண்டு மணியைத் தங்கத்தை நிறுக்கும் போது எடைக்கல்லாகவும் இடுவர். 'குண்டுமணி எடையுள்ள', 'குண்டுமணி அளவுள்ள' என்று கூறுவது வழக்கம். பா.வே. - 'வங்கணமாய்ப் பித்தளை...' (மா.அ.).

*90 - 91.* அறுமுகவன் - ஆறுமுகங்களைக் கொண்ட முருகன். கங்காங்கயன்> கங்கு காங்கேயன் - தீப்பொறிகளாலாகி கங்கையில் விடப்பட்ட முருகன். காங்கையன் என்பது இங்கு 'காங்கயன்' என வந்துள்ளது. ஒப்பிடுக:

## கதைப்பாடலாசிரியன்

காளியுட னாடுங் கங்காளர் தாள்பரவும்
மேழிக் கொடியோன் விதப்பனூர் வாழுகின்ற
தன்மநெறி முத்துக் கூடனருள் புதல்வன்

'கந்தன் கிருபை கடாட்சமுள வாக்கு'

— ச.ம.நூ.பதிப்பு

'கந்தன் மால் வேதன் கரிமுகவன் கந்தனருள்'

— மா.அ.

'சந்தண கிருபை...'

— மா.தவநிலை

செந்தமிழோர் - தமிழிலுள்ள இக் கதையினை; புன்(ஞ்)சொல் - பார்க்க வரி விளக்கம் 75. பா.வே. - 'புஞ்சொல்' - மா.அ.; சித்திரமாய் - நாகரிகமாய்; பொறுப்பீர் - ஏற்றுக்கொள்வீர்.

92. காளியுடன் ஆடும் கங்காளர் - பத்திரகாளியுடன் போட்டியிட்டு ஆடும் சிவன். இதன் வரலாறு: தேவர்கள் பொருட்டுக் காளியுடன் சிவபெருமான் சண்டதண்டவமாடி வென்றார். கங்காளர்- சிவபெருமானுக்குரிய பெயர்களில் ஒன்று; முதுகெலும்பை உடையவர் என்பது பொருள். இதற்குரிய புராணம் வருமாறு: திருமாலின் அவதாரங் களுள் ஒன்றான வாமன அவதாரத்தில், அவர் திருவிக்கிரமூர்த்தியாய் உலகளந்து செருக்குற்ற காலத்தில், திருமாலின் முதுகெலும்பைப் பேர்த் தெடுத்து வீணாதண்டாக்கியதால் சிவனுக்குக் 'கங்காளர்' எனும் பெயர் ஏற்பட்டது. தாள் பரவும் - இரு பாதங்களைப் போற்றும். பா.வே - 'காளியுடனாடும் கறை(க்) கண்டர் தாள்பணியும்' (மா.தவநிலை, கை. பிரதி).

93. மேழிக் கொடியோன் — ஏரின் மேழியைக் கொடியில் கொண்ட வன்; விதப்பனூர் - இது பாடலாசிரியரின் ஊர்; தென்பாண்டிநாட்டது; பி.வே. - 'விழிப்பனூர்' (ச.ம.நூ.), 'விளிப்பனூர்' (மா.தவநிலை). ஒப்பிடுக: 'காராளன் பூமதனை காட்சி தருங்குலத்தோன்' (கை.பிரதி, மா.தவநிலை). வாழுகின்ற-வசிக்கின்ற.

94. தன்ம நெறி > தர்மநெறி - அறநெறி; முத்துக்கூடன் (பாடலாசிரிய ரின் தந்தையின்பெயர்) > முத்துக் கூத்தன்; 'கூத்தன்' என்று பெயர் வழங்குவதால் இவர்கள் பரம்பரையாகக் கதைக் கூத்தினை மக்களிடம் படித்துச்சொல்லி வருபவர்கள் போல் தெரிகிறது. அருள்புதல்வன் - அருளிய மகன். பி.வே. - 'தருமநெறி' (ச.ம.நூ., மா.தவநிலை). பா.வே. - 'முத்து தருசிவதரும புலவன்' (மா.தவநிலை); 'தரு புதல்வன்' (ச.ம.நூ.).

நன்மை தமிழ் நல்லகூடன் குணமுடையோன்
வை(ய்)யந்தொழு மய்யன் மலரும் புகழ்வளர்
செய்ய[வ]ரு ளோங்குஞ் சிறந்தமுன்னூல் தேசிகமாம்
( . . . )ன் நம்பி வணங்குகின்ற
லெச்சையுடன் நானிலத்தி லோது செஞ்சொல்

**கதை**

கடலூர் தன்னிலே சனதன் புதல்வன்

95. நன்மை தமிழ் - நன்மை தரும் தமிழ்ப்பாடல்; நல்லகூடன்> நல்ல கூத்தன் (இது கதைப் பாடலாசிரியனின் பெயராக இருக்கலாம்); குணமுடையோன் - நற்பண்புகளை உடையவன்.

ஒப்பிடுக: 'நன்மை தமிழோதுகின்ற (இ)லக்குமி நாராயணனாம்' (ச.ம.நூ.) 'நல்லதமிழ் ஓதுகின்ற லட்சுமி நாறாயணனாம்' (மா.அம் மானை, கை.பிரதி).
'நன்மைபெரு செல்வன் நலமாங் குணமுடையோன்' (மா.தவநிலை).

96. வை(ய்)யந்தொழுமைய்யன் - உலகத்து மக்கள் மதித்து வணங் கும் சிறப்பினன்; மலரும் புகழ் - பரவும் புகழ்; வளர் - வளரக்கூடிய.

97. செய்ய[வ]ருளோங்கும் - சிறந்த புகழ்விளங்கும்; சிறந்த முன்னூல் - பெருமைதரும் முதனூல்; தேசிகமாம் - வட்டாரக் கூத்துப் பாடலாம். பி.வே. - 'தேசிகவான்' (மா.தவநிலை).

98-99. நம்பி வணங்குகின்ற - நம்பிக்கையுடன் போற்றுகின்ற; லெச்சையடன் - லிச்சையுடன் > இச்சையுடன் - விருப்புடன்; நானிலத் தில் - நிலவுலகில்; ஓது செஞ்சொல் - பாடுகின்ற கதைப்பாடல். பா.வே. - 'இச்சையுடன்' (மா.அ.); பி.வே. - 'தாலமதி (இ)லக்குமி நாராயணன் தானுரைத்தேன்' (ச.மாநூ.).

100. கடலூர் - மார்க்கண்டேயனின் ஊர். இது தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டம் மயிலாடுதுறை வட்டத்தில் உள்ளது. திருக்கடையூர் எனவும் வழங்கப்படும். பி.வே. - கடலூர் (மா.தவநிலை); தன்னிலே - கடலூரில்; இச் சைவத்திருத்தலம் தமிழிலக்கியங்களில் பரவலாகக் கூறப்பட்டுள் ளது. சனதன்> சனாதன் - ஒரு முனிவன். 'சனகன்' என்றும் அழைக்கப்படு வான். புதல்வன்-மகன். பா.வே. - 'கருணைநெறி வேதாந்தன்' (கை. பிரதி); 'கருணை மச்சன்றன் புதல்வன்' (மா.அ.); 'கருணை நெறி வேந்தன்' (ச.ம.நூ., மா.தவநிலை).

திடமுடனே சிறந்து தவசு செய்தான்
அன்னா ளதனிலே[ஆ]ன வனந்தனிலே
சின்னமரக் காவில் சிறந்துவந்து தான்கூடி
[ஓங்கியருள் கொல்லா]து யுமையோ னருளாலே
பாங்காக வாழும் பாரமிருக மெல்லாம்
வேத முனிதன்முதுகில் விஷ்த்தார யுரைசும்
நீத மிகுந்தமுனி நெஞ்சுதனில் கோபமுற்றான்
அப்போதர னாரருள் முனிவன்றன் தவசில்

101. திடமுடனே - உறுதியுடன்; சிறந்து - மேன்மையுற்று; தவசுசெய் தான் - தவஞ்செய்தான்; பா.வே. - 'திடமாஞ் சுகவேதன் சிற்றரசு செய்யுமன்னாள்' (ச.ம.நூ.); 'திடமீஸ்வரவேதன்' (கை.பிரதி); 'திடமீசர் வேதமுனி' (மா.தவநிலை); 'திட்டமுடைய துச்சன் சிறந்துதவசு செய் தான்' (மா.அம்மானை).

102. அன்னாள்தனிலே - அந்த நாளையிலே; ஆனவனந்தனிலே - முனிவன் தவஞ்செய்த காட்டிலே; பி.வே. - 'அன்னாளிலே மிருக ஆனவனந்தனிலே' (மா.அ.) ஒப்பிடுக: 'இந்த தவசி யிவன்புரியுங்கானகத் தில்' (கை.பிரதி).

103. சின்ன-சிறிய; மரக்காவில் - மரங்களடர்ந்த காட்டில்; சிறந்து வந்து-சிறப்புடன் தனியே வந்து; தான்கூடி - ஓரிடத்தில் மொத்தமாகக் கூடி; பா.வே. - 'சின்ன மணக்காவில்' (மா.அ.).

104. ஓங்கியருள் கொல்லாது - உயர்ந்த அருளால் கொன்றுவிடா மல்; யுமையோன் > உமையோன் - உமையின் நாயகனான சிவன்; அருளால்-ஆசியால்; பி.வே. - 'உமையாள் அருளாள்' (மா.அ.).

105. பாங்காக இணக்கமாக; வாழும் - காட்டில் வசித்துவரும்; பார-கொடிய; மிருகமெல்லாம் - விலங்குகள் எல்லாம்; காண்க: 'பாரவ லுதூதர்' (வரி 864). பி.வே.- 'பாங்காவாய் மூடுகையில் பாரமிருகமெல் லாம்' (மா.அ.).

106. வேதமுனி - வேதங்களைக் கற்றமுனிவன்; முதுகில் - பின் உடம்பில்; விஷ்த்தாரமாய் > வித்தாரமாய் (பார்க்க வரி 70). உரைசும் - (தம் தினவெடுத்த முதுகுகளைத்) தேய்க்கும்.

107. நீதமிகுந்த முனி - நல்லொழுக்கங்களில் சிறந்த முனிவன்; நெஞ்சுதனில் - உள்ளத்தில்; கோபமுற்றான் - சினந்தான்; காண்க: 'நீதம்' (வரி 628, 654, 706, 832, வி.37, வி.58); பா.வே. - 'நீதம் நிறைந்த குச்சன் நேசமதில் கோபமுற்றான்' (மா.தவநிலை, கை.பிரதி); 'நித்திரைந்த குடசின் நெஞ்சகத்தில் கோபமுற்றான்' (ச.ம.நூ.).

108. அப்போதரனார் - அந்த வேளையில் சிவன்; அருள் முனிவன்- வரம் உள்ள முனிவன்; தன் தவசில் - முனிவனுடைய தவத்தில்; பா.வே. - 'அப்போதவனாம்' (ச.ம.நூ.);

குப்பமிகு மிருகங் கூடி யணுகாமல்
மிருகத்த வல்ல மிருகண்ட னென்றுரைத்தார்
மிருகண்டன் றன்னை மிருகமென்று கண்டார்கள்
[திடுக்கிட்டுக்]குடல் பதறி [சிந்தை மருண்டு]
[அடுத்து நிற்கவேபயந்து அடைக்]காவில் போயொளிக்க
அந்தமிரு கண்டனுக் கன்னாளொரு புதல்வன்

*109.* குப்பம் - கூட்டம்; மிகு மிருகம் - மிகுந்த விலங்குகள்; 'குப்பம்'-இது தென்பாண்டி நாட்டு வழக்கு; கூடியணுகாமல் - கூட்டமாக வந்தாலும் அவரைத் தாக்காமல்; பி.வே. - 'குப்பமுடன்' (கை.பிரதி, மா.தவநிலை). பா.வே. - 'ஒப்பாய் மிருகம் ஒறுக்கி அணுகாதபடி' (ச.ம.நூ.)—இது தவறான பாடம்.

*110.* மிருகத்த வல்ல - மிருகங்களுக்கெல்லாம் வல்லவர்; மிருகண்டன் - மிருகங்களுக்கெல்லாம் வீரன். இப் பெயர் பின்பு மிருகண்டமுனி என வழங்கலாயிற்று; அவர் சந்ததியினர்க்கு 'மிரு' எனும் அடையும் சேர்ந்தது; என்றுரைத்தார் - என்ற பெயரை வழங்கினார்; 'மிருகத்தில் வல்ல' (மா.அ.); 'மிருகத்துக்கெல்லாம்' (மா.தவநிலை, ச.ம.நூ.).

*111.* மிருகண்டன்றன்னை - மிருகண்ட மாமுனியை; மிருகமென்று கண்டார்கள் - மிருகம் போலவே கண்டு பயந்தார்கள். பா.வே. - 'மிருகண்டன் தனை மிருகம் எவை கண்டாலும்' (ச.ம.நூ., கை. பிரதி).

*112.* [திடுக்கிட்டு] - திடுக்கென ஏங்கி, பயந்து; குடல் பதறி - குடல் நடுக்கமெடுத்து; குடல் மருண்டு [சிந்தை] - உள்ளம் மருகி; பா.வே. - 'திடுக்கிட்டுடல் பதறி' (ச.ம.நூ.). 'திடுக்கிட்டுக் குடல் பதறி' (கை.பிரதி) காண்க: 'திடுக்கிடல்' (வரி 999, 1329, 1735).

*113.* [அடுத்து நிற்கவே பயந்து] - பக்கத்தில் நிற்பதற்குப் பயந்து; [அடைக்]காவில் - அடுத்திருந்த கானகத்தில்; போயொளிக்க - விரைவாகச் சென்று ஒளிந்து கொள்ள; பா.வே. - 'ஆனபுடை போயொளிக்க' (கை.பிரதி); 'ஆனவிடம் போய் ஒளிக்கும்' (ச.ம.நூ.). ஒப்பீடு:

'மறுகி வெகுண்டு மலையிடையிற் போயொளிக்கும்'

— மா.அம்மா;

'அடுத்திட்டு நிற்(க்)கரிதாய் யானவனம் போய்வொளிக்கும்'

— மா.தவநிலை.

*114-115.* அந்த மிருகண்டனுக்கு - அம் மிருகண்ட மாமுனிக்கு; அன்னாள் > அந்நாள் - அதன்பிறகு ஒரு நாள்; ஒரு புதல்வன் - ஒரு மகன்; வந்து பிறந்தான் - உலகத்தில் வந்து பிறப்பெடுத்தான்; வாழ்சிங்க மிருகனென - நீண்ட நாள் வாழக்கூடிய மிருகசிங்கன் எனும்

வந்து பிறந்தான் வாழ்மிருக சிங்கனென

**மிருகசிங்கன் தவம் செய்ய விரும்புதல்**

அன்னாள் மிருகசிங்க னாண்டுபதி னாறில்
சின்ன மதிசூடுஞ் சிவன்மா லயனான
[...] பரமன் பாதமதை நெஞ்சில்வைத்து
தங்குபல நூல்ஞானந் தானுணர்ந்து யாசையத்து
இந்தச் சடல மிருக்கு மிறந்துவிடும்
வந்த சடலமதை வாகாக நம்பரிது

பெயருடையவன்; பி.வே. - 'மிருகசிங்கநேசன்' (ச.ம.நூ.); 'மிரு சிங்கன்' (மா.தவநிலை, கை.பிரதி).

116. அன்னாள் (வரி 114); மிருக சிங்கன் ஆண்டு பதினாறில் - மிருகசிங்கன் என்பானுக்குப் பதினாறு வயதாகும்போது; காண்க: 'ஆண்டு பதினாறு' (வரி 926).

117. 118. சின்னமதி சூடும் சிவன் - சிறிய (பிறைச்) சந்திரனைச் சடையில் அணியும் சிவபெருமான்; காண்க: விளக்கம் வரி 12, 41, 54; மால்-திருமால்; அயன் - பிரமா; ஆன - (மாலாகவும் பிரமாவாகவும்) தோன்றிய; [...] பராபரனை - முதலும் முடிவுமான இறைவனை; நெஞ்சில் வைத்து உள்ளத்தில் இருத்தி. சிவன் மாலாகவும் பிரமனாகவும் ஆகிய வரலாறு: பிரமனையும் விஷ்ணுவையும் முறையே படைப்புத் தொழிலையும், காத்தல் தொழிலையும் செய்ய அவர்களைச் சிவன் சிருஷ்டித்தார்; அவர்களைச் சக்தியிடம் பிறக்கச் செய்தார்; ஒப்பீடு: 'மால் ஆகி நான்முகனாய் மாபூதமாய்' திருநாவுக்கரசர் - தேவாரம்: நின்றதிருத் தாண்டகம்; பா.வே.- 'மின்னீர் சடையான் விமலன் அரி அயனாய், பங்கு பிரிந்த பராபரன்' (கை.பிரதி, மா.தவநிலை); 'பங்கு பிரிந்தபராபரத்தை' (மா.அ.); 'பக்கம் பிரியாமல் பராபரனை நெஞ்சில் வைத்து' (மா.தவ நிலை).

119. தங்கு பல நூல் - நிலைத்து நிற்கும் பல நூல்கள்; ஞானம்-அறிவு; தானுணர்ந்து - படித்தும் தாமும் உணர்ந்தும்; ஆசையத்து > ஆசையற்று - ஆசைகளை நீக்கி; பி.வே. - 'ஆசை விட்டு' (கை.பிரதி, ச.ம.நூ., மா.அ.); 'ஆசை முட்டி' (மா.தவநிலை).

120. இந்தச் சடலம் - மனித உடம்பு; காண்க:(வரி 121, 131); (சடம் - 44, 535); இருக்கும் - சில நாள் இந்த உலகில் நிலைக்கும்; இறந்துவிடும் - (பின்) அழிந்து விடும்;

121. வந்த சடலமதை - வந்து தோன்றிய உடம்பை; வாகாக > வாகு ஆக - அழகாக (பார்க்க; வரி 569); நம்பரிது - நம்ப முடியாது; பி.வே. - 'வந்தச் சடம் போஙிதனை' (ச.ம.நூ.).

அஞ்சு பஞ்சபூத மாட்டுஞ் சுரூபமிது
நெஞ்சு நினவுபல நின்றழியும் பொந்தியிது
கருவிமயல் மோகங் கன்மசென்ம பிண்டமிது
வருமினைக ளெண்ணாமல் மயக்கமிகச் சூழும்
சின்னமரப் பாவை சிறந்தாட்டுஞ் சூற்றிதரம்போல்
தன்னிக ரில்லான் றானாட்டும் பாவையிது

122. அஞ்சு - ஐந்து; பஞ்ச பூதம் - நிலம், நீர், காற்று, தீ, விசும்பு; பார்க்க: 'அஞ்சு (பஞ்ச) பூதம்', வி.53, வி.28, வரி 1872; ஆட்டும் - கட்டுப்படுத்தும்; சுரூபம் > சொரூபம் - வடிவம்; பி.வே. - 'ஆடும்' (கை.பிரதி, மா.அ., மா.தவநிலை); பா.வே. - 'புனலாட்டஞ் சுரூபமிது' (ச.ம.நூ.).

123. நெஞ்சு நினவு பல > நெஞ்சில் பல நினைவு (மா.தவநிலை) - உள்ளத்தில் பலவகை எண்ணங்கள்; நின்றழியும் - சிலநாள் நிலைத்திருந்து பின்பு அழிந்துவிடும்; பொந்தி - உடம்பு; பி.வே. - 'புந்தி' (ச.ம.நூ.); பா.வே. - 'நிறையும் சடலம்' (கை.பிரதி); 'பொந்து' (மா.அ.).

124. கருவி மயல் மோகம் - கருப்பத்தில் மயக்கம், ஆசை; கன்மம் > கருமம் - பாவ புண்ணிய வினை; சென்மம் > சன்மம் - பிறப்பு; பிண்டம் - உடம்பு; பி.வே. - 'கர்மம்' (மா.தவநிலை); பா.வே. - 'பாண்டமிது' (மா.தவநிலை); பி.வே. - 'மையல்' (மா.அ.); காண்க: 'மயல்' (வரி 651, 2527, வி.6); மோகம் (வரி 648, 685; ஒப்பிடுக: 'கன்மவினை' (வரி 376); 'கன்மம் (வரி 630, 1977, 2252, 2636); 'கருவிழுமோகம் கனம் சென்மப் புடை அண்டம்' (ச.ம.நூ.).

125. வருமினைகள் > வரும் வினைகள் - தாமே வரக் கூடிய கருமங்கள்; எண்ணாமல் - சிந்தியாமல், நினைக்காமல்; மயக்கம் - தளர்வு; மிகச்சூழும் - அதிகமாகச் சூழ்ந்து கொள்ளும். பா.வே. - 'வருவினைகள் எண்ணாது மாய்கை மயக்கங்களும்' (ச.ம.நூ.). பி.வே. - 'சூள்ந்து' (மா.தவநிலை); காண்க: மயக்கம் (வரி 369, 1195).

126. சின்ன - சிறு; மரப்பாவை - மரத்தாலாகிய பொம்மை; சிறந்தாட்டும் - சிறப்பாக ஆட்டுவிக்கும்; சூற்றிதரம் போல் > சூத்திரம் போல் - விசை அல்லது எந்திரம் போல; பி.வே. - 'சூஸ்த்திரம்' (கை.பிரதி); 'சூத்திரம்' (ச.ம.நூ.); 'சூஷ்த்திரம்' (மா.தவநிலை).

127. தன்னிகரில்லான் - தனக்கு ஒப்பாக யாரும் இல்லாதவன்; தானாட்டும் - அவனே ஆட்டுகின்ற; பாவையிது - மரப் பொம்மை இந்த உடல்; பா.வே. - 'தன்னிகர் இல்லா பாவையைத் தானாட்டும் பாவையுடல்' (ச.ம.நூ.); 'யீசர் தான்னாட்டும் சூஷ்த்திரம் போல்' (மா.தவநிலை); பார்க்க: 'தன்னிகரில்லா வழகு' (வரி 2474). ஒப்பீடு:

'ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே',
'ஆட்டினாய் அடியேன் வினை ஒட்டினாய்'

— திருநாவுக்கரசர்: தேவாரம்.

சிந்தை கலங்கித் திகைக்கு மனுதினமும்
பந்த உணர்வுஇயல் பாகவே பொசித்து
பீத்தக் குடலில் போகியது நில்லாமல்
ஊத்தை[ச்] சடலம் ஒளிவறியாப் பீத்தலிது
[கருவி மயல் மோகங்] கன்மசென்ம பிண்டமது
நாத்தந்தனை மறைத்து நாட்டமில்லாப் பொய்க்கூடு

*128.* சிந்தை - மனம்; கலங்கி - கலக்கம் எய்தி; திகைக்கும் - திகைப்படையும்; அனுதினமும் - ஒவ்வொரு நாளும்; பி.வே. - 'திகைத்து' (மா.தவநிலை, கை.பிரதி). பார்க்க: 'சிந்தை கலங்கல்' (வரி 1159); 'திகைத்தல்' (வரி 780, 951, 1005).

*129.* பந்த உணர்வு - சொந்த உறவு மூலம் ஏற்படும் 'ஆசாபாச' நிலை; இயல்பாகவே - இயற்கையாய்; பொசித்து > புசித்து - பசிக்கும், எழும். பார்க்க: வரி 196 - 'பொசித்து'. பா.வே. - 'எந்த நினைவு' (மா.அ.); 'எந்தயினவும்' (மா.தவநிலை); 'எந்தவுணர்வும்' (கை.பிரதி); பி.வே. - 'புசித்து' (ச.ம.நூ.); 'புசிக்கும்' (கை.பிரதி); 'பொசிக்கும்' (மா.தவநிலை).

*130.* பீத்தக் குடல் - நாற்றமெடுத்த குடல்; பீக்குடல் என்பது இங்குப் பீத்தக் குடலாயிற்று எனவும் கொள்ளலாம்; போகியது - உட்சென்ற உணவு முதலியன; நில்லாமல் - தங்காமல்; பா.வே. - 'குடலில் அப்பெரும் சிவம்' (ச.ம.நூ.); பி.வே. - 'பெருகியது' (மா.அ.); 'பெருகிய நீர்' (மா.தவநிலை, கை.பிரதி).

*131.* ஊத்தை சடலம் - நாறும் உடம்பு; ஒளிவறியா - வெளிச்சத்தை அறியாத; பீத்தலிது > பீற்றல் இது - அழுக்கான உடம்பு இது. பா.வே. - 'உப்பில்லா பாண்டமிது' (கை.பிரதி); 'ஒழியும் மிகுந்த பீத்தல்' (ச.ம.நூ.). ஒப்பீடு: 'ஊன்மிசை உதிரக் குப்பை' - 'உதிரம் நீர் இறைச்சிக் குப்பை எடுத்தது மலக் குகைமேல்' — சுந்தரர்: **தேவாரம்,** திரு ஆரூர்.

*132.* பார்க்க விளக்கம் வரி 124.

*133.* நாத்தந்தனை > நாற்றம் தனை - துர் மணத்தை; மறைத்து - மூடி வைத்து; நாட்டமில்லா - விரும்புதற்கு முடியாத; பொய்க் கூடு - உண்மையில்லாத வெறும் எலும்புக் கூடு; காண்க: 'நாத்தம்' (வரி 1719).

வி.1. சித்திரக் கோலம் தன்னில் - தீட்டப் பெற்ற ஓவியம் போன்ற வடிவத்தையுடைய மனித உடம்பில்; சிறந்த - உறுப்புக்களிலெல்லாம் உயர்வான; ஐம்புலனை - மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் புறவடிவ உறுப்புக்களை: இவை உணரும் சக்தி கொண்டவை; விட்டு - படைத்து; உத்திரயெலும்பு > உத்தர எலும்பு - (வீடுகளில் இடப்

## விருத்தம்

சித்திரக் கோலந் தன்னில்
சிறந்த ஐம்புலனை விட்டு
உத்திர யெலும்பு தன்னை
ஒளிபெற வளைக ளோடி
பத்திர நரம்பு கட்டிப்
பரந்திடா தசைதோல் மேய்ந்து
ஒத்திருந் தாடும் வாழ்வு
ஒளிவெளி ஒளிய தாமே (1)

பெறும்) விட்டம் போன்ற முதுகுத் தண்டு; ஒளிபெற - சீராக; வளைகள் ஓடி - விட்டத்திலிருந்து புறப்படும் வளைகள் போன்ற விலா எலும்புகள் புறப்பட்டு; பத்திர நரம்பு - மெல்லிய நரம்புகள்; கட்டி - எலும்புகளுடன் இணைத்து; பரந்திடா - விலகி விடாதபடி; சதை - ஊன்; தோல் - சதையுடன் ஒட்டியுள்ள சவ்வு; மேய்ந்து - மூடி வைத்து: இது 'வேய்ந்து' என்றும் வழங்கப்படும்; ஒத்திருந்து - சரியாகச் சேர்த்து வைத்திருந்து; ஆடு(ம்) வாழ்வு - நடமாடியடங்கும் இவ்வாழ்க்கை; ஒளி - மறைத்து விடு; 'ஒழி' என்று கொண்டு 'விட்டு விடு' என்றும் பொருள் கொள்ள லாம்; வெளி - இப் பரந்த வெளிப்பரப்பு; ஒளியதாம் - பிரகாசம் உடையதாம்.

பி.வே. - 'சித்திரைக் கோலம்' (மா.தவநிலை); பா.வே. - 'ஒளிவெ ளி', 'பத்திர(த்)தம் புகட்டி' (ச.ம.நூ.); பா.வே. - 'பத்தியாய் நரம்பு கட்டிப் பாந்தசைத் தோலுமேய்ந்து' (மா.அ.); 'பரிந்தாடாமல்' (மா.தவ நிலை); - பி.வே. - 'ஆடும் வாழ்வும்' (மா.அ.); பா.வே. - 'ஒளிவொளி வளியதாமே' (மா.தவநிலை); 'ஒளியொளி வெளியதாமே' (மா.அ.) காண்க: 'சித்திரம்' (வரி 29, 86, 91, 194, 195, 302, 388, 741, 1454, 1456, 2147, 2441; எலும்பு (138); நரம்பு (154, 1683); 'தசைதோல் நரம்பு சேர்க்கை' (வி.10, 1679); ஒப்பிடுக: 'ஊன் அமர் ஆக்கை' — திருஞானசம்பந்தர், *தேவாரம், திருவலம்புரம்;*

'என்பு இருத்தி நரம்பு தோல் புகப் பெய்திட்டு என்னை ஓர் உருவம் ஆக்கி'
— திருநாவுக்கரசர், *தேவாரம், திருஆரூர்;*

'நரம்பினோடு எலும்புகட்டி நசையினோடு இசைவு ஒன்று இல்லா'
— சுந்தரர், *தேவாரம், திருஆரூர்;*

'புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோறு மொன்பது வாயிற் குடிலை'
— மாணிக்கவாசகர், *திருவாசகம், சிவபுராணம்;*

'எலும்பொடு நரம்பு கொண்டு இடையில் பிணித்துக்
கொழுந்தசை வேய்ந்தும்....'
— பட்டினத்தார், *கோயில் திரு அகவல்.*

வாச மேற்க நாசிசெவி
வசனமெவை யுந்தான் கேட்க
பாச மேற்க மனநாட்டம்
பார்க்க நாவுபல துரைக்க
நேச மேற்க [வினைவந்து]
நிறைந்தெவை யும்விடு வளியும்
வேச மேற்க விதித்தான்
விரும்பி லெவர்க்கும் வீணாமே (2)

நடை

காயமசைய கனத்த கரங்கா லசைய

வி.2. வாசமேற்க நாசி - மூக்கு மணத்தை ஏற்கவும் (நுகரவும்); செவி வசனம் எவையும் கேட்க - காது, பேச்சு, உரை போன்ற எல்லாவற்றையும் செவிமடுப்பவும்; பாசமேற்க மனம் - பந்தபாசங்களை மனமானது ஏற்றுக் கொள்ளவும்; நாட்டம் பார்க்க - காட்சிகளைப் பார்வை (கண்) பார்க்கவும்; நாவு பலதுரைக்க - நாவானது பல வற்றையும் பேசவும்; நேச மேற்க (வினைவந்து) - கருமமானது அன் பினை ஏற்கவும்; நிறைந்தெவையும் விடுவளியும் - நிறைந்த எல்லாவற் றையும் உயிர் (காற்று) ஏற்கவும்; வேச மேற்க விதித்தான் - (இவ்வாறான) வேடத்தை (இறைவன்) விதித்துவிட்டான்; விரும்பில் - (இவ் வாழ்க் கையை) விரும்பினால் எவர்க்கும் - யாவருக்கும்; வீணாமே - வீணாகிவி டும்.

பா.வே. - 'நேசமேற்க விளைவிந்து நிறைவையும் விடும் வழியும், வேசமேற்க விதிவிடுத்தான் விரும்பவே வரும் வீணாமே' (ச.ம.நூ.); 'பகரு நாவு பலவகையும், 'விதி விடுத்தான் விரும்பி லெவற்கும் வினையாமே' (மா.அ.); பி.வே. - 'கேற்க்க; 'மனனாட்டம்' (மா.தவ நிலை). ஒப்பிடுக:

'கையொன்று விழியொன்று நாடக் கருத்தொன்று எண்ணப்
பொய் யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்
மெய் யொன்று சாரச் செவியொன்று கேட்க...'

'கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்க...'

— பட்டினத்தார்

134. காயமசைய - உறுதியான உடம்பு அசைந்துகொடுக்கவும்; கனத்த - திடமான; கரங்காலசைய - கைகளும் கால்களும் அசைந்து கொடுக்கவும்; பா.வே. - 'கனத்த கண்கள் தானசைய' (மா.அ.); பி.வே. - 'கனத்த கரங்கள்' (மா.தவநிலை).

வாயசைய சென்னி வருத்த விரலசைய
பொருத்தரூபத் தொடையசையப் பொருத்துவிட்டுட்(ப்) பிறத்தில்
வருத்தி யசைத்தாலும் வாகா யசையாமல்
எலும்பை நிறுத்தி யியல்பாய் நரம்பொட்டி
பிலம்பொரு மத்தோலைப் பிரியாமலே பொருத்தி
தேய்வோடு நீருஞ் சிறப்பாகவே யடைத்து
வாய்வுப் பொருமல் மலங்குகின்ற பாழ்வீடு

*135.* வாயசைய - இதழும் நாவும் அசைந்து கொடுக்கவும்; சென்னி வருத்த - தலை நோவு கொள்ளவும்; விரலசைய - விரல்கள் அசைந்து கொடுக்கவும்; பா.வே. - 'சென்னி வகுத்த' *(ச.ம.நூ.)*; 'சென்னி வகுத்த விலாவசைய' *(மா.அ.)*.

*136.* பொருத்த ரூபத் தொடை - பொருத்திய அழகான தொடைகள் அசைந்து கொடுக்கவும்; பொருத்து விட்டுட்(ப்)பிறத்தில் < பொருத்து விட்டு உள் புறத்தில் - மூட்டுடன் மூட்டுகளைச் சேர்த்து விட்டு உள்ளேயும் வெளியேயும்; பா.வே. - 'பொருத்துக்குப் பொருத்து புகழ் சேக்கை செய்ய' *(மா. தவநிலை)*; 'பொருத்த ரூபத் தெட்டசைய பிறந்துவிட்டு அப்புறத்தே' *(ச.ம.நூ.)*. 'பொருத்த ரூபத் தொடை' என்பதைப் 'பெருத்த ரூபத்தொடை' எனவும் கொள்ளலாம்.

*137.* வருத்தி யசைத்தாலும் - வலுவாக அசைத்துப் பார்த்தாலும்; வாகாயசையாமல் - பக்குமாய் அசைந்துகொடுக்காதபடி;

*138.* எலும்பை நிறுத்தி - அசையாதபடி எலும்புகளை அமைத்து; இயல்பாய் - *(பார்க்க வரி 33)*; நரம்பொட்டி - நரம்புகளை (ஒட்ட வைத்து) அமைத்து; பா.வே. - 'நரம்பால் வளையோடி' *(மா.அ.)*; 'நரம்பால் லொட்டி' *(மா.தவநிலை)*; 'இசைக்கும் நரம்பை யொட்டி' *(கை.பிரதி)*; 'இயல் நரம்பாலே பூட்டி' *(ச.ம.நூ.)*.

*139.* பிலம் < பலம் - உறுதி; பொருமத் தோலை - பொருந்தக்கூடிய சவ்வினை; பிரியாமலே பொருத்தி- பிளவு படாதபடி முழுதுமாக மூடச் செய்து; பா.வே. - 'பிலம் போகும் தோலைப் பிரியாமலே பொருந்தி' *(ச.ம.நூ.)*; பி.வே. - 'பிலம் பொருத்தி' *(மா.அ.)*; 'பிலம் பொருந்தி' *(மா.தவநிலை)*; காண்க; 'பிலம்' *(வரி 909, வி.8)*.

*140.* தேய்வோடு - குறைவாக, அளவோடு; நீரும் - உதிரமும்; சிறப்பாகவேயடைத்து - ஒழுங்கானபடி அடைத்து; பி.வே. - 'தேய்வு பெருக', *(மா.தவநிலை)*; 'தேயுவொடு நீரும்' *(மா.அ.)*.

*141.* வாய்வுப் பொருமல் - காற்று விம்மி விம்மி (விரிந்து சுருங்கி); மலங்குகின்ற பாழ்வீடு - அசைகின்ற பாழடைந்த வீடு போன்ற உடம்பு; பி.வே. - 'வாயுப் பொருமல்' *(மா.அ.)*; காண்க: 'வாய்வு' *(வரி 1871)*.

என்றுமொரு னாளிறந்து விடுமுன்னே நாம்
சென்று தவங்கள்பல செய்வோமேன நினைந்து
தந்தைதாய்[ப்] பாதந் தனில்வீழ்ந்து தெண்டனிட்டு
வந்தடியிலே விழுந்த மைந்தன் தனையிருவர்
சிந்தைதனில் வாழ்த்திச் சிறப்பா யெடுத்தணைத்து
கந்தம் நிறைந்த கருணையினது மைந்தா
உந்தன் மனத்தில் வுத்ததுரையு மென்றார்
அந்தவுரை கேட்டே யருள்பாலக னுரைப்பான்

*142.* என்று மொருநாள் - என்றைக்கேனும் ஓர் நாளில்; இறந்து விடுமுன்னே - செத்துவிடு முன்னதாக; நாம் - (இங்கு) முனிவர்; பி.வே. - 'விடுமுன்னே தான்' (மா.அ.).

*143.* சென்று - காடு சென்று; தவங்கள் பல - பல தியானங்கள்; செய்வோமென - கடைப் பிடிப்போமென்று நினைந்து - முடிவு செய்து; 'பல தவங்கள் செய்வோமென மகிழ்ந்து' (மா.தவநிலை); 'தவம் பலது' (மா.அ.).

*144.* தந்தைதாய் பாதந்தனில் - தகப்பன், அன்னை இருவரின் கால்களில்; வீழ்ந்து - விழுந்து; தெண்டனிட்டு - வணங்கி; பி.வே. - 'தெண்டனிட்டான்' (ச.ம.நூ.); காண்க: 'தந்தை தாய்' (வரி 398, 656, 730, 1408; 'தெண்டனிட்ல்' (வரி 279, 333, 395, 398, 594, 673, 683, 786, 1059).

*145.* வந்தடியிலே - வந்து பாதங்களில்; விழுந்த - படுத்து வணங்கிய மைந்தன்தனை - தம் மகனை; இருவர் - தாயும் தந்தையுமான பெற்றோர் பி.வே. - 'வீழும்' (ச.ம.நூ.); 'வந்து வணங்கும்' (கை.பிரதி); 'அடி வணங்கும் மைய்ந்தனை' (மா.தவநிலை).

*146.* சிந்தைனில் - மனத்தில்; வாழ்த்தி - நீடுழி வாழ்வாயாக என வாழ்த்துக்கூறி; சிறப்பாய் - அன்பாய்; எடுத்தணைத்து - தூக்கி உடம்போடு கட்டித்தழுவி; பி.வே. - 'சிந்தை அன்பில்' (ச.ம.நூ.); 'சிந்தையுடன்' (கை.பிரதி, மா.தவநிலை).

*147.* கந்தம் நிறைந்த கருணை - மிகுந்த புகழும் அன்புமுடைய; -யினது < இனது < எனது - எங்களின்; மைந்தா - மகனே!; பி.வே. - 'நிறை' (கை.பிரதி); 'எனது' (ச.ம.நூ., கை.பிரதி); 'கந்தர்' (மா.தவ நிலை); பார்க்க: 'கந்தமிகு' (வரி 1586, 2666);

*148.* உந்தன் மனத்தில் - உனது உள்ளத்தில்; உத்தது < உற்றது -நினைத்ததை; உரையுமென்றார் - கூறுவாய் என மொழிந்தனர்; பி.வே. - 'உதித்தது' (ச.ம.நூ.); 'மனதுதனில்' (கை.பிரதி) 'உற்றதெல்லாம்' (மா.தவநிலை).

*149.* அந்தவுரை - பெற்றோர் 'கூறுக' என்றதை; கேட்டே - கேட்டவுடன்; அருள் பாலகன் - அருள் நிறைந்த மகன்; உரைப்பான் - (பின் வருமாறு) கூறுவான்; பி.வே. - 'அருள் பாலன் யேதுரைப்பான்' (கை.பிரதி); 'அருள் பாலகன் தானுரைப்பான்' (மா.தவநிலை).

150 மைந்தருக்கு முன்புதெய்வம் மாதாபின் தந்தைகுரு
சிந்தையுடன் காற்கச் சிறந்ததவம் பின்புதெய்வம்
அன்னஞ் சுவையருந்து மானகுடல் தனிலே
கன்னமிகு குழவி காட்சியுடனே சுமந்து
பூட்டு நரம்பிளகிப் போகவழி கட்டிறந்து

150. மைந்தருக்கு - பிள்ளைகளுக்கு; முன்பு தெய்வம் - முதலில் தெய்வங்கள்; மாதா பின் தந்தை குரு - முதலில் அன்னையும் அதன்பின்பு தந்தையும், பின்பு குருவும் ஆவர்; பி.வே. - 'குருவாம்' (ச.ம.நூ.); 'முன்தெய்வம் மாதாவும் தந்தையுமாம்' (கை.பிரதி); 'முந்து தெய்வம் மாதா பின் தந்தை குரு' (மா.தவநிலை). ஒப்பிடுக:

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'

— ஔவையார், கொன்றைவேந்தன்

'மாதா பிதா குரு தெய்வம்'

— உலகவழக்கு

151. சிந்தையுடன் - கவனமுடன்; காற்க < காக்க - பாதுகாக்க; சிறந்த தவம் - மிகவும் சிறப்பாகப் புரிகின்ற தவமே ஆகும்; பின்பு தெய்வம் - இவற்றுக்கெல்லாம் பின்தான் கடவுள். பி.வே. - 'காக்க' (ச.ம.நூ., கை.பிரதி). ஒப்பிடுக:

'அற்புதமாய் இந்தஉடல் ஆவி அடங்குமுன்னே
சற்குருவைப் போற்றித் தவம்பெற்று வாழாமல்...'

— பட்டினத்தார்.

152. அன்னஞ்சுவையருந்தும் - உணவின்பத்தைப் பெறக் கூடிய; ஆன குடல்தனிலே - வயிற்றுக்குள் உருவாகியிருக்கிற கருப்பைக் குடலில்; பா.வே. - 'ஆண்குடல்தனில்' (ச.ம.நூ.); ஒப்பிடுக:

'அன்னைகர்ப்ப அறைஅதற்குள் அங்கியின் பிரகாசமாய்
அந்தறைக்குள் வந்திருந்து அரியவிந்து ரூபமாய்...'

— சிவவாக்கியர்.

153. கன்னமிகு குழவி - மிகுந்த ஆசையுடன் குழந்தையை; காட்சியுடனே சுமந்து - பிறரும் தெரிந்து கொள்ளுமாறு வயிற்றுக்குள் கவனமுடன் சுமந்துகொண்டு; பி.வே. - 'கன்னல் நிறை' (ச.ம.நூ., கை.பிரதி, மா.தவநிலை).

154. பூட்டு நரம்பிளகி - தாயுடன் குழந்தையை இணைத்துள்ள தொடர்புகள் விலகி; போக - குழந்தை வெளியேற; வழிகட்டிறந்து - வழிகள் தானாகத் திறந்து கொள்ள; பா.வே. - 'போத வழி தட்டோடி மெய்மறந்து' (மா.தவநிலை); 'போத வளி தட்டிழந்து' (ச.ம.நூ.); 'யோக வழி தட்டளிந்து' (கை.பிரதி); 'போகவழிகள்' என்பதைப் போகந் துய்க்கும் வழிகள் என்றும் கொள்ளலாம்.

ஒப்பிடுக: 'உருவமும் ஆகி உயிர் வளர்மாதம் ஒன்பதும் மூன்றும்
நிறைந்து மடந்தை உதரம் அகன்று புவியில் விழுந்து...'

— பட்டினத்தார்.

மீட்டுவயறு நொந்து மெய்மறந்து தானீன்று
பொங்கு முலைப்பாலைப் புகட்டி வள[ர்]த்துவிட்டு
தங்குமிகு யன்னைதந்தை தங்களுடல் போட்டுவிட்டு
மீண்டுமறு வயத்தில் வேதன்விதியால் நுழைந்து
தீட்டிமையாய்க் கும்பிதனைத் திறந்து பாரில்வரும்
மைந்தனா லேதுபயன் மாதாபிதா தனக்கு

155. மீட்டுவயறு - மீண்டும் கருப்ப வயறு; நொந்து - வேதனையுற்று; மெய்மறந்து - தன்னை மறந்து மயக்கமடையும் நிலையில்; தானீன்று - தானே குழவியைப் பெற்றெடுத்து; பா.வே. - 'உழன்று' (மா.தவநிலை). ஒப்பீடு:

'நொந்து சுமந்துபெற்று நோவாமல் ஏந்திமுலை
தந்து வளர்த்தெடுத்து...'

— பட்டினத்தார்.

156. பொங்கு முலைப்பாலை - சுரந்து கொப்பளிக்கும் தாய்ப் பாலை; புகட்டி - பருகவைத்து; வள[ர்]த்துவிட்டு - குழந்தையிலிருந்து சிறுவனாகவும் பெரியவனாகவும் வளர்த்து ஆளாக்கி;

157. தங்குமிகு யன்னைதந்தை - அன்னையும் பிதாவும்; தங்களுடல் - அவர்களுடைய பூதஉடலை; போட்டுவிட்டு - விட்டுவிட்டு. பா.வே. - 'தங்கும் இவன்' (ச.ம.நூ.).

158. மீட்டும் < மீண்டும் - பின்னும் (மறுபிறவியிலும்); மறுவயத்தில் - வேறொரு கருப்பையில்; வேதன் விதியால் - படைப்புக் கடவுளின் நியதியின்படி; நுழைந்து - உள்ளே சென்று; பி.வே. - 'மீட்டும்' (ச.ம.நூ.); ஒப்பிடுக:

'கருவினில் கருவதாய் எடுத்த ஏழுதோற்றமும்
இருவினைப் பயத்தினால் பிறந்திறந்து உழன்றிடும்
மருவினைப் பிறவி மூன்று காலமும் வகுத்தபின்...'

— சிவவாக்கியர்

159. தீட்டிமையாய் < தாட்டிமையாய் - சாமர்த்தியமாய்; கும்பிதனை - வயறுதனை; திறந்து - வெளியேறி; பாரில்வரும் - உலகில் பிறக்கும் 'தாட்டிமையேசர்' (ச.ம.நூ., கை.பிரதி., மா.தவநிலை); 'யவரும் வருவார்' (மா.தவநிலை).

160. மைந்தனால் - மகனால்; மாதாபிதா தனக்கு - தாய் தந்தைக்கு; ஏதுபயன் - பயனொன்றுமில்லை; பி.வே. - 'ஏதுபலன்' (ச.ம.நூ.); 'ஏதுதவி' (கை.பிரதி); 'மைய்ந்தன்' (மா.தவநிலை).

கந்தனிறை ஞானம் கனதவசு மீறுதவம்
விந்தைனிறை மைந்தரென்றால் மீறுமிவன் தவசில்
இந்திரசுக மன்னைதந்தைக் கெய்துமிவ னுதவி
நீதினிறை மைந்தர் நிறைந்தவயற் செங்கமலம்
கோதி யிவனுண்டமுலை கோலமிகு பாற்கடலாம்
நெஞ்சி லறிவில்லா நீசரடைந்த வயற்
வஞ்சச் சுடுகாடு மாதுமுலை கட்(ப்)பானை

161. கந்தனிறை < கந்தம் நிறை - புகழ்நிறைந்த; ஞானம் - அறிவு; கனதவசு - மிகுந்த தவங்கள்; மீறுதவம் - (வீறு) அளவுக்கு அதிகமான தவங்கள்; பா.வே. 'கந்தனையா' (மா.தவநிலை). காண்க: 'கந்தமிகுதாள்' (வரி 1586); 'கந்தமிகுந்த கணக்கு' (வரி 2666), 'கன தவங்கள்' (வரி 443).

162. விந்[தை]தனிறை மைந்த ரென்றால் - அபூர்வ சக்திகள் நிறைந்துள்ள மகன் எனில்; மீறுமிவன் தவசில் - அவன் தவம் காலத்தைக் கடந்து நிற்கும்; பி.வே. - 'சேரும் கன தவசும்' (ச.ம.நூ.); 'விந்தை திருமைந்தனென்றால்' (கை.பிரதி); 'விந்தை திரள் மைய்ந்தர்' (மா.தவ நிலை).

163. இந்திரசுகம் - இந்திரலோகத்து இன்பம், சொர்க்கம்; அன்னை தந்தைக்கு - மாதா பிதாவுக்கு; எய்தும் - கிடைக்கும்; இவன் உதவி - மகனால் ஏற்படும் பலன்; பி.வே. - 'மகவே உதவி' (ச.ம.நூ.); 'மகனுதவி' (கை.பிரதி); 'இந்திரயரசு' (மா.தவநிலை).

164. நீதினிறை மைந்தர் - பெற்றெடுத்த மகன் சத்தியவான் என்றால்; நிறைந்த - அவனிருந்த; வயற் < வயறு - பெற்றெடுத்த வயறு; செங்கமலம் - செந்தாமரை (மீதிருக்கும் திரு போன்றதாகும்) பி.வே. - 'வயறு' (ச.ம.நூ.); 'வயிர்' (கை.பிரதி); 'நிறைந்த பால்' (மா.தவநிலை); காண்க: 'செங்கமலம்' (வரி 2566).

165. கோதி - அள்ளி; இவனுண்டமுலை - இவன் பருகிய தனம்; கோலமிகு பாற்கடலாம் - அழகு நிறைந்த திருப்பாற் கடல் போன்ற தாகும்; பா.வே. - 'கோதைத் திருப்பாற்கடலாம்' (ச.ம.நூ.); 'கோதியிவ னுண்டதனம்' (கை.பிரதி); 'திருவாய் அமுர்தம்' (மா.தவநிலை).

166. நெஞ்சில் - சிந்தையில்; அறிவில்லா - கல்விஞானமில்லாத நீசரடைந்த வயற் - துஷ்டர்கள் அடைந்த வயறானது பி.வே. - 'நிஷ்டர்' (ச.ம.நூ.); 'வயிர்' (கை.பிரதி); காண்க: 'நீசர்' (வரி 1976, 2530).

167. வஞ்சச்சுடுகாடு - வஞ்சம் கொண்ட பாழான மயானம் போன் றது; மாதுமுலை - (அவ்வஞ்சரைப் பெற்றெடுத்த) தாயின் தனம்; கட்(ப்)பானை < கள் பானை; பி.வே. - 'மாதர் முலை கள்பானை' (ச.ம.நூ., கை.பிரதி) 'கள்பானையதாம்' (மா.தவநிலை).

### விருத்தம்

விதியிடு குழவி தன்னில்
    மிகுவளி வயறு நொந்து
நதிகுமிள் நீதர் பேதை
    யிரண்டடிப் பிறக்கில் நல்லோர்
பதிமல ருணர்வு தேவர்
    பருகிய யமுற்த மாகும்
கொதிகுணா கும்பி காடு
    கொண்டது கள்ள தாமே (3)

### நடை

பாரில்(ப்) பிறந்தவர்கள் பாரில்நெடு நாளிருந்து
சீரில்நிலை செத்ததின்பின் செற்றானென்றே நிலையாம்
அந்தப்படி வருமு னய்யனே மாதாவே

வி.3. விதியிடு குழவி தன்னில் - ஊழ் வினையால் தரிக்கக் கூடிய குழந்தையானதில்; மிகுவளி - மிகுகின்ற காற்று (உயிர்) தங்கி; வயறு நொந்து - தாயின் கர்ப்ப வயறு நோவெடுத்து; நதி-ஆறு; குமிழ் - நீர்க்குமிழ் போலத் தோன்றி மறையக்கூடிய; நீதர் < நீசர் - துஷ்டர்கள் (வரி 166); பேதை - அறிவுமங்கிய பேதையர்கள்; இரண்டடிப்பிறக்கில் நல்லோர் - நல்ல மனிதர்களை இவ்விரண்டடிப்பிறப்பாளர்களோடு வேறுபடுத்திப் பார்க்கும் போது; பதிமலருணர்வு - உம்பருலகில் வீற்றிருக்கும்; தேவர் - மேலோகத்தினர்; பருகிய - அருந்திய; அமுற்தமாகும் - சாவாமருந்தான அமுது போன்றவர்கள் ஆவர்; கொதிகுணாகும்பி காடு- நீசரைப் பெற்றெடுத்து எரித்த வயறு; கொண்டது கள்ளதாமே - அறிவை மயக்கும் கள்ளுக்குச் சமமாவர்.

பி.வே.-'நீரதா பேதை', 'இரண்டிவை', 'அணைவுதேவர்' 'கதிகுறைக் கும்பிக்காடு' - (ச.ம.நூ.); 'நீதர்', 'இரண்டிலும் வீரரில் நல்லோர்', 'பதிமலர் உறையும் (மா.தவநிலை).

168. பாரில்(ப்) பிறந்தவர்கள் - இவ்வுலகத்தில் தோன்றியவர்கள்; பாரில் நெடுநாளிருந்து - உலகில் நீண்ட ஆயுளுடன் வாழ்ந்து.

169. சீரில் நிலை - ஒழுங்கில்லாத வாழ்க்கை; செத்ததின்பின் - இறந்தபின்பு; செற்றான் < செத்தான் - இறந்தான்; என்றே நிலையாம் - என்ற தன்மையாம்; பி.வே. - 'செத்தார்ரென்றோ நிலையாய்' (மா.தவ நிலை); பி.வே. - 'சீரில் உடல்' (ச.ம.நூ.). 'செத்தானென நினையாமல்' (கை.பிரதி).

170. அந்தப்படி - அவ்வாறான செத்தநிலை; வருமுன் - ஏற்படுவதற்கு முன்பே; அய்யனே - தந்தையே; மாதாவே - தாயே; பி.வே.

எந்தன்தனைத் தவத்துக் கேவீர் தவங்கள்செய்ய
விந்தை யுடனே விளைந்து அண்டமூடுருவி
அந்திமதி சூடு மரனடியை யான்காண்பேன்
என்றுமைந்தன் சொல்லக்கேட்டு யிருவருமங்
கேதுரைப்பார்
175 நின்று தவம்புரிந்து நீசிவனைக் காண்பனென்றாய்
பாதத்தைத் தேடியே மால்யரி பாரையுண்டிட[க்]
காண்கிலரே

- 'அந்தப்படி' (ச.ம.நூ.); 'அந்தவுரை' (மா.தவநிலை); 'அப்பனே' (கை.பிரதி).

171. எந்தன்தனை - என்னை; தவத்துக்கு - தவம் மேற்கொள்ளுவ தற்கு; ஏவீர் - செல்லவிடுங்கள்; தவங்கள் செய்ய - பல தவங்களைச் செய்வதற்கு; பி.வே. - 'ஏகுவீர்' (மா.தவநிலை); 'கேவிடும்' (ச.ம.நூ.); 'ஏவும்' (கை.பிரதி).

172. விந்தையுடனே - புதுமைநிறை சக்திகள்பெற்று; விளைந்து - பக்குவமடைந்து; அண்டமூடுருவி - அண்டத்தைப் பிளந்து கொண்டு, அல்லது தாண்டிக்கொண்டு; பி.வே. - 'விரிந்த' (மா.தவநிலை).

173. அந்திமதி சூடுமரனடியை - பார்க்க: வரி விளக்கம் 54; யான் காண்பேன் - நான் தேடிக் கண்டுபிடித்து விடுவேன்; பி.வே. -'யானும்' (ச.ம.நூ.).

174. என்றுமைந்தன் சொல்லக்கேட்டு - இவ்வாறு மிருகசிங்கன் உரைப்பதைக் கேட்டபின்; இருவருமங்கே - தாயும் தந்தையும்; அவனி டத்தில் ஏதுரைப்பார் - பின் வரும் வார்த்தைகளைக் கூறுவர்; பி.வே. - 'தாய் தந்தை யேதுரைப்பார்' (கை.பிரதி).

175. நின்று தவம் புரிந்து - நின்று கொண்டிருக்கும் நிலையுடன் தவத்தை மேற்கொண்டு; (உறுதியுடனிருந்து என்றும் கொள்ளலாம்); நீ சிவனைக் காண்பனென்றாய் - மகனே, நீ இறைவன் திருவடியைக் காணுவேன் என்று சொன்னாய்; பி.வே. - 'நிமலர் பாதம்' (கை.பிரதி); 'நீ பதத்தை' (ச.ம.நூ.).

176. பாதத்தை - ஈசனுடைய திருவடிகளை; தேடியே - மண்ணுக்குள் தேடிச் சென்று; மால்யரி - திருமாலான அரி; பாரை - பூலோகமான மண்ணை; உண்டிட - உண்டுகொண்டே கீழ்நோக்கிச் சென்றார்; காண்கி லரே - அவ்வாறு சென்றும் அவர் ஈசன் திருவடிகளைக் காணமுடிய வில்லை. (காண்க: வரி விளக்கம் 34-35). ஒப்பீடு:

'பன்றிவடிவெடுத்துப் பார் இடத்து மால் காணாக்
குன்றில் விளக்கொளியைக் கூடுவதும் எக்காலம்'
— பத்திரகிரியார்

வேதத்தில் வேதன் வெளியில்முடி காண்கிலனே
கொஞ்சம்நீ பாருலகில் குமாரனே பாலகனே
மிஞ்சுமருள் காண விரிந்ததவ மேதுசெய்வாய்
யென்று தந்தைகேட்க யியம்புவான் புத்திரனு[ம்]
கொன்றை யணிந்தயரன் கோலத்தி லன்புவைத்து
காலாக்கினி யுடனே காலாக்கினி யெழுப்பி
மாலாக்கி மாகசந்தி வாகாப் புனலாடி

177. வேதத்தில் வேதன் - வேதங்களுக்கெல்லாம் முதல்வனான பிரமன்; வெளியில் - அண்ட வெளியில், ஆகாயத்தில்; முடி - ஈசனின் திருச்சென்னியை; காண்கிலேனே - அன்னப் பறவை வடிவெடுத்துப் பறந்து மேல் நோக்கிச் சென்றும் எட்டிப்பிடிக்க முடியாமல் திரும்பினார்; (பிரமன், ஈசனின் சென்னியிலிருந்து விழுந்து கொண்டிருந்த தாழைமலரைக் கொண்டுவந்து இறைவன் முடியைக் கண்டதாகப் பொய்கூறி, தனக்கு உடந்தையாகத் தாழையையும் பொய்ச் சாட்சி கூற வைத்தார். இதன் காரணமாக இறைவனால் கோவிலெதுவுமில்லாது போகுமாறு பிரமன் சபிக்கப் பெற்றார். அத்துடன் தாழைமலர் சிவ பூசைக்குத் தகுதியில்லாது போகுமாறும் இறைவன் சபித்தார்).

178. கொஞ்சம் நீ பாருலகில் - பெரிய இந்தப் பூலோகத்தில் நீ மிகவும் சிறியவன்; குமாரனே பாலகனே - மகனே, பிள்ளாய்!; பா.வே. - 'கொக்கு நீ' (கை.பிரதி); 'கோதுதமிழ்(ப்) பாலகனே' (ச.ம.நூ., கை.பிரதி., மா.தவநிலை); காண்க: 'கொஞ்சம்' (1308), 'கொஞ்சம் வயது' (738, 1188), 'கொஞ்சவிதி' (1194).

179. மிஞ்சுமருள் காண - விஞ்சிநிற்கக் கூடிய சிவனின் அருளைப் பெற; விரிந்ததவம் - மிகவும் வல்லமையான தவங்கள்; ஏதுசெய்வாய் - எவ்வாறு செய்வாய்; பி.வே. - 'விழைந்த தவம்' (ச.ம.நூ.).

180. என்று தந்தை கேட்க - இவ்வாறு மிருகண்டமாமுனி கேட்கவும்; இயம்புவான் புத்திரனும் - மகனான மிருகசிங்கனும் பின்வருமாறு கூறுவான்; 'பாலகனும்' (ச.ம.நூ.); 'இயல்பாலன் ஏதுரைப்பான்' (கை.பிரதி).

181. கொன்றையணிந்த அரன் - சடையில் சரக்கொன்றை மலரைச் சூடியிருப்பவனான சிவன்; கோலத்தில் - உருவில்; அன்பு வைத்து - பக்தியுடன் பிரியம் வைத்து; காண்க: 'கொன்றை' (338, 1426, 2599), 'கொன்றைச் சடையான்' (403), 'கொன்றையணிந்த சடைக்கோமான்' (1520). ஒப்பிடுக: 'தேன் ஆடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்' — திருவாசகம், திருப்பூவல்லி.

183. காலாக்கினியுடன் - ஊழித்தீயுடன்; காலாக்கினி எழுப்பி - மூலாக்கினியைத் (உயிர்த்தீயினை - காற்றை) தோன்றச் செய்து;

செய்வேன் தவசு சிவனார் வராதிருந்தால்
கயமானும் மழுவேந்துங் கண்ணுதலே தஞ்சமென்று
சிந்தையுள் வைத்திறப்பேன் செத்தாலும் மோட்சமுண்டு
எந்தையரே மயங்கா தினிக்கவலை விட்டுவிடு[ம்]

மாலாக்கி - மயக்க மாக்கி; மாக சந்தி - மாக மாதச் சந்தியில்; வாகாப் புனலாடி - முறையுடன் நீராடி; பா.வே. -

'பத்திவிளக் கேற்றி பரஞ்சுடரை யுள்கலந்தால்
நெத்திவிளங்க ஈசர் நிறைந்த மனதுருகி
வந்து நினைத்த வரமுதவுவார் எந்தனக்கு'

— (கை.பிரதி); (இவ்வாறே ச.ம.நூ. பதிப்பாலும், மா.தவநிலையிலும் உள்ளன); ஒப்பீடு:

'தானவனே தானாக யிருந்து கொண்டு
தனிவான மூலமதின் கனலைத் தூண்டி
மோனமுட னக்கனல் கொண்டா ராதாரம்
முத்திகொண்ட நடுவரையா மேலா தாரம்

— அகத்தியர் பரிபூரணம் 1200.

184. செய்வேன் தவசு - (நான் இவ்வாறு காற்றை அடக்கிக் கனல் எழுப்பித்) தவத்தை மேற்கொள்ளுவேன்; சிவனார் வராதிருந்தால் - இறைவன் வரவில்லை என்றால்; காண்க: 'தவம் செய்தல்' (வரி 1982, 2442, 2446-7).

185. கயமானும் - இளமையான முரட்டுமானும்; மழுவும் - மழுப்படையினையும்; ஏந்தும் தம் இரு மேல்கைகளில் ஏந்தியிருக்கக் கூடிய; கண்ணுதல் - நெற்றிக்கண்ணரான சிவபெருமான்; தஞ்மென்று - 'அடைக்கலம் என்று கூறி; காண்க: மழு, மான், சூலம் ஏந்துதல் (வரி 1446); இதன் வரலாறு வருமாறு: தாருகாவனத்து முனிவர்கள் செருக்குற்ற காலத்துத் திருமால் மோகினி உருவெடுத்து அவர்களை மயக்கியும், சிவன் பைரவக் கோலத்துடன் சென்று முனிவர்களின் மனைவியரை மயக்கியும் மறைந்த போது முனிவர்கள் வேள்வியிலிருந்து பெற்ற மான், மழு இவற்றைச் சிவன் மீது செலுத்த இறைவன் மானை வலுவடக்கிக் கையில் பிடித்தும் மழுவைக் கையில் ஏந்தியும் கொண்டார்.

186. சிந்தையுள் - நினைவில்; வைத்திறப்பேன் - நிறுத்தி உயிர்துறப் பேன்; செத்தாலும் - இறைவனைத் தரிசிக்காது இறந்தாலும்; மோட்ச முண்டு - சொர்க்கம் கிடைக்கும்; காண்க: 'மோட்சம்' (வரி 494).

187. எந்தையரே - என் தந்தையே; மயங்காது - மனம் கலங்காது; இனி - இனிமேலாவது; கவலை - வருத்தம்; விட்டுவிடு[ம்] - நீக்கி விடும். பி.வே. - 'தந்தையரே' (கை.பிரதி). பா.வே. - 'நீர் மகிழ்ந்து யேவுந்தவசிக் கென்றார்' (கை.பிரதி, மா.தவநிலை); 'தவத்தில்' (ச.ம.நூ.).

மைந்தனிவை உரைக்க மாதாபிதா யிருவர்
சிந்தைமிக மகிழ்ந்து சீர்மகனை மார்பணைத்து
விண்ணு மலையும் மிகுந்தபடி எவையும்
கண்ணிலொளி யறியு[ம்] கண்ணையொளி காணாது
மெய்யனுயிர் மேலில் மிகுந்த தவநெறியும்
மெய்யினுட லுயிரை மேவி யறியாது
சித்திரத்தை யொப்பமிட்டோன் சித்திரத்தைக்
காண்பதல்லால்
சித்தரமுந் தன்னைச் சிறப்பா யறியாது
எந்தயறு சுவையு யெவர்பொசித்துக் காண்பதல்லால்
அந்தயறு சுவையை அறியுமோயச் சுவைதான்

*188-189.* மைந்தன் இவை உரைக்க - மகன் இவ்வாறு கூறவும்; மாதாபிதாயிருவர்-தாயும் தந்தையும்; சிந்தை மிக மகிழ்ந்து - மன மகிழ்ச்சியடைந்து; சீர்மகனை - அழகிய புதல்வனை; மார்பணைத்து - மார்போடு கட்டித் தழுவி.

*190-191.* விண்ணும் - பரந்து விரிந்துள்ள ஆகாயத்தையும்; மலையும் - பெரிய பெரிய மலைகளையும்; மிகுந்தபடி எவையும் - மேலுமுள்ள எல்லாப் பொருள்களையும்; கண்ணிலொளியறியும் - கண்ணிலிருந்து தோன்றும் காட்சி காணும்; கண்ணை ஒளி காணாது - (ஆனால்) அக் கண்ணை அவ் ஒளியானது காணமுடியாது; பா.வே. - 'கருணை ஒளி காணாது' (கை.பிரதி).

*192-193.* மெய்யன் உயிர் மேலில் - உண்மையான உடம்பில் உயிரானது தங்கினால்; மிகுந்த - அதிக; தவநெறியும் - தவங்கள் கிடைக்கும்; மெய்யினுடல் - உண்மையான உடம்பு; உயிரை மேவியறியாது - தன்னுடம்பில் உள்ள உயிரை அறிந்து கொள்ளாது; பி.வே. - 'மிகுந்த உயிர் அறியும்' (ச.ம.நூ.).

*195-195.* சித்திரத்தை - ஓவியத்தை; ஒப்பமிட்டோன் - தீட்டுபவன்; சித்திரத்தைக் காண்பதல்லால் - அவ்வோவியத்திலேயே தன் கற்பனையை ஓடவிடுவானே அல்லாது; சித்திரமும் - அந்த ஓவியமோ; தன்னை - தன் உருவை; சிறப்பா யறியாது - அறிந்து கொள்ளவே செய்யாது; ஒப்பிடுக: 'எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல்...' — திருக்குறள், 1285.

*196-197.* எந்த அறுசுவையும் - அறுசுவைகளான கசப்பு, இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கார்ப்பு என்பவற்றுள்; எவர் புசித்துக் காண்பதல்லால் - யாரும் சுவைத்துப் பார்த்தால் தான் அது எப்படிப்பட்டது எனத் தெரிந்து கொள்ள முடியும்; அந்த அறு சுவையை

பொங்கும் [பிணி] விளக்கும் பூவில்வளர் மூலிகைகள்
தங்கள் வினைவிதிகள் தான்தவிர்க்க மாட்டார்கள்
பொன்னுடலை[ச்] செப்பமிடும் பூவிலுருக் கெத்தினங்கள்
தன்னுடம்பை ஒப்பமிடத் தானறிய வராது
ஏட்டின் பொருளை யியல்வுடையோ[ர்] தாமறிவார்
தாட்டிமை தானறியாவவ்வேடு தன்பொருளைக் காணுமதோ
சொர்ணம் மிகத்தேடிச் சுகம்பெறுவார் பொன்னதனால்
சொ[ர்]ன்ன மதுக்கேது சுகமா மிவனாலே

அப்படியான ஆறு ருசிகள் தாங்கள் எவ்வாறுள்ளோம் என; அறியுமோ அச் சுவைதான்- எந்த ருசியும் தெரிந்து கொள்ளது; பா.வே.- 'எந்தருசி யும்', 'அந்தருசி' (ச.ம.நூ., கை.பிரதி); 'தான் அருந்தினவரைக் காணாது' (கை.பிரதி).

198-199. பொங்கும் - மிகுதியாகக் கூடிய; (பிணி) - (நோயினை); விளக்கும் - விளங்க வைக்கும் (தீரவைக்கும்); பூவில் வளர் மூலிகைகள் - மண்ணில் வளரக் கூடிய பச்சிலை மருந்துகள்; தங்கள் வினைவிதிகள் - தங்களுக்கேற்படும் தீவினைகளை; தான் தவிர்க்க மாட்டார்கள் - தாமே விலக்கிக் கொள்ள முடியாதனவாக உள்ளன; பி.வே.- 'புனித விளக்கும்' (ச.ம.நூ.); 'பிணிதவர்க்கும்' (கை.பிரதி); 'பொங்கும் பிணியைத் தவிர்க்க' (மா.தவநிலை); 'மாட் டாதே' (ச.ம.நூ.).

200-201. பொன்னுடலைச் செப்பமிடும் - பொன்போன்ற அழகிய மேனியைச் செவ்வையாக்கும்; பூவில் உருக்கெத்தினங்கள் - உலகில் உள்ள இரத்தினக் கற்கள்; (இரத்தினங்கள் < ரெத்தினங்கள் < கெத்தினங் கள்); உரு - அழகான என்றும் சொல்லலாம்; தன்னுடலை - இரத்தினத் தின் உடலழகை; ஒப்பமிட - ஒப்பனை செய்ய; தானறிய வராது - தானே தன்மதிப்பை அறிந்து கொள்வது கிடையாது; பி.வே. - 'உருக்கேத் தினங்கள்' (ச.ம.நூ., மா.தவநிலை).

202-203. ஏட்டின் பொருளை - நூல் நுவல் கருத்தை; இயல் உடையோர் - கல்வித் தகுதியுடையோரே; தாமறிவார் - அறிந்து கொள்வார்கள்; தாட்டிமை - தன் உயர்வை; தானறியா வவ்வேடு - தானே அறிந்து கொள்ளாத அந்த நூல்; தன்பொருளை - தன்னிலுள்ள கருத்தை; காணுமதோ - காணாதல்லவா? பி.வே. - 'தானறிவார்' (கை.பிரதி); 'எழுதினவர் தாம்அறிவார்' (ச.ம.நூ.); பா.வே. - 'தீட்டிமை' (ச.ம.நூ.); பா.வே. - 'தான் யறியார்' (மா.தவநிலை).

204-206. சொர்ணம் - தங்கம்; மிகத்தேடி - அதிகமாகத் தேடி; சுகம்பெறுவார் பொன்னதனால் - தங்கத்தால் மிகுந்த செல்வச் சுகத்தை

எறும்புகடை யானை எடுத்த சுருபமெல்லாம்
அரும்பொருளைத் தேடி அலையிதுகாண் காணாமல்
மூவர்களுந் தேவர் முதலுமிகு விண்ணிறைந்தோர்
யாவர்களுங் காணா தரும்பொருளைக் காணுதற்கு
மாகமிகு தானம் வழங்கும் பெருமைதவம்
பாகமிகு தானம் பார்பதியு[ம்] வேணியனும்

அடைவார்கள்; சொ[ர்]ன்னம் < சொர்ணம் - தங்கம்; அதுக்கேது - அதற்கென ஒன்றுமில்லை; சுகமாம் - இன்பமாம்; இவனாலே - சொர்ணம் தேடியவனாலே; பா.வே. - 'அகமெலாம் பொன்னதனால்'; 'சொர்ணத்துக்கே துக்கமாம்' (ச.ம.நூ.); பி.வே. - 'சுகம் பெறலாம் பொன்னாலே' (மா.தவநிலை).

206-207. எறும்பு - ஊர்வனவான எறும்பினங்கள் முதலாக; கடை - இறுதியாக; யானை - பெரிய யானை வரை; எடுத்த - உருவெடுத்த; சுருபம் < சொரூபம் - (பார்க்க:வரி 122); எல்லாம் - எல்லா உயிரினங்களும்; அரும் பொருளைத் தேடி - அரிய பரம்பொருளான மூலவனைத் தேடி அலைந்து; அலையிதுகாண் காணாமல் - காணாது திரிகின்றதைக் காண்பாயாக; பா.வே. - 'திறம் பொருளை(த்) தேடி திகைக்குது காண்' (கை.பிரதி); ஒப்பிடுக: 'யானை முதலா எறும்பீறாய்' — திருவாசகம், போற்றித் திரு அகவல். காண்க: 'அரும்பொருள்' (வரி 209, 1481).

208. மூவர்களும் - மும்மூர்த்திகளும்; தேவர் முதலுமிகு விண்ணிறைந்தோர் - தேவாதி தேவர்கள் முதல் மிகுதியான வானவர்களும்; பி.வே. - 'தேவர் முதல்வர்களும்' (ச.ம.நூ.); 'முத்தும் மிக விண்ணிறைந் தோர் (மா.தவநிலை).

209. யாவர்களும் - அறிவு படைத்த மனிதர்களும் அசுரர்களும்; காணாத - தேடிக் கண்டுபிடிக்க முடியாத; அரும் பொருளை - அரிய பொருளாம் பரம்பொருளை; காணுதற்கு - கண்டு கொள்வதற்கு; பி.வே. - 'ஆவர்களும்' (ச.ம.நூ).

210. மாக < மாகம் - மாசி மாதம் (சிவராத்திரியன்று); மிகு தானம் - பெருமைக்குரிய மிகுதியாகச் செய்யக் கூடிய தருமமும்; வழங்கும் பெருமை தவம் - சிவராத்திரியன்று செய்யக் கூடிய உயர்வான பூசைகளும், நோன்புகளும்; பி.வே. - 'மகாபுனல்தானம்' (ச.ம.நூ.); 'மாசிதிங்கள் தானம்' (கை.பிரதி, மா.தவநிலை); காண்க: 'மாகபுனல்' (வரி 277, 328), 'மாகபுனல் தவம்' (540), 'மாக புனலாடல்' (280, 507, 544, 550).

211. பாகமிகு தானம் பார்பதியும் வேணியனும் - மகாசிவராத்திரியின் போது நேரிடக் கூடிய திரயோதசி பாகம் சிவபெருமானுக்கு உடம்பாகவும், சதிர்த்தசி பாகம் பார்பதியாகவும் உள்ளன. ஆதலால் இத்தினத்து இரவன்று செய்யக் கூடிய பூசைகளும், தவங்களும், தானங்க

வாசிமிகு தானம் வளமையுட னாடினவர்
நேசத்தில் நின்று நிறைந்ததவங் கொடுப்பார்
இத்தவசில் மீறு மியற்தவசு யான்காணோம்
215 இத்தவசின் தன்வலுமை யானுரைப்பேன் கேளுமைந்தா

**சிவராத்திரி ஏற்பட்ட முறை**

சித்தமகிழ் தேவர்சிறந்த ரிசியோ[ர்] பாலர்
மெத்தமகிழ் மூவுலகோர் மீறு மரிவேதன்

ளும் இம்மையிலும் மறுமையிலும் பலன் தரக்கூடியவை; பா.வே. - 'பாசியணி பார்வதியும் பாம்பணியும் யீஸ்பரனும்' (மா.தவநிலை); 'பாகநிறை பார்பதியும் பாம்பணிந்தோன் மாலயனும்' (கை.பிரதி); பி.வே. - 'பாம்பு அணிவேணியனும்' (ச.ம.நூ.).

212. வாசி மிகு - வாசம் மிகுந்த; தானம் < ஸ்நானம்; குளியல்; வளமையுடனாடினவர் - நன்றாகப் புனலாடினவர்கள்; (மாசித் திங்கள் மகம் நட்சத்திரத்தன்று ஆற்றிலும், கடலிலும், மக்கள் நீராடி நோன்பு களை மேற்கொள்வர்).

213. நேசத்தில் நின்று - (அவ்வாறு செய்தவர்களின் உள்ளத்தில்) அன்புடன் நிறைந்து; நிறைந்த தவங்கொடுப்பார் - மிகுதியான அருளை வழங்குவார்; பி.வே. - 'வரங் கொடுப்பார்' (கை.பிரதி).

214. இத்தவசில் மீறும் - மேற்சொன்ன, தானம், பூசை, புனலாடல் போன்றவற்றை விஞ்சி நிற்கும்; இயற்தவசு - வேறுவகைத் தவங்கள்; யான் காணோம்; காணமுடியாது; பி.வே. - 'இந்த தவசை மீறயினி தவசியாங்கள் காணோம் நல் மகனே' (மா.தவநிலை).

215. இத்தவசின் - மேற்சொன்ன நோன்பின்; வலுமை > வலிமை - வலுவை; யானுரைப்பபேன் - நான் உரைக்க; கேளுமைந்தா - மகனே நீ கேட்பாயாக; பி.வே. - 'இந்த தவசின்றன் மகிமை' (கை.பிரதி); பா.வே. - 'வாழ்வைத்தான்' (ச.ம.நூ).

216. சித்தமகிழ்தேவர் - மனம் மகிழக்கூடிய தேவாதி தேவர்கள் எல்லோரும்; சிறந்த ரிசியோர் - தவத்தில் சிறந்த முனிவர்களும்; பாலர் - எண் திசைகளிலுமுள்ள இந்திரன், அக்கினி போன்றோர்களும்.

217. மெத்த மகிழ் - முழுதும் சிறந்திருக்கக் கூடிய; மூவுலகோர் - பூலோகத்தார், பாதாளலோகத்தார், சொர்க்கலோகத்தாரானவர்களும்; மீறும் - இவர்களுக்கும் மேலான; அரி - திருமால்; வேதன் - பிரமன்;

218. எல்லோர்களும் திரண்டு - கடவுளர்களும், தேவர்களும், முனிவர்களும், மக்களும், அசுரர்களுமான அனைவரும் ஓரிடத்தில் கூட்டமாய் வந்து; யேகமாய்த்தான்கூடி - மிகுதியாகச் சேர்ந்து நின்று.

எல்லோர்களுந் திரண்டு யேகமாய்த்தான் கூடி
வல்லபுகழ் மந்திரகிரி மற்றாய்க் கடலிலிட்டு
சந்திரனு மேற்(க்)குவடு தாங்க யடியாமையைப்போல்
தந்திரஞ்சீர் மாலவனார் தாங்கக் கடலில்நின்று
வாசுகியின் பாம்பை வடமாய் வளமாக்கி
நேசமுடன் யாவர்களும் நீண்டகயத் தோர்பிறத்தில்
வாலியொரு பிறத்தில் வாருகடல் கடைந்தார்
கோலியவர் கடையக் கோவித் தரனாரும்

*219. வல்ல புகழ் - வலிமையும் புகழும் வாய்ந்த; மந்தரகிரி - மந்திரமலை அல்லது மேருமலை; மற்றாய் < மத்து ஆய் - கடைகோலாய்; கடலிலிட்டு - பாற்கடலில் நாட்டி; பா.வே. - 'வல்லபில' (ச.ம.நூ.); 'வல்லபிலயிந்திரகிரி' (மா. தவ நிலை).*

*220. சந்திரனும் - நிலவும்; மேற்(க்)குவடு தாங்க - மத்து ஆகிய மந்திரமலையைத் தாங்க உச்சியாகவும்; அடி - மத்தின் அடிப்பகுதி விலகிவிடாதபடி தாங்கிக்கொள்வதற்கு; ஆமையைப் போல் - கூர்மத்தைப் போல்; பா.வே. - 'இந்திரனும்' (கை.பிரதி); 'மேல்மடு' (ச.ம.நூ.);*

*221. தந்திரஞ்சீர் - தந்திரங்களில் தேர்ந்த; மாலவனார் - திருமால்; தாங்கக் கடலில் நின்று - மலைக்குக்கீழ் பாற்கடலுக்குள் நின்று கொண்டு தம் முதுகில் தாங்கிக் கொள்ள; பி.வே. - 'தந்திரஞ்சேர்' (ச.ம.நூ., கை. பிரதி); 'மாயவனார்' (கை.பிரதி). காண்க: 'தந்திரம் சீர் பாலன்' (வரி 2592).*

*222. வாசுகியின் பாம்பை - ஆதிசேடனின் சகோதரனான பாம்பாகிய இவனை; வடமாய் - மத்தை கடை கயிறு ஆக வளமாக்கி - இரு பக்கமும் நீளுமாறு ஆக்கி; பா.வே. - 'வடமாகவேயிணக்கி' (மா.தவநிலை); 'வடமாகவேயிசைத்து' (கை.பிரதி).*

*223. நேசமுடன் - ஒற்றுமையுடன்; யாவர்களும் - முன்பு சொன்ன தேவாதிகள் எல்லோரும்; நீண்ட கயத்தோர் பிறத்தில் - நீளமான ஒரு புறத்துக் கயிற்றைப் பற்றிக் கொண்டும்; (கயத்தோர் < கயிற்றை ஓர்); (பிறத்தில் < புறத்தில்; காண்க: வரி). பி.வே. - 'நீண்டகயிரேர் புரத்தில்' (கை.பிரதி); 'கயர்' (மா.தவநிலை).*

*224. வாலி - கிட்கிந்தை நாட்டு அரசனும் குரங்கினத் தலைவனுமான மகா பலசாலியான வாலி என்பவனும்; ஒரு பிறத்தில் - கயிற்றின் மற்றொரு நுனியில்; வாரு கடல் - திரளாக நீருள்ள பாற்கடலை; கடைந்தார் - முன்னும் பின்னும் இழுத்துக் கடைந்தார்கள்; பா.வே. - 'வாலி சுக்கிரீவர் வடம் பூட்டியோர் புரத்தில்' (மா. தவநிலை, கை.பிரதி).*

*225. கோலி - அசைத்து; அவர் கடைய - அவர்கள் அவ்வாறு கடையவும்; கோவித்து அரனாரும் - சிவபெருமானும் சினந்து;*

எந்தன்தனை நினையா தின்னாளி(ல்) லேயிவர்கள்
அந்தயமுற்தங் கடைந்து யடுக்கு முன்னே
நஞ்சிலவர் மாண்டுவிட நஞ்சை விடுவோமெனவே
அஞ்செழுத்து யீசுபரனா ரப்போவிசம் விடுத்தார்
அன்னேரம் நஞ்சு அலைகடலில் கோடிகடல்
இன்னேரம் வந்தனென எங்குமது முழங்க
கொப்பிளித்துப் பொங்கிக் குமுறிய வர்களை[ச்]
செப்பமிகு நஞ்சு சினந்து முறுகியதே

226. எந்தன்தனை நினையாது - பாற்கடல் கடையுமுன் தன்னை நினைத்து வணங்காது; இன்னாளிலே இவர்கள் - இந்த நாளில் தேவாதிகள் எல்லோரும்.

227. அந்தயமுற்தம் - சாவாமருந்தான அந்த அமுதை (அமுற்தம் < அமிர்தம் - அமுதம் - அமிழ்தம்); கடைந்து அடுக்குமுன்னே - கடைந்தபின் திரண்டு வரும் அமுதை நெருங்குவதன் முன்.

228. நஞ்சிலவர் மாண்டுவிட - ஆலகால நஞ்சின் வெம்மையால் மடிந்து போகும்படி; நஞ்சை - விடத்தை; விடுவோ மெனவே - பாற்கடலில் விட்டு விடுவோம் என்று நினைத்து; (நஞ்சினைப் பாம்பு கக்கியது என்றும் கொள்ளலாம்).

229. அஞ்செழுத்து - நமசிவாய எனும் ஐந்தெழுத்து மந்திரத்துக் குரிய; ஈசுபரனார் - இறைவன்; அப்போ - அந்நேரத்தில்; விசம் - நஞ்சை; விடுத்தார் - விட்டார்; பார்க்க: 'அஞ்செழுத்து' - (வரி 282, 319, 759), 'அஞ்செழுத்தீசுரனார்' (1309, 1540).

230. அன்னேரம் - அந்த நேரத்தில்; நஞ்சு - விடம்; அலைகடலில் - திரைஎழும்பும் பாற்கடலைவிட; கோடி - நூறுலட்சம்; கடல் - சமுத்திர அளவு இருந்தது. பா.வே. - 'மின்னேர் கடலில் விளைந்து நஞ்சு ஓடிகடல்' (ச.ம.நூ.); 'மீந்த நஞ்சு' (கை.பிரதி).

231. இன்னேரம் வந்தனென - அமுதம் திரண்டுவரும் உச்சகட்டத்தில் 'வந்தேன்' என்று; எங்குமது முழங்க - எல்லாவிடமும் கேட்குமாறு அது ஓலமிட; பி.வே. - 'வந்ததென்ன' (மா.தவநிலை, கை.பிரதி).

232. கொப்பிளித்து < கொப்புளித்து; பொங்கி - அதிகமாகி உயர்ந்து; குமுறி - முழங்கி; அவர்களை - கடைவோர்களை; பி.வே. - 'குமரி அமரர்களை' (ச.ம.நூ.); 'அமரர்களை' (மா.தவநிலை, கை.பிரதி).

233. செப்பமிகு நஞ்சு - திரண்ட செம்மை நிறைந்த விடம்; சினந்து - கோபித்து; முறுகியதே - வெப்பமிகுதியால் காந்தியது: பா.வே. - 'செப்பமுடன் நஞ்சு சிறந்து விரட்டியதே' (ச.ம.நூ.), 'முடுக்கியதே' (மா.தவநிலை); 'முடுகியது' (கை.பிரதி).

அந்த நிமிச மனைவோர்களும் பயந்து
சிந்தை கலங்கித் திகைத்துப் பரதவித்து
ஆதியே யீசா யரனே பராபரனே
நீதியே சோதி நிறைந்த யருள்விளக்கே
யிந்த யிடரி லெவரும் பிழைக்கரிது
கந்தனுட தந்தையரே காத்தருளீர் தஞ்சமென்று
தேவரொடு மங்கையர்கள் சேர மயங்கியதால்
அவர்கள் மயங்குவதைப் பாகனுமனதிரங்கி
யஞ்சலென்றார்

234. அந்த நிமிசம் - அக்கணத்தில்; அனைவோர்களும் - அமுது கடைந்த அத்தனைபேர்களும்; பயந்து - நடுங்கி; பா.வே. - 'அந்தரத்தோர் திக்கோர் அனைவரும் பயந்து' (ச.ம.நூ.); 'அந்த கடிகை தனில்' (கை.பிரதி).

235. சிந்தை கலங்கி - உள்ளம் பேதலித்து; திகைத்து - செய்வதறியாது நின்று; பரதவித்து < பரிதபித்து - இரங்கத் தக்க நிலை அடைந்து; பி.வே. - 'பரிதவித்து' (ச.ம.நூ.).

236-237. ஆதியே - எல்லாவற்றுக்கும் முதலானவனே; ஈசா - ஈசனே அரனே - சிவனே; பராபரனே - (வரி விளக்கம்: 118); நீதியே - உண்மையானவனே; சோதி நிறைந்த - ஒளி பெருகிய; அருள் விளக்கே - கருணையின் தீப விளக்கே (என இறைவனின் பெயர்கள் கூறி துதித்தனர்); பி.வே. - 'சோதி அரனே' (ச.ம.நூ.).

238. இந்த இடரில் - விடம் பொங்கிய இத் துன்ப வேளையில்; எவரும் - ஒருவராவது; பிழைக்கரிது - உயிர்வாழ்வது முடியாது;

239. கந்தனுட < கந்தனுடைய - முருகனின்; தந்தையரே - பிதாவே; காத்தருளீர் தஞ்சமென்று - 'நீரே அடைக்கலம்', ஆகவே எங்களைக் காப்பாற்ற அருள் புரியும் என்று துதித்து; பி.வே. - 'சரணம்' (ச.ம.நூ.); 'கந்தனையா தந்தையரே' (மா.தவநிலை).

பார்க்க: 'கந்தன் ஐயா' (1286), 'கந்தன்தந்தை' (1205), 'கந்தனார் தந்தை' (245, 585).

240. தேவரோடு மங்கையர்கள் - வானுலகத்தினருடன் அவர்கள் பெண்களும்; சேர - சேர்ந்து; மயங்கியதால் - விடத்தால் சோர்ந்ததால்; பி.வே. - 'தேவர்களும் மங்கையரும்' (ச.ம.நூ., கை.பிரதி); 'தேவர்களும் மற்றும் யாவர்களும்' (மா.தவநிலை).

241. அவர்கள் மயங்குவதை - அவ்வாறு தேவர்களும் பெண்களும் சோருதலை; பாகனும் - உமையை ஒரு பாகத்தில் கொண்டிருப்பவனான சிவனும்; மனதிரங்கி - பெண்களுக்காக இரக்கப்பட்டு; அஞ்சலென்றார் பயப்படவேண்டாம் என்று கூறினார்; பா.வே. - 'யாவருள்ளும்

விண்ணுமண்ணு மோங்கி மிகுத்த விடந்தனிலே
மண்ணுவிண்ணிறங்கி வானவர்[க்]காக வந்துநின்றார்
வந்தவரை நோக்கி வணங்கு மிடமதனை
245 கந்தர்தந்தை கண்டுக் கடுகியது சீறில்
எங்குந் தூளா(ர்)க்குமென்று மெவர்க்குந் தரிக்கரிது
பொங்கமுட னுண்ணவென்று புண்ணியனு
மோரணுவாய்

இருந்தோன் அன்றிரங்கி' (ச.ம.நூ.); 'அருளில்மிகுந்தோன் அன்றிரங்கி' (கை.பிரதி); 'யாவர்க்கும் மேலோன்' (மா.தவநிலை).

242. விண்ணுமண்ணுமோங்கி - வானிலும் பூமியிலும் பொங்கி வழிந்து நிரம்பிய; மிகுத்த - மிகுதியான; விடந்தனிலே - நஞ்சினால்; பா.வே. - 'மிகுந்த விஷத்தின் முன்னே' (கை.பிரதி); காண்க: 'விண்ணும் மண்ணும்' (675, 1566, 1872).

243. மண்ணு விண்ணும் - பூலோகமும் வானுலகமும்; இறங்கி - நீண்டு; வானவர்[க்]காக - தேவர்களுக்காக; வந்துநின்றார் - அமுதம் கடைகின்ற இடத்தில் வந்து தோன்றினார்: பா.வே - 'மண்ணும் விண்ணும் ஓங்கி அரன் வாகாக வந்து நின்றான்' (ச.ம.நூ.); 'யரன் வீரராக வந்து நின்றார்' (மா.தவநிலை); 'அரசன் விரைவாக வந்து நின்றார்' (கை.பிரதி).

244. வந்தவரை நோக்கி - அவ்வாறு தோன்றிய இறைவனைப் பார்த்து; வணங்கும் - கும்பிடும்; விடமதனை - நஞ்சை; பா.வே. -'வணங்கு விடங்குமர' (ச.ம.நூ.); 'வந்த யரனாரை நோக்கி வலுவிசமும் மீறியதே' (மா.தவநிலை); 'விஷம் குமற' (கை.பிரதி).

245. கந்தர்தந்தை - முருகனின் தந்தையான சிவன்; கண்டு - பார்த்து; கடுகி - விரைந்து; அது சீறில் - அந்த நஞ்சானது சீறிப் பாய்ந்தால்; பா.வே. - 'கந்தன் அய்யன் கண்டு கடுகடுத்து தானுஞ்சீறி, 'கந்தனையா கண்டு கடுவிஷம் தான் சீற' (கை.பிரதி).

246. எங்கும் - எல்லா இடத்திலும்; தூளா(ர்)க்குமென்று - எரித்துப் பொடியாக்கும் என எண்ணி; எவர்க்கும் - ஒருவர்க்காவது; தரிக்கரிது - அதைத் தாங்கிக் கொள்ளும் சக்தி இல்லை என்று நினைத்து; பா.வே. - 'தூளாக்கி எவரும் பிழைக்கரிதாய்' (ச.ம.நூ.); 'யேவர்களாலும் தரிக்காது'. (மா.தவநிலை); பி.வே. - 'எவரும்' (கை.பிரதி); பார்க்க; 'தூள்' (வரி 624).

247. பொங்கமுடன் - இன்பமுடன்; உண்ணவென்று - அருந்துவதற்கு நினைத்து; புண்ணியனும் - தூய்மையும் தரும சிந்தையுடையவனுமான இறைவன்; ஓரணுவாய் - ஓர் அணு அளவு கூட; பி.வே. -

பக்கம் பிசுங்காமல்(ப்) பாங்காய்க் கரமேந்தி
அக்கை யணியு மரனாரு முண்டுவிட்டார்
அந்த நிமிச(ம்) மரனார் மயக்கமுற
கந்தமிகு பார்பதியாள் கண்டத்தமத்தி விட்டாள்
அன்னா ளிலேதான் அரனுக்குஞ் சோபமென
கன்ன லுமையுங் கருணைநெடு மால்வேதன்
கலைமகளும் லச்சிமியுல காச்சிதெய்வ மங்கையரும்

'புண்ணியருமே அணுகி (ச.ம.நூ.); 'புண்ணியருமோர் மனதாய்' (மா.தவ நிலை); 'புண்ணியருமே நினைத்தார்' (கை.பிரதி); பார்க்க: வரி 47.

248. பக்கம் பிசுங்காமல் - விடத்தின் ஓரங்கள் நசுங்காமல்; பாங்காய் - கவனமுடன்; கரமேந்தி - தனது விரிந்த உள்ளங்கையில் எடுத்து; பா.வே. - 'அசங்காது எவையும்' (ச.ம.நூ.); 'கையில்லேந்தி' (மா.தவ நிலை); 'பக்கம் சிதராமல்' (கை.பிரதி).

249. அக்கை - எலும்பை; அணியும் - ஆபரணமாக அணிந்து கொள்ளும்; அரனும் - சிவனும்; உண்டுவிட்டார் - வாயில் போட்டுக்கொண்டார்; பி.வே. - 'அக்க மணியும்' (கை.பிரதி).

250. அந்த நிமிசம் - விடத்தை உண்டகணத்தில்; அரனார் - சிவன்; மயக்கமுற - விடக் கொடுமையால் நினைவிழக்க; பா.வே. - 'அந்த விசத்தை யரனுடலிலேயேறாமல்' (மா.தவநிலை, கை.பிரதி).

251. கந்தமிகு - ஒளி நிறைந்த (பார்க்க. வரி 147); பார்பதியாள் < பார்வதியாள் - உமை; கண்டத்து - கழுத்தில், தொண்டையில்; அமத்தி விட்டாள் < அமர்த்தி - நிறுத்திவிட்டாள்; பி.வே. - 'கந்தம் நிறை' (ச.ம.நூ., கை.பிரதி); 'கந்தம்நிறைந்த' (மா.தவநிலை);

252. அன்னாளிலேதான் - அரன் விடமுண்ட அந்த நாள்தான்; அரனுக்குஞ் சோபம் என - சிவனுக்குரிய - சோபன நாள் - நல் முகூர்த்த நாள் என்று; பா.வே. - 'அன்னாள் எவரும் அரனார்க்குக் கோபம் என்று' (ச.ம.நூ.); - 'அன்னாள் அனைவோரும்' (கை.பிரதி).

253. கன்னலுமையும் - இனிய பார்வதியும்; கருணை நெடுமால் வேதன் - அருள் நிறைந்த நெடிய திருமாலும் பிரமனும்; பா.வே. - 'முன்னாள் உமையவளும் முளரி அயன் மால் தேவன்' (ச.ம.நூ.); காண்க; 'கன்னல் (671, 713, 753, 1422, 2629), 'கன்னல் மொழி' (489).

254. கலைமகளும் - சரசுவதியும்; லச்சிமி < இலக்குமி - திருமகளும்; உலகாட்சி - உலகை ஆட்சி செய்யும் அம்மையும்; தெய்வமங்கையரும் - இவர்களைப்போன்ற தெய்வப் பெண்டிரும் பா.வே. - 'கலைமகள் லட்சுமியும் காட்சி தெய்வ அரம்பையரும்' (ச.ம.நூ.); 'காச்சி தெய் வானை மங்கையரும்' (மா.தவநிலை); 'காஞ்சி தெய்வ' (கை.பிரதி).

எல்லாருந் திரண்டு யேகமொரு பொருளை
சங்கரனாற் காத்திருந் தாரன்று சிவன்ராத்திரியாம்
கந்தமிகு கோபங் கருணையுட னீங்கியபின்
இச்சையரன் சியலால் மீண்டுயமுற்தங் கடைந்தார்

255. எல்லாரும் திரண்டு - (வரி 218); யேகமொரு பொருளை - ஒப்பற்ற தனிமுதற் பரம்பொருளை; பி.வே. - 'எல்லோர்களும்' (மா.தவ நிலை).

256. சங்கரனால் காத்திருந்தார் - சிவபெருமானுக்காக இரவுமுழுவதும் துதித்திருந்தனர்; அன்று - அன்றைய நாளே; சிவன்ராத்திரியாம் - சிவனுக்குரிய இரவாகிய சிவராத்திரி ஆகும். பா.வே. - 'எல்லோருங் காத்திருந்தார்' (ச.ம.நூ.); 'அல்லோரும் காத்திருந்தார்' (மா.தவநிலை, கை.பிரதி).

257. கந்தமிகு கோபம் - வேகமிக்க விடத்தின் சினம்; கருணையுடன் - இரக்கத்துடன்; நீங்கிய பின் - விலகியபின்பு; பா.வே. - 'கந்தன்னையா சோபம் கருணையுடன்' (மா.தவநிலை, கை.பிரதி).

258. இச்சையரன் - விருப்பமுள்ள சிவன்; சியலால் < செயலால் - உதவியால்; மீண்டும் - மறுபடியும்; அமுற்தங் கடைந்தார் - அமுதுக்காகக் கடைந்தனர்; பா.வே. - 'விந்தை நிறை மூவர்களும்' (மா.தவநிலை, கை.பிரதி).

**ஒப்பீடு: பாகவதத்தில் அமுதம் கடைந்த செய்திகளும், சிவராத்திரி தோன்றிய செய்தி வேறு பல நூல்களிலும் வந்துள்ளன.**

மத்து மந்தரம் வாசுகி கடைகயிறு அடைதூண்
மெத்து சந்திரன் சுராசுரர் வேறு வேறு உள்ள
கொத்து இரண்டு பால்வலிப்பவர் ஒடதி கொடுத்து
கத்து வாரிதி மறுகுற அமிழ்து எழக் கடைமின்

யாமும் அவ்வயின் வருதும் நீர்கதுமென எழுந்து
போமின் என்று அருள்புரிதலும்....

மலை பிடுங்கினர் வாசுகி பிணித்தனர் மதியை
நிலை பெறும்படி நட்டனர் ஓடதி நிறைத்தார்
அலை பெறும்படி பயோததி கடைந்தனர் அவனி
நிலை தளர்ந்திட அனந்தனும் கீழுற நெளித்தான்

திறல்கொள் ஆமையாய் முதுகினில் மந்தரம் திரிய
விறல்கொள் ஆயிரம் தடக்கைகள் பரப்பி மீவலிப்ப

[பொங்குநிறை] அமுற்தம் புனிதமாய் வந்ததுவே
260 தங்கு அமுற்தசுகந் தானவர்க ளின்பமுற்றார்

மறன்நிலாம் முனிவெகுளியால் மறைந்தன வரவே
அறன்இலா மனத்து அடைகிலா நெடுந்தகை அமைத்தான்.
—**கம்பராமாயணம்**, மிகைப்பாடல்கள்

அந்தரத்தில் தேவர்களு மாதிநாரா யணனும்
மந்திரகிரியை மத்தாக்கி வாசுகியை ஞாணாக்கி
சந்திரனைத் தூணாக்கிச் சமுத்திரத்தைத் தாளியதாய்
இந்திரரும் வானவரு மிருள்சி முனிவர்களும்
அமுர்தங் கடைந்தா ரலைகடலி லெல்லோரும்
—**வலங்கைமாலை**

அமுதம் பெறுவதற்காகப் பாற்கடலைக் கடைவதும், இந்திரனின் செல்வமெல்லாம் சிலமுறை கடலில் விழுந்து விட்டதால் கடலைக் கடைவதும், அதனால் செல்வங்களும் வேறுசில பொருள்களும் தோன்று வதும் பல புராணங்களிலும், நாட்டுப்புறக் கதைப்பாடல்களிலும் கூறப்ப டும் செய்திகளாகும். நஞ்சு தங்களைப் பிடிக்காதிருக்க இறைவனைத் தேவர்களும் பிறரும் வழிபட்ட காலமே சிவராத்திரி எனும் வழக்கம் அமுதிற்காகப் பாற்கடலைக் கடைந்ததுடன் மேலே பாடப்பட்டுள்ளது.

சிவராத்திரி ஏற்பட்ட வரலாறுகள் வேறுபலவும் உள. அவை: 1. பிரம விஷ்ணுக்கள் பொருட்டுச் சிவபெருமான் இலிங்க உருவில் காட்சி தந்த போது தேவர்கள் வழிபட்ட காலமே சிவராத்திரி என்றும், 2. ஒரு பிரகற்பத்தில் சக்தி நாற்சாமத்திலும் சிவபூசை செய்து பூசித்தகாலத்தைச் சிவராத்திரி நாளாக்குமாறு சிவனிடம் வரம்பெற்றாள் என்றும், 3. சக்தி, சிவனின் கண்களை மூட, உலகம் இருளடைய, தேவர்கள் சிவனைத் தேடி வழிபட்ட இரவு என்றும் புராணங்கள் குறிப்பிடுகின்றன (**அபிதான சிந்தாமணி** பக்.665). (மேலும், பார்க்க: முன்னுரை)

259. [பொங்குநிறை] - பொலிவு நிறைந்த; அமுற்தம் - அமுது; புனிதமாய் - தூய்மையாய், வெண்மையாய்; வந்ததுவே - திரண்டு வந்தது; பா.வே. - 'பொங்கிநிறை பாற்கடலில் பூரணமாய்' (ச.ம.நூ.); பி.வே. - 'பொங்குநிறை' (கை.பிரதி); 'பொங்குகின்ற பால்கடலில்' (மா.தவநிலை); காண்க: 'பொங்குநிறை செல்வம்' (வரி 2673).

260. தங்கு - உள்ளே பருகியதால் தங்கியுள்ள; அமுற்தசுகம் - அமுதத்தின் இனிமையில்; தானவர்கள் - வானுலகோர்; இன்பமுற்றார் - மகிழ்ச்சியடைந்தனர்; பா.வே. - 'தங்கு புகழ் பாற்குடத்தை(த்) தானவர்கள் தாங்கு முன்னே (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); பார்க்க: 'தானவர்' (2366).

## மாசி மாதம் புனலாடல்

அப்போ தரனார் யவர்கள் முகம்நோக்கி
செப்பமுடன் மாதஞ் சிறந்ததிங்கள் முப்பதுனாள்
எல்லோர்களும் யாமும் யேந்திளைமார் பார்பதியும்
அல்லாம் நனைந்ததினா லாரேனு மாகமதில்
265. பொங்குகதிர் மீறும் புனிதனொரு னாழிகையில்
தங்குகரை வழுகித் தானரிய தண்ணீரில்
வீழ்ந்து நனைந்தவர்க்கு மேலோரே நீர்கடைந்து
சூழ்ந்த யமுறத்தசுகஞ் சொ[ர்]க்கமவர்க் களிப்போம்

261. அப்போது - அந்த வேளையில்; அரனார்; அவர்கள் முகம் நோக்கி - வானவர்களைப் பார்த்து; காண்க: 'முகம்பார்த்தல்' (வரி 1786).

262. செப்பமுடன் - செவ்வை அல்லது செம்மையுடன், முறையுட ன்; மாதஞ்சிறந்த திங்கள் - மாதங்களில் சிறந்த மாதமான மாசி மாதத்தின்; முப்பதுனாள் - முப்பது நாளும்; பா.வே. - 'சிந்தையுடன் முப்பதுநாள் சீர் பெருகும் பாற்கடலில்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி).

263. எல்லோர்களும் - கடவுளரும், தேவரும், முனிவரும், அசுரர்களும், மனிதர்களும்; யாமும் யேந்திளைமார் பார்பதியும் - சிவனும் பார்வதியும்; பா.வே. - 'மேலோர்களும்' (மா.தவநிலை); பார்க்க:'ஏந்திளை' (வரி 488).

264. அல்லாம் - எல்லோரும்; நனைந்ததினால் - கடல் நீரால் ஈரப்பட்டதால்; ஆரேனும் - யாராவது; மாகமதில் - மாக மாதத்தில்; பி.வே. - 'மாக அதில்' (ச.ம.நூ.); பா.வே. -'மாமதியில்' (மா.தவநிலை); பார்க்க:'அல்லாம்' (வரி 1277); 'மாகம்' (வரி 281).

265. பொங்குகதிர் - பொலிவுடைய உதயசூரியன்; மீறும் < வீறும் - பெருமையான, பிரகாசமான; புனிதனொருனாழிகையில் - தெளிந்த காலை ஒரு நாழிகை நேரத்தில்; பா.வே. - 'சேரும் புனிதமொரு நாளில்' (ச.ம.நூ.); 'வருமுன்னே' (கை.பிரதி); 'மீறும் புனிதவொரு நாளையிலே' (மா.தவநிலை).

266. தங்குகரை - உறுதியான ஆற்றங்கரையிலிருந்து; வழுகி - தண்ணீரில் இறங்கி; தானரிய தண்ணீரில் - அருமையான குளிர் புதுப்புனலில்;

267. வீழ்ந்து - முங்கிக் குளித்து; நனைந்தவர்க்கு - புனலாடியவர்களுக்கு; மேலோரே - மேன்மையான வானவர்களே; நீர்கடைந்து - நீங்கள் பாற்கடலைக் கடைந்து; பா.வே. - 'நாமளிப்போம்' (கை.பிரதி).

268. சூழ்ந்த - தேடிய; அமுறத்த - அமுதின்; சுகம்சொ[ர்]க்கமவர்க்களிப்போம் - இன்பமான சொர்க்கத்தை அவர்களுக்குக் கொடுப்போம்; பார்க்க: 'சொர்க்கம்' - 616, 2488, 2511, 2686.

அந்தப்படி மீறு மானவலு மாகபுனல்
சிந்தையறிந் தொருனாள்(ச்) சிறந்தநதி யாடிநின்றால்
அங்கவர்கள் மீறு மதியதவம் நீரறியீர்
பொங்கு மிகுந்த புனிதசிவன் ராத்திரியில்
விந்தையுடன் முழித்தோர் மீறும் புகழ்தவசி
எந்தனால் சொல்லரிது யென்றுரைத்தா ரீசுபரரும்
அந்த வுரைகேட் டமரர்மா முனிவர்களும்
சிந்தை மகிழ்ந்தார் சிறந்தவ மீதெனவே

269. அந்தப்படி - அவ்வாறு; மீறும்மான - பெருமையான; (மீறு < வீறு); வலுமாகபுனல் - வலிமைமிக்க மாசிமாதப் புனலாட்டினை; பார்க்க:'மாக புனல் (வரி 277, 280, 328, 507, 514, 540, 544, 550).

270. சிந்தையறிந்து - உண்மையை உணர்ந்து; ஒருநாள்; சிறந்த நதியாடி நின்றால் - சிறப்புமிக்க ஆற்றில் நீராடினால், புனலாடினால்; பா.வே. -'ஒருநாள் மூழ்கி' (ச.ம.நூ.); பி.வே. - 'முழுகி' (மா.தவநிலை).

271. அங்கவர்கள் - மாசிமாதம் புனலாடுபவர்கள்; மீறும் < வீறும். (வரி 269); அதிய < அதிக - மிகுந்த; தவம் - நோன்பு; நீரறியீர் - தேவர்களாகிய நீங்கள் அறியமாட்டீர்கள்; பா.வே. - 'அங்கவர்கள் மேலும் அனேகதவம் பெற்றிடுவார்; 'மீறுயனேக தவம்' (மா.தவநிலை); 'அவர்கள் பெரும்பயன்' (கை.பிரதி).

272. பொங்கு மிகுந்த - பொலிவுமிகுந்த; புனித சிவன்ராத்திரியில் - புண்ணியம் நிறைந்த சிவராத்திரியன்று; பா.வே. - 'பொங்கவிட முண்ட' (ச.ம.நூ.); பி.வே. - 'விசம்' (மா.தவநிலை); 'சிவராத்திரி' (கை.பிரதி).

273. விந்தையுடன் - ஆர்வத்துடன்; முழித்தார் < விழித்தோர் - கண்விழித்து உறங்காதிருந்தோர்; மீறும் < வீறும் (வரி 263); புகழ் தவசி - புகழ்பெற்ற நோன்பு; பி.வே. - 'விழித்தோர் பெறும் புகழ் தவசு' (ச.ம.நூ.); 'விந்தையுடன் சொன்னதினால் மீறும் யெவர்க்கும் தெரியும்' (மா.தவநிலை); 'விழித்தோர் பெரும் புகழ்தவசு' (கை.பிரதி.).

274. எந்தனால் < என்தன்னால் - என்னால்; சொல்லரிது. எடுத்துச் சொல்வதற்கு அருமையான; என்றுரைத்தாரீசுபரரும் - ஈசர் அவ்வாறு கூறிமுடித்தார்; பா.வே. - 'எந்தனால் சொல்லரிது ஏக வெகுதவமாம்' (ச.ம.நூ.); 'யோக வெகுதவமாம்' (கை.பிரதி).

275. அந்த உரை கேட்ட - மாசிமாதப் புனலாட்டின் மகிமையைக் கேட்டறிந்த; அமரர் - வானவர்களும்; மா முனிவர்களும் - மகா ரிஷிகளும்.

276. சிறந்த தவமீதெனவே - இதுதான் தவங்களிலெல்லாம் சிறப் பான தவம் என; சிந்தை மகிழ்ந்தார் - உள்ளம் உவந்தனர்; பார்க்க:

## மிருகசிங்கனின் புனலாட்டும் தவமும்

மைந்தனேனீ சிறந்த மாக புனலாட
தந்தைஅன்னை தாமுரைக்கத் தான்மகிழ்ந்து பாலகனும்
விந்தையுட னிருவர் மெல்லடியைத் தெண்டனிட்டு

'சிந்தை மகிழ்தல்' (வரி 1616, 1621, 1822, 1894, 1991, 2574, 2576, 2588).

மாசி மாத நீராடல் (மாக ஸ்நானம்) மிகப் புண்ணியமாகக் கருதப்படுகிறது. இதனைப் பல புராணங்களும் நூல்களும் குறிப்பிடுகின்றன. இதற்கென ஒரு தனிப்புராணமே எழுந்துள்ளது. மாக புராணம் என அது தென்பாண்டி நாட்டில் ஏட்டுச் சுவடிகளாகக் காணப்படுகிறது. 1904-இல் அச்சிட்டும் வெளியிடப் பெற்றுள்ளது.

நாள் தோறும் வைகறையில் மாக (மாசி) மாதம் முப்பது நாளும் சென்று கடலிலோ, நதியிலோ நீராடி ஆலயங்களில் வழிபட்டு வருபவர்களுக்கு ஏற்படும் நன்மைகளைப் பல கதைகள் வாயிலாக இப் புராணம் விளக்குகிறது. சிவராத்திரியில் நோன்பு, பூசை, தருமம் செய்வது போன்ற செய்திகளும், மிருகண்டு முனிவர் தம் குமாரனுக்கு (மிருகசிங்கனுக்கு) மாக நீராடலின் பயன்களை விளக்குவதும், மிறுகசிங்கன் பின் மார்க்கண்டேயனுக்கு அதைக் கூறுவதும் இன்னும் பல கதைகளும் உள்ளன; ஏகாதசி விரதப் பயனும் குறிப்பிடப்பட்டுள்ளது. (தகவல்: மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு 16-1, 1977).

இதையேதான் மார்க்கண்டேயன் கதைப்பாடலான இந் நூலிலும் சேர்த்துள்ளனர். இக் கதைப்பாடல் தென்பாண்டி நாட்டது என்பதற்கு இது மற்றொரு சான்றாகும். இம் மாகபுராணம் விருது பட்டியில் படிக்கும் பழக்கம் இருந்ததாக இந் நூலை அச்சிட்டு வெளியிட்டுள்ள பொன்னம்பலக் குருக்களாரின் மகனார் இராமலிங்கம் குருக்கள் தன் பதிப்பில் குறிப்பிட்டுள்ளார். இக் குருக்கள் பிரிவினர் தென்பாண்டி நாட்டு மானாட்டுப் பகுதியிலிருந்து விருதுபட்டி (இன்றைய விருதுநகர்) போன்ற ஊர்களுக்குக் குடியேறியவர்களாவர்.

277. மைந்தனே - மிருகசிங்கனே; னீ < நீ; சிறந்த மாக புனலாட - சிறப்பான மாசி மாதப் புதுப்புனலாடி (வா என்று தந்தையும் தாயும் கூறினர்);

278. தந்தை அன்னை தாமுரைக்க - இவ்வாறு பிதாவும் தாயும் கூற; தான் மகிழ்ந்து பாலகனும் - தனக்குள் மகிழ்ச்சி கொண்ட மிருகசிங்கனும்; பி.வே. - 'தந்தையன்னை மீதுரைக்க' (ச.ம.நூ.).

279. விந்தையுடன் - (வரி 273); இருவர் - தாய் தந்தையரின்; மெல்லடியை - மென்மையான பாதங்களை; தெண்டனிட்டு < தண்டனிட்டு - கீழே கிடந்து தொட்டு வணங்கி (வரி 144); பா.வே. - 'விந்தையுடன் யவர்மேல்' (மா.தவநிலை).

மாக புனலாட மகிழ்ந்து மிருகசிங்கன்
பாகமுறு மாகப் பலதீர்த்தந் தானேகி
பொங்கமிகு புனிதன் புனலாடி யஞ்செழுத்தை
நெஞ்சகத் துட்சரித்து நேசத்தை வுள்ளிருத்தி
மிஞ்சுந் தவசு விரைந்து விளைக்கவென்று
பாசக் கடலைப் படர்மதியின் தோணிவிட்டு
நேசத்துடன் கடந்து நீண்டமலக் காடுவிட்டு

280. மாக புனலாட - மாசிமாதப் புதுப்புனலாடி நோன்பு நோற்க; மகிழ்ந்து மிருகசிங்கன் - மிருகசிங்கனும் உவகையடைந்து;

281. பாக முறு < பாகம் உறு - பக்குவம் உண்டாவதற்கு; மாகப்புனல் - மாகநீர், புனித நீர் உள்ள; பல தீர்த்தம் தானேகி - பல புண்ணிய நதிகளுக்குச் சென்று; பா.வே. - 'பாகமுருவாகப் பல தீர்த்தம்' (ச.ம.நூ.); 'பாசம் மறவாமல்' (மா.தவநிலை); 'பொங்குபுகழ் பூவுலகில் புனிதநதியுள்ள தெல்லாம்' (கை.பிரதி).

282. பொங்கு மிகு - பொலிவு மிகுந்த; புனிதன் - தூய்மையான மிருகசிங்கன்; புனலாடி - தீர்த்தமாடி; அஞ்செழுத்தை - நமசிவாயத்தை; பா.வே - 'தங்கும் மிருக சிங்கன் தானாடி யஞ்செழுத்தை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி).

283. நெஞ்சகத்து - மனதுக்குள்ளே; உட்சரித்து < உச்சரித்து - ஒலித்து; நேசத்தை - (இறைவன்மீதுள்ள) பிரியத்தை; உள்ளிருத்தி - சிந்தையில் வைத்து; பி.வே. - 'உச்சரித்து நேசமிது பொருளாய்' (ச.ம.நூ.); 'உச்சரித்து நேசம்மதுவோர் நினைவா' (மா.தவநிலை); 'உச்சரித்து நேசமிகவாகி' (கை.பிரதி).

284. மிஞ்சும் தவசு - எதையும் விஞ்சி நிற்கக் கூடிய தவத்தினை; விரைந்து - சீக்கிரத்தில்; விளைக்கவென்று செய்துமுடிக்க வென்று; பா.வே. - 'வினைபோக வென்று' (ச.ம.நூ.); 'வளர்க்கவென்று' (கை.பிரதி).

285. பாசக்கடலை - பதி பசு பாசம் எனும் மும்மலத்தில் பாசமாகிய சொந்த-பந்த பிணிப்பு எனும் பெரிய சமுத்திரத்தினை; படர் மதியின் - அலைந்து திரியும் எண்ணத்தை; தோணிவிட்டு - தோணியாக ஆக்கிச் செலுத்தி; பி.வே. - 'பாசக்கடலில்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி). பார்க்க: 'பாசக்கடல்' (வரி 1046).

286. நேசத்துடன் - (வரி 283); கடந்து - தாண்டி; சென்று; நீண்ட - அளவில்லாத நெடிய; மலக்காடு - ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலக்காடுகளை; பா.வே. - 'நீண்ட மலைக்காடகன்று' (ச.ம.நூ.); 'மலர்க்காடு' (மா.தவநிலை); 'பலகாடு' (கை.பிரதி).

மலையுங் கேவலனருலுகில் மால்நகருக்குப் பிறத்தில்
குலையும் பெருவழியில் கூண்ட யிருள்படர்ந்து
காலாக் கினியில்(க்) கனத்த ஒளியூட்டி
மேலாக்கி யுள்ளுருக்கி மீறுங் கசடெரித்து
ஆங்காரஞ் சூறையிட்டு யானவொளியே வழியாய்
ஓங்கார மீறு முய[ர்]ந்த யருட்(க்)கோவில்
பூட்டுமிகத் திறந்து போயணுகி மேல்வாசல்

287. மலையும் - மலைப்பு (மலைவு) தரும்; கேவலனருலகில் -உயிரின் சகலம், சுத்தம், கேவலம் எனும் மூன்று உலகில் மயக்கநிலையினதான கேவலம் எனும் உலகத்தில் திளைத்து; மால்-மயக்கம்; நகருக்குப் பிறத்தில் - அந் நகரத்தின் புறத்தே; பா.வே. - 'மலையும் கௌனரிஷி மாலாங்கருக்குப் புரத்தே' (ச.ம.நூ.); 'மலைப்புனல் கெவுனரிஷிமால் நகரும் தாம் புரந்தோம் (மா.தவநிலை); 'மலயும் நதியும் மால் புர நகரத்தில்' (கை.பிரதி).

288. குலையும் பெருவழியில் - நிலை குலையச் செய்யும் பெரிய பயணத்தில்; கூண்ட - கூடியிருக்கக்கூடிய; இருள் படர்ந்து - கருமையான இருட்டு பரவியுள்ள; பா.வே. - 'குலையும் புரி வெளியில் கூண்டயிருள் காடுவிட்டு' (மா.தவநிலை); 'துலையும் புரிவழியில் பூண்ட' (கை.பிரதி).

289. காலாக்கினியில் - (வரி. 182) மூலாக்கினியால்; கனத்த -கனமான, பெரிய; ஒளியூட்டி - அனலை உருவாக்கிச் செலுத்தி; பி.வே. - 'ஒளியூட்டி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி).

290. மேலாக்கி - கீழிருந்து மேலே நகரும்படிச் செய்து; யுள்ளுருக்கி - உள்ளேயே உருகுமாறு செய்து மெல்லிய தாக்கி; மீறும் < வீறும் - மிஞ்சும், மிகுதியாகும்; கசடெரித்து - அழுக்கை எரித்து இல்லாதாக்கி; பா.வே. - 'மேலாக்கினியின் யுள்ளிருக்கி மீறுமக்கசடறுத்து' (மா. தவநிலை); 'மீறுங்கதவறிந்து' (கை.பிரதி).

291. ஆங்காரஞ் சூறை - தான் எனும் அகங்காரச் சுழல் காற்றை; விட்டு - விட்டு விட்டு; ஆனவொளியே - அவ்வாறு உண்டாய ஒளியின்; வழியாய் - வழியாக; பி.வே. - 'ஆங்காரமாஞ் சூறை', 'ஆழ்வெளியே' (ச.ம.நூ.); பார்க்க: 'ஆங்காரம்' (வரி 948, 954, 965, 2190).

292. ஓங்காரம் < ஓம் காரம் - 'ஓம்' எனும் மந்திரம், மீறும் < வீறும் - அதிகரிக்கும்; உய(ர்)ந்த - உயர்வான; அருட்கோவில் - கருணை நிறை இறைவன் ஆலயம், சுழிமுனை; பா.வே. - 'ஓங்காரமேறி' (ச.ம.நூ.); 'மீதில்' (மா.தவநிலை); காண்க: 'ஓங்காரம்' (வரி 766).

293. பூட்டு மிகத்திறந்து - சுழிமுனையின் தாளைநீக்கி; போயணுகி - அடுத்துச் செலுத்தி; மேல்வாசல் - கண்களுக்குச் செல்லும் வழியாகக் கடந்து.

தீட்டும் புகழான சிறந்தயருள் நிலையில்
குன்றாதுடலில் நின்று குன்றுமுடல் களைந்து
நின்றான் தவசி நீதிமிருக சிங்கன்

**விருத்தம்**

கருவியைக் கடந்து ஞாவுரமேல்(க்)
கனலோடு யகாரம் பத்தி
உருவியே கடந்து மாய்கை
யொடுங்கிடத் தாளால் தாங்கி
அருவியா மேலை வாச
லறிவினி லறிவைச் சூட்டி
உருவில்லா னடியில் நின்று
உண்மையா தவசு செய்தான் (4)

294. தீட்டும் - அறிவினைக் கூராக்கும்; புகழான - புகழ்மிக்க சிறந்தயருள் நிலையில் - சிறப்பான சக்தி ஸ்தானத்தில்; பி.வே. - 'சீட்டும்'; பார்க்க ' அருள் நிலை' (வரி 329).

295. குன்றாதுடலில் நின்று - தடுமாறாது நிலையாகத் தங்கி; குன்றுமுடல் களைந்து - எப்போதாவது இறந்துவிடும் இந்த உடம்பை நீக்கிவிட்டு; பா.வே. - 'இளைத்து' (ச.ம.நூ.); 'உடலிளந்து' (கை.பிரதி).

296. நின்றான் தவசிநீதி மிருகசிங்கன் - உண்மையுள்ள தவமுனி மிருகசிங்கன் இறைவனுடன் ஒன்றிநின்றான். பி.வே. - 'சிவ தவசு' (ச.ம.நூ., மா.தவநிலை); 'மிக தவசு' (கை.பிரதி).ஒப்பீடு:

'உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவைக்
கருத்தினால் இருத்தியே கபாலம் ஏற்ற வல்லீரேல்'...

'ஒலிபடரும் குண்டலியை உன்னி உணர்வால் எழுப்பிச்
சுழி முனையின் தாள் திறந்து தூண்டுவதும் எக்காலம்'...

'மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை...'

'விண்கடந்து நின்றசோதி மேலைவாசலைத் திறந்து
கண்களிக்க உள்ளுளே கலந்து புக்கிருந்தபின்
மண்பிறந்த மாயமும் மயக்கமும் மறந்துபோய்
எண்கலந்த ஈசனோடு இசைந்திருப்பது உண்மையே'.

— பத்திரகிரியார்

வி.4. கருவியைக் கடந்து - பந்தபாச உடலுறுப்புக்களைக் கடந்து; ஞாவுரமேல் - ஞானத்தின் (கரை) வழியின்மேல் பகுதியில்; கனலோடு - அக்கினியுடன்; அகாரபத்தி < அகாரம்பற்றி - வீட்டைப் பிடித்து; உருவியே கடந்து - ஊடுருவிக் கடந்து; மாய்கை < மாயை - பொய்யான

நடை

இந்த முனிவ னியல்பு மிகுதவசு
சிந்தை களிகூர்ந்து சிவனுமவர் நினைந்தார்
அந்த முனிவோ ரனைவோரருள் மிகுந்தோர்

## இறைவன் காட்சிதரல்

300 கந்த மிகுந்த காரணனார் சத்திபங்கர்

தோற்றம்; ஒடுங்கிட - அடங்கும் படியாக; தாளால் தாங்கி - பூட்டால் தாங்கிப்பிடித்து; அருவியாம் - நீர்வீழ்ச்சியின் மேல்வாசல் - உயர்ந்த பகுதியான திறப்பிடத்தில்; அறிவினில் அறிவைச்சூட்டி - ஞானத்தில் புத்தியைச் செலுத்தி; உருவில்லான் - உருவமும் அருவமும் உடையவனான சிவன்; அடியில் நின்று - கீழே நின்று; உண்மையா - உண்மையாக; தவசுசெய்தான் - தவஞ்செய்தான்;

பா.வே. -'மேல் கனலோடு தாகம் பற்றி' (கை.பிரதி); 'ஓமக்கன லோடு' (மா.தவநிலை); 'மாய்கை ஒதுங்கிடா தளவால் தாக்கி' (ச.ம.நூ.); 'மாய்கை வொழிக்கினும் மிடனாய்நிற்க' (கை.பிரதி); 'மேலை வாசல் அதுவளி அறிவையொட்டி' (ச.ம.நூ.); 'அறியையோங்கி', (மா.தவநிலை; கை.பிரதி); 'உண்மை கூற தவசுசெய்தான்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

297. இந்த முனிவன் - இவ்வாறு தவம் செய்யும் மிருகசிங்கன்; இயல்பு மிகுதவசு - பெருமை மிகுந்த தவத்தினை; பா.வே. - 'இந்த முனி அன்பாய் இருக்கும் சிவதவத்தில்' (ச.ம.நூ.); பி.வே. - 'இயல்பு கன தவசில்' (மா.தவநிலை, கை.பிரதி);

298. சிந்தை களிகூர்ந்து - உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கி; சிவனுமவர் நினைந்தார் - சிவபெருமானும் மனத்தில் கண்டு அறிந்துகொண்டார்; பா.வே. - 'சிந்தை மகிழ்ந்து சிவனார் அவர்நினைந்தார்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'வர நினைந்தார்' (கை.பிரதி);

299. அந்த முனிவோர் அனைவோர் - முனிவோர்கள் எல்லோருக்கும்; அருள் மிகுந்தோர் - கருணை நிரம்ப அளிப்பவரான; பா.வே. - 'அந்திமுயல் தவத்தோர் ஆனவோர் அருளி இருந்தார்' (ச.ம.நூ.); 'அந்தம் வுயிர் வேறாய் யனல்வோர் யருள் நினைந்து' (மா.தவநிலை); 'அந்த முயர்வோன் வேறு யனைவோருள மிருந்தோன்' (கை.பிரதி);

300. கந்த மிகுந்த காரணனார் - சோதி நிறைந்த இறைவன்; சத்தி பங்கர் < சக்தி பங்கர் - (வரி 10) உமையை ஒரு பாகத்தில் கொண்டிருப்பவர்; பா.வே. 'கந்தம் நிறைந்த கந்தனய்யா காரணனார் சத்தி பங்கர் (மா.தவநிலை, கை.பிரதி);

உத்திராட்ஷ யாபரண முத்தரிக வெண்ணீறும்
சித்திரம்போல்ச் சே(ய்)யிளையை[ச்] செய்கையிடப்
பாக[ம்]வைத்து
செய்யநந்தி மேலே சிவனார் சிறந்தேறி
அய்யாவரும் பவனி யாராலு(ம்)ங் காணரிது
வந்ததற்பி னீசுரனார் மாமுனிவன் செய்தவசில்
சுந்தரர்க்கு முன்னாள்(ச்) சுருதியுடன் தூதுசென்ற
பரமேசுவரன் மகிழ்ந்து பார்பதியே பாருமென்றார்

301. உத்திராட்ஷயாபரணமும் < உருத்திராக்கம் - மணிகளாலான மாலைகளும் தோரணங்களும் அணிந்து; உத்தரிக வெண்ணீறும் - மேலாடையும், திருநீறும் தரித்து; பா.வே. - 'சுத்த வெண்ணீறுத் தளமாய் துலங்குநெற்றிக் கண்ணுடனே' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'சத்தியுற்றோர் பத்தி தங்கு மிங்கு ஆபரணம்' (ச.ம.நூ.); காண்க: 'உத்திராட்டதாவடம்' (1414);

302. சித்திரம்போல் - ஓவியம்போல் (பார்க்க வரி 29); சே(ய்)யிளையை - (பெண்களுள் சிறந்தவளாம்) உமையை; செய்கையிடப்பாக[ம்] வைத்து - செயல் திறமையுள்ள இடது கைப்பாகத்தில் இருத்தி; பி.வே. - 'உற்றவுமை செங்கையிடம் பாகம் வையித்து' (மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'சித்திரம்' (வரி 29, வி.1);

303. செய்ய - அழகான, செம்மையான; நந்திமேலே - விடைமேல்; சிவனார்; சிறந்தேறி - சிறப்பாக ஏறி அமர்ந்து; பா.வே. - 'நந்திமீது சிவனார் சிறந்து உமையும்' (ச.ம.நூ.); 'செய்யும் நந்திமீதே(றி)சிவனாரும் நாரணியும்' (மா.தவநிலை, கை.பிரதி);

304. அய்யா - சிவன்; வரும் பவனி - உலா வரும் காட்சி; ஆராலும் - எவராலும்; காணரிது - கண்டு 'இன்னதன்மையது' என வருணிக்கவியலாது; (அல்லது பிறர் கண்டு கொள்ள முடியாது);

305. வந்ததற்பின் ஈசுரனார் - தவம் செய்யும் மிருகசிங்கன் முன்பு சிவபெருமான் வந்துசேர்ந்தபோது; மாமுனிசெய்தவசில் - மகாரிஷி செய்துவரும் தவத்தினைக் கண்டு; பா.வே. - 'வையம் புகழ்தவத்தை வந்து அரனாரும் கண்டு' (ச.ம.நூ.);

306. சுந்தரர்க்கு - சுந்தரமூர்த்தி நாயனார்க்கு; முன்னாள் - முன்னொரு நாளில்; சுருதியுடன் - நல்ல செய்தியுடன்; தூதுசென்ற - தூதுவனாகப்போன; காண்க: (வரி 987);

307. பரமேசுவரன் - பரத்துக்கு ஈசுவரனான சிவன்; மகிழ்ந்து - மகிழ்ச்சியுற்று; பார்பதியே < பார்வதியே; பாருமென்றார் - பார்ப்பாயாக என்று கூறினார்; பி.வே. - 'பரமேஸ்வரர்' (ச.ம.நூ.);

வரமேவும் பார்பதியு மகிழ்ந்துகண்டங் கேதுரைத்தாள்
அனலில் மெழுகாகி யன்புத் தவமுனியை
கனலைவிட்டு நீங்கிக் காரணமும் வாருமென்றார்
பாதிமதி சூட்டும் பரமனாரும் பாதியுமை
ஆதியருள் வடிவை அருள்முனிவன் கண்டனனே
கண்டு முனிவன் கருணைவிரை வோர்முனையாய்
பண்டிருவர் காணாத பங்கையத்தாள் கண்டதினால்
துரும்புபோல் வத்தி சுரித்தவுடல்கள் ளெல்லாம்

*308. வரமேவும் - வரங்கள் நிரம்பியிருக்கக் கூடிய; பார்பதியும் < பார்வதியும்; மகிழ்ந்து கண்டங்கேதுரைத்தாள் - மிருகசிங்கனின் தவத்தினைப் பார்த்து மகிழ்ச்சியுற்று அவ்விடத்தில் பின்வருமாறு கூறினாள்; பா.வே. - 'பார்வதியும் மாதவங்கண்டே மகிழ்ந்து' (ச.ம.நூ.); 'மகா தவங்கண்டே மகிழ்ந்து' (மா.தவநிலை, கை.பிரதி);*

*309. அனலில் - மூலாக்கினியில்; மெழுகாகி - உடலை உருக்கி மெலிந்து; அன்புத் தவமுனியை - சிவன்மீது அன்பு கொண்டுள்ள வலுதவமியற்றும் மிருகசிங்கனை; பா.வே. - 'அனலில் இருக்கை அன்புற்ற மாமுனியே' (ச.ம.நூ.); 'மெழுகு போல் வுருகநின்ற அன்புற்ற மாமுனியே' (மா.தவநிலை);*

*310. கனலைவிட்டு - தவக்கனலிலிருந்து; நீங்கி - வெளிப்பட்டு; காரணமும் - தவத்துக்கான நோக்கம்; வாருமென்றார் - வந்து கூறுக என்று கேட்டார்; பா.வே. - 'கனலை விட்டு வாரும் என்றார் கண்டான் முனி அரனை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);*

*311. பாதிமதி சூட்டும் பரமனாரும் - சிவனும் (பார்க்க வரி 41, 75,); பாதியுமை - இறைவனின் இடதுபாகமிருந்த சத்தியுமான; காண்க: (வரி 1388);*

*312. ஆதியருள்வடிவை - கருணை நிறைந்த மூலப்பொருளை; அருள்முனிவன் - (வரி 108) அருள்நிறைந்த தவமுனியும்; கண்டனனே - பார்த்தறிந்தான்;*

*313. கண்டுமுனிவன் - மிருகசிங்கன் பார்த்து; கருணை விரைவோர் முனையாய் - அருளோடு ஒரே முனைப்பாய் முயன்று;*

*314. பண்டிருவர் - மாலும் பிரமனும்; காணாத - கண்டுவிட முடியாத; பங்கையத்தாள் < பங்கயத்தாள் - செவ்விய தாமரைபோன்ற பாதங்களை; கண்டதினால் - கண் முன்னே கண்டுகொண்டதால்;*

*315. துரும்புபோல் - சிறு நரம்பு போன்று; வத்தி < வற்றி - மெலிந்து; சுரித்த - சுருங்கிய; உடல்கள் - உடலிலுள்ள உறுப்புகள்; எல்லாம் அனைத்தும்; காண்க: 'துருத்தி போல் வற்றல்' (வரி 1690). 'சுரித்தவுடல் (1690);*

நிரம்பிமகா மலைபோல நின்றெழுந்தான் மாமுனிவன்
பூரித்து ரேகம் புயங்கள் மலைபோலே
வாரித்து சிந்தை மகாபிரிசமாய் மகிழ்ந்து
அஞ்செழுத்தா யோரெழுத்தா யண்ட மூடுருவி
பிஞ்செழுத்தாய் நின்ற பெரியஅருள் விளக்கே
காணக் கிடையாத கருணையான காட்சியினால்
பூணக்கிடையாத பொற்பாதம் பூண்டு கொண்டு
தை(ய்)யலுமை மாதுஞ் சங்கரரு மின்பமுற

316. நிரம்பி - நிறைந்து; மகா மலைபோலே - பெரிய மலைபோல; நின்றெழுந்தான் - எழுந்து நின்றான்; மாமுனிவன் - பெரிய முனிவனான மிருகசிங்கன்;

317. பூரித்து - பருத்து; ரேகம் < திரேகம் < தேகம் - உடம்பு; புயங்கள் - தோள்கள்; மலைபோலே - மலையைப்போல் விம்மி; காண்க: 'ரேகம்' (வரி 2485);

318. வாரித்து - எழுந்து; சிந்தை - உள்ளம்; மகாபிரிசமாய் < மகா பிரியமாய் - அளவிலா அன்புடன்; மகிழ்ந்து - இன்பமுற்று; காண்க: 'பிரியம்' (399), 'பிரிச முறல்' (2573);

319. அஞ்செழுத்தாய் - ஐந்து எழுத்தாய் (வரி: 229, 282); ஓரெழுத்தாய் - 'ஓம்' எனும் மந்திரமாய், ஓங்காரமாய்; அண்டம் - (பார்க்க வரி: 13, 172); ஊடுருவி - உள்ளே நுழைந்து சென்று; பா.வே. - 'அண்டபிண்ட மூடுருவி' (ச.ம.நூ.); 'அண்டரெண்டம் வூடுருவி (மா.தவநிலை, கை. பிரதி);

320. பிஞ்செழுத்தாய் < பிஞ்சு + எழுத்தாய் - என்றும் மூப்பு இன்றி இளமையாய்; நின்ற - விளங்குகின்ற; பெரிய அருள் விளக்கே - கருணை நிறைந்த பரந்த சோதியே (வரி 237);

321. காணக்கிடையாத - பார்ப்பதற்கு முடியாத; கருணையான அன்புமயமான; காட்சியினால் - தோற்றத்தால்; பா.வே. - 'கருணையரன் யருளும் காச்சிதன்னை' (மா.தவநிலை); 'மலர் கருணை காட்சியினால்' (கை.பிரதி);

322. பூணக்கிடையாத - சூடுவதற்கு அருமையான; பொற்பாதம் - தங்கத்தாள்களை; பூண்டு கொண்டு - அணியப்பெற்று; பா.வே. 'காணக்கிடையாத மலர்ப் பொற்பாதம் பூண்டு கொண்டான்' (ச.ம.நூ.); 'மலர் பொற்பாதம்' (மா. தவநிலை, கை. பிரதி); காண்க; 'பொற்பாதம்' (வரி 351, 363, 491);

323 - 324. செய்யபுகழ் - மிகுதியான புகழைப் பெற்ற; முனிவன் - மிருகசிங்கன்; தை(ய்)யலுமை மாதும் - பெண்களில் பேரழகுவாய்ந்த

செய்யபுகழ் முனிவன் சிவதோஷ்த்திர முரைப்பான்

**விருத்தம்**

**சிவதோத்திரம்**

அரனே சிறந்த அருளே மிகுந்த
யவையே நிறைந்து மெவையா[ம்]
பரனே படர்ந்த விருளே விளைந்த
பகலே விளங்கு மடியார்
வரனே கவிந்த கனரூப ரூப
மதினீ றணிந்த முடியாய்
உரனே வளர்ந்த வரைமீ துயர்ந்த
யுமைபாதி தங்கு சிவனே (5)

படிமீதில் வேதன் ஒருநாளி லேழு
பலவாகு ரூப செடமாய்

உமையும்; சங்கரரும் - சிவனும்; இன்பமுற - மகிழ்ச்சியடையுமாறு; சிவதோஷ்த்திரம் < சிவதோத்திரம் - சிவதுதி; உரைப்பான் - பாடுவான்; பா.வே.-'சீர் தோத்திரம்' (ச.ம.நூ., கை. பிரதி); 'சிறந்தே தோத்திரம் வுரைப்பார்' (மா.தவநிலை); காண்க: தை(ய்)யல் (688);
'சிவதோஷ்த்திரம்' (1078);

வி.5 அரனே - சிவனே; சிறந்த அருளே - கருணைச் சிறப்பே; மிகுந்தயவையே நிறைந்து - மிகுந்துள்ள இடங்களிலெல்லாம் நிறைந்து; எவையாம் - எல்லா உயிர்களிலும்; பரனே - கடவுளே; படர்ந்த விருளே - இருளாகப் பரந்துள்ளவனே; விளைந்த பகலே - ஒளியுள்ள பகலாகவும் ஆகியுள்ளவனே; விளங்கும் - விளங்கக்கூடிய; அடியார் - பக்தர்களின்; வரனே - வரங்களானவனே; கவந்த - கங்கையைச் சடையில் தரித்தவனே; கனரூப - பொன் நிற வடிவோனே; ரூபமதி நீறணிந்த - அப்பொன்னிற மேனியில் பிறைச் சந்திரனையும் திருநீற்றையும் அணிந்த; முடியாய் - சடைமுடியினனே; உரனே - யாவர்க்கும் வலிமையானவனே; வளர்ந்த வரை மீது - உயர்ந்த கயிலாயமலைமேல்; உயர்ந்த - உயர்குணமுள்ள; உமை - பார்வதியை; பாதிதங்கு சிவனே - தன் உடம்பின் இடப்பாகமாகக் கொண்டுள்ள இறைவனே;

பா.வே. 'விளைந்த அவையே', 'கவந்த கனரூப ரூபமதி நீறணிந்த முடியாய்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'படர்ந்த வொளியே' (கை.பிரதி);

வி.6. படிமீதில் - பூமியில்; வேதன் - பிரமன்; ஒரு நாள் - ஒரு நாள் போதில்; ஏழு பல வாகு ரூப - ஏழு வகையான உருவங்களுடைய உயிரினங்கள் (தெய்வம், மிருகம், தாபரம், பறவை, மக்கள், ஊர்வன,

நெடிதாக யேக யவையே பிறந்து
நிலையா துழன்று நினைவாய்
கொடிதாக வொன்றை யறியாது வொன்று
குலபேத நின்று மயலாய்
ஒடிதா யுபாய மவையே நிறைந்த
உமைபாதி தங்குஞ் சிவனே (6)

கருவான காய முயிரே சுமந்து
கனமால தாகி விடுனாள்
எருவான மேடை தனிலே கிடந்து
யிடரான கத்தை பொடியா[ய்]
மருவான சீவ னவையே பிறக்க
வயறோ யிதொன்று மறியேன்
உருவான காயம் வினைதீர வேணும்
உமைபாதி தங்குஞ் சிவனே (7)

நீர் வாழ்வன); செடமாய் < சடமாய் - உடல்களாய்; நெடிதாக - மிக அதிகமாக, நீண்டதாகப் படைத்து; ஏக < ஏவ - செலுத்த; அவையே - அவ்வுயிரினங்கள்; பிறந்து - அவ்வவற்றின் இருப்பிடங்களில் தோன்றி; நிலையாதுழன்று - நிலைத்து நிற்காது துன்பப்பட்டு; நினைவாய் - ஞாபகமாய்; கொடிதாக - கொடுமையாக; ஒன்றையறியாது ஒன்று - ஓர் உயிரினம் மற்றொன்றை அறிந்து கொள்ளாது; குல பேதம் - பிறப்பு வேறுபாட்டுடன், நின்று மயலாய் - தம்முள்ளே தடுமாறி நின்று; ஒடிதாயுபாயம் - (அத்தடுமாற்றமான பிறப்பு) முறியக் கூடிய வழிகள்; அவையே நிறைந்த - அவை எல்லாம் கொண்ட; உமை பாதி தங்குஞ் சிவனே - பார்வதியை இடப்பாகமாகக் கொண்டுள்ள சிவபெருமானே;

பா.வே. - 'ஒரு நாவிலேழு பலர் ஏக ரூப சேடமாய்' (ச.ம.நூ); பி.வே. - 'பலவாக' (மா.தவநிலை, கை.பிரதி); பா.வே. - 'ஏவ அவையே மறந்து நிலையாதுளனற்றின் வாய்' (ச.ம.நூ); பி.வே. - 'ஏவ' (மா.தவநிலை, கை.பிரதி); பா.வே. - 'கொடிதாகிய ஒன்றை அரியாது ஒன்று குல பேதை சிந்தை மயலாம்' (ச.ம.நூ); 'அறியாதுளன்று' (மா. தவநிலை, கை. பிரதி); பா.வே. - 'ஒடி பூணுபாய்' (ச.ம.நூ); 'மறையே நிறைந்து' (கை.பிரதி); பார்க்க; 'படி' (வரி 439, 845, 1248, 1341, 1548, 1632, 2320, வி.11, வி.24, வி.51; 'பலரூபம்' (1430, வி.49); 'குலபேதம்' (வி.14);

வி.7. கருவான காயம் - தாயின் கர்ப்பப்பையில் கருவாகத் தோன்றும் உடல்; உயிரே சுமந்து - உயிரைப் பெற்று; கனமாலதாகி - கனமான உடம்பு ஆகி - நிலையற்றதாகி; விடுனாள் - உயிர்விடுகின்ற நாளில்; எருவான மேடைதனிலே - எருக்களடுக்கிய சுடலைத் தீ மேடையில்;

நலமான வேத னுடலே படைக்க
நளிர்பூவி னங்கை சடைவான்
தலமீதி லன்னை வெகுபேர் களீன்ற
தயவான சிந்தை மலைவாம்
பிலமான காலன் யிவையே துடர்ந்து
பெரிதான பாச நெளிவாம்
உலகாசை யாலுமென் வினைதீர வேணு
முமைபாதி யான சிவனே (8)

கிடந்து - கிடத்தப் பெற்று; இடரான கத்தை - இதுவரை இடராக இருந்த அழுக்கான உடல்; பொடியா[ய்] - சாம்பலாய்; மருவான சீவன் - இடையிலே உழன்று கொண்டிருக்கிற உயிர்; எவையே பிறக்க - எந்த ரூபத்தில் பிறப்பெடுக்க; வயறு - கருப்ப வயிறு; இதென்று - எது என்று; அறியேன் - அறியமாட்டேன்; உருவான காயம் - மனிதனாக உருவாகி யுள்ள இவ்வுடம்பு; வினை தீர வேணும் - பிறவி எனும் வினையிலிருந்து நீங்க வேண்டும்; உமைபாதி தங்குஞ் சிவனே;

பா.வே. - 'இடரான நத்தை' (ச.ம.நூ.); பி.வே. - 'வயிரோ' (ச.ம.நூ); 'வயிறே விதொன்றும்' (மா. தவநிலை); 'வயிரேது' (கை. பிரதி); பா.வே. - 'உருவான காலன் வினை தீர' (ச.ம.நூ.; கை.பிரதி); பார்க்க: 'காயம்' (வரி 134, 362, 1642, 1660, 2165, வி.11, வி.12);

வி.8. நலமான வேதன் - நல்லவனான பிரமன்; உடலே படைக்க - உயிரினங்களைப் பிறப்பித்து; நளிர்பூவின் அங்கை - பூவின் தண்ணென்ற மெல்லிய இதழ் போன்ற தன் உள்ளங்கைகள்; சடைவான் - சலிப்படை வான்; தலமீதில் - இந்த உலகில்; அன்னை வெகுபேர்களீன்ற - பலபிறப்புக்களிலும் பெற்றெடுத்த பல அன்னையரின்; தயவான சிந்தை - இரக்கமான உள்ளங்களை நினைத்தால்; மலைவாம் - மலைப்பைத் தருகின்றது; பிலமான < (வரி 139) பலமான - வலுவான; காலன் - எமன்; இவையே - இப் பிறப்புக்களை; துடர்ந்து < தொடர்ந்து - பின்பற்றி; அழிக்கிறான்; பெரிதான பாச நெளிவாம் - மிகவும் பெரிய தான பந்தபாசம் என்னும் வளைவு சுழிவுள்ள பாதையான; உலகாசையா லும் - பூமியில் பிறக்க வேண்டுமென்ற பெரிய ஆசையிலிருந்தும்; என் - எனது; வினை - பிறவி வினை; தீர வேணும் - நிற்க வேண்டும்; உமைபாதியான சிவனே;

பா.வே. - 'பூவினங்கள் அடைவாம்' (ச.ம.நூ) 'நளிர்பூவிலங்கு சடமாய்' (கை.பிரதி); 'தலை மீதில் அன்னை' (ச.ம.நூ); 'தலைமீதுயன் னை' (மா.தவநிலை); 'தலைமீது' (கை.பிரதி); 'இன்று' (ச.ம.நூ); 'நின்று' (மா.தவநிலை); 'வெகுபேரையீன்று' (கை.பிரதி); 'மலவாம்' (ச.ம.நூ); 'மலையாம்' (மா.தவநிலை); 'மலைவாய்' (கை.பிரதி); 'தெளி

சடமாமு பாயமதில் மாய்கை கண்டுஞ்
சமனான மயக்கை யுதிரம்
திடலான மேடை யதுமீறு சத்தி
திரளான யிறச்சி சடலம்
இடமாடும் ஞான யவைகாம மாய்வு
இதைமீறு நாலுகரணம்
உடலான யிரண்டி யருளான மாய்கை
உமைபாதி தங்குஞ் சிவனே (9)
இருளான மாய்கை வுடனூடு நின்ற
இதமான பூத முதலும்
அருளான ஞானம் யவைகூடு காம
மறிவோடு நாலு கரணம்

வாம்' (ச.ம.நூ); பி.வே. - 'பலமான காலன்' (கை.பிரதி); பா.வே. - 'உலகாசையீது என' (ச.ம.நூ.); 'உலகாசையீதென்' (மா.தவநிலை); 'உலகாசைமீதென்' (கை.பிரதி); பார்க்க: 'அங்கை' (வரி 1468, 2322); 'தலம்' (1548, 1707); ஒப்பீடு:

''மாதா உடல் சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன் வேதாவும் கைசலிதத்து விட்டானே...'' — பட்டினத்தார்.

வி.9. சடமான உபாயம் - இந்த உடலானது சித்துவேலையின் சூழ்ச்சி; அதில் மாய்கை கண்டும் - அவ்வுடம்பினது பொய்மையைக் கண்டபின்பும்; சமமான மயக்கையுதிரம் - சம அளவான மயக்க நிலையில் இரத்தக் கலப்பு; திடலான மேடை - திரண்டு பருத்துள்ள மேடும்; அது மீறு - அதையும் மீறக் கூடிய; சத்தி - வலிமையான; திரளான - திரட்சியான; இறச்சி - சதைப் பிடிப்பான; சடலம் - உடம்பு; இடமாடும் ஞானம் - இடத்துக்கிடம் ஆடக்கூடிய அறிவும்; அவை காம மாய்வு - ஆனால் அது இன்பமான மாயத் தோற்றமே; இதைமீறு நாலுகரணம் - இதையும் மீறக் கூடியன சுழற்சிகள்; உடலான - அப்படியான நிலையில்லா உடம்பை; இரண்டி அருளான மாய்கை - முத்தியடையச் செய்யும் கருணைவடிவான; உமை பாதி தங்குஞ்சிவனே;

பா.வே. - 'சமனான மச்சை யுதிரம்'; 'திடலான மேடை ரசமீதுயாத்தி றன்ரகும் சிச்சை சடமேல்'; 'காம மாலாயிதை மீறு நாலு கரணம்' (மா.தவநிலை); பார்க்க: 'உதிரம்' (வி.62); 'திரள்' (வரி 2590). 'காமம்' (வரி 647, 648, 735, வி.11, வி.12); 'நாலு கரணம்' (வி.10, 14).

வி.10. இருளான - இருட்டான, வெளிச்சமில்லாத; மாய்கை - (வி.9); உடனூடு நின்ற - உடன் ஊடுருவியிருக்கிற; இதமான பூதமுதலும் - பஞ்ச பூதங்களான நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்பனவும்; அருளான ஞானம் - கருணை அருளுகின்ற அறிவும்; அவை கூடுகாமம் - அவற்றால்

மருளான ரோமந் தசைதோல் நரம்பு
வளமீ ரெலும்பு படியாம்
உருவான காயம் இவைமாய்கை சூடு
முமைபாதி தங்குஞ் சிவனே (10)
துளிமீது கொண்டப் புனலால் விளைந்த
சுகமாய்கை யந்த ருசிவும்
தெளிவோடு கண்ட புலனாதி அய்ந்துள்
திறமான தோன்ற தெதுவோ
வெளியாகி நின்ற விரையால் விரிந்த
விளைவாகி நின்ற யருளே
ஒளியாகி நின்ற பரனே சிறந்த
யுமைபாதி தங்குஞ் சிவனே (11)

கூடிநிற்கும் இன்பமும்; அறிவோடு - அறிவுடன் நாலு கரணம் - நான்கு சூழ்ச்சிகளே; மருளான - கருமையான, இருட்டான; ரோமம் - மயிர்; தசைதோல் நரம்பு - சதையும் தோலும் நரம்புகளும்; வளமீ ரெலும்பு - வலுவான எலும்புகளும்; படியாம் - உடம்பின் ஒவ்வொரு கட்ட வளர்ச்சிகளாம்; உருவான காயம் - இவ்வாறு உருவாகிய காயம்; இவை மாய்கை - இவையெல்லாம் மாயங்கள்; சூடும் - இவற்றைச் சூட்டி நிற்கிற; உமைபாதி தங்குஞ் சிவனே;

பா.வே. 'இதமான பூத புலனும்', 'நரம்பு தனமான வெலும்பு', 'மாய்கை சூட்டி' (மா.தவநிலை); பார்க்க: 'மருள்', 'மருளான மாய்கை' (வி.11);

வி.11. துளி மீது - ஒரு சொட்டுத் துளிமேல்; கொண்டப் புனலால் - கூடிய நீரால்; விளைந்த - உருவாகிய; சுகமாய்கை - இன்பமான பொய்மைத் தோற்றம்; அந்த ருசிவும் - அவ்வின்பச் சுவையும்; தெளிவோடு - தெளிவாக; கண்ட புலனாதி அய்ந்துள் - இருக்கக் கூடிய ஐந்து புலன்களான சுவை, ஒளி, ஊறு, நாற்றம் என்பனவற்றுள்; திறமான - திறமையுள்ள; தோன்றதெதுவோ - தோன்றுவது எதுவோ; வெளியாகி நின்ற - பரந்த வெளியிடத்திலே நின்றுள்ள; விரையால் - சிறு விதையால் உருவாகிய ஆலமரம் போல்; விரிந்த விளைவாகி - விரிந்து பரந்து; நின்றயருளே - நின்று கொண்டிருக்கிற கருணைக் கடவுளே; ஒளியாகி நின்றபரனே - சோதியாக உள்ள இறைவனே; சிறந்த - உயர்ந்த; உமைபாதி தங்குஞ்சிவனே.

பா.வே. - 'துளிமீது கொண்டல் புனலால் விளைந்த அவ மாய்கை யாரும் பிரிவின்' (ச.ம.நூ.); 'சுகமாய்கையாறு பிரிவின்' (மா.தவநிலை); 'தோற்றதெதுவோ'(ச.ம.நூ.); 'தோன்றதிதுவோ' (மா.தவநிலை); 'திற மானதென்றுதெனதுளதே' (கை.பிரதி); பி.வே. - 'வித்தால்' (கை.பிரதி);

கருவான காய மதின்நீரின் விந்து
கனமான நீரின் விதியாம்
மருவான சோம பசிதாக காம
வளமீ துறங்கு மலராந்
திருவான மலர்ச்சி நகையே சுனத்தில்
தினநித்தல் பொத்தல் இவைகால்
உருவான மாய்கை யிவைகூடி நின்ற
யுமைபாதி தங்குஞ் சிவனே (12)
கனகாம லொப்ப பகையே விளைத்தல்
கவடா விகற்ப கொடுமை
மனமொன்றி நின்ற யிவையஞ்சி லஞ்சு
வளமா யெடுத்த சடமாய்
தினமாடி நின்று யிரையா லுழன்று
திரியாம லுந்த னருளாள்
உனதேடு கின்ற திவைதூர நின்ற
உமைபாதி தங்குஞ் சிவனே (13)

வி.12. கருவான காயம் - கருவாக இருந்து உருவாகும் உடம்பு; அதில் நீரின் விந்து - அக் கருவில் நீரில் மிதக்கும் உயிர்அணு சேர்ந்து; கனமான நீரின் விதியாம் - கனமாக உருவெடுக்கும் முறையாம்; மருவானசோம - வாசமானமதிமயக்கும் சோமபானம்; பசி தாக காம வளமீதுறங்கும் மலராம் - பசியும், தாகமும், காமமும் சேர்ந்து தூங்கக் கூடிய மலராகும்; திருவான மலர்ச்சி நகையே - அழகு பொருந்திய மகிழ்ச்சி தரும் நகையாகும்; சுனத்தில் - பூச்சியத்தில்; தினநித்தல் < தினம் நிற்றல் - நாளும் தங்கியிருப்பது; பொத்தல் < பொற்றல் - ஓட்டையுள்ளது; இவைகால - இவையெல்லாம் காலத்தால்; உருவான மாய்கை - உருவாகியுள்ள பொய்மையாகும். இவை கூடி நின்ற - இவற்றையெல் லாம் சேர நிற்கின்ற; உமைபாதி தங்குஞ்சிவனே;

பா.வே. - 'நிலை நீரின் விந்து', 'மீதுறங்கும் யலமாம்', 'தினம் நின்றல் பெற்றயிவைகால்' (மா.தவநிலை);

வி.13. கனகாமலொப்ப - அதிக இன்பசுகத்தைப்போன்ற; பகையே விளைத்த - பகையால் வரும் துன்பத்தையும் தந்த; கவடா விகற்ப கொடுமை - இரண்டாகப் பிரிந்துள்ள இவ் வேறுபாடாம் கொடுமை; மனமொன்றி நின்ற - இவ்விரண்டிலும் மனம் ஈடுபட்டு நிற்கின்ற; இவை அஞ்சில் அஞ்சு வளமாய் எடுத்த சடமாய் - இவற்றின்மீது பயந்தும் வளர்ந்து எடுத்துள்ள இவ்வுடம்பு; தினமாடி நின்று - மாயையால் தினமும் நிலையாது உழன்று; இரையால் உழன்று - உணவுக்காக

புலனாதி பூத மிகுஞான காம
பொலி வோடு நாலு கரணம்
பிலனாதி சீவன் பிரியா யெழுந்த
பெரிதான யீச ரவையும்
குலமாதி தோறு யிவையா றோடாறு
குலபேத மான முதலே
உலகாதி யந்த நடுவந் துறைந்த
உமைபாதி தங்குஞ் சிவனே (14)
கனமாய்கை தாதை மலமூழ்கி விந்து
கரைவாச லூடு நுழைவாய்
மனதாவி யன்னை வுடலூ டெடுத்த
வளமான இந்த வுடலை

அலைந்து; திரியாமலுந்தன் அருளால் - உழலாமல் இறைவனாகிய உன் கருணையால்; உன - உன்னை; தேடுகின்ற திவை தூரநின்ற - நாடுகின்ற போதில் எட்டி நிற்கின்ற; உமைபாதி தங்குஞ் சிவனே.

பா.வே. - 'கணமானமலோன்....கபடானயிந்த விகடான கொடுமை', 'மணமாக நின்ற', 'இரையில் நின்று', உனதோடு ரைந்து; பி.வே. - 'செடலம்' (மா.தவநிலை);

வி.14. புலன் ஆதி பூதம் - (வி.11) ஐம்புலனுள் ஆதியாகிய சுவை எனும் பூதம்; மிகு ஞானம் - மிகுகின்ற அறிவு; காமம் - மிகுகின்ற இன்பம்; பொலிவோடு நாலுகரணம் - அதிகமான சுழற்சிகள்; பிலன் - எறும்பு; ஆதி சீவன் - முதலான உயிர்கள்; பிரியாய் எழுந்த பெரிதான ஈசர் - வேறுபாடாகப் பிறக்கக் காரணமான பெரியவனாம் இறைவன்; குலமாதிதோறும் - ஒவ்வொரு குலந்தோறும்; இவை - இவ்வுயிர்கள்; ஆறோடாறு - 36 வகை; குலபேதமான முதலே - தம்முள் வேறுபட்டு நிற்கும்பொழுதே; உலகாதி அந்தம்நடுவந்து உறைந்த அவற்றுக்கு நடுவே வந்து அமர்ந்துள்ள உலகமுதலான; உமைபாதி தங்குஞ் சிவனே;

பா.வே. - 'புனலாதி பூதம்', 'பிரியாத வேதன் பெரிதான யீசர்', 'இவை யாரோடானும் குலபேதமான முதலே', 'நடுவாகி நிறைந்த' (மா.தவநிலை); பார்க்க: 'புலனாதி' (வி.10); 'குலம்' (வரி 546); 'குலபேதம்' (வி.6);

வி.15. கனமாய்கை - கனத்த மாயத்தால்; தாதை - தந்தை; மலமூழ்கி - அழுக்கில் முங்கி; விந்து - ஆணின் உயிரணு; கரைவாசலூடு - இருபுறத்தும் கரைச்சுவருடன் உள்ள நுழைவு வழியாக; நுழைவாய் - நுழையும்; மனதாவி யன்னை - தாயின் மனம் உயிர் எனுமவற்றிலும்; உடலூடுடெடுத்த உடம்பிலும் தங்கி உருவெடுத்து; வளமான இந்த

கனமாக முந்த வழியேக வந்து
கடிதாகி யோடி விடுனாள்
உனதேடி நின்ற யருள்பூண வேணு
முமைபாதி தங்குஞ் சிவனே (15)
கோதுந் தவிழ்ந்த மனதே புகுந்த
குருவான கல்வி நிறைநூல்
சூதுந் தவிழ்ந்த துவே புகுந்த
சுளிவான சிந்தை பொருளாம்
ஏதுந் தவிழ்ந்த யருளே புகுந்து
யிறையாய் நிறைந்த பொருளே
ஓதுந் தவிழ்ந்த புகழே சிறந்த
யுமைபாதி தங்கும் சிவனே (16)

உடலை - எலும்பு, சதைகளுடன் உருண்டு திரண்டு வரும் இந்த மானிட தேகத்தை; கனமாக - பெரியதான; முந்த வழியேக வந்து - மூப்பானது தானே ஏவ வந்து; கடிதாகி - விரைவாகி; ஓடிவிடுனாள் - ஓடிவரக்கூடிய மண்ணுலகை நீக்கும் இறுதிநாளில்; உனதேடி நின்ற - இறைவனாகிய உன்னைத் தேடிநிற்கும்; அருள் பூணவேணும் - கருணை காட்ட வேண்டும்; உமைபாதி தங்குஞ் சிவனே;

பா.வே. 'வளமான இந்த உடலைகனமாய்', 'முத்தவழி ஏவவந்து கடிதாகி ஏவி விடுநாள்', 'உளதொடு நின்ற' (ச.ம.நூ.); 'தனமாய்கையாக மயல்முள் கவிந்து தரைவாசலூடும் துணைவாம்', 'ஆடுவிடும்னாள்', 'யெனதருள் பூணவேணும்' (மா.தவநிலை); 'கனமாய்கை தையல் மயல் மோக விந்து', 'உனதோடு நின்று' (கை.பிரதி);

வி.16. கோதும் - குற்றமும்; தவிழ்ந்த - நீங்கிய; மனதே புகுந்த - உள்ளத்தில் நுழைந்த; குருவான கல்வி நிறைநூல் - ஆசானாக விளங்கும் நிறைந்த கல்விச்செல்வம்; சூதும் - வஞ்சனையும்; தவிழ்ந்து - நீங்கி; அதுவே - அக்கல்வியும்; புகுந்த - சென்ற; சுளிவான சிந்தைபொருளாம் - இலகுவான மனத்தின் பொருளாகும்; ஏதும் - மூலம்; தவிழ்ந்த - நீங்கிய; அருளே புகுந்து - கருணையானவனே, நீ உள்ளே நுழைந்து; இறையாய் நிறைந்த பொருளே - எல்லாவற்றுக்கும் இறைவனாக நிறைந்துள்ளவனே; ஓதும் - எடுத்துச் சொல்லவும்; தவிழ்ந்த நீங்கிய; புகழே - புகழுடையவனே; சிறந்த - சிறப்புள்ள; உமைபாதி தங்குஞ் சிவனே.

பா.வே. - 'கோது தவிர்ந்து', 'கல்வி நிறைந்து', 'சூதுந்தவிர்ந்து', 'அறிவான சிந்தை', 'இறைவா நிறைந்த அரனே', 'ஓதும் நிமிர்ந்த' (ச.ம.நூ.); பி.வே. - 'தவிழ்ந்து' 'நிறைவாக நிறைந்த யரனே', ஓதும்

கொற்றாய் மலர்ந்த அதுவோ சிறந்த
குறிகாண முன்னின்ற விரையோ
விற்றா யெடுத்த பலமாகை யாவும்
விளைவாகி மீறி விரிவாய்
செற்றார் முன்னின்ற தெவரோ பின்னின்ற
சிறியார் பின்வாற தவரார்
உற்றார்கள் காண அறியா தறிந்து
யுமைபாதி தங்குஞ் சிவனே (17)
மாயாத சீவ னெவையே பிறந்து
வழியேகி மாண்டு விடுமோ
தேயா துயர்ந்த கதிரோன் வளந்த
திருவோடு வந்த மதியும்

நிமிர்ந்த' (மா.தவநிலை); பா.வே. - 'சூதும் தவிர்த்து...வெளியான சிந்தை பொருளாய்', 'ஏதும் தவிழ்ந்த யருளே புகுந்த யிரைவா நிறைந்த சுரனே' (கை.பிரதி);

வி.17. கொற்றாய் < கொத்தாய் - குலையாய்; மலர்ந்த அதுவோ - விரிந்த பூக்களோ; சிறந்த - சிறப்பான; குறிகாண முன்னின்ற - அடையாளமாக முதலில் நிற்பது; விரையோ - விதைகளோ; விற்றாய் < வித்தாய் - விதைகளாய்; எடுத்த பலமாகை -பிறவி எடுத்துள்ள பல பொய்மைகள்; யாவும் - எல்லாமும்; விளைவாகி - தோற்றமாகி; மீறி - மிஞ்சி; விரிவாய் - விரிந்து; செற்றார் < செத்தார் - இறந்தவர்கள்; முன்னின்றதெவரோ - யாவர் முன்னே நின்றனர்; பின்வாறது - பின்தொடர்ந்து போவது; அவர் ஆர் - அவர்கள் யார் யார்? உற்றார்கள் காண - உறவினர்கள் காணும்படியாக; அறியாது அறிந்து - அறிந்தும் அறியாதது போல; உமைபாதி தங்குஞ் சிவனே;

பி.வே. - 'கொத்தால்', 'வித்தால்', 'செத்தார்', 'உத்தோர்கள்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'கொத்தாய்' (மா.தவநிலை, கை.பிரதி); 'கற்றோர் காண யரியாதரிந்த உமைபாதி தங்குஞ் சிவனே' (கை.பிரதி);

வி.18. மாயாத சீவன் - சாவாத உயிர்; எவையே பிறந்து - எந்த ரூபத்தில் சனித்து; வழியேகி - நீண்ட பிறப்பு - இறப்பு வழியில் சென்று; மாண்டுவிடுமோ - இறந்துவிடும்; தேயாதுயர்ந்த கதிரோன் - தேய்வு இல்லாது முழுவடிவுடன் உயர்ந்துவரும் ஞாயிறும், வளந்த < வளர்ந்த - தேய்ந்து பின் வளரும்; திருவோடு - உருவத்துடன்; வந்த மதியும் - வானில் வருகின்ற நிலவும்; சாயாதெழுந்த வழியேக என்று - அவ்வவற்றின் வழியில் பிறழாமல் செல்வதற்கு என; சமனாக யிச்சை

சாயா தெழுந்த வழியேக வென்று
சமனாக யிச்சை யதின்முன்
ஓயாத வேலை தருவே யருந்து
முமைபாதி தங்குஞ் சிவனே (18)
பாரே சிறந்து படியே மகிழ்ந்து
பலனா ளிருந்து முன்தாள்
சீரே புனைந்து யருளே மிகுந்து
திறமாக நின்ற தனியே
வேரே விளைந்த முனையே மிகுந்த
விரிவே யென்னெஞ்சின் வரையில்
ஊரே சிறந்து குடிபூத வேணு
முமைபாதி தங்கும் சிவனே (19)

- சமமாக நியமம் ஆகியுள்ளன; அதின்முன் - அதற்கு முன்பு; ஓயாத வேலை தருவே யருந்து - ஓய்வு இல்லாதவேலையாகச் செலுத்திக் கொண்டிருக்கும்; உமைபாதி தங்குஞ் சிவனே;

பா.வே. - 'சீவன் எதையோ பிறந்து' (ச.ம.நூ., மா.தவநிலை); 'அறிந்த கதிரோன்' (ச.ம.நூ.); 'வந்த மதியும்' (ச.ம.நூ.); மா.தவநிலை, கை.பிரதி); 'வளியேக வேறு சமனாக வோசை தினமும்', 'ஓயாத வேலை கடுவேயருந்து' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); பி.வே. - 'சீவன்ய வையும்', 'தேயாது வளர்ந்த கதிரோன்' (கை.பிரதி);

வி.19. பாரே சிறந்து படியே மகிழ்ந்து - இந்த உலகமாகிய பூமி சிறக்கவும், மகிழவும்; பலனாளிருந்தும் - பல காலம் நிலைத்திருந்தும்; உன்தாள் - இறைவனாகிய உனது திருவடிகளை; சீரே புனைந்து - அழகாக வருணித்துக் கூறும் படியாக; அருளே மிகுந்து - கருணை நிறைந்து; திறமாக நின்ற தனியே - வலிமையாக நின்றுள்ள தனிப் பெரும் பொருளே; வேரே - வேராகவும்; விளைந்த முனையே - வளர்ந்துயர்ந்த நுனியாகவும்; மிகுந்த விரிவே - மிகவும் விரிந்ததாகவும்; என்னெஞ்சின் வரையில் - எனது உள்ளத்தளவில்; ஊரே சிறந்து - ஊரினர் சிறக்குமாறு; குடிபூதவேணும் - குடிபுக வேண்டும்; உமைபாதி தங்குஞ் சிவனே.

பா.வே. - 'அடியேன் மகிழ்ந்து' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'சீரே சிறந்து' (மா.தவநிலை); 'அருளேயிருந்து' (ச.ம.நூ.); 'அருளே நிறைந்து' (மா.தவநிலை, கை.பிரதி); 'விளைந்த முளையே' (மா.தவ நிலை); 'ஊரெங்கும் சிறந்து' (ச.ம.நூ.); 'ஊரே வளர்ந்து' (மா.தவநிலை, கை.பிரதி);

**நடை**

ஓதுந் திருவிருத்த முத்தமனும் பார்பதியும்
காதலுடன் கேட்டுக் கருணை மனமகிழ்ந்து
தங்கு மிருகசிங்கன் தன்னை யரனார்னோக்கி
பொங்கு மிருகசிங்கா பூவில்மிகு மாகபுனல்
சிந்தைவைத்தால் மீறுஞ் சிறந்த யருள்னிலையில்
உந்தன் மனதி லுகந்தவரங் கொடுப்போம்
..... வேறு மைந்த வலுவரங்கள்
..... என்றியம் பினார்ரீசு பரரும்
அந்தவுரை சொன்ன யரன்பாதந் தெண்டனிட்டு

*325.* ஓதும் திருவிருத்தம் - மிருகசிங்கன் பாடும் சிவ தோத்திர விருத்தப் பாக்களை; உத்தமனும் - சிவனும்; பார்பதியும் - பார்வதியும்; பி.வே. - 'தமிழ் விருத்தம்' (கை.பிரதி); 'உத்தமனும் தான்கேட்டு' (மா.தவநிலை); பார்க்க: 'உத்தமன்' (வரி 2185);

*326.* காதலுடன் - அன்புடன்; கேட்டு - செவிமடுத்து; கருணை - இரக்கத்துடன்; மனமகிழ்ந்து - மனத்தில் உவகையுற்று;

*327.* தங்கு மிருகசிங்கன் தன்னை - தங்கியுள்ள மிருகசிங்கனை; அரனார் நோக்கி - சிவனும் பார்த்து;

*328.* பொங்கு மிருகசிங்கா - தவங்கள் அதிகம் நிறைந்த மிருகசிங்கனே; பூவில் மிகு மாகபுனல் - பூமியில் மிகுந்த மாகபுன லாட்டினையும் தவத்தினையும்; பி.வே. - 'பொங்கும் புகழ் மகாதவம் பூவில் மிருக சிங்கன்' (ச.ம.நூ., கை.பிரதி); 'பொங்கும் புகழ் தவமும் பூவில் மிருகசிங்கா' (மா.தவநிலை);

*329.* மீறுஞ்சிறந்த அருள் நிலையில் - அதிகமான தவமேன்மையில் சிந்தை வைத்தாய் - மனத்தை நேராக நடத்தித் தவம் செய்தாய்; பி.வே. - 'மீளா சிறந்த அருள் நிலையில்' (ச.ம.நூ.); 'நீயும் சிறந்த யருள் நிலையில்' (மா.தவநிலை); 'சிந்தைபத்திமீறி' (கை.பிரதி);

*330.* உந்தன் மனதில் - உன் உள்ளத்துக்கு; உகந்த - விருப்பமான; வரங்கொடுப்போம் - வரங்களை நல்குவோம்; பி.வே. - 'உற்ற வரம்' (ச.ம.நூ.); 'உற்றதெல்லாம் கேளும்மென்றார்' (மா.தவநிலை; கை.பிரதி);

*331.* ....மைந்த - மைந்தனே; வலுவரங்கள் - பலமான வரங்களை;

*332.* ....என்று - என; இயம்பினார் - கூறினார்; ஈசுபரரும் - சிவனும்;

*333.* அந்தவுரை சொன்ன - கேட்குமாறு கூறிய; அரன்பாதம் சிவபெருமானின் தாள்களை; தெண்டனிட்டு - வணங்கி (பார்க்க: வரி 279);

கந்த மிகுந்த கடவுளே சற்றிபங்கா
பித்தனே நின்ம்பாதம் பிரியாம லென்னாளும்
கத்தனே காத்திருக்கக் கருதி வரமீயுமென்றார்
என்று தவமுனிவ னிவ்வார்த்தை தானுரைக்க

**நிலையாமையை மிருகசிங்கனும் இல்லறத்தின் மேன்மையை இறைவனும் உரைத்தல்**

கொன்றை யணிந்தசடைக் கோமானு மேதுரைப்பார்
எந்தனுட பாத மியல்வா யருளுதற்கு
உந்தனக்கு வேத னுகமை விதித்தபடி

*334.* கந்தமிகுந்த - புகழ்மிக்க; சோதிமிகுந்த; கடவுளே - ஈசனே; சற்றி < சத்தி < சக்தி - உமை (வரி 10,300); பங்கா - பாகனே (உமையை உடலில் ஒரு பங்காக வைத்துள்ள ஈசனே); பா.வே - 'நேசம் நிறைந்த சத்திய பங்கா' (ச.ம.நூ.); 'நிமலனே' (மா.தவநிலை; கை.பிரதி);

*335.* பித்தனே - (வரி விளக்கம் 26); நின்(ம்)பாதம் - உனது திருவடிகள்; பிரியாமல் - விட்டு நீங்கி விடாமல்; என்னாளும் < எந்நாளும் - எந்த நாளிலும்;

*336.* கத்தனே < கர்த்தனே - பார்க்க: வரி 27; காத்திருக்க - உன் பாதங்களின் கீழே எப்போதும் தங்கி இருக்க; கருதி - நினைத்து; வரம் - வரங்களை; ஈயுமென்றான்- அருளுக என மிருகசிங்கன் வேண்டினான்;

*337.* என்று தவமுனிவன் - இவ்வாறு தவவலிமை கொண்ட மிருகசிங்கன்; இவ்வார்த்தை - ஈசன் திருப்பாதாங்களில் தங்கியிருக்க வரம் வேண்டிய வார்த்தைகள்; தானுரைக்க - கேட்க;

*338.* கொன்றையணிந்த - சரக்கொன்றை மலரைச் சூடிய (வரி 181); சடைக்கோமான் - சடைமுடிகளுடைய இறைவன்; ஏதுரைப்பார் - பின் வருமாறு கூறுவார்; பி.வே. - 'சடைக்கோமானுந்தான் கேட்டு' (ச.ம.நூ., மா.தவநிலை); ஒப்பிடுக; 'சடைமுடியார்' (வரி 2559), 'சடைமுடியோன்' (491), 'சடையணிந்தவன்' (வி.60); 'அப்பை தரித்த அரன்' (வரி 349);

*339.* எந்தனுடைய < என் தன் உடைய - என்னுடைய; பாதம் - திருப்பாதம்; இயல்வாய் அருளுதற்கு - இயல்பாக நல்குவதற்கு; பி.வே. - 'எந்தனுடன்பாதம்' (மா.தவநிலை); 'எந்தனிடபாதமியல்பாய் யமருவதற்கு' (கை.பிரதி);

*340.* உந்தனக்கு < உன் தனக்கு - உனக்கு; வேதன் - பிரமா; உகமை - (வாழ்) நாள்; விதித்தபடி - கணக்கிட்டு நல்கியவாறு; பா.வே. - 'உவமையிலா அளவு' (ச.ம.நூ.); 'வேதாவுன் சிரசிலமைத்தபடி' (மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'விதித்தபடி' (வரி 1658);

[இல்லறத்தி லொத்து யியல்]வுடனே வாழ்ந்திருந்து
[வல்லவனே இன்பதுன்ப]மெனு மாய்கைக் கடல்நீந்தி
செல்காலம் வெல்காலஞ் சேர யனுபவித்து
நல்கால மானதொரு நாமுகன்றன் கற்பினையே
சேர யனுபவித்துத் தீந்ததின்பின் மாமுனியே
வாருமென யழைப்போம் வந்திடுங்காண் வெள்ளிவரை
இவ்வார்த்தை யீச னெடுத்துரைக்க மாமுனியும்

341. இல்லறத்திலொத்து - இல்லறதருமத்தை இனிமையாக மனைவியுடன் இணைந்து நடத்தி; இயல்வுடனே வாழ்ந்திருந்து - வாழ்வியலோடு ஒட்டி வாழ்ந்து; பா.வே. - 'இயல்புடனே வானத்திருந்து' (ச.ம.நூ.); பி.வே. - 'இல்லறத்தில்யீயும்யியபுடனே' (மா.தவநிலை); 'வாழ்ந்திருந்தால்' (கை.பிரதி); காண்க: 'இல்லறம்' (வரி 384, 434, 446, 486, வி.25);

342. வல்லவனே - தவத்தில் சிறந்தவனே; இன்பதுன்பமெனு மாய்கை - மகிழ்ச்சியும் துயரமும் மாறி மாறி ஏற்படும் வாழ்க்கையாகிய மாயை எனும்; கடல்நீந்தி - பெரிய சமுத்திரத்தில் எதிர்நீச்சலிட்டு; பா.வே. - 'கடல் மூழ்கி' (ச.ம.நூ.); பி.வே. - 'நீந்து' (மா.தவநிலை; பார்க்க: 'வல்லவன்' (391, 788, 1494);

343. செல்காலம் - செல்வமும் புகழும் செல்லும் துன்பகாலத்தையும்; வெல்காலம் - அவற்றை ஒருங்கே பெறும் வெற்றியுள்ள மகிழ்ச்சியான காலத்தையும்; சேர - ஒருசேர, சேர்ந்தாற்போல்; அனுபவித்து -வாழ்ந்து; பா.வே. - 'செல்காலம் நிகழ்காலம்' (ச.ம.நூ., கை.பிரதி); காண்க: 'செல்சாலம்' (716); 'வெல்காலம்' (717);

344. நல்காலமானதொரு - இம்மண்ணுலகை விட்டு நீங்கும் நல்ல நேரத்தில்; நாமுகன் < நான்முகன் < பிரமன்; தன் - தன்னுடைய; கற்பினையே < கற்பனையே - ஊழ்வினைப்படி; பா.வே. - 'நல்காலமதிலுண்மை' (ச.ம.நூ.); 'நாம் அழைப்போம் வாருமென்றார்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'நாமுகன்' (வி.52);

345. சேரயனுபவித்து - (வரி 343); தீந்ததின்பின் < தீர்ந்ததின்பின்; மாமுனியே - மகாமுனிவனே;

346. வாரும் என - முனிவனே! இம்மண்ணுலகை நீத்துவிட்டு மேலுலகுக்கு வருக என்று; அழைப்போம் - நாம் அழைத்துக் கொள்வோம்; வந்திடுங்காண் - நீவிர் அப்பொழுதில் வந்துவிடுக; வெள்ளிவரை - கயிலாய மலைக்கு; காண்க: 'வெள்ளிவரை' (393, 2399, 2545, 2664); ஒப்பிடுக: 'வெள்ளிமலை' (1024, 1144, 1303, 1375);

347. இவ்வார்த்தை - மேலேயுள்ளவற்றை; ஈசன் எடுத்துரைக்க -சிவன் கூறவும்; மா முனியும் - (வரி 345); பி.வே. - 'இவ்வாறு அதை

அவ்வார்த்தை கேட்டு யாக மிகவுருகி
அப்பைத் தரித்த அரனே பராபரனே
எப்போதுன் தாள்காண்பே னென்றிருந்தே னீசுரரே
அண்டத் தமரர் ரறியாப்பொற் பாதமிதை
கண்ட அடியேனின்னங் கசத்தி லழுந்துவனோ
மாயக் கடலில் மனதுவைக்க நேரமில்லை
காயக் கடலில் கடந்தாலிமைப் பொழுதில்

ஈசர்' (ச.ம.நூ.); 'ஈசர் இயம்ப' (மா.தவநிலை); 'ஈசருரைக்க' (கை.பிரதி); 'இயல்முனி ஏதுரைப்பார்' (மா.தவநிலை, கை.பிரதி);

348. அவ்வார்த்தை - சிவன் கூறியவற்றை; கேட்டு - செவியுற்று; ஆகம் மிகவுருகி - யாக்கை மிகவும் நெகிழ்ந்து; பார்க்க: 'ஆகம்' (வரி 412); ஒப்பிடுக: 'ஆக்கை' (வரி 1678, வி.67);

349. அப்பை - கொன்றைமலரை; தரித்த - சடையில் சூடிய; அரனே - சிவனே; பராபரனே - (வரி 118); காண்க: 'அப்பைதரித்தஅரன்' (1587); ஒப்பிடுக: 'கொன்றையணிந்தஅரன்' (181);

350. எப்போதுன்தாள் காண்பேன் என்றிருந்தேன் - உன்னுடைய திருப்பாதங்களை என்றைக்குக் காண்பது எனக் காத்திருந்தேன்; ஈசுரரே - இறைவனே;

351. அண்டத்தமரர் - வானுலகத்துத் தேவர்களும் கடவுளரும்; அறியாப் பொற்பாதமிதை - கண்டுபிடிக்கவியலாத பொன்னான திருவடி களை (வரி 322); காண்க: 'அண்டத்தமரர்' (வரி 2499);

352. கண்டஅடியேன் - நேரில் கண்டுகொண்ட நான்; கசத்தில் < கயத்தில் - நீர்ச் சுழற்சியுடைய ஆழமானது போன்ற வாழ்க்கை எனும் துன்பத்தில்; அழுந்துவனோ - கிடந்து உழலுவனோ; காண்க: 'அடியேன்' (598, 965, 1332, 1336, 1351, 1387, 1587, 1937); 'கசம்' (வி.44);

353. மாயக்கடலில் - பொய்மைத் தோற்றமுள்ள வாழ்க்கை எனும் சமுத்திரத்தில்; மனதுவைக்க - உள்ளத்தைச் செலுத்த; நேரமில்லை - பொழுது இல்லை; பி.வே. - 'மனது பற்ற நேமமில்லை' (ச.ம.நூ., மா.தவநிலை); 'மனது பத்த நேசமில்லை' (கை.பிரதி); காண்க: 'மாயக் கடல்' (687);

354. காயம் - பொய்யான உடம்பு; கடலில் - அதன் பரந்த கடல்போன்ற பொய்த்தோற்றத்தில்; கடந்தார் - நீந்தியவர்கள்; இமைப் பொழுதில் - கண்இமைக்கும் ஒரு நொடிப் பொழுதில்; பி.வே. - 'கலந்தார்' (ச.ம.நூ.); 'கலந்தால் யிமைப்பொழுதில்' (மா.தவநிலை); 'கலந்தயிமை பொழுது' (கை.பிரதி); காண்க: 'இமைப் பொழுது' (937,2410);

பாரில் சிவகருத்தும் பண்புடனே தானதனம்
நீரில் குமிழியென்று நினவுவந்து தோற்றாது
ஊத்தைச் சடல(ம்) மொழியறியா தாசையுற்று
காத்தைப் பிடித்துக் கரகமடைத்த தொப்பாய்
நீண்ட மயலாசை நினவுவந்து தொத்தாது
மாண்டு யிமன்கைதனிலே வந்தனாள் தோன்றிவிடும்

*355.* பாரில் - இவ்வுலகில்; சிவகருத்தும் - சிவனைக் குறித்த எண்ணங்களும்; பண்புடனே - பண்பாகச் செய்யும்; தானதனம் - தானதருமங்களும்; பா.வே. - 'பாரில்சிறந்த கருத்து' (ச.ம.நூ.); பி.வே. - 'சிவதருமம்' (கை.பிரதி); 'தானதருமம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*356.* நீரில் குமிழியென்று - தண்ணீரில் ஏற்படும் நீர்க்குமிழி சிறிதுநேரத்தில் வெடித்து, இல்லாமல் போவதுபோல்; நினவு < நினைவு - (பார்க்க வரி 359) எண்ணம்; வந்து தோற்றாது - ஏற்படாது; பி.வே. - 'நினைவுணர்ந்து ஒட்டாது' (ச.ம.நூ.); 'நினவுணர்வு வந்து தோற்றாது' (மா.தவநிலை);

*357.* ஊத்தைச் சடலம் - அழுக்கடைந்து நாற்றமெடுக்கும் உடம்பு (வரி 131); மொழியறியாத - மொழியவியலாத, சொல்ல முடியாத; ஆசையுற்று - விருப்பம்உற்று; 'ஒழிவறியாது ஆசைஉற்று' (ச.ம.நூ.); பா.வே. - 'ஒழிவறியாய்ப் பீத்தலிது' (மா.தவநிலை, கை.பிரதி);

*358.* காத்தை < காற்றை; பிடித்து - சேர்த்து; கரகமடைத்த தொப்பாய் - கமண்டலத்தில் அடைத்து வைத்ததற்கு ஒப்ப; பி.வே. - 'கரகத்தடைத் தப்பால்' (ச.ம.நூ.); பா.வே. - 'காத்தைப் பிடித்தடைத்துக் கவையடைத்த தோல் பாண்டம்' (மா.தவநிலை); 'கரத்திலடைத்த தொப்பாய்' (கை. பிரதி); காண்க: 'காத்து' (காற்று) (வரி 365);

*359.* நீண்ட மயல் ஆசை - பெரிய மயக்கங்களுடன் கூடிய ஆசை; நினவு < நினைவு - இறைவனைப் பற்றிய எண்ணம்; வந்து தொத்தாது < வந்து தொற்றாது - பற்றிப் பிடிக்காது; பா.வே. - 'நீண்ட தவம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'நினைவு வஞ்சகர்காகாது' (கை. பிரதி); காண்க: 'நினவு' (123, 356, 745), 'நினைவு' (1281, 1784);

*360.* மாண்டு - இறந்து; இமன் கை தனிலே - எமனது கையில் வந்த நாள் - சேர்ந்த நாள்; தோன்றிவிடும் - இறைவன் பற்றிய நினைவு ஏற்பட்டுவிடும்; பா.வே. - 'மாண்டுமென கயிற்றில் வந்தனாணவத்ததாட் டிவிடும்' (ச.ம.நூ.); 'மாண்டுபோய்யேமன் கயத்தில் வந்து நாள் நேர்ந்து விடும்' (மா.தவநிலை); 'சேர்ந்துவிடும்' (கை.பிரதி);

மாய்கை யுடலில் மரணம் விதிமுகிந்தால்
காயம்வெந்து தீயில் கருகி யழிந்துவிடும்
மெய்யனே நின்பொற்பாதம் வேண்டியபேர்
வீத்திருந்தார்
அய்யனே பூவுலகி லாரிருந்து வாழ்ந்தார்கள்
காத்தாடும் பாண்டமிது காத்தகன்றா லேதுமில்லை
கூத்தாடு முன்னுடைய கோலத்தைக் கண்டவரார்
பாரில் பொருள்மயக்கம் பாவையர்மே லாசைவெள்ளம்
காரிருண்டு விள்ளக் கனவரையில் சந்திரனும்

361. மாய்கை - மாயத்தின்; உடலில் - உடம்பில்; மரணவிதி - இறப்பு; முகிந்தால் - வந்துற்றால்; பி.வே. - 'மாய்கைவுடல்லிதுதான்' (மா.தவநிலை); 'முடிந்தால்' (கை.பிரதி);

362. காயம் வெந்து தீயில் - கொழுந்து விட்டெரியும் தீயில் உடம்பு எரிந்து; கருகி அழிந்துவிடும் - கருகலுற்று; அழிந்து விடும் - இல்லாதாகி விடும்; பி.வே. - 'கருவி' (ச.ம.நூ.);

363. மெய்யனே - உண்மையான இறைவனே; நின் பொற்பாதம் - உனது பொன்னாலான திருப்பாதங்கள் வேண்டியபேர் - காணவேண்டு மென்று வேண்டிக்கொண்டவர்கள்; வீத்திருந்தார் < வீற்றிருந்தார் - தங்கியிருந்தவர்கள்; பி.வே. - 'நின் (உன்) பாதம்' (ச.ம.நூ., மா.தவ நிலை, கை.பிரதி); காண்க: 'பொற்பாதம்' (வரி 322);

364. அய்யனே - தலைவனே; பூவுலகில் - இப்பூமியில்; ஆரிருந்து - யார் நிலையாக இருந்து; வாழ்ந்தார்கள் - உயிருடன் இருந்தனர்; பா.வே. - 'ஆசையினால் யார் இருந்து' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'பூவுலகு' (வரி 26, 389, 451, 456, 633, 644, 723, 740, 892, 938, 1574, 1648, 1666, 1795, 1939, 2401, 2542);

365. காத்தாடும் பாண்டமிது - காற்று சுழல்கின்ற மண்பாத்திரம் போன்றது; காத்தகன்றால் - காற்றுச் சுழற்சி நீங்கினால்; ஏதுமில்லை - எதுவுமே இருக்காது; பா.வே. - 'கூத்தாடும்' (ச.ம.நூ.);

366. கூத்தாடும் உன்னுடைய கோலத்தை - நாட்டியமாடுகின்ற உன் திருக் கூத்துக் காட்சியை; கண்டவரார் - நேராகக் கண்டவர் யாருமில்லை; பா.வே. - 'கூத்தாட்டம் பொல்லாக் குடிச் சாக்காடு' (ச.ம.நூ.); 'கூத்தாட் டம் போலே குடலை சளக்காடியிதுவாம்; காண்க: 'கோலம்' (181, 1098);

367. பாரில் - உலகில்; பொருள் மயக்கம் - செல்வத்தின் மீது ஏற்படும் பற்று; பாவையர் மேல் ஆசை வெள்ளம் - அழகான பெண்கள் மீது மிகுந்த மய்யல்; பி.வே. - 'பாவைய்யர்மேல் ஆசை' (கை.பிரதி);

368. காரிருண்டு - கரிய மேகமானது; விள்ள - விலக; கனவரையில் - பெரிய மலையில் தெரியும்; சந்திரனும் - நிலவினைப் போலவாம்;

இந்த மயக்கம் மிற்பிறப்பு மல்லால்
வந்துன் மலரடியில் வாகாகச் சேர்ந்து
காணக் கிடையாதபொருள் கை(ய்)மேலே
வந்துதென்றால்
வீணுக்கு ளாரும் விடுவார்களோ யீசுரனே
என்று மிருகசிங்க னீதுரைக்க யீசர்சொல்வார்
மன்னுலகில் வேதன் வகுத்தவிதி கற்(ப்)பினையை
நாமுமதைத் தடுத்தால் னானிலத்துக் கோராது

பா.வே. - 'காரி நடுவில்லாக் கணவரையில் சந்திரனாம்' (ச.ம.நூ.); 'காரில் நடுவில்க் கனவரையில்ச் சந்திரனாம்' (மா.தவநிலை);

369. இந்த மயக்கம் - இப் பொய்மைத் தோற்றம்; இற்பிறப்பும் < இப்பிறப்பும் - இந்த மானிடப் பிறப்பும்; இல்லாமல் - அற்றுப்போம் படி; பா.வே. - 'இறப்பும், பிறப்புமல்லாய்' (ச.ம.நூ.); 'இறப்பும் பிறப்பவர்க்கும்' (மா.தவநிலை, கை.பிரதி);

370. வந்துன் மலரடியில் - இறைவனாகிய உன் திருப்பாதங்களை அடைந்து; வாகாக - சிறப்பாய் (வரி 569); சேர்ந்து - அடைந்து; பி.வே. - 'வந்துள மலரடியில்' (ச.ம.நூ.); 'வந்துவுமது மலர்ரடியை' (மா.தவ நிலை); பா.வே. - 'சேரலரிது' (ச.ம.நூ.); 'சேரவரிது' (மா.தவநிலை); 'சேர்ந்த நாள் தீர்ந்து விடும்' (கை.பிரதி);

371. காணக்கிடையாத பொருள் - காண்பதற்கு மிகவும் அருமை யான பொருள்; கை(ய்)மேலே வந்துதென்றால் - கையிலே தானே வந்து தோன்றினால்; பி.வே. - 'கைமீதில் வந்ததென்றாரே' (ச.ம.நூ.); 'கைக்கு ளகப்பட்டதென்றால்' (கை.பிரதி);

372. வீணுக்குள் - வீணாக; ஆரும் - யாராவது; விடுவார்களோ - விட மாட்டார்கள் அல்லவா? ஈசுரனே - இறைவனே! பி.வே. - 'வீணுக்குப் பாரில்' (ச.ம.நூ.); 'வீணாய் யவரும்' (கை.பிரதி);

373. என்று மிருகசிங்கன்; ஈதுரைக்க - இவ்வாறு மிருக சிங்கமுனி இறைவனிடம் கூற; ஈசர் சொல்வார் - ஈஸ்வரன் பின்வருமாறு கூறுவார்; பி.வே. - 'இவை உரைக்க' (மா.தவநிலை); 'ஈசர்' (ச.ம.நூ.);

374. மன்னுலகில் - இந்த உலகத்தில்; வேதன் - பிரமா; வகுத்த - நிர்ணயித்த; விதி - ஊழ் (வரி 73); கற்பினையை (வரி 344) < கற்பனையை - வினையை; பா.வே. - 'மண்ணுலகில்' (மா.தவநிலை, கை.பிரதி); பி.வே. - 'கற்பனையை' (கை.பிரதி); 'கற்பினையால்' (மா.தவநிலை); ஒப்பிடுக. 'வேதன் எழுத்து' (1116), 'வேதவினை' (717);

375. நாமுமதைத் தடுத்தால் - நாமே தடுத்தால்; நானிலத்துக்கு ஓராது - இந் நிலவுலகமான பூலோகத்துக்கு உகந்ததாகாது; பி.வே. - 'ஒவ்வாது'

ஆமாந் தவத்தி லணுகாது கன்மவினை
பிரவஞ்ச மாய்கையிலே பிரியமுடன் போயிருந்து
அறந்தவங்கள் செய்து யறிவுடனே வாழ்ந்திருந்து
சீருயர்ந்து வாழ்ந்து சிறந்தநலம் பாராட்டி
காமப் புணர்ச்சியிலே காமனிலை கண்டுணர்ந்து
ஏமன் கைக்கெட்டாம லெம்மை யறிந்தவர்க்கு
ஞானமிக விளையு[ம்] நாமேயவர் ராகும்

(ச.ம.நூ., மா.தவநிலை); 'ஆகாது' (கை.பிரதி); காண்க: 'நானில்லம்', 'நானிலம்'. (வரி 99, 1536);

376. ஆமாந்தவத்தில் - பெரிய தவ நோன்பில்; அணுகாது - நெருங்காது; கன்மவினை - கருமத்தால் வரும் ஊழ்வினைகள்; பி.வே. - 'ஆ மகா தவத்தில்' (கை.பிரதி); பா.வே. - 'காமவினை' (ச.ம.நூ);

377. பிரவஞ்சம் < பிரபஞ்சம் - வானும் மண்ணும் சேர்ந்த பூகோளம்; மாய்கையில் - மாயசுழற்சியில்; பிரியமுடன் - இல்வாழ்க்கையில் விருப்பமுடன்; போயிருந்து - சென்று வாழ்ந்து;

378. அறம் - தருமம்; தவங்கள் - நோன்புகள்; செய்து - புரிந்து; அறிவுடனே - புத்தியுடனும் ஒழுக்கமுடனும்; வாழ்ந்திருந்து - இல்லற வாழ்க்கையை அனுபவித்து; காண்க: 'அறம்' (617, 2558);

379. சீர் உயர்ந்து - செல்வமும் சிறப்பும் பெருகி; வாழ்ந்து; சிறந்த நலம் பாராட்டி - சிறப்பான பேறுகளைப் பெற்று; காண்க: 'நலம் பாராட்டல்' (வரி 373, 388, வி.8);

380. காமப் புணர்ச்சியிலே - ஆண் பெண் இன்பச் சேர்க்கையில்; காமனிலை - இன்பத்தின் எல்லையும் அளவும்; கண்டுணர்ந்து - அனுபவித்து அறிந்து; காண்க: 'காமப் புணர்ச்சி' (690);

381. ஏமன் - எமன்; கைக்கெட்டாமல் - நரகத்துக்கு எமனால் கொண்டு செல்லவியலாதபடி; எம்மை - ஈசனாகிய என்னை; அறிந்த வர்க்கு - எப்போதும் மனத்துள்ளே நினைத்தவர்களுக்கு; பா.வே. - 'ஏமப் பகையாம் எனத்தீது அனையது அன்றி' (ச.ம.நூ.); பி.வே. -'ஏமனுக்கு எட்டாமல் யென்னையறிந்தவர்க்கு' (மா.தவநிலை); 'எமன்', 'எம்மை நினைத்தவர்க்கு' (கை.பிரதி); காண்க: 'ஏமன்' (1835);

382. ஞானம் - இறைவனை அடையும் மார்க்கம்; மிகுவிளையும் - அதிகமாகக் கிடைக்கும்; நாமே அவர் ஆகும் - இறைவனாகிய யாமே அவர்கள் போலாகும்; பா.வே. - 'நாமே நீ யாவருக்கும்' (ச.ம.நூ.); பி.வே. - 'மிக நல்யிணையும்' (மா. தவநிலை); 'நாமே யவனாவோம்' (கை. பிரதி);

தானந் தவமுந் தரிக்குமவர் மனையில்
இல்லறத்தில் கூடி யிருந்தா ரெழுந்திருந்தார்
நல்லறத்தில் மீறும் நமக்குமிகு சத்தியுண்டு
ஆகையினா லில்லிடத்தி லன்புடனே போயிருந்து
தோகைக் கலவியிலே தோய்ந்து மிகவளர்ந்து
சித்திரம்போல் மங்கையரைச் சேர்ந்துநலம் பாராட்டி
புத்தியுடன் பெண்ணாசை பூவுலகி லாசையெல்லாம்
அல்லலின்ப போக மனுபவித்து நீமகிழ்ந்து

383. அவர் மனையில் - அப்படியானவர்களின் வீட்டில்; தானம் - தருமமும்; தவமும் - நோன்பும்; தரிக்கும் - தானே வந்து சேரும்;

பா.வே. - 'அவர் மனதில்' (ச.ம.நூ.); பி.வே. - 'தானமும் தவமும் தங்கும்' (மா. தவநிலை); 'தான தவமும்' (கை. பிரதி);

384. இல்லறத்தில் - லௌகீக வாழ்வில்; கூடியிருந்தார் - அனுப வித்து மகிழ்ந்தோர்; எழுந்திருந்தார் - அதிலிருந்து பின்பு விடுபட்டோர்; பா.வே. - 'கூடியிருந்தால் ஒத்திருந்தால்' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி);

385. நல்லறத்தில் - நல்ல தான தரும நோன்புகளில்; மீறும் - விஞ்சி நிற்கும்; நமக்கு மிகு சத்தியுண்டு - நம்மைப் போல அவர்களும் சக்திகளை அடைவர்; பா.வே. - 'நல்லறங்காண் எந்தனுக்கு நமக்கும் இரு சக்தி உண்டு' (ச.ம.நூ., மா. தவநிலை); 'நல்லார் தவமெந்தனுக்கு' (கை. பிரதி);

386. ஆகையினால் - எனவே; இல்லிடத்தில் - இல்லற வாழ்க்கை யில்; அன்புடனே - நேசமுடன், விருப்பத்துடன்; போயிருந்து - சென்று, வாழ்ந்து;

387. தோகை - மனைவியின்; கலவியிலே - முயக்கத்திலே; தோய்ந்து - அனுபவித்து, ஈடுபட்டு; மிக வளர்ந்து - மேன்மேலும் இன்பம் அனுபவித்து; ஒப்பிடுக: 'தோகையர்' (வி. 22); 'கலவி நிறைநூல்' (வி. 16);

388. சித்திரம் போல் - பார்த்துப் பார்த்து மகிழக்கூடிய அழகான ஓவியம் போலான; மங்கையரை - பெண்ணை; சேர்ந்து - மணம் புரிந்து முயங்கி; நலம் பாராட்டி - அப்பெண்ணின் உயர்வினைப் புகழ்ந்து;

389. புத்தியுடன் - ஞானமுடன்; பெண்ணாசை - பெண் மூலம் ஏற்படும் காம இன்ப ஆசைகளும்; பூவுலகில் ஆசை - பொன், பொருள், மண் மேலானவற்றில் எழும் விருப்பங்கள்; எல்லாம் - எல்லாவற்றையும்;

390. அல்லல் - இல்லறத்தில் ஏற்படும் துன்பம்; இன்ப போகம் - அதில் உண்டாகும் சுகம்; அனுபவித்து - உணர்ந்து; நீ மகிழ்ந்து - மிருக சிங்கனே! நீவிர் மகிழ்ச்சியுற்று;

வல்லவனே என்வரையில் வாருமென வுரைத்தார்
கிள்ளை மொழியுமையுங் கிருபையுட னீசுவரரும்
வெள்ளி வரைநோக்கி வித்தகனார் போயினராம்

**மிருகசிங்கருக்கு மணமுடித்தல்**

யீச ருரைத்தமொழி யிப்படியே தப்பாமல்
பாச முடனன் பாதத்தைத் தெண்டனிட்டு[ச்]
சங்கரனார் சொல்தனைத் தப்பாமல் தான்மீண்டு
தங்கள் பதிநோக்கித் தான்வந்து மாமுனிவன்
தந்தை தாய்ப்பாதந் தனில்வீழ்ந்து தெண்டனிட்டு

391. வல்லவனே - தவ வலிமையால் என்னைக் காணும் வல்லமை பொருந்தியவனே; என்வரையில் - (வரி 346) நான் இருக்கக் கூடிய கயிலாய மலையில்; வாருமெனவுரைத்தார் - வந்து சேர்க என இறைவன் கூறினார்;

392. கிள்ளை மொழி - (பார்க்க வரி 69); உமையும் - பார்வதியும்; கிருபையுட < கிருபை உடைய - கருணை நிறைந்த; ஈசுவரரும் - இறைவனும்; பி.வே. - 'மொழியாளும்', 'கிருபையுடன்' (ச.ம.நூ.); 'கிள்ளமொழிவுமையும்யின்ப' (மா. தவநிலை);

393. வெள்ளி வரை - (பார்க்க வரி 346); நோக்கி - பார்த்து; வித்தகனார் - வல்லமை பொருந்திய இறைவன்; போயினராம் - மறைந்தாராம்; பா.வே. - 'வித்தனார் போகின்றாம்' (ச.ம.நூ.); பி.வே. - 'வெள்ளி மலை' (மா. தவநிலை, கை. பிரதி);

394. ஈசருரைத்த மொழி - 'இல்லற தரும வாழ்க்கையை மேற்கொண்டபின் இமயமலை வருக' என இறைவன் கூறிய உரை; இப்படியே - அப்படியே; தப்பாமல் - தவறாமல்; பி.வே. - 'உரைத்த சொல்லை இந்த முனி' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி);

395. பாசமுடன் - பிரியமுடன்; அரனார் - (வரி 1) பாதத்தை - திருத்தாள்களை; தெண்டனிட்டு - (வரி 144); பி.வே. - 'பாதத்தில்' (ச.ம.நூ.); 'பாதமலர்' (கை. பிரதி);

396. சங்கரனார் சொல்தனை - சிவனுரைத்த உரையை; தப்பாமல் - (வரி 394); தான் மீண்டு - (மிருக சிங்கன் தன்மனைக்குத்) திரும்பி;

397. மாமுனிவன் - மிருக சிங்கன்; தங்கள் பதிநோக்கி - தன் ஊரான கடவூருக்கு; தான் வந்து - திரும்பி வந்து; பி.வே. - 'தான் வந்து அன்னை தந்தை' (ச.ம.நூ., கை. பிரதி); 'தானும் வந்து பாலகனும்' (மா. தவநிலை);

398. தந்தை தாய்ப் பாதந்தனில் - பெற்றோரின் திருத்தாள்களில்; வீழ்ந்து - படுத்து; தெண்டனிட்டு - (வரி 144);

வந்த மகன்றன்னை மகாபிரியமோ டணைத்து
சங்கரனை நோக்கித் தவசிருக்கப் போனதுவும்
எங்களுக்கு மன்பா யெடுத்துரையும் பாலகனே
என்றுதந்தை கேட்க யியல்வுடனே பாலகனும்
கொன்றைச் சடையான் கோல வனந்தனிலே
நீதி புனலாடி நிறைந்த யருளணுகி
ஆதி நிலைத்தவசு மன்னாள்(ப்) புரிந்ததுவும்
நின்ற தவம்பார்க்க நிமலனார் வந்ததுவும்

*399.* வந்த மகன்றன்னை - தவமுடித்துத் திரும்பி வந்த மிருக சிங்கனை; மகா பிரியமோடு - அளவு கடந்த ஆனந்தத்துடன்; அணைத்து - தழுவி; ஒப்பிடுக: 'பிரிசம்' (318);

*400.* சங்கரனை - ஈசனை; நோக்கி - பார்க்க வேண்டி; தவசிருக்க - தவமிருக்க; போனதுவும் - எங்கெல்லாம் சென்று எப்படியெல்லாம் தவமிருந்து கண்டாய் என்பதை; பி.வே. - 'தவசி இருந்து கேட்ட வரம்' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி);

*401.* எங்களுக்கும் - பெற்றோர்களாகிய எங்களுக்கு; அன்பாய் -பிரியமுடன்; எடுத்துரையும் பாலகனே - மகனே, எடுத்துக் கூறுக; பி.வே. - 'எடுத்துரைப்பாய்' (ச.ம.நூ., கை. பிரதி);

*402.* என்று தந்தை கேட்க - என மிருகண்டு முனிவர் கேட்கவும்; இயல்வுடனே - (வரி 297); பாலகனும் - மிருக சிங்கனும்; பி.வே. - 'இயம்புவான் பாலகனும்' (ச.ம.நூ.); 'இயம்புவார் புத்திரரும்' (மா. தவநிலை); 'எடுத்துரைப்பான்' (கை. பிரதி);

*403.* கொன்றைச் சடையான் - (வரி 338); கோல வனந்தனிலே -முன்பு தவமிருந்த எழில் நிறைந்த காட்டிலே; பி.வே. - 'கொன்றைச் சடைமுடியான் கோலமுடன் மாசித் திங்கள்' (ச.ம.நூ.); 'கொன்றை யணிந்த சடையார் கோல நிறை மாசி திங்கள்' (மா. தவநிலை; கை. பிரதி);

*404.* நீதி புனலாடி - நீராடல் விதிகளின்படி மாகமாதத்துப் புனலாடலைச் செய்து; நிறைந்த - அதிக; அருள் அணுகி - கருணையை வேண்டி; பி.வே. - 'அருள் போயணுகி' (ச.ம.நூ.);

*405.* ஆதி நிலை தவசும் - காலங்காலமாக நிலைத்து வருகின்ற தவத்தை; அன்னாள் - நோன்புக் காலத்தில்; புரிந்ததுவும் - மேற்கொண்டதுவும்; பா.வே. - 'சோதியரனார் சுகரூபம் கண்டதுவும்' (ச.ம.நூ.); 'அன்னாள் இருந்ததுவும்' (மா. தவநிலை);

*406.* நின்ற தவம் - நின்று கொண்டிருந்த நிலையில் தான் செய்யும் தவத்தை; பார்க்க - காண; நிமலனார் - உண்மையானவரான இறைவன்;

அன்று அரனாரு மன்பாய் மொழிந்ததுவும்
வல்ல நெறியும் வளமும் புகழ்ப்பாலன்
சொல்லக் கேட்டின்பமுற்றுத் தோன்றுங் கடலெனவே
பூரித்து[த்] தந்தையன்னை போதமன மகிழ்ந்து
பாரித்துப் பாலனையும் பண்போடுறத் தழுவி
ஆகமிகக் குளிர்ந்து அன்புத் திருபேரும்
நாகமணி யீசுபரனார் நாதனருள் நினைந்து

வந்ததுவும் - உமையுடன் வந்து கண்முன்னே காட்சி தந்ததுவும்; பி.வே. - 'நிமலர் சத்தி' (மா. தவநிலை, கை. பிரதி); காண்க: 'நிமலன்' (772, 1755, 1855, வி. 41, வி. 57-59, வி. 62, வி. 64, வி. 65);

407. அன்று அரனாரும் - அப்போது இறைவனும்; அன்பாய் - கருணையுடன்; மொழிந்ததுவும் - கூறியன யாவும்; பி.வே. - 'அரன் பார்பதியும்' (மா. தவநிலை, கை. பிரதி);

408. வல்ல நெறியும் - பிறப்பு இறப்பு விதிகளும்; இல்லற வாழ்வின் மேன்மையும்; வளமும் - அவற்றினால் எய்தும் சிறப்பும்; புகழ்ப்பாலன் - புகழினையுடைய மிருக சிங்கன்; பா.வே. - 'வளரும்' (ச.ம.நூ.); 'வளரும் புகழ்யான தெல்லாம்' (மா. தவநிலை);

409. சொல்லக் கேட்டு - கூறச் செவியுற்று; இன்பமுற்று - மகிழ்ச்சி யடைந்து; தோன்றும் கடலெனவே - பரந்து விரிந்த அலை கடல் கண் முன்னே தோன்றுவது போல்; பி.வே. - 'இன்பந் தோன்றும் கடல் எனவே' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி);

410. பூரித்து - மகிழ்ச்சியால் விம்மி, தந்தையன்னை - பெற்றோர்; போதமனம் - மகிழ்ச்சிப் பெருக்கால் ஏற்பட்ட இளமை மனத்தில்; மகிழ்ந்து - இன்பமுற்று; பி.வே. - 'அன்னை தந்தை' (கை. பிரதி);

411. பாரித்து - பூரித்து (வரி 410) - வலிமை பெற்று; பாலனையும் - மிருக சிங்கனையும்; பண்போடு - மிக்க அன்புடன்; உறத் தழுவி - இறுக்க அணைத்து; பி.வே. - 'உரந்தழுவி' (ச.ம.நூ.); 'பூரித்து', 'புகழ் பெறவேயெடுத்துத் தழுவி' (மா. தவநிலை); 'தான் தழுவி' (கை. பிரதி);

412. ஆகம் - தேகம், உடம்பு; மிகக் குளிர்ந்து - சூடு மிகவும் தணிந்து; அன்புத் திருபேரும் - அன்புடைய இருவர்களும்; பி.வே. - 'அன்புற்று இருவரும்' (ச.ம.நூ.); 'ஆகம் மிக மகிழ்ந்து' (மா. தவநிலை); 'அகம்' (கை. பிரதி);

413. நாகம் அணி ஈசுபரனார் - நாகப் பாம்பை அணியாக அணிந் துள்ள இறைவன்; நாதன் - ஓங்கார நாதமானவனின்; அருள் - கருணையை; நினைந்து - எண்ணி; பா.வே. - 'தனதருள் நினைந்து' (ச.ம.நூ.); காண்க: 'நாதன்' (43, 834, 1137, 1654, வி. 58);

உந்தன் தவசி லுமையாளு மீசுபரரும்
வந்ததினா லீசரிடம் வாழ்த்திருப்போ மென்னாளும்
பாலனே நின்தவசால்(ப்) பாவமெல்லாந் தீர்ந்தோமே
ஆல முண்டகண்ட ரரன்பாதந் தப்பாது

**விருத்தம்**

விரைமுளை யால தாகி
விழுதுகள் மிகவுண் டாகும்
தரையினல் பிள்ளை போலே
தன்னையால் தூக்கி நாட்ட
நிரைகமழ் பிலன தாகி
நிலமுடன் தாங்குந் தாய்போல்
திரைமணி யெனது மைந்தா
செய்தவந் தாங்கி நின்றாய் (20)

414. உந்தன் - உன்னுடைய; தவசில் - தவத்தில்; உமையாளும் - பார்வதியும்; ஈசுபரரும் - சிவனும்; பி.வே. - 'தவத்தில்' (மா. தவநிலை, கை. பிரதி);

415. வந்ததினால் - காட்சி தர நேரில் வந்ததால்; ஈசரிடம் - அந்த இறைவனிடம்; வாழ்ந்திருப்போம் என்னாளும் - எல்லாக் காலமும் நாங்களும் அவர் கீழேயே வீற்றிருப்போம்; பி.வே. - 'எந்நாளும்' (ச.ம.நூ.); 'எப்போதும்' (கை. பிரதி);

416. பாலனே - மகனே; நின் தவசால் - உன்னுடைய தவ வலிமையால்; பாவமெல்லாம் - இப்பிறவியில் புரிந்திருக்கக் கூடிய பாவங்கள் எல்லாம்; தீர்ந்தோமே - நீங்கினோம்; பா.வே. - 'பாலகனே நிறைந்த விசனம் பாவமேல் காமம் தீர்ந்தோமே' (ச.ம.நூ.);

417. ஆலமுண்ட கண்டர் - கொடிய நஞ்சை அருந்திய கழுத்தை யுடைய; அரன்; பாதம் - திருப்பாதம்; தப்பாது - எங்களுக்கும் தவறாமல் கிட்டும்; பா.வே. - 'ஆலமுண்ட, கண்டதற்பரனில் பாதம் கண்டோமே' (ச.ம.நூ.); காண்க; 'ஆலமுண்ட கண்டர்' (636), 'ஆலமுண்ட - கண்டரரன் (417, 583, 588, 1798);

வி. 20. விரை - சிறிய விதை; முளை - முளைத்து; ஆலதாகி - பெரிய ஆலமரமாகி; விழுதுகள் - கிளைகளிலிருந்து விழும் கிளைவேர் கள்; மிகவுண்டாகும் - அதிகமாக ஏற்படும்; தரையில் - பூமியில்; நல் பிள்ளைபோலே - நல்ல மக்களைப்போல; தன்னை - விழுதுகளை; ஆல்தூக்கி நாட்ட - ஆலமரமானது நேராக அவ்விழுதுகளை விழச்செய்து நட்ட; நிரைகமழ் - ஒழுங்காக; பிலனதாகி - அவ்விழுதுகளுக்குப் பலம் ஏற்பட்டு; நிலமுடன் - நிலத்துடன்; தாங்கும் - ஆலமரத்தைத் தாங்கி நிற்கும்; தாய்போல் - அன்னையைப்போல்; (அதைப் போல்); திரைமணி

நடை

அந்தவுரை கேட்டு அறிவுடைய பாலகனும்
யெந்தனையே னீங்க ளியல்வாய்ப் புகழ்ந்தீரே

விருத்தம்

யீன்று வளத்ததாய் தந்தைக்கே
    எவரே கைய்மா றியத்திடுவார்
ஆன்ற மதலை நூறுவயது
    அளவும் அடிமைத்தொழில் புரிந்து
மூன்று புவனத்துப் பொருளை
    முற்று மளித்து முறைமுறையே
ஊன்றி வழிபா டியத்துகினு
    மொருநாள் வளத்தல்(க்) கொவ்வாதே (21)

- அலைகடலில் விளையும் மணியைப் போன்ற; எனது - என்னுடைய; மைந்தா - மகனே; செய்தவம் - நீ செய்த தவத்தின் வலிமையால்; தாங்கி நின்றாய் - தாய் தந்தையரான எங்களைக் காத்து நிற்கிறாய்;

பா.வே. - 'விரை முனை' (ச.ம.நூ.); 'விதை முளை' (கை. பிரதி); 'மிகவும் ஊன்றி' (ச.ம.நூ.); 'மிகவுண்டென்னும்' (மா. தவநிலை, கை. பிரதி); 'தரையினில்' (ச.ம.நூ., மா. தவநிலை); 'தரைதனில்' (கை. பிரதி); 'தன்னை ஆளாக்கி விட்டாற்போல்' (ச.ம.நூ.); 'நிறைக்க இன்ப அன்பு தானாகி' (ச.ம.நூ.); 'நரை மகன் பிலனதாகி' (மா. தவநிலை); 'திறமுடன் எனது மைந்தர்' (ச.ம.நூ.); 'தாங்கினானே' (கை. பிரதி);

418. அந்தவுரை கேட்டு - பெற்றோரின் புகழ்ச்சி மொழிகளைக் கேட்டு; அறிவுடைய பாலகனும் - அவற்றைப் புரிந்து கொள்ளும் அறிவு நிறைந்த மகனும்;

419. எந்தனையே < என் தன்னையே - என்னையே; நீங்கள் - தாய் தந்தையராகிய நீங்களிருவரும்; இயல்வாய் - இயல்பாக; புகழ்ந்தீரே - முகமன் கூறினீர்களே!; பா.வே. - 'புகழ்ந்ததென்ன' (மா. தவநிலை., கை. பிரதி);

வி. 21. ஈன்று - பெற்றெடுத்து; வளத்த தாய் < வளர்த்த தாய் - பாலூட்டிச் சோறூட்டிப் பெரியவனாய் உயர்த்திய அன்னைக்கும்; தந்தைக்கே - பிதாவுக்கும்; எவரே - யார்தான்; கைய்மாறு < கைமாறு - செய்நன்றிக் கடன்; இயத்திடுவார் < இயற்றிடுவார் - புரிந்திடுவார்; ஆன்ற மதலை - பெரியவனாகி வாழ்ந்த அவன்; நூறுவயதளவும் - ஆயுள் முழுவதும்; அடிமைத் தொழில் புரிந்து - அன்னை, தந்தைக்கு ஏவல் செய்து; மூன்று புவனத்து - மூலோகத்து; பொருளை - இம்மையிலும் மறுமையிலும் பயன்பெறக் கூடிய செல்வம், தவம், சொர்க்கம் போன்ற

நடை

மைந்தனொரு நூறு வயதளவு மன்னைதந்தை
சிந்தை கலங்காமல் தினசரியும் யேவல்செய்து
கேட்டவகை யெல்லாங் கிருபையுடன் கொடுத்து
வாட்டமில்லாமல் மகனை வைத்திருந்த தந்தையர்க்கு
ஒருனா ளவன்கட னொவ்வாது யன்னையரே
தருவி னொருனாழிகையுந் தான்போதா தென்றுரைத்தார்

வற்றை; முற்றுமளித்து - முழுவதும் அவர்களுக்குக் கொடுத்து; முறை முறையே - முறையான விதிகளின்படி; ஊன்றி - உறுதியான; வழிபாடு - பணிவிடைகள்; இயத்துகினும் < இயற்றுகினும் - செய்தாலும்; ஒருநாள் வளத்தல்(க்)கு < வளர்த்தலுக்கு - பெற்றோர் ஒருநாள் பராமரித் தலுக்கு; ஒவ்வாது - ஈடாகாது;

பா.வே. - 'இன்று', 'எவர் என்ன கைம்மாறியற்றிடினும்' (ச.ம.நூ.); 'எவ்வகையாக கையை மாறியேந்திடினும்' (மா. தவநிலை); 'எவர்தான் கைமாறுற்றிடுவார்' (கை. பிரதி); 'அன்று மதலை' (ச.ம.நூ., மா. தவநிலை); 'ஆன்ற' (கை. பிரதி); 'அருமைத் தொழில் புரியினும்' (ச.ம.நூ., மா. தவநிலை); 'ஊட்டி வளர்த்தபடி தனக்குவொருநாள் வளர்த்த கடனாமோ' (கை. பிரதி); 'ஊன்றும் படிக்குயீந்திடினும் வொருனாள் வளத்தது வொவ்வாதே' (மா. தவநிலை);

420. மைந்தன் - மகன்; ஒரு நூறுவயதளவும் - நூறு ஆண்டுகள் அளவும்; அன்னை தந்தை - தாய் தந்தையர்;

421. சிந்தை கலங்காமல் - மகனின் மனம் வருத்தமுறாமல்; தினசரியும் - தினமும்; ஏவல் செய்து - பணிவிடைகளைச் செய்து கொண்டு; பா.வே. - 'தினசரியும் அன்னை தந்தை' (ச.ம.நூ.); பி.வே. - 'சிந்தை மயங்காமல்' (மா. தவநிலை, கை. பிரதி);

422. கேட்ட வகையெல்லாம் - மகன் கேட்பதை எல்லாம்; கிருபை யுடன் - அன்புடன்; கொடுத்து - நல்கி; பி.வே. - 'கேட்டதை யெல்லாம்' (கை. பிரதி);

423. வாட்டமில்லாமல் - கவலையில்லாமல்; மகனை; வைத்திருந்த தந்தையர்க்கு - வளர்த்திருந்த பிதாவுக்கு; பா.வே. - 'மகன் வைத்திருந் தால் (யன்னை) தந்தையர்க்கு' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி);

424. ஒருனாள் < ஒருநாளும்; அவன் கடன் - அம் மகனது செய்நன்றிக் கடன்; அன்னையரே - தாயே!; ஒவ்வாது - ஈடாகாது; பி.வே. 'வளர்த்த கடன்', (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி);

425. தருவின் - தருவதற்கு; ஒரு நாழிகையுந்தான் - ஒரு நாழிகை அளவு நேரம் கூட; போதாது - ஈடாகாது; என்றுரைத்தார் - என மிருக

இந்தவுரை பால னெடுத்துரைக்கத் தந்தையன்னை
மைந்தா வுனக்கு மணமுடிக்க வேணுமென்றார்
அந்தவுரை கேட்டு யருள்பாலக னுரைப்பான்
கந்த மிகுந்த கருணைப் புகழெனக்கு[ப்]
பெண்ணை மணஞ் செய்யவென்றால் பேதையர்க்கு லக்கணங்கள்
மண்ணுலகில் வேதன் வகுத்தபடி யொத்திருந்தால்
செய்வீர் கலியாணம் சீர்பெருகுஞ் செல்வமிகு[ம்]

சிங்கன் கூறினார்; பா.வே. - 'தருநாள் சுமை நீசமந்தான்' (ச.ம.நூ.); 'தரும் நாழிகை நிமிசம் தான்' (மா. தவநிலை);

426. இந்தவுரை - பெற்றோர்க்குக் கைமாறு செய்வது ஈடாகாது என்னும் உரை; பாலன் - மிருக சிங்கன்; எடுத்துரைக்க - எடுத்துக் கூற; தந்தை அன்னை;

427. மைந்தா - மகனே; உனக்கு; மணமுடிக்க - திருமணம் செய்ய; வேணுமென்றார் < வேண்டுமென்றார்; பி.வே. - 'மைந்தன் தனக்கு' (ச.ம.நூ.); 'மையிந்தனே' (மா. தவநிலை);

428. அந்தவுரைகேட்டு - தாய் தந்தையர் தனக்குத் திருமணம் செய்ய வேண்டுமென்ற ஆசையினைக் கேட்டு; அருள் பாலகன் - கருணையுடன் பெற்றெடுத்த மகனான மிருக சிங்கன்; உரைப்பான் - கூறுவான்;

429. கந்தமிகுந்த - வாசமிக்க (வரி 344); கருணைப் புகழ் - இரக்கமும் புகழுமுடைய; எனக்கு - எந்தனுக்கு; பா.வே. - 'கந்தம் நிறைந்த கருணை புகழ் தாயாரே' ('தாய் தந்தையரே' கை. பிரதி), (மா. தவநிலை);

430. பெண்ணை மணஞ் செய்யவென்றால் - கன்னி ஒருத்தியைத் திருமணம் செய்து வைப்பீர் எனில்; பேதையர்க்கு - அப்பெண்ணுக்கு; லக்கணங்கள் < இலக்கணங்கள் - விதிகள் (இலக்ஷ்ணம்); பி.வே. - 'பெண்கள் மணஞ்கூட்டவென்றால் பெண்சாதி லட்சணங்கேள்' (ச.ம.நூ.); 'பெண்ணை மணஞ்கூட்டவென்றால் பெண்களுடன் லட்சணம் கேள்' (மா. தவநிலை, கை. பிரதி); பார்க்க: 'இலக்கணங்கள்' (வரி 470), 'லற்க்கண(ம்)' (475);

431. மண்ணுலகில் - இந்தப் பூமியில்; வேதன் - பிரமா; வகுத்தபடி நியமித்தபடி; ஒத்திருந்தால் - ஈடாக இருந்தால்;

432. செய்வீர் கலியாணம் - அப் பெண்ணை எனக்குத் திருமணம் செய்து வைப்பீர்; சீர் பெருகும் - (அவ்வாறெனில்) சிறப்புமிகும்; செல்வம் மிகும் - பொருட் செல்வம் கூடும்; பி.வே. - 'செல்வமிது' (ச.ம.நூ.); 'செல்வமதாய்' (மா. தவநிலை); 'சீர் பெருகுங் கல்யாணம்' (கை. பிரதி);

மெய்சுருப மாகில் வேண்டேன் கலியாணம்
இல்லறத்தில் கோபமிகு மில்லாள் தரும்விற்று
வஞ்சக் கொடூர மனையாள் மனைவரவு
நஞ்சிற் கொடூரம் நடுங்குமென் வாழ்வு
தங்கும் வலுபாவம் தருமநிலை நில்லாது
மங்கையர்க ளீன்றமகன் தந்தைக்கே சனியன்
படியிற் கொடூரம் பலவினைகள் செய்திடுவான்
துடியில் வலுபாவந் துடருமவன் தந்தையர்க்கு

433. மெய் - உடம்பு; சுருபம் < சொரூபம் - அழகு; ஆகில் - மட்டும் எனில்; வேண்டேன் கலியாணம் - உடம்பு அழகுள்ள அப்பெண்ணுடன் திருமணம் செய்ய மாட்டேன் ; பா. வே. - 'மெய் சீர் (அ)வமாகில்' (ச.ம.நூ.); 'மெய் சீரில்லை யென்றால்' (மா. தவநிலை, கை. பிரதி); .......'இல்லறத்தில் சீர் பொருந்தும் இல்லாள் தரும் வித்து' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி);

434. இல்லறத்தில் - குடும்பத்தில்; கோபமிகுமில்லாள் - சினம் மிகுதியுடைய மனைவி; தரும் - ஈன்று தரும்; விற்று < வித்து - சந்ததியும்; பி.வே. - 'கோபம் வஞ்சம் இருப்பாள் கருமவித்து' (ச.ம.நூ.);

435. வஞ்சம் - வஞ்சனை நிரம்பிய; கொடீர < கொடூர - கொடிய; மனையாள் - மனைவி; மனை வரவு - நல்ல குடும்பத்துள் பிரவேசிப்பது; பா.வே. - 'மனை வாழ்க்கை' (ச.ம.நூ.); 'மனை வாயளவில்' (மா. தவநிலை); 'மனை வாழ்வு' (கை. பிரதி); பார்க்க: 'கொடூரம்' (439);

436. நஞ்சிற் கொடூரம் - கொடிய நஞ்சைக் காட்டிலும் கொடியதாகும்; நடுங்குமென் வாழ்வு - என் வாழ்வு நிலையில்லாது நடுக்கமுறும்; பா.வே. - 'நடுங்கும் வளம் மனையில்' (ச.ம.நூ.); 'நடுங்கும் இவன் மனதில்' (மா. தவநிலை, கை. பிரதி);

437. வலுபாவம் - வலிய, பெரிய பாவச் செயல்கள்; தங்கும் - நிலைத்து விடும்; தரும நிலை - இல்லற தருமச் செயல்கள்; நில்லாது - தங்கா; பா.வே. - 'தங்குவது பாவம்' (ச.ம.நூ.); 'வலுபாவம் தன்மனதில்யில்லாளாய்' (மா. தவநிலை); பார்க்க: 'வலுபாவம்' (440, 1185);

438. மங்கையர்கள் - கொடுமை நிறைந்த பெண்கள்; ஈன்ற மகன் - பெற்றெடுத்து ஆளாக்கிய பிள்ளை; தந்தைக்கே - அவனது தகப்பனுக்கே; சனியன் - யோகமில்லாது முட்டுக் கட்டையாவான்; பா.வே. - 'தனக்கே சனியன்' (மா. தவநிலை);

439. படியில் - உலகில்; கொடூரம் - கொடிய; பல வினைகள் - மிகுந்த காரியங்கள்; செய்திடுவான் - புரிந்திடுவான்;

440. துடியில் - கணநேரத்தில்; வலுபாவம் - (வரி 437); அவன் தந்தையர்க்கு - அவன் பிதாவுக்கு; துடரும் < தொடரும் - வந்துசேரும்;

நீதி மதியறிவு நீண்டதவ முள்ளபெண்டீர்
................
பொற்பூவு வாசம் புருஷன் மனைவிளக்கும்
கற்பூ மலர்க் கனதவங்க ளெய்திடலாம்
மாதுயவ ளீன்றமகன் தந்தைக்கே யோகம்
நீதி நெறியில் நிறையும் வெகுதவங்கள்
இந்தப்படி சிறந்தா லில்லறமே நல்லறமாம்
கந்தமிகு தாதை கலியாணஞ் செய்வதல்லால்

பி.வே. - 'அன்னை தந்தையர்க்கு' (மா. தவநிலை); பார்க்க: 'துடி' (வி. 24);

441. நீதி - உண்மையும்; மதி - நுட்பமும்; அறிவு - புத்தியும்; நீண்ட தவமும் - சிறு வயது முதலே கடைப்பிடித்து வரும் ஒழுக்கமான நோன்புகளும்; உள்ள - கொண்ட; பெண்டீர் < பெண்டிர் - பெண்கள்; ........'சோதி யறிவு துலங்கும் வெகு தவமாம்' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி);

442. பொற் பூ வாசம் - பொன்னைப் போன்றும், வாசமுள்ள மலர் போன்றும் இருப்பர்; புருஷன் மனை - கணவனிருக்கும் வீட்டை (புகுந்த வீட்டை); விளக்கும் - விளங்க வைப்பர்; பி.வே. - 'புருடன் மனை விளக்கம்' (ச.ம.நூ.); 'பொறப்பூவும் வாசம் புருசன் மனவி மக்களுக்கும்' (மா. தவநிலை); 'பொற் பூவும் வாசம் புருசன் மனவிளக்கு' (கை. பிரதி);

443. கற்பூ < கற்பு - ஒழுக்கம்; மலர் - வாசம் நிறைந்த பூக்களாம்; கன தவங்கள் - பெரிய தவ வலிமைகளை; எய்திடலாம் - அவர்களால் பெற்றிடலாம்; பா.வே. - 'கற்பூர வாசம் கன தவங்கள் மீறி நிற்கும்' (ச.ம.நூ.); 'கற்பூவும் மலர்கள்' (மா. தவநிலை); 'கற்பு மலரால்' (கை. பிரதி);

444. மாது - அவ்வாறான குணமுள்ள பெண்; அவள்; ஈன்ற - பெற்றெடுத்த; மகன் - பிள்ளை; தந்தைக்கே - அவனது தகப்பனுக்கு; யோகம் - நன்மையானவனாவான்; பா.வே. - 'ஏழகம்' (ச.ம.நூ.); பி.வே. - 'அன்னை தந்தையர்க்கே யோகம்' (மா. தவநிலை);

445. நீதி நெறியில் - நேர்மையான வழிகளில்; வெகுதவங்கள் நிறையும் - மிகுந்த வலிமைகள் வந்து சேரும்; பி.வே. - 'நிறை தவங்கள்' (ச.ம.நூ.); 'நீதி நெறியும்' (கை. பிரதி);

446. இந்தப்படி சிறந்தால் - இவ்வாறான வழிகளில் சிறப்படைந் தால்; இல்லறமே நல்லறமாம் - குடும்ப வாழ்க்கையே சிறந்த அறமாகும்; பா.வே. - 'இந்தப்படி ஒத்திருந்தால்' (ச.ம.நூ.); பி.வே. - 'இந்தப்படியி ருந்தால்' (மா. தவநிலை);

447. கந்தமிகு - (வரி 344); தாதை - தந்தையரே!; கலியாணம் செய்வதல்லால் - நான் திருமணம் செய்து கொள்வதென்றால்; பி.வே. - 'கந்த நிறைமாதை' (ச.ம.நூ.); 'கந்தம் நிறைந்த மாதை' (மா. தவநிலை);

ஒவ்வாத மங்கையரை வொவ்வேனான் தந்தையரே
செவ்வான மங்கையராய்த் திக்கெங்குந்தான் தேடி
பாத்துனீர் வாருமியல் பண்புவியிலே பார்த்து[ப்]
பூத்தமலர் மங்கையரைப் பூவுலகில் தேடுமைய்யா

**விருத்தம்**

ஆதலா லுலகில் தோகையரை
யறவே நித்த மருங்கற்பின்
மாத ராகி நற்குலத்தில்
வந்தா ளாகி மதிமிகுந்த
ஓதும் வாண்மை நன்மையினால்
ஒளிரு முகத்தா ளழகாகி
சாதி யரகமந்தி பறவை
தாரும் பேரி லாவளாய் (22)

448. ஒவ்வாத - பொருந்தாத; மங்கையரை - பெண்ணை; நான்; ஒவ்வேன் - விரும்பேன்; தந்தையரே - பிதாவே; பி.வே. - 'ஒவ்வாதென' (மா. தவநிலை);

449. செவ்வான - செம்மையான; மங்கையரை - பெண்ணை; திக்கெங்குந்தான் தேடி - எட்டுத் திசைகளிலுமுள்ள ஊர்களில் சென்று கண்டுபிடித்து; பா.வே. - 'பூவுலகிற் தேடுதற்கு' (ச.ம.நூ.); 'திக்கெங்கும் ஆராய்ந்து' (மா. தவநிலை);

450. பாத்து < பார்த்து - நேரில் கண்டு; நீர் - நீங்கள்; இயல் பண்புவியிலே பார்த்து - இந்தப் பண்பட்ட நாட்டிலே சென்று கண்டு; வாரும் - சென்று வருவீராக;

451. பூத்தமலர் மங்கையரை - பூக்கள் விரிந்தது போலப் பருவ மடைந்த பெண்ணை; பூவுலகில் - பூமியில்; தேடுமைய்யா - கண்டு பிடியுங்கள்; பி.வே. - 'பூத்த புகழ் மங்யைராய்' (மா. தவநிலை);

வி. 22. ஆதலால் - எனவே; உலகில் - இந்நாட்டில்; தோகையரை - பெண்ணை; அறவே - முழுவதுமாக; நித்தம் அருங்கற்பின் மாதராகி - தினமும் அரியதான கற்பொழுக்கமுடைய பெண்ணாகவே இருந்து; நற்குலத்தில் - நல்ல கோத்திரத்தில்; குடும்பத்தில்; வந்தாளாகி - பிறந்து வளர்ந்தவளாகி; மதி மிகுந்த - அறிவு நுட்பம் கூடியும்; ஓதும் - சொல்லும்; ஆண்மை - துணிச்சலுடைய; நன்மையினால் - நல்ல தன்மையினால்; ஒளிரும் - ஒளிவீசும், பிரகாசிக்கும்; முகத்தாள் - முகத்தையுடையவளாய்; அழகாகி - அழகு நிரம்பி; சாதியரகம் < சாதி அரவம் - நல்ல சாதி (நாகப்) பாம்பின் பெயரும்; மந்தி - குரங்குகளின் பெயரும்; பறவை - பட்சிகளின் பெயரும்; தார் - மரங்களின் பெயரும்;

செய்ய முகத்தில் கமலமென்னச்
சிறந்த அங்கஞ் சிறப்பாக
வெய்ய பிணிநோய் யில்லாளாய்
விளங்கு மொழுக்க முடையவளாய்
துய்ய தாய்தந் தைவழித்
துகளொன் றில்லாத துடர்ச்சியில்லாளாய்
சைவ நீதி நெறியாளாய்த்
தரும மெவையு மறிந்தவளாய் (23)

குறுகி யிரும லில்லாளாய்க்
கூந்தல் செம்மை யில்லாளாய்

பேரிலாவளாய் - இவற்றின் பெயர்களைத் தன் பெயராகக் கொண்டிராத வளாய்;

பி.வே. - 'இனத் தோகையரே' (ச.ம.நூ); -பா.வே.. 'ஆதவறிவு யில்லா தோகையரை' (மா. தவநிலை); 'அரவே பூத்தத் தருவதற்பின்' (ச.ம.நூ.); 'அரமே பூத்த யருங்கருப்பு' (மா. தவநிலை); 'மதியினளாயி' (ச.ம.நூ.); 'மதின்யின் யழகா' (மா. தவநிலை); 'ஒளிரும் முகத்தாள் தானாகி' (ச.ம.நூ.); 'வொளிவும் முகத்தாள் யாமாகில்' (மா. தவநிலை); 'சாதி அரவ மந்திரவை தாரின் பேர்' (ச.ம.நூ.); 'சாதி தயவு பாவை நதி தானின்ற தவமே பேரின்பம்வுள்ளவளாய்' (மா. தவநிலை);

வி. 23. செய்ய - செம்மையான; முகத்தில் கமலமென்ன - தாமரை போன்று முகமானது திகழவும்; சிறந்த அங்கம் - சீரான உடம்பு; சிறப்பாக - சிறந்து விளங்கும் படியாகவும்; வெய்ய - கொடிய; பிணி நோய்யில்லாளாய் - நோய் நொடிகள் இல்லாத பெண்ணாகவும்; விளங் கும் - திகழும்; ஒழுக்கம் - கற்பு; உடையவளாய் - கொண்டவளாய்; துய்ய - தூய்மை நிறைந்த; தாய் தந்தை வழி - பெற்றோர் மரபில்; துகள் ஒன்று இல்லாத - குற்றம் எதுவும் இருக்காத; துடர்ச்சி < தொடர்ச்சி - தொடர்பு; இல்லாளாய் - இல்லாதவளாய்; சைவ நீதி - சிவ தரும; நெறியளாய் - ஒழுக்க முறைகளை அறிந்தவளாய்; தருமமெவையும் - எல்லா அறச்செயல்களையும்; அறிந்தவளாய் - தெரிந்தவளாய்;

பா.வே. - 'திருவோடு சிதைவில்லாளாய்' (ச.ம.நூ.); அய்யம் முகத்தில்க் கமலமென்னயங்கஞ்சிதம் மென்றில்லாளாய்' (மா. தவ நிலை); 'துய்ய மரபு தாய் தந்தை துகளோர் இல்லாத துறப்பினளாய்' (ச.ம.நூ.), 'துய்ய தாய் தந்தை மறவாத துரகம் மொன்றும் துடர் பூயில்லாளாய்' (மா. தவநிலை); 'பொய்யின் வாடை இல்லாளாய்ப் பூவில் தேடுமென உரைத்தான்' (ச.ம.நூ. மா. தவநிலை); பார்க்க: 'அங்கம்' (453 - வி. 23-அ, 778, 1932);

வி. 23-அ (வரி 452-455). குறுகி - கூன் விழுந்து; இருமல் - இருமல் நோய் (கபம்) இல்லாதவளாய்; கூந்தல் - தலைமுடி; செம்மை இல்லா

அரவம் நெடிய வில்லாளாய்
அங்கம் நெகழ்யி ராதவளாய்
மருவும் பொறுமை யுள்ளவளாய்
வன்மங் கோப மில்லாளாய்
அருமை மிகுந்தே யாகினளாய்
அடிமை யெனவே பணிபவளாய் (23-அ)

நடை

பொறுமைக்குப் பூமி[ யை ] யப்போல் பூவுலகி
லட்சிமியாம்
அருமைக்குத் தாயகம்போ லன்புகுண மாதாவாய்

ளாய் - சிவந்து இல்லாதவளாய்; அரவம் - பாம்பு போன்று; நெடியவில் லாளாய் - உடம்பு நீண்டு உருண்டு மெல்லியதாய் இல்லாதவளாய்; அங்கம் - மேனி; நெகழ் < நெகிழ் - தளர்வு; இராதவளாய் - இல்லாதவளாய்; மருவும் - பொருந்தும்; பொறுமை - சகிப்புத் தன்மை; உள்ளவளாய் - உடையவளாய்; வன்மம் - பழி, வஞ்சனை; கோபம் - மூர்க்கம்; இல்லாதவளாய் - இவை யாவும் பெறாதவளாய்; அருமை மிகுந்தே - பெண்களில் அருமையாக; ஆகினாளாய் - விளங்கக் கூடிய பெண்ணாய்; அடிமை எனவே பணிபவளாய் - தொண்டு செய்வதில் அடிமைப் பெண் போலப் பணிவு நிரம்பியவளாய்;

பா.வே. - 'குருகி உருவம்' (ச.ம.நூ.); 'குருகும் புருவயில்லாளாய்' (மா. தவநிலை); 'அரவம்' (மா. தவநிலை); 'மருவு பெருமை மங்கைய ராய்' (ச.ம.நூ. மா. தவநிலை); 'வசன கோபம்' (ச.ம.நூ., மா. தவநிலை); 'தரும நெறியும் மிகுந்தவளாய் தருப்போல் பொழுதின் உதவுவளாய்' (ச.ம.நூ.); 'தாயார் தனை(ப்) போல் தவ்வும் வுள்ளவளாய் தரும நெறியும் அறிந்தவளாய்' (மா. தவநிலை);

**456.** பொறுமைக்குப் பூமியைப் போல் - எல்லாப் பாரத்தையும் பொறுமையுடன் தாங்கிக் கொள்ளும் பூமாதேவியைப் போல் குணமுள் ளவளாயும்; பூவுலகில் - பூலோகத்தில், இந்த உலகில்; லட்சிமியாம் - செல்வத்துக்கதிபதியாம் திருமகள் போலவும்; பி.வே. - 'பூலோக இலட்சுமியாய்' (ச.ம.நூ.); 'பூவுலகில் உத்தமியாய்' (மா. தவநிலை); 'பொறுமைக்கு லட்சுமியாய்' (கை. பிரதி);

**457.** அருமைக்குத் தாயகம் போல் - கிடைத்தற்கரிய மேன்மைக்குத் தமிழ் நாடாம் தாய் நாட்டினைப் போலவும்; அன்பு குணமாதாவாய் - பிள்ளைகளிடத்தில் அன்பு பாராட்டும் குணமுள்ள தாய் போலவும்; பா.வே. - 'அருமைக்கு நாயகம் போல் அன்புக்கும் ஆதரவாய்' (ச.ம.நூ.); 'அருமைக்கு தாய்யும்' (மா. தவநிலை);

புத்திக்க[ை]மச்சன் புணர்ச்சிக்கு வேசையைப்போல்
தித்திக்கச் சொல்லும் திருந்தும் வசனமதாய்
கற்புக் கருந்துதியாய்க் காட்சியுத்த மங்கையராய்
பொற்புக் கரசன் பூலோக லச்சிமிபோல்
கூந்தல் சிவந்து குறுகி யிராதவளாய்
நேர்ந்தே வளந்து நிமிந்து யிராதவளாய்
இருண்ட சுருள்கூந்தல் சுருண்டு யிராதவளாய்

458. புத்திக் க(ை)மச்சன் - முக்காலமும் உணர்ந்து கூறும் ஞான முள்ள மந்திரி போலவும்; புணர்ச்சிக்கு வேசை (< வேசி) யைப் போல் - வாங்கிய செல்வத்துக்குரிய இன்பத்தைக் கொடுக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் தன்னைச் சேருவோர்க்கு நிறைவு தரக் கூடிய பரத்தை யைப் போல்; பா.வே. - 'புத்திக்குத் திங்கள்' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி); பார்க்க: அமைச்சன் (வி. 54);

459. தித்திக்கச் சொல்லும் திருந்தும் வசனமதாய் - சொல்லச் சொல்லத் திகட்டக் கூடியதும், நாவிற்கு இனிமை தரும் பேச்சுப் போலவும்; பி.வே. - 'சிறந்த வசனமதாய்' (ச.ம.நூ.); 'தித்திக்கும் சொல்லும் திருந்தும் வசனமதாய்; கை. பிரதி (மா. தவநிலை); ஒப்பிடுக: 'வசனம்' (786, 1209, 1281, 1621, வி.2);

460. கற்புக்கு < கற்புக்கு - கற்பொழுக்கத்துக்கு; அருந்துதியாய் < அருந்ததி என்பவளைப் போலவும்; காட்சியுத்த < காட்சிஉற்ற - காணக் கூடிய, அழகுள்ள; மங்கையராய் - பெண்ணாய்; பா.வே. - 'கற்புக்கு ரத்தினம் போல்' (கை. பிரதி); பார்க்க: 'அருந்துதி' (693);

461. பொற்புக்கரசன் < பொற்புக்கு அரசன் - பொலிவுக்குச் சிறந்த மன்னனைப் போலவும்; பூலோக லட்சிமிபோல் - (வரி 456); பி.வே. - 'பூலோகத்து உத்தமியாய்' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி); 'பொற்பூவிற் கரசியான' (கை. பிரதி); பார்க்க: 'லட்சிமி' (456, 2386, 2555);

462. கூந்தல் சிவந்து - (வி. 23-அ); குறுகி - குட்டையாய்; இராதவளாய் - இல்லாதவளாய்; பா.வே. - 'கூந்தல் யவிழ்ந்து' (மா. தவநிலை); பார்க்க: 'கூந்தல்' (452, 464, 1278);

463. நேர்ந்தே < நெறந்தே < நிறைந்தே - அளவுக்கதிகமாக; ('நேராக' என்றும் கூறலாம்); வளந்து < வளர்ந்து; நிமிந்து < நிமிர்ந்து - நெட்டுக்கு; இராதவளாய் - இல்லாதவளாய்;

464. இருண்ட சுருள் கூந்தல் - கருமை நிறம் அடர்ந்த சுருட்டையான கேசம்; சுருண்டுயிராதவளாய் - உருண்டு கொண்டுள்ள (தலைமுடி) இல்லாத பெண்ணாய்; பி.வே. - 'இருண்ட முகில் கூந்தல்' (ச.ம.நூ., மா. தவநிலை, கை. பிரதி);

வறண்ட யுடம்பு மகாபிணி நோயில்லாளாய்[ச்]
செட்டைச் செவியுஞ் சிவந்தபுளுக் கண்ணில்லாளாய்
நெட்டைக் கழுத்து நெடுநாத்த மில்லாளாய்
அங்கைவிரல் நெத்தெனவே யானயிடை கொஞ்சமதாய்
கொங்கைதங்கச் செப்பெனவே கோலமுகந் திங்களென
வாலமதி மங்கையர்க்கு வகுத்த யிலக்கணங்கள்
சீனமுட ஞொத்திருந்தால் செய்வீர் கலியாணம்

*465. வறண்ட யுடம்பு - காய்ந்துபோன தேகமும்; மகாபிணி நோய் - பெரிய நோய்கள்; இல்லாளாய் - இல்லாதவளாய்; பா.வே. - 'அரண்ட உடம்பு மகாபிணிகள் இல்லாளாய்' (ச.ம.நூ.); 'மகாபிணிகள்' (மா. தவநிலை, கை. பிரதி);*

*466. செட்டை < சிட்டை - சிறிய; செவியும் - காதும்; சிவந்த - இரத்தமேறிச் சிவந்துபோன; புழுக்கண் - புழுக்கைக் கண்; ஆட்டாம் புழுக்கை (< பிழுக்கை) போல் சிறு உருண்ட கண்கள்; இல்லாளாய் - இல்லாதவளாய்; பி.வே. - 'சேட்டைச் செவி' (மா. தவநிலை); 'சொட்டை' (கை. பிரதி);*

*467. நெட்டைக் கழுத்து - கொக்கு போன்ற நீண்டு நிமிர்ந்த கழுத்து இல்லாதவளாய்; நெடு நாத்தம் < நெடு நாற்றம் - எப்போதும் தேகத்தில் துர்மணம் வீசக் கூடியவளில்லாமல்; பா.வே. - 'நெடு நெத்தியில்லாளாய்' (மா. தவநிலை);*

*468. அங்கை விரல் - உள்ளங் கைவிரல்கள்; நெத்தெனவே நெற்று எனவே - காய்ந்து மொழி மொழியாக உள்ள பயற்றந் நெற்றுக்களைப் போலவும்; ஆன இடை - விளங்கக் கூடிய இடுப்பானது; கொஞ்சமதாய் - சிறிதாய், குறைவாய்; பா.வே. - 'அங்கை விரல் ரத்தினம்' (கை. பிரதி);*

*469. கொங்கை தங்கச் செப்பெனவே - தங்கத்தாலாகிய வட்டமான சிமிழ்கள் போலத் தனங்கள் விளங்கவும்; கோல முகம் - அழகு நிறைந்த முகம்; திங்களென - பூர்ண சந்திரனைப் போல வட்ட வடிவமாய்ப் பிரகாசிக்கவும்; பி.வே. - 'கோல முகத்தின் யழகாய்' (மா. தவநிலை);*

*470. வால மதி மங்கையர்க்கு - இளவயது கன்னிப் பெண்ணுக்கு; வகுத்த இலக்கணங்கள் - வேதன் வகுத்துள்ள சாமுத்திரிகா லக்ஷணங்கள், பி.வே. - 'இலட்சணங்கள்' (ச.ம.நூ.); 'லச்சணங்கள்' (மா. தவநிலை); 'வாலை மதி' (கை. பிரதி); ஒப்பிடுக: 'வாலமதி' (12, 804. 2668);*

*471. சீனமுடன் < சீலமுடன் - நற்குணங்கள்; ஞொத்திருந்தால் < ஒத்து இருந்தால் - இணைந்து, ஈடாக இருந்தால்; செய்வீர் கலியாணம் - அவ்வாறான கன்னிப் பெண்ணை எனக்குத் திருமணம் செய்யுங்கள்;*

யென்று மைந்தன்சொல்ல லியல்வுமிகுந் தாதையரும்
நன்றுயென மகிழ்ந்து நானிலமெல்லாந் திரிந்து
தன்மகனார் சொன்னபடி தாரணியெல்லாந் திரிந்து
நன்மைமிகு லற்க்கணாளை நாடிமிக யாராய்ந்து
தேடியே கண்டான் திருந்துமட மங்கையரை
நாடியொரு தாபரஞ்சொல் நன்னுதலார்
மூன்றுபெண்ங்கள்

பா.வே. - 'திறமுடன் ஒத்திருந்தால்' (ச.ம.நூ.); பி.வே. - 'சீலமுடன்' (மா. தவநிலை., கை. பிரதி);

472. என்று மைந்தன் சொல்ல - என்று மிருக சிங்கன் பெண்களின் அங்க இலக்கணங்களைக் கூறவும்; இயல்வு மிகுந்தாதையரும் - நல்ல குணங்கள் நிறைந்துள்ள தந்தையும்; பி.வே. - 'மகன் சொல்ல; 'இயல்பு மிருகண்டரிஷி' (ச.ம.நூ.); 'மையிந்தன்', மிருகண்டரிசி (மா. தவநிலை);

473. நன்றுயென மகிழ்ந்து - மகன் கூறியவற்றைக்கேட்டு அவை நல்லனவே என்று ஆனந்தமுற்று; நானிலமெல்லாம் - இந்த நாட்டின் எல்லாப் பகுதிகளிலும்; திரிந்து - சென்று; பி.வே. - 'தேடி' (கை.பிரதி);

474. தன் மகனார் - மிருகசிங்கன்; சொன்னபடி - பெண்களின் இலக்கணங்களின் விதி முறையே; தாரணி < தரணி - நாடு; எல்லாந் திரிந்து - பலவிடங்களுக்கும் காலால் நடந்து சென்று; பி.வே. - 'தரணி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'ஆராய்ந்து' (ச.ம.நூ.); 'தேடி' (மா.தவநிலை, கை.பிரதி); பார்க்க: 'தரணி' (1639, 1744, 2196, வி.51); 'தாரணி' (697, 743, 1907, 2314, 2567, 2642);

475. நன்மைமிகு - நல்லவை மிகுதியும் கொண்ட; லற்க்கணாளை < இலக்கணாளை - சிறந்த பெண்ணை; நாடிமிகு ஆராய்ந்து - நேரில் சென்று பார்த்து அவர்களின் குணாதிசயங்களை அளந்து; பி.வே. - 'நன்மை புரி' (ச.ம.நூ.); 'நன்மைதிரு' (மா.தவநிலை, கை.பிரதி); 'இலட்சணங்கள்' (ச.ம.நூ.); 'லட்சணங்கள்' (மா.தவநிலை, கை.பிரதி); 'நாடியெங்கும்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'நாடியே' (கை.பிரதி);

476. தேடியே - இறுதியாகத் தேடிப்பிடித்து; திருந்துமட - மங்கையரை - திருத்தமான பெண்களை; கண்டான் - கண்டு பிடித்தான்; பி.வே. - 'மங்கையர்கள்' (ச.ம.நூ., மா.தவநிலை);

477. நாடி - தேடி; ஒரு தாபரம் - ஓரிடத்தில்; சொல் - புகழ்ந்து சொல்லுதற்குரிய; நன்னுதலார் - நல்ல நெற்றியையுடையவர்கள்; மூன்று பெண்கள் - மூன்று கன்னியர்; பா.வே. - 'நாடி நவுத(வ)ரிஷி' (ச.ம.நூ.); 'நவுதரிசி' (மா.தவநிலை, கை.பிரதி). (இவற்றால் மிருக சிங்கன் மனைவியரின் தந்தை பெயர் நவுதரிசி எனத் தெரிகின்றது). 'நான்கு பெண்கள்' (ச.ம.நூ.); ஒப்பிடுக: 'தாபரம்' (வரி 23, 1242);

அந்தமிகு பார்தனி லழகுமுக லட்சணமும்
சிந்தையுடன் கண்டு சிறந்து மனமகிழ்ந்து
எந்தன் மகனுக்கு யிவளாம[ை]னவி யென்று
அந்தமுனி மாதாதந்தை ஆனமுனி பாலணுகி
நீதிநெறி முனியே நீண்டபுகழென் மகன்றான்
ஆதிமிருக சிங்கன் ஆனவெகு தவத்தோன்
சங்கரரை நோக்கித் தவமுடித்து மீண்டுவந்தான்
பொங்குபுக ழீசுரனார் புண்ணியனார் சொன்னபடி

*478.* அந்த மிகு பார்தனிலே - அவ்விடத்திலே; அழகுமுக - எழில் நிரம்பிய முகத்தையும்; லட்சணமும் < இலட்சணமும் - உருவப்பொலிவும் கொண்டவர்களை; பி.வே. - 'அந்தமடமாதை அழகுதிரு' (ச.ம.நூ.); 'அந்தம் நிறைந்த மாதர்' (மா.தவநிலை); 'அந்த நிறை மாதர்' (கை.பிரதி);

*479.* சிந்தையுடன் கண்டு - உள்ளன்போடு பார்த்து; சிறந்து மன மகிழ்ந்து - மகிழ்ச்சியுற்று;

*480.* எந்தன் மகனுக்கு - மிருக சிங்கனுக்கு; இவளாம் ம(ை)னவி யென்று - மூன்று பெண்களில் ஒருத்தியே ஏற்ற மனைவி என முடிவு செய்து; பி.வே. - 'எந்தன் மகனார்க்கு யிவர்தான்' (மா.தவநிலை);

*481.* அந்தமுனி - மிருகண்டமா முனிவர்; மாதாதந்தை ஆனமுனி பால் - அப் பெண்களின் பெற்றோர்களாகிய முனிவனிடத்திலும், அவர் பத்தினியிடத்திலும்; அணுகி - நேரில் சென்று; பா.வே. - 'கந்த நவுத(வ)ரையும் கண்ட மிருகண்டரிஷி' (ச.ம.நூ.); 'கந்தம் நிறைந்த நவுதரிஷியை கண்டு மிருகண்டர் சொல்வார்' (மா.தவநிலை, கை.பிரதி);

*482.* நீதிநெறிமுனியே - உண்மை, நேர்மை வழிகளில் உயர்ந்துள்ள முனிபுங்கவரே; நீண்ட புகழ் - இவ்வுலகம் நிலைபெறும் அளவும் நிலைத்திருக்கக் கூடிய பெருமையுடைய; என் மகன்றான் < என் மகன் தான்; பி.வே. - 'நீண்ட புகழேன் மகனான' (ச.ம.நூ.); 'நீதி புகழ்மாமுனியே' (மா.தவநிலை);

*483.* ஆதி மிருகசிங்கன் - மிருகசிங்கன் எனும் பெயரினன்; ஆன வெகு தவத்தோன் - சொல்லத்தக்க தவங்கள் மிகுதி பெற்றவன்; பி.வே. - 'ஆனமிகு தவத்தோன்' (ச.ம.நூ.); 'ஆன யருள் தவத்தோன்' (மா.தவநிலை, கை.பிரதி);

*484.* சங்கரரை - இறைவனை; நோக்கி - காணவேண்டி; தவமுடித்து - கடுமையான விரதங்களை மேற்கொண்டு; மீண்டு வந்தான் - இறைவன் காட்சி நல்கப் பெற்று இல்லற வாழ்வுக்குத் திரும்பி வந்துள்ளான்; பி.வே. - 'தவமிருந்து' (மா.தவநிலை, கை.பிரதி);

*485.* பொங்குபுகழீசுரனார் - நிறைந்து விளங்கக்கூடிய புகழுடைய இறைவன்; புண்ணியனார் - மேன்மையானவர்; சொன்னபடி - இல்லறமே உயர்ந்தது என்று கூறியபடி;

இல்லறத்தில் வாழ்க எனதுமகன் றனக்கு
நல்லறத்தி லுந்தன் நளினமகள் மூவர்களில்
என்னுடைய பாலனுக்கு யேந்திளையை யீயுமென்று
கன்னல்மொழி சொன்னான் கருணை மிருகண்டரிசி
மங்கையர்கள் தந்தையன்னை வாகுமன மகிழ்ந்து
பொங்குஞ் சடைமுடியோன் பொற்(ப்)பாதங்
கண்டுவந்த
உந்தன் மகனுக்கு யுசந்தயெந்தன் பிள்ளைகளைச்

486. இல்லறத்தில் - குடும்பவாழ்வில்; வாழ்க - வாழ; எனது மகன்றனக்கு - என்மகன் மிருக சிங்கனுக்கு; பி.வே. - 'வாழ' (கை.பிரதி);

487. நல்லறத்தில் உந்தன் - நல்ல அறநெறியில் வந்த உனது; நளினமகள் மூவர்களில் - மென்மைத்தன்மை கொண்ட மூன்று கன்னியருள்; பா.வே. - 'நல்லறத்து ஆய்ந்த நளின மங்கை நால்வரிலும்' (ச.ம.நூ.); பி.வே. - 'மக்கள்' (மா.தவநிலை, கை.பிரதி); பார்க்க: 'நளினம்' (504, 838, 1747, 1836, 1959, 1995, 2001, 2671, வி.58);

488. என்னுடைய பாலனுக்கு - என் மகனுக்கு; யேந்திளையை -ஒரு பெண்ணை; ஈயுமென்று - மனைவியாகக் கொடும்என; பி.வே. - 'பாலகனுக்கு' (ச.ம.நூ., மா.தவநிலை);

489. கண்டரிசி - அன்பும் இரக்கமும் நிறைந்த மிருகண்டமுனி இவ்வாறு; கன்னல் மொழி - பெண்ணைப் பெற்றோர்க்கு இனிமை தரும் பேச்சை; சொன்னான் - பேசினான்; ஒப்பிடுக: 'கன்னல்' (253, 671, 713, 753, 1422, 2629); 'கன்னல் தவசு' (694);

490. மங்கையர்கள் - கன்னிப் பெண்களின்; தந்தையன்னை - பெற்றோர்கள்; வாகுமன மகிழ்ந்து - சிறப்பாக உள்ளம் மகிழ்ச்சியுற்று; பி.வே. - 'அன்னை தந்தைவாகாகவே' (ச.ம.நூ.); 'வாகா(ய்)' (மா.தவ நிலை, கை.பிரதி);

491. பொங்குஞ்சடை முடியோன் - நிறைந்து கிடக்கும் விரிந்த முடிகளுடன் கூடிய இறைவனின்; பொற்(ப்)பாதம் - (வரி 322) பொன் போன்ற தாள்களை; கண்டு வந்த - இறைவன் வந்து காட்சி தரப் பெற்றதால் பார்த்து வணங்கிவந்த; காண்க: 'சடைக்கோமான்' (338), 'சடை முடியார்' (2559), 'சடையணிந்தவன் (வி.60);

492. உந்தன் மகனுக்கு - மிருகண்டமுனியே! உமது மகனான மிருகசிங்கனுக்கு; உகந்த - தகுதியான; எந்தன் பிள்ளைகளை - எம் பெண்மக்களான மூன்று கன்னியரையும்; பா.வே. - 'உகந்து உந்தன் பிள்ளைகளை' (ச.ம.நூ.);

சிந்தை மகிழ்ந்துமணஞ் செய்தேனே யாமாகில்
எந்தனக்கு மோட்சமுண்டு யென்னுடைய
பிள்ளையளால்
எந்தன் மருக னியல்வுதவ நெறியால்
முந்துமெந்தன் வங்கிஷமு மூதாக்க ளெல்லோரும்
சிந்தை மகிழ்ந்து சிவன்பாதம் வீத்திருப்பார்
எந்தன் தவமெனக்கு யின்னாளில் சிக்கியதே
தந்தேனுன் மை(ய்)ந்தனுக்குத் தார்குழலார் மூவரையும்
என்று மகிழ்ந்து யிருவர்களுஞ் சொன்னதின்பின்

493. சிந்தை மகிழ்ந்து - உள்ளம் பூரித்து; மணம் - திருமணம்; செய்தேனேயாமாகில் - நடத்தினேனாயின்;

494. என்னுடைய - எனது; பிள்ளையளால் < பிள்ளைகளால்; எந்தனக்கு - எமக்கு; மோட்சமுண்டு - (வரி 186) சொர்க்கம் கிடைக்கும்; பி.வே. - 'மோச்சம்' (மா.தவநிலை);

495. எந்தன் மருகன் - எனக்கு மருமகனாக வரவிருக்கும் மிருகசிங்கன்; இயல்வு தவநெறியால் - விளங்கக் கூடிய தவத்தின் வன்மையால்;

496. முந்துமெந்தன் - எனக்கு முன்புள்ள; வங்கிஷமும் வமிசமும்; மூதாக்களெல்லோரும் - முன்னோர்களான உறவினர்கள் அனைவரும்; பி.வே. - 'நற்குலமும் மூதாதை எல்லோரும்' (ச.ம.நூ.); 'வங்கிசமும் மூதாக்கள்' (மா.தவநிலை); 'வமிசமும் மூதாக்கள்' (கை.பிரதி);

497. சிந்தை மகிழ்ந்து - (வரி 493); சிவன்பாதம் - சிவபெருமானுடைய திருவடிகளில்; வீத்திருப்பார் < வீற்றிருப்பார் - (எப்போதும் சிவன் பாதங்களுக்குக்கீழ்) அமர்ந்திருப்பார்; பார்க்க: 'சிவன் பாதம்' (1578, 1581, 1754);

498. எந்தன் தவம் - இப்பிறவியில் இறைவனடி சேர்வதற்கு நான் செய்ய வேண்டிய தவங்கள்; எனக்கு; இன்னாளில் < இந்நாளில் - இப்போது; சிக்கியதே - உமது மகனை மருமகனாக அடைவதால் தானே வந்துற்றதே; பி.வே. - 'வந்ததே தவம்' (ச.ம.நூ., மா.தவநிலை; கை. பிரதி); காண்க: 'சிக்குதல்' (1524);

499. உன் - உமது; மை(ய்)ந் தனுக்கு - மகனுக்கு; தார்குழலார் - கூந்தலில் பூமாலைகளைச்சூடும்; மூவரையும் - மூன்று கன்னியரையும்; தந்தேன் - இன்றே உரிமையாக்கினேன்; பா.வே. - 'நால்வரையும்' (ச.ம.நூ.);

500. என்று மகிழ்ந்து - இவ்வாறு விருப்பத்துடன்; இருவர்களும் - பெண்களின் பெற்றோர்களும்; சொன்னதின்பின் - கூறிய பிறகு; பி.வே. - 'இவர்களுக்குறுதி சொன்னார்' (ச.ம.நூ.); 'உறுதிமொழி சொன்னார்' (மா.தவநிலை); 'உறுதி செய்தார்' (கை.பிரதி);

அன்று மிருகண்டன் யதிகமகிட்சி பொங்கி
திருவனையார் மூவருக்குஞ் செல்வன் மிகுதவற்றால்
ஒருமாது கேட்க யுதவுகிறான் மூவரையும்
நல்லதென்று சிந்தை நளினமுற்று யன்னாளில்
வல்ல முகிள்த்தமிட்டு வந்தார் மகனிடத்தில்
நாளிட்டு நல்முனிவன் நன்றாக மீண்டதற்பின்
வாளிட்ட வேல்விழியார் மாகபுன லாடச்
சென்றார்கள் மூவர்களுஞ் செல்லும் வழிதனிலே

501. அன்று - அன்றைய தினம்; மிருகண்டன் - முனிவர்; அதிக - மிகுந்த; மகிட்சி < மகிழ்ச்சி - சந்தோசம்; பொங்கி - நிறைந்து; பா.வே. - 'அன்னாள் மன மகிழ்ந்து' (ச.ம.நூ.); 'ஆம் மிகதான் மகிழ்ந்து' (மா.தவநிலை); 'ஆக மன மகிழ்ந்து' (கை.பிரதி);

502. திருவனையார் - திருமகளைப் போன்ற பெண்கள்; மூவருக்கும் - மூன்று பேர்களுக்கும்; செல்வன் - தன்மகன் மிருகசிங்கன்; மிகுதவற்றால் < மிகு தவத்தால் - மிகுதியான தவவலிமையால் உண்டான புகழால்; பா.வே. - 'நால்வர்களும்' (ச.ம.நூ.);

503. ஒரு மாது கேட்க - தன் மகனுக்குத் திருமணம் செய்ய ஒரு பெண்ணைத் தருமாறு வேண்ட; உதவுகிறான் மூவரையும் - சகோதரிகள் மூன்று பெண்களையும் அவர்கள் தந்தை தருவதற்கு முன்வருகின்றான்; பா.வே. - 'நால்வரையும்' (ச.ம.நூ.); பி.வே. - 'உதவுகிறார் மூன்று பெண்கள்' (மா.தவநிலை);

504. நல்லதென்று - அதுவும் நன்மைக்குத்தான் என; சிந்தை - (கனத்த) மனம்; நளினமுற்று - (வரி 487) மென்மையாகி; அன்னாளில் < அந்நாளில் - அத்தினத்தன்றே;

505. வல்ல - உறுதியான; முகிள்த்தம் < முகுள்த்தம் < முகுர்த்தம் < முகூர்த்தம் - சுபகாரியங்களுக்குரிய நாள், நேரத்தை; இட்டுவந்தார் மகனிடத்தில் - கலந்துபேசி குறித்துப் பின் தன் மகனிடத்தில் வந்து சொன்னார்; பா.வே. - 'மகளிடத்தில்' (ச.ம.நூ.);

506. நாளிட்டு - திருமணத்துக்கான தினத்தை முடிவுசெய்து; நல்முனிவன் - மிருகண்டு முனிவர்; நன்றாக - நலமுடன்; மீண்டதற்பின் - வீடு திரும்பியதன் பின்பு;

507. வாளிட்ட வேல் விழியார் - ஒளிவீசும் வேலினையொத்த கண்ணையுடைய அப்பெண்கள் மூவரும்; மாகபுனலாட - புதுப்புனலில் நீராட; பா.வே. - 'வாளேற்ற வேல் விழியார் மிகாப் புனல் ஆட' (ச.ம.நூ.); 'நாளிட்ட நல் மடவார் நன்றாய் புனல்லாட' (மா.தவநிலை);

508. சென்றார்கள் மூவர்களும் - மூன்று பெண்களும் புறப்பட்டுச் சென்றனர்; செல்லும் வழிதனிலே - போகும் பாதையிலே; பி.வே. -

அன்றோர் கரியு மதட்டி விரட்டியதே
ஆனை விரட்ட அருவையர்கள் மெய்மறந்து
தேனையொத்த சொல்லார் திறமறந்து ஓடுகையிலே
பாதை விலகியிவர் பாங்கிணத்தைக் காணாமல்
மாதாதி வீழ்ந்து மாண்டுவிட்டா ரெமன்வந்து
மாக புனலாட மனதுவைத்து வந்தபெண்ங்கள்
தாகமுடன் வீழ்ந்து சாலமடிந்து விட்டார்

'சென்றார்கள் பெண்கள்' (ச.ம.நூ.); 'சென்றார்கள் மூன்று பெண்கள்' (மா.தவநிலை, கை.பிரதி);

509. அன்றோர் கரியும் - அப்போது ஒரு காட்டானையும்; அதட்டி - அப்பெண்களைப் பயமுறுத்தி; விரட்டியதே - ஓடச் செய்து தானும் பின் சென்றது; பி.வே. - 'யானை' (கை.பிரதி);

510. ஆனை - யானை; விரட்ட - ஓடச் செய்ய; அருவையர்கள் < அரிவையர் - பெண்கள் மூவரும்; மெய்மறந்து - தங்களை மறந்து; பார்க்க: 'அருவையர்(கள்)' (520, 2056);

511. தேனையொத்த சொல்லார் - தேன் போல இனிக்கும் பேச்சினைப் பேசும் அப் பெண்கள்; திறமறந்து - தங்கள் தன்மையையும் மறந்து; ஓடுகையிலே - ஓடும்போது, பா.வே. - 'திசைமறந்து' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); பி.வே. - 'ஓடயிலே' (மா.தவநிலை); ஒப்பிடுக: 'தேனொத்த முக்கனி' (2457); 'திறம்' (வரி 1321, 1361);

512. பாதைவிலகி - நேரான வழித்தடத்தை விட்டு அகன்று; இவர் - இப்பெண்கள்; பாங்கிணத்தை < பாழ்ங்கிணற்றை - உபயோகமற்று இடிந்துகிடக்கும் ஆழக்கிணறு; காணாமல் - அது இருப்பது தெரியாமல்; பி.வே. - 'அவர்', 'பாழுங்கிணத்தை (ச.ம.நூ.); 'பாழ்ங்கிணற்றை' (கை.பிரதி); பார்க்க: 'பாங்கிணறு' (524, 1712);

513. மாதாதி < மாது ஆதி - பெண்கள் எல்லோரும்; வீழ்ந்து - விழுந்து; எமன் வந்து - காலக்கடவுளான யமன் வந்து பிடித்ததால்; மாண்டுவிட்டார் - இறந்துபோயினர்; பி.வே. - 'மாதரதில் வீழ்ந்து (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); பா.வே. - 'நால்வர்களும்' (ச.ம.நூ.);

514. மாகபுனலாட - (வரி 507); மனது < மனம் அது - விரும்பி; வந்தபெண்கள் - புனல்நோக்கி வந்த மங்கையர்; பா.வே. - 'மாகர புனலாட' (ச.ம.நூ.); 'மாதர் புனலாட' (கை.பிரதி);

515. தாகமுடன் - வேதனையுடன்; வீழ்ந்து - விழுந்து; சால - முழுதும்; மடிந்து விட்டார் - உயிர்துறந்து விட்டனர்; பா.வே. - 'தந்தியால் மடிந்தார்' (ச.ம.நூ.); 'தான் மடிந்து விட்டார்கள்' (மா.தவநிலை, கை.பிரதி); பார்க்க: 'தாகம்' (1274);

நம்மால் துடவரிது நாமுந் தொடாதபடி
செம்மான் பிறத்த சிவனாருல கேத்த
வேணுமென்று சொல்லி மிகுந்தந்த புத்பததேரேற்றிக்
காணவென்று வீசர் கயிலைவரை சேர்த்தார்
அந்த வழியி லருவையரைத் தான்தேடி
வந்த முனிவன் மகாபுனலில் காணாமல்
[சிந்தைநொந்து] பின்வழியில் தேடி வருகையிலே
அந்தமுள்ள மாத ரடியினைக் கண்டேவணங்கி
பக்கம் விலகியிவன் பாங்கிணத்தை வந்துகண்டு

516. நம்மால் - எமனாகிய தன்னால்; துட < தொட, பெண்களின் உடல்களைத் தொட்டு எடுத்துக்கொண்டு நரகம் செல்ல; அரிது - முடியாது; நாமுந்தொடாதபடி - அவர்களைத் தீண்டாது; பி.வே. - 'தொட' (ச.ம.நூ.);

517. செம்மான் - தாருகாவனத்து முனிவர்களால் அனுப்பப்பெற்ற கோபத்தால் சிவந்த மானை; பிறத்த < பிறத்தே < புறத்தே - பின் புறத்தில், பின் கையில் அடக்கியுள்ள; சிவனார் - சிவபெருமான்; உலகு - கயிலாயத்துக்கு; ஏத்த < ஏற்ற - அனுப்ப; ஒப்பிடுக: (வரி 1084);

518. வேணுமென்று சொல்லி - வேண்டுமென்று எமன் தனக்குள் முடிவுசெய்து; மிகுந்தந்த - விளங்கக் கூடிய; புற்பத < புஷ்பரத - புட்பக; தேரேற்றி - புஷ்பகத்தேரில் அவர்களை ஏற்றித்தானும் ஏறி அமர்ந்து;

519. காணவென்று - கயிலாயத்தைக் காணட்டும் என; வீசர் < ஈசர்; கயிலைவரை - கயிலை மலை; சேர்த்தார் - அப்பெண்களை எமன் கொண்டு சென்றான்; காண்க: 'கயிலை' (597, 1216, 1628, வி.35, வி.51);

520. அந்த வழியில் - புனலாடச் சென்ற பாதையில்; அருவையரை - (வரி 510); தான் தேடி - அவர்களைக் காண;

521. வந்த முனிவன் - பார்க்கவந்த தந்தையானவர்; மகாபுனலில் பெரிய புதுவெள்ளத்தருகே; காணாமல் - அப்பெண்கள் அங்கே இல்லாமையால்;

522. [சிந்தை நொந்து] - மனம் வேதனையுற்று; பின் வழியில் - வந்த பாதையில் மீண்டும்; தேடி வருகையிலே - தன் மக்களைக் கண்டுபிடிக்க வரும்போது;

523. அந்தமுள்ள மாதர் - இளமை பொருந்திய பெண்களின்; அடியினை - கால் தடங்களை; கண்டே வணங்கி - பார்த்து அவற்றைப் போற்றி;

524. பக்கம் விலகி - பாதையிலிருந்து நீங்கிக் கால் தடங்கள் சென்ற திசையில் தொடர்ந்து; இவன் - பெண்களின் தந்தை; பாங்கிணத்தை - (வரி 512 ); வந்துகண்டு - அடைந்து அவர்களைப் பார்த்து;

தக்கமுடன் வீழ்ந்து தானெடுத்தான் மூவரையும்
மங்கையரைத் தானெடுத்து வாகுகரையில் கிடத்தி
தங்கு புகழான் தயங்கி விழுந்தழுதான்
எண்ணிப் பெருமூச்செறிந்து யேகவுடல் மெய்மறந்து
விண்ணிற் பறப்பார்போல் மெற்ற மதிமயங்கி
மண்ணிலெந்தன் மங்கையரே வாகாக நீங்களெந்தன்
கண்ணைப் பறித்தெறிந்து காச்சியுடன் போனையளே
மங்கையரே யுந்தன் மணாளன் மிகுதவற்றோன்
தங்குபுக ழானவர்முன் தானேகிப் போனையளோ

525. தக்கமுடன் - கவனமுடன், முறையாக, வீழ்ந்து - கிணற்றுள் குதித்து; தானெடுத்தான் மூவரையும் - தன் பெண்கள் மூன்றுபேர்களை யும் வெளியே எடுத்துவந்தார்;

526. மங்கையரைத் தானெடுத்து - இறந்த தன் பெண்களின் சடலங் களை வெளியே எடுத்து; வாகுகரையில் கிடத்தி - வாகாகக் கிணற்றின் பக்கத்தே படுக்கவைத்து;

527. தங்கு புகழான் - புகழ் என்றும் நிலைத்து நிற்கக் கூடிய முனிவன்; தயங்கி - கலங்கி; விழுந்தழுதான் - மண்ணில் புரண்டு விம்மினான்;

528. எண்ணிப் பெருமூச்செறிந்து - பெண்களை நினைந்து ஏக்கமாய் மூச்சுவிட்டு; யேகவுடல் - மொத்த உடம்பும்; மெய்மறந்து - முற்றும் தன்னை மறந்து, (வரி 510);

529. விண்ணில் பறப்பார் போல் - வானில் பறந்து செல்பவர்களைப் போல, உடம்பிலுள்ள பாரம் நீங்கி இலகுவாகி; மெற்ற < மெத்த - முழுதும்; மதி மயங்கி - அறிவு பேதலித்து;

530. மண்ணில் - இந்த உலகத்தில்; எந்தன் - எனக்கு; மங்கையரே - பெண்களாகப் பிறந்தவர்களே!; வாகாக நீங்கள் - எளிதாக நீங்கள்; எந்தன் - என்னுடைய;

531. கண்ணை - காணும் கண்களை; பறித்தெறிந்து - பிடுங்கி வீசி; காச்சியுடன் < காட்சியுடன் - காணமுடியாதபடி என் பார்வையை உங்களுடன்; போனையளே < போனீர்களே - கொண்டு சென்று விட்டீர்களே, ('போனையளே' - தென்பாண்டி நாட்டு வழக்கு); ஒப்பிடுக: 'காட்சி' (153, 570, 2067);

532. மங்கையரே! - பெண்களே!; உந்தன் < உம்தன் உங்கள்; மணாளன் - மிருகசிங்கன்; மிகு - பெரிய; தவற்றோன் < தவத்தோன் - தவவலிமை பெற்றவன்; பார்க்க: 'மணாளன்' (2274);

533. தங்கு புகழானவர்முன் - (வரி 527) - மிருகசிங்கன் முன்னே; தானேகி - நீங்களே நேரில் சென்று; போனையளோ - (வரி 531);

உங்கள்தனை யின்னா ளுகமைத் தவற்றோர்க்கருளி
எங்கள் சடமீடேறு மென்று மகிழ்ந்திருந்தேன்
மைந்தனுக்கு மாதை வழங்குமென்றான் மாமுனிவன்
தந்தேனென யவர்க்குஞ் சாத்தினேன் போனவர்பின்
வந்தாலினி யேது வாய்திறப்பேன் மங்கையரே
என்தாயே என்மகளே யென்றுயழுதே முனிவன்
மன்றுலகில் மீறுவலு மாகபுனல் தவற்றால்
இன்றுயுங்கள் தன்னை யெழுப்புவே னென்றுசொல்லி
மங்கையர்கள் மூவரையும் வாகாய்மனை கொடுபோய்

534. உங்கள்தனை - உங்கள் மூவரையும்; இன்னாள் < இந்நாளில்; உகமை - (வரி 340) தகுதி வாய்ந்த; தவற்றோர்க்கு < தவத்தோர்க்கு - (வரி 532); அருளி - மணம் செய்து கொடுத்து;

535. எங்கள் சடம் - (வரி 44) உங்கள் பெற்றோர்களாகிய எங்களிருவரின் மானிட உடம்புகளும்; ஈடேறும் - உய்வடையும்; என்று - என; மகிழ்ந்திருந்தேன் - சந்தோசமுற்றிருந்தேன்;

536. மைந்தனுக்கு - தன் மகனான மிருகசிங்கனுக்கு; மாதை - மூன்று கன்னியர்களில் ஒருத்தியை; மாமுனிவன் வழங்குமென்றான் - மிருகண்டு முனிவன் என்னிடத்தில் வந்து பெண்தருமாறு கேட்டான்;

537. தந்தேன் என - மூவரையும் ஈவதாக; அவர்க்கும் - அம்முனிவரிடம்; சாத்தினேன் < சாற்றினேன் - கூறினேன்; போனவர் - உறுதி செய்துவிட்டுச் சென்றவர்; பின் - இனி;

538. வந்தால் - திரும்பி வந்து விசாரித்தால்; இனி - இப்போது; ஏதுவாய் திறப்பேன் - எவ்வாறு வாய் திறந்து பதில் கூறுவேன்; மங்கையரே!;

539. என் தாயே - என்னுடைய அன்னை போன்ற அன்புள்ளவர்களே!; என் மகளே - என்னுடைய மக்களே; என்று அழுதே முனிவன்;

540. மன்றுலகில் - (வரி 374) இந்நிலவுலகில்; மீறுவலு - வலிமையில் விஞ்சும்; மாகபுனல் - (வரி 269) மாக நீராடி வழிபடும்; தவற்றால் < தவத்தால் - நோன்பால்;

541. இன்று யுங்கள் தன்னை - இப்போது உங்கள் மூவரையும்; எழுப்புவேன் - உயிர்பெறச் செய்வேன்; என்று சொல்லி - எனச் சபதமேற்று;

542. மங்கையர்கள் மூவரையும் - மூன்று பெண்களின் சடலங்களையும்; வாகாய் - வகையாக; மனைகொடுபோய் - வீட்டிற்கு எடுத்துச் சென்று;

தங்குமென்னப் பந்தல் தனில்கிடத்தி மாமுனிவன்
மாக புனலாடி வலுயெம காலனையும்
தாகமுடன் முனிவன் தான்வணங்கி நெஞ்சுருகி
பொங்கு வலுசூலம் புனிதனே மாமறலி
எங்குஞ் சிறந்தபொரு ளெமனேபோத்தி யென்றான்

**விருத்தம்**

படியெவை யண்ட ரண்டம்
பலதிசை புவனந் தீவில்
நெடிதுயில் மூவர் தேவர்
நீள்விதி யறிந்துள் ளோனே
துடிவரு காலா யீசா
துடர்மஞ்ச சூல பாணி
அடியன்ற னெனக்கு வந்த
யாவத்தை நீக்கு வாயே (24)

543. தங்குமென்ன - விளங்கக்கூடிய; பந்தல்தனில் - கொட்டகையில், கிடத்தி - படுக்கவைத்து; மாமுனிவன் - அந்தப்பெரிய ரிஷி;

544. மாக புனலாடி - (வரி 269) மாக மாதத்து நீராடல் செய்து நோன்புநோற்று; வலு - வலுவான; எமகாலனையும் - காலக்கடவுளான எமனையும்;

545. தாகமுடன் - ஏக்கத்துடன், வேதனையுடன்; தான் வணங்கி - போற்றுதல் செய்து; நெஞ்சுருகி - மனம் கசிந்து நெகிழ்ந்து;

546. பொங்குவலு சூலம் - நிறைந்த வலிமை கொண்ட சூலப்படையுடைய; புனிதனே - நியாயமானவனே, உண்மையானவனே; மா மறலி - மகா பலசாலியான எமனே; பார்க்க: 'வலுசூலம்' (948);

547. எங்குஞ் சிறந்தபொருளே - எல்லாவற்றிலும் சிறந்திருப்பவனே; எமனே - எமதருமராசனே; போத்தி < போற்றி - வணங்குகிறேன்; என்றான் - என்று முனிவன் வழிபட்டான்;

வி.24. படியெவை - மனிதர்களின் புவனத்தும் (வரி 439, வி.11) அண்டரண்டம் - (வரி 319) கடவுளர் உலகத்தும்; பல திசை - பல திக்குகளிலுமுள்ள; புவனந்தீவில் - உலகங்களிலும் கடலால் சூழப்பெற்ற தீவுகளிலும் உள்ள மானிடர், இராக்கதர்களின்; நெடிதுயில் - நீண்டயோக நித்திரை செய்யும்; மூவர் - மும்மூர்த்திகளின்; தேவர் - தேவாதி தேவர்களின்; நீள்விதி - நீண்ட ஊழ்வினைகளையும் முடிவுகளையும்; அறிந்துள்ளோனே - தெரிந்துவைத்துள்ள எமனே; துடிவரு - (வரி 440) வரவிருக்கின்ற காலநுட்பம் அறிந்த; காலா - காலக்கடவுளே; ஈசா -

**நடை**

[இந்த முனிவ]னிருந்த தவமறிந்து
வந்து மகாகாலன் மகாமுனியே அஞ்சலென்று
மாமுனி நீ[ர்]தாமு மாக புனலாடி
நேமமுட னெம்மை நினைத்தவகை யேதுசொல்லும்
அந்தவுரை கேட்டு யருள்முனிவன் காலனடி
சிந்தையுடன் வணங்கிச் சிந்தை மகிழ்ந்துரைப்பான்

ஈசனே; துடர் < தொடர் - தொடர்ந்து, உருண்டு செல்லும்; மஞ்ச - ரதம் உள்ளவனே; சூலபாணி - கரத்தில் சூலப்படையை ஏந்தியவனே; அடியன் தன் எனக்கு வந்த - உனது தொண்டனான எனக்கு வந்துற்ற; ஆவத்தை < ஆபத்தை - துன்பத்தை; நீக்குவாயே - விலக்குவாயே;

பா.வே. - 'படிதிசை' 'புவனமெல்லாம்' (மா.தவநிலை, கை.பிரதி); - 'நெடிதுயர் மூவர்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'சுடர்மழு' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'ஆபத்தை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); பார்க்க: 'புவனம்' (1236, 1371, 1649, 1834, 2196, 2600, வி.29, வி.35. 'தீவு' (1274); ஒப்பிடுக: 'அடியேன்' (352); 'ஆபத்து' (1351);

548. [இந்த முனிவ]னிருந்த தவமறிந்து - தன்னை நோக்கி அம்முனிவன் தவம் செய்வதை அறிந்து; பி.வே. - 'இருந்துதவம் புரிய' (மா.தவநிலை); 'தவம் புரிந்து' (கை.பிரதி);

549. மகா காலன் வந்து - பெரிய காலக் கடவுளான எமன்தோன்றி; மகாமுனியே - பெரிய முனிபுங்கவனே; அஞ்சல் - பயப்படவேண்டாம்; என்று - என்றான்; பி.வே. - 'மாமுனியே அஞ்சேல் என்று' (ச.ம.நூ.); 'மாகாலன்' (கை.பிரதி);

550. மாமுனிநீர்தாமும் - பெரிய முனிவரே! நீவிர்; மாக புனலாடி - புது நீராடல் செய்து நோன்பிருந்து; பி.வே. - 'மகாப் புனலாடி' (ச.ம.நூ.);

551. நேமமுடன் < நியமமுடன் - விதிமுறைகளுடன்; எம்மை - எமனாகிய என்னை; நினைத்தவகை யேதுசொல்லும் - எதனால் நினைத்துத் துதித்தீர் என்பதற்கான காரணங்களைக் கூறும்; பி.வே. - 'நம்மை' (ச.ம.நூ.); 'நேசமுடன்' (கை.பிரதி); 'சொல்லும் என்றார்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

552. அந்தவுரை கேட்டு - எமன் கூறுவதைக் கேட்டபின்பு; அருள் முனிவன் - கருணைவடிவான அம் மகா முனிவர்; காலன் அடி - எமனின் பாதங்களை; பி.வே. - 'அம்முனிவன்' (ச.ம.நூ.); 'காலனையும்' (ச.ம.நூ.); 'காலர்பாதம்' (மா.தவநிலை);

553. சிந்தையுடன் - கருத்துடன்; வணங்கி - தொழுது; சிந்தை மகிழ்ந்துரைப்பான் - மனம் சந்தோசமுற்றுப் பின்வருமாறு கூறினான்;

அய்யனே மாமறலி யார்க்கும் விளைபொருளே
555 செய்யபுவியனிடஞ் சிறந்த பிலவானே
மாகபுன லாடயெந்தன் மங்கையர்கள் போகையிலே
வேகமுட னானை விரட்டக் கிணத்தில்விழுந்து
மாண்டுவிட்டார் மூவரையும் வாகாகவே மகிழ்ந்து
நீண்ட புகழுடையீர் னீரெழுப்ப வேணுமென்று
560 அந்த நிமிசமதி லானபுகழ் மூவரையும்
சிந்தைமிகு காலன் திறமா யெழுப்பிவிட்டு

554. அய்யனே - தந்தை போன்றவனே!; தலைவனே!; மாமறலி - (வரி 546); யார்க்கும் - உன்னைப் போற்றுவோர் எவரானாலும்; விளைபொருளே - வந்து காட்சி தருகின்ற உண்மைப் பொருளானவனே; பி.வே. - 'யார்க்கும்' (ச.ம.நூ.); 'காலா' (மா.தவநிலை, கை.பிரதி);

555. செய்ய - சிறப்பான; புவியனிடம் - பூமியிலுள்ள மானிடன்; சிறந்த - அவனிலும் உயர்ந்த; பிலவானே < பலவானே; பா.வே. - 'செய்ய புகழ் அண்டம் சிறந்த' (ச.ம.நூ., மா.தவநிலை); 'பலவானே' (ச.ம.நூ.); 'செய்யபுகழண்ட - சிறந்த புகழ்தர்மா' (கை.பிரதி);

556. மாக புனலாட - புதுப்புனலில் நீராடி நோன்பிருக்க; எந்தன் - என்னுடைய; மங்கையர்கள் - மூன்று பெண்மக்கள்; போகையிலே - நேரான பாதையில் புனலுக்குச் செல்லும்போது; பி.வே. - 'போம் வழியில் (ச.ம.நூ.);

557. வேகமுடனானை விரட்ட - ஒரு யானை விரைவாக வந்து அச்சுறுத்தி அவர்களை ஓடச் செய்ய; கிணத்தில் < கிணற்றில் - பாழுங்கிணற்றுள்; விழுந்து - வீழ்ந்து; பி.வே. - 'விழுந்தே கிணற்றில்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'வேகமுறு யானை' (மா.தவநிலை, கை.பிரதி);

558. மாண்டுவிட்டார் - மடிந்துவிட்டனர்; மூவரையும் - மூன்று பெண்களையும்; வாகாகவே - வகையாகவே; மகிழ்ந்து - இன்பமுற்று; பா.வே. - 'நான்கு பெண்கள்', 'மாண்டுவிட்ட நால்வரையும்' (ச.ம.நூ.);

559. நீண்ட புகழுடையீர் - இவ்வுலகம் தோன்றியது முதல் உள்ள நெடிய புகழைக்கொண்டுள்ளீர்; நீரெழுப்ப வேணும் - நீர் உயிரெழுப்பித் தர வேண்டும்; என்று - என்றான்; பி.வே. - 'நீண்டபுகழ் காலதர்மா' (மா.தவநிலை, கை.பிரதி);

560. அந்த நிமிசமதில் - அப்பொழுதே; ஆன புகழ் மூவரையும் - புகழ் விளங்கக் கூடிய மூன்று பெண்களையும்; பா.வே. - 'ஆயிழைமார் நால்வரையும்' (ச.ம.நூ.); 'அந்த நிமிடத்தில்' (கை.பிரதி);

561. சிந்தைமிகு - உள்ளன்பு மிகுந்த; காலன் - எமன்; திறமாய் - தன் திறமையால்; எழுப்பிவிட்டு - உயிர்பெற்று எழச் செய்த பின்பு;

போயிருந்தா ரெமபுரம் போனதற்பின் மாமுனிவன்
சேயிரக்க நெஞ்சந் தியங்கினதெல்லாந் தெளிந்து
பொங்குபுகட் பிள்ளைகளும் பெண்டீரு மின்பமுற்று
பொங்குபுனல் மாகமதி பொருத்தமிகப் பேறுபெற்றோம்
மணமுகிள்த்தஞ் செய்யவென்ற மாமுனியை மைந்தனுடன்
பணமிகுத்த செல்வம் பலபாக்கி யங்கிளையும்

பா.வே. - 'சிந்தை நிறைகாலன் நிறமாய எழுப்பிவிட்டாண்டு' (ச.ம.நூ.); 'சிந்தை நிறைகாலன் திடமாய்' (மா.தவநிலை, கை.பிரதி);

562. போயிருந்தாரெமபுரம் - எமபுரத்துக்குச் சென்று கொலுவிருந்தார்; போனதற்பின் - எமன் திரும்பிச் சென்றபின்னர்; மாமுனிவன் - பெண்களின் தந்தையான முனிபுங்கவர்; பி.வே. - 'யேமபுரம்' (மா.தவநிலை);

563. சேயிரக்க - இளகிய, மென்மையான; நெஞ்சம் - உள்ளம்; தியங்கினதெல்லாம் - சோர்ந்ததெல்லாம்; தெளிந்து - தெளிவடைந்து; பா.வே. - 'சேயிழந்து' (ச.ம.நூ.); 'சேயிழந்த' (மா.தவநிலை, கை.பிரதி);

564. பொங்கு - நிறைந்த; புகட் < புகள் < புகழ் - புகழுடைய; பிள்ளைகளும் - மக்களும்; பெண்டீரும் < பெண்டிரும் - பெண்களும்; இன்பமுற்று - மகிழ்ந்து;

565. பொங்குபுனல் - நிறைந்து வருகின்ற வெள்ளத்தில்; மாக - மாக மாதத்துப் புனித நீராடல் செய்து; பொருத்தமிக - அதற்கு ஏற்றாற்போல்; பேறு பெற்றோம் - பெருமைகளையடைந்தோம். பா.வே. - 'பொங்கும் புலிமாகப்புனல் தவத்தால் வீற்றிருந்தான்' (ச.ம.நூ., கை.பிரதி); 'பொங்கும் புகழ்யின்பமதாய் புகழாகதானிருந்தார்' (மா.தவநிலை);

566. மணமுகிள்த்தம் < மணமுகூர்த்தம் (வரி 505) சுபகாரியமான திருமணத்தை; செய்யவென்ற - நடத்தலாம் எனக்கூறிய; மாமுனியை - மிருகண்டு முனிவரை; மைந்தனுடன் - மிருக சிங்கனுடன்; பி.வே. - மணமுகூர்த்தம் செய்து சென்ற' (ச.ம.நூ.); 'முகிர்த்தஞ்செய்து சென்ற' (மா.தவநிலை); 'மணமுகூர்த்தம் செய்து கொண்டு' (கை.பிரதி);

567. பணமிகுத்த செல்வம் - மிகுதியான பணமும் பொருள்களுடனும்; பல பாக்கியங்கிளையும் < பல பாக்கியங்களையும் - அதிகமான பெருமைகளையும், பி.வே. - 'பணமிகுந்த செல்வம் பலபாக்கியங்களையும்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

திட்டெனவே வந்து சிறந்துபுகழ் மைந்தனுக்கு
வட்டமுலை மாதர்களை வாகாய் மணமுடித்தான்
காட்சிக் கலியாணங் கடுகி முகித்தேகி
சூச்ச மிகுந்தோங்கத் தொல்புவியில் வீத்திருந்தார்

**மிருகசிங்கன் மகனுக்காகத் தவமிருத்தல்**

சங்கரனார் சொல்(ப்)படியே தங்குமிருக சிங்கன்
மங்கையர்கள் மூவருடன் வாழ்ந்திருந்தான் சுகமாக
பாலகனில்லாத செல்வம் பாக்கியமு மாகாது

568. திட்டெனவே வந்து - எடுத்துக்கொண்டு திடீரென மணப்பெண்கள் வீட்டை அடைந்து; சிறந்த புகழ்மைந்தனுக்கு - புகழ்சிறந்துள்ள மிருகசிங்கனுக்கு; பா.வே. - 'திட்டெனவே கொணர்ந்து' (கை.பிரதி);

569. வட்டமுலை - வட்டவடிவாக உருண்டு திரண்டுள்ள தனங்களையுடைய; மாதர்களை - கன்னிப்பெண்களை; வாகாய் - வகையாய்; மணமுடித்தான் - மிருகண்டு முனிவர் திருமணம் செய்து வைத்தார்; பி.வே. - 'வட்ட தனமுடைய மாதர்களை' (மா.தவநிலை);

570. காட்சி - மணச் சடங்குகள், மணமக்கள் சடங்குகள் எல்லாம் முடித்து; கலியாணம் - திருமணம்; கடுகி - விரைந்து; முகித்து < முடித்து - நடத்தி; (முகித்தல் - தென்பாண்டிநாட்டு வழக்கு); ஏகி - மணமகன் மனைக்குத் திரும்பச் சென்று; பி.வே. - 'மகிழ்ந்தேகி' (ச.ம.நூ.); 'காச்சிக்கலியாணம்' (மா.தவநிலை);

571. சூச்சம் < சூட்சம் - திறமை, மிகுந்தோங்க - அதிகரித்துப் பெருக; தொல்புவியில் - பழம்பூமியான இவ்வுலகில்; வீத்திருந்தார் < வீற்றிருந்தார் - வாழ்ந்திருந்தார்; பா.வே. - 'சூழ்ச்சி புகழ் தொங்கல்' (ச.ம.நூ.); 'சூச்சபுகழ் தங்கள்' (மா.தவநிலை); 'சூச்சி' (கை.பிரதி);

572. சங்கரனார் - சிவன்; சொல்ப்படியே < சொற்படியே - கூறிய அறிவுரைகளின்படி; தங்கு மிருகசிங்கன் - விளங்கும் மிருகசிங்க மாமுனிவன்;

573. மங்கையர்கள் மூவருடன் - தன் மூன்று மனைவியர்களுடன்; சுகமாக வாழ்ந்திருந்தான் - இன்பத்துடன் நோய்நொடியின்றி, குறைவின்றி, வசதியாக வாழ்ந்தான்; பா.வே. - 'நால்வருடன் வாழ்ந்து சுகம் பாராட்டி' (ச.ம.நூ.);

574. பாலகனில்லாத செல்வம் - ஆயினும் மக்கட்செல்வம் இல்லாது பொருட்செல்வம் எவ்வளவுதான் இருந்தாலும்; பாக்கியமுமாகாது - சிறந்த வாழ்க்கை ஆவதில்லை; பி.வே. - 'பாக்கியமும் போய் அகலும்' (ச.ம.நூ., மா.தவநிலை), 'பாலனில்லாத வாழ்வு' (கை.பிரதி);

575 சாலக் குழவியில்லாத் தன்மநிலை நில்லாது
அய்ந்து முகத்து யரனார் மிககுழவி
தந்திலரே யென்று தன்கணவனோ டுரைத்தாள்
அந்த வுரையி லருள்சிறந்த மாமுனிவன்
மைந்தன் மேலாசையினால் மாதுபங்கனை நோக்கி

**விருத்தம்**

பங்கயன் படைத்த சீவன்
பலபல வுருவா னாலும்

575. சால - சிறந்த; குழவி - குழந்தை; இல்லா - இராது போனால்; தன்மநிலை < தர்மநிலை < தருமநிலை - அறம்; நில்லாது - தங்காது; பி.வே. - 'தருமம் நிலை நில்லாது' (ச.ம.நூ.);

576. அய்ந்து < ஐந்து; முகத்து - முகங்களையுடைய; அரனார் - இறைவன்; மிக - மிகுதியாக; குழவி - குழந்தைப் பாக்கியம்; பி.வே. - 'ஐந்து', 'ஒரு குழவி' (ச.ம.நூ.); பா.வே. - 'அய்ந்து கரத்துயரனார்' (மா.தவநிலை); 'ஐந்துகரத்து' (கை.பிரதி);

சிவனுக்குரிய ஐந்துமுகம் வருமாறு: சிவன் ஐந்து கற்பங்களில் ஐந்து முகங்களுடன் தோற்றமளித்தார். சிவேதலோகிதம், இரத்த கற்பம், பீதகற்பம், நீல கற்பம், விச்வகற்பம் என்னும் ஐந்து கற்பங்களில், ஈசானம் (கீழ்த்திசை முகம்), வாமம், தற்புருடம், அகோரம், சத்தியாசாதம் எனும் முகங்களுடன் பிரமன் முன் தோன்றி அருளியவர். இவ்வைந்து கற்பங்களி லும் தோற்றமெடுத்த உருக்கள் ஒவ்வொன்றும் வேறுபட்டவை.

577. தந்திலரே - தரவில்லையே; என்று - என; தன் கணவனோடுரைத் தாள் - மிருகசிங்கனிடம் மனைவியருள் ஒருத்தி கூறி வருத்தமுற்றாள்; பி.வே. - 'தன் புருஷனோடுரைத்தார்' (ச.ம.நூ., கை.பிரதி) 'தந்தாரோ' (மா.தவநிலை);

578. அந்தவுரையில் - அவ்வாறு கூறிய மொழிகளால் வருத்தமுற்று; அருள் சிறந்த மாமுனிவன் - கருணையும் வலிமையும் பெருகிய மிருகசிங்கன்;

579. மைந்தன் மேலாசையினால் - பிள்ளைக் குழந்தைமேல் கொண் டுள்ள விருப்பத்தினால்; மாதுபங்கனை - உமையை ஒரு பாகத்தில் கொண்டுள்ள இறைவனை; நோக்கி - நினைத்து; பி.வே. - 'மையிந்தர் புகழ்' (மா.தவநிலை); மைந்தர் புகழாசையினால்' (கை.பிரதி);

வி.25. பங்கயன் - தாமரைமேல் வீற்றிருப்பவனான படைப்புக் கடவுள் பிரமன்; படைத்த சிவன் - உருவாக்கிய உயிர்கள்; பல பலவுருவானாலும் - பலவகையான உருவங்களாக - (ஏழு உருவங்கள், பார்க்க: வி.6) இருந்தாலும்; இங்கித மங்கை ஆசை - இனிமை நிரம்பிய

யிங்கித மங்கை யாசை
யில்லறத் திருந்த பேர்க்குந்
தங்கிய தனது சீவன்
தயவினி லடங்கா தோங்கும்
செங்கை நீர்ப்பால ராசை
திருவியை விட்டீ லீரே (25)

நடை

580 சங்கரனை நோக்கித் தயவுமிகு மாமுனியும்
பொங்கரவம் பூணுகின்ற புண்ணியனே
போற்றியென்றான்
பாலன்தனக்காய் முனிவன் பாங்காய் வணங்குவதை
ஆலமுண்ட கண்டத் தரனாரும் வந்துகண்டார்

பெண்கள்மேல் கொண்ட மய்யல் காரணமாக; இல்லறத்திருந்த பேர்க்கும் - குடும்ப வாழ்க்கையினைக் கடைப்பிடிப் போர்க்கும்; தங்கிய - தங்குகின்ற; தனது சீவன் - தன் உயிர்; தயவினில் - அதன் உதவியில்; அடங்காது ஓங்கும் - நில்லாது மேலும் பெருகும்; செங்கை நீர்ப்பாலர் - சிவந்த மென்மையான கைகளையுடைய சிறு குழந்தை மேல்; ஆசை திருவியை - விருப்பமாகிய மக்கள் செல்வத்தை; விட்டிலீரே - விடாது நாங்கள் கொள்ளுமாறு செய்து விட்டீர் ;

பா.வே. 'இல்லறந்துறந்த பேர்க்கும்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'செங்கை நீள் மலர் ஆசைத்திருவை விட்டிறாதே என்றும்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'திருவின்பம்' (கை.பிரதி);

580. சங்கரனை நோக்கி - சிவனை எண்ணி; தயவு மிகு மாமுனியும் - கருணை மிகுந்த மிருகசிங்கனும்;

581. பொங்கு அரவம் - கோபம் பொங்கி, எழுகின்ற பாம்பினை; பூணுகின்ற - அணியாக அணிகின்ற; புண்ணியனே - கடவுளே; போற்றி - வணங்குகின்றேன்; என்றான் - எனக்கூறினான்; பி.வே. - 'புண்ணியனே சத்திபங்கா' (கை.பிரதி); பார்க்க: 'அரவம்' (வரி 453);

582. பாலன்தனக்காய் - குழந்தைப்பேற்றுக்காக; முனிவன் - மிருக சிங்கன்; பாங்காய் - முறையாகப் பணிந்து; வணங்குவதை - தொழுவதை; பா.வே. - 'வருந்துவதை' (மா.தவநிலை);

583. ஆலமுண்டகண்டத்தரனார் - (பார்க்க வரி விளக்கம் 417) உண்ட நஞ்சு கண்டத்துள் தங்கியதால் அரனுக்கு இப்பெயர் ஏற்பட்டது; வந்து கண்டார் - மிருகசிங்கன் முன் தோன்றினார்; பி.வே. - 'ஆலமுண்ட கண்டத்தாரும்' (ச.ம.நூ.);

வந்தயரன் பாதம் வணங்கி மகாமுனிவன்
கந்தனார் தந்தையரே கயிலைமலை யோனே
வித்து யழிந்துதென்றால் மேதினியிலே குழந்தை
அத்தனே யில்லார்க் கரு(ள்)ளாய் பரகெதியும்
ஆலமுண்ட கண்டத் தரனே மனமகிழ்ந்து
பால னெனக்கு[ப்] பரனே யருளுமென்றான்
அப்போ தரனா ரவன்முகத்தைத் தானோக்கி
தப்பாது காணுந் தலையி லெழுத்துனக்கு

*584*. வந்த அரன் பாதம் - தோன்றிய சிவனின் தாள்களை; வணங்கி - தொழுது; மகா முனிவன் - மிருகசிங்கன்;

*585*. கந்தனார் தந்தையரே - (வரி 239, 245, முதலியன) முருகப்பெருமானின் பிதாவே; கயிலைமலையோனே - கயிலாய மலைக்கு உரியவனே; பி.வே. - 'கந்தனையா தந்தையரே' (மா.தவநிலை); 'கயிலைமலையரசே' (கை.பிரதி); காண்க: 'கயிலைமலை புண்ணியனார்' (779);

*586*. வித்து - சந்ததி, வமிசம்; அழிந்துதென்றால் < அழிந்தது என்றால் - பிள்ளையில்லாமல் வமிசம் நின்றுவிட்டால்; மேதினியிலே - பூமியிலே; குழந்தை - குழந்தைப்பேறு; பி.வே. - 'விந்து', 'குழவி' (மா.தவநிலை); 'விந்து' (கை.பிரதி); பார்க்க: 'வித்து' (வி.43);

*587*. அத்தனே - (வரி 25, 336) தலைவனாகிய இறைவனே; இல்லார்க்கு - (குழந்தைச்சந்ததி) கிடைக்காதவர்களுக்கு; அருள்ளாய் பரகெதியும் < அருளாய் பரகதியும் - சொர்க்கத்தை அளிக்க மாட்டாய்; பா.வே. - 'பிள்ளையெனக்குயருள்வீர் ரெனவேதான்' (மா.தவநிலை); 'எல்லோர்க்கும் அருளும் பரகதியே' (கை.பிரதி); ஒப்பிடுக: 'அத்தர்' (1534), 'அத்தனார் கோபம்' (வி.55);

*588*. ஆலமுண்டகண்டத்தரனே - (வரி 417, 583); மனமகிழ்ந்து - விருப்பத்துடன்; பி.வே. - 'கண்டர் யரனாரும்' (மா.தவநிலை);

*589*. பரனே - இறைவனே; பாலன் எனக்கு அருளுமென்றான் - மகனை அடையும் பேற்றைக்கருணையுடன் அளியும் எனக் கூறினான்;

*590*. அப்போது - அந்த வேளையில்; அரனார் - சிவன்; அவன் முகத்தைத்தானோக்கி - மிருகசிங்கனை நேராகப் பார்த்து; பி.வே. - 'அவரை முகம்னோக்கி' (மா.தவநிலை); 'அருள்முனிவன் முகநோக்கி' (கை.பிரதி);

*591*. தலையிலெழுத்துனக்கு - உன் தலைவிதி; தப்பாது காணும்; பிழையாகாது; காணும் - காண்பாயாக; காண்க: 'தலையிலெழுத்து' (1387);

முன்னாள் பிரமன் முகித்தவிதி தப்பாது
இன்னாளிற் பிள்ளை யுனக்கில்லை யென்றாரீசுபரரும்
அந்தவுரை சொல்ல யானமுனி தெண்டனிட்டு
எந்தவிதந் தனிலும் யெனக்குச் சிறுமதலை
தாரீரே யாமாகில் சங்கரனே தானருளில்
காரீர் கயிலைக் காரணரே நான்வருவேன்
அன்றடியேன் சொன்னதற்(க்)கு அல்லவென்றீ ரீசுபரரே

592. முன்னாள் - உன் பிறப்பின்போது; பிரமன் - படைப்புக்கடவுள்; முகித்த < முடித்த - எழுதிவைத்த; விதி - ஊழ்வினை; தப்பாது - பிழையாகாது; பி.வே. - 'நளினவேதன்', 'முகிழ்த்தவிதிப்படிக்கு' (ச.ம.நூ.); 'முகிந்த (மா.தவநிலை); 'வகுத்தவிதி தப்பாது' (கை.பிரதி);

593. இன்னாளில் < இந்நாளில் - இப்போது; பிள்ளை - சந்ததி; உனக்கில்லை - தலைவிதிப்படி உனக்கு ஏற்படாது; என்றார் ஈசுபரரும் - என்று இறைவனும் கூறினார்; பா.வே. - 'இன்னிலத்தில்' (கை.பிரதி);

594. அந்தவுரை சொல்ல - இறைவன் அவ்வாறு கூறவும்; ஆனமுனி - மிருகசிங்கனானவர்; தெண்டனிட்டு - (வரி 144) கிடந்து வணங்கி; பா.வே. 'சொன்ன அகண்டியை' (ச.ம.நூ.); 'அரனடியை' (கை.பிரதி);

595. எந்தவிதந்தனிலும் - எப்படியாயினும்; எனக்குச் சிறுமதலை - எந்தனுக்குக் கைக்குழந்தை; பி.வே. - 'எந்தவிதம் மானாலும்' (மா.தவ நிலை); பார்க்க; 'மதலை' (602, 672, 676, 695, 700, 2567, வி.21);

596. தாரீரேயாமாகில் - தருவீரானால்; சங்கரனே - சிவபெருமானே; தானருளால் - உமது கருணையினால்; பி.வே. - சங்கரரே தந்தருளீர்' (ச.ம.நூ.); 'தந்தீரேயாமாகில்' (கை.பிரதி);

597. காரீர் - காப்பீர்; (கா+ப்+ஈர்; கா+வ்+ஈர் - ப், வ் எனும் காலம் உணர்த்தும் உருபுகள் 'ர்' ஆக மாறியுள்ளன); கயிலைக் காரணரே - கயிலை மலைக்கு உரியவரே; நான் வருவேன் - குழந்தைப்பேறு பெற்றால்தான் கயிலைமலைக்கு நான் இறந்தபின் வரமுடியும்; பி.வே. - 'காரீ கயிலைவரைக் காரணரே' (ச.ம.நூ.); பா.வே. - 'உமது கையிலை வரை உற்றவரே நான் வருவேன்' (மா.தவநிலை, கை.பிரதி);

598. அன்று-முன்பு தவம் செய்தபோது; அடியேன் - சிவபக்தனான நான்; சொன்னதற்கு - கயிலையடையவேண்டுமென்று உம்மிடம் கூறிய தற்கு; அல்ல வென்றீர் - இல்லற வாழ்வு முடித்தபின்பு வருக என்று கூறினீர்; ஈசுபரரே - இறைவனே; பி.வே. - 'கேட்டதற்கு அல்லமில்லம் போயீர் என்றீர்' (ச.ம.நூ.); 'இல்லைபோநீ யென்றீர்' (மா.தவநிலை); 'இல்லம்போய்யிரு' (கை.பிரதி);

இன்றுவரம் பெறுவே னிப்போதுதான் வருவேன்
என்று முனியுரைக்க யீசுபரரு மேதுரைப்பார்
மன்றுலகி லுந்தன் மகவாசை தீரவென்றால்
அறிவுமதி யில்லானா யாணுமதலை யொன்று
சிறியோ னருளுகிறோஞ் சீர்புனையு மாமுனியே
என்றரனார் சொற்கேட்டு யியல்முனிவன் னேதுரைப்பான்
நன்றல்லக்காண் யீசுபரனே நல்லறிவு மில்லாதான்

599. இன்று வரம் பெறுவேன் - கயிலை அடைய இப்போது உம்மிடம் வரம் கேட்டுப் பெறுவேன்; இப்போதுதான் வருவேன் - உடனே உம்முடனே கயிலைக்கு வந்துவிடுவேன்; பா.வே. - 'குன்று வரம் பெற்றேன் இயல்கயிலை' (ச.ம.நூ., மா.தவநிலை);

600. என்று முனியுரைக்க - மிருகசிங்கன் இவ்வாறு இறைவனிடம் கூறவும்; ஈசுபரரும் ஏது உரைப்பார் - இறைவன் பின்வருமாறு கூறுவார்;

601. மன்றுலகில் - (வரி 374) இந்த உலக வாழ்வில்; உந்தன் - உனது; மகவாசை - குழந்தைமேல் கொண்டுள்ள விருப்பம்; தீரவென் றால் - நீங்குவதற்கு; பி.வே. - 'மண்ணுலகில்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

602. அறிவுமதி இல்லானாய் - புத்திவளர்ச்சி இல்லாத மடையனாய்; ஆணு மதலை யொன்று - ஆண் குழந்தை ஒன்றை; பி.வே. - 'அறிவுமதி யில்லாத அழகு மதலை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); பார்க்க: 'அறிவுமதி' (625);

603. சிறியோன் - சிறு குழந்தையை; சீர்புனையும் மாமுனியே - பெருமையுள்ள மிருகசிங்கரே; அருளுகின்றோம் - எமது அருளால் உனக்கு அளிக்கின்றோம்; பா.வே. - 'கிரி ஒன்று ஆகிறேன் சிந்தை கலங்காதே என்றார்' (ச.ம.நூ., கை.பிரதி); 'சிந்தை மயங்காதே' (மா.தவ நிலை);

604. என்று அரனார் சொல் கேட்டு - புத்தியில்லாத குழந்தைப் பாக்கியம் ஈவதாக இறைவன் கூறிய மொழியைச் செவியுற்று; இயல்முனி வன் - ஒழுக்கம் நிறைந்த மிருகசிங்கன்; ஏது உரைப்பான் - உரைப்பதாவது;

605. நன்று அல்ல காண் - நீவிர் அருளும் புத்தியில்லாத குழந்தை வரம் நல்லது அன்று, காண்பீராக - (அவ்வாறு அளிப்பது உமக்கு அழகில்லை என்பதும் பொருந்தும்); ஈசுபரனே - இறைவனே; நல்ல அறிவும் இல்லாதான் - கூர்ந்த மதிநுட்பம் இல்லாத சிறுவன்; பி.வே. - 'நன்றல்லவே அரனே!' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

பாரிலிவன் பிறந்தால் பாக்கியமும் போய்விடுமே
வேரூன்றும் பாவம் விரண்டகலும் புண்ணியங்கள்
அன்னை தந்தைதீதாகு மானகிளை யடுத்தோர்
பின்னுதவி யாவர்களும் பேருரைத்தோர்
கண்முழித்தோர்

610 அல்லாத தவமு மழிந்துபோம் பிள்ளையினால்
செல்லா நரகமெல்லாஞ் செல்வார் பரதவித்து

606. பாரில் இவன் பிறந்தால் - புத்தியற்ற பாலகன் பூமியில் வந்து தோன்றினால்; பாக்கியமும் - நல்ல புண்ணியங்களும்; செல்வமும்; போய்விடுமே - தாமே அகன்றுவிடும்; பி.வே. - 'போயகலும்' (ச.ம.நூ., மா.தவநிலை); பார்க்க: 'பாக்கியம்' (567, 574, 1675, 2488);

607. வேரூன்றும் பாவம் - பாவச் செயல்கள் வந்து பெருகி வேர்களாகக் கிளைக்கும்; விரண்டு < வெருண்டு - பயந்து; புண்ணியங்கள் அகலும் - தாமே பாக்கியங்கள் எம்மைவிட்டு அகன்று ஓடிவிடும்; பா.வே. - 'வேரில் முளை பாவம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); பி.வே. - 'விரண்டுயகலும்' (மா.தவநிலை);

608. அன்னை தந்தை - மாதாபிதா; தீதாகும் - கெட்டவராகுவர்; ஆனகிளையடுத்தோர் - நட்பாக உள்ள உறவினரும், அண்டையிலிருப்பவர்களும்; பி.வே. 'அன்னை தந்தை நீதி குரு' (ச.ம.நூ., கை.பிரதி); 'நீதியன்னை' (மா.தவநிலை);

609. பின்னுதவி யாவர்களும் - பக்க துணையாக இருந்து உதவி செய்துவருகின்ற நண்பர்களும்; பேருரைத்தோர் - என்பேரைக் கூறி மகிழும் நண்பர்களும்; கண்முழித்தோர் உறங்கி எழுந்தவுடன் என் முகத்தை முதலாவதாகப் பார்த்த பின்னே வேறு வேலைகளைச் செய்யக் கூடியவர்களும்; பா.வே. - 'மண்ணுதவி மூத்தோரும் பேருரைத்தோர்கள் விழித்தோர்' (ச.ம.நூ.); 'வின்னமில்லாதபடி விரும்பி மிக செய்தவமும்' (மா.தவநிலை);

610. அல்லாத < (அல் + ஆ - த) - அறுக்காத, காலங்காலமாக அறுந்து விடாமல் தொடர்ந்துவரும்; தவமும் - தவச்செயல்களும்; பிள்ளையினால் - மந்தப் புத்தியுள்ளவனால் அழிந்துபோம் - தொடர்பு அறுந்து இல்லாது போய்விடும்; பி.வே. - 'அல்லாத் தவமும்' (மா.தவநிலை);

611. செல்லா நரகமெல்லாம் - போகக் கூடாத நரகலோகத்துக்கெல்லாம்; பரதவித்து - மறுகி; செல்வார் - சென்றடைந்து உழல்வர்; பி.வே. - 'பரிதவித்து' (ச.ம.நூ.); பார்க்க: 'நரகம்' (வி.73);

சீலமுள்ளோர் செய்தவசைத் தீர்க்குமிவன் பாலகனால்
பாலனறிவு கண்டு பாங்கான செல்வமெல்லாம்
அல்லாம் புகழாகு மானயருள் மைந்தனென்றால்
615 பொல்லாத பாலன் பிறப்பதிலு மன்னைதந்தை
இறந்தாலு நன்றுயவர்க் கீய்ந்தாலுஞ் சொர்க்கமுண்டு
அறந்தா னழியு மவன்பிறந்த மனைதனிலே
பரந்தான் கிடையாது பரனேயிதுவு முண்மை

612. இவன் பாலகனால் - இந்தப் பிள்ளையால்; சீலமுள்ளோர் - நல்லொழுக்கமுள்ள முன்னோர்கள்; செய்த வசைத் தீர்க்கும் - நீதிநியா யங்கள் நீங்கிவிடும்; பி.வே. - 'சீலமுள்ளோர் செய்தவத்தில் தீயாம் இவன் பாவம்) (ச.ம.நூ., மா.தவநிலை); 'தீதாம்' (கை.பிரதி); பார்க்க: 'சீலம்' (702, 892, 1098, 1474, 1538, 1564, 1577, 1930, 2286, 2578; 1329, 1657, 1795, 2659, 2669);

613. பாலன் அறிவு கண்டு - சிறுவனுடைய மடமையைக் கண்டு; பாங்கான செல்வமெல்லாம் - நல்வழியில் தேடி வந்த பொருள்கள் எல்லாம்;

614. ஆன அருள் மைந்தன் என்றால் - தவநெறியில் வந்த சிறுவன் எனில்; அல்லாம் - அனைத்தும்; புகழாகும் - பெருமை சேர்க்கும்;

615. பொல்லாதபாலன் - ஆனால் துர்க்குணமுள்ள, கெட்ட சிறுவன்; பிறப்பதிலும் - பிறப்பதைவிட, தோன்றுவதைவிட; அன்னை தந்தை - மாதா பிதா; பி.வே. -'பிறப்புதன்முன்' (ச.ம.நூ.); 'பிறந்தபின்' (கை.பிரதி);

616. இறந்தாலும் நன்று - பொல்லாத சிறுவனுடன் இருப்பதைவிட இறப்பதே மேலாகும்; அவர்க்கு - அப்படியான பெற்றோர்க்கு; ஈய்ந்தா லும் - தருமம் செய்தவர்களுக்குக்கூட; சொர்க்கம் உண்டு - மோட்சம் கிடைக்கும்; பா.வே. - 'ஈவளவு சொர்க்கமுண்டு' (ச.ம.நூ.); 'ஈயளவும்' (மா.தவநிலை, கை.பிரதி);

617. அவன் பிறந்த மனைதனிலே - பொல்லாதவன் பிறந்த வீட்டில்; அறந்தான் அழியும் - தருமம் தானே அழிந்துவிடும்; பா.வே. - 'அவன் பிறந்தான் பின் பிறந்தால்' (ச.ம.நூ.); 'அவன் பிறந்ததன் குலத்தில்' (கை.பிரதி);

618. பரந்தான் கிடையாது - மேலுலக பதவிகூட அவனால் கிடைக் காது; பரனே - ஈசனே; இதுவுமுண்மை - இவையாவும் மெய்யான வையே;

பா.வே. - 'பாரிலும் பொல்லாதுகமை' (ச.ம.நூ., மா.தவ நிலை);

நிரந்த புகட்கானில் நிமிர்ந்தோங்கியே வளந்து
620 அண்டையே பெண்மூங்கி லாண்மூங்கில் தானுரச
மண்டலத்தி லக்கினியும் மைந்தரைப்போலே பிறக்கும்
அக்கினியுந் தான்பிறந்து யானரண்டு மூங்கிலையும்
தக்கமுட னெரித்துத் தான்கண்டு பக்கமெல்லாம்
சுத்தமிக வெரித்துத் தூளாய் நொறுக்கிவிடும்

619. நிரந்தபுகட்கானில் - பல்வேறு மரங்கள் செறிந்து, அடர்த்தியாக நிற்கும் காட்டில்; நிமிர்ந்தோங்கியே வளந்து - சாயாமல் நேராக உயரமாக வளர்ந்துள்ள; பா.வே. - 'நிறைந்த பெருங்காணில்' (ச.ம.நூ.); 'நிரைந்த புகழ்கானில்' (மா.தவநிலை); 'நிறைந்த புகழ் காலன்' (கை. பிரதி);

620. அண்டையே - அருகருகே, பக்கத்தில்; பெண் மூங்கில் ஆண் மூங்கில் தானுரச - இரு மூங்கில் கிளைகள் காற்றசைவால் உராய்ந்து (கொள்வதைப் போலப் பெண்ணும் ஆணும் நெருங்கி உறவு கொண்டு என உருவகமாகச் சொல்லப் பெற்றுள்ளது); பி.வே. - 'அண்டியே' (ச.ம.நூ., கை.பிரதி); பா.வே. - 'எண்டிசையும் மூங்கில்தனில்யிரண்டு மூங்கிலும்வுரசும்' (மா. தவநிலை);

621. மண்டலத்தில் - பூமியில்; அக்கினியும் மைந்தரைப் போல் பிறக்கும் - காட்டில் கிளைகள் உராய்வினால் தீப்பற்றிக் கொள்வதைப் போலப் பூமியில் ஆணும் பெண்ணும் உறவு கொள்வதால் (தீக்) குழந்தையும் தோன்றுவான் (-அக்கினிக்கும் தீக்குழந்தைக்கும் உவமை);

622. அக்கினியுந்தான் பிறந்து - தீப்பற்றிக் கொள்வதால்; ஆன ரண்டு (இரண்டு) மூங்கிலையும் - அங்குள்ள இரு கிளைகளை (முதலில் எரித்துப் பின் முழுமரத்தையும் எரிக்கும்); பா.வே. - 'அன்னை தந்தை மூங்கிலையும்' (மா.தவநிலை);

623. தக்கமுடன் - தக்கவாறு; எரித்து - தீயால் சுட்டு; தான் கண்டு - பின்பு அது காணும்; பக்கமெல்லாம் - பக்கத்திலுள்ள மரங்கள் முதல் எல்லாவிடத்துமுள்ள செடி கொடிகள் வரை; பி.வே. - 'தக்கவிசையால் எரித்து' (ச.ம.நூ.); 'தான் கண்ட' (மா.தவநிலை.);

624. சுத்த - சுத்தமாக, முழுதுமாக; (சுத்தம் < சுற்றம் - அடுத்துள்ள) மிக - நன்றாய்; எரித்து - தீயால் கருக்கி; தூளாய் - பொடியாய், சாம்பலாய்; நொறுக்கி விடும் - பொடித்து விடும், எவ்வளவு பெரிய மரமானாலும் அதை எரித்துச் சிறிதளவு சாம்பலாய் ஆக்கிவிடும்; பி.வே. 'சுத்தி எரித்து அனல்' (ச.ம.நூ.); 'சுத்தியெரிந்து' (மா.தவநிலை, கை. பிரதி);

அத்தன்மை யாகு மறிவுமதி யில்லாதான்
.................................
பத்து மெனதுதவம் பாலன் கெடுக்கவென்றோ
பாதகப்பிள்ளை தன்னைப் பாருலகினான் வேண்டேன்
நீதங் கலைஞானம் நீதியுடனே யறிவு
தன்மமிகு யோகஞ் சகலவித்தை புத்தியுடன்
கன்மஞ் செய்யாதவனாய்க் காலனணு காதவனாய்

*625. அத்தன்மையாகும் - காட்டில் தீப்பற்றி அக்காட்டையே எரித்து அழிப்பதைப் போல; அறிவு மதி இல்லாதான் - ஞானமும் புத்தியும் இல்லாத பிள்ளை பிறந்தால் எல்லாவற்றையும் அழித்துவிடுவான்; பி.வே. - 'அத்தகமையாகும்' (கை.பிரதி);*

*..........'சுத்தமிலேச்சன் தொல்புவியிலே பிறந்து' (ச.ம.நூ.); 'சுத்தமில்லா தவன்தான்' (மா.தவநிலை);*

*626. பத்தும் < பற்றும் - பிடிக்கும், சேரும்; எனது தவம் - என்னுடைய தபசை; பாலன் - கெட்ட சிறுவன்; கெடுக்கவென்றோ - அழிப்பதற்கோ; (மதி இல்லாத பிள்ளையைத் தருவதாகக் கூறுகிறீர்); பி.வே. - 'கெடுப்பான்யென்றான்' (மா.தவநிலை);*

*627. பாதகப்பிள்ளை தன்னை - என் தவத்துக்கும் ஒழுக்கத்துக்கும் ஊறு விளைவிக்கும் சிறுவனை; பாருலகில் நான் வேண்டேன் - இந்தப் பூமியில் நான் மகனாக அடைய விரும்பேன்; பி.வே. - 'பாதகன் அப்பிள்ளை தனை' (ச.ம.நூ); 'பாதகப் பிள்ளை வேண்டாம் பரமன்யருள் விளக்கே' (மா.தவநிலை); 'அடியேன் வேண்டேன்' (கை.பிரதி);*

*628. நீதம் - நல்லொழுக்கம்; கலைஞானம் - 64 கலைகளைப் பற்றிய நல்ல பயிற்சி; நீதியுடனே - உண்மையுடன்; அறிவு - மதி; பி.வே. - 'நீதி கலைஞானம் நெறியும் புகழ் அறிவும்' (ச.ம.நூ.); 'நீதி கலைஞா னம் நெறியுடனே நல்லறிவு' (மா.தவநிலை.); பார்க்க: 'நீதம்' (வரி 107);*

*629. தன்மமிகு < தருமமிகு - நீதி மிகுந்த; யோகம் - பயிற்சிகள்; சகலவித்தை - அனைத்து வித்தைகள் பற்றிய; புத்தியுடன் - ஞானத்துடன்; பி.வே. - 'தருமநெறி' (ச.ம.நூ.); 'சகலகலை புத்தி வித்தையுடன்' (மா.தவநிலை.); பார்க்க: 'சகலவித்தை' (வரி 23);*

*630. கன்மம் < கருமம் - தீவினை; செய்யாதவனாய் - புரியாதவ னாய்; காலன் அணுகாதவனாய் - எமனால் விரைவில் நெருங்கிவிடாத படி வலுவான ஆயுளை உடையவனாய்; பா.வே. - 'காமஞ்செய்யாமனசு' (ச.ம.நூ.); பி.வே. - 'கருமம்' (மா.தவநிலை);*

மாதா பிதாக்குருக்கள் மைந்தன்மிகு தவசால்
ஆதர வாயுன்பாத மணுகுவனாய் யென்னாளும்
பொங்கும் பிதிர்கள்மிகு புண்ணியமும் பூவுலகில்
எங்கு மருள்வளர யீடேத்த முன்பாதம்
பாலனருளு மென்றான் பண்புடைய மாமுனிவன்
ஆலமுண்ட கண்டரவனை முகநோக்கி
மதியில்மிகு பாலகரை மாமுனியே யீய்ந்தோமென்றால்
அதிகத் தவஞான மருளித் தவசுசெய்வான்

631. மாதாபிதா குருக்கள் - பெற்றெடுத்த அன்னை, பேணி வளர்த்த தந்தை; பெரிய மேதையாக்கும் ஆசிரியர் போன்றோர்; மைந்தன் மிகுதவ சால் - சிறுவன் மேற்கொள்ளும் நல்லொழுக்கத்தால்; பி.வே. - 'நெறிதவ சால்' (ச.ம.நூ.); 'நெறிதவசாய்' (மா.தவநிலை);

632. ஆதரவாய் - மேலேயுள்ளோர்க்கு உதவியாய்; என்னாளும் < - எப்போதும்; உன் பாதம் - சிவனாகிய உமது பாதங்களை; அணுகு வனாய் - சேர்ந்திருப்பவனாக;

633. பொங்கும் - வானுலகில் நிறைந்துள்ள; பிதிர்கள் - மூதாதையர் கள்; செய்த மிகு புண்ணியமும் - மிகுந்த தருமச் செயல்களும்; பூவுலகில் - இந் நிலத்தில்; பா.வே. - 'பிதிர்தேவர் நிறை புண்ணியமும் பூவிலங்கும்' (ச.ம.நூ.); 'பிதிர்தேவர்' (மா.தவநிலை);

634. எங்கும் அருள் வளர - எங்கணும் கருணை நிறைய; உன் பாதம் - உமது பாதங்களின் பெருமையை; ஈடேத்த < - உயர்த்த; பி.வே. - 'அருள்வளம்', 'ஈடேற' (ச.ம.நூ);

635. பண்புடைய மாமுனிவன் - நற்குணங்கள் நிறைந்த மிருகசிங் கன்; பாலன் அருளும் என்றான் - மேலே கூறிய குணாதிசயங்கள் கொண்டுள்ள நற்புத்திரனை ஈக என்று வேண்டினான்; பி.வே. - 'பண்பு நெறி' (ச.ம.நூ., மா.தவநிலை);

636. ஆலமுண்ட கண்டர் - (வரி 417) சிவன்; அவனை - மிருகசிங் கனை; முகம் நோக்கி - பார்த்து;

637. மாமுனியே - மிருகசிங்கனே; மதியில் - அறிவில்; மிகு - மிகுந்த; பாலகரை - புத்திரபாக்கியத்தை; ஈய்ந்தோமென்றால் - உமக்கு நாம் கொடுத்தால்; பி.வே. - 'மதியறிவு பாலன்', 'வேணுமென்றால்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

638. அதிக - மிகுந்த; தவஞானம் அருளி - பக்தியுடன் கூடிய நோன்புகளைக் கடைப்பிடித்து; தவசு < தபசு - தவம்; செய்வான் - அவன் மேற்கொள்ளுவான்; பா.வே. - 'அதி தேவ ஞானம் ஆரருளில்' (ச.ம.நூ.);

இன்னாளி லீய்ந்துவிட்டா லேவ லெனையாளும்
அன்னாளவன் பிறகே யான்திரிய மாட்டோங்காண்
நீதி மதியில்லாதார் நீண்டநெடு னாளிருந்து
ஆதி யவர்பா லணுகேனிமன் வருவான்
திட்டிக்கச் சங்கிக்கச் சொந்தவுயிர் வதைக்க
கட்டினோ மூவரியல் கற்பினையே பூவுலகில்
தங்கள் கரம்பிடித்துத் தங்கள்கண்ணில் குத்துகைபோல்

639. இன்னாளில் < இந்நாளில் - இப்போது; ஈய்ந்து விட்டால் - உமக்குக் குழந்தைவரம் நல்கிவிட்டால்; ஏவல் எனையாளும் - என்னைக் கட்டுப்படுத்தி நான் இரங்கத்தக்க பணிவிடைகளைச் செய்வான்; பா.வே. - 'எவ்வனவே நாமும்' (ச.ம.நூ.); 'ஏவலெனவே நாமும்' (மா.தவ நிலை); 'அவனோடு நாமும்' (கை.பிரதி);

640. அன்னாள் < அந் நாளில் - அவ்வாறு அவன் எனை நாடும் காலத்தில்; அவன் பிறகே - அச் சிறுவன் எனைக் கூப்பிடும் போது அவன் முன்பே (பின்பே); யான் திரியமாட்டேன் காண் - நான் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருக்க முடியாது, இதைக் காண்பாயாக; பா.வே. - 'அன்பிற்கே ஆனந்திரிய மாட்டேன்' (ச.ம.நூ.);

641. நீதிமதியில்லாதார் - நேர்மை, நியாயம் இல்லாது அறிவுமில் லாத மூடர்கள்; நீண்ட நெடு நாளிருந்து - நீண்ட ஆயுளுடன் உயிர் வாழ்ந்திருப்பர்; பி.வே. - 'நீதி நெறி' (ச.ம.நூ.);

642. ஆதி அவர்பால் - அப்படியான மூடர்களிடம்; அணுகேன் - சிவனாகிய நான் நெருங்கிச் செல்லமாட்டேன்; இமன் - எமன்; வருவான் - அவர்களைக் கொண்டு செல்ல வருவான்; பி.வே. - 'எமன் அங்கு வருவான்' (ச.ம.நூ.); 'ஆதியில் யவன்பால்யணுகோம் நமன் வருவான்' (மா.தவநிலை);

643. திட்டிக்க < சிருட்டிக்க < சிருஷ்டிக்க - படைக்க; சங்கிக்க - காக்க; சொந்தவுயிர் வதைக்க - உடலுக்கு உரிமையான உயிர்களைத் துன்புறுத்தி அழிக்க; பி.வே.-'சிட்டிக்க சங்கரிக்க சேர்ந்ததெவையும் காக்க' (ச.ம.நூ.); 'கார்க்க சிறந்தெவையும் சங்கரிக்க' (மா.தவநிலை); 'சிருஷ்டிக்க காக்க' (கை.பிரதி); பார்க்க; 'சங்கித்தல்' (வரி 1670);

644. கட்டினோம் மூவர் - மூன்றுபேர்களை - பிரமா, விஷ்ணு, உருத்திரன் ஆகியோர் இம் மூன்று தொழில்களை முறையே செய்ய ஆட்படுத்தியுள்ளோம்; பூவுலகில் இயல் கற்பினையே - இது பூமியில் அவர்களுக்கு விதிக்கப்பட்ட விதியாகும், கடமையாகும்; பி.வே. - 'கட்டியது மூவரிடம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

645. தங்கள் கரம்பிடித்து - தங்களுடைய கையைத் தாங்களே பற்றி; தங்கள் கண்ணில் குத்துகை போல் - தங்களுடைய கண்களிலேயே குத்திக் கொள்வது போல;

பொங்கமுடன் திட்டிப்பில் பூவிலய னேதுசெய்வான்
காமந்தனை யேவிக் காமக்கணை விடுத்துக்
காமமிகு மோகங் கவிவிந்திற் பிண்டம்வைய்ற்றார்
மாதா வயிற்றில் மலரிலணுகள் நுழைந்து
ஆதரவாய்ப் பிண்ட மலர்திரட்டி வைத்தனரே
மைந்தர்களை லட்சிக்க மாலோன் மயல்பூட்டி

646. பொங்கமுடன் - மிகுதியாக; திட்டிப்பில் < சிருட்டிப்பில் (வரி 643)) - படைப்பில்; அயன் - பிரமா; ஏது செய்வான் - பின்வருமாறு படைப்புத் தொழிலை மேற்கொள்ளுவான்; பி.வே. - 'சிட்டிக்க புவியில்' (ச.ம.நூ); 'பூவுலகில் யயன் யேது செய்வான்' (மா.தவநிலை); 'சிருஷ்டிப் பில்' (கை.பிரதி);

647. காமந்தனையேவி - ஆணுக்கும் பெண்ணுக்கும் ஆசையுணர்வு களை ஏற்படுத்த முதலில் மன்மதன் தன்னை (காமன்) அனுப்பி; காமக்கணை விடுத்து - காமனுடைய பாணமான (அரவிந்தம், மாம்பூ, முல்லை, நீலம் எனும்) மலர்களைக் கரும்புவில்லிலிருந்து செலுத்த வைத்து; பி.வே. - 'தொடுத்து' (மா.தவநிலை);

648. காமமிகுமோகம் - ஆசைகள் மிகுந்து, ஒருவரையொருவர் தம்முள் மோகித்து; கவி - செல்லக்கூடிய; விந்து - ஆணுக்குள் சுக்கிலத்தை யும்; பிண்டம் - பெண்ணுக்குள் கருப்பிண்டம் எனும் முட்டையையும்; வைய்ற்றார் < வைத்தார் - பிரமா அமைத்துள்ளார்; பி.வே. - 'காமசுகபோ கம், கலவிவிந்தில் பிண்டம் வைத்து' (ச.ம.நூ., மா.தவநிலை); பார்க்க: 'பிண்டம்' (வரி 1674);

649. மாதா வயிற்றில் - தாயின் கருப்பைக்குள்; மலரிலணுகள் - செல்லும் சுக்கில அணுக்கள், விந்துகள்; நுழைந்து உட் சென்று; பா.வே. - 'மலரின்பன் நுழைந்து' (ச.ம.நூ); 'வயத்தில் அயன்மாய்கையணுவாய் னுழைந்து' (மா.தவநிலை); 'மாய்கையணுவாய்' (கை.பிரதி);

650. ஆதரவாய் - கருவுறுத்தலுக்கு உதவியாய்; பிண்டம் அலர் திரட்டி - கருவாக இருந்து உருவாகும் உடலுக்குரிய நீரைத் திரளாக; வைத்தனரே - உருவாக்கி அமைத்திருந்தார்; இவ்வாறு பிரமாவின் சிருஷ்டி அமைந்துள்ளது; பா.வே. - 'ஏதாகப்பிண்டம் எவர் திரட்டி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

651. மாலோன் - திருமால், விஷ்ணு; மைந்தர்களை - இவ்வாறு தாயின் கருவில் உருவாகும் பிள்ளைகளை; லட்சிக்க < ரட்சிக்க < இரட்சிக்க - காக்க; மயல் பூட்டி - (தாய் தந்தையைப்) பாச மயக்கத்தில் பிணைத்து; பி.வே. - 'இரட்சிக்க' (ச.ம.நூ); 'மயல் முட்டி' (மா.தவ நிலை., கை.பிரதி); பார்க்க; 'லட்சித்தல்' (1343);

சிந்தைமிகு வாகுஞ் சிறந்தயன்னை தந்தையர்க்கு
போதமிகச் சூட்டப் பிள்ளையின்மே லாசைவைய்த்து
நீதமுடன் வளப்பார் நீண்ட நட்சேத்திரம்ராசி

655 அந்தமிகு யோக மடுக்கும் கலியாணம்வரும்
தந்தைதாய் தேடுந் தனத்தில் பிழைக்கவைப்பார்
மைந்தருக்கு மாதவரும் வாயில்மிகு சோறூட்டிக்
கந்தமுடன் வளத்துக் காத்திருந்து பெண்தேடி

652. சிறந்த அன்னை தந்தையர்க்கு - பெற்றோராகவிருப்பதால் சிறப்படைந்துள்ள மாதாபிதாவுக்கு; சிந்தை மிகுவாகும் - உருவாகிவரும் தம் குழந்தைமேல் பிரியம் மிகுந்து வரும்; பி.வே. - 'சிறந்ததொரு அன்னையர்க்கு' (ச.ம.நூ); 'சிந்தை புனைவாஞ்சை' (மா.தவநிலை);

653. போதம் - குழந்தை பற்றிய அறிவு; மிகச் சூட்ட - அதிகமாகச் சுமத்த; பிள்ளையின் மேல் - குழந்தை மீது; ஆசை - விருப்பம்; வைய்த்து < வைத்து - காட்டி; பி.வே. - 'போதம் இவர் சூட்ட' (ச.ம.நூ.); 'போதயீவர் திரட்ட' (மா.தவநிலை); பார்க்க: 'போதம்' (705, 1040, 2313);

654. நீதமுடன் - நற்குணங்களுடன்; வளப்பார் < வளர்ப்பார் - பாதுகாப்பார்; நீண்ட - அதிக நாள் ஆயுளுக்குரியதான; நட்சேத்திரம் < நட்சத்திரம் - 27 விண்மீன்கள் ஒன்றில் பிறந்த நாள்; ராசி - 12 மண்டலங்கள் ஒன்றில் பிறந்த ராசிபலன்; பா.வே. - 'ரிஷி' (ச.ம.நூ.). ஒப்பிடுக: 'நச்சேற்றிரம்' (வரி 238); 'நட்சேற்றிரம்' (2552);

655. அந்தம் - அழகு; மிகு - மிகுந்த; யோகம் - 27 வகைகள் ஒன்றாக அமையக் கூடிய சுப நேரப் பலன்களும்; அடுக்கும் - வந்து சேரும்; கலியாணம் - பிள்ளை வளர்ந்த பின்பு திருமணம்; வரும் - வந்து கூடும்; பி.வே. - 'நிறையோகம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை. பிரதி); ஒப்பிடுக: 'அந்தம்' (வரி 1801, 2032, 2472); 'யோகம்' (வரி 629);

656. தந்தைதாய் தேடும் தனத்தில் - பெற்றோர் தேடி வைத்த செல்வத்தில் திருமணமானவனை; பிழைக்க வைப்பார் - குடும்பம் நடத்துமாறு செய்வார்;

657. மைந்தருக்கு - அவனுக்குப் பிறக்கும் குழந்தைக்கு; மாது அவரும் - தாயும், (பெற்றோரும்); வாயில் மிகு சோறூட்டி - உணவை வாயில் எடுத்து அளித்து; பா.வே. - 'மாலவனும் வாயிலஞ்சி சோறூட்டி' (ச.ம.நூ.); 'மாலோனும் வாயில் தினம் பாலூட்டி' (மா.தவநிலை); 'மாதா வாயில் முலை சோறூட்டி' (கை.பிரதி);

658. கந்தமுடன் - புகழுடன்; வளத்து < வளர்த்து - பாதுகாத்து; காத்திருந்து - பருவம் வரும் வரையும் பொறுத்து; பெண் தேடி - அவனுக்குத் தகுதியான மணப் பெண்ணைக் கண்டுபிடித்து; பி.வே. - 'பெண்கேட்டு' (மா.தவநிலை);

மணமுடித்துப் புத்திசொல்லி வாகுமுத லீய்ந்ததிலும்
சணமுடலைச் சங்கரிக்கத் தங்குபுக ழுத்திரனும்
பித்தஞ் சிலேட்டமுமாய்ப் பேதலிக்கும் வாதமிதில்
உத்தவுடல் போட்டு யுயிர்போம் மிமனிடத்தில்
நத்து பலவாசை நானிலத்தி லுள்ளபடி
விற்றார யுருத்திரனும் வெட்டியுயிர் வாங்கிலையோ

*659.* மணமுடித்து - அவனுக்குத் திருமணமும் செய்து வைத்து; புத்தி சொல்லி - நல்ல ஆலோசனைகளை வழங்கி; வாகுமுதல் - இல்லறவாழ்க்கைக்குரிய செல்வத்தை; ஈய்ந்ததிலும் - கொடுத்து இருந்தாலும்; பி.வே.- 'வாழ்வுமுதல் ஈந்தனரே' (ச.ம.நூ.); 'வாகுமுதல்யதிலேதான்' (மா.தவ நிலை); 'வாழ்வுமுதலீந்திடுவார்' (கை.பிரதி);

*660.* சணம் - கணம், நொடிப் பொழுதில்; உடலைச் சங்கரிக்க - (வரி 643) தேகத்தை வதைத்துக் கொன்று போட, அழிக்க; தங்கு புகழ் - பெருமை தங்கியுள்ள; உத்திரனும் < உருத்திரனும் < ருத்திரனும் - சிவ அம்சமானவர். இவர்கள் பதினொருவர் எனக் கூறுவர். இவர்களுள், இயம திக்குக்குரிய உருத்திரர்களே உடல்களைச் சங்கரிப்பர்; பி.வே. - 'கணம்' (ச.ம.நூ.); பா.வே. - 'சண்டன்னுடல் சங்கரிக்க' (மா.தவநிலை, கை.பிரதி); பார்க்க: 'உருத்திரன்' (வரி 664, 1270); 'உருற்றிரன்' (2383);

*661.* பித்தம் - முப்பிணிகளிலொன்றான மயக்கம், இது பித்தநாடி தொடர்புடையது; சிலேட்டமுமாய் < சிலேஷமமுமாய் - சிலேற்பனம், முப்பிணிகளில் மற்றொருவகை, இதுவும் நாடி சம்பந்தப்பட்டது; பேதலிக்கும் - உயிர்போகக்கூடிய இறுதிக் காலத்தில் ஏற்படும் பரிதவிப்புகள் உடைய; வாதமிதில் - முப்பிணியிலொன்றான மூச்சிரைப்பில்; இதுவும் வாத நாடி தொடர்புடையது; பா.வே. - 'வாரமதில்' (ச.ம.நூ.); 'சிலேப்பிலம்' (மா.தவநிலை); 'சிலேட்டுமமும்' (கை.பிரதி; பார்க்க: 'பித்தம்' (776); ஒப்பிடுக: 'சிலேற்பனம்' (776);

*662.* உத்த < உற்ற - உரிய; உடல் போட்டு - தேகத்தை விட்டுவிட்டு; உயிர் - உயிரானது; போம் - போகும்; இமனிடத்தில் - காலனிடம்; பி.வே. - 'உற்ற', 'எமன் அருகில்' (ச.ம.நூ., மா.தவநிலை);

*663.* நத்து - விரும்புகின்ற; பல ஆசை - பல்வேறு ஆசாபாசங்களுக்குத் தக்கபடி; நானிலத்திலுள்ளபடி - பூமியிலிருந்த போது அவ்வுயிர் மேற்கொண்ட பாவ புண்ணியங்களுக்கு ஏற்ப;

*664.* விற்றார < வித்தார - விஸ்தாரம் - பெரிய, நயமான; உருத்திரனும் - (விளக்கம் வரி 660); உயிர் வெட்டி - உயிரைத் துண்டித்து; வாங்கிலையோ < வாங்கவில்லையோ - வதைப்பார் அல்லவா; பி.வே.

### விருத்தம்

பாரினில் விந்து கெற்பம்
பங்கையன் படைப்ப தானான்
சீரினி லாசை மோக(ம்)ஞ்
செ(ண்)ங்கண் மால்காற்ப தானான்
வேரினில் வியாதி பூட்டி
விதிநமன் கொல்வ தானான்
தாரினில் தவஞ்செய் வோர்கள்
தமக்குனா னேவ லானேன் (26)

### நடை

665 அப்படியே செய்து யவர்கள் சுகமேயிருந்தார்

- 'வித்தரான' (ச.ம.நூ.); 'விஷ்த்தார' (மா.தவநிலை., கை.பிரதி); ஒப்பிடுக: 'வித்தாரம்' (2645); 'விற்றாரம்' (2440); 'விஷ்த்தாரம்' (106, 2340);

வி.26 பாரினில் - பூமியில் மானிட வாழ்வில்; விந்து - சுக்கில அணுவால்; கெற்பம் < கர்ப்பம் - கருப்பம், கருவுயிர்த்தலினால் ஏற்படும் நிலை; பங்கையன் - பிரமா; படைப்பதானான் - இவ்வாறு தனக்குரிய படைப்புத் தொழிலைச் செய்கின்றான்; சீரினில் ஆசை மோக(ம்) - பிறந்த குழந்தையின் அழகில் லயித்து அதன் மேல் ஆசையையும் மோகத்தையும் காட்டிப் பெற்றோர் அதை வளர்ப்பதற்கு; செ(ண்)ங்கண்மால் - சிவந்த தாமரை போன்ற கண்களையுடைய திருமால்; காற்ப < காப்ப - காக்க; ஆனான் - இவ்வாறு காக்கும் தொழிலை மேற்கொள்ளலானான்; வேரினில் - உடம்பில்; வியாதி - பிணிகள்; பூட்டி - பிணித்து, ஏற்படுத்தி; விதி நமன் - இறுதிக்குரிய காலக் கடவுள்; கொல்வதானான் - உயிர்களை வதைத்துக் கொண்டு செல்லுவான்; தாரினில் - இவ்வாறான காலச் சங்கிலியில்; தவஞ்செய்வோர்கள் தமக்கு - சிவனாகிய என்னை எண்ணித் தபசு செய்பவர்களுக்கு; நான் ஏவலானேன் - அவர்கள் கூப்பிட்டபோது சென்று காட்சி தரவும், கேட்பதைக் கொடுப்பதுமான பணிகளைச் செய்து வருகிறேன்;

பி.வே. - 'சீரினில் மயலைமூட்டி' (ச.ம.நூ); 'மேற்பினில் வியாதி மூட்டி' (மா.தவநிலை); பார்க்க: 'பங்கையன்' (வி.71); 'செங்கண்மால்' (1264, 1267, 1806, 2004);

665. அப்படியே செய்து - படைத்தல், காத்தல், அழித்தல் எனும் முச் செயல்களையும் புரிந்து; அவர்கள் - பிரமா, விஷ்ணு, ருத்திரகாலன் என்னும் மூவர்; சுகமேயிருந்தார் - தம் தொழில் மட்டுமே செய்து வேறொரு கவலையுமின்றி நலமாக இருந்தனர்; பி.வே. - 'அப்படியாய்ச் செய்து' (ச.ம.நூ.); 'இப்படியே' (கை.பிரதி);

யிப்படியே யுங்களுடன் யேவலாய் நாந்திரிந்தோம்
மைந்த னுனக்கு மகாமுனியே யாங்கொடுத்தால்
எந்தன்தனை நினைப்பான் யானுமவன்
பக்கல்நிற்போம்
உந்தன் மகற்கு யுதவிமிக யேவல்செய்து
எந்தனால் நிற்கரிது யெந்தன் வரையைவிட்டு
கன்னல்மிகுந் தாண்டு கருணைப் பதினாறும்
இன்னாளில் நல்மதலை யீய்ந்தோமென வுரைத்தார்

666. இப்படியேயுங்களுடன் - உம்மைப் போன்ற சிவ பக்தர்கள் கூப்பிடும் போதெல்லாம் வந்து காட்சி தந்து; ஏவலாய் - உங்களுக்குப் பணிவிடை புரிந்து; நாம் - சிவனாகிய (நான்) நாம்; திரிந்தோம் - அலைந்து கொண்டிருக்கிறோம்; பா.வே. - 'எவ்வாறு நான் திரிந்தேன்' (ச.ம.நூ.);

667. மகாமுனியே - பெரியமுனிபுங்கவனே; மைந்தன் உனக்கு - உமக்கு ஒரு ஆண் குழந்தையை அடைவதற்கு; யாம் கொடுத்தால் - நான் இப்போது வரம் நல்கினால்; பா.வே. - 'அறிவுள்ளவனாய்...நான்' (ச.ம.நூ.);

668. எந்தன்தனை நினைப்பான் - அவனும் பிறந்து வளர்ந்து தவம் செய்து என்னைக் காணத் துடிப்பான்; யானும் - நானும்; அவன் பக்கல் நிற்போம் - சிவனடியானாதலால் சிவனான நானும் அவன் அழைக்க அவனை அடுத்துச் செல்வோம்; பி.வே. - 'பக்கம்' (கை.பிரதி);

669. உந்தன் மகற்கு - உனக்குப்பிறக்கப்போகும் மகனுக்கும்; உதவி - பல உபகாரங்களைச் செய்து; மிகயேவல் செய்து - அதிகமாகப் பணிவிடைகள் புரிந்து; பி.வே. - 'எல்லாம் செய்து' (ச.ம.நூ);

670. எந்தனால் - என்னால்; என் வரையைவிட்டு - நானிருக்கும் மலையான கயிலாயத்தை நீங்கி; நிற்கரிது - இங்கே வந்து உன் மகன் முன்பு தோன்ற இயலாது; பா.வே. - 'எந்தன் துரையை விட்டு' (மா.தவநிலை);

671. கன்னல் மிகுந்த ஆண்டு - இனிமை தரக் கூடிய அதிக ஆயுளான; கருணைப் பதினாறு - கருணையுடன் நியமித்த 16 ஆண்டுகள் நிரம்பிய; பி.வே. - 'புகழ் ஆண்டு' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

672. இன்னாளில் < - இப்போது; நல் மதலை - நல்ல குணவானான ஆண் குழந்தைக்கான வரத்தை; ஈய்ந்தோம் - நல்கினோம்; என உரைத்தார் - என்று இறைவன் கூறினார்; பி.வே. - 'இன்னிலத்தில்' (ச.ம.நூ., மா.தவநிலை., கை.பிரதி);

அந்தமொழி சொல்ல ஆனமுனி தெண்டனிட்டு
கந்த மிகுந்த கருணை யருள்(க்)கடலே
விண்ணுமண்ணு மோங்கிநின்ற வித்தகனே சத்திபங்கா
எண்ணும் பதினாறாய் யியல்மதலை தந்தீரே
மன்றுலகிலே மலற்றாள் வாகா யுதவுமென்று
அன்றுதவி செய்யு மரன்பாதந் தெண்டனிட்டான்
அப்போ தரனாரு மம்முனியை விட்டகன்றார்
தப்பாத சொல்முனிவன் சங்கரனைப் போத்திசெய்து

673. அந்த மொழிசொல்ல - அவ்வாறான வரத்தை இறைவன் அருளிக் கூற; ஆனமுனி தெண்டனிட்டு - முனிவனான மிருகசிங்கன் கிடந்து வணங்கி; பி.வே. - 'அந்த உரை சொன்ன அரனை' (ச.ம.நூ., மா.தவநிலை., கை.பிரதி);

674. கந்தமிகுந்த - புகழ்நிறைந்த; கருணை அருள்க்கடலே - கடல்போல இரக்கம் பெருகிய அருளுள்ளமுடைய இறைவனே; பா.வே. - 'கந்தன் தனை ஈன்ற' (ச.ம.நூ.); 'கந்தம் நிறைந்த' (மா.தவநிலை);

675. விண்ணு மண்ணுமோங்கிநின்ற - (வரி 242) ஆகாயத்துக்கும் பாதாளத்துக்கும் வளர்ந்து, பிரமனாலும் மாலாலும் முடியையும் அடியையும் காணவியலாதவாறு நின்ற; வித்தகனே - பெரிய இறைவனே; சத்திபங்கா - சக்தியாகிய உமையைப் பங்காகக் கொண்டிருப்பவனே;

676. எண்ணும் - எப்போதும் நினைக்கக் கூடிய (விரல் விட்டு எண்ணி விடக் கூடிய என்றும் சொல்லலாம்); பதினாறாய் - 16 ஆண்டு ஆயுளுள்ள; இயல் மதலை - குழந்தைப் பாக்கியம்; தந்தீர் - அருளுனீர்; ஏ-அசை; பி.வே. - 'என்றும் பதினாறாய்' (ச.ம.நூ.); பா.வே. - 'இருப்பானழிவில்லை என்று' (ச.ம.நூ.); 'இன்ப மதளை' (மா.தவநிலை); 'என்றும் பதினாராண்டாய்' (கை.பிரதி);

677. மன்றுலகில் - விளங்கும் இப்பூமியில்; மலற்றாள் < மலர்+தாள் - மலரனைய மென்மையான கருணை நிறைந்த இறைவன் பாதம்; வாகாய் - வகையாய்; உதவுமென்று - எப்போதாவது பயன்படும் என; பி.வே. - 'மண்ணுலகில்' (ச.ம.நூ., மா.தவநிலை., கை.பிரதி);

678. அன்று உதவி செய்யும் அரன் பாதம் - அன்றைக்கு வரம் ஈய்ந்த சிவன் பாதங்களை; தெண்டனிட்டான் - கிடந்து வணங்கினான்;

679. அப்போது அரனாரும் - அக்கணத்தில் இறைவனும்; அம்முனியை - மிருகசிங்கனை; விட்டகன்றார் - நீங்கி, மறைந்தார்; பி.வே. - 'உமையும் யம்முனியை' (மா.தவநிலை);

680. சொல் தப்பாத - சொல்லும் உறுதி வார்த்தைகளைப் பொய்யாக்காத; சங்கரனை - சிவனை; போத்தி செய்து (போற்றி) - வணங்கி;

வந்தான் மனைவியர்கள் வாழு மனையிடத்தில்
வந்த கணவன் மலரடியை மூவர்களும்
சிந்தையுடன் தெண்டனிட்டுச் சிறந்து மனமகிழ்ந்தார்
பந்துமுலை மங்கையரைப் பாத்துமுனி யேதுரைப்பான்

685 தங்குங் கலவிசுகந் தான்(ங்)கூடி மோகமதாய்
பொங்கமுற்த மாதர்களைப் புணர்ந்து நலம்பாராட்டி
மன்மத பாணமென்னு மாயக்கடல் மூழ்கி

681. மனைவியர்கள் வாழும் மனையிடத்தில் - தன் மூன்று மனைவி யர்களும் ஒத்து வாழும் தன் வீட்டுக்கு; வந்தான் - வரங்களுடன் திரும்பி வந்து சேர்ந்தான்; பி.வே. - 'சிந்தை மனைவியர்கள் செல்வமனை' (ச.ம.நூ., மா.தவநிலை);

682. மூவர்களும் - மூன்று மனைவியரும், வந்த கணவன் - இறைவனிடம் வரம் வாங்கி மீண்டு வந்த கணவனின்; மலரடியை - (வரி 370) மலரனைய பாதங்களை; பா.வே. - 'நால்வர்களும்' (ச.ம.நூ);

683. சிந்தையுடன் தெண்டனிட்டு - உள்ளன்புடன் பணிந்து வணங்கி; சிறந்து மனமகிழ்ந்தார் - இறைவன் கருணையை எண்ணிப் பெருமை யுற்று உள்ளம் மகிழ்ந்திருந்தார்; பி.வே. - 'சிந்தை மகிழ்ந்தின்பமுற்று' (ச.ம.நூ.); 'சிறந்துயின்பமுற்றிருந்தார்' (மா.தவநிலை); 'சிந்தை நிறைந் தின்பமுற்று' (கை.பிரதி);

684. பந்து முலை மங்கையரை - உருண்டையாகத் திரண்ட தனங்கள் பெற்ற தன் மனைவியரை; பாத்து < பார்த்து, நோக்கி; முனி - முனிவன்; ஏதுரைப்பான் - இறைவன் தந்த வரத்தைக் கூறுவான்; பார்க்க: 'பந்து முலை' (721, 1411);

685. தங்குங்கலவி சுகம் - நினைக்க நினைக்க எப்போதும் இன்பம் நல்கும் புணர்ச்சியை; தான்ங்கூடி - அவர்களுடன் தானும் சேர்ந்து புரிந்து; மோகமதாய் - காம வயப்பட்டு அனுபவித்து; பா.வே. - 'தங்கு கல்வி சுகமான மூழ்கியோகமதாய்' (ச.ம.நூ);

686. பொங்கு - நிறைகின்ற; அமுற்த < அமுத < அமிர்த - தெவிட்டாத இன்ப பானம் பருகச் செய்யுமியல்புடைய; மாதர்களை - தன் மனைவியரை; புணர்ந்து - கலவி செய்து; நலம் பாராட்டி - (373, வி.8) அவர்களின் அழகும் அன்பும், அவர்கள் தந்த இன்பத்தையும் அனுபவித்து, பின்பு அவற்றை எண்ணிப் புகழ்ந்து; பி.வே. - 'பொங்கு உரு மாதர்களை' (ச.ம.நூ.); 'பொங்கமுறு மாதர் புணர்ந்து' (மா.தவ நிலை); 'பொங்குமுற மாதர் புணர' (கை.பிரதி);

687. மன்மத பாணம் எனும் - ஆண் பெண் கூடலுக்குரிய உணர்வுக ளைத் தூண்டும் மன்மதனின் மலர்க் கணைகளால் உந்தப் பெற்று; மாயக் கடல் மூழ்கி - அதனால் ஏற்பட்ட மோக இன்பமாகிய பெரிய கடலில் முழுதும் இறங்கினான்;

தன்மநெறி தப்பாத தையலதி லொருத்தி
தாமச் சடைமுடியார்ச் சங்கரனார் சொல்(ப்)படிக்குக்
காமப் புணர்ச்சியிலே கருணையுடன் கெற்பமுற்று
கொங்கை முனைகறுத்துக் கோலவயற் தளன்று
மங்கை திங்கள்பற்றாய் மறுகி மயக்கமுற்று
அன்னநடை மாது அருந்துதிபோல் கற்புடையாள்
கன்னல் தவசால் கருணைமைந்தன் பெற்றெடுத்தாள்

*688. தன்ம நெறி < தருமநெறி - அறநெறிகளில் (வரி 94); தப்பாத - விலகாத; தைய்யலதில் - மூன்று பெண்களில் (வரி 323); (தைய்யல் < தையல்); ஒருத்தி - ஒரு மனைவியானவள்; பி.வே. - 'தருமநெறி மங்கையர்கள் தான்யிளையாள் தன் வயிற்றில்' (மா.தவநிலை); 'கன்னியி ளையாள் வயிற்றில்' (கை.பிரதி);*

*689. தாமச் சடைமுடியார் சங்கரனார் - கொன்றைமலரைச் சடைமுடி யில் சூடியுள்ள இறைவன்; சொல்ப்படிக்கு < சொற்படிக்கு - மொழிக் கேற்ப; பார்க்க 'தாமம்' (2107);*

*690. காமப் புணர்ச்சியிலே - தன் கணவனுடன் மேற்கொண்ட கலவியினால்; கருணையுடன் - இறைவன் அருளுடன்; கெற்பமுற்று < கர்ப்பம் உற்று - பிள்ளையுண்டாகி; பா.வே. - 'கருவுண்டாய்க் கர்ப்பமுற்றாள்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);*

*691. கொங்கைமுனை - முலைக்காம்பு; கறுத்து - கருமைநிறம் பெற்று; கோல வயற் > கோல வயிறு - குழந்தைப் பேறடைந்த அழகிய உதரம்; தளன்று > தளர்ந்து - கட்டவிழ்ந்து, நெகிழ்ந்து; பி.வே. - 'கொங்கைமுலை', 'வயிர் கனத்து' (கை.பிரதி);*

*692. மங்கை - மிருகசிங்கனின் மனைவியரில் ஒருத்தி; திங்கள் - மாதம்; பற்றாய் > பத்தாய் - பத்து (மாதங்கள்) நிறையவும்; மறுகி - திக்குமுக்காடி, பரதவித்து; மயக்கமுற்று - பிரசவ வேதனையால் நினைவிழந்து; பி.வே. - 'மங்கையருக்கு...மயல்மூழ்கி' (மா.தவநிலை);*

*693. அன்னநடை மாது - அன்னப்பறவை நடந்துசெல்வதுபோல் நடந்துசெல்லும் (மேற்சொன்ன) பெண்; அருந்துதிபோல் > அருந்ததி - (வரி 460) அருந்ததியைப்போன்ற; கற்புடையாள் - நல்லொழுக்கத்தைப் பெற்றவள்; பி.வே. - 'அருந்ததி' (ச.ம.நூ., கை.பிரதி);*

*694. கன்னல் - கரும்பு; அருமையான; தவசால் > தவத்தால் - இல்லற வாழ்க்கை நோன்பால்; கருணைமைந்தன் - அருள் நிறைந்த மகனை; பெற்றெடுத்தாள் - ஈன்றாள்; பி.வே. - 'தவத்தால்' (ச.ம.நூ., கை.பிரதி);*

## மார்க்கண்டேயன் பிறப்பு

695 மதலையென்ன மார்க்கண்டன் வந்துபிறந்தா னுலகில்
குதலைக் கனிவாயில் கோதை முலையருந்தி
தவளமருள் முற்றெனவே தாரணியிலே பிறந்து
பவளயிதழ் வாய்திறந்து பாங்காகவே யழுது
ஆடல் மதன னழகுக் கிணையாக
700 தாடாளன் நல்ல சமத்தன் மதலையதாய்

695. மதலை என - (வரி 602) பச்சிளம் குழந்தையாக; மார்க்கண்டன் - இக்கதைப்பாடல் நாயகன்; வந்துபிறந்தானுலகில் - இப் பூமியில் பிறந்தான்; பி.வே. - 'மதளை' (மா.தவநிலை);

696. குதலைக் கனிவாயில் - மழலை நிறைந்த வாயால்; கோதை - தன் தாயின்; முலையருந்தி - முலைப்பால் பருகி; பா.வே. - மதலை கனிவாய் போதமுலை பாலருந்தி' (கை.பிரதி); பி.வே. - 'குதளை கனிவாயால் கோதை யமுர்தம்' (மா.தவநிலை);

697. தவளமருள் - வெண்மையான; முற்று > முத்து - சிப்பிக்குள் இருக்கும் நவமணிகளிலொன்றான கடல்முத்து; எனவே - சிப்பியிலிருந்து வெண் முத்தானது பிறப்பதைப்போல; தாரணியிலே பிறந்து - பூமியிலே தோன்றி; பி.வே. - 'தவளையருள்' (மா.தவநிலை); பார்க்க: 'தவளம்' (2296, வி.45);

698. பவளயிதழ்வாய் - செம்மைநிறப் பவளம் போன்ற உதடுகளை யுடைய வாய்; திறந்து - விரித்து; பாங்காகவேயழுது - இதமாக ஒலி யெழுப்பி; பா.வே. - 'பாலருந்தி' (கை.பிரதி); பார்க்க: 'பவளயிதழ்' (1766); பவளவாய்! (2295);

699. ஆடல் மதனன் - பேடி ஆட்டத்தினை ஆடிய மன்மதன்; அழகுக்கிணையாக - தோற்றத்தை ஒத்த; பி.வே. - 'ஆடல் மதனனுக் கழகாய் யுலகமதில்' (கை.பிரதி); 'ஆடலருயின்பம் யழகுமதன் யழகுக்கி ணையாய்' (மா.தவநிலை);

பேடி ஆடலின் வரலாறு: திருமாலின் மகனான மன்மதன் தன் மகன் அநிருத்தனைச் சோநகரத்தினின்றும் மீட்க ஆண் உருதிரிந்த பெண்கோலத் துடன் ஆடியதால் இப்பெயர் ஏற்பட்டது;

''காமன் ஆடிய பேடி ஆடலும்'' - *சிலப்பதிகாரம் 6:57.*
''நீணில மளந்தோன் மகன்முன் ஆடிய
பேடிக் கோலத்துப் பேடு காண்குநரும்'' - *மணிமேகலை 3:124-5.*;

700. தாடாளன் > தாளாளன் - ஊக்கமுள்ள குழந்தை (> 'தாராளன்' எனக்கொண்டு, 'மிகவும் தாராள (பெருந்தன்மை) மனம்கொண்டவன் எனவும் கூறலாம்); நல்ல சமத்தன் - திறமையுள்ளவன் - ஆனால் இங்கே

பாலன் பிறந்ததினால் பண்பு மிருகசிங்கன்
சீலமிகு மன்னைதந்தை சீர்மாமன் மாமியாரும்
தங்கு புகழின் தருமமனையாள் மூவர்
பொங்கு மகிட்சி புதல்வன் பிறந்ததினால்
705 போதமிகு தானம் பொழியு மனையிலெனவே
நீதமுட னீய்ந்து நிறைந்த மகிழ்ச்சிபொங்கி
அய்ந்து முகத்து யரனா ரருளாலே
மைந்தனையே நன்றாய் வளத்தனர் காணம்மானை

'சமத்துக் குழந்தை' எனக் கொள்வது பொருந்தும்; மதலை யதாய் - கைக்குழந்தையாய் (வரி 695); பா.வே. - 'தேடரிய இன்பம் சிறந்த' (ச.ம.நூ; மா.தவநிலை, கை.பிரதி); பார்க்க: 'சமத்து' (1321);

701. பாலன் பிறந்ததினால் - மகன் வந்து தோன்றியதால்; பண்பு மிருகசிங்கன் - நற்பண்புகள் நிறைந்துள்ள மிருகசிங்க மாமுனிவன்; பி.வே. - 'பண்பாய்' (கை.பிரதி);

702. சீலமிகுமன்னை தந்தை - புகழுடைய தன் மாதா பிதாவுடனும்; சீர்மாமன் மாமியரும் - தன் மனைவியரின் வளம் நிறைந்த பெற்றோருடனும்; பி.வே. - 'சீலநிறை அன்னைதந்தை சீர் மாமியரும்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

703. தங்கு புகழின் - புகழ்நிலைக்கக்கூடிய; தரும மனையாள் மூவர் - அறவழிகளை மேற்கொள்ளும் மூன்று மனைவியரும்; பா.வே. - 'நால்வரும்' (ச.ம.நூ.);

704. புதல்வன் பிறந்ததினால் - தங்களுள் ஒருத்திக்கு ஆண்குழந்தை பிறந்ததால்; மகிட்சி > மகிழ்ச்சி - சந்தோசம்; பொங்கும் - பெருகும், நிறையும்;

705. மனையில் - குடும்பத்தில், வீட்டில்; போதம் - ஞானமும்; மிகுதானம் - மிகுந்த ஈகையும்; பொழியும் - பெருகும்; எனவே - என்று; பா.வே. - 'தானம் பூவியல்பெனவே' (ச.ம.நூ.); பூவில் மனையெனவே' (மா.தவநிலை); பி.வே. - 'போத நிறை' (கை.பிரதி);

706. நீதமுடன் - அறவழிகளில்; ஈய்ந்து - தானதருமம் செய்து; நிறைந்த மகிழ்ச்சி பொங்கி - மிகுதியான சந்தோசம் அடைந்து; பி.வே. - 'ஈந்து; (கை.பிரதி);

707. அய்ந்து முகத்து அரனார் - (வரி விளக்கம் 576) ஐந்துமுகமுடைய சிவபெருமானின்; அருளால் - வரத்தினால்;

708. மைந்தனையே - குழந்தை மார்க்கண்டேயனை; நன்றாய் - ஒழுங்காக; வளத்தனர் > வளர்த்தனர் - பேணிப்பாதுகாத்தனர்; காண்

ஒன்று வயதுரண்டாய் மூன்றாகி னாலாகி
நின்ற வயதஞ்சாய் நிறைந்ததுவே யம்மானை

**விருத்தம்**

அஞ்சு வயதில் மார்க்கண்ட
னறிவினா லெழுத்துக் கல்வி
மிஞ்சு ஓதுஞ் சரிதையுடன்
மிக்க சாத்திர யூகைகளும்
செஞ்சொல் புராண காவியமும்
திகழ்சேர் காலம் வருங்காலம்
பஞ்சாச் சரமு முடையவனாய்ப்
பாலன் பண்டித னானானே (27)

- அசை; அம்மானை - அசை; ஓசை நிறைத்தலுக்காக வருவது; இவ்வாறு பின்னும் வருவதால் இந்த நூலுக்கு 'மார்க்கண்டேயன் அம்மானை' எனப்பெயரேற்பட்டது என்பர்; இதற்கான விளக்கத்தை முன்னுரையில் காண்க; பா.வே. - 'காண் இன்பமுற்று' (ச.ம.நூ.); 'வளத்தார்கள்யின்ப முற்று' (மா.தவநிலை); 'இன்ப மகிழ்ச்சியாக' (கை.பிரதி); பார்க்க: 'அம்மானை' (710, 866, 997);

709. வயது - அகவை; ஒன்று ரண்டாய் (> இரண்டாய்) மூன்றாகி னாலாகி - குழந்தை மார்க்கண்டேயனுக்கு வயது ஒன்று முடிந்து, இரண்டு முடிந்து, மூன்று முடிந்து, நான்கு முடிந்து;

710. நின்ற வயது அஞ்சாய் - (> ஐந்தாய்) ஐந்தாவது வயதில்; நிறைந்ததுவே - முடிந்த நிலையில்; அம்மானை - அசை (காண்க வரி 708); பி.வே. - 'நிறைய மார்க்கண்டருக்கு' (மா.தவநிலை); 'நிறைந்த மார்க்கண்ட மைந்தன்' (கை.பிரதி);

வி.27. அஞ்சு வயதில் மார்க்கண்டன் - மார்க்கண்டேயன் தனக்கு ஐந்து அகவை ஆனபொழுது; அறிவினால் - (அறிந்து படிக்கக்கூடிய) புத்தியினால்; எழுத்துக்கல்வி - தமிழ்எழுத்துக்களாலும், எண்களாலு மான அரிச்சுவடி, எண்சுவடி, கீழ்வாயிலக்கம், மேல்வாயிலக்கம் போன்ற தொடக்கக் கல்வியையும்; மிஞ்சு ஓதும் சரிதையுடன் - அதிகமாகச் சொல்லப்படுகின்ற வரலாறுகளுடன்; மிக்க சாத்திர யூகைகளும் - மிகுதியாக விளங்கும் சாத்திர ஞானக் கல்வியையும்; செஞ்சொல் புராண காவியமும் - உயர்தனிச் செம்மொழியான தமிழ்மொழியில் பாடப்பெற்றுள்ள பழங்கதைப் பாடல்களையும், தன்னிகரில்லா மாந்தர்கள் பற்றிய பெரிய சிறிய காப்பியங்கள்ளயும்; திகழ்சேர்காலம் - திகழக் கூடிய நடப்புக் காலம் பற்றிய செய்திகளையும்; வருங்காலம் - எதிர்காலத்தில் நடக்கவிருக்கும் நிகழ்ச்சிகளையும்; பஞ்சாச்சரமும் - ஐந்தெழுத்து மந்திர

**நடை**

..............................
செஞ்சொல் புராணந் திகழ்வேத சாத்திரமும்
பன்னுந் தமிழ்யோகவித்தை பாசையொரு மூவாறும்
கன்னல் தேனொப்பாய்க் கருணை யழகுடையோன்
பத்து வயதில் பல்கலைக ளாராய்ந்து
715 தத்துவங்கள் ஞானநெறி தனிலெவையு மாராய்ந்து

மும் (நமசிவாய என்பன); உடையவனாய் - சிவனை மறவாத சிந்தை பெற்றவனாய்; பாலன் - மார்க்கண்டேயன்; பண்டிதனானானே - கலைகளையறிந்த வித்துவானானான்;

..... 'அஞ்சுவயதானதற்பின் ஆனதவ மெய்ஞ் ஞானம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

711. செஞ்சொல் புராணம் - உயர்தனிச் செம்மொழியாம் தமிழிலமைந்துள்ள பழங்கதைக் காவியங்கள்; திகழ்வேத சாத்திரமும் - நிலைபேறுடைய ருக், யசுர், சாம, அதர்வண எனும் நான்மறைகளும், வேதாந்தம், பதஞ்சலியம், சாங்கியம் எனும் மூன்று அல்லது வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூர்வமீமாம்சை, உத்தர மீமாம்சை எனும் ஆறு சாத்திரங்களுமாம்; பி.வே. - 'சாஷ்த்திரமும்' (மா.தவநிலை); 'நிகழ் வேத சாஸ்திரமும்' (கை.பிரதி);

712. பன்னும் - சொல்லத் தகுதியுடைய; தமிழ் - தமிழ் நூல்களும்; யோக வித்தை - நிஷ்டைகளுடன் கூடிய சகல விதமான பயிற்சிகளும்; பாசை யொருமூவாறும் - தமிழ்நாட்டில் வழங்கிய பதினெட்டு மொழிகளும்; பதினெண் மொழிகளாவன: 1. கன்னடம் 2. கொல்லம் 3. கலிங்கம் 4. தெலுங்கு 5. குடகம் 6. கொங்கணம் (கொங்கணி) 7. கோசலம் 8. சாவகம் 9. சிங்களம் 10. கங்கம் 11. சீனம் 12. சோனகம் (உருது) 13. திரவிடம் (தமிழ்) 14. துளுவம் 15. கவுடம் 16. மகதம் (பிகாரி) 17. கடாரம் 18. வங்கம் (வங்காளமொழி) - (சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதி).;

713. கன்னல் தேன் ஒப்பாய் - சுவைக்க இனிக்கும் கரும்பு தேனுக்கு இணையாக (மேலேயுள்ளவற்றைப் படித்துச்சுவைத்து); கருணை அழகுடையான் - இரக்கமும் எழிலும் சேர்ந்து தோன்றுபவனான மார்க்கண்டேயன்;

714. பத்து வயதில் - ஐந்து முதல் பத்து வயதுக்குள்ளான ஐந்து ஆண்டுகளில்; பல்கலைகள் ஆராய்ந்து - பல சாத்திரங்களையும் கலைகளையும் வித்தைகளையும் பிறவற்றையும் ஆய்ந்து அறிந்து தெளிந்து;

715. தத்துவங்கள் - 36 வகைத் தத்துவக் கருவிகளையும்; ஞானநெறி - 4 வகை ஞானநெறிகளான (கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை

செல்கால நீள்காலம் சேதம் வருங்காலம்
வெல்கால மாராய்ந்தான் வேதாவின் கற்(ப்)பினையால்
மைந்தனுக்கு வுத்தருமை மாதாபிதா வறிந்தார்
இந்தப் புதல்வனுக்கு இறையவனார் சொன்னமொழி
எந்தப்படி வருமோ யென்றேங்கி மாதாக்கள்
பந்துமுலை மடவார் பாத்துக் கவலையுற்றார்
மன்மதனைப் போலே மகன்வடிவைக் கண்டுருகி

கூறல்) என்பனவற்றையும்; தனில் எவையும் ஆராய்ந்து - மேலேயுள்ள வற்றில் எல்லாவற்றையும் படித்து அறிந்து; பா.வே. - 'தன் வயதும் ஆராய்ந்து' (ச.ம.நூ.);

716. செல்காலம் - சென்ற காலத்து நிகழ்ச்சிகளையும்; நீள்காலம் - நடந்துகொண்டிருக்கின்ற காலத்து நிகழ்ச்சிகளையும்; சேதம் வருங்கா லம் - அழிவுகள் வரும் எதிர்காலத்தையும்; பி.வே. - 'நிகழ்காலம்' (ச.ம.நூ., கை.பிரதி);

717. வேதாவின் - பிரமாவின்; கற்ப்பினையால் > கற்பினையால் > கற்பனை - விதிமுறைகளால்; வெல்காலம் - அழிவுகளிலிருந்து வெற்றியடையும் காலப்பலன்களையும்; ஆராய்ந்தான் - ஆய்ந்து அறிந் தான்; பி.வே. - 'கற்பனை' (ச.ம.நூ., கை.பிரதி);

718. மைந்தனுக்கு - தங்கள் மகன் மார்க்கண்டேயனுக்கு; உத்த > உற்ற; அருமை - சிறப்பியல்புகள், மேன்மை; மாதாபிதா - தாய்தந்தையர்; அறிந்தார் - கண்டு தெரிந்து கொண்டனர்; பி.வே. - 'மைந்தன் கருத்தரு மை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

719. இந்தப் புதல்வனுக்கு - இப்படி இளம் வயதிலேயே பல சாத்திரங்களையும் கற்றுக்கொண்ட மார்க்கண்டேயனுக்கு; இறையவ னார் - சிவபெருமான்; சொன்னமொழி - நல்கிய வரம், ஆயுள்காலம், இறுதிக்காலம்; பி.வே. - 'சொன்ன படி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

720. எந்தப்படிவருமோ - எந்த நிலையில் (எப்படி) வந்து சேருமோ; மாதாக்கள் - அன்னையும் அவள் சகோதரிகளும்; பி.வே. - என்றேங்கி மாதாவும் (மா.தவநிலை, கை.பிரதி);

721. பந்துமுலைமடவார் - (பார்க்க வரி 684); வட்டமான தனத்தை யுடைய தாயர்; பாத்து > பார்த்து - எதிர்பார்த்து (மகனை எப்போதும் பார்த்து ஏங்கி எனவும் கூறலாம்); கவலையுற்றார் - துன்பமடைந்தனர்;

722. மன்மதனைப் போலே - ஆணழகனான காமனைப்போன்று விளங்கும்; மகன்வடிவை - மார்க்கண்டேயனின் உருவப் பொலிவை; கண்டு உருகி - பார்த்துப் பார்த்து அது அழியப் போகிறதே என வருந்தி;

என்மகன்றான் பூவுலகி லிறந்தானே யாமாகில்
ஆதி யரனார்க்கு மாயிளைக்கு மேற்குமிதோ
பாதிப் பிறையணியும் பரனேயென் பாலனிடம்
ஏமன் வராம லிறையவனே காருமென்றாள்
காமன் தனையெரித்த கண்ணுதலோன் தந்தமைந்தன்

723. என்மகன்றான் > என் மகன்தான் - நான்பெற்ற பிள்ளையான மார்க்கண்டேயன்தான்; பூவுலகில் - இப்பூமியில்; இறந்தானேயாமாகில் - செத்துவிட்டானானால்; பி.வே. - 'என் மதனும் பூவில்' (ச.ம.நூ.); 'என் மதலை பூவில்' (கை.பிரதி);

724. ஆதி அரனார்க்கும் - முதன்மையானவரான சிவபெருமானுக்கும்; ஆயிளைக்கும் - பார்வதிக்கும்; ஏற்குமிதோ - இது ஏற்குமா, அடுக்குமா (- ஏற்காது); பி.வே. - 'ஏற்குமதோ' (ச.ம.நூ.); 'அம்மைவுமைக்கும்' (மா.தவநிலை); பார்க்க: 'ஆதி அரன்' (வரி 1905, 1922);

725. பாதிப்பிறை அணியும் பரனே - (வரி விளக்கம் 75, 311); பிறைச்சந்திரனைச் சூடியுள்ள சிவனே; என் பாலனிடம் - எங்கள் மகனிடம்; பி.வே. - 'பாதிமதிசூடும்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'பாதி இந்து' (கை.பிரதி);

726. ஏமன் - எமன்; வராமல் - அணுகாமல், (16வது வயதில் இறப்பு சம்பவிக்காது); இறையவனே - சிவனே; காரும் - காப்பாற்றும்; என்றாள் - என அவன் தாய் முறையிட்டாள்; பி.வே. - 'எமன்' (ச.ம.நூ.); பார்க்க: 'ஏமன்' (1835);

727. காமன்தனை எரித்த - மன்மதனை நெருப்பால் சுட்டுச்சாம்பலாக்கிய; கண்ணுதலோன் - நெற்றியில் மூன்றாவதாகிய கண்ணைப்பெற்ற சிவன்; தந்தமைந்தன் - வரமளித்ததால் தோன்றிய மார்க்கண்டேயன்; பி.வே. - 'தன்மைந்தன்' பா.வே. - 'கண்ணுதலோன் தஞ்சமென்றார்' (கை.பிரதி); ஒப்பிடுக: 'காமன்றனைக் காய்ந்த கண்ணுதல்' (வரி 1723);

**காமனை எரித்த வரலாறு;**

முருகக் கடவுளின் அவதாரத்தின் பொருட்டுச் சிவபெருமானிடம் காமஉணர்வு தோன்றச்செய்யுமாறு மன்மதனைத் தேவாதி தேவர்கள் வேண்டினர். தேவரின் சாபத்துக்கும் சிவகோபத்துக்கும் அஞ்சிய மன்மதன் இறுதியில் சிவபெருமான் யோகநிலையிலிருந்தபோது, அவர்மீது தன் கணைகளை வீசினான். சிவன் தன் நெற்றிக் கண்ணை விழித்துப் பார்த்த உடனேயே மன்மதன் எரிந்து சாம்பலாயினன். அவன் மனைவி சிவனிடம் வேண்ட அவளுக்கு மட்டும் உருவத்துடன் தெரியவும் பிறர் பார்வைக்கு உருவமில்லாமல் இருக்கவும் அருள்செய்தார்;

யென்றுதாய் மூவர்களு மேங்கிக் கிலேசமுத்தார்
அன்றுமகன் தன்னை யருகளைத்துக் கட்டிநொந்தார்
தந்தை தனயனன்னை தாயினங்கள் தாதைபிதா
சிந்தை கலங்கித் திகைத்து மதிமயங்கி
கந்த மிகுந்த கருணை நெறிபாலகனுக்கு
அந்த னாளீச னருளினவா றெப்படியோ
காமனுக் கொப்பான கருணையுள்ள பாலனுக்குச்
சாமவேதக் கலையுந் தானிருக்கும் நீதிகளும்

728. என்று தாய் மூவர்களும் - மார்க்கண்டேயனின் அன்னையும் அவள் சகோதரிகளும்; ஏங்கி - வருத்தமடைந்து; கிலேசம் - கவலை; உத்தார் > உற்றார் - அடைந்தார்; பா.வே. - 'தாய் நால்வரும்', 'கவலை யுற்றார்' (ச.ம.நூ.);

729. அன்று - 16 ஆம் வயது நடக்கும் நாளில்; மகன் தன்னை - மார்க்கண்டேயனை; அருகளைத்து - அருகில், பக்கத்தில் வரச்செய்து; கட்டி - தழுவி, அணைத்து; நொந்தார் - வருந்தினார்;

730. தந்தை - மார்க்கண்டேயனின் தந்தையாகிய மிருகசிங்கன்; தனயனன்னை - மார்க்கண்டேயனின் தாய்; தாயினங்கள் - அவன் தாயாரின் உடன்பிறந்த சகோதரிகள், மற்றும் அவர்களின் தாய் தகப்பன்; தந்தை பிதா - மிருகசிங்கனின் தந்தை ஆக எல்லோரும்; பி.வே. - 'தாய் யன்னை தரும் கிளைகள்' (மா.தவநிலை); 'தந்தை யன்னை தாயின் அன்னை' (கை.பிரதி);

731. சிந்தை - உள்ளம்; கலங்கி - கலக்குமுற்று; திகைத்து - இனிச்செய்வது எது என அறியாது தடுமாறி; மதிமயங்கி - செயலிழந்து;

732. கந்தமிகுந்த - அதிகப் புகழுடைய; கருணைநெறி பாலனுக்கு - அன்புள்ள மகனுக்கு;

733. அந்தனாள் > அந்த நாள் - குழந்தைவரம் ஈய்ந்த காலத்தில்; ஈசன் - சிவன்; அருளினவாறு - அளித்தவிதம்; எப்படியோ - எத்தன் மைத்தோ?;

734. காமனுக்கு ஒப்பான - அழகுத் தோற்றத்தில் மன்மதனுக்கு இணையான; கருணையுள்ள பாலனுக்கு - அன்பும் இரக்கமும் உடைய மகனுக்கு வாய்த்துள்ள;

735. சாம வேதக்கலையும் - நான்மறைகளில் மூன்றாவதாக விளங்கும் சாமவேதத்தில் கூறப்பெறும் கலைஞானமும்; தானிருக்கும் - அதிலுள்ள; நீதிகளும் - அறக்கருத்துக்களும்; பார்க்க: 'சாமவேத எமன்' (1714); 'சாமவேதபாலன்' (1077);

கண்டு பிதாவுங் கலங்கி மயக்கமுற்று
அண்டத் திருந்த அரனே யென்பாலனுக்குக்
கொஞ்ச வயதாய்க் கொடுப்பார்களோ யீசுபரனே
கஞ்சமலர் வேதாவின் கற்பினைக ளெப்படியோ
புத்திரர்தன் வாஞ்சி பூவுலகி லென்னாளும்
சித்திரமாய் விட்டிருக்கச் சீருலகிற் கூடாது
கந்தன் தனைப்பயின்ற கண்ணுதலே தஞ்சமென்று

736. கண்டு - மகன் மார்க்கண்டேயனிடம் இடம் பெற்றிருத்தலை அறிந்து; பிதாவும் - தந்தையாகிய மிருகசிங்கமுனியும்; கலங்கி - அப்படியான மகன் இறந்துவிடுவானோ என வருந்தி; மயக்கமுற்று - பேதலித்து, மதிமயங்கி;

737. அண்டத் திருந்த அரனே - வானுலகத்தில் உறையும் சிவனே; என்பாலனுக்கு - என்மகன் மார்க்கண்டேயனுக்கு;

738. கொஞ்ச வயதாய் - குறைந்த ஆயுளை; கொடுப்பார்களோ - யாராவது இப்படி வரம் நல்குவார்களா; ஈசுபரனே - இறைவனே; பா.வே. - 'கொஞ்சவயது கொடுத்தவிதி எப்படியோ' (ச.ம.நூ.); பார்க்க: 'கொஞ்சம் வயது' (வரி 1188);

739. கஞ்சமலர் வேதாவின் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமாவின்; கற்பினைகள் - ஊழ்வினை, தலையெழுத்து; எப்படியோ - எவ்வாறானதோ; பா.வே. - 'வஞ்சனையோ வேதா வகுத்ததறியோமே' (ச.ம.நூ.);

740. புத்திரர்தன்வாஞ்சி - பிள்ளைப்பாசம், (வாஞ்சி - வாஞ்சை); பூவுலகில் - இவ் உலகத்தில்; என்னாளும் > எந்நாளும் - எக்காலத்தும் (யார்க்கும் உண்டு); பா.வே. - 'புத்திரன் தனவானாகி பூவுலகில் பாலர் எனும்' (ச.ம.நூ.); 'வாஞ்சை' (மா.தவநிலை, கை.பிரதி);

741. சித்திரமாய் - ஆனால் அதைச் சுவரில் தீட்டிய ஓவியமாகக் காணுவதுபோல; விட்டிருக்க -அமையுமாறு விதிக்க; சீருலகில் - பெருமைபெற்ற இந்தப்பூமியில்; கூடாது - முறையன்று; பா.வே. - 'சிந்தைதிடம் கூடாது' (ச.ம.நூ.); 'சிந்தைதனில்க் கூடாமல்' (மா.தவநிலை, கை.பிரதி);

742. கந்தன் தனைப்பயின்ற கண்ணுதலே - அழகனாம் குமரனை மகனாகப் பெற்றெடுத்த தந்தையாகிய நெற்றிக்கண் சிவனே; தஞ்சமென்று - அடைக்கலம் என; பா.வே. -'கிணையானமகனைக் காப்பது நீ என்றுரைத்தார்' (ச.ம.நூ.); 'கந்தன் அய்யா' (மா.தவநிலை); 'கந்தனையர் யென்மகனைக் காப்பதுநீ என்றழுதார்' (கை.பிரதி);

தந்தை மனதுநொந்து தாரணியி லூழிவிதி
எந்த வகையோ யியலறிவோ மென்றிருந்தார்
அந்த நினவெல்லா மறிந்தனன்காண் பாலகனும்
வாடி மனமுருகி மகாதேவன் கற்பினையை
நாடியே தத்துவங்கள் நன்றாக ஆராய்ந்து
சென்ற வயசதுவுஞ் செல்லாம னின்னாளில்
நின்ற வயததுவும் நீதியுட னாராய்ந்து
கேடு வருங்காலங் கிருபை யுடனறிந்து

743. தந்தை - மிருகசிங்கன்; மனதுநொந்து - உள்ளம் வருந்தி; தாரணியில் - உலகில்; ஊழி விதி > ஊழ்விதி - ஊழ்வினை, பிறவிப் பயன்; பி.வே. - 'உழிவிதி' (ச.ம.நூ.);

744. எந்தவகையோ - எப்படிப்பட்டதோ; இயலறிவோம் - அதன் தன்மைகளை நாம் அறிய முடியாது; என்றிருந்தார் - எனக்கூறிச் சமாதான மடைந்தார்;

745. அந்த நினவெல்லாம் - தாயர், தந்தையின் இப்படிப்பட்ட வருத்த எண்ணங்கள் அனைத்தையும், (நினவெல்லாம் > நினைவு எல்லாம்); பாலகனும் - மகனான மார்க்கண்டேயனும்; அறிந்தனன் - புரிந்துகொண்டான்; காண் - அசை; பி.வே. - 'அறிந்து மார்க்கண்டனும்' (ச.ம.நூ.); 'அறிந்து புகழ் பாலன்' (மா.தவநிலை, கை.பிரதி);

746. வாடி - அதன் காரணமாகத்தானும் சோர்ந்து; மனமுருகி - உள்ளம் நெகிழ்ந்து; மகாதேவன் - தேவர்களுக்கெல்லாம் பெரியவனான சிவன்; கற்பினையை - விதித்திருந்த வரத்தை; பி.வே. - 'கற்பனையில்' (ச.ம.நூ.); 'கற்பினையால்' (மா.தவநிலை);

747. நாடியே - தெரிந்து; தத்துவங்கள் - அதுதொடர்பான அனைத்துத் தத்துவ உண்மைகளையும்; நன்றாக ஆராய்ந்து - குறைவின்றிப் படித்துத் தெளிந்து;

748. சென்ற வயசதுவும் - கடந்துபோன வாழ்நாள் பற்றிய நிகழ்ச்சி களையும்; செல்லாமல் - கடக்காது நடந்து கொண்டுள்ள; இன்னாளில் > இந்நாளில் - நிகழ்கின்ற வாழ்நாளான; பி.வே. - 'அந்நாளில்' (ச.ம.நூ.); 'சென்ற வயதளவும் செல்லாமல் அயன் யெழுதும்' (மா.தவ நிலை); 'சிதறாமலென்னாளும்' (கை.பிரதி);

749. நின்றவயததுவ;ம் - 16 ஆம் வயது தொடர்பான நிகழ்ச்சிகள்பற்றி யும்; நீதியுடன் - எப்பக்கமும் சார்வின்றி, ஒருதலைப்பட்சமின்றி; ஆராய்ந்து - தெளிந்து; பி.வே. - 'நின்ற வயதளவும்' (மா.தவநிலை);

750. கேடு வருங்காலம் - சாக்காலம்; கிருபையுடன் அறிந்து - இறைவனருளால் தெரிந்துகொண்டு; பி.வே. - 'ஆராய்ந்து' (ச.ம.நூ., கை.பிரதி);

ஆடுகின்ற யீசரனார் ரவர்தனக் கேற்க
என்ன தவசுபண்ணி யீடேறப் போறோம்நாம்
கன்னல் சிலைமதனைக் கண்ணாலே தாமெரித்த
பாதிப் பிறையணிந்த பரன்டாளை நெஞ்சில்வைத்து
நீதி மிகபாலன் நிமலன்தனை நினைந்து
பைய்யரவஞ் சூடும் பரனே பராபரனே
அய்யனே யுன்பாத மணுக வகையேது

751. ஆடுகின்ற ஈசரனார் - நடராசர், நடனமாடும் சிவபெருமானார்; அவர்தனக்கேற்க - அவர் ஏற்றுக்கொள்ளக் கூடிய; பி.வே. - 'ஆடுகின்றயீ சர்க்கும் யம்மைவுமைக்கும் யேற்க' (மா.தவநிலை);

**ஆடுகின்ற ஈசன் ஆன வரலாறு:**

சிவமூர்த்தத்துள் ஆடுவதும் ஒன்று. காளியுடன் நடனமாடி, அவளை வென்றதினாலும், தம் பக்தர்களுக்குத் தரிசனம் செய்யும் பொருட்டுச் சிவன் நடனமாடியதாலும், ஆடற்கோலத்துடன் ஐந்து சபைகளிலும் காட்சி தருவதாலும் அவரை 'நடராசர்' என்பர்;

752. என்ன தபசுபண்ணி - சிவன் ஏற்றுக்கொண்டு வரமளிக்கக்கூடிய தான எப்படிப்பட்ட தவத்தை மேற்கொண்டு; ஈடேறப் போறோம் நாம் - நாம் எவ்வாறு உய்யப் போகின்றோம் (என எண்ணிக்கொண்டு); பி.வே. - 'என்ன தவசுசெய்து' (ச.ம.நூ.); 'தவம்ஞ்செய்து' (மா.தவநிலை, கை.பிரதி);

753. கன்னல்சிலை மதனை - கரும்பை வில்லாக வைத்துள்ள மன்மதனை; கண்ணாலே தாமெரித்த - தன்னைச் சிறிது சீண்டிப் பார்த்ததால் (மன்மதனையே) தன் நெற்றிக்கண் பொறியினால் சுட்டுச் சாம்பலாக்கிய (பார்க்க வரிவிளக்கம் 727);

754. பாதிப்பிறையணிந்த பரன் - (வரி விளக்கம் 75, 311) பிறைச் சந்திரனைச் சூடிய சிவனின்; தாளை - பாதங்களை; நெஞ்சில் வைத்து - வேறு சிந்தனையின்றிச் சிவசிந்தனையை மட்டுமே மனத்தில் தேங்கச் செய்து;

755. நீதி மிக பாலன் - நேர்மைமிகுந்துள்ள சிறுவனான மார்க்கண் டேயன்; நிமலன்தனை - சிவனை; நினைந்து - எண்ணி;

756. பைய்யரவம் - கோபத்தால் சீறுகின்ற பாம்பினை அடக்கி; சூடும் - அணியும்; பரனே - சிவனே; பராபரனே -சத்தி சிவனே; ஒப்பிடுக: 'பைய்நாகம்' (வரி 756);

757. அய்யனே - தலைவனே; உன்பாதம் - உன் திருத்தாளை; அணுக அடைய; வகையேது - என்ன வழி;

வஞ்சவினை தீர்க்கு மகாதேவே தஞ்சமென்று
அஞ்செழுத்தை நெஞ்சில் வைத்து ஆகமிகவுருகி
மார்க்கண்டன் தானு மகாதேவர் தாளிணையைத்
தாக்குடனே பூசைசெய்யத் தானினைந்து பாலகனும்
ஈச னடியிணையை யியல்பாக நெஞ்சில்வைத்து
வாச மலரால் மகாதேவர் தாளிணையில்

**மார்க்கண்டேயன் சிவபூசை செய்தல்**

பூசைசெய்து நின்றான் புகழ்பெரிய பாலகனும்
ஆசைமன மீச னடியிணையை நீங்காமல்

758. வஞ்சவினை - மாயமாக வரவிருக்கின்ற ஊழ்வினைகளை; தீர்க்கும் - இல்லாதாக்கும்; மகாதேவே - சிவனே; தஞ்சமென்று - நீரே அடைக்கலம் எனக்கூறி; பி.வே. - 'வஞ்சனைதீரும்' (ச.ம.நூ.); பார்க்க: 'வஞ்சவினை' (வி.46);

759. அஞ்செழுத்தை > ஐந்து எழுத்தை - நமசிவாய என்னும் ஒலிகளை; நெஞ்சில் வைத்து - நினைவிலே இருத்தி; ஆகம் - உடம்பு, தேகம்; மிகவுருகி - அதே சிந்தனையானதால் வேறெதன் நினைப்பும் இல்லாததால் மிகவும் இளைத்து; பா.வே. - 'வாகாக மனதுருகி' (கை.பிரதி);

760. மார்க்கண்டன் தானும் - சிறுவன் மார்க்கண்டேயனும்; மகா தேவர் - சிவனின்; தாளிணையை - இரு பாதங்களை; பி.வே. - 'தாளிணை யில்' (மா.தவநிலை); பார்க்க: 'மகாதேவர்' (வரி 763, 1160, 1379, 1823, 1824, 2247, 2257, 2665);

761. தாக்குடனே - உறுதியுடன்; பாலகனும் - சிறுவனும்; பூசை செய்ய - பூவாலும் நீராலும் இலையாலும் அர்ச்சனை செய்ய; தானி னைந்து - தானே முடிவு செய்து கொண்டு; பி.வே. - 'தாக்குண்டாய்' (ச.ம.நூ.); 'தார்க்குணமாம்' (மா.தவநிலை);

762. ஈசன் அடி இணையை - சிவபெருமானின் இரு பாதங்களை; இயல்பாக - முறையாக; நெஞ்சில்வைத்து - மனத்தில் இருத்தி; பார்க்க: 'ஈசனடியிணை' (வரி 765);

763. வாச மலரால் - மணமுள்ள பூக்களால்; மகாதேவர் - சிவனின்; தாளிணையில் - பாதங்களில்; பார்க்க: 'வாசமலர்' (828, வி.45);

764. புகழ்பெரிய பாலகனும் - இந்நிலவுலகு நிலைக்குமளவும் புகழ் நிலைக்கக்கூடிய சிறுவன் மார்க்கண்டேயனும்; பூசைசெய்து நின்றான் - வாசமலர்களால் இறைவனை அருச்சித்தான்;

765. ஆசைமனம் - உலக பந்தபாசங்களில் ஆசைவைத்துள்ள மனமா னது அவ்வேளையில்; ஈசனடியிணையை - இறைவனின் இரு பாதங்

ஓங்கார மான ஒளியை மனதில் வைத்து
ஆங்கார மான யரனடியே தஞ்சமென்று
செய்யு முறமை சிவபூசை செய்தவமாய்
வையகத் திலோங்கு மகாலிங்க பூசைசெய்தான்

களை; நீங்காமல் - விலக்காமல், வேறுநினைவுகளின்றி; பா.வே. - மறவாமல்' (கை.பிரதி);

766. ஓங்காரமான ஒளியை - (< ஓம் காரம் - வரி 292) ஓம் எனும் பிரணவ மந்திரம் ஆன இறைவனை, சோதியை; மனதில் வைத்து - சிந்தையில் நிலைநிறுத்தி; பி.வே. - 'ஓங்காரம் ரீங்காரம் உண்மை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

767. ஆங்காரமான அரனடியே - அபிமானம்; கருணையுள்ள சிவ பாதங்களே, தஞ்சமென்று - அடைக்கலம் என; பா.வே. - 'ஆங்காரம் வோங்காரம் யரன்னடியே' (மா.தவநிலை, கை.பிரதி); ஒப்பிடுக: 'ஆங் காரம்' (948, 954, 965, 2190);

768. செய்யுமுறமை சிவபூசை - சிவபூசையை எவ்வித ஒழுங்கோடு செய்ய வேண்டுமோ அவ்வாறுசெய்து; செய்தவமாய் - சிவபூசை ஒன்றே தவ ஒழுக்கமாய்; பி.வே. - 'சிவபூசையே தவமாய்' (மா.தவநிலை, கை.பிரதி);

769. வையகத்திலோங்கு - உலகத்திலேயே மிகவும் சிறந்ததான; மகாலிங்க பூசை - இலிங்கங்களிலேயே பெரிய இலிங்கமாகியுள்ள சிவலிங்கப்பூசை; செய்தான் - மேற்கொண்டான்; பார்க்க: 'லிங்கசிவபூ சை' (1522);

**மகாலிங்கத்தின் வரலாறு:**

சிவனின் உடலிலிருந்து வெளிப்பட்ட வியர்வை பல சிவலிங்கங்க ளாயின என்பது வரலாறு. இச் சிவலிங்கத்தின் இயல்பு பலநூல்களில் பலவாறு கூறப்பட்டுள்ளது. எதற்கும் எட்டாததாய், பேரொளி உடைய தாய், தனக்குமேல் நாயகம் இல்லாததாய், அருவமாய், நிர்மலமாய், வண்ணமற்றதாய், எல்லாம் தோன்ற - ஒடுங்க ஏதுவாய் அமைந்துள்ளதே சிவலிங்கமாகும். சத்தியானவள் பிண்டிகையாயும் சிவன் இலிங்க மாயும் அமைய அது உருவாக்கப்பட்டுள்ளது.

இந்த இலிங்கம் பலவகைப்படும். பல நூல்கள் அதன் தொகையை வெவ்வேறாகக் குறிப்பிடுகின்றன. ஸ்திரீலிங்கம், புருட லிங்கம், நபுஞ்ச கலிங்கம் என்று முதலில் மூன்றாக்கி அவற்றின் இயல்புகளைக் குறிப்பர். பஞ்சலிங்கம் என விரித்து, ஐம்பூதங்களானவற்றினடிப்படையில், பிருதி விலிங்கம் (நிலம்), அப்புலிங்கம் (நீர்), தேயுலிங்கம் (தீ), வாயுலிங்கம் (காற்று), ஆகாயலிங்கம் (விசும்பு) என்பர். மேலும், உரூபம், உணர்வு,

*இந்தச் சிவபூசை யிவன்முடிக்கும் னாளையிலே*
*அந்திமதி சூடு மரனா ருரைத்தபடி*
*ஆண்டு பதினாறு மன்னாள் நிறைந்ததினால்*
*நீண்ட யரனார் நிமலன் விதித்தபடி*

**காலதூதன் இருவரை அனுப்புதல்**

*கால னிமதூதன் கனதூதன் றன்தூதன்*
*சீல னிமதூதன் சிறப்பாய் மிகவறிந்து*
*பித்தமொடு வாதம் பெருத்த சிலேற்பனமும்*

அலி, மறைப்பு, தெளிவு (ஞானம்) எனும் அடிப்படையிலும் இலிங்கங்களைக் கூறுவர். இதில் இறுதியான - ஞானம் (தெளிவு) என்னும் (உருவத்தில் பெரிய) மகாலிங்கம் பிறப்பிறப்பற்ற நிலைக்கு ஆட்கொள்வது ஆகும். மார்க்கண்டேயன் கடவூரில் பூசை செய்தது இந்த மகாலிங்க பூசை என்க;

770. இந்தச் சிவபூசை - இந்தவிதமான மகாலிங்க பூசையை; இவன் - மார்க்கண்டேயன்; முடிக்கும் - செய்து நிறைவேற்றிய; நாளையிலே - நாளோடு;

771. அந்திமதிசூடும் அரனார் - (வரி விளக்கம் 173); உரைத்தபடி - முன்பு மிருகசிங்கருக்குப் பிள்ளைவரம் கொடுத்த நாளில் கூறியவாறு; பி.வே. - 'விதித்த விதி' (மா.தவநிலை, கை.பிரதி);

772. அன்னாள் - மார்க்கண்டேயன் சிவபூசைசெய்த அத்தினத்தில், (அன்னாள் அந்நாள்); ஆண்டு - வயது; பதினாறு நிறைந்ததினால் - 16 வயது பூர்த்தியானதால்; பி.வே. - 'முடிந்ததுவே' (ச.ம.நூ.); 'நிறைந்ததுகாண்' (மா.தவநிலை); பார்க்க: 'ஆண்டுபதினாறு' (962);

773. நீண்டயரனார் - விசும்புக்கும் பூமிக்கும் வளர்ந்த சிவபெருமான்; (இதன் கதையை முன்பு காண்க). நிமலன் - சிவன்; விதித்தபடி - நல்கியபடி, வரையறுத்தபடி;

774. காலன், இமன் தூதன் - எமனுடைய மந்திரியாகவும் அவன் ஏவலுக்குரியவனாகவுமுள்ள காலதூதன் என்பவன்; கனதூதன்றன் தூதன் - எமதூதர்களிலேயே பெரியதூதனான அக் காலதூதன் என்பவன்; (காலன், காலதூதன், இமதூதன் என்பன எமனுடைய மந்திரிக்குரிய பெயர்கள்); பார்க்க: 'இமதூதன்' (991);

775. சீலன் - பாப புண்ணியங்களையறிந்து மனிதரைப் பிரிப்பதில் நேர்மையானவன்; இமதூதன் - அவ்வாறான காலதூதன்; சிறப்பாய் மிக அறிந்து - மார்க்கண்டேயனுக்கு 16 வயது அன்றோடு முடிவதை நன்றாக, தெளிவாக அறிந்துகொண்டு;

776. பித்தமொடு - (வரி 661) மயக்கத்துடன்; வாதம் - (வரி 661) மூச்சிரைப்பு; பெருத்த சிலேற்பனமும் - (வரி 661) பெரிய சிலேட்டும

உத்தவுடல் நோய்பலவு முண்மையுட னேவிவிட்டான்
அங்கத்தி னுடனணுகி யானவியாதி யெல்லாம்
பொங்குங் கயிலைமலைப் புண்ணியனார் தன்னருளால்
780 தீர்ந்து தெளிந்து திகைத்தோடிப் போனதுவே
ஆய்ந்த வினைநோயு மகண்டோடிப் போனவகை

மும்; - இவை சாவுக்குக் காரணமான பிணிகள்; பி.வே. - 'பெருநீர் சிலேட்டுமமும்' (ச.ம.நூ., கை.பிரதி); 'பெருனீர் சிலேப்பினமும்' (மா. தவநிலை);

777. உத்த உற்ற - உரிய; உடல்நோய் பலவும் - மனித உடலில் ஏற்படும் பலவகை நோய்களையும்; உண்மையுடன் - நியாயமாக; ஏவி விட்டான் - அனுப்பினான்; பி.வே. - 'உற்ற பல நோய் எவையும் நாற்தூதன்' (ச.ம.நூ.); 'ஓர் தூதன் ஏவிவிட்டான் (மா.தவநிலை, கை. பிரதி). எமபுரத்தில், நோய்கள் (ரோகங்கள்) தங்களுக்குரிய கோர ரூபங்க ளோடு எமனுக்குமுன் கைகட்டி நிற்கும். சித்திரபுத்திரன் அரண்மனைக் குக் கிழ்ப்புறத்தில் சுரத்திற்கும், தென்பக்கத்தில் சூலையோடு வைசூரிக் கும், மேற்பக்கத்தில் காலபாசத்தோடு அஜீர்ணத்திற்கும், அருசிக்கும், வடபக்கத்தில் வயிற்று வலிக்கும், வடகிழக்கில் தலைவலிக்கும், தென்கி ழக்கில் மயக்கத்திற்கும், தென்மேற்கில் அதிசாரத்திற்கும், வடமேற்கில் சன்னிக்கும் இடங்கள் இருக்கின்றன. இந்த ரோகங்கள் எல்லாம் எமனு டைய கட்டளையை எதிர்பார்த்துக் கொண்டு அந்த அரண்மனையில் வசிக்கின்றன: (அபிதான சிந்தாமணி பக்.1353-54);

778. ஆன வியாதி எல்லாம் - என்னென்ன நோய்கள் உண்டோ அவை அனைத்தும்; அங்கத்தினுடன் அணுகி - தங்கள் தங்களுக்கேயுரிய உருவங்களுடன் உடம்பில் எந்த எந்த உறுப்புக்களில் சேர வேண்டுமோ அவற்றைச் சேர்ந்து; பா.வே. - 'அணுகும் வியாதி எல்லாம்' (கை.பிரதி); ஒப்பிடுக: 'அங்கம்' (453, 1932, வி.23);

779. பொங்கும் - நிறையும்; கயிலைமலைப் புண்ணியனார் - கைலாய ஈசனின்; தன்னருளால் - மார்க்கண்டேயன் மீதுகொண்டிருந்த கருணையால்; பி.வே. - 'கயிலை வளர்' (கை.பிரதி); ஒப்பிடுக: 'கயிலை மலையோன்' (585);

780. தீர்ந்து - நோய்கள் விலகி; தெளிந்து - உடம்பு சுகமாகி; திகைத்தோடிப் போனதுவே - இனிப் பீடிக்கமுடியாது எனக்கண்டு வியந்து எமபுரத்துக்குத் திரும்பிச் சென்றன; பா.வே. - 'தீய்ந்து கருதி' (ச.ம.நூ.); 'சிதறி தெரிந்தோடி' (மா.தவநிலை); 'தீய்ந்து எரிந்து' (கை. பிரதி);

781. ஆய்ந்த வினை நோயும் - ஆராய்ந்து தான் அனுப்பிய நோய்களும்; அகண்டோடிப் போனவகை - (அகன்றோடி < அகண்

கண்டுதான் தூதன் கடுகி மனஞ்சினந்து
திண்டுமன்று பண்ணுஞ் சிறந்தவலு தூதர்களை
வாவென்று தானழைத்தான் வந்தாரிரு தூதர்
கோவே சரணமென்று கும்பிட்டு வாய்புதைத்து
தெண்டனிட்டு வந்துநின்று செப்புவா ரோர்வசனம்
அண்டர்க்கரசே தூதர்க் கான பிலவானே
எல்லாவுயிர்க்கு மியல்வுநெறி வல்லவனே
வல்லார்க்கு நல்ல மறலி நமன்தூதன்

டோடி) மார்க்கண்டேயனைவிட்டு அகன்று பயந்து மீண்டும் எமபுரம் மீண்ட செயல்; பி.வே. - 'நோவு' (ச.ம.நூ.);

782. தூதன் கண்டுதான் - காலனுடைய முதல் தூதுவன் அறிந்து; கடுகிமனஞ்சினந்து - மிகுந்த கோபமுற்று; பா.வே. - 'கருணை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

783. திண்டு மன்று < திண்டுமுண்டு (< திட்டுமுட்டு) ஏட்டிக்குப் போட்டி, குதர்க்கம்; பண்ணும் - புரியும்; சிறந்த வலு தூதர்களை - தன்னுடைய ஏவலில் சிறந்துள்ள வலிமையான தூதுவர்களை; பா.வே. - 'உருக்கணங்கள்' (ச.ம.நூ.); 'கணங்கள்' (கை.பிரதி);

784. வாவென்று தானழைத்தான் - உடனே வருமாறு பணித்தான்; வந்தாரிருதூதர் - காலதூதனின் ஆட்கள் இருவர் வந்தனர்; பா.வே. - 'உருக்கணங்கள்' (ச.ம.நூ.); 'இருகெணங்கள்' (மா.தவநிலை, கை.பிரதி);

785. கோவே - தலைவனே; சரணமென்று - வணக்கம் எனப்பணிந்து; கும்பிட்டு - இரு கரம்குவித்து; வாய்புதைத்து - தாம் எதுவும் பேசாது வாயை மூடி, அதன்மீது கரம்பொத்தி; பா.வே. - 'கோன் அடிதொழுது' (ச.ம.நூ.); 'கோவென்றுவோடி' (மா.தவநிலை, கை.பிரதி);

786. வந்து நின்று - காலதூதனின் எதிரில் சென்று நின்றுகொண்டு; தெண்டனிட்டு - (வரி 144) கிடந்து வணங்கி; ஓர் வசனம் செப்புவார் - பின்வருமாறு கூறுவர்;

787. அண்டர்க்கரசே - பூமியினர்க்குத் தலைவனே; தூதர்க்கான பிலவானே - பூமியிலுள்ளோர் உயிரைப் பற்றிவரக் கூடிய தூதுவர்களின் தலைவனாம் பலம் பொருந்திய காலதூதனே (பிலவான் < பலவான், வரி 555);

788. எல்லாவுயிர்க்கும் - ஓரறிவு முதல் ஆறறிவு வரையுள்ள அனைத்து உயிரினங்களுக்கும்; இயல்வுநெறி - அவரவர்களின் பாப - புண்ணியங்களுக்கேற்ற நேர்மையான விதிகளை உடைய; வல்லவனே - வலிமையுள்ள காலதூதனே;

789. வல்லார்க்கு - சிறந்தவர்களுக்கு; நல்லமறலி நமன் தூதன் - வீரமுள்ள எமவானுக்கு முதன்மைத் தூதனாக விளங்கும் குணவானே;

திங்க ளணியுஞ் சிவனா ரருளோதான்
எங்கள் தனையழைத்த தின்னாளுரையு மென்றார்
என்றுதான் தூத ரியம்ப வலுதூதன்
அன்று யவர்களுடன் அன்(ம்)பாகவே யுரைப்பான்
பாயிர லோகம் பரப்பு விலாசமதில்
ஆயிரத் தெட்டண்ட மனுவெனுமோ ரண்டமுண்டு
சித்தண்டந் தன்னிலே சிறப்பாகவே பாலன்
பத்து மொருவாறு பருவி யவனிருந்தான்

*பார்க்க: 'நம(ன்)தூதன்' (888, 901, 922); 'மறலி' (839, 1026, 1059, 1497, 1742, 1743, 1949);*

*790. திங்களணியும் சிவனார் - சந்திரனைச் சடையில் தரித்துள்ள சிவபெருமானின்; அருளோதான் - அருள் எங்களுக்குக்கிடைத்துள்ள காரணத்தால்தான்; பார்க்க: 'திங்களணியும் சிவனார்' (863, 1101, 1808, 1950, 2400, 2493);*

*791. இன்னாள் - (< இந்நாள்) - இன்று; எங்கள்தனை அழைத்தது - எங்களை ஏவல் செய்வதற்காக நீர் கூப்பிட்டது; உரையுமென்றார் - எதற்கு என்று கூறுக என்றனர்; பா.வே. - 'நின்னாளுரையும்' (ச.ம.நூ.);*

*792. என்றுதான் தூதர் இயம்ப - தன் ஏவலர் இவ்வாறு காரணம் கேட்கவும்; வலுதூதன் - எமனின் சிறந்த தூதனான காலதூதன்; பார்க்க: 'வலுதூதன்' (783, 2111);*

*793. அன்று அவர்களுடன் - அப்போது தன் தூதுவர் இருவரிடமும்; அன்பாகவே - நட்பாகவே; உரைப்பான் - பின்வருமாறு கூறுவான்;*

*794. பாயிரலோகம் பரப்பு - உலகத்தொடக்க முதலுள்ள விரிந்த; விலாசமதில் < விசாலமதில் - எல்லையில்லாத அண்ட கோளத்தில்; பார்க்க: 'பாயிரலோகம்' (1843, 2131); 'விலாசம்' (2137);*

*795. ஆயிரத்தெட்டு அண்டம் - (வரி விளக்கம் 15) 1008 கோள்களுள்; மனு எனும் - மனிதர்கள் வாழக்கூடிய; ஓரண்டமுண்டு - பூமி என்று ஒன்று உள்ளது;*

*796. சித்தண்டம் தன்னிலே - பூமியிலுள்ள ஒரு சிறிய பகுதியில், (சித்தண்டம் < சிற்றண்டம் - சிறிய அண்டம் - பாரதகண்டம்); சிறப்பாகவே பாலன் - சிறுவனான மார்க்கண்டன் நல்லபடியாக;*

*797. பத்தும்ஒரு ஆறு - பதினாறு வயது; பருவி - வளர்ந்து; அவனிருந்தான் - மார்க்கண்டேயன் அமைந்துள்ளான்; பி.வே. - 'வயது ஆண்டு உள்ளபடி' (ச.ம.நூ., கை.பிரதி); 'அளித்தது உள்ளபடி' (மா.தவ நிலை);*

யிருந்த வயசுசரி யின்னுமரை நாழிகையில்
திருந்த யவனுயிரைச் சீக்கரமாய்த் தான்பிடித்துக்
கொண்டிங்கே வாருமென்று கூறி யனுப்பிவிட்டான்
சண்டனுட தூதன் றானேவ தூதர்களை
மார்க்கண்டன் தன்னை வளைந்து பிடிக்கவென்று
சாலமிகு தூதர் தான்வருமுன்னே பாலன்

**சிவபூசைக்குரிய மலர்கள்**

வால மதிசூடி வகுத்தவிதி னாளையென்ன
விடியயொரு சாம விரைய யெழுந்திருந்து

798. இருந்த வயசு சரி - அவனுக்குரிய ஆயுள் முடிந்தது (வயசு < வயது); இன்னும் - இப்போதிலிருந்து; அரை நாழிகையில் - அரைநாழிகைநேரத்தில் (12 நிமிடத்தில்);

799. திருந்த அவன் உயிரை - அச்சிறுவனுடைய உயிர் இங்கு வந்து சேருமாறு, (திருந்த < திரிந்த - அலைந்த் என்றும் கொள்ளலாம்); சீக்கரமாய் < சீக்கிரமாய் - விரைவாய்; தான்பிடித்து - நீங்கள் இருவரும் சென்று பற்றி; பா.வே. - 'இருந்து' (ச.ம.நூ.); 'திருந்து' (மா.தவநிலை);

800. கொண்டிங்கே வாருமென்று - இங்கு எடுத்துவருக என; கூறி அனுப்பிவிட்டான் - சொல்லி அவர்களைப் போகவிட்டான்;

801. சண்டனுட தூதன் - எமனுடைய முதற்தூதுவனான காலதூதன், (சண்டனு < சண்டனுடைய); தூதர்களைத் தானேவ - தன் ஏவலர்களை அவன் அனுப்ப; பா.வே. - 'சண்டனுடன் தூதுவனார்தான் மகிழ்ந்து மேகினர்' (ச.ம.நூ.); 'தானேவ கணங்கள்' (கை.பிரதி); பார்க்க: 'சண்டன்' (வரி 995, 1134, 1318, 1336, 1350, 1420, 1471, வி.75). ;

802. மார்க்கண்டன் தன்னை - சிறுவன் மார்க்கண்டேயனை வளைந்து பிடிக்கவென்று - எங்கிருந்தாலும் சுற்றி வளைத்துக்கொண்டு பற்றவென;

803. சாலமிகு தூதர் - (சாலம் < ஜாலம்) மாயா ஜாலம், மாய வித்தைகள் மிகுந்துள்ள காலதூதனின் ஏவலர்கள்; தான் வருமுன்னே - வந்து சேருமுன்பாக; பாலன் - சிறுவன் மார்க்கண்டேயன்;

804. வாலமதிசூடி - (வரி12) பிறைச்சந்திரனைச் சடையில் தரித்தவ ரான சிவன்; வகுத்தவிதி - கொடுத்த ஆயுள் காலமுடிவு; நாளையென்ன - நாளையதினம் என்று தெரிந்து கொண்டு;

805. விடியயொரு சாமம் - விடிவதற்கு ஒரு சாமப் பொழுதுக்கு முன், அதாவது விடிவதற்கு ஏழரை நாழிகை அல்லது மூன்று மணி நேரத்துக்கு முன், எனவே காலை மூன்று மணி என்க; விரையஎழுந்திருந்து

கடுகி நீர்த்தண்ணீரில் கலைதோய்த்துத் தான்மூழ்கி
பொற்குடலை தன்னைப் புனலில் மிகத்தோய்த்து
நற்(ப்)பூ வெடுப்பதற்கு நாறுமலர்த் தோட்டம்வந்து
மயிர்க் கொன்னைப் பூவும் வாகுபவளமல்லி
வெயில்க்கு விரியும் விரிவுள்ள தாமரையும்
பரிமளப் பச்சையுடன் பாங்கான வெள்ளதலி

- மூன்று மணிக்கு, சீக்கிரம் கண்விழித்துப் படுக்கையை விட்டு எழும்பி;

*806.* கடுகி - விரைந்து சென்று; நீர்த் தண்ணீரில் - புனலில்; கலைதோய்த்து - உடுத்திருந்த ஆடையைத் துவைத்து; தான் மூழ்கி - முங்கிக்குளித்து; நீராடுமுறையைப் பின்பற்றி நீராடி என்க; பி.வே. - 'நீர்தன்னில்' (ச.ம.நூ., மா. தவநிலை, கை.பிரதி);

*807.* பொற்குடலை தன்னை - பொன்தகடுகளாலாகிய பூக்கூடையை (தென்னை ஓலை இலக்குகளால் வேய்ந்த குடுவை என்றும் கொள்ள லாம்); புனலில் மிகத் தோய்த்து - தண்ணீரில் நன்றாக மூழ்குமாறு அமுக்கி, அலசி, கழுவி; பி.வே. 'பூங்கூடை' (மா.தவநிலை);

*808.* நற்ப்பூ - நல்ல நறுமணம் தருவனவும் சிவபூசைக்குரியனவுமான மலர்களை; எடுப்பதற்கு - கொய்வதற்கு; நாறு மலர்த்தோட்டம் - அதிகாலை வேளையில் பூக்கள் மலர்ந்தால் மணம் வீசக் கூடிய நந்தவனம், பூந்தோட்டம்; வந்து - வந்தடைந்து; பா.வே. - 'தரு மலர்த்தோட்டம்' (ச.ம.நூ.); 'நல்ல மலரின் தோட்டம்' (மா.தவநிலை). ;

*809.* மயிர்க் கொன்னைப் பூவும் < (மயிர்க் கொன்றை) - இறைவன் விரும்பிச் சூடும் சரக் கொன்றை மலர்களும்; வாகு பவளமல்லி - வாகான பவளம் போன்ற குண்டு மல்லிகைப் பூக்களும்; பி.வே. - 'மைக் கொன்றை' (கை.பிரதி); பார்க்க: 'கொன்றை' (181, 338, 403, 1426, 1520, 2599);

*810.* வெயில்க்கு - சூரியனுக்கு; விரியும் - மலரும்; விரிவுள்ள தாமரையும் - பெரிய அகன்ற கமலங்களும், (தாமரை மொட்டுகள் என்க);

*811.* பரிமளப் பச்சையுடன் - மிகுந்த நறுமணமுடைய பச்சை நிறமுடைய மருக்கொழுந்து (அளத்துப் பச்சை) எனும் கொழுந்தும்; பாங்கான - சிவபூசைக்குத் தகுதியான; வெள்ளதலி < வெள்ளரலி < வெள்ளலரி - வெள்ளை நிறமுடைய அலரிப்பூக்களும், (அலரிச் செடியினைக் கோவில் நந்தவனத்தில் வளர்த்து வருதலைக் காணலாம். அலரிப் பூக்கள் இறைவனுக்கு விரும்பிச் சாற்றும் பூக்களாகும்); பி.வே. - 'அரளி' (ச.ம.நூ.); 'பரிமளவ சீதம்' (மா.தவநிலை);

சரிகமழும் வாசமுல்லை சத்திசயில் செண்பகமும்
குங்குமப் பூவுங் குதையமணி வாசினையும்
செங்கழநீர் வில்பம்(ஞ்) செவ்வரலி நந்திமலர்
முல்லையுடன் பிச்சி முழுநீலஞ் சூதகமும்
அல்ல லகத்து மருள் .. திப் பூவுடனே
பாரிச புற்பம் பாங்குடனே வெள்ளெருக்கும்
சாரிசற் சோகமெனுஞ் சந்திர காவிமலர்

812. சரிகமழும் வாசமுல்லை - கொத்தாக மணம் வீசும் முல்லைப் பூக்களும்; சத்திசயில் - மணமுள்ள வேர் கொண்ட செண்பகமும் < சண்பகமும் - சண்பகப் பூக்களும்; பி.வே. - 'சத்திசயிலம்' (ச.ம.நூ.); 'சரிகளப வாசமுல்லை' (கை.பிரதி.);

813. குங்குமப்பூவும் - மணம் வீசும் மரவம் பூக்களும்; குதையமணி வாசினையும் - மணி போன்று திரண்டு, கொக்கியுடன் கூடிய (வாசினை < வாசனை) நறுமணப் பூவும் (-இதன் பெயர் தெரிந்திலது);

814. செங்கழநீர் < செங்கழுநீர் - சிவந்து, மணம் வீசும் செங்குவளைப் பூக்களும்; வில்பம் < வில்வம் - சிவனுக்குரிய வில்வ மரத்து (கூவிளை) இலைகளும்; செவ்வரலி < செவ்வரளி < செவ்வலரி - சிவப்பான அரளிப் பூக்களும்; நந்திமலர் - அழகான நந்தியாவட்டப் பூக்களும்;

815. முல்லையுடன் - வாசமுள்ள பிற முல்லை மலர்களும்; பிச்சி - பிச்சிப் பூக்களும்; முழுநீல - முழுதும் நீல நிறமுடைய, சூதகம் < சூதம் - இள மாந்தளிர்களும்; பா.வே.- 'முல்லையுடன் பிடலை' (ச.ம.நூ);

816. அல்லல் - துன்பம்; அகத்தும் < அகற்றும் - நீக்கும்; அருள்(சோ)திப்பூவுடனே - அருட்சோதி எனப்படும் சாதிலிங்கப் பூக்களும்; பா.வே. - 'அல்லி' (ச.ம.நூ);

817. பாரிச புற்பம் - பாரிசாத மலர்கள் (புற்பம் < புட்பம் < புஷ்பம்) (பவள மல்லிகை எனவும் கூறலாம்); பாங்குடனே - (வரி 811) தகுதியுடைய; வெள்ளெருக்கு - சிவன் விரும்பிச் சூடும் எருக்கம் பூக்களும் (''வெள்ளெருக்கஞ் சடை முடியான்''—இராமாயணம்); பி.வே. - 'புட்பம்' (ச.ம.நூ.); பா.வே. - 'பசுந்தாரு' (ச.ம.நூ.); 'பாரிசாதம்' (மா.தவநிலை, கை.பிரதி);

818. சாரிசற்சோகம் - பகல் செல்லும் பொழுதில்வாடும்; சந்திரகாவி மலர் - சந்திர காந்திப் பூ (சிவப்பு நிறமுடையது) சந்திரனைக் கண்டவுடன் மலர்ந்து இரவெல்லாம் மணம் வீசக்கூடியது; பா.வே. - 'தாருஷா அசோகம்' (ச.ம.நூ.) 'தாரிசாத ரோசா' (மா.தவநிலை); 'தாரில் அசோகு' (கை.பிரதி);

வெட்டிலா மிச்சி மிகுந்த மதிக்கொழுந்து
கெட்டியா யங்கே கெவுனமலர்ச் சாதிகளும்
விள்ளும் முகிழ்ப்பச்சை விரியுமிதட்ப் பவளம்
உள்ளுருக்க மாக உண்டான பொற்பமெல்லாம்
கண்டு பறித்துக் கதிரோன் னெழுவதுமுன்
கொண்டுவந்து சன்னதியில் குணமுடனே மாலைகட்டி
காராவின் பாலைக் கறந்துயரன் மேல்விடுத்து

819. வெட்டிலாமிச்சி < வெட்டி + விலாமிச்சி - நறுமணமுள்ள வெட்டிவேர்; மிகுந்த - வாசம் மிக நிறைந்த; மதிக் கொழுந்து < மருக்கொழுந்து (பார்க்க வரி 811);

820. கெட்டியாயங்கே - திடமாய் அங்குள்ள; கெவுன < கவன - காட்டு; மலர்ச் சாதிகளும் - பல வகையான (காட்டுப்) பூக்களும்; பா.வே. - 'கெட்டிக் கெளிதம் கெவுளி மலர்ச் சாந்திகம்' (ச.ம.நூ.); 'கெட்டிக்கக்கேணி' (மா.தவநிலை);

821. விள்ளும் - விரியும் பருவத்திலுள்ள; முகிழ்ப்பச்சை - இளம் அரும்பு (மொட்டு)களும்; விரியும் - பாதி மூடியும் பாதி விரிந்தும் கொண்டிருக்கிற; இதட்ப்பவளம் < இதழ்ப் பவளம் - பவளம் போன்ற மலர் இதழ்களும்; பா.வே.- 'மகிழ் பச்சை விரிபவள பஞ்சிமலர்' (ச.ம.நூ.); பி.வே. - 'இதழ் பவளம்' (கை.பிரதி);

822. உள்ளுருக்கமாக உண்டான - தெய்வத்துக் கென்றே உள்ளன்புடன் சாற்றக்கூடியதாக வளர்ந்துள்ள; பொற்பம் < புட்பம் < புஷ்பம் - மலர்கள்; எல்லாம் - அனைத்தும்; பா.வே. - 'உள்ளமுகிழ்ச் செந்தூரம் உண்டான' (ச.ம.நூ.); பி.வே. - 'உள்ளமதில் சிந்தித்துண்டான' (கை. பிரதி);

823. கதிரோன் எழுவதுமுன் - சூரியன் உதயமாவதற்கு முன்பே, விடிவதற்கு முன்; கண்டு பறித்து - மேலேயுள்ள மலர்களை அரிந்து, இருட்டினூடே பழக்கமாகிய தன் கண்களால் பார்த்து அவற்றைக் கொய்து;

824. கொண்டுவந்து - அப்பூக்களைப் பூக்கூடையில் இட்டு எடுத்து வந்து; சன்னதியில் < - மூலத்தானத்தின் நேர் எதிரேயுள்ள இடத்தில்; குணமுடனே - நன்றாக; மாலைகட்டி - பூமாலை(ஆரம்)களைத் தொடுத்து;

825. காராவின் பாலை - பசும்பாலை; கறந்து; அரன்மேல் விடுத்து - சிவலிங்கத்தின் மீது பாலாபிஷேகம் செய்து; பி.வே. - 'காராவின் பால் தேன் கலந்து... சொரிந்து' (ச.ம.நூ.); 'கரைக்கண்டர் மேல் விடுத்து' (மா.தவநிலை);

*சீராகத் தேனைச் சிவன்பேரிலே விடுத்து*
*திருமஞ்சன நீரைச் சிவன்பேரில் கோதிவிட்டு*
*மருவுகமழ் வாச மலர்க்காவி சந்தனமும்*
*வாசநிறை கய்த்தூரி வளமைச் சவாதுபுழுகு*
*தேசம் புகழ்பாலன் சிறப்பாக யீசுபரர்க்கு*
*போதத் திமிர்ந்ததின்மேல் பூவெடுத்துத் தான்சாத்தி*
*நீதத்திற் கற்பூரம் நீண்ட சுடரொளியும்*
*ஆலத்தி தூப மரனார் மனமகிழ்ந்து*

826. தேனை; *சீராக* - மொத்தமாக விடாமல், நிறுத்தி, மெதுவாக, இலிங்கம் முழுவதுமாகப் பரவும் படி; *சிவன்பேரிலே விடுத்து* - *சிவலிங்கத்தின் மீது ஊற்றி (தேனாபிஷேகம் என்க);* பா.வே. - *'நன்னீர் சிவன்மேல் நீராட்டி' (ச.ம.நூ.); 'சிவன் சிரசின்மேலே' (மா.தவநிலை);*

827. திருமஞ்சன நீரை - *அபிஷேக தீர்த்தத்தை;* சிவன் பேரிலே - சிவலிங்கத்தின் மேல்; கோதிவிட்டு - குடத்துடன் 'குபுக்'கென விடாமல், சிறுபாத்திரத்தால் மொண்டு இலிங்கத்தின் மீதுள்ள பாலும் தேனும் கழுவிச் செல்லுமாறு *ஊற்றி;* பா.வே. - 'திருமஞ்சனத்தை திமிர்ந்து மகிழ்ந்து சொரிந்து' *(ச.ம.நூ.);*

828. மருவுகமழ் வாசமலர் - எல்லா மலர்களும் சேர்ந்ததால் வாசனை (மணம்) நெருங்கி *வீசக்கூடிய* மாலைகளையும்; *காவிசந்தனமும்* - *அரைத்த சந்தனக்குழம்பும்;* பி.வே. - 'மருவுமகிழ்' *(ச.ம.நூ.);*

829. வாசநிறை - மணம் நிறைந்துள்ள; *கய்த்தூரி < கத்தூரி < கஸ்தூரி* - *கஸ்தூரி மானிடமிருந்து சேர்த்த வாசனைப் பொருள்; வளமை* - செழிப்பாகத்திரண்ட; *சவ்வாது* புனுகு < *சவாது < சவாதி* - ஒருவகைக் காட்டுப் பூனையிடமிருந்து பெறும் மணமுள்ள புனுகும்;

830. தேசம் புகழ் பாலன் - சிறு வயதிலேயே நாடு முழுதும் *பாராட்டக் கூடிய மார்க்கண்டேயன்; ஈசுபரர்க்கு* - இறைவனுக்கு; சிறப்பாக - சிறந்த முறையில்; பி.வே. - 'தேசுபுகழ்' *(ச.ம.நூ.);*

831. போதத் திமிர்ந்த அதின்மேல் - நெடிய, உயர்ந்துள்ள மகாலிங் கத்தின் மீது; பூவெடுத்து - பூமாலைகளைக் கையால் தூக்கி; *தான் சாத்தி < தான் சாற்றி* - தானே அதற்குச் சூடி; பா.வே. - 'போற்றித் தீர்ந்ததன் மேல்' *(ச.ம.நூ.);* பி.வே. - 'போத நிமிர்ந்தவர்மேல்' *(கை.பிரதி);*

832. நீதத்தில் - முறையாக; கற்பூரம் - சூடம் ஏற்றி; நீண்ட சுடரொளியும் - பெரிதாகச் சுடர் எரியுமாறு செய்து;

833. ஆலத்தி தூபம் - கற்பூர (ஆலத்தி < ) ஆலாத்தி செய்து சுடரொளி ஏற்றியதால்; அரனார் மனமகிழ்ந்து - சிவனார் ஆனந்தமுற்றார்; பா.வே. - 'அரனும் உமையாள் மகிழ்' *(ச.ம.நூ.);* பி.வே. - 'ஆலாத்தி கற்பூரம்

ஞாலத்தி லோங்குமைந்த னாதனருள் வாழ்த்தி

விருத்தம்

உடல்தனி லஞ்சு பூத
முருவி மருளே யாமே
தடமிகு பாரிற் பூதந்
தகமை சீரஞ்ச தாகும்
திடமிகு யருளா லிங்கஞ்
சிறந்தவை பலவு மாட்டும்
வடமணி யீசர் பாத
மைந்தனுள் நெஞ்சில் வைத்தான் *(28)*

பூவினை(த்) தோன்றத் தோன்றப்
பொங்கிடும் புவனம் னூதாய்
நாவினிற் கற்கக் கற்க
நலமிகு விளையி னார்சொல்

யழகொளிபோல் நல்தீபம்' (மா.தவநிலை, கை.பிரதி); பார்க்க: 'ஆலத்தி' *(2388)*;

*834.* ஞாலத்திலோங்கும் மைந்தன் - உலகில் புகழ் வளரக் கூடிய சிறுவனான மார்க்கண்டேயன்; நாதன் அருள் வாழ்த்தி - இறைவன் புகழைப் பாடினரன்; பா.வே. - 'ஞாலத்தில் அஞ்சு நளின உபசாரமதாய்' (ச.ம.நூ.) 'ஞானத்தின் பூசை' (மா.தவநிலை);

*வி.28.* உடல் தனில் - மனித உடம்பில்; அஞ்சு பூதம் - ஐம்பூதங்கள், பஞ்சபூதங்கள் - இங்கு ஐந்து இந்திரியங்களான (ஐம்புலன்கள்) மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவற்றையோ ஐம்மலங்களான ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பனவற்றையோ கொள்ளலாம்; உருவி-நுழைந்து; மருளேயாமே - (ஐம்பூதம் உடம்பில் ஊடுருவியதால்) மயக்கமாம்; தடமிகுபாரில் - விசாலமான, விரிந்த இப் பூமியில்; தகைமைசீர் பூதம் அஞ்ச தாகும் - பெருமை பொருந்திய நிலம், நீர், காற்று, தீ, விசும்பு எனும் ஐம்பூதங்களும் ஆகியுள்ளன; திடமிகு அருளால் - உறுதி நிறைந்த கருணையினால்; லிங்கம் - சிவலிங்கங்கள்; பலவுமாட்டும் - பலவகைக்கப்படும்; வடமணியீசர் - ஆலமரத்தடியின் கீழ் அமர்ந்து உபதேசிக்கும் இறைவன், பாதம் - திருவடிகளை; மைந்தன் - சிறுவனான மார்க்கண்டேயன்; நெஞ்சில் உள் வைத்தான் - தன் நெஞ்சில் நன்றாக நிறுத்திவைத்தான்; பார்க்க: 'அஞ்சு (பஞ்ச) பூதம்' (வரி *122, 1872,* வி.*53*);

*வி.29.* பூவினை(த்)தோன்றத் தோன்ற - பூமியில் புதிது புதிதாக வினைகள் உண்டாக உண்டாக; புவனம்-உலகம்; நூதாய்-நூதனமாய்;

கோவினைக் காணக் காணக்
குடிவலு மெமையுங் காற்கும்
தேவினைத் தேடத் தேடச்
சிவனவ னாகு வாரே (29)

**தூதர் வரலும் வடவனல் துரத்துதலும்**

**நடை**

835 சூன்ரவென்றான் தந்தைதன்னைத் தொழுதுநின்றான் நிற்கையிலே
காரையொத்த மேனி கனதூதர் பாரில்வந்து

பொங்கிடும்-பெருகிடும்; நாவினில் கற்கக்கற்க-நல்ல செய்திகளை நாவால் படிக்கப் படிக்க; நலமிகு விளையின் ஆர்சொல் - வாக்கில் கூர்மை ஏற்படும் (''செந்தமிழும் நாப்பழக்கம்''); கோவினைக் காணக் காண - அரசனைப் பார்க்கப் பார்க்க; குடிவலு-மக்கள் வாழ்க்கை வன்மையாகும்; எமையும் காற்கும் - எம்மையும் காப்பான் (காற்கும் < காக்கும்); தேவினை - இறைவனை; தேடத்தேட - நாட நாட; சிவன் அவன் ஆகுவாரே - அவ்வாறு தேடுகின்றவர்கள் சிவனாகவே ஆகிவிடுவர்;

835. சூரைவென்றான் தந்தை தன்னை - சூரன் என்பவனை வென்றவனான முருகனின் தந்தையாகிய சிவபெருமானை; தொழுது நின்றான் - மார்க்கண்டேயன் துதித்துநின்றான்; நிற்கையிலே - அவ்வாறு போற்றி நிற்கின்றபோது; பா.வே. — 'சூரரைவென்ற'(கை.பிரதி; முருகன் சூரனை வென்றது:

சூர் எனும் பெயருடன் விளங்கிய இவ்வசுரன் சிவ பெருமானிடம் வரம்பெற்றவன். தேவர்களின் வலுவடக்கியவன்; அதனால், முருகப் பெருமான் திருச்செந்தூரில் படைவீடமைத்து இவனிடம் பொருதார். இறுதியில் மாமரமாகக் கடலில் நின்றவனை அவர் வேலாயுதத்தால் இருகூறுகளாக்கி, ஒன்றைச் சேவற்கொடியாகவும் மற்றொன்றை மயில் வாகனமாகவும் கொண்டார்; இவ்வாறு புராணங்களும், காவியங்களும் பிற தமிழ்நூல்களும் உரைக்கும்.

சிறந்த சிவபக்தனான சூரன், சூர-பதுமன் என்று 'பதுமன்' என்பான் பெயருடன் அழைக்கப்படுகிறான். தாமிரபரணி சங்கமத்தில், பழையகாயலுக்குக்கிழக்கே சூரன்கோட்டை எனும் பகுதி ஒன்று உள்ளது. ஆங்குக் கோட்டை மதிலுக்குரிய பெரிய பெரிய கற்கள் சிதைந்து காணப்படுகின்றன. முருகன் திருச்செந்தூரில் தங்கிப்போரிட்டதும், சூரன் கடலில் ஒளிந்ததும் இப்பகுதியில் நடந்த வரலாற்றுப் பழங்கதை போல் தோன்றுகின்றன.

836. காரையொத்த மேனி - இருண்ட மழைமேகத்தைப்போல் கரிய நிறமுடைய; கனதூதர் - காலதூதனின் ஏவலர்; பாரில் வந்து - பூமியில்

தேடியே யோடிச் சிறந்தஅரன்(ஞ்) சாலைபுக்கி
நாடிச் சிவபூசை நளினமுடன் பண்ணுகையில்
மார்க்கண்டன் காணான் மறலிவிட்ட தூதர்களை
தாக்குடனே தூதர் தானங்கிரு பேரும்
வேச மாறாடியவர் வேத்துருவந் தானாகி
வாசமணி யீசுபரனார் வாசல்தனில் புகுந்தார்
பாங்கா யணுப்போல் பதுங்கி யொளித்திருந்து

சேர்ந்து; பா.வே. — 'காலக்கின்னரரது' (ச.ம.நூ.); 'கணகெணங்கள் நாதர்' (மா.தவநிலை). காண்க: 'கார்' (1295, 1537, 1856, வி.4, வி.41, வி.60);

837. தேடியே - மார்க்கண்டனைத் தேடி; ஓடி - விரைந்து திரிந்து; சிறந்த அரன்(ஞ்)சாலை புக்கி - சிறந்து விளங்கும் சிவாலயத்துள் (மார்க்கண்டன் நிற்பது அறிந்து அங்குப்) புகுந்தனர்;

838. நாடிச்சிவபூசை - (வரி 768) விருப்பமுடன் சிவனை வழிபடு தலை; நளினமுடன் பண்ணுகையில் - (வரி 487) இறைவனுக்கு எவ்விதக் குறைவும் ஏற்படாதவாறு ஆழ்ந்து மிகக் கவனமுடன் பூசை செய்கின்ற போது;

839. மார்க்கண்டன்; மறலிவிட்ட தூதர்களை - காலதூதன் அனுப்பிய ஏவலர்களை; காணான் - அறியான்; பி.வே. - 'மார்க்கண்டன் யவரைக் காணான்'(மா. தவநிலை); காண்க: 'மறலி' (வரி 789, 1026, 1497, 1059, 1742, 1743, வி.71);

840. தாக்குடனே - திடமாக; தூதர் தானங்கிருபேரும் - காலதூதனின் ஏவலர் இருவரும்;

841. வேசமாறாடி - உருவம்மாறி; அவர் வேத்துருவந்தானாகி(வேற் றுருவம்) - காலதூதனின் தூதுவர் தம் உருவை ஒளித்து வேறு உருவெ டுத்து; பி.வே. - 'வேஷமாறாகி'(ச.ம.நூ.); 'வேசம்மது மாறியவர்கள்' (மா. தவநிலை); பா.வே. - 'வேகமாய் எமதூதர்' (கை. பிரதி);

842. வாசம் அணி ஈசுபரனார் - வாசமுள்ள மலர்களாலும், மணம் வீசும் நறுமணப் பொருள்களாலும் பூசிக்கப்பெற்றதால் அவ்வாசனை யெல்லாம் பெற்றுள்ள இறைவன்; வாசல்தனில் - கோவில் வாசல் வழியாக; புகுந்தார் - கோவிலுக்குள் நுழைந்தனர்; காண்க:'வாசமணி ஈசர்' (1391); 'வாசல்' (293, 849, 2212, வி.4);

843. பாங்காய் - பக்குவமாய்; அணுப்போல் - கண்ணுக்குத்தெரியாத சிறிய அணுவைப்போல; பதுங்கி - மறைவிடத்தில்(நந்திக்குப் பின்னால்) நின்று; ஒளித்திருந்து - மறைந்திருந்து; பார்க்க: 'அணு'(13, 795);

ஓங்குபுகழ்ப் பூசைசெய்து உத்த மார்க்கண்டனுந்தான்
படிவிட்டுக் கீழிறங்கிப் பாங்காய் வருகையிலே
அடிதப்பிக் கீழ்விழுவான் யா(ன்)ங்கொல்வோ
மென்றுயவர்
அய்யமறத் தூத ரானா ரெதுப்பாகச்
செய்யநந்திப் பக்கம்(ஞ்) சிறப்பா யொளித்திருந்து
அப்போது நந்தி யானவாச லூடேதான்
இப்போது யெண்ணாம லிவர்களிங்கே வந்ததென்ன

*844. உத்த < உற்ற - உரிய; மார்க்கண்டனுந்தான்; ஓங்குபுகழ்ப்பூசை செய்து - (வரி 43, 761) உலகிலேயே புகழோங்கி விளங்கும் மகாலிங்கப் பூசையைச் செய்து முடித்துக் கொண்டு;*

*845. படிவிட்டுக் கீழிறங்கி - மூலதானத்திலிருந்து வெளியில் இறங்கும் படிகளில் வரும்போது; பாங்காய் - வசதியாக; வருகையிலே - வரும்போது; காண்க; 'படி' (1150);*

*846. அடிதப்பிக் கீழ்விழுவான் - மார்க்கண்டன் காலடி தடுமாறிக் கீழே விழுந்துவிடுவான்; யா(ன்)ங்கொல்வோ; பா.வே. - 'கீழேவிழுக யான் கொல்லவேணுமென்று' (ச.ம.நூ.); 'நாம் கொல்ல வேணும் மென்று' (மா. தவநிலை);*

*847. அய்யமறத்தூதர் ஆனார் - தூதுவர்களிருவரும் சந்தேகமின்றித் தெளிவடைந்தார்(அய்யம் < ஐயம்); எதுப்பாக - கிட்டத்தில், அருகில் அல்லது எதிரில், முன்பில் (எதுப்பாக < எதிர்ப்பாக); பா.வே. - 'அய்யமார் தூதர் அரனார்' (கை. பிரதி); 'எதிர்ப்பாக' (ச.ம.நூ.); காண்க: 'அய்யமற'(1273);*

*848. செய்ய - செப்பமாக அமைந்திருந்த; நந்திப்பக்கம் - சிவவாகன மான நந்தீசர்(விடை) அருகில்; சிறப்பாய் ஒளித்திருந்து - யாரும் காணாதபடி மறைந்திருந்தனர்; பா.வே. - 'நந்திபீடம்' (ச.ம.நூ.,மா.தவ நிலை); பி.வே. - 'நந்திபக்கலிலே'(கை. பிரதி);*

*849. அப்போது - அவ்வேளையில்; நந்தி(வரி 303); ஆன வாசலூடே தான் - ஆகியுள்ள வாசல் வழியே; பா.வே. - 'நந்தியரன் வாகனகாளை' (மா. தவநிலை, கை. பிரதி);*

*850. இப்போது இவர்கள் - இவ்வேளையில் இவ்வாறு உருமாறி வந்தவர்கள்; எண்ணாமல் - சிவாலயம் என்றுகூட எண்ணிப் பார்க்காமல்; இங்கே - இவ்விடத்துக்கு; வந்ததென்ன - வந்தது என்ன காரணமாயிருக் கும்; பா.வே. - 'யேமகெணம்யிங்குவருமோயெனவே'(மா. தவநிலை);*

யென்றுசொல்லி நந்தி யியல்வாய் மனஞ்சினந்து
நின்ற வடவனலை நீங்காமல் வாருமென்று
மன்றிவரைக் கொன்றுவிடு மென்றனன்காண் வேதநந்தி
அன்று வடவனலு மாங்காரமா[ய்]ச் சீறி

855 கொன்றுவிட வேணுமென்று கோவித் தெழுந்ததுவே
சென்றுயிரு தூதுவரைத் தீயே வளைந்துசுத்தி
பத்தி யெரிக்கப் பயந்தழன்று தூதுவர்கள்
சுத்தி வளைந்திதுகாண் தொல்புவி யெல்லாம்புகழ

851. என்று சொல்லி நந்தி - எனத் தமக்குள் நந்தி சொல்லிக்கொண்டு; இயல்வாய் மனஞ்சினந்து - இயல்பாகக் கோபமடைந்து;

852. நின்ற வடவனலை - கடலின் வடக்கே தங்கியுள்ள தீயை; நீங்காமல் - எதையும் விட்டுவிடாமல், முழுதாக; வாருமென்று - வருக என்று; காண்க:'வடவனல்' (854, 860, 912, 914, 920, 929, 944, 946);

வடவனலின் வரலாறு: பகன் என்பவன் செய்ததவத்தில் தோன்றிய தீயை அவன் மூதாதையர் விருப்பப்படிக் கடலில் விட அது பெண் குதிரை உருவத்தில் கடலின் வடக்கே தங்கியதால் அதை வடவை எனவும், வடவாக்கினி எனவும், வடவைத்தீ எனவும், ஊழியின் முடிவில் எரிக்கும் ஊழித்தீ எனவும் கூறுவர்.

853. மன்றிவரை - சிவாலயத்துள் வந்துள்ள இருவரையும்: வேதநந்தி - மறை உணர்ந்த நந்தீசர்; கொன்றுவிடும் என்றனன் காண் - எரித்து விடுக என்று கூறியஅளவில்;

854. அன்று - அப்பொழுது; வடவனலும் - வடவைத் தீயும்; ஆங்காரமா(ய்)ச் சீறி - கோபத்துடன் குமுறி; காண்க: 'ஆங்காரம்' (767, 948, 954, 965, 2190);

855. கொன்றுவிடவேணுமென்று - அவர்களை எரித்து விட எண்ணி; (வேணும் < வேண்டும்); கோவித் தெழுந்ததுவே - சினந்து, தான் நின்ற நிலையிலிருந்து மேலெழுந்தது;

856. சென்று - கடவூர்ச் சிவாலயத்துள் சென்று; இருதூதுவரை - காலதூதனின் ஏவலரிருவரை; தீயே - வடவனல்; வளைந்து - வட்டமாக மாறி; சுத்தி < சுற்றி - வளைந்து கொண்டு;

857. பத்தி < பற்றி - தீப்பிடித்து; எரிக்க - சுட; பயந்து அழன்று தூதுவர்கள் - காலதூதனின் ஏவலர், தம்மை எரிக்க வந்த தீயைக் கண்டு வெருவி; அழன்று - அது சுட்டதால் துன்பப்பட்டு;

858. சுத்தி < சுற்றி; வளைந்திது < வளைந்தது; காண் - அசைநிலை; தொல்புவியெல்லாம் புகழ - பழமையான இவ்வுலகத்திலுள்ளோர் பாராட்டும் படியாக;

அஞ்சியே தூதர் யபையமிட்டுத் தானோடி
கொஞ்சியே யஞ்சிக் குறுகி வடகனலும்
நாங்களிங்கே வாறதில்லை நந்திரு வாணை
எங்கள்தனை விட்டுவிடீர் ரென்றே யபையமிட்டு
திங்க ளணியும்(ஞ்) சிவனே சரணமென்று
பங்கமுடன் பட்டுழன்று பாரவலு தூதர்
கனல்பொறுக்க மாட்டாமல் காலனுட தூதர்

*859.* தூதுவர் அஞ்சியே - தூதரிருவரும் பயந்து; அபையமிட்டு - அபயவார்த்தைகளால் ஓலமிட்டு (அபையம் < அபயம்); தானோடி - தம்மை அது எரிக்காத படி இங்குமங்கும் தாவி; பா.வே. - 'அபயமிட்டுத் தாங்கரிது' (ச.ம.நூ.); 'தான்னலறி' (மா. தவநிலை); காண்க:'அபையம்', 'அபயம்'(862, 1143, 1330, 2286);

*860.* கொஞ்சி - தம்மை எரிக்காதிருக்குமாறு அத்தீயிடம் (கொஞ்சி < கெஞ்சி) இரங்கிவேண்டி; அஞ்சி - அவ்வாறு வேண்டியும் அது எரிக்க வந்ததை அறிந்து மீண்டும் பயந்து; வடகனலும் குறுகி - வடவைத்தீயும் தான் வளைந்துள்ள வட்டத்தைச் சற்று நெருக்கி இடைவெளியைக் குறுக்கியது;

*861.* நாங்கள் - தூதர்களாகிய நாங்களிருவரும்; இங்கே - மீண்டும் இவ்வாலயத்துக்கு; வாறதில்ல < வருவது இல்லை - இனிவர மாட்டோம்; நந்திருவாணை < நந்தி திரு ஆணை - நந்தி ஆனவர்மீது உண்மையாக; பி.வே. - 'வரத்தில்லை' (ச.ம.நூ.); பா.வே. - 'இனிவாற தில்லை'(மா. தவநிலை, கை. பிரதி);

*862.* எங்கள் தனை விட்டுவிடீர் - எங்களிருவரையும் விட்டுவிடுங்கள்; என்றே அபையமிட்டு - என அபயவார்த்தைகள் எழுப்பி;பி.வே. - 'விட்டுவிடும்'(மா. தவநிலை); 'விட்டுவிடு' (கை. பிரதி);

*863.* திங்களணியும் சிவனே - (வரி 790) பிறைச்சந்திரனைச் சடையில் தரித்துள்ள ஈசனே; சரணம் என்று - உன் அடைக்கலம் என; பி.வே. - 'திங்கள் அணிந்த'(ச.ம.நூ.,மா. தவநிலை, கை. பிரதி); காண்க: 'சரணம்' (வி.66);

*864.* பாரவலுதூதர் - வலிமை நிறைந்த தூதுவர்கள்; பங்கமுடன் பட்டுளன்று - தாம் வந்த காரியத்தில் அடைந்த தோல்வியுடன், துன்பமும் அனுபவித்து;

*865.* காலனுடதூதர் - காலதூதனின் இருதூதுவரும் (காலனுட < காலனுடைய); கனல் பொறுக்க மாட்டாமல் - தங்களை எரிக்கவந்த அனலின் கொடுமையைத் தாங்கமுடியாத அவர்கள்; பா.வே. - 'காலகெ ணநாதர்' (மா. தவநிலை);

புனலாச் சமுத்திரத்தில் போய்விழுந்தா ரம்மானை
விழுந்து மிகப்பயந்து மெய்கலங்கித் தூதுவர்கள்
எழுந்து வலுயெமபுர மேகியே தூதனடி
வந்து தெண்டனிட்டு மகாதூத ரேதுரைப்பார்
அந்தகனே நாங்கள்சென்றோ மங்கே அனலாலே
அன்று புரமெரித்தாப்போ லானகன லெழும்பி

866. புனலாச்சமுத்திரத்தில் - எங்கும் நீர்பரந்துள்ள கடலில்; போய் விழுந்தார் - இருவரும் ஓடிச் சென்று முங்கினர்; அம்மானை - (வரி விளக்கம் 708); பா.வே. - 'யேமனிடம்' (கை. பிரதி);

867. விழுந்து - அவ்வாறு கடலில் மூழ்கி; மிகப்பயந்து - அதிகமாக அஞ்சி; தூதுவர்கள் மெய்கலங்கி - ஏவலர்கள் தங்கள் உடல் பதறி;

868. எழுந்து - கடலிலிருந்து வெளிவந்து; வலு எமபுரம் ஏகியே - பெரிய(வரி 562) எமபுரத்துக்குச் சென்று; தூதனடி - தங்களை அனுப்பிய காலதூதனின் பாதங்களில்;

869. வந்து தெண்டனிட்டு - (பாதங்களை) அடைந்து, கிடந்து வணங்கி; மகாதூதர் ஏதுரைப்பார் - காலதூதனின் பெரிய தூதுவர்கள் பின்வருமாறு கூறுவர்; பா.வே. - 'வருந்தியவர் ஏதுரைப்பார்' (ச.ம. நூ.,மா. தவநிலை, கை. பிரதி);

870. அந்தகனே - உயிர்களை அழிப்பதற்குரியவனே; நாங்கள் அங்கே சென்றோம் - நாங்களிருவரும் மார்க்கண்டேயன் இருக்குமிடம் அடைந்தோம்; அனலாலே - தீயாலே; பா.வே. - 'அணுகிவுயிர் வாங்கும் முன்னே' (மா. தவநிலை); 'அணுகிவுயிர் கொல்லு முன்னே' (கை. பிரதி); காண்க: 'அந்தகன்' (2280, 2292, 2310);

871. அன்று - முன்னொருகாலத்தில்; புரம் - முப்புரம்; எரித்தாப் போல் < எரித்தாற்போல் - சுட்டாற்போல்; ஆனகனல் எழும்பி - அப்படியான கொடுந்தீ வந்து; காண்க: 'திரிபுரம்'(946);

**திரிபுரம் எரித்தல் வரலாறு:**

தங்கம், வெள்ளி, இரும்புகளால் கோட்டையிட்டு முப்புராதியர் என்போர் நந்தியின் உபதேசத்தால் சிவலிங்கங்களை வழிபட்டு வந்தனர். பின்பு அவர்கள் தேவர்களை வருத்திச் சிவ லிங்கங்களைக் கடலில் எறிந்து சிவ பங்கமும் செய்ததால் அவர்களுக்கும் தேவர்கள் உள்ளிட்ட கடவுளர்க்கும் போர் ஏற்பட்டது. அவ்வேளையில், சிவனுடைய தலைமையில், தேவர்கள் பலவாறாகப் படைகளாகவும், விஷ்ணு அம்பாகவும் ஆக, விஷ்ணுவின் கர்வத்தை உணர்ந்து ஈசன் சிரித்த சிரிப்பிலேயே முப்புரம் தீப்பற்றி அதில் அசுரர் எல்லாம் மாய்ந்தனர். உலகளந்தாளின் வேண்டுதலால், முப்புராதியர்க்கு மட்டும் சிவன் மீண்டும் உயிர் நல்கி

கொன்றுவிடு முன்னேதான் கொத்தவனே
யிங்குவந்தோம்
என்றுரைத்தார் தூத ரியல்தூதன் தான்வெகுண்டு
நன்றடா பாலனவன் நம்மில் பெரியவனோ
இன்றிங்கே சென்று யிமைப்பளவிலே யவனை
கொன்று விடுவேனெனவே கோவித் தெழுந்திருந்தான்

**கிங்கிலியர் வரலும் அனலுக்குப் பயந்து ஓடுதலும்**

அப்போது கிங்கிலிவர் ராயிரம் பேர்தானெழுந்து
இப்போது பாலன் னெதிரோ யுமக்கரசே

*ளார். (பார்க்க: முத்தாரம்மன்கதை, முப்புராதி அம்மன்கதை வில்லுப் பாட்டு).*

*872. கொத்தவனே < கொற்றவனே - தலைவனே!; கொன்றுவிடு முன்னேதான் - அத்தீ எங்களிருவரையும் சுட்டெரிப்பதற்கு முன்பே; இங்குவந்தோம் - எமபுரத்துக்கு ஓடோடி வந்துவிட்டோம்;*

*873. என்றுரைத்தார் தூதர் - எனத் தூதர்கள் கூறினர்; இயல்தூதன் தான் வெகுண்டு - (கூறவும்) ஏவுதலுக்குரிய காலதூதன் மிகக் கோப முற்று; பா.வே. - 'என்று கிண்ணாதர் இயம்ப'(ச.ம.நூ.); 'என்றிவர்கள்' (மா. தவநிலை); 'என்றுமே தூதர்' (கை. பிரதி);*

*874. நன்றடா - மிக நன்று, அடா!; பாலன் அவன் - சிறுவனான மார்க்கணடேயன்; நம்மில் - யமபுரத்திலுள்ள நம்மைவிட; பெரியவனோ - வலியவனோ; பி.வே. - 'பாலன் நம்மில்'(கை. பிரதி);*

*875. இன்றிங்கே சென்று - இப்பொழுதே அங்கு ஏகி; இமைப்பள விலே - இமை நொடியிலே; அவனை - அச்சிறுவனான மார்க்கண்டே யனை; பா.வே. - 'இன்றங்கேனான் போய்யியல் சுடரையும் பாலகனை யும்' (மா. தவநிலை); 'இன்றங்கே நான் போய் யெழிலான பாலகனை' (கை. பிரதி); காண்க: 'இமைப்பளவு' (883);*

*876. கொன்றுவிடுவேன் எனவே - (அவன் உயிரை) வதைப்பேன் என்று; கோவித்து - வெகுண்டு (கோவித்து< கோபித்து); எழுந்திருந்தான் - புறப்பட்டான்; பா.வே. - 'எழுந்தான் தூதன்' (மா. தவநிலை); 'எழுந்தேயமன்' (கை. பிரதி);காண்க; 'கோவித்தல் (973);*

*877. அப்போது - அவ்வேளையில்; கிங்கிலிவர் - கிங்கிலியர்கள்; ஆயிரம் பேர்; தானெழுந்து - புறப்படத் தயாராக முன்வந்து; காண்க: 'கிங்கிலியர்',கிங்கிலிவர்'(977, 982, 985, 991, 993, 1008, 1011, 1022, 2139, 2167);*

*878. அரசே - தலைவனே; உமக்கு - உங்களுக்கு; இப்போது பாலன் எதிரோ - காலதுதனாகிய உனக்குச் சிறுவன் நிகரோ;*

நாராயண னாரோ நான்முகனோ தேவர்களோ
சூரன்(ங்) கிளையறுத்த சுப்பிரமணிய னல்ல
அறுபத்து நாற்(க்)கோடி யானயிருஷி யல்ல
சிறுபயலுக் காகத் தேவரீர் போவார்களோ
நாங்க ளிமைப்பளவில் நாழிகையில் சென்றேகி
பாங்காய்க் கொடுவாறோம் பாரீரென யெழுந்தார்
அடிதொழுத தூதுவரை யான புகழ்தூதன்
கடிகி மார்(க்)கண்டனையுங் கால்நாழிகை தனிலே
கொன்று குலைப்படுத்திக் கொண்டிங்கே
வாருமென்றான்

879. நாராயணனாரோ - திருமாலோ; நான் முகனோ - பிரமனோ; தேவர்களோ - வானோர்களோ; (இவர்கள் யாருமல்ல); காண்க: 'நாராய ணனார்' (1704, 1836); 'நான்முகன்' (344, 1244, 1764, வி.37);

880. சூரன்(ங்)கிளையறுத்த - (வரி விளக்கம் 835) சூரனென்பானின் சுற்றம் முழுதும் கொன்றவன் (அல்லது மாமரமாய் நின்ற சூரனை இரண்டாக அறுத்தவன்); சுப்பிரமணியனல்ல - முருகன் அல்ல; பா.வே. - 'வேறாயுஞ் சூரனுடல் வென்ற முருக்கேஷ்பரனோ' (மா. தவநிலை); 'வீரான சூரர் தமை வென்ற வேலாயுதரோ' (கை. பிரதி); காண்க: 'சூரன்(ங்)கிளை' (55);

881. அறுபத்து நாற்(க்)கோடி ஆன - 64 கோடி அளவுள்ள; இரிஷியல்ல< இருடி அல்ல - முனிவர்களில்லை;

882. சிறு பயலுக்காக - சிறுவனாக உள்ளவனைக் கொல்ல; தேவரீர் போவார்களோ - காலதூதனாகிய பெரியவன் நீ போகலாமா?;

883. நாங்கள் - கிங்கிலியவராகிய உம் ஏவலர்கள்; இமைப்பளவில் - (வரி 875) நொடியில்; நாழிகையில் - ஒரு நாழிகை நேரத்துக்குள்; சென்றேகி - சென்றடைந்து; பி.வே.- 'இமைப் பொழுதில்' (ச.ம.நூ.,கை. பிரதி); 'சென்றழைத்து' (மா.தவநிலை); காண்க: 'நாழிகை'(265);

884. பாங்காய்க் கொடுவாறோம் - பக்குவமாய் அவன் உயிரைக் கொண்டு வருகின்றோம்; பாரீர் - பார்க்கப் போகிறீர்; என எழுந்தார் - என்றுகூறிப் புறப்பட்டனர்;

885. அடிதொழுத தூதுவரை - இவ்வாறுரைத்துத் தன்னைத் தெண்ட னிட்டோரை; ஆன புகழ் தூதன் - தூதர்களுக்குத் தலைவன் ஆகிய அவன்;

886. கடிகி< கடுகி - விரைந்து; மார்க்கண்டனையும் - சிறுவனையும்; கால் நாழிகைதனிலே - 6 நிமிட நேரத்தில்; காண்க: 'கடிகி< 'கடுகி' (வி.32, 570);

887. கொன்று - அவன் உயிரைப் போக்கி; குலைப்படுத்தி - (நம்

நன்றென்றே தூதர் நமதூதனைத் தொழுது
தண்டுந் தடியெடுத்துத் தானடந்தா ராயிரம்பேர்
விண்டு யிடியோசையுடன் வீசக் கயறெடுத்தார்
பாலன் தனக்காய்ப் படையெடுத்தார் தூதுவர்கள்
சீலமுடன் பூவுலகில் சீக்கரமா யோடிவந்து
அந்திமதி சூடு மரனடியில் பாலகனும்
சிந்தைவைத்து ஒன்றாய்த் தியானித்து நிற்கையிலே
கிட்டினார் கிட்டவர ஒட்டா வடகனலும்

ஏவலர்களைத் தண்டித்தலுக்குக் காரணமாயிருந்த அவனை) வதைத்து; கொண்டிங்கே வாருமென்றான் - இங்கு எடுத்து வருக எனக் கூறினான்; காண்க: 'குலை' < கொலை (1006,1118, 2256, 2304);

888. நன்றென்றே தூதர் - நல்லது எனக் கிங்கிலியர்; நமதூதனைத் தொழுது - காலதூதுவனை வணங்கி; காண்க: 'நமதூதன்', 'நமன்தூதன்' (789, 901,. 922);

889. தண்டும் தடி எடுத்து - தண்டாயுதங்களையும் கோல்களையும் சுமந்தவாறு; தானடந்தார் ஆயிரம் பேர் - ஆயிரம் கிங்கிலியர்தாமும் நடந்து புறப்பட்டனர்; காண்க: 'தண்டு' (1045, 2027);

890. விண்டு இடியோசையுடன் - காற்று இடி முழக்கத்துடன்; வீசக்கயறெடுத்து, வீசுவதற்குப் பாசக் கயிறும் தூக்கிக் கொண்டு (கயறு < கயிறு); பி.வே.- 'விண்டுயிடிபோல் வெகுண்டு' (மா. தவநிலை, கை. பிரதி); காண்க: 'இடி' (896, 942, 976, 1735, 1917, வி.31, வி.37, வி.40);

891. பாலன் தனக்காய் - மார்க்கண்டேயனைப் பற்றுவதற்காக; தூதுவர்கள் படையெடுத்தார் - போருக்குச் செல்வது போல் கிங்கிலியர் சென்றனர்;

892. சீலமுடன் - நன்றாக; பூவுலகில் - பூமியில்; சீக்கரமாய்; < சீக்கிரமாய்; ஓடி வந்து - விரைந்து;

893. அந்தி மதி சூடு மரனடியில் - (வரி 173) பிறைசூடியான சிவனுறையும் லிங்கத்தின் கீழே; பாலகனும் - மார்க்கண்டனும்;

894. சிந்தை வைத்து ஒன்றாய் - சிவத்தில் மனத்தை ஒன்றச்செய்து; தியானித்து நிற்கையிலே - இறைவனைத் துதித்து நிற்கும் போது;

895. கிட்டினார் - மார்க்கண்டேயனைப் பற்ற நெருங்கினர்; கிட்டவர ஒட்டா வடகனலும் - வடவாக்கினியும் அக்கிங்கிலியரை மார்க்கண்டேயன் அருகில் நெருங்க விடாதபடி; பா. வே.-'கிட்டகெடவுட(னே)' (ச.ம.நூ., மா.தவநிலை); 'கிட்ட நெருங்கியதும்' (கை. பிரதி);

முட்டியே சுத்தி முழங்குமிடி யெனவே
கனல்வேகங் கண்டார் கனதூதன்றன் தூதர்
அனல்சூழ்ந்து வாறதுதா னரன்(ஞ்)சியலே யாகுமென்று
நம்மாலே பாலகனை நன்றாய்ப் பிடிக்கரிது
900 சும்மாதான் தூதருடன் சொன்னோம் பலவாற்றை
அம்மா யிவனைவெல்ல யாராலுங் கூடாது
நம்மால் முடியாது நமதூதன் கொண்டாலும்

896. முட்டியே சுத்தி - தீயானது அவர்கள் மேல் மோதியும், அவர்களைச்சூழ்ந்து; முழங்கும் இடியெனவே - வேகமாகத் தீ வீசி அதனால் இடிபோன்று டமார் டமார் என ஓசை செய்தும் அமைந்தது; பா.வே. - 'முழங்கி வளைத்ததுவே' (ச.ம.நூ.,மா.தவநிலை,கை.பிரதி);

897. கனதூதன்றன் தூதர் - கனத்த காலதூதனின் ஏவலரான கிங்கிலியர்; கலைவேகங் கண்டார் - தீயின் எழுச்சியினைக் தெரிந்துகொண்டனர்; பா.வே. - 'கண்டு கலங்கியே கிங்கிலிவர்' (மா. தவநிலை); 'கண்டு கனதூதர் கிங்கிலியர்' (கை. பிரதி);

898. அனல் சூழ்ந்து வாறதுதான் - இவ்வாறு வடவைத்தீ நெருங்க வருவது; அரன் - இறைவன்; சியலேயாகுமென்று - ஆணையிட்டதே என (சியல்-செயல்); பி.வே. - 'அனல் வேகம் சூழ்ந்ததுதான் யரன் செயலேயாகும் மென்று' (மா. தவநிலை, கை. பிரதி); காண்க: '(அரன்)(ஞ்)சியல்' (258, 968);

899. நம்மாலே பாலகனை - மார்க்கண்டேயனைக் கிங்கிலியரான நம்மால்; நன்றாய்ப் பிடிக்கரிது - உண்மையாகவே பற்ற இயலாது; பா.வே. - 'நாடிப்பிடிப்பதற்கு' (ச.ம.நூ.); பி.வே. - 'பாலனையும்' (மா. தவநிலை, கை. பிரதி);

900. தூதருடன் பலவாற்றை (பல வார்த்தை) - காலதூதன் திருப்தி அடையுமாறு பலவாறு வீரமொழிகளை; சும்மாதான் சொன்னோம் - வெறுமனவே கூறினோம்; பி.வே. - 'தூதனிடம்' (ச.ம.நூ.); 'பலவார்த்தை' (மா. தவநிலை);

901. அம்மா - அம்மாடி; இவனை வெல்ல - இச்சிறுவனைப் பிடித்துச் செல்ல; யாராலுங்கூடாது - எவராலும் முடியாது; பா.வே. - 'வெல்லப் புகவும் கூடாது' (ச.ம.நூ); 'யாராலும் முற்றாது' (மா.தவநிலை);

902. நம்மால் முடியாது; நமதூதன் - (வரி 888) காலதூதன்; கொண்டாலும் - கொன்றாலும் - மார்க்கண்டேயனைப் பற்றிக் கொண்டு வராததற்காக நம்மைக் கொன்றாலும்;

எம்மால் முடியாதென் றேகினார் தூதுவர்கள்
சென்றுதான் தூதுவர்கள் செய்தியிவர்க் கேதுரைப்பார்
மன்றுலகில் கண்டறியோ மார்க்கண்ட னுக்காக
அன்றவொட்டு தில்லை யனல்தான் மிகத்திரண்டு
பண்டுபரன் சுட்டகனல் பாத்ததின்றன் வலுவோ
என்றுயிவர் சொல்ல யெரியிலெண்ணை விட்டாப்போல்
மன்றுலகில் பாலன் மகாபிலமோ நம்மிலவன்

903. எம்மால் - எங்களால்; முடியாது என்று - இயலாது என; தூதுவர்கள் ஏகினார் - கிங்கிலியர் திரும்பிச் சென்றனர்; பி.வே. - 'கிங்கிரர்' (ச.ம.நூ.); 'கிங்கிலி (வ)யர்' (மா.தவநிலை, கை.பிரதி);

904. தூதுவர்கள் சென்றுதான் - கிங்கிலியர் எமபுரமடைந்து; செய்தி யிவர்க்கேதுரைப்பார் - கால தூதனிடம் நடந்த செய்திகளைப் பின்வரு மாறு கூறினர்;

905. மன்றுலகில் - (வரி 374, 601) விளங்கும் உலகங்களில்; கண்டறியோம் - இதுவரை பார்த்ததில்லை; மார்க்கண்டனுக்காக - சிறுவனுக்காக;

906. அனல்தான் - வடவைத் தீயானது; மிகத்திரண்டு - மிகுதியாகப் பரவி; அன்றவொட்டுதில்லை < அண்ட வொட்டுதில்லை - பக்கத்தில் நெருங்க விடுவதில்லை; (ஒட்டுதில்லை < ஒட்டவிடுவது இல்லை);

907. பண்டு - முன்பு; பரன் - சிவன்; சுட்டகனல் - திரிபுரங்களை எரித்த தீயை; பாத்ததின்றன் < பார்த்ததை விட; வலுவோ - மிகப் பெரியதாகும் போலும்?; (திரிபுரமெரித்தலின் வரலாறு வரி 871-ல் பார்க்க);

908. என்றுயிவர் சொல்ல - எனக் கிங்கிலியர் கூற; எரியில் எண்ணை விட்டாப் போல் - தீ எரிந்து கொண்டிருக்கும் போது மேலும் அது பிரகாசமாக எரிய எண்ணெய் விடுதல் போல - இது உவமை (மார்க்கண் டேயனைப் பற்றவியலாது காலதூதனின் தூதர்கள் வந்ததால் உண்டான கோபத்திலிருக்கும்போது கிங்கிலியரும் அவ்வாறு வந்து சொன்னதால் அவன் கோபம் மேலும் அதிகமாயிற்று); 'எரிபால் எண்ணையிட்டாற் போல்' (கை.பிரதி); காண்க: 'எரி' (1487, 2275, 2330);

909. மண்ணுலகில் - மனிதர்கள் வாழும் பூமியில்; பாலன் - சிறுவன்; நம்மிலவன் - எமபுரத்திலுள்ள நம்மைக் காட்டிலும் அச்சிறுவன்; மகாபிலமோ - பெரிய பலசாலியோ; காண்க: 'மண்ணுலகு' (431, 1429, 1758, 2273); 'பிலம்' (வி.8, வி.31);

சூலத்தினாலே துணிப்பே னிவனை யின்று

## ஏவல் நமன் தூதன் வரலும் தோற்றோடிப் போய்ப் பட்டம் இழத்தலும்

ஞாலத்தில் பாலனிடம் நாடியிமதூதன் வந்தான்
வந்தவனைக் கண்டு வடவனலுந் தான்(ஞ்)சீறி
அந்தரமும் பாரு மதிர நடந்ததுவே
வந்து வளைந்த வடவனலையே தூதன்
சிந்த வடித்துத் திரண்டு பொடியாக்கிவிட்டான்
அந்த நிமிச மனலும் பயந்தொடுங்கி
எந்தனையே காரு மியல்நந்தி யென்றதுவே

*910.* சூலத்தினாலே - திரிசூலக்கருவியால்; இவனை இன்று - மார்க்கண்டேயனை இன்றே; துணிப்பேன் - குத்திக் கொல்லுவேன்; காண்க: 'சூலம்' *(1046, 1913, வி.44)*;

*911.* ஞாலத்தில் - (வரி *834*) நிலவுலகத்தில்; பாலனிடம் நாடி - மார்க்கண்டேயனைத் தேடி; யிமதூதன் வந்தான் - (வரி *775*) காலதூதன் கோபத்துடன் வந்து சேர்ந்தான்;

*912.* வந்தவனைக் கண்டு - அவ்வாறு வந்த காலதூதனைப் பார்த்து; வடவனலுந்தான்(ஞ்)சீறி - (வரி *852*) வடவைத்தீயானது வெகுண்டு; பி.வே. - 'வடகனலும்' (ச.ம.நூ.);

*913.* அந்தரமும் பாரும் - மேலுலகும் பூவுலகும்; அதிர - அசையுமாறு; நடந்ததுவே - தீயானது பரவி வந்தது; பா.வே. - 'அதிர்ந்து நடுங்கியதுவே' (ச.ம.நூ.); 'நடந்து வந்ததுவே' (மா.தவநிலை); காண்க: 'அந்தரம்' *(1271, 1302, 1556, 2398, வி.66)*;

*914.* தூதன் - காலதூதனானவன்; வந்து வளைந்த - தன்னைச் சுற்றி வளைந்து கொண்ட; வடவனலையே - வடவைத் தீயை; பி.வே. - 'வடகனலையே' (ச.ம.நூ.); 'வந்து வளைந்தோங்கும் வடகனலை யெமதூதன்' (மா.தவநிலை); 'வடகனலை தூதன் கண்டு' (கை.பிரதி);

*915.* சிந்த அடித்து - சிதறடித்து; திரண்டு பொடியாக்கிவிட்டான் - சிறு சிறு உருண்டைகளாக்கிப் பொடித்துவிட்டான்; பா.வே. - 'சிதற நொறுக்கிவிட்டான்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*916.* அந்த நிமிசம் - (வரி *234*) அவ்வேளையில்; அனலும் - தீயும்; பயந்து ஒடுங்கி - பயப்பட்டு, தன்னைச் சுருக்கிக் கொண்டு;

*917.* இயல்நந்தி - விளங்கக்கூடிய நந்தீசரே; எந்தனையே காரும் - என்னைக் காப்பாற்றும் (காரும் - பார்க்க வரி விளக்கம் *597*); என்றதுவே - என விண்ணப்பமிட்டது; பி.வே. - 'என்றன் தனை காத்தருளும்' (கை.பிரதி);

அன்னேர நந்தி யரனார் விழிக்கனலை
இன்னேர மேகுமென யேவயது மூண்டதுவே
முப்புரத்தை[ச்] சுத்தி முடுகும் வடவனல்போல்
செப்பமுட னீசர் திருக்கண் பொறியெழும்பி
மெத்த வனலாய் விரட்ட நமன்தூதன்
உத்த நமனிடத்தி லோடியஞ்சிக் கால்விழுந்து
தங்களப மீறுந் தருமா யிமதூதா
பொங்குமொரு பாலனுக்குப் பூதலத்தில் விட்டவிதி

918. அன்னேரம் - அந்நேரத்தில்; அரனார் விழிக்கனலை - அரனாரின் நெற்றித்தீயை; நந்தி - நந்தீசர்; பா.வே. - 'அரன்விழியின் அக்கினியை' (மா. தவநிலை, கை.பிரதி);

919. இன்னேரம் ஏகும் எனயேவ - இப்போது நீ சென்று காலதூதனை விரட்டுவாய் என அனுப்ப; அது மூண்டதுவே - அச்சோதி பெருந்தீயாக ஆனது; பி.வே. - 'அனல் மூண்டதுவே' (மா.தவநிலை);

920. முப்புரத்தை - (திரிபுரம் - பார்க்க வரி 871) திரிபுராதியரின் தங்கம், வெள்ளி, இரும்புக் கோட்டைகளை; சுத்தி < சுற்றி - வளைந்து; முடுகும் - நெருங்கும்; வடவனல் போல் - (வரி 852) வடவாக்கினி போல; பி.வே. - 'வடகனல்' (ச.ம.நூ); பா.வே. - 'முடுக்கும் யரன் விழியனல் போல்' (மா.தவநிலை);

921. செப்பமுடன் - நேராக; ஈசர் திருக்கண் பொறி - சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து தீப்பொறி; எழும்பி - புறப்பட்டு; பா.வே. - 'சத்துருக்கன் பொறி எழும்பி' (ச.ம.நூ.); பி.வே. - 'எழும்ப' (மா.தவநிலை, கை.பிரதி);

922. மெத்த அனலாய் விரட்ட - மிகுதியான அனலாகி ஓடச் செய்ய; நமன் தூதன் - ஏவல் நமனின் தூதன்;

923. உத்த <உற்ற - உரிய; நமனிடத்தில் - ஏவல் நமனிடம்; ஓடி அஞ்சி - அனலுக்குப் பயந்து விரைந்து சென்று;. கால் விழுந்து - பாதங்களில் வீழ்ந்து; பா.வே. - 'உற்ற யமன்பால்' (கை.பிரதி);

924. தங்குகளபம் மீறும் - வலிமையுடைய யானையையும் மிஞ்சும் வலிமை படைத்த; தருமா - ஏவல் நமனே; இமதூதா - எமனின் தூதுவனே; பி.வே. - 'தங்கு புகழோனே தருமா எமதருமா' (ச.ம.நூ., மா.தவநிலை); காண்க: 'களபம்' (2394, 2453);

925. ஒரு பாலனுக்கு - ஒரு சிறுவனுக்கு; பூதலத்தில் - பூமியில்; விட்டவிதி - ஏற்படுத்திய ஆயுள்; பொங்கும் - நிறையும்; பா.வே. பூவுலகில் யிட்ட விதி' (மா.தவநிலை);

சென்று கையாறப்பிடிக்கச் சென்றேன் கனலெழும்பி
இன்றுயெனைத் துரத்த ஏகியதால் லிங்குவந்தேன்
என்னால் புவியி லினிப்பிறந்தார் யாவரையும்
மன்னா வதைக்கரிது வாகுவட வனலாம்
930 எந்தனுக்குத் தூதர்பட்ட மின்னாளிலே வெறுத்தேன்
உந்தனிலும் பால னுலகில் வலுவானால்

**விருத்தம்**

மிகுவலு வுடையோர் கோபம்
    வினையடு மெளியோர் மீது
நகுமெளி யோர்கள் கோபம்
    நாடுமோ வலுவுள் ளோர்பால்

926. சென்று - அவனருகே நெருங்கி; கையாறப் பிடிக்கச் சென்றேன் - கையோடு பற்றிக் கொண்டு வரப் போனேன்; கனலெழும்பி - தீ பரவி; பா.வே. - 'சென்றுதையானான் பிடிக்கச் சிறியேன் நான்யெழும்பி' (மா.தவநிலை); 'சென்றுதையா நாம் பிடிக்க சீறியனல் யெழும்பி' (கை.பிரதி);

927. இன்று எனைத் துரத்த - இன்று என்னை விரட்ட; ஏகியதால் நெருங்கி வந்ததால்; இங்கு வந்தேன் - உம்மிடத்தில் வந்து சேர்ந்தேன்;

928. என்னால் - புவியில் - (வரி 450); பூமியில்; இனிப் பிறந்தார் யாவரையும் - பிறந்தவர்கள், பிறக்கின்றவர்கள் எவரையும்; பி.வே. - 'அனைவரையும்' (ச.ம.நூ.);

929. மன்னா - (வரி 505) எமராசனே; வதைக்கரிது - கொன்று இங்கே கொண்டுவர முடியாது; வாகு வடவனலாம் - (வரி 852) விளங்கக் கூடிய வடவாக்கினியும் வலியது; பா.வே.- 'மன்னுவதைக்கரிது வாரும் வடக னலால்' (ச.ம.நூ.);

930. எந்தனுக்கு - எனக்கு; தூதர் பட்டம் - காலதூதன் பதவி; இன்னாளிலே - இன்றைய தினமே; வெறுத்தேன் - விரும்பவில்லை; பி.வே.- 'தூது பட்டம்' (மா.தவநிலை, கை. பிரதி);

931. உந்தனிலும் - உன்னைவிடவும்; பாலன் - சிறுவன் மார்க்கண் டேயன்; உலகில் வலுவானால் - உலகத்தில் பலவானானால்; பி.வே.- 'உந்தனுக்கு' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

வி.30. மிகு வலுவுடையோர் கோபம் - வலிமை மிகுந்த பெரியோர்க ளின் சினம்; எளியோர் மீது - எளியவர்கள் மேல்; வினை - தீவினையாய்; அடும் - வந்து சேரும்; நகும் எளியோர்கள் கோபம் - நகத்தக்க எளியவர்களின் கோபமானது; வலுவுள்ளோர் பால் நாடுமோ - வலிமை

புகுமிது மூலை தேடிப்
போய்விடும் வாறு போலே
தகுமொரு பாலன் வீர[ஞ்]
சாட னானோடி வந்தேன் (30)

நடை

ஏவல் நமன் வரல்

என்றுதான் தூத னியம்பவலு யேவலெமன்
நன்றடா தூதா நரனுக்கு மஞ்சிவந்தாய்
வலியவனா மென்னில் வலி[ய]வரும் பூவிலுண்டோ
935 எலிதனக்குப் பூனை யிளைத்ததுபோ லோடிவந்தாய்

யுற்றார் மீது செல்லுமோ? (செல்லாது); புகுமிது மூலைதேடி - புகக் கூடிய (பள்ளம் நாடி); போய்விடும் ஆறுபோலே - பாயக்கூடிய நதியைப் போன்று; தகுமொரு பாலன் வீரம் - பக்தி வலிமை தங்குவதற்குரிய ஒரு சிறுவனின் வீரம்; சாட - என்மேல் துரத்த; நான் ஓடி வந்தேன் - நான் பயந்து திரும்பி வந்துவிட்டேன்;

பா.வே.- 'வினை சுடும்', 'போய்விடும் வாழ்வானேன்', 'தரும் எரி பாலன்' (ச.ம.நூ.); 'மீறிய எளியோர் மீது', 'நகுமிகுயெளியோர்', 'புகுமிது கரந்த பாலும் போய் தனம் யேறும்', 'தகுமிகு' (ச.ம.நூ.); காண்க: 'வலு' (269, 936, 982, 990, 1296, 1297, 1488, 1596, 1604, 1622, 1845, 2025);

932. என்றுதான் தூதன் இயம்ப - இவ்வாறு காலதூதன் கூறவும்; வலுயேவல் எமன் - மிகுந்த வலிமையும் ஆணையுமுள்ள ஏவல் நமன் என்பான்; பா.வே.- 'எமன்' (ச.ம.நூ.); 'ஏமன் யேது சொல்வான் தூதனிடம்' (மா.தவநிலை);

933. நன்றடாதூதா - நீ செய்த காரியம் நன்றாக இருக்கிறது?; நரனுக்கும் - மானிடனுக்கும்; அஞ்சி வந்தாய் - பயந்து வந்தாயோ?; பி.வே.- 'ஒரு நரனுக்கோ' (மா.தவநிலை, கை. பிரதி);

934. வலியவனாம் - அவன் வலிமையுள்ளவனோ?; என்னில் என்றால்; வலி[ய] வரும் - என்னை விடவும் பலசாலி; பூவிலுண்டோ - பூமியிலுள்ளாரோ?; பி.வே.- 'வலியவனோ' (ச.ம.நூ., மா.தவநிலை); 'வலியவனார் என்னில் வலியாரும்' (கை. பிரதி); காண்க: 'பூவில்' (1861, 2368, 2670, வி.68);

935. எலிதனக்குப் பூனை இளைத்ததுபோல் - எலிக்குப் பூனை தோற்றது போல்; ஓடிவந்தாய் - பயந்து விரைந்து வந்துள்ளாய்; பி.வே. - 'எலி தனக்கு வலு பூனையினைத் தோடி வந்ததுபோல்' (மா.தவநிலை); 'எலிக்கு வன் பூனை' (கை.பிரதி);

மைந்த னெனக்கு வலுவோ யவனுயிரை
இந்த னிமிச மிமைப்பொழுதில் கொல்லுகிறேன்
என்றுரைத்து யேவல்நம னேகினான் பூவுலகில்
குன்று பகிரண்டங் குலுங்கப் படியதிர
வந்து மார்க்கண்டனிடம் வாகா யணுகையிலே
அந்திமதி சூடு மரனார் விழியனலும்
வீரத்தில் கோடி மிகுந்த யிடியெனவே
சீரத்தில் சுத்தி சிறப்பாய் வளைந்ததுவே

936. மைந்தன் - சிறுவன்; எனக்கு வலுவோ - என்னை விடவும் பெரியவனாவானோ? (அவனைப் பிடிப்பது எனக்கு வலுவானதோ); அவனுயிரை - மார்க்கண்டேயன் உயிரை; பி.வே. - 'நமக்கு வலுவோ' (ச.ம.நூ.); பா.வே. - 'மையிந்தனுக்கு நம்மில் வலுவோ யவனுக்குவுதவி' (மா.தவநிலை, கை.பிரதி);

937. இந்த நிமிசம் - இந்த நிமிடத்திலேயே; இமைப்பொழுதில் - ஒரு நொடியில்; கொல்லுகிறேன் - வதைக்கிறேன்;

938. என்றுரைத்து - எனச் சூளுரைத்து; பூவுலகில் - பூமியில் மார்க்கண்டேயனுள்ள இடத்துக்கு; ஏவல் நமன் ஏகினான் - ஏவல் தொழிலையுடைய எமன் சென்றான்;

939. குன்று பகிரண்டம் குலுங்க - குன்றுகளும்; அண்டங்களும் குலுங்கவும்; படி அதிர - பூமி கிடுகிடுவென நடுங்கவும்; காண்க: 'குன்று' (973, 1185, 1614); 'பகிரண்டம்' (978, 1365, 1543, 1834);

940. மார்க்கண்டனிடம்; வந்து - ஏவல் நமன் வந்தடைந்து; வாகா யணுகையிலே - பக்குவமாய் நெருங்கும் போது; பி.வே. - 'வந்துமை பாலனிடம்' (ச.ம.நூ.); பா.வே. - வந்ததுமே காலன் வாகாக பாலனிடம் யணுகும் முன்னே' (மா.தவநிலை); 'வந்துயமன் பாலனிடம் வாகாய் யெரிக்குமுன்னே' (கை.பிரதி);

941. அந்திமதிசூடுமரனார் - (வரி 173) பிறை சூடும் ஈசனின்; விழியனலும் - நெற்றிக்கண் தீப் பொறியும்; பி.வே. - 'அரன் விழியில் அக்கினியும்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'அரன் விழியக்கினிதான்' (கை. பிரதி);

942. வீரத்தில் - வலிமையில்; கோடி மிகுந்த இடி எனவே - ஒருகோடி பெரிய இடிகள் முழங்குதல் போல்; பி.வே. - 'இடியேறு' (ச.ம.நூ.); 'விரிந்தயிடியென' (மா.தவநிலை); காண்க: 'இடி' (1917, வி.31, வி.40);

943. சீரத்தில் < சீர் + அம் + அத்து + இல் - ஒலியுடன்; சுத்தி < சுற்றி - வட்டமிட்டு; சிறப்பாய் வளைந்ததுவே - நன்றாக ஏவல்

பார வடவனல்கள் பாங்காகவே முழங்கி
வீரத்துடனே வெகுண்டு வந்து சுத்தியதே
திரிபுரத்தின் றீயுஞ் சிறந்த வடவனலும்
இருபிறமுஞ் சுத்துகையா லேவல்நமன் வெகுண்டு
ஆங்காரங் கொண்டு யதட்டி வலுசூலம்
ஓங்கார வக்கினிமே லோங்கியிவ னெறிந்தான்
அந்த நிமிச மனல்பொறுக்க மாட்டாமல்

நமனைச் சுற்றியது; பா.வே. - 'தீரத்தில்' (ச.ம.நூ.); 'தீரத்தில் சுத்திச் சினந்து வந்துதான் வளைய' (மா.தவநிலை); 'தீர சுற்றி' (கை.பிரதி);

944. பார வடவனல்கள் - (வரி 852) வலுவுள்ள வடவைத் தீயும்; பாங்காகவே முழங்கி - நெற்றிக்கண் தீப்பொறிக்கு ஏற்ப ஒலிஎழுப்பி; பி.வே. - 'வடகனலும்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

945. வீரத்துடனே - வலிமையுடன்; வெகுண்டுவந்து - சீறிப்பாய்ந்து; சுத்தியதே - வளைந்து கொண்டது; (சுத்தி < சுற்றி); பா.வே. - 'வந்துதான் வளைய' (மா.தவநிலை); 'வெகுண்டு சுற்றியே வளைந்து' (கை.பிரதி);

946. திரிபுரத்தின் தீயும் - (வரி 871) முன்பு முப்புரத்தைச் சிவன் சிரித்து எரித்த தீயும்; சிறந்த வடவனலும் - நன்றான (வரி 852) வடவைத் தீயும்; பி.வே. - 'வட கனல்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

947. இருபிறமும் < இரு புறமும் - இரண்டு பக்கத்திலிருந்தும்; சுத்துகையால் < சுற்றுகையால் - சூழ்வதால்; ஏவல் நமன்; வெகுண்டு - சினந்து; பி.வே. - 'இருபுறமும் சுத்தி வரயேகவே காலன்' (மா.தவ நிலை); காண்க: 'பிறம்' (-புறம்) (223, 224);

948. ஆங்காரங்கொண்டு - (வரி 767) கடுஞ்சினம்கொண்டு; அதட்டி - பயப்படுத்தி அடக்கி; வலுசூலம் - வலுவான தன் சூலத்தால்; பி.வே. - 'சூலமதை' (கை.பிரதி); காண்க: 'சூலம்', 'வலுசூலம்' (546, 909, 1046, வி.44);

949. ஓங்கார அக்கினிமேல் - 'ஓ'காரமிட்டுச் சூழ்ந்துவரும் தீ மீது; ஓங்கியிவன் எறிந்தான் - வேகமுடன், வீசிப் பாய்ச்சினான்; பா.வே. - 'ஓங்கி இவன் நெறித்தான்' (ச.ம.நூ.); காண்க: 'ஓங்காரம்' (292, 766); பி.வே. - 'ஓங்கியவன்' (மா.தவநிலை); 'ஓங்கியெமன்' (கை.பிரதி);

950. அந்த நிமிசம் - அவ்வேளையில்; அனல் - தீ; பொறுக்கமாட்டா மல் - சூலத்தின் வீச்சைத் தாங்கிக் கொள்ள இயலாமல்; பா.வே. - 'அந்தயிடி சூலமதுக்கு யக்கினி ரெண்டும் பயந்து' (மா.தவநிலை, கை.பிரதி);

சிந்தை கலங்கித் திகைக்கு மந்தவேளையிலே
யீசர் கரந்தனிலே யேந்து மழுவதனை
வாசமிகு நந்தி வாகாக யேவிவிட்டார்
அக்கணமே மீறிமழு வாங்காரமாய் வெகுண்டு
தக்கமிட யேவல்நம[ன்] தான்பயந்து காலனிடம்
சென்று அடிதொழுதான் தேவே சரணமென்று

**ஏவல் நமன் எமனிடம் முறையிடல்**

அன்று வணங்கி யருளுமிகு யெமனையும்

*951.* சிந்தை கலங்கி - மனம் நொந்து; திகைக்கும் - இனி என்ன செய்வது என மருகி நிற்கும்; அந்த வேளையிலே - அப்படி நிற்கும் போது; பா.வே. - 'திகைத்து நந்தியே வெகுண்டு' (மா.தவநிலை); 'சினக்க நந்திதான் வெகுண்டு' (கை.பிரதி);

*952.* ஈசர் கரந்தனிலே - இறைவன் திருக்கரத்தில்; ஏந்து மழுவதனை - ஏந்தியுள்ள கோடாரிபோன்ற மழு ஆயுதத்தை; பி.வே. - 'செங்கை தன்னில்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'மழு' (954, 967, 1045, 1101, 1917, வி.44, வி.50);

*953.* வாசமிகு நந்தி - புகழ்பெற்ற நந்தீசர்; வாகாக ஏவிவிட்டார் - வசமாக அனுப்புவித்தார்; பி.வே. - 'வாச நிறை நந்தீசர் வன்மையுடனே விட்டார்' (ச.ம.நூ.); பா.வே. - 'வாசம் நிறையீசர்' (கை.பிரதி);

*954.* அக்கணமே - அந்நேரத்தில்; மீறி - சிவபெருமான் கையைவிட்டு நீங்கி; மழு - மழுவாயுதமானது; ஆங்காரமாய் - (வரி 767) மிகுந்த கோபத்துடன்; வெகுண்டு - சினந்து; பா.வே. - 'மீளா மழு' (ச.ம.நூ.); 'அண்டரண்டந்தான் அதிர' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*956.* தக்கமிட - (ஏவல் நமனின் முன்னேற்றத்தைத்) தடுக்க - (தக்கம் < தர்க்கம் - மறுத்துப் பேசுதல்); ஏவல் நமன் தான் பயந்து - தானாக வெருண்டு; காலனிடம் - எமனிடம்; பா.வே. - 'தக்கமுடன் ஏவல் நமன்' (ச.ம.நூ., கை.பிரதி); 'தக்கம்மிட்டு' (மா.தவநிலை);

*956.* தேவே - இறைவனே!; சரணம் என்று - உன் அடைக்கலம், காப்பாற்றுவாயாக என; சென்று - ஏகி; அடி தொழுதான் - பாதங்களில் வீழ்ந்து வணங்கினான்;

*957.* அன்று - அப்போது; வணங்கி - அவன் கும்பிட்ட போது; அருளும் மிகுயெமனையும் - வணங்கிய அவனை அபயம் காத்து ஆசி வழங்கும் எமதர்மனை; பா.வே. - 'அன்று வணங்கும் யடர் காலனை யேமனுந்தான்' (மா.தவநிலை); 'அடலுள்ளயேமனையும் (கை.பிரதி);

தங்குபுகழ் காலன் தான்பார்த்தங் கேதுரைப்பான்
பொங்குவலு யேவல்நமன் போத்தி வணங்குமதை
யிங்கே யெவையு மியம்படா வென்றுரைத்தான்
தங்குபுகழான் கேட்கத் தானுரைப்பா னேவல்நமன்
ஆண்டு பதினாறு மாகில் ஒருபுதல்வன்
நீண்ட புகழாய் நின்னருளால் கொல்வதற்குச்
சென்றுதான் தூதன் சிதைக்கரியதாய் வந்துவிட்டான்
அண்டி யடியேனு மாங்காரமாய்ப் போனேன்

*958 - 959.* பொங்குவலுயேவல் நமன் - வலிமைமிகும் ஏவல் நமனானவன்; போத்தி < போற்றி - துதித்து; வணங்கும் அதை - வழிபடும் நிலையை; தங்கு புகழ் காலன் தான் பார்த்து - புகழ் தங்கக் கூடிய எமனும் பார்த்து; அங்கு ஏதுரைப்பான் - அங்கே பின்வருமாறு கூறுவான்; பா.வே - 'தங்கும் மகர யேமன் தான் பார்த்து' (மா.தவநிலை); 'தங்கும் புகழ் காலன் கேட்க வல்ல நமன்' (கை.பிரதி); 'பொங்கும் திருயேம காலா போற்றி வணங்கும் வகை' (மா.தவநிலை, கை.பிரதி);

*960.* இங்கே - இங்கு என்னிடத்தில்; எவையும் - நடந்தவை எல்லாவற்றையும்; இயம்படா - அடா! சொல்; என்றுரைத்தான் - என ஆணையிட்டான்; பா.வே. - 'இங்கே வா யிப்போது' (மா.தவநிலை); 'இங்கெவையும் போற்றி' (கை.பிரதி);

*961.* தங்கு புகழான் - (வரி 958); கேட்க - இவ்வாறு வினவவும்; தானுரைப்பான் ஏவல் நமன் - நடந்தவற்றை விளக்குவான்; பா.வே. - 'தங்கும் புகழ் யேமன் (காலன் - கை.பிரதி; தான் கேட்க யேம காலன்' (வல்ல நமன் - கை.பிரதி) (மா.தவநிலை);

*962.* ஆண்டு பதினாறு ஆகில் - (வரி 772) 16 வயதில் ஆயுள் முடிந்த; ஒரு புதல்வன் - சிறுவன் ஒருவன்; பி.வே. -'வயதானான்' (ச.ம.நூ.); 'வயசுயானதொரு' (மா.தவநிலை); 'வயதானஒரு' (கை.பிரதி);

*963.* நீண்ட புகழாய் - நீடிய புகழையுடையவனே!; நின்னருளால் கொல்வதற்கு - உன் ஆணையுடன் வதைத்துப் பற்றுவதற்கு; பி.வே. - 'புகழோனே' (ச.ம.நூ.); 'புகழ் யேமா' (மா.தவநிலை); 'நீண்ட புகழால் நினதருளால்' (கை.பிரதி);

*964.* தூதன் - காலதூதன்; சென்றுதான் - பூலோகம் சென்றும்; சிதைக்கரியதாய் - அச்சிறுவனுடைய உயிரைச் சிதைத்துக் கொல்ல முடியாதவனாய்; வந்துவிட்டான் - திரும்பிவந்துவிட்டான்; பி.வே. - 'ஓடிவந்தான்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*965.* அடியேனும் - யானும்; அண்டி - அவனை நெருங்கி; ஆங்காரமாய்ப் போனேன் - மிகுந்த கோபத்துடன் சென்றேன்; பா.வே. - 'அன்று' (ச.ம.நூ.); 'அன்றுயடியேன் வெகுண்டு' (மா.தவநிலை);

என்னாலுங் கொல்லரிது யேகக் கனல்மூண்டு
மன்னா மழுவெகுண்டு வந்திதினா லோடிவந்தேன்
கந்தனய்யா தன்சியலோ கந்தனுட செயலோ
எந்தனால் பூமியிலே யெவையுமிகக் கொல்லரிது
தந்தபட்ட மின்றிழந்தேன் சண்டா கொடுங்கூற்றை
சிந்தை வலுதவமாய்த் திசையில் வலுபாலா
என்றுதா னேவல்நம னிவ்வாற்றை தான்கூற

966. ஏகக்கனல் மூண்டு - அதிகவேகமுள்ள, மிகுந்த தீ பற்றியதால்; என்னாலும் கொல்லரிது - என்னால்கூடக் கொல்லவியலாததாகிவிட்டது; பா.வே. - 'ஏக யிருகனலும்' (மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'ஏகம்' (218, 1875, வி.49);

967. மன்னா - எமராசனே!; மழு - சிவபெருமான் கரத்திலிருந்து வந்த மழு ஆயுதமானது; வெகுண்டு - கோபமுற்று; வந்ததினால் - என்னை வதைக்க வந்ததால்; ஓடி வந்தேன் - பயந்து விரைந்து திரும்பி விட்டேன்; பா.வே. - 'மழுவதுவும் வந்ததினால்' (மா.தவநிலை, கை.பிரதி);

968. கந்தனய்யா தன் - முருகனின் தந்தையாகிய சிவபெருமானின்; சியலோ < செயலோ - காரியமோ; கந்தனுட < கந்தனுடைய - முருகப் பெருமானின்; செயலோ - காரியமோ; பி.வே. - 'கந்தனார்' (மா.தவ நிலை); 'கந்தன் செயலிதுவோ' (கை.பிரதி); காண்க: 'கந்தனய்யா', 'கந்தன் ஐயா', 'கந்தனார் தந்தை' (239, 245, 585, 1205, 1208, 1393, 1410, 1751, வி.66);

969. எந்தனால் - இனிமேல் என்னால்; பூமியிலே - பூலோகத்திலுள்ள; எவையும் - மனிதருள்ளிட்ட உயிர்களையும்; மிகக் கொல்லரிது - சாகடிப்பது கொஞ்சமும் இயலாது; பா.வே - 'சிந்தையுடன் யென்னால் சிதைக்கரிது யாபேரையும்' (மா.தவநிலை);

970. தந்த பட்டம் - ஏவல் நமன் என நீ நல்கிய பதவி; இன்றிழந்தேன் - இன்றுமுதல் இல்லாததாகிவிட்டேன்; சண்டா - காலனே!; கொடுங் கூற்றை - வன்மையான கூற்றுவனே! காண்க: 'சண்டன்' (995, 1318, 1336, 1420, வி.75);

971. சிந்தை வலுதவமாய் - மனத்தை ஒருமுகப்படுத்திச் செய்த பெரிய தவத்தின் பலனாய்; திசையில் வலுபாலா - அட்டதிக்குப் பாலர்களில் ஒருவனாக உள்ள வலியவனே; (எண் திசைகளைக் காத்து நிற்பவர்களில் எமனும் ஒருவன்; இவனுக்குரிய திசை தெற்கு ஆகும்); காண்க: 'திசை' (10, 1000, 1369, 1649, 1660, 2389, வி.31, வி.44, வி.60);

972. என்று தான் - இவ்வாறு; ஏவல்நமன்; இவ்வாற்றை - இவ்வார்த்தை - மேலேயுள்ளவற்றை; கூற - சொல்ல; பா.வே. ''காலன் யேமன்னிடம் தான் வுரைக்க' (மா.தவநிலை);

## எமன் கோபமுறல்

குன்றுவலு தோள்காலன் கோவித்துக் கண்சீறி
பாலன் தனக்காய்ப் பயந்துவந்தா யேவல்நமா
975 காலனென்று மஞ்சாமல் கனலு மெழுந்ததுவோ
என்றுதான் கால னிடியேறென நகைத்து
நின்றதொரு கிங்கிலிவர் நெஞ்சிற் பயமுறவே
பா[ர்]த்தங்கே நின்றான் பகிரண்டந் தானடுங்க
சீத்தமுடன் வெகுண்டு தீயெழும்பவே முழித்தான்

973. குன்று வலுதோள் காலன் - மலைக்குன்றைப் போல், குறுகிய, வலிமையுடைய தோள்களையுடைய எமன்; கோவித்து - ஏவல் நமனை வைது; கண்சீறி - கோபத்தைக் கண்ணில் காட்டி; பி.வே. - 'கண்சிவந்து' (ச.ம.நூ., கை.பிரதி);

974. பாலன் தனக்காய் - ஒருசிறுவனுக்காக; யேவல்நமா - ஏவல் நமனே; பயந்து வந்தாய் - பயப்பட்டுத் தோற்றுவந்துள்ளாய்; பா.வே. - 'பயந்து பட்டனையோ' (கை.பிரதி);

975. காலன் என்றும் - சிறுவனைப் பற்ற வந்திருப்பது ஏவல்நமன் எனத் தெரிந்தும்; கனலும் - தீயும்; அஞ்சாமல் - பயப்படாமல்; எழுந்ததுவோ - எரிக்க வந்ததுவோ; பி.வே. - 'காலன் என்று எண்ணாக் கனலும்' (ச.ம.நூ.); 'கனலும் யெழுந்து வந்ததுவோ' (மா.தவநிலை); 'கனலெழும்பி வந்ததுவோ' (கை.பிரதி);

976. என்றுதான் - இவ்வாறு; காலன் - எமன்; இடி ஏறு என - இடி இடித்தது போல்; நகைத்து - சிரித்தான்; பா.வே. - 'எழுமுகத்தோன் சீற' (ச.ம.நூ.); 'என்று சொல்லியிடிபோல் கோபமுற்றான் யேழுமுகன்' (மா.தவநிலை, கை.பிரதி);

977. நின்றதொரு கிங்கிலிவர் - அவன் முன்பு நின்றுகொண்டிருந்த கிங்கிலியர் எல்லோரும்; நெஞ்சில் - தம் உள்ளத்தில்; பயமுறவே - அச்சம் அதிகரித்து நடுங்குமாறு; பி.வே. - 'கிங்கிரர்' (ச.ம.நூ.); பா.வே. - 'அங்கு நின்ற கிங்கிலியர் யெல்லோரும் தான் பயந்து' (மா.தவநிலை, கை.பிரதி); பகிரண்டந்தானடுங்க - கிங்கிலியரோடு அண்டசராசரங்களும் ஒடுங்குமாறு;

978. பார்[த்]தங்கே நின்றான் - எமன் கோபக் கண்களுடன் வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றான்; பா.வே. - 'பாரடா யென்றான் பகிர்றண்டந்தான் யதிர' (மா.தவநிலை);

979. சீத்தமுடன் < சீற்றமுடன் - சினத்துடன்; வெகுண்டு - மேலும் கோபமுற்று; தீயெழும்பவே - கண்களிலிருந்து சினத்தீ உண்டாகவே;

கண்ணங்கள் பொறிபறக்கக் காலன் வெகுண்டதினால்
வங்கண் மனம்வெகுண்டு வந்ததுவுந் தானறிந்து
பொங்குவலு கிங்கிலியர் போயொளிப்பார் தான்கோடி
அங்குநிற்கு[ம்] எமகெண மல்லோர்களு மயங்கி
சிங்கத்தின் முன்னே திரளானைக் குட்டிகள்போல்
பங்கப்பட்டுக் கிங்கிலியர் பயந்து நடுங்கிநின்றார்
எங்கும் வலுயேவல்நமன் யெண்ணியஞ்சி மெய்மறந்து
துங்கமுடி யேவல்நமன் சுருதியுடனோடி வந்து

முழித்தான் - சீறிப் பார்த்தான்; பா.வே. - 'சீத்தம் மிகு யேமன் சினந்து வெகுண்டதினால்' (மா.தவநிலை); 'சீற்றமிகுகாலன் சினந்து வெகுண் டெழுந்தான்' (கை.பிரதி);

980. காலன் - எமன்; கண்ணங்கள் பொறிபறக்க - தீப்பொறியைக் கண்கள் கக்குமாறு; வெகுண்டதினால் - கோபப்பட்டதனால்;

981. வங்கண் < வன்கண் - கொடுமையான பார்வை; மனம் - சிந்தை; வெகுண்டு வந்ததுவும் தானறிந்து - கண்ணும் மனமும் கொடுமை யடைந்ததைத் தாமே அறிந்து;

982. பொங்குவலி கிங்கிலிவர் - வலிமைநிறையும் கிங்கிலியரான வர்; போயொளிப்பார் தான் கோடி - கோடி எண்ணிக்கை கொண்டோர் ஓடி ஒளிந்துகொள்வர்;

983. அங்கு நிற்கு[ம்] - அங்கே நின்று பார்த்துக் கொண்டிருக்கின்ற; எமகெணம் < எமகணம் - எமகணங்கள்; அல்லோர்களும் - எல்லோர்க ளும்; மயங்கி - தங்கள் நிலை திரிந்து;

984. சிங்கத்தின் முன்னே - கொடிய வலிமையுடைய சிங்கத்தின் எதிரே நிற்கும்; திரள் யானைக் குட்டிகள் போல் - பல எண்ணிக்கையில் திரண்ட யானைக் கன்றுகள் நடுங்குதலைப் போன்று; பா.வே. - 'சிங்கத்தைக் கண்ட சிறுகேசம் போல் வொளித்தார்' (மா.தவநிலை); 'சிறுகயம்' (கை.பிரதி);

985. கிங்கிலிவர் பங்கப்பட்டு - தோல்வியால் கிங்கிலியர் அவமா னம் அடைந்து; பயந்து - வெகுண்டு; நடுங்க நின்றார் - கைகால், உடம்பு ஆடுமாறு நின்றிருந்தனர்;

986. எங்கும் - எல்லாவிடத்தும்; வலு ஏவல் நமன் - வலிமையுள்ள ஏவல் நமன் என்பான்; எண்ணி அஞ்சி மெய்மறந்து - காலனையே நினைத்து, அதனால் பயந்து, தன் நிலை திரிந்து;

987. துங்க முடியேவல் நமன் - பெருமைக்குரிய முடி தாங்கிய ஏவல் நமனானவன்; சுருதியுடன் - காலனை வாழ்த்துச் சொல்லிக் கொண்டே விரைந்து வந்தான்; காண்க: 'சுருதி' (306);

அன்னேரங் கால னவன்முகத்தைப் பார்த்துரைப்பான்
இன்னேர மக்கினிக்கு மேங்கியஞ்சி வந்தனையே

**விருத்தம்**

துடியிடி குமுறி யோங்கிச்
சூழ்திசை படியிற் தாக்கும்
யிடிதனக் கெதிராய் நின்று
யியல்குடை தாங்கு மோடா
பொடிமணல் தனக்கு மீறும்
பொற்கிரி யஞ்சி யேங்கிக்
கடிதிட மகலு மோவென்
கனபிலங் காணீ ரென்றான் (31)

**நடை**

990 தப்பாது என்வலுவைத் தான்பாரடா யெனவே

988. அன்னேரம் - அப்பொழுது; காலன் - எமன்; அவன் முகத்தைப் பார்த்து - ஏவல் நமனைப் பார்த்து; உரைப்பான் - பின்வருமாறு கூறுவான்; பா.வே. - 'பார்த்திரைப்பான்' (ச.ம.நூ.); 'யேமன்' 'பார்த்து யேதுரைப்பான்' (மா.தவநிலை);

989. இன்னேரம் - இவ்வேளையில்; அக்கினிக்கும் - (வரி 621) நெருப்புக்கும் ஏங்கி அஞ்சி வந்தனையோ - அழுது பயந்து திரும்பி வந்தாயோ; பி.வே - 'வந்தாயோடா' (மா.தவநிலை, கை.பிரதி);

வி.31. துடியிடி - 'பட பட' என முழங்கும் இடியானது; - குமிறி < குமுறி - முழங்கி; ஓங்கி - பெருத்த ஓசையுடன்; சூழ்திசை படியில் தாக்கும் - பல திசைகளால் சூழப்பெற்ற இந்த உலகை நடுங்கச் செய்யும்; இடி தனக்கு எதிராய் நின்று - இடியோசைக்கு எதிராக நின்றால்; இயல்குடை தாங்குமோடா - அதன் பலத்துக்கு முன்பே சாதாரண மழைக்குடை தாக்குப் பிடிக்குமா? பொடிமணல் தனக்கு - சிறிய மணலுக்கு; மீறும் பொற்கிரி - பெரிய பொன்மலையானது; அஞ்சி ஏங்கிக் கடிதிடம் அகலுமோ - பயந்து, வருந்தி வேறு இடத்துக்குச் செல்லுமோ (செல்லாது); என் கனபிலம் காணீரென்றான் - என்னுடைய பெரிய வலிமையைக் காணுங்கள் என்று எமன் கூறினான்;

பா.வே. - 'துடியிடிக்கும் அரி ஓங்கி', 'மீளும் பொற்கிரி', 'மெல்லக் கண்டிலம் காண்கிலேன் என்றான்' (ச.ம.நூ.); 'குமர்தம் வோங்கும் சூழ்திசை பொடியதாகும்', 'இயல் குடம்', 'கண்டிடென்றான்' (மா.தவ நிலை); 'ஓங்கி', 'என்கன பெலங் கண்டிடென்றான்' (கை.பிரதி);

990. என் வலுவை - எனது வலிமை எவ்வளவினது என; தப்பாது - தவறாது; தான்பாரடா எனவே - நீ காண்பாய் என; பி.வே. - 'எந்தன் வலிமைதான்' (ச.ம.நூ.);

குப்பமிடுங் கிங்கிலியர் கோலமுக னோக்கி
எண்டிசையும் வல்ல எனது கிடாத்தனையும்
அண்டமிகு கால னவையுரைக்கக் கிங்கிலியர்
கொண்டிங்கே வாறோமுன் கோலக் கிடாத்தனையும்
சண்டன் கிடாவாகனத்தைத் தான்பிடிக்க யேகினராம்

**எருமைக்கடாவின் இயல்பு**

ஆயிரங் கோடி யானவலு தூதுவர்கள்
வீறாம் பகடருகே மேவினர் காணம்மானை
கண்டவுடன் பகடு கால்மானங் கொண்டெழுந்து

991. குப்பமிடும் - கூட்டமிடும்; கிங்கிலியர்; கோல முகனோக்கி பயந்த கோலத்துடன் காட்சியளிக்கும் அவர்களைப் பார்த்து;

992. எண்டிசையும் - எட்டுத் திசைகளிலும்; வல்ல - செல்லுவதற்கு இயன்ற; எனது கிடாத்தனையும் -என்னுடைய வாகனமான எருமைக் கடாவை; (கிடா < கடா); பா.வே. - 'என்று இசையில் சொல்ல' (ச.ம.நூ.); காண்க; 'எண்டிசை' (1745, 1871, வி.39); 'கிடா' (994, 995, 1010, 1039);

993. அண்டமிகு காலன் - அண்டங்களைவிடவும் பெரிய எமன்; அவையுரைக்க - கடாவைக் கொணர்க எனக் கூறவும்; கிங்கிலியர்; பி.வே. - 'கிங்கரர்' (ச.ம.நூ.);

994. உன்கோலக் கிடாத்தனையும் - உனது வலிதான எருமைக் கடாவை; கொண்டிங்கே வாறோம் - இங்கே இழுத்து வருகிறோம் என (வாறோம் < வருகிறோம்);

995. சண்டன் கிடா வாகனத்தை - (வரி 801) காலனுடைய ஊர்தியான எருமைக் கடாவை; தான் பிடிக்க ஏகினராம் - பிடித்துக் கட்டி இழுத்து வரச் சென்றனராம்;

996. ஆயிரங்கோடியான - ஓராயிரம் கோடி எண்ணிக்கையுள்ள; வலுதூதுவர்கள் - வலிமைபடைத்த கிங்கிலியர்; பா.வே. - 'கோடியானவ ரைபோல் வலுத்தோர்' (ச.ம.நூ.); 'ஆயிரங்கோடி ஆனைவலு இங்கிலி யர்' (மா.தவநிலை, கை.பிரதி);

997. வீறாம் < வீறு ஆம் - வலிமையுடைய; பகடு அருகே - எருமைக்கடாவின் பக்கத்தில்; மேவினர் காண் - சென்றனர்; அம்மானை - (பார்க்க; விளக்கம் வரி); காண்க: 'பகடு' (998, 1004, 1009, 1022, 1025, 1478);

998. கண்டவுடன் - கிங்கிலியரைப் பார்த்தவுடன்; பகடு - எருமைக் கடா; கால்மானம் கொண்டெழுந்து - படுத்திருந்த எருமைக்கடா எழுவ

தெண்டிரையில் நஞ்சாய்த் திடுக்கிட்டுக் கொண்டேறி
திகைத்து மிகநடுங்கித் திசைகள்ளெட்டுந் தானதிர
பகைத்து யிவர்தன்னைப் பதற முடுக்கியபின்
அட்டகிரி யெட்டுமலை கடலுந் தானதிர
வட்ட வுலகேழு மலைகளெட்டுந் தானதிர
மண்டி யெதிர்த்துவரும் பகட்டைக் கண்டவர்கள்

தற்குத் தக்கவாறு கால்களை மடக்கிக் கொண்டு எழுந்தது; பா.வே. - 'கனபகடுதானெழுந்து' (மா.தவநிலை, கை.பிரதி);

999. தெண்டிரையில் - தெள்ளிய அலைகடலில்; நஞ்சாய் (வரி 228) தோன்றும் விடம் போன்று; திடுக்கிட்டுக் கொண்டு - எதிர்பாராது பயந்தபடி; ஏறி - தான் படுத்திருந்த இடத்திலிருந்து எழுந்து வந்து; பா.வே. - 'கோடேறி' (ச.ம.நூ., மா.தவநிலை);

1000. திகைத்து மிக நடுங்கி - தன்னை நோக்கி வந்தோரைப் பார்த்து வியந்து, மேலும் அதிகமாகப் பயந்து; திசைகள் எட்டுந் தானதிர - எட்டுத் திசைகளும் அசையும்படி; பா.வே - 'முழங்கித் திடுக்கிட்டுத் தான் பதறி' (மா.தவநிலை, கை.பிரதி);

1001. பகைத்து - அவர்களை எதிரிகளாகப் பாவித்து; இவர்தன்னை ஆயிரம் கோடி கிங்கிலியரை; பதற - அவர்கள் பதைபதைக்க; முடுக்கிய பின் - விரட்டிய பின்; பி.வே. - 'பகைத்தவர்கள் தன்னை' (ச.ம.நூ.); 'பகைத்திடுவார் தன்னை' (மா.தவநிலை, கை.பிரதி);

1002. அட்டகிரி யெட்டுமலை - உலகத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும் எட்டு மலைகள்; கடலும் - எழுகடல்கள் தானதிர - இவையனைத்தும் அசையுமாறு; பா.வே. - 'அட்ட கெசம்' (மா.தவநிலை, கை.பிரதி); அட்டகிரியாவன: கயிலாய மலை (அல்லது வெள்ளிமலை), இமயம் (அல்லது பனிமலை), மந்தர மலை (அல்லது கடலைக் கடைய மத்தாகிய மலை), விந்திய மலை (அல்லது தக்காணத்தின் எல்லையிலுள்ள மலை), நிடதம் (அல்லது நிடதநாட்டு மலை), ஏமகூடம் (அல்லது பொன் மலை), நீலகிரி மலை, கந்தமாதனமலை என்பன. (ஏழுகடல்கள்: பார்க்க வரி விளக்கம் 18); காண்க: 'கடல்' (219, 221, 409, 1239, வி.42, வி.47);

1003. வட்ட உலகு ஏழு - இப் பூகோளத்தில் வட்டமாக அமைந்துள்ள ஏழு உலகங்கள்; மலைகள் எட்டும் (பார்க்க: வரி 1002); தானதிர - அசையுமாறு; (ஏழுலகு ஆவன: பார்க்க வரி விளக்கம் 16); காண்க: 'வட்டவுலகு' (2204);

1004. மண்டி - தாக்கி; எதிர்த்துவரும் பகட்டை - இவை அதிரும்படிச் செய்த பின்னர் கிங்கிலியரை நோக்கி வரும் எருமைக் கடாவை; கண்டவர்கள் - பார்த்த கிங்கிலியர்;

தெண்டிரையில் நஞ்சாய்த் திகைத்து மிகவோடி
கொம்பா லடிபட்டுக் குலையுண்டா ராயிரம்பேர்
வம்பாருந் தூதர் வளைந்து பகடுதன்னை
எதுத்து வலுப்பண்ணி யியல்வுவலு கிங்கிலியர்
குத்தும் பகடுதன்னைக் கூடியவர் பிடித்தார்
மலைபோல மிகுத்து வந்தகிடாத் தனையும்

**கடாவை அலங்கரித்தல்**

சிலையாருங் கிங்கிலியர் சேர்த்து யலங்கரித்து
காலுக்குத் தண்டை கனத்தகொம்பிற் பொற்குவடு

1005. தெண்டிரையில் நஞ்சாய் - (பார்க்க வரி 999); திகைத்து - பரதவித்து; மிக வோடி - பயந்து வேகமாகத் தப்பி ஓடினர்; பா.வே. - 'வெகுண்டோட' (மா.தவநிலை);

1006. கொம்பால் அடிபட்டு - எருமைக் கடாவின் கொம்பினால் குத்துப்பட்டோர்; ஆயிரம்பேர் குலையுண்டார் - ஆயிரம் கிங்கிலியர் செத்தனர் (குலை < கொலை); பா.வே. - 'சூலை' (ச.ம.நூ.); காண்க: 'கொம்பு' (1012, 2114);

1007. வம்பாரும் - எருமையுடன் சண்டையிடும்; தூதர் - கிங்கிலியர்; பகடு தன்னை வளைந்து - அதைச் சுற்றிக் கொண்டு; பி.வே. - 'வம்பார் தூதர்' (ச.ம.நூ.);

1008. இயல்வு வலுகிங்கிலியர் - இயல்பாகவே வலிமையுள்ள கிங்கிலியர்; எதுத்து < எதிர்த்து - நேருக்குநேர் சண்டையிட்டு; வலுப் பண்ணி - அதன் வலுவை அடக்கி; பா.வே. - 'எத்துவழியாக' (ச.ம.நூ.); 'எத்துவழி செய்து' (மா.தவநிலை);

1009. குத்தும் பகடுதன்னை - கொம்புகளால் குத்திக் கொலை புரியும் எருமைக்கடாவை; இவர் கூடி - எல்லோரும் சேர்ந்து; பிடித்தார் - தம் கைகளால் அடக்கிப் பிடித்துக் கொண்டனர்; பா.வே. - 'கட்டியவர் பிடித்து' (கை.பிரதி);

1010. மலைபோல மிகுத்துவந்த - பெரிய குன்றைப் போல் திரண்டிருந்த; கிடாத்தனையும் - எருமைக் கடாவையும்;

1011. சிலையாரும் - வலிமைமிகுந்த; கிங்கிலியர்; சேர்த்து அலங்க ரித்து - எல்லா உறுப்புகளிலும் ஒப்பனை செய்து;

1012. காலுக்குத் தண்டை - கடாவின் நான்கு கால்களிலும் கரண்டை யில் தண்டைகளையும்; கனத்த - பருத்த; கொம்பில் - கொம்புகளில்; பொற்குவடு - பொன்னாலான குழல்களாலான குமிழ்களைப் பொருத்தி யும்; பா.வே. - 'பொற்குமிழும்' (மா.தவநிலை, கை.பிரதி);

மேலுக்குப்பட்டு விரித்ததின் மேல்(ச்)சேணம் வைத்தார்
முத்தால் முகத்தில் முகப்பட்டந் தானணிந்து
தத்து மரகதங்கள் சல்லிபட்டுக் குச்சுடனே
மாணிக்க நீலம் வாகுபெறவே பூட்டி
ஆணிப் பொன்தன்னா லழகு விதானமதாய்
வயிர மணிகட்டி வாகுடனந்தப் பகட்டை
அயிரா பதமெனவே யன்பா யலங்கரித்து
கழுத்திலிடு மணிகள் காதவழி யோசைபெற

1013. மேலுக்கு - கடாவின் முதுகில்; பட்டு விரித்து - பட்டுத்துணி யால் போர்த்தி; அதன்மேல் சேணம் வைத்தார் - இருந்து கொள்வதற்கான மெத்தையை மாட்டினர்; பா.வே. - 'சொர்ணமதாய்' (மா.தவநிலை);

1014. முகத்தில் - எருமைக்கடாவின் முன்தலையில்; முத்தால் - நவரத்தினங்களிலொன்றான முத்துக்களால் ஆன; முகப்பட்டம் - முகப் படாம் எனும் அணிகலனை; தானணிந்து - சூட்டினர்; பா.வே. - 'முகப்பட்டா தான் அணிந்து' (ச.ம.நூ.); 'முகப்பட்டு' (மா.தவநிலை; காண்க: 'முத்து' (1217, வி.76);

1015. தத்து மரகதங்கள் - ஒளி தவழும் மரகதங்கள் பதித்த; சல்லி - தொங்கல்களும்; பட்டு - பட்டாலான; குச்சுடனே - குஞ்சங்களுடன்; பி.வே.-'பட்டுக் குஞ்சமணிந்து' (ச.ம.நூ., மா.தவநிலை);

1016. மாணிக்க நீலம் - மாணிக்கக் கற்களையும் நீலநிற ரத்தினக் கற்களையும் கொண்ட ஆபரணங்களை; வாகுபெறவே பூட்டி - பொருத்த மாக அணிந்து; பா.வே. - 'வையிர வைடூரியம் பூட்டி' (மா.தவநிலை); காண்க: 'மாணிக்கம்' (1032, 1997, 2076, 2583);

1017. ஆணிப்பொன் தன்னால் - சிறந்த தங்கத்தால்; அழகு விதானம் அதாய் - அழகுதருமாறு மேற்கட்டியுமிட்டு; பா.வே.- 'விதரணம்' (ச.ம.நூ.); 'ஆணிக் கனகம் அழகுவிதானம் மிட்டு' (மா.தவநிலை);

1018. வயிரமணிகட்டி - கழுத்தில் வைரத்தால் ஓசையுடன்கூடிய மணியைப் பொருத்தி; வாகுடன் அந்தப் பகட்டை - இலகுவாக அந்த எருமைக்கடாவை; காண்க: 'வயிரம்' (1032, 2074, 2076, 2278);

1019. அயிராபதம் எனவே - இந்திரனின் ஊர்தியான ஐராவதம் எனும் யானையைப் போல்; அன்பாய் அலங்கரித்து - விருப்பமுடன் ஒப்பனை செய்து; பா.வே. - 'ஆயிரம் பதம் மெனவே' (மா.தவநிலை);

1020. கழுத்திலிடு மணிகள் - கழுத்தில் கட்டப் பெற்றுள்ள வயிர மணிகள்; காதவழி - பத்து மைல் தூரம்; ஓசைபெற - ஒலி எழுப்ப; பி.வே. - 'பொன் மணிகள்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'காதம் ரெண்டு வோசையிட' (மா. தவநிலை); காண்க: 'மணி' (1021, 1321, 2581);

அழுத்துகின்ற காற்றின்மணி யசைந்துவர யக்கழுத்தில்
பகடுதன்னைக் கிங்கிலிவர் பாங்காய் வடிவுபெற
தகடணிந்த சண்டனிடந் தானடத்திக் கொண்டுவந்தார்
வெள்ளிமலை நகண்டு மேதினியில் வந்தாப்போல்
துள்ளிப் பகடுவந்து தோன்றியதே யன்னேரம்

**எமன் அணிகலன் புனைதல்**

மலைகளதிர்ந் தாப்போல் மறலி யகோரமுற்று
கலைபுகழுங் காலன் காரிடிபோல் பாரில்வர

1021. அழுத்துகின்ற - வீசுகின்ற; காற்றின் - காற்றில் அசைந்து; அக் கழுத்தில் மணி அசைந்துவர - பகட்டின் கழுத்தில் கட்டிய வயிரமணி ஒலியெழுப்பிவர; பா.வே. - 'அருத்துகின்ற' (ச.ம.நூ.); 'அழுத்துகின்ற ரற்றினங்கள்...' (மா.தவநிலை);

1022. பகடுதன்னை - எருமைக் கடாவை; கிங்கிலிவர் - கிங்கிலியர் அனைவரும்; பாங்காய் வடிவு பெற - பொருத்தமாக அலங்கரித்து, அழகுவடிவு அடையுமாறு செய்து; பி.வே. - 'கிங்கிரர்' (ச.ம.நூ.);

1023. தகடுஅணிந்த - பொன் தகட்டாலான கவசமணிந்த; சண்டனிடம் தான் - எமனிடம்; நடத்திக் கூட்டிவந்தார் - பகட்டை நடந்து வருமாறு பிடித்து வந்தனர்; பா.வே. - 'சகடு', 'சண்டநடம் தான்' (ச.ம.நூ.); 'சகடுதனையலங்கரித்து சண்டன்யிடம் கொண்டு வந்தார்' (மா.தவநிலை);

1024. வெள்ளி மலை நகண்டு - பனிமலை நகர்ந்து; மேதினியில் - நிலத்தில்; வந்தாப் போல் < வந்தாற் போல்; பா.வே. - 'வெள்ளி மலை அன்று' (ச.ம.நூ.); காண்க: 'வெள்ளிமலை' (1144, 1375, 1303);

1025. அன்னேரம் - அவ்வேளையில்; துள்ளி - தன் எசமானன் எமனைக் கண்டவுடன் குதி போட்டு; பகடு - எருமைக்கடா; வந்து தோன்றியதே - எமனிடம் வந்து நின்றதே;

1026. மலைகளதிர்ந்தாப் போல் - பருத்த வலிய மலைக்குன்றுகள் நடுங்கியது போன்று; மறலி - எமன்; அகோரமுற்று - கொடுங்கோப மடைந்தான்; பா.வே. - 'மலைகள் திறந்த(து) ஒப்பாம்' (ச.ம.நூ.) காண்க: 'அகோரம்' (1469, 1729);

1027. கலை புகழும் காலன் - தருமவான் எனப் பல கலை நூல்களிலும் பாராட்டப்படக்கூடிய எமன்; கார் இடிபோல் - கறுத்த மழை மேகங்கள் மோதுவதால் உண்டாகும் இடிவிழுதல் போல்; பாரில் வர - பூமியில் தோன்றுவதற்கு; பா.வே. - 'கால் நமன் காரிடியன் பூவில் வந்தான்' (ச.ம.நூ.); 'நான் போகவென்று கார்ரிடியான் பூவில்வர' (மா.தவநிலை); காண்க: 'காரிடி' (1067);

திங்க ளெனவே செவியிலணி குண்டலமும்
பொங்கமுறு ரற்றினத்தால் பூண்டதொரு கைவளையும்
முற்றுச் சரப்பதைக்க மோகன மாலைகளும்
கொற்றுச் சரப்பணியுங் கோலவண்ணப் பூசனங்கள்
மாணிக்க நீலம் வயிர மரகதத்தால்
ஆணிக் கனகமலர் யன்னீலப் பச்சையுடன்
கோமே தகமுங் குறித்தபுற்ப ராகமுதல்
தாமே சிறக்குந் தரித்தமிகு பின்னலுடன்

1028. செவியில் அணிகுண்டலமும் - காதுகளிரண்டிலும் அணிந்து கொள்ளும் குண்டலங்கள்; திங்கள் எனவே - வட்ட நிலவைப் போல ஒளிவிட; காண்க: 'திங்கள்' (262, 692, 790, 863, 1101, 1169, 1808, 1935, 1950, 2400, 2493);

1029. பொங்கமுறு - பொலிவு தரும்; ரற்றினத்தால் < இரத்தினத்தால் - நவரத்தினங்களால்; பூண்டதொரு - அணிந்த; கைவளையும் - வீர வளைகளும்;

1030. முற்று < முத்து; சரப்பதைக்கம் < சரம் + பதக்கம் - கழுத்திலிடும் அட்டிகை; மோகன மாலைகளும் - கழுத்திலிருந்து தொங்கும் ஒரு வகை மாலைகள்;

1031. கொற்று < கொத்து - கொத்தாகச் சேர்ந்த; சரப்பணி - சரப்பளி, கொத்து மாலைகள்; கோலவண்ண - பல நிறங்களில் அழகு நிறைந்த; பூசனங்கள் - ஒரு வித ஆபரணங்கள்; பி.வே. - 'சரப்பளி', 'பூசணங்கள்' (ச.ம.நூ., மா.தவநிலை); காண்க: 'சரப்பணி', 'சரப்பளி' (1497);

1032. மாணிக்க நீலம் - (வரி 1016); வயிர மரகதத்தால் - (வரி 1018) வைரத்தாலும் மரகதத்தாலும்; பா.வே. - 'பச்சை வைரம் வைடூரியங்கள்' (ச.ம.நூ.); 'வையிர பச்சை நீலம்' (மா.தவநிலை);

1033. ஆணிக்கனக மலர் - உயர்ந்த பொன்னாலான மலர்கள் போன்ற ஆபரணங்களும்; அன்னீலப் பச்சையுடன் - பொன்னாலான பச்சைக்கல் ஆபரணங்களும்; பா.வே. - 'பவளம் அடல் நீல மாலையிட்டு' (ச.ம.நூ.); 'கனகமணியடர் வையிர மாலையிட்டு' (மா.தவநிலை); காண்க: 'ஆணிக் கனகம்' (2077);

1034. கோமேதகமும் - நவரத்தினக் கற்களுள் ஒன்றான கோமேதகமும்; குறித்த - குறிப்பிட்டுச் சொல்லும்; புற்பராகம் முதல் - புட்பராகம் எனப்படும் கற்களும் கூடிய; காண்க: 'கோமேதகம்' (2070); 'புற்பராகம்' (2612);

1035. தாமே சிறக்கும் - எவ்வித அலங்காரமுமின்றி இயல்பாகவே; தரித்த மிகு பின்னலுடன் சிறந்துள்ள சிகையும் சடையும்; (பின்னல் - வளைவு மோதிரம் என்றும் கொள்ளலாம்);

நற்கனக தங்கம் நல்லவயி டூரியற்றால்
பொற்கிரீடந் தன்னைப் புனைந்தான் திருமுடிமேல்
தங்கவச்சிராங்கி தொட்டுத் தானெழுந்தான்
போவதற்கு

## எமனின் தோற்றம்

சிங்காரக் காலன் சிறந்தகிடா வாகனத்தில்
பொங்கமிகு மலையில் போதமிகு சூரியனும்
தங்கியிருந் தாப்போல் தானேறி மாமறலி
ஏழு முகமுமிலங்கு நெத்தி யோரேழும்
சூழும் புயங்கள் துலங்கும் பதினாலும்

1036. நற்கனக தங்கம் - நல்ல சொக்கத் தங்கத்தாலாகி; நல்ல - சிறந்த; வயிடூரியற்றால் < வைடூரியத்தால் - வைடூரியக்கற்கள் பதித்த; காண்க: 'கனகம்' (1033, 1536, 1913, 2092);

1037. திருமுடிமேல் - தாமே சிறக்கும் சிறந்த தலைமேலே; பொற் கிரீடந்தன்னை - பொன்னாலாகிய தலை மகுடத்தை; புனைந்தான் - எடுத்து அணிந்தான்; காண்க: 'கிரீடம்', (1083, 1535, 1911, 1994);

1038. தங்க - தங்கத்தாலாகிய; வச்சிராங்கி < வச்சிர அங்கி < வஸ்திரஅங்கி - நேரியல், அங்கவஸ்திரம்; தொட்டு - (தொட்டு) எடுத்து; போவதற்கு - புறப்படுவதற்கு; தானெழுந்தான் - (எமன்) தயாரானான்; பா.வே. - 'தங்கு புகழ் மார்புதனில் தங்கரத்தின' (ச.ம.நூ., மா.தவநிலை);

1039. சிங்காரக்காலன் - அலங்காரம் செய்து கொண்டதால் அழகான தோற்றமுடன் திகழ்ந்த எமன்; சிறந்தகிடா வாகனத்தில் - பெருமையுள்ள எருமைக்கடா வாகனத்தில்; (புறப்பட்டான்);

1040-41. மாமறலி - எமன்; பொங்கமிகு - பொலிவு மிகுந்த; மலையில் - குன்றில்; போதமிகு சூரியனும் - ஒளிமிகுந்த ஞாயிறு; தங்கியிருந்தாப்போல் - அமர்ந்திருந்தாற்போல்; தானேறி - தானே ஏறிக் கொண்டு; (புறப்பட்டான்); காண்க: 'சூரியன்' (80, 1814, 2373; 2551, வி.32);

1042. ஏழுமுகமும் - ஏழுலகுக்கு ஒவ்வொருமுகமாக ஏழு முகங்க ளும்; இலங்கும் - விளங்கும்; நெத்தி < நெற்றி; ஓரேழும் - ஏழு (நெற்றிகளும்); காண்க: 'ஏழுமுகம்'. (1080);

1043. சூழும் - உடலைச் சூழ்ந்து காணப்பெறும்; புயங்கள் - (வரி 317) கைகள், (புசங்கள்); துலங்கும் - துலக்கமுறும்; பதினாலும் - ஈரேழு கைகளும்;

செங்கை பதினாலில் சிறந்தசங்கு சக்கரமும்
தங்குமழு மானு(ம்)ந் தகமைதண்டு வேலுடனே
பாசக் கயறும் பாரவளையஞ் சூலமுடன்
வாசமிகு ஆயுதங்கள் வாகாகவே யெடுத்து
பாலன்றனைச் செயிக்கப் பண்புடனே மாமறலி
ஆலமெனவே யன்று பொங்கித் தானடந்தான்

**எமனுடன் பிறரும் புறப்படத் தயாராதல்**

நமனார் பகடேறி நன்றாகவே நடக்க
யிமனார் பின்கிங்கிலிய ரேழாயிரங் கோடி

*1044.* செங்கை - சிவந்த உள்ளங்கைகளில்; சிறந்த - சிறப்பான; சங்குசக்கரமும் - சங்கு வடிவைப்போன்ற ரேகைகளும்; காண்க: 'செங்கை' (1224, 1599, 2321, வி.25, வி.37, வி.44, வி.50); 'சங்கு' (1084, 1425, வி.44);

*1045.* தங்கு - தங்கியிருக்கக்கூடிய; மழு - (வரி 952) கோடரிப் படைக் கருவியும்; மானும் - பாயும் மானும்; தகமை தண்டு வேலுடனே -பெருமைக்குரிய தண்டாயுதமும்; வேலாயுதமும் கொண்டு; காண்க: 'மான்' (1084); 'தண்டு' (889, 2027);

*1046.* பாசக்கயறும் - பிணைக்கக்கூடிய கயிறும்; பாரவளையம் - இறுக்கிப் பற்றுவதற்குரிய இரும்பு வளையமும்; சூலமுடன் - சூலாயுதத்தையும் ஏந்திக் கொண்டு; காண்க: 'பாசக் கயறு', 'பாசம்' (1226, 1365, 1390, 1462, 1463, 1472, 1804, 1913, வி.44, வி.61);

*1047.* வாச மிகு - புகழ்மிக்க; ஆயுதங்கள் - படைக்கருவிகள்; வாகாகவே எடுத்து - பொருத்தமாக எடுத்துக் கொண்டு;

*1048.* பாலன்தனைச் செயிக்க - சிறுவன் மார்க்கண்டேயனை வதைத்துப் பற்ற; பண்புடனே மாமறலி - எமன் எல்லாவித ஏற்பாடுகளுடன்; பா.வே. - 'பண்புதருமராசாவும்' (மா.தவநிலை); 'பிடிக்க எமதர்மனும்' (கை.பிரதி);

*1049.* ஆலம் எனவே - (வரி 417) ஆலகால, கொடிய நஞ்சுபோல்; அன்று பொங்கி - அவ்வேளையில் கோபம் மிகுந்து; தானடந்தான் -புறப்பட்டான்; பா.வே. - 'அழன்று பொங்கியே நடந்தார்' (ச.ம.நூ.); 'அழன்று யங்கே' (மா.தவநிலை); 'பொங்கிதான் நடந்தான்' (கை.பிரதி);

*1050.* நமனார் - எமன்; பகடேறி - எருமைக் கடாவின் மீது அமர்ந்து; நன்றாகவே நடக்க - பீடு நடையுடன் செல்ல; பா.வே. - 'நமனார் சிரி' (ச.ம.நூ.);

*1051.* இமனார் பின் - எமனாரைப் பின்தொடர்ந்து; கிங்கிலியர்; ஏழாயிரம் கோடி - மிகுந்த அளவினர்; பா.வே. - 'ஏமனார்' (மா.தவ நிலை);

ஈயத்தடிக்கார ரெண்ண வொண்ணாக் கோடிவெள்ளம்

.........................................

வெள்ளித் தடிக்காரர் வேண்டும் பலர்கோடி
தெள்ளியசீர் தங்கஞ் சேத்த தடிக்காரர்களும்
1055 உருக்குத் தடியுமுலக்கை தண்டு வல்லையமும்
இருப்புத் தடிக்கார ரிருநூறு கோடிவெள்ளம்
தேர்கள் ளொருகோடி சேர்ந்தபரி கோடி
பார்க்குள் கரிகள் பதினாயிரங் கோடி

.....................................

1052. ஈயத்தடிக் காரர் - ஈயத்தடியைக் கையிலே சுழற்றிச் செல்வோரான கிங்கிலியர்; எண்ணவொண்ணா - எண்ணவியலாத; கோடி வெள்ளம் - நூறு இலட்சம் வெள்ளம் சேனையாகச் சென்றனர்; பா.வே. - 'ஈமத்தடிக்காரர் எண்ணாயிரங்கோடி' (ச.ம.நூ.); 'இய்யத் தடிக்காரர்' (மா.தவநிலை); ஒரு வெள்ளம் சேனை அளவு: 10,00,00,00,00,00,00,000.;

....பி.வே. - 'சாமத்தடிக்காரர் தான் அங்கு ஒருகோடி' (ச.ம.நூ.); 'சாயத் தடிக்காரர் தானும் மொருகோடி' (மா.தவநிலை);

1053. வெள்ளித் தடிக்காரர் - கைகளில் வெள்ளியாலான தடிகளைச் சுழற்றுவோர்; வேண்டும் பலர் கோடி - வேண்டியவர்கள் பல கோடியினர்; காண்க: 'வெள்ளித் தடிக்காரர்' (2022);

1054. தெள்ளிய சீர்தங்கம் - சுத்தமான தங்கத்தை; சேத்த < சேர்த்த - வைத்துச் செய்த; தடிக்காரர்களும் - தடிகளைக் கைகளில் சுழற்றுபவர்களும்;

1055. உருக்குத்தடியும் - உருக்கிய இரும்பால்செய்த தடிகளும்; உலக்கை - பருத்த உலக்கைகளும்; தண்டு - (வரி 889) தண்டு ஆயுதங்களும்; வல்லையமும் - எறி ஈட்டிகளும்; பா.வே. - 'வளையமும்' (ச.ம.நூ.);

1056. இருப்புத்தடிக்காரர் - இரும்பாலான தடிகளை யுடையோர்; இருநூறுகோடி வெள்ளம் - இருநூறுகோடி வெள்ள அளவு சேனையினர்;

1057. தேர்கள் ஒரு கோடி - நூறு இலட்சம் இரதங்களும்; சேர்ந்த பரிகோடி - அத்தேர்களை இழுத்துச் செல்லும் குதிரைகள் நூறு இலட்சம்; பா.வே. - 'சேரமா இருகோடி' (ச.ம.நூ.); 'தேர்மா யிருகோடி' (மா.தவநிலை);

1058. பார்க்குள் கரிகள் - பூமியில் யானைகள்; பதினாயிரங்கோடி பத்தாயிரம் கோடி அளவின;

....பி.வே. - 'செந்தூள் பறக்கச் சிறந்தார் பாரமுடன்' (ச.ம.நூ.); 'செந்தூள் பரக்கத் திரண்டார் வெகுபாரமுடன்' (மா.தவநிலை);

வந்து தெண்டனிட்டார் மறலி மலர்ப்பாதம்

**எமன் அவர்களை நிறுத்துதல்**

அங்கவரைத் தானோக்கி யான புகழெமன்
பங்கமறவே நாமும் பாலன் றனக்காக[ப்]
படையெடுத்தோ[ம்] யாமாகில் பாருலகுக் கோராது
விடையேறும் நல்ல வேதமுத லிலுள்ள
திங்களணி ஈசுபரருந் தேவர்களுந்தான் நகைப்பார்
இங்கு நில்லுமென்று யிவர்களையெல்லாம் நிறுத்தி

**மார்க்கண்டேயனை எமன் காண வருதல்**

மலைகளது நீறுபட மண்டல மெல்லாமதிர

*1059.* மறலிமலர்ப்பாதம் - பூவைப் போன்ற மென்மையான பாதங்களில்; வந்து தெண்டனிட்டார் - மேலேயுள்ள படையினர் வணங்கினர்; பா.வே. - 'தொழுதார் மகாகாலன் பொற்பாதம்' (ச.ம.நூ.); 'மகாயேமன்' (மா.தவநிலை);

*1060.* ஆன புகழ் எமன் - புகழ் விளங்கும் காலன்; அங்கவரைத் தானோக்கி - அங்கு வந்து குழுமியவர்களைப் பார்த்து; பா.வே. - 'ஆளின் வழுகாலன்' (ச.ம.நூ.); 'பார்த்து யடர்யேமன் யேதுரைப்பான்' (மா.தவநிலை);

*1061.* பங்கம் அறவே - வெட்கங் கெட்டு; பாலன் தனக்காக - கேவலம் ஒரு சிறுவனுக்காக; நாமும் - இவ்வளவு சேனைகளும்;

*1062.* படையெடுத்தோ[ம்] யாமாகில் - போருக்குச் செல்வோமானால்; பாருலகுக்கோராது - பூமியால் தாங்கவியலாது; பா.வே. - 'பாருலகுதான் நகைக்கும்' (ச.ம.நூ.); 'படையெடுத்து நாம் யேகில்' (மா.தவநிலை);

*1063.* விடையேறும் - எருது வாகனத்தில் அமரும்; வேத முதலிலுள்ள - நால் வகை வேதங்களுக்கும் முதன்மையான;

*1064.* திங்களணியீசுபரரும் - பிறைச் சந்திரனைச் சடையில் சூடியுள்ள சிவனும் (வரி 790); தேவர்களும் தான் - வானுலகத்தோரும்; நகைப்பார் - நம் செயலைப் பார்த்துச் சிரிப்பர்;

*1065.* இங்கு நில்லும் என்று - இங்கே தங்கிவிடுங்கள் என; இவர்களை எல்லாம் நிறுத்தி - இவ்வளவு சேனைகளையும் நிற்குமாறு கூறி;

*1066.* மலைகளது நீறுபட - கடின பாறைகளுள்ள குன்றுகள் பொடிபடும்படியாக; மண்டலமெல்லாம் - எல்லாக் கோள்களுமுள்ள

கலைபுகழுங் காலன் காரிடிபோலே முழங்கி
ஆகாசத் திக்குடனே யண்டங் கிடுகிடென
வாகாக யீரேழு மண்டலங்கள் தானதிர
பாதாள லோகப் பாம்பி னுடலதிர
மீதான யட்டகச மெட்டுமிக மயங்க
ஏமபுரம் விட்டு யியல்வு புகழ்க்காலன்
சாமவேத பாலன் தானிருக்கும் பூவில்வந்தான்

இப்பெரிய அண்டம் அனைத்தும்; அதிர - அசைய; பா.வே. - 'மண்டலங்கள் தான் நடுங்கி' (ச.ம.நூ.); காண்க: 'மண்டலம்' (621, 1233, 1237, 1832, 2359, 2607, 2631, வி.39);

1067. கலை புகழும் காலன் காரிடிபோல் - (வரி விளக்கம் 1027); முழங்கி - பயங்கரமாக ஒலிசெய்து;

1068. ஆகாசத்திக்குடனே - (வரி 15) வானிலுள்ள எல்லைகள் அனைத்திலுமுள்ள; அண்டம் கிடுகிடென - அண்டகோளம் எல்லாம் கிடுகிடு என அசைய; பா.வே. - 'அட்டகிரி அண்டம்' (ச.ம.நூ.);

1069. வாகாக - (அவற்றுக்கு) ஏற்ப; ஈரேழு மண்டலங்கள் - (வரி 1066) பதினான்கு அண்டங்களும்; தானதிர - அசைந்து கொள்ளவும்; பா.வே. - 'வாகாய ஏழு கடலும் மண்டலமீது எழுதிர்' (ச.ம.நூ.);

1070. பாதாளலோகப் பாம்பின் - கீழுலகத்தைச் சுமந்து தாங்கிக் கொண்டிருக்கும் பாம்பின் (பூமிக்குக் கீழ் இருந்து அதைத் தாங்கும் ஆதிசேடன் எனக் கொள்ளலாம்); உடல் அதிர - மேனி அசைய; காண்க: 'பாதாளம்' (1240, 1543, வி.55, 1734);

1071. மீதான - மேலேயுள்ள; அட்டகசம் < அட்டகயம் < அட்டகஜம் - எட்டுத் திசைகளிலும் பூமியைத் தாங்கும் (அஷ்டதிக் கஜங்கள்) யானைகள் (இவை, ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம் என்பன); எட்டும் - எண்வகையினவும்; மிகமயங்க - காலன் புறப்பட்டதனால் ஏற்பட்ட அதிர்வுகளினால் நிலைகுலைய; காண்க - 'அட்ட(ெ)கசம்' (1439, 1545, 2553);

1072. இயல்பு புகழ்க்காலன் - புகழை இயல்பாகப் பெற்ற எமன்; ஏமபுரம்விட்டு - தனது இராச்சியமான எமலோகத்தை நீங்கி; பா.வே. -'புவியில்யேமதருமன்' (மா.தவநிலை); 'காலதர்மன்' (கை.பிரதி);

1073. பூவில் - பலகிரகங்களுள் பூமியில்; சாமவேத பாலன் தானிருக்கும் - மூன்றாம் மறையாகிய சாமவேதம் அறிந்த மார்க்கண்டேயன் இறைவனை வணங்கி நிற்கும் கோவிலில்; வந்தான் - எமன் வந்து சேர்ந்தான்; பா.வே. - 'புவியில்' (மா.தவநிலை);

மாளா வரம்பெத்த மார்க்கண்டன் தன்னையிமன்
தாளாமலே தேடித் தான்காணும் வேளையிலே

**. மார்க்கண்டன் நிலையும் எமனின் தோற்றமும்**

ஓங்காரப் பத்தி யொளியேமனதில் வைத்து
நீங்காமல் பால னிமலனடினெஞ்சில் வைத்து
சிந்தைவைத்து யன்பாய்ச் சிவதோஷ்த்திர[ம்]
படித்தான்
வந்தானவ் வேளையிலே மகாகாலன் கோபமுடன்
ஏழு முகமு மிலங்குபுய மீரேழும்
சூழுங் கதிரேழுஞ் சூழ்ந்தகுழக் குண்டலமும்
இந்து வோரேழு மிலங்குபிறை நெத்திகளும்

1074. மாளாவரம் பெற்ற - சிரஞ்சீவியாக அருள்பெற்ற; மார்க்கண்டன் தன்னை; இமன் - காலன்;

1075. தாளாமலே தேடி - தளர்ச்சியடையாமல் முழுமுயற்சியுடன் அலைந்துதேடி; தான்காணும் வேளையிலே - எமன் பாலகனைக் கோவிலில் கண்டுபிடித்த பொழுது;

1076. ஓங்காரப் பத்தி - (வரி 292) ஓங்காரத்தின் மீது பக்திவைத்து; ஒளியை அதனால் ஏற்பட்ட கனலை உள்ளத்தில் நிறுத்தி;

1077. பாலன் - சிறுவன் மார்க்கண்டன்; நீங்காமல் - விலக்காமல்; நிமலனடி நெஞ்சில் வைத்து - சிவ பெருமானின் பாதகமலங்களை மனத்தில் நிறுத்தி; காண்க: 'நிமலன்' (406, 772, 1755, 1855, வி.57, வி.58, வி.59, வி.41, வி.62, வி.64, வி.65);

1078. சிந்தை வைத்து - நெஞ்சில் நிறுத்தி; அன்பாய் - பிரியமாய்; சிவதோஷ்த்தி[ம்] < சிவதோத்திர[ம்] - சிவன் மேல் துதிப்பாடல்களை; படித்தான் - சொன்னான்; காண்க: 'சிவதோஷ்த்திரம்' (324);

1079. மகாகாலன் - பெரிய புகழுடைய எமன்; கோபமுடன் - சினத்துடன்; அவ்வேளையிலே - அந்த நேரத்தில்; வந்தான் - கோவிலுக்குள் புகுந்தான்;

1080. ஏழுமுகமும் - (பார்க்க வரிவிளக்கம் 1042); இலங்குபுயம் ஈரேழும் - விளங்கும் பதினான்கு கைகளும் (வரி 1043);

1081. சூழும் - சுற்றிலும் ; கதிரேழும் - எழு ஞாயிறுபோன்று ஒளியுடைய முகமும்; சூழ்ந்த - அவற்றிலுள்ள; குழக்குண்டலமும் < குழை + குண்டலமும் - துளையுடைய காதில் குண்டலங்களும்;

1082. இந்து - சந்திரன்; ஓர் ஏழும் - நிலவு போன்ற வட்டமுகங்கள் ஏழிலும்; இலங்கு - விளங்கும்; பிறை - குறைச் சந்திரன் போன்ற; நெத்திகளும் < நெற்றிகளும்; காண்க: 'பிறை' (1324, 2112);

சுந்தரஞ்சே ரேழுந் துலங்கு கிரீடமலை
சக்கரமும் சங்குந் தனுச்சூல மான்மழுவும்
மிக்கதெண்டு கும்ப மிகுபாசங் கை(ய்)வாளி
வேலுங் கடுவு மிகுந்த யிடிகல்லுமழை
மாலும் பிரமன் வாகுசதா சிவனும்
ம(ய்)யேசு பரனும் மகாகால னிச்சளமும்
செய்ய வோரேழு(ம்)ஞ் சிறந்த சுருபமுடன்
அக்கினி யிலோங்கு மகோர சினமுடையான்
மிக்க யமுர்த மிகுந்த குணமுடையான்

*1083.* சுந்தரம் - அழகு; சேர் - சேர்ந்த; ஏழும் - ஏழு வதனங்களும்; துலங்கு - விளங்கச் செய்யும்; கிரீடமலை - தலையில் மலைபோன்று அமைந்துள்ள தலைக் கவசங்களும்; காண்க: 'கிரீடம்' *(1535, 1911);*

*1084.* சக்கரமும் சங்கும் தனு - *(1044*இல் கூறியது போல்) - அல்லது திருமால் ஏந்தியுள்ளதுபோல் சங்கு, சக்கர விற்படையும்; சூலமான் மழுவும் - *(வரி 1045)* சிவ மூர்த்தி தரித்துள்ள - திரிசூலாயுதமும், மானும், கோடரிப்படையும் கொண்டு;

*1085.* மிக்க - மிகப்பெரிய; தெண்டு < தண்டு - தண்டாயுதம் *(வரி 1045);* கும்பம் - கலசம்; மிகுபாசம் - நீண்ட பாசக்கயிறு *(வரி 1046);* கை(ய்)வாளி - கையில் அம்புடனும்;

*1086.* வேலும் - எறி ஈட்டியும் *(வரி 1045);* கடுவுமிகுந்த - (கடுமை > கடுவு) கடுமை மிகுதியாக அமைந்த; இடி - இடிமுழக்கமும்; கல்லுமழை - ஆலங்கட்டிமழைபோன்ற கனத்த மழையும் (காற்றும்);

*1087.* மாலும் - காக்கும் கடவுள் விஷ்ணுவும்; பிரமன் - படைக்கும் கடவுள், பிரமாவும்; வாகுசதாசிவனும் - அழிக்கும் கடவுளாகவும்; ஆக மும்மூர்த்திகளாகவும்;

*1088.* மகாகாலன் - பெரிய எமனானவன்; ம(ய்)யேசுபரனும் - முழுமுதற்கடவுளான சிவமூர்த்திபோல்; இச்சளமும் - இவ்வாறு மூர்க்கத்துடன்;

*1089.* செய்ய ஓர் ஏழும் - ஒவ்வொருமுகமும் மூர்க்கத்தை வெளியிட; சிறந்த சுருபமுடன் - *(வரி 206, 122)* சிறப்புற்று விளங்கும் தோற்றத்துடனும்;

*1090.* அக்கினியில் ஓங்கும் - கனலைவிடக் கடுமையான; அகோர- மிகுதியான; சினமுடையான் - கோபமுடையான்; பா.வே. - 'அக்கினி போல்' (மா.தவநிலை);

*1091.* மிக்க அமுர்த - *(வரி 227)* பொங்கிவரும் அமுதைப் போன்று குளிர்ச்சியும் இனிமையும் கொண்ட; மிகுந்த குணமுடையான் - (கோப

படிபுவன மண்டம் பலதீவில் சீவனெல்லாம்
மடிவு முடிவும் வளமைநெறி யறிவோன்
சீவ னெவைகளெல்லாம் சிறந்தவிதி முகிந்து
மூவரிட மூவேழுஆயிர மூன்று ரெட்டி
ஓடுஞ் சுவாசமதில் ஒன்றேனுஞ் சோராமல்
சாடுங் கயற்றான் தருமமணி மாராசன்

மும்) மிகுதியான சாந்த நலன்களையும் உடைய காலன்; பி.வே. 'மிக்கயமுர்தம்' (மா.தவநிலை);

1092. படி புவனம் அண்டம் - பூமி, கோள்கள் நிரம்பிய அண்டவெளியிலும்; பலதீவில் - இன்னும் பல இடங்களிலுள்ள சிறு தீவுகளிலும் உள்ள; சீவனெல்லாம் - உயிரினங்கள் அனைத்தின்; பா.வே. - 'அண்டரண்டம் பலதீவில் இவரெல்லாம்' (ச.ம.நூ.); 'பல பூவில்' (மா.தவநிலை); காண்க: 'புவனம்' (1236, 1371, 1649, 1834, 2196, 2600, வி.29, வி.35) 'சீவன்' (1094, 1098, 1231, 1239, 1240, 1241, 1247, 1392, 1642, 1664, 1690, 1693, 1697, 1716, 1846, 1851, 1955, 2358, 2362, வி.7, வி.25);

1093. மடிவு - சாவு; முடிவும் - ஆயுள் இறுதியும்; வளமைநெறி அறிவோன் - அவற்றின் பாவபுண்ணியங்களின் இயல்புகளை அறிந்து வைத்திருப்பவன்; பி.வே. - 'மடியும்' (ச.ம.நூ.); பா.வே. - 'வடிவும்', 'நெறியுடையான்' (மா.தவநிலை); 'மடிய' (கை.பிரதி);

1094. சீவன் எவைகள் எல்லாம் - (வரி 1092) உயிரினங்கள் எவையெவை உளவோ அவை அனைத்தும்; சிறந்தவிதி - அவற்றுக்கு விதிக்கப் பெற்ற ஆயுள்; முகிந்து < முடிந்து; பா.வே. - 'விதிமூச்சு' (ச.ம.நூ.); 'முடிவு' (மா.தவநிலை);

1095. மூவரிடம் - மூன்றுபேரிடம்; மூவேழாயிரம் - இருபத்தோராயிரம்; மூன்று ரெட்டி - இருநூற்றின் மூன்று இரட்டித்த அளவு அதாவது அறுநூறு; பா.வே. - 'மூவரும்' (ச.ம.நூ.);

1096. ஒடும் சுவாசமதில் - இவ்வளவு முறை ஓடுகின்ற மூச்சுத் துடிப்புகளில்; ஒன்றேனும் - ஒன்றாவது; சோராமல் - வீணாகாமல்; பா.வே. - 'ஒன்று எனினும் ஏறாமல்' (ச.ம.நூ.); 'ஒன்றேயின் குறைந்த தென்றால்' (மா.தவநிலை); 'ஒன்றும் குறைவேறாது' (கை.பிரதி);

1097. சாடும் கயற்றான் - சீவன்களைப் பற்றும் பாசக் கயிற்றால் பிடிக்கக் கூடியவன் (கயற்றான் < கயிற்றான்); தருமமணி மாராசன் - நீதிநெறி தவறாத புண்ணிய அரசன் காலன் ஆவான்; பி.வே. - 'கயிறதனால் தரும எமராசன்' (ச.ம.நூ.); 'ஏமன்ராசன்' (மா.தவநிலை); 'எமராஜன்' (கை.பிரதி);

### விருத்தம்

முடுகியே [சுவாசம்]...
மூவேழா யிரத்தாறு நூறும்
கடுகியே வெளிபோய் மீளுங்
கயறோடு தருமன் வந்தால்
நொடிகை யோர்நிமிச மொன்று
நுழைவழி நுழைய வொட்டான்
துடிகனல் சூல பாணி
சூள்விதி நினைவுள் ளோனே (32)

### நடை

### அனலும் மழுவும் நந்தியும் அகலுதல்

கோலமுட னேழு கொண்டல்வந்து சூழ்வதுபோல்
சீலமிகு காலன் சினந்துவரும் வேளையிலே
பொங்கு புரக்கனலும் பூவில் வடகனலும்

வி.32. முடுகியே (< முடுகு + ஏ) - விரைவாய்; [சுவாசம்] மூவேழாயிரத்தாறுநூறும் - இருபத்தோராயிரத்தறுநூறு முறைவிடும் மூச்சானது; கயறோடு (< கயிறோடு) தருமன் வந்தால் - பாசக்கயிற்றுடன் எமன் பிடிக்கவந்தால்; கடுகியே வெளிபோய் மீளும் - விரைவாகவெளி யேறும்; கை நொடி ஓர் - ஒருகை நொடித்தலான கால அளவு; நிமிசம் ஒன்று - ஒரு நிமிச அளவு; நுழைவழி நுழைய வொட்டான் - வெளியேறிய சுவாசத்தை அது நுழையக் கூடிய வழியாக மீண்டும் நுழைய விடமாட்டான்; துடி - துடிக்கின்ற உடுக்கையையும்; கனல் - அக்கினியையும்; சூலபாணி - சூலத்தையும் தாங்கியுள்ள சிவனின்; சூழ்விதி நினைவுள்ளோனே - விதிகளை உணர்ந்து செயல்படுபவனே எமதர்மன் ஆவான்; பா.வே. - 'துடிகள் வசூல் பாணி ஆள் வினை(யின்) நினைவுள்ளோனே' (ச.ம.நூ.); 'சுடுகனல் சூலபாணி' (மா.தவநிலை);

1098. கோலமுடன் - அழகான தோற்றத்துடன்; ஏழு கொண்டல் - ஏழுகருமுகில்கள்; வந்து சூழ்வதுபோல் - வந்து சூழ்ந்து கொள்வது போல்; பி.வே. - 'சூழ்ந்தாற்போல்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1099. சீலமிகுகாலன் - குணவான் எமன்; சினந்துவரும் வேளையிலே - கடுங்கோபத்துடன் கோவிலில் வந்து நின்ற பொழுதில்; பி.வே. -'சீலமுடன் காலன்' (ச.ம.நூ.); 'சீலம் நிறை யேமன்' (மா.தவநிலை); 'சீலநிறைகாலன்' (கை.பிரதி);

1100. பொங்குபுரக்கனலும் - வானிலே திரிந்த முப்புரங்களையும் எரித்த தீயும் (பார்க்க வரி விளக்கம் 871); பூவில் வடகனலும்

திங்களணி யீசுபரன்ஞ் செங்கைநிறை மழுவும்
இன்னாளில் கால னெமைவதைப்பா னென்றுயஞ்சி
அன்னாளிற் மூன்று மகண்டோடிப் போனதுவே
நந்தீசு பரரும் நமன்கோபங் கண்டுயஞ்சி
1105 கந்தமுடன் காணாமல் கலங்கி யொளித்திருந்தான்

**எமன் மார்க்கண்டேயனைக் கோவிலை விட்டுவெளிவரச் சொல்லுதல்**

சிந்தைவைத்து மைந்தன் சிவபூசை பண்ணுவதை
கந்த மிகுந்த காலன் மிகுந்தேதுரைப்பான்
தாக்குடனே வெள்ளந் தான்வருமுன்னே யணைகள்

பூலோகத்தில் வடபாலுள்ள வடவைத்தீயும்; பி.வே. - 'முப்புரக்கனலும்' (மா.தவநிலை);

1101. திங்கள் அணி ஈசுபரன் - பிறைசூடியான சிவனின்; செங்கை நிறை மழுவும் - சிவந்த உள்ளங்கை விரல்களால் பிடிக்கப் பட்டிருக்கும் மழுப்படையும்; பா.வே. - 'ஆலமும்' (ச.ம.நூ.); 'சூலம்மழு' (கை.பிரதி);

1102. இன்னாளில் - இவ்வளவு கோபத்துடன் இப்போது தோன்றிய; காலன் - எமன்; எமைவதைப்பான் - எங்களை ஒறுப்பான்; என்று அஞ்சி - எனப்பயந்து;

1103. அன்னாளில் - அப்போது; மூன்றும் - முப்புரத்தீயும், வடவைத் தீயும் மழுவும்; அகண்டு < அகன்று - காலனை எதிர்ப்பதிலிருந்து நீங்கி; ஓடிப் போனதுவே - வேறிடம் சென்றன;

1104. நந்தீசுபரரும் - இவற்றை இதுவரை ஏவிக் கொண்டிருந்த நந்தியானவரும்; நமன்கோபம் கண்டு அஞ்சி - எமன் சினத்தைப் பார்த்துப் பயந்து; பா.வே. - 'கோலம் கண்டு ஒளிந்தார்' (ச.ம.நூ.);

1105. கந்தமுடன் காணாமல் - வெளியில் தெரியாதவாறு; கலங்கி - பயந்து; ஒளித்திருந்தான் - வேறிடத்தில் மறைந்திருந்தான்;

1106. சிந்தைவைத்து - சிவன்பேரில் உள்ளத்தை ஈடுபடுத்தி; மைந் தன் - பாலன் மார்க்கண்டேயன்; சிவபூசை பண்ணுவதை - துதிப்பாடல் களை முணுமுணுத்தவாறு நிற்பதைப் பார்த்து;

1107. கந்தமிகுந்த காலன் - புகழ் மிகுந்த எமன்; மிகுந்து ஏதுரைப் பான் - பின்வருமாறு கூறுவான்; பி.வே. - 'கந்தம் நிறைந்த' (மா.தவ நிலை);

1108. தாக்குடனே - முன்கவனத்துடன்; வெள்ளம் தான் வருமுன்னே - மழைவெள்ளம் அதிகமாக வந்து வீணாவதற்கு முன்பாகவே; அணை கள் - தடுப்புகள்; பி.வே. - 'அணையின்' (ச.ம.நூ.);

சீக்கிரமாகச் சிறந்த தண்ணீர் போகாமல்
கட்டினால் நிற்குங் கடியபுனல் வெள்ளம்வந்து
முட்டிப் பின்னோடி முனைந்தாலுந் தானாமோ
சங்கை வருமுன்னே தவஞ்செய்தால் ரார்தமக்கும்
தங்குமடா சாகு[ந்] தறுவாயி லென்னதவம்
சாவு வருமுன்னே தவஞ்செய்வாய் நீ பாலா
சாவுவந்து மூண்டால் தவத்தில் விதிபோமா
வேத னெழுத்து விதியு முகிந்ததற்பின்
ஆதரவாய்ப் பூசை யறிந்தாயோ நீ பாலா

1109. சீக்கிரமாக - வேகமாக; சிறந்த தண்ணீர் போகாமல் - தேவைக்குரிய நீர் வீணாகாது; பா.வே. - 'சீக்கிரமாய் கட்ட சிறந்த தண்ணீர்த்தானடங்கும்' (கை.பிரதி);

1110. கட்டினால் - (அணைகள்) வைத்திருந்தால்; கடியபுனல் வெள்ளம் வந்து நிற்கும் - அவ்வணைகளைக் கடக்க வியலாது வேகமான மழைநீர் தேங்கி நிற்கும்; பா.வே. - 'கடுகியதோர்' (ச.ம.நூ.);

1111. முட்டிப் பின்னோடி - மோதி, பின்பு பலதிக்குகளிலும் வெளியே சாடமுடியாது ஓடி; முனைந்தாலும் - வெள்ளம் ஈடுபட்டாலும்; தானாமோ - அதால் முடியாது;

1112. சங்கை - (மரண)பயம்; வருமுன்னே - ஏற்படுவதற்கு முன்பே; தவஞ்செய்தால் - சிவனைத்துதித்து வரம் கேட்டிருந்தால்; ரார்தமக்கும் < ஆர்தமக்கும் - யாருக்கும்; பா.வே. - 'மங்கை வருமுன்னே' (ச.ம.நூ.); 'தவஞ்செய்தால் யீசன்யருள்' (மா.தவநிலை, கை.பிரதி);

1113. தங்குமடா - உயிர்தங்கும், அடா!; சாகு[ந்] தறுவாயில் - இறக்கும் பொழுதில்; என்னதவம் - தவஞ்செய்தல் என்னவேண்டியுள்ளது?; பா.வே. - 'என் பலன்' (மா.தவநிலை);

1114. சாவு வருமுன்னே - மரணம் எய்துவதற்கு முன்பாகவே; பாலா நீ - சிறுவனே! நீ; தவஞ்செய்வாய் - சிவனைத் துதித்திருக்க வேண்டும்;

1115. சாவு வந்து மூண்டால் - மரணம் வந்து சேர்ந்தால்; தவத்தில் - தவத்தால், தவம் செய்வதால்; விதிபோமோ - சாவு வராதுபோகுமா?;

1116. வேதன் - பிரமன்; எழுத்து விதியும் - விதித்தவிதி; முகிந்ததற்பின் - முடிவுற்றதின்பின்பு; பி.வே. - 'எழுத்தும் விதியும்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1117. பாலா, நீ - சிறுவனே!; ஆதரவாய்ப்பூசை - மரணத்தை வெல்லச் சிவனுக்கு ஏற்ற துதித்தலை; அறிந்தாயோ - காலங் கடந்துதான்

இட்ட யெழுத்து மியல்வாய் முகிந்தவர்க்கும்
திட்ட முடைய சிவபூசை தள்ளுமதோ
1120 சாகப் பயந்து தவஞ்செய்வா யாமாகில்
தாக விரிஞ்சன் தானெழுதுங் கற்பினையால்
யிப்பெரிய பூவி லிறையோன் விதித்தவிதி
தப்பிப்பிழைக்க வென்றால் தப்பவொட்டோம்
யாவரையும்
அந்தனா ளீசர் யரனும் விதித்தவிதி

தெரிந்து கொண்டாயோ?; பி.வே. - 'பாலகனே' (ச.ம.நூ.); 'ஆதரவின் பூசை' (மா.தவநிலை, கை.பிரதி);

1118. இட்ட எழுத்து - வேதன் விதித்த விதி; இயல்வாய் - தானாகவே; முகிந்தவர்க்கும் - முடிந்தவர்களுக்கும்; பி.வே. - 'முடிந் தோர்க்கு' (ச.ம.நூ.); 'முகிர்ந்ததன்பின்' (மா.தவநிலை); 'முடிந்ததின் பின்' (கை.பிரதி);

1119. திட்டமுடைய - எண்ணிச் செய்யத்தக்க; சிவபூசை தள்ளுமதோ - அவ்விதியைச் சிவதோத்திரத்தால் மாற்றமுடியுமா?;

1120. சாகப் பயந்து - மரணத்தை அஞ்சி; தவஞ்செய்வாயாமாகில் - சிவபூசை புரிவாயானால்; பா.வே. - 'தவஞ்செய்தால் ஆகுமதோ' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1121. தாக விரிஞ்சன் - ஆசையுடன் பிரமன்; தான் எழுதும் கற்பினையால் - (பிரமன்) தாம் நியமித்து, விதித்து எழுதும் விதியின் அடிப்படையில்; பா.வே. - 'தாகமுடன் விரிஞ்சன் தான் எழுத்து முன்விதியை' (ச.ம.நூ.); '... ஊழ் வினையை' (மா.தவநிலை); '...ஊழி விதி' (கை.பிரதி); காண்க: 'விரிஞ்சன்' (2131);

1122. இப்பெரிய பூவில் - இந்தப் பெரிய உலகில்; இறையோன் - சிவன்; விதித்தவிதி - சங்கரிக்கும்படி கட்டளையிட்டுள்ளவாறு; பா.வே. - 'எவரேனும் உள்(ள) விதியை' (ச.ம.நூ.); 'எவரேனும் வூள்விதியை' (மா.தவநிலை); 'எவர்தான் வூழ்வினையை' (கை.பிரதி);

1123. தப்பிப் பிழைக்க வென்றால் - எந்த உயிராவது அத்திட்டத்திலி ருந்து விலகி, மீறி நிற்பது எனில்; யாவரையும் தப்பவொட்டோம் -எவரானாலும் அதிலிருந்து விலகவிடமாட்டோம்; பி.வே. - 'ஒட்டேன்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1124. அந்தனாள் ஈசர், அரனும் - உன்னைப் பிள்ளை வரமாகச் சிவனும் நல்கிய நாளில்; விதித்தவிதி - வரையறுத்த பதினாறு ஆண்டு ஆயுளின்படி; பா.வே. - 'ஈசர்அயனும்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை. பிரதி);

இந்தனாள் சாவுக்கு யான்விடே னெங்கிருந்து
வீணடா பூசை விரும்புகிலு மூழிவிதி
காணடா நீயுங் கலங்கி யுடல்பதறி
குத்தி யுனையுங் குலைசெய்து கொண்டுழக்கி
வெத்திசெய்வேன் கல்லுநிலை விட்டு வெளிவாடா

## மார்க்கண்டேயன் இலிங்கத்தின் அருகில் நெருங்கி நிற்றல்

என்றுதான் காலனிவை கூறவே புதல்வன்
அன்று திடுக்கிட்டு யடர்காலனைப் பார்த்தான்

*1125.* இந்தநாள் - இன்றைய தினத்தில்; சாவுக்கு - நீ மரணம் எய்துதலுக்கு உரியது; யான்விடேன் - நான் அதன்படியே நடந்து உன்னையும் விடாமல் பற்றுவேன்; எங்கிருந்து - எவ்விடத்தில் இருந்தாலும்; பா.வே. - 'ஏங்குகிலும்' (ச.ம.நூ.); 'சாவுனக்கு யானும் விடுவேனோ' (மா.தவநிலை); 'யான்விடேன் யெங்கு யேகினும்' (கை.பிரதி);

*1126.* பூசை விரும்புகிலும் - சிவபூசையை விரும்பிச் செய்தாலும்; வீணடா - அது வீணானதே, அடா! ஊழிவிதி - (வரி 743) ஊழ்வினை; பா.வே. - 'விண்டா', 'சாவுனக்கு' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*1127.* நீயும் காணடா - அடா! நீ இப்போது காணப் போகிறாய்; கலங்கியுடல் பதறி - கலக்கமுற்று, உடலானது பயத்தால் வெடுவெடுக்க; பா.வே. - 'கண்டாய் நிலையும் கலங்கி உயிர்தான் பார்த்து' (ச.ம.நூ.); 'உயிர் பதைத்து' (மா.தவநிலை); 'உயிர்தான் பதற' (கை.பிரதி);

*1128.* உனையும் குத்தி - உன் உடலில் சூலாயுதத்தால் குத்தி; குலைசெய்து < கொலை செய்து - கொன்று; கொண்டு உழக்கி - கொண்டுசென்று மிதித்து, கலக்கி; பா.வே. - 'கொற்றிளக்கி' (மா.தவநிலை); 'கொலைசெய்தேயேகி' (கை.பிரதி);

*1129.* வெத்திசெய்வேன் < வெற்றி செய்வேன் - உன்னை வெல்லுவேன்; கல்லுநிலைவிட்டு - இலிங்கம் உள்ள கல்மண்டபமான கருவறையிலிருந்து; வெளிவாடா - அடே! வெளியே வா; பி.வே. - 'வெற்றி' (ச.ம.நூ.); 'வெத்தி செய்முன்' (மா.தவநிலை); 'வெத்திசை நின்கல்லும்' (கை.பிரதி);

*1130.* என்றுதான் காலன் இவை கூறவே - மேலே[illegible]வற்றை எமன் கூறவும்; புதல்வன் - சிறுவன் மார்க்கண்டேயன்; பி.வே. - '[illegible]லன்' (ச.ம.நூ.);

*1131.* அன்று - அப்பொழுது; திடுக்கிட்டு - அதி[illegible]கப் [illegible]ந்து; அடர்காலனை - தன்னைப் பிடிக்க நெருங்கி வரும் [illegible] - கண்டான்;

காலன் மிகுகோபங் கண்டலறி மெய்மறந்து
சீலமிகு நெஞ்சந் திடுக்கிட் டுடல்பதறி
சண்ட னுரையில் தனித்துநிற்கவே பயந்து
அண்டர்பிரான் கிட்ட யலறிப் பயந்தணுகி
வாடி மனமுருகி மார்க்கண்ட னேற்கமுற்று
நாடினே னுன்பாதம் நாதனே யென்றழுதான்
பயந்தே னெனைக்காரும் பரனேயபைய மென்றான்

1132. காலன் மிகு கோபம் கண்டு - மிகுதியாகக் கோபமடைந்த எமனைக் கண்டு; அலறி - பயத்தால் குரலெழுப்பி; மெய்மறந்து - தன்னிலையிழந்து; பா.வே. - 'காலனுட கோலம் கண்டவுரிப் பாலக னும்' (ச.ம.நூ.); 'காலனுடன் கோலமதை' (மா.தவநிலை); 'காலனுட கோபமதை' (கை.பிரதி);

1133. சீலமிகு நெஞ்சம் - நல்லொழுக்கம் நிரம்பியுள்ள உள்ளம்; திடுக்கிட்டு உடல் பதறி - கலங்கி உடம்பு வெடுவெடுத்து; பா.வே. - 'சீலநெறிநெஞ்சம்' (ச.ம.நூ.); 'சீலநிறைநெஞ்சம்' (மா.தவநிலை, கை.பிரதி);

1134. சண்டன் உரையில் - (வரி 801) எமனுடைய கோபச் சொற்க ளுக்கு; தனித்து நிற்கவே பயந்து - எதிராகத் தானொருவனே நிற்க அஞ்சி; பா.வே. - 'சண்டன் எதிர்பாலன்' (ச.ம.நூ.); 'சண்டன்வுடன்' (மா.தவ நிலை); 'சண்டனுடன்' (கை.பிரதி);

1135. அண்டர்பிரான் கிட்ட - உலக நாயகனான சிவன் அருகில்; அலறிப் பயந்தணுகி - ஓலமிட்டு, அஞ்சி, மிக அடுத்துச் சென்று; பி.வே. - 'கிட்டே' (ச.ம.நூ.); 'யணுகிப் பயந்து யலறி' (மா.தவநிலை); 'அண்டர்பிரானிடம்' (கை.பிரதி);

1136. வாடி - இனி என்ன செய்யப்போகிறோம் என வாட்ட மடைந்து; மனமுருகி - உள்ளம் மருவி; மார்க்கண்டேயன்; ஏற்கமுற்று < ஏக்கம் உற்று - பெருமூச்செறிந்து, மருகி; பா.வே. - 'மனம் பதறி... ஏக்கமதாய்' (ச.ம.நூ.); 'மனதுவுருகி' (மா.தவநிலை); 'நாடி' (கை.பிரதி);

1137. நாதனே - இறைவனே; நாடினேன் உன் பாதம் - உன் திருவடிகளின் உதவியைத் தேடி வந்தேன்; என்று அழுதான் - என வருந்தினான்; பி.வே. - 'நாயகனே' (ச.ம.நூ.);

1138. பயந்தேன் - கடுங்கோபத்துடன் என்னைப் பிடிக்க வந்துள்ள எமனுக்கு அஞ்சினேன்; எனைக்காரும் - சிறுவனான என்னைக் காப்பாற் றுக; பரனே - இறைவனே; அபையம் - உம் அடைக்கலம்; என்றான் - என அழுது கூறினான்; பி.வே. - 'அபயம்' (ச.ம.நூ.); 'யனைக் காக்க' (கை.பிரதி);

அயந்தே னிதுசமைய மாதியே காருமென்றான்
உந்தனடைக் கலமா யுண்மையுட னேயிருந்து
எந்தனக்கு யிப்போ எமவாதை யுண்டாச்சு
அரனே பராபரனே யறுமுகவன் தந்தையரே
பரனே யபையமென்ற பாலனைப்பாற்றே யிமன்றான்

**இலிங்கத்தை எமன் வெறும் கல் என்று கூறுதல்**

வெள்ளிமலை யீசர் மேதினியில் பூசைசெய்யும்
ஒள்ளியதோர் கல்லு முனதுவிதி தள்ளுமோடா

*1139.* இது சமயம் - இப்பொழுது; அயந்தேன் < அயர்ந்தேன் - தளர்ந்தேன்; ஆதியே - முதல்வனே; காரும் என்றான் - காலனிடமிருந்து காப்பாற்றுக என்று அழுதான்; பி.வே. - 'அயர்ந்தேன்' (ச.ம.நூ.); பா.வே. - 'ஆய்ந்தோன்' (கை.பிரதி);

*1140.* உந்தன் - உம்முடைய; அடைக்கலமாய் - அபையமாய்; உண்மையுடனேயிருந்து - மெய்யான பூசைமுறைகளைச் செய்து பக்தியுடன் இருந்த; பா.வே. - 'உண்மை அடியேன்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*1141.* எந்தனக்கு - எனக்கு; இப்போ - இன்னேரம்; எமவாதை - மரணபயம், காலனுடைய துன்புறுத்தல்; உண்டாச்சு - (உண்டாயிற்று) ஏற்பட்டுள்ளது; பி.வே. - 'உண்டாச்சோ' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*1142.* அரனே பராபரனே - இறைவனே; அறுமுகவன் தந்தையரே - (வரி 90) முருகனின் தந்தையாகிய இறைவனே; பி.வே. - 'அறுமுகன்' (ச.ம.நூ.); 'ஆறுமுகன்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1143.* பரனே - இறைவனே; அபையம் என்ற - இறைவனின் அடைக்கலம் என்று கூறிய; பாலனைப் பாற்றே - சிறுவனைப் பார்த்து (பாற்றே < பார்த்தே); இமன் தான் - காலனும்தான்; பி.வே. - 'பார்த்தே காலன்' (ச.ம.நூ.); 'பாலகனும் தான் அழவே' (மா.தவநிலை); காண்க: 'அபையம்' 'அபயம்' (859, 862, 1330, 2286);

*1144.* வெள்ளிமலை ஈசர் - (வரி 1024) கைலாய நாதர் ஆன இறைவன்; மேதினியில் - பூவுலகில்; பூசைசெய்யும் - நீ வழிபடக் கூடிய; பா.வே. - 'ஈசர் சொல்லை' (ச.ம.நூ. மா.தவநிலை); 'யீசர் கல்லை' (கை.பிரதி);

*1145.* ஒள்ளியதோர் கல்லும் - அழகாக வடிக்கப்பட்டுள்ள கற்சிலை இறைவனைப்போலாகி; உனது விதி தள்ளுமோடா - அடே! உனக்கு நேர்ந்துள்ள இம் மரணத்தை வெல்லுமோ?; பி.வே. - 'உன்விதியை' (ச.ம.நூ.); 'உள்ளியதோர்' (மா.தவநிலை, கை.பிரதி);

வல்ல புகழீசர் வகுத்த விதிதனையும்
கல்லதுவுந் தள்ளுமோடா கண்டாயோ யீசனையும்
ஈச னிருப்பு யிறையோன் சுருபமெல்லாம்
காசினியில் கல்லோடா கண்டுனீ பூசைசெய்தாய்
இந்தப்படி கல்லு யியல்வளரும் பூமியெல்லாம்
சிந்தையுட னெண்ணவொண்ணாத் தெய்வமென்பார் மெத்தவுண்டு
சிவரூபங் காணார் சிறந்தவலுக் கல்லைநம்பி

*1146.* வல்லபுகழ் ஈசர் - பெரிய பெருமைக்குரிய இறைவன்; வகுத்த விதி தனையும் - முன்பு உனக்குரியதாக நல்கிய வாழ் நாள் தனையும்; பா.வே. - 'வல்லவர்கள் மூவர்' 'ஆறில்' (ச.ம.நூ.); 'வல்லபுகழ் மூவர்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1147.* கல்லதுவும் தள்ளுமோடா - நீ இப்போது வழிபடும் வெறும் கற்சிலையானது அவ்விதியை மாற்றுமோ; ஈசனையும் கண்டாயோ - நீ கல்லிலே இறைவனைக் கண்டுவிட்டாயோ?; பி.வே. - 'கல்லிதுவும்' (ச.ம.நூ., மா.தவநிலை); பி.வே. - 'கல்லிதுவும்' (ச.ம.நூ., மா.தவ நிலை); பா.வே. - 'கண்டாயோ மூவரையும்' (கை.பிரதி);

*1148.* ஈசன் இருப்பு - இறைவன் உறையுமிடமும்; இறையோன் சுருபம் எல்லாம் - சிவபெருமானின் பொன்னார் மேனிபோன்ற பல உருவங்கள் அனைத்தும்; (கைலாயத்தில் அல்லாதே); பா.வே. - 'இறை யோனிடத்து உமையும்' (ச.ம.நூ.); 'இமையோர் யிடத்துரையும்' (மா. தவநிலை); 'இறையோரிடத்திருப்பும்' (கை.பிரதி);

*1149.* காசினியில் - இப்பூமியில்; கல்லோடா - கல்லாக உள்ள இச்சிலையில் வந்து இருப்பாரோ; கண்டு நீ பூசைசெய்தாய் - அவ்வாறு இருப்பவரைப் பார்த்தா நீ வழிபாடு செய்கின்றாய்?; பி.வே. - 'கல்லாகக் கண்டுடா' (ச.ம.நூ.); 'கல்லால்', '...கண்டாயோடா' (மா.தவநிலை); 'கல்லாய்... பூவில்' (கை.பிரதி); காண்க: 'காசினி' (35, 1164);

*1150.* இந்தப்படி - இதைப்போன்ற; கல்லு - கல்லாலான உருவங் கள்; இயல்வளரும் பூமியெல்லாம் - இவ்வுலக முழுவதும் இயல்பாகக் காணப்படும்; பி.வே. - 'பூமியிலே' (ச.ம.நூ., கை.பிரதி);

*1151.* சிந்தையுடன் - அறிவுணர்வுடன்; எண்ணவொண்ணா - எண்ணிச் சொல்வதற்கு இயலாத; மெத்தவுண்டு தெய்வம் என்பார் - எவ்வளவோ தெய்வங்கள் உள எனக்கூறித்திரிவர்; பா.வே. - 'தந்தையு டன்' (ச.ம.நூ.); 'தேடிவளர்ப்பார் மெத்தவுண்டு' (மா.தவநிலை); 'தேவ ரென்பார்' (கை.பிரதி);

*1152.* சிறந்த வலுக்கல்லை நம்பி - அவ்வாறு எங்குமுள்ள பாரவலுக் கற்களை நம்பி; சிவரூபம் காணார் - சிவபெருமானின் சொரூபங்களைக்

தவஞ்செய்தோ ரூழிவிதி தள்ளயெவர் வாழ்ந்திருந்தார்
வாடா துனதுயிரை வாதையில்லாதே வாங்கி
தாடாளா போவேன் தயங்காமல் வந்திடென்றான்
அந்தவுரை கேட்டு யறமெலிந்து பாலகனும்
எந்தன் பிரானே யிமையோர்கள் தேடரிய
சுந்தரனைக் கல்லிதென்று சொல்லுவனோ காலனவன்
சிந்தை கலங்கிச் சிவனே யெனவழுது

காணமாட்டார்; பா.வே. - 'சிறந்த விஞ்சை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'சிவசொரூபம்' (கை.பிரதி);

1153. ஊழிவிதி - (வரி 743) ஊழ்விதி, மரணம்; தள்ள - நீங்க; தவஞ்செய்தோர் எவர் - தவசு புரிந்தோர் யாராவது; வாழ்ந்திருந்தார் - மரணத்தை வென்று வாழ்ந்தோருண்டோ?; பா.வே. - 'தவஞ்செய்தா ருள் விதிதள்ளி' (ச.ம.நூ.); 'தள்ளியே வாழ்ந்திருந்தார்' (மா.தவநிலை, கை.பிரதி);

1154. வாடா - அடே! சிறுவா! வந்துவிடு; உனது உயிரை (துனது < உனது) - உன்னுடைய வாழ்நாளை; வாதை இல்லாதே வாங்கி - உன் உடம்பில் மரண அவஸ்தை எதுவுமில்லாது உன் உயிரைப் பறித்து; பி.வே. - 'வாடா நீ' (ச.ம.நூ.); 'வாடா யிதென்னபுத்தி' (மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'வாதை' (2207);

1155. தாடாளா - பெரும் முயற்சி செய்து கொண்டிருப்போனே; போவேன் - நான் எமலோகம் திரும்பிச் செல்வேன்; தயங்காமல் வந்திடு என்றான் - மறுக்காமல் வந்துவிடு என்று கூறினான்; பி.வே. - 'நான் போகிறேன்' (ச.ம.நூ.); 'தான்நடா வுன்வுயிரை வாங்கி தவங்காமல் போறே யென்றான்' (மா.தவநிலை); காண்க: 'தாடாளன்' (700);

1156. அந்தவுரைகேட்டு - எமனுடைய கேலிமொழிகளைக் கேட்டு; பாலகனும் - மார்க்கண்டேயனும்; அறமெலிந்து - முற்றும் வாடி; பா.வே. - 'அரமேவித் துதி பாலகனும்' (ச.ம.நூ.); 'அகம் நடுங்கி' (கை.பிரதி);

1157. எந்தன் பிரானே - என்னுடைய தலைவனே, இறைவனே; இமையோர்கள் தேடரிய - கண் இமைக்காத வானவர் தேடியும் காணவிய லாத; பி.வே. - 'தேடறியா' (ச.ம.நூ.); 'தேடறியாய்' (மா.தவநிலை);

1158. சுந்தரனை - அழகன் இறைவனை; கல் இது என்று - வெறும் கல் என; காலன் அவன் சொல்லுவனோ - எமனானவன் எப்படிக் கூறுவான்? பா.வே. - 'கல்லதென்று ... கால நமன்' (ச.ம.நூ.); 'சுந்தரரை கல்லென்று... யேமனுந்தான்' (மா.தவநிலை); 'சொன்னானே கால நமன்' (கை.பிரதி);

1159. சிந்தை கலங்கி - உள்ளம் தடுமாறி; சிவனே என அழுது - இறைவன் பெயரை உச்சரித்து அழுது;

## மார்க்கண்டேயன் பயத்தை இறைவன் விலக்கல்

மைந்த னழவே மகாதேவர் பாலனுட
சிந்தை தனிலெழுந்து தீத்தார் பயமெவையும்

### விருத்தம்

கண்ணில் செவியில் நாசிமிகு
கருணை பொழியும் நாவதனில்
எண்ணிக் கமல மிருதயத்தி
லெங்கு மிகுந்த பரஞ்சோதி
மண்ணில் பாலன் மனதிருந்து
மாய்கை விளைக்க வலுவாக்கி
விண்ணில் பெரிய யெமனுடன்
விகட முரைக்க மூட்டிவிட்டார் (33)

1160. மைந்தன் அழவே - மார்க்கண்டேயன் அழுது கலங்கவும்; மகாதேவர் - (வரி 746) - இறைவன்; பாலனுட < பாலனுடைய - சிறுவனுடைய;

1161. சிந்தைதனில் எழுந்து - உள்ளத்தில் உதயமாகி; பயமெவை யும் - அச்சம் எல்லாவற்றையும்; தீத்தார் < தீர்த்தார் - இல்லாதாக்கினார்; பா.வே. - 'உள்ளுறைந்து' (மா.தவநிலை); 'நுழைந்து' (கை.பிரதி);

வி.33. கண்ணில் - அடியவர்களின் கண்களிலும்; செவியில் - காதுகளிலும்; நாசி - மூக்கிலும்; மிகு கருணை பொழியும் நாவதனில் - மிகுதியாக அன்பைச் சொறியும் நாக்கிலும்; எண்ணிக் கமல மிருதயத் தில் - நினைக்கக் கூடிய தாமரை போன்று நடுவிலுள்ள நெஞ்சில் - ஆக ஐம்புலன்களிலும்; எங்கும் - வேறுள்ள எல்லா இடங்களிலும்; மிகுந்த - பரந்து காட்சியளிக்கின்ற; பரஞ்சோதி - ஒளிமயமான இறை வன்; மண்ணில் - பூமியில் தன் கோவில் ஒன்றில் வழிபாடு செய்கின்ற; பாலன் - சிறுவன் மார்க்கண்டேயன்; மனதிருந்து - உள்ளத்தில் வந்து தங்கி; மாய்கை விளைக்க - பிறருக்கு விளங்குமாறு மாயங்களைச் செய்து காட்ட; வலுவாக்கி - மறலியைக் கண்டு பயந்திருந்த மார்க்கண்டேய னைத் திடப்படுத்தி; விண்ணில் பெரிய யெமனுடன் - வானுலகத்திலுள் ளவர்களில் பெரியவனான காலனுடன்; விகடமுரைக்க - கேலியுடன் உரையாடல் செய்ய; மூட்டி விட்டார் - சிறுவனைக் தூண்டிவிட்டார்;

பா.வே. - 'நாசியின் வாய்', 'கருணை எவையும் இருதயத்தில்', ' எண்ணிக்கலந்து ஏகமதாய்...நிறைந்த', 'மண்ணறு பாவன மனதுபயம்', 'மாய்கை வினை கல்லுவாக்கி', 'கடமுரைக்க' (ச.ம.நூ.); 'நாசினியில்', 'கருணை யிருதையந் தன்னில்', 'புதல்வன்' (மா.தவநிலை); 'புதல்வன்' (கை.பிரதி);

## மார்க்கண்டேயன் எமனிடம் இறைவன் பெருமைகளைக் கூறல்

அயந்த புதல்வன் யரனா ரருளாலே
பயந்தீர்ந்து பாலகனும் பாத்தெமனோ டுரைப்பான்
கல்லென்று சொன்னாயே காசினியி லீசுபரனை
வில்லொன்றால் முப்புரத்தை விம்மி யெரித்தசிவம்
எங்கு மிருப்பா னிறையோ னென்றெண்ணாமல்
தங்கும்கலைக் கல்லெனவே தானுரைத்தா யெண்ணாமல்
யிங்கு நின்றலிங்க மியல்வுடனே யெங்களுக்கு

*1162.* அயந்த < அயர்ந்த - தளர்ச்சியுற்றிருந்த; புதல்வன் - சிறுவன்; அரனார் அருளாலே - இறைவன் உள்ளத்தில் எழுந்து ஊக்கிவிட்ட கருணையால்; பா.வே. - 'ஆய்ந்த புதல்வன்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*1163.* பாலகனும் - மார்க்கண்டேயனும்; பயந்தீர்ந்து - எமனைக் கண்டு அஞ்சியதை நீக்கித் தைரியமடைந்து; பாத்து < பார்த்து; எமனோடு உரைப்பான் - எமனிடம் பின்வருமாறு பதிலுரைத்தான்; பா.வே. - 'பாய்ந்திருந்து' (ச.ம.நூ.);

*1164.* காசினியில் ஈசுபரனை - உலகத்தில் எங்குமுள்ள இறைவனை கல் என்று சொன்னாயே - வெறும் கற்சிலை எனக் கூறினாய் அல்லவா?; (அவ்வாறெனில்); பா.வே. - 'கருணாகரப் பொருளை' (ச.ம.நூ.);

*1165.* வில் ஒன்றால் - வெறும் ஒரு வில்லை ஏந்திக் கொண்டே; முப்புரத்தை - திரிபுரத்தை (விளக்கம் 871); விம்மி - பொங்கிவந்த சிரிப்பை அடக்க முடியாமல் சிரித்து; எரித்த சிவம் - அப் புரங்கள் மூன்றையும் தீக்கிரையாக்கிய சிவபெருமான்; காண்க: 'முப்புரம்' (1920);

*1166.* எங்கும் இருப்பான் - எவ்விடத்திலும் எப்பொருளிலும் உறைபவன்; இறைவன் - அவன் தான் முழுமுதற்கடவுள்; என்று எண்ணாமல் - என நினைக்காது;

*1167.* கலை தங்கும் கல் எனவே - அழகாகக் காட்சி தரும் வெறும் கல் என; எண்ணாமல் தானுரைத்தாய் - கொஞ்சமும் சிந்தியாது நீ கூறிவிட்டாய்;

*1168.* இங்கு நின்ற லிங்கம் - இக் கோவிலில் எழுந்தருளியுள்ள இலிங்கமான இறைவன்; இயல்வுடனே எங்களுக்கு - இயல்பாகவே எங்கள் மூதாதையர் தொடக்கமுள்ள எங்கள் குடும்பத்தினர்க்கும் மற்றும் ஊராருக்கும் உறவினர்க்கும்; காண்க: 'லிங்கம்' (1207, 1219, 1603, 1606, வி.28, வி.35, வி.39, வி.45, வி.49, வி.70);

திங்க ளணியுஞ் சிவனாரென்றே யிருப்போம்
கல்லுக்கு ளீசன் கருத்துக்கு ளீசனுண்டும்
அல்லுக்கு ளீச னண்டவெளி யீசன்
எங்கும் னிரம்பி யிருக்குகின்ற யெங்கோனை[ப்]
பொங்கு புகழ்னீயும் புவியிலில்லை யென்றாயே
அந்திமதி சூடு மரனா ரடியவர்க்காய்
வந்தாரே யாமாகில் மறலியே யுன்னையவர்
கொன்றிடுவா ரேகவொட்டார் கோலமிகு விழியால்

1169. திங்கள் அணியும் சிவனார் - சந்திரனைச் சூடியுள்ள (வரி 863) சிவபெருமான்; என்றே இருப்போம் - என்று எண்ணித்தான் தொழுது, வணங்கி வந்து கொண்டிருக்கிறோம்;

1170. கல்லுக்குள் ஈசன் (உண்டும்) - சாதாரணக் கல்லை வணங்கினா லும் அதன் உள்ளேயும் இறைவன் உறைவான்; கருத்துக்குள் ஈசன் உண்டும் - அவ்வாறு உருவத்தை வணங்காது உள்ளத்தாலேயே இறை வனை எண்ணினாலும் அவ்வெண்ணத்தில் இறைவன் இருப்பான்;

1171. அல்லுக்குள் ஈசன் - எதையும் காணவியலாத இருளில்கூட இறைவன் உள்ளான்; அண்ட வெளி ஈசன் - வெளிச்சமாகப் பரந்துள்ள அண்டசராசரங்களிலும் அவன் உள்ளான்; பா.வே. - 'அகண்டவெளி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'அண்டவெளி' (வி.43, வி. 47);

1172. எங்கும் நிரம்பி இருக்குகின்ற - எவ்விடத்தும் எப்பொருளிடத் தும் மிகுந்து காணப்படுகின்ற; எங்கோனை - எங்கள் நாயகனாம் இறைவனை; பா.வே. - 'மெய்ப்பொருள்' (ச.ம.நூ.); 'பராபரத்தோன்' (மா.தவநிலை, கை.பிரதி);

1173. பொங்கு புகழ் நீயும் - நிறைந்த பெருமைகளைச் சேர்க்கும் எமனே!; புவியில் - பூலோகத்தில்; இல்லை யென்றாயே - காணப்பட மாட்டார் (வானுலகத்தில் மட்டும் தான் காணப்படுவார்) என்று கூறி னாய் அல்லவா?;

1174. அந்தி மதி சூடும் அரனார் - பிறைசூடும் ஈசர் (வரி 771); அடியவர்க்காய் - பூமியிலுள்ள சிவபக்தர்களுக்காக;

1175. வந்தாரேயாமாகில் - பூமியில் தோன்றினாரானால்; மறலியே - எமனே; உன்னை அவர் - இப்போது இங்கு வந்துள்ள நின்னை, இறைவன்;

1176. கோலமிகு விழியால் - அழகான நெற்றியிலே விளங்கும் கண்ணொளியால்; கொன்றிடுவார் - உன் உயிரைப் போக்கிவிடுவார்; ஏகவொட்டார் - நீ எமலோகத்துக்குத் திரும்பிச் செல்ல முடியாது;

அன்று புரந்தீயிட் டம்மதனைத் தானெரித்து
அந்திமதி சூடு மரனருளை நெஞ்சில்வைய்த்து
சிந்தை யொன்றாய்வைத்துச் சிவபூசை பண்ணுகையில்
நீயோ யெனைப்பிடித்து நிமைக்குமுன்னே யேகிறவன்
தீயோதா னீயலுக்குத் திரளான நல்லுணர்வு
வலியா ரடியிணையை மறவாதே நெஞ்சில்வைய்த்து
சலியாதெனைப் பிடிக்கத் தான்முடியா துன்னாலே

**எமதர்மம் இன்னது என எமன் எடுத்துரைத்தல்**

என்று மார்க்கண்ட னியம்ப வலுயெமன்

1177. அன்று புரம் தீயிட்டு - முன்னொரு காலத்தில் தன்சிரிப்பாலே முப்புரங்களைத் தீக்கிரையாக்கியவர்; அம் மதனைத் தான் எரித்து - அந்த மன்மதன் என்பானை நெற்றிக்கண் ஒளியால் எரித்தவர்;

1178. அந்திமதிசூடும் அரன் அருளை - பிறைச் சந்திரனைச் சூடும் ஈசன்மேல் உள்ள பக்தியை; நெஞ்சில் வைய்த்து - உள்ளத்திலே நிலையாக இருத்தி;

1179. சிந்தை ஒன்றாய் வைத்து - மனத்தை இறைவன்மேல் ஒருமுகப் படுத்தி; சிவபூசை பண்ணுகையில் - சிவன்மேல் வழிபாடு புரிகையில்;

1180. நீயோ - நீதானோ, (உன்னால் முடியுமோ?); எனைப்பிடித்து - எந்தனைப் பற்றி; நிமைக்கு முன்னே - இமைக்கும் முன்பே; ஏகிறவன் - எமபுரம் செல்பவன்;

1181. தீயோதான் - சுட்டெரிக்கும் நெருப்பு (எங்காவது); ஈயலுக்கு (ஈசல் - ஈசெல்) - (மழைக் காலங்களில் பூமியிலிருந்து வெளிவரும் எறும்பு வகைகளில் ஒன்று); திரளான நல்லுணர்வு - சேர்ந்த நட்பினைக் காட்டுமா?;

1182. வலியார் அடியிணையை மறவாதே நெஞ்சில் வைய்த்து - வன்மையுடைய சிவனின் இணைப்பாதங்களை என்றும் உள்ளத்தில் நினைத்துள்ள என்னை;

1183. சலியாத - எத்தனைமுறை வணங்கினாலும் அயர்வு தோன் றாத; எனைப் பிடிக்கத் தான் முடியாது உன்னாலே - உன்னால் என்னைப் பற்றிக் கொண்டு செல்ல இயலாது;

1184. என்று - என; மார்க்கண்டேயன்; இயம்ப - எமனை எதிர்த்துக் கூற; வலுயெமன் - வலுவுள்ள எமதருமன்; பி.வே. - 'வலுயேமன்' (மா.தவநிலை, கை.பிரதி);

குன்று வலுபுயத்தான் கோவித்தங் கேதுரைப்பான்
சங்கை வருமுன்னே சடுதியா நாம்பிடியோம்
மங்கைபங்கன் கற்பினையாய் வாகாயுயிர் வதைப்பேன்
கொஞ்ச வயசு கொடுத்த வலுயீசுபரனார்
அஞ்சா துனக்கு யதியவயசு வைப்பார்
அந்திமதி சூடு மரனார்னினக் கில்லையோ
உந்தனக்கு மாத்திரமோ யுண்டென்று நீயிருந்தாய்
எந்தனக்கு அந்த யரனீய்ந்த வரமிப்படியே

1185. குன்றுவலு புயத்தான் - வன்மையும் திண்மையுமான மலைக் குன்றைப்போன்ற தோள்களையுடைய கைகளைக் கொண்ட எமன்; கோவித்து அங்கே ஏதுரைப்பான் - மார்க்கண்டேயன் உரையைக் கேட்டுச் சினந்து பின் வருமாறு கூறுவான்; பா.வே. - 'திண்புயத்தான்', 'கோலமுடன்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1186. சங்கை வருமுன்னே - (வரி 1112) ஓர் உயிருக்கு விதி முடிந்ததா, முடியவில்லையா என ஐயம் எழுமுன்பே; சடுதியா - விரைவாகச் சென்று; நாம் பிடியோம் - எமலோகத்தினராகிய நாங்கள் அதைப் பிடிக்கச் செல்ல மாட்டோம்; பா.வே. - 'பிடிப்போம்' (ச.ம.நூ.);

1187. மங்கை பங்கன் - உமையை இடப்பாகத்தே வைத்துள்ள சிவன்; கற்பினையாய் - விதித்த விதியின்படி; வாகாய் - வகையாக; உயிர் வதைப்பேன் - உயிர்களை மாய்ப்பேன்; காண்க: 'மங்கை பங்கன்' (1301, 1307, 1394);

1188. கொஞ்சவயசு கொடுத்த - உனக்குக் குறைவான ஆயுளே நல்கிய (வயசு < வயது); வலுயீசுபரனார் - மேன்மையுள்ள இறைவன்; பா.வே. - 'கொடுத்த உமை ஈஸ்பரனார்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1189. அஞ்சாது உனக்கு - விதிக்கு அஞ்சாது உன்தனக்கு; அதிய < அதிக - மிகுந்த; வயசு < வயது - ஆயுள்; வைப்பார் - மேலும் நல்குவார்;

1190. அந்தி மதிசூடும் அரனார் - பிறைசூடும் இறைவன்; நினக்கு இல்லையோ - உனக்கு இல்லாமலாபோனார்? (உளர் அன்றோ?);

1191. உந்தனக்கு மாத்திரமோ உண்டென்று - உனக்கு மட்டும்தான் இறைவன் உள்ளார் என்று; நீயிருந்தாய் - நீ எண்ணிக் கொண்டிருக்கின்றாய்?;

1192. எந்தனக்கு - எனக்கு; அந்த அரன் - இறைவன்; ஈய்ந்த வரம் இப்படியே - உயிர்களை அவ்வவற்றின் ஊழ்விதிப்படி வதைத்துக் கொல்வதே எனக்கு அவர் நல்கிய கட்டளை;

இந்தனாள் காற்க்க யிருந்த சிவலிங்கமிது
அந்தனாள் கொஞ்சவிதி ஆதி விதிக்கையிலே
வந்தே யுனது மயக்கந் தவிர்க்கலையோ
அன்னேரம் மன்னாடி யனேகவரம் வாங்காமல்
இன்னாளி லென்னடா யேனடா மன்னாடுகிறாய்
உத்த வினையு முடையோன் விதிப்படியும்
பித்தனே பாலா பிழைபோமோடா எவர்க்கும்
பாரடா நீயும் படப்போற பாடுதன்னை
ஆரடா யுந்தனக்கு யானதுணை கல்லுதவி

1193. இந்த நாள் - இப்பொழுது; காற்க்க < காக்க - உன்னை மரணத்தினின்றும் பாதுகாக்க; இருந்த சிவலிங்கமிது - இருக்கின்ற இச்சிவலிங்கமானது; காண்க: 'சிவலிங்கம்' (1360, 1399, 1461);

1194. அந்த நாள் - முன்பொருநாள்; கொஞ்சவிதிஆதி விதிக்கையிலே -- முதல்வனான இறைவன் உனக்குப் பதினாறு வயதளவே என வரம் கொடுக்கும்போது;

1195. வந்தே உனது மயக்கம் - நீடிய ஆயுளைக் கேட்காது மயங்கியிருந்த உன்னிடம் வந்து; தவிர்க்கலையோ - ஏன் (உன் மயக்கத்தை) நீக்காமல் இது இருந்தது?;

1196. அன்னேரம் - அன்று வரம் நல்கிய நாளில்; மன்னாடி < மன்றாடி - கெஞ்சி; அனேகவரம் - நீண்ட வாழ்நாளை; வாங்காமல் - பெற்றுக் கொள்ளாமல்;

1197. இன்னாளில் - இப்போது; என்னடா - அடே!; ஏனடா!; மன்னாடுகிறாய் < மன்றாடுகின்றாய் - கல் இலிங்கத்திடம் கெஞ்சிநிற்கின்றாய்;

1198. உத்தவினையும் < (உற்ற) உரிய ஊழ்வினையும்; உடையோன் விதிப்படியும் - இறைவன் விதித்த ஆணையும்;

1199. பித்தனே - (வரி 26) சித்தம் திரிந்தவனே; பாலா - சிறுவனே; பிழைபோமோடா எவர்க்கும் - மேலே சொன்ன விதியும், விதிமுடிவும் எவர்க்கேனும் தவறுமோ, அடா!; பா.வே. - 'பிழைப்போமடா' (ச.ம.நூ.);

1200. நீயும் படப்போற பாடுதன்னைப் பாரடா - இப்போது நீ அனுபவிக்கப்போகின்ற சித்திரவதையைப் பார்க்கப் போகிறாய்;

1201. உந்தனக்கு ஆன துணை கல்லுதவி ஆரடா - உனக்காகத் துணையாக வருவது கல்தானோ, வேறு யார்?;

பூசித்த கல்லும் பிடிங்கி யுனதுயிரை
வீசியே எமபுரம் வீறுடனே போறேன்டா

**இறைவனியல்பை எமனுக்கு மார்க்கண்டேயன்**
**எடுத்துரைத்தல்**

என்றுதான் கால னிவைகூறவே புதல்வன்
இன்று கந்தன்தந்தை இருந்தோனே யென்கோவே
பொங்கு வலுகாலன் பிடிங்கியெறிவே னென்றான்
லிங்கமே சங்கரனே நீதி பராபரனே
கந்தனே அய்யா கணபதியே என்கோவே
இந்த வசன மெனதுசெவி கேட்பேனோ
காளைதனி லேறுங் கடவுளே யேழைபங்கா

*1202.* பூசித்த கல்லும் - நீ வழிபட்ட இலிங்கத்தை; பிடிங்கி < பிடுங்கி எடுத்து; உனதுயிரை - உன் உயிரையும்;

*1203.* வீசியே - ஆகாயத்தில் வீசி; வீறுடனே எமபுரம் (வரி 562) போறேன்டா - வெற்றிப் பெருமிதத்துடன் எமலோகத்துக்குத் திரும்பிச் செல்லப் போகிறேன், அடா!;

*1204.* என்றுதான் காலன் இவை கூறவே - இவ்வாறு எமன் கூறவும்; புதல்வன் - மார்க்கண்டேயன்; சொல்லுவான்; பி.வே. - 'யேமன்' (மா.தவநிலை);

*1205.* இன்று கந்தன் தந்தை இருந்தோனே - (வரி 239) முருகப் பெருமானின் பிதாவாக இருந்த இறைவனே!; என்கோவே - என் பிரானே;

*1206.* பொங்கு வலுகாலன் - நிறைந்த வலிமையுடைய எமன்; பிடிங்கி < பிடுங்கி (வரி 1202); எறிவேன் என்றான் - தூர வீசுவேன் என்று கூறினான்; பி.வே. - 'பிடுங்குவேன்' (மா.தவநிலை);

*1207.* லிங்கமே சங்கரனே - இலிங்கத்திலுறையும் இறைவனே, நல்லவனே: நீதிபராபனே - தருமமுள்ள இறைவனே; பா.வே. - 'நீதியோ' (மா.தவநிலை);

*1208.* கந்தனே, கணபதியே அய்யா - கணபதிக்கும் கந்தனுக்கும் தந்தையே; என்கோவே - என் பிரானே;

*1209.* இந்த வசனம் - எமன் கூறியதை; எனது செவி - என்காதில்; கேட்பேனோ - கேட்குமாறு ஆயிற்றே;

*1210.* காளைதனில் ஏறும் - விடைவாகனத்திலே அமர்ந்து செல்லும்; கடவுளே - இறைவனே; ஏழைபங்கா - பக்தர்களுக்குத் துணையான

ஏழையெந்தன் பூசைக் கிதுவி லிருக்கலையோ
உண்டென்றே நம்புமவர் ருள்ளத் திருப்பவரே
உண்டில்லை யென்று ஒளித்தா லினியேது
உத்த யடியா ரொருபிடியாய் நம்பிநின்றால்

1215 உத்தவர்க்கு யுத்தவர்போ லுண்மை நிறைந்திலையாய்
மத்தவர்க ளுன்கயிலை வந்துதினம் காண்பதற்கு
முத்துமோ விற்றே முழுமுதலே யென்றழுது
தங்குவலு காலன் தனைநோக்கி யேதுசொல்வான்

வனே; ஒப்பிடுக: 'காளை தனிலமர்ந்த காரணர்' (1880); 'காளை தனிலேறுங் கருணை அரன்' (2284);

1211. ஏழை எந்தன் - பக்தனான என்னுடைய; பூசைக்கிதுவில் - இப்பூசையில்; இருக்கலையோ - தங்கவில்லையோ; பா.வே. - 'எந்தன் சிவபூசை (தனில் நீயும் - கை.பிரதி)யிதுவில்' (மா.தவநிலை);

1212. உண்டு என்றே நம்பும் அவர் - இறைவனாகிய நீ இருப்பது உண்மை என நம்பும் பக்தர்களின்; உள்ளத்து இருப்பவரே - சிந்தையுள் விற்றிருப்பவரே; பி.வே. - 'நம்புவர்கள்' (மா.தவநிலை); 'நம்பிடுவோர்' (கை.பிரதி);

1213. உண்டில்லையென்று - அவ்வாறு என் உள்ளத்தில் இருப்ப தில்லை என; ஒளித்தால் - மறைந்து கொண்டால்; இனியேது - இனிமேல் நான் செய்வது என்ன?;

1214. உத்த < உற்ற - உரிய; அடியார் - பக்தர்கள்; ஒருபிடியாய் - ஒரேபற்றுக் கோலாக; நம்பிநின்றால் - பா.வே. - 'ஒரு பிடிப்பை' (ச.ம.நூ.); 'உந்தன் அடியார் உன்பிடிப்பை' (கை.பிரதி);

1215. உத்தவர்க்கு < உற்றவர்க்கு - உரியவர்களுக்கு; உத்தவர்போல் < உற்றவர்போல் - உரிமையுடையவர் போன்று; உண்மை நிறைந்திலை யாய் - நம்பிக்கைக்குரியதாய் நிறைந்து நீ இராவிட்டால்;

1216. மத்தவர்கள் < மற்றவர்கள் - பிறமக்கள்; உன் கயிலை - நீ உறையும் கைலை மலைக்கு; வந்துதினம் காண்பதற்கு - உன்னைத் தினமும் கண்டு வணங்கிநிற்பதற்கு; பா.வே. - 'மற்றும் மந்தவுமது' (மா.தவநிலை);

1217. முத்துமோ < முற்றுமோ - முடியுமோ (முடியாதன்றோ); விற்றே < வித்தே - எல்லாப் பொருள்களுக்கும் விதையாக ஆனவனே; முழுமுதலே - ஆதிப்பொருளே; என்று அழுது - என மார்க்கண்டேயன் அழுது; பா.வே. - 'முத்தே' (கை.பிரதி);

1218. வலுதங்கு காலன் தனை நோக்கி - வலிமைமிக்குடைய எமன்தன்னைப் பார்த்து; ஏதுசொல்வான் - சொல்வதாவது;

லிங்க மரனல்ல வெனநீதியோ வொந்தனக்கு
தேவர் முனிவர் சிறந்தவலு மூவர்களும்
யாவர்களும் பூசைசெய்ய அங்கங்காய் நின்றலிங்கம்
பத்தியில்லார் தவத்தில்லை பத்தியுத்தோர் யாவருக்கும்
உத்த சிவனு முமையாள் வருமிங்கே
செங்கையினில் வெண்ணை சிறந்துருகில் நெய்காணும்
எங்கும் நிறைபொருளாய் யெள்ளவையு
மெண்ணையென

1219. லிங்கம் அரன் அல்ல என - நான் வழிபடும் கல்லாலான இலிங்கத்தில் சிவன் உறையவில்லை என்று நீ சொல்வது; ஒந்தனக்கு < உன்தனுக்கு - எமதருமன் ஆன உனக்கு; நீதியோ - தர்மமாகுமோ? பி.வே. - 'லிங்கத்தில் யரன் யில்லை' (மா.தவநிலை); 'நீதியல்லயே' (கை.பிரதி);

1220. தேவர் - வானவர்; முனிவர் - ரிஷிகள்; சிறந்த வலுமூவர்களும் - அயன் - அரி - அரன் எனும் பெருமையும் வலிமையும் பெற்ற மும்மூர்த்திகளும்;

1221. யாவர்களும் - மற்றுள்ள நரர், அசுரர்களும், உயிரினங்களும்; பூசைசெய்ய - வழிபட; அங்கங்காய் நின்றலிங்கம் - அவர்கள் எங்கெங் கெல்லாம் வாழ்கிறார்களோ அவ்விடங்களில் எல்லாம் எழுந்தருளியுள் ளது இலிங்கம்;

1222. பத்தி இல்லார் < பக்தி இல்லார் - இறைவன் மீது நம்பிக்கை இல்லாதவர்கள்; தவத்து இல்லை - செய்யும் வழிபாட்டில் இறைவன் இல்லை; பத்தி (< பக்தி); உத்தோர் < உற்றோர் - நம்பிக்கை கொண்டவர்கள்; யாவருக்கும் - எல்லோருக்கும்; பி.வே. - 'பத்தியில் லார்க்குயில்லை லிங்கம்' (மா.தவநிலை, கை.பிரதி);

1223. உத்த < உற்ற - வழிபாட்டுக்குரிய; சிவனும் உமையாள் - பரமனும் பார்வதியும்; வரும் இங்கே - இவ்விடத்துக்கு வருவர்; பி.வே. - 'வரமுதவி' (கை.பிரதி);

1224. செங்கையினில் வெண்ணை - உள்ளங்கையில் வெண்ணை இருந்தால்; சிறந்துருகில் நெய்காணும் - அதைச்சிறப்பாக உருக்கினால் நெய்யாகும் (அதுபோல் இலிங்கத்தை வழிபட்டால் இறைவனைக் காணலாம் என்பது கருத்து); காண்க: 'செங்கை' (1599, 2321, வி.25 வி.37);

1225. எங்கும் நிறை பொருளாய் - எவ்விடத்தும் நிறைந்துள்ள சிவமாய்; எள் அவையும் எண்ணை என - எள்ளும் அதில் மறைந்துள்ள எண்ணெய் போல (இலிங்கமும் அதனுள் இறைவனும் உள்ளான் என்பது கருத்து);

பாசம் பிடிபாடு பற்று மடியவர்பால்
யீச னிருப்பா னெமனே யண்டாதே

**விருத்தம்**

அரன்மாலும் வேத னிமையோர் வளய்ய
ரதிரூப யிந்து பகலோன்
வரமான பேர்கள் சிவபூசை நம்பி
மனதால் னிறைந்த யருளே
பரமாக வேணி யவையாதி யாகப்
பலரூப விஞ்சை தருவாய்
வரமான லிங்கஞ் சிவபூசை செய்யு
மனதே நிறைந்த யரனே (34)

லிங்கத்தைப் பூசை செய்யும்
நெறியினோர் மனதே யீசர்

*1226.* பற்றும் அடியவர்பால் - இறைவனை எண்ணியிருக்கும் பக்தர்களிடமே; பாசம் பிடுபாடு - இறைவனின் அன்பு நீடித்திருக்கும்;

*1227.* ஈசன் - இறைவன்; இருப்பான் - உறைவான்; எமனே - காலனே; அண்டாதே - நீ அவர்கள்பால் நெருங்காதே;

*வி.34.* அரன் மாலும் வேதன் - மும்மூர்த்திகளும்; இமையோர் - வானவர்களும்; வளய்யர் - வட்டமாக உள்ளோர்களான; அதிரூப இந்து - அழகு நிறைந்த சந்திரனும்; பகலோன் - சூரியனும்; வரமான பேர்கள் - வரங்கள் பெற்ற முனிவர்களும் ஆகியோர்; சிவபூசை நம்பி - செய்யும் சிவதுதிகளை நினைந்து; மனதால் நிறைந்த அருளே - மனத்துள் நிறைந்திருக்கக் கூடிய அருளான இறைவனே; பரமாக - மேலுலகமாக; வேணி - ஆகாயத்தையும்; அவையாதியாக - ஆகாய முதல் அதிலுள்ள அனைத்தையும்; பலரூப விஞ்சை தருவாய் - பல வடிவங்களாகப் படைப்பாய்; வரமான - வரங்கள் நிறைந்த; லிங்கஞ் சிவபூசை செய்யும் மனதே - இலிங்கமாக உள்ள சிவபெருமானைத் துதிசெய்யும் அடியவர் நெஞ்சில்; நிறைந்த அரனே - தங்கியுள்ள இறைவனே;

பா.வே. - 'துறவோர்கள் மூவர்', 'நினைந்து அருளை', 'பரமாக எண்ணி அரை உமபாதியாகி', 'சிறந்த அரனே' (ச.ம.நூ.); 'உரவோர்கள் தேவர்', 'மனதான் விளைந்த', 'மரமாக யெண்ணில்', (மா.தவநிலை); 'துறவோர்கள் தேவர்', 'மனத்தால் நின்ற', 'பரமாக யெண்ணி' (கை. பிரதி);

*வி.35.* லிங்கத்தைப் பூசை செய்யும் நெறியினோர் மனதே - சிவபூசை செய்யும் அடியவர்களின் உள்ளத்தே; ஈசர் - இறைவன் விளங்குவார்;

அங்கமே சத்தி யாகு(ம்)
அங்கையே பிரமன் மாலோன்
செங்கண்ணே யிந்து வெய்யோன்
செவிகயில் நாசி மூன்று
பொங்கி யண்ட ரண்டம்
புவன மென்றிசையு மாமே (35)

நடை

**உலக சிருஷ்டியையும் தனது தொழிலையும் எமன் கூறல்**

என்று மார்க்கண்ட னியம்புமொழி கேட்டு
நின்ற வலுகால னெருப்பெனவே கண்ஞ்சிவந்து
1230 யுன்னைப் பிடிக்கவந்து யுன்னைவிட்டுப் போனேனால்
பின்னை மறுசீவன் பிடித்தடிக்கி லேதுபலன்

அங்கமே - அவர் உடல்பாதியே; சத்தியாகும் - உமையாகும்; அங்கையே பிரமன்மாலோன் - திருமாலும் வேதனும் அவருடைய உள்ளங்கைகளாவர்; செங்கண்ணே - அவரின் இரு கண்களும்; இந்து வெய்யோன் - சூரிய சந்திரராவர்; செவி - காதும்; கயில் - பிடரியும்; நாசி - மூக்கும்; மூன்று - ஆகிய உறுப்புகள் மூன்றும்; பொங்கி - நிறைந்து; அண்டரண்டம் புவனம் - விரிந்து பரந்த பேரண்டங்களும் அவற்றிலுள்ள உலகங்களும்; என்று இசையுமாமே - என ஆகியுள்ளன;

பா.வே. - 'அங்கேயரன்', 'செவியும் மனனாதி மூன்றும்', 'எண்டிசை' (ச.ம.நூ.); 'செங்கண்ணோன் ஐந்து', 'செவியினால் லைந்து மூன்றும்' (மா.தவநிலை); 'செவியுடன் நாசி மூன்றும்' (கை.பிரதி);

1228. என்று மார்க்கண்டன் இயம்பு மொழி கேட்டு - மார்க்கண்டேயன் இவ்வாறு கூறியதைக் கேட்ட பின்னர்;

1229. நின்ற வலுகாலன் - (கேட்டு) நின்ற வலிமைமிகுந்த எமன்; நெருப்பெனவே கண்ஞ்சிவந்து - கண்களிரண்டும் தீப்பிழம்பு எனச் சிவப்பாக மாறி (பின் வருமாறு கூறுவான்); பா.வே. - 'நின்று மகாக்காலன்' (ச.ம.நூ.); 'வலுயமன்' (மா.தவநிலை);

1230. உன்னைப் பிடிக்கவந்து - சிறுவனாகிய உன் உயிரைப் பற்ற இப்பூமியில் தோன்றி; உன்னை விட்டுப் போனேனால் - உன்னைப் பிடிக்கவியலாது வெறுங்கையுடன் எமலோகம் திரும்பிச் சென்றேன் எனில்;

1231. பின்னை - இதன்பிறகு; மறுசீவன் - (வரி 1092) வேறு உயிர்களை; பிடித்தடிக்கில் - உயிர்களைப் பற்றி வதைக்கில்; ஏது பயன் - பயனுண்டோ (பயன் ஒன்றுமில்லை).

உனதளவோ காலனென வோங்குபுகழ்[ப்] பூவிலெந்தன்
எனதளவு மண்டலங்க ளெங்கு முலகமதில்
ஆயிரத் தெட்டண்ட மடங்கல் படியீரேழும்
1235 பாயிரத் தினோடே பல்லாயிரங் கோடியண்டம்
ஈரே ழுலக மெண்ணவொண்ணா நற்புவனம்
சீரான மண்டலங்கள் திக்கு வுலகமெங்கும்
எண்ணும் பிறவி யெண்பத்துநாலு நூறாயிரமும்
மண்ணுங் கடலில் வகுத்த பலசீவன்

1232. உனதளவோ காலன் என - மார்க்கண்டேயன் என்ற சிறுவனைப் பற்றவியலாத காலனுடைய வலிமை இவ்வளவு தானா என்று; ஓங்கு புகழ் பூவில் - புகழ் பெரிதாக விளங்கக்கூடிய உலகில்; எந்தன் - என்னைப் பற்றியும்;

1233. எனதளவு மண்டலங்கள் - என் ஆட்சி செல்லும் மண்டலங்கள் அனைத்திலும்; எங்கும் உலகமதில் - எங்கணுமுள்ள உலகம் முழுவதும் (இவ்வாறு பேசப்படும்); காண்க:'மண்டலங்கள்' (1237, 2607);

1234. ஆயிரத்தெட்டண்டம் அடங்கல் - (வரி விளக்கம் 15) ஆயிரத்தெட்டுக் கோளங்கள் முழுமையும்; படி ஈரேழும் - மேல், கீழ் உலகங்கள் பதினான்கும் (பார்க்க வரி 16); பா.வே. - 'ஈரெண்றேழுலகம்' (ச.ம.நூ.);

1235. பாயிரத்தினோடே - தொடக்கமுதல்; பல்லாயிரம் கோடி அண்டம் - வெளியில் பரந்துள்ள பலப்பல கோள்கள்; பா.வே. - 'பாயிரத்தின் கோடி' (ச.ம.நூ.); காண்க: 'பாயிரம்' (1552, 1594, 1646, 2139); ஒப்பிடுக: 'பாயிரலோகம்' (வரி 794);

1236. ஈரேழுலகம் - பதினான்கு உலகங்களும்; எண்ணவொண்ணா - எண்ணிக்கணக்கிடுவதற்கு அரிதான; நற்புவனம் - பல நல்ல உலகங்களும்; பா.வே. - 'ஈரெழுத பூவொண்ணா ஒண்ணாதர் புவனம்' (ச.ம.நூ.); 'ஈரேழு புவனம்' (மா.தவநிலை); 'யீரேழு தீவு' (கை.பிரதி);

1237. சீரான மண்டலங்கள் - ஒழுங்காக இயங்கிவரும் பூமி போன்ற கோள்கள்; திக்கு உலகம் எங்கும் - திசைகளில் பரந்துள்ள பூமி போன்ற பிற உலகுகள் எல்லாவற்றிலும்; பா.வே. - 'நீரெழு மண்டலங்கள்' (ச.ம.நூ.);

1238. எண்ணும் பிறவி - இவற்றிலுள்ள பிறப்புக்களின எண்ணிக்கைகளான; எண்பத்து நாலு நூறாயிரமும்; பா.வே. - 'எண்ணும் புவனம்', 'எண்பத்து நான்கு வெச்சம்' (மா.தவநிலை, கை.பிரதி);

1239. மண்ணும் கடலில் - நிலத்திலும் நீரிலும்; வகுத்த பல சீவன் - படைக்கப்பெற்ற பல உயிரினங்கள்; பா.வே. - 'கடல் மலையில் வைய்த்தொளித்த சீவன் முதல்' (மா.தவநிலை, கை. பிரதி);

1240 பாதாள லோகம் படர்ந்தளித்த சீவன்முதல்
மீதான பூவில் விரிந்தபல சீவன்முதல்
கல்லுக்குள் தேரை காணாத தாபரத்தில்
வல்லுயிரா யெங்கு வகுத்து யிருந்ததுவும்
நான்முகனார் தான்படைத்தார் நானுமவை யறிந்து
1245 வான்முகத்தி லேற்றி வதைப்பே னொருகயற்றால்
நமனை யறிமாமல் நாடியுயிர் மாளாமல்
யெமனை யறிமாம லேகுமோடா சீவனெங்கும்

**1240.** பாதாள லோகம் - (வரி 1070) பூமிக்குக் கீழே இருப்பதாகக் கருதப்பெறும் கீழுலகத்தில் வாழும்; படர்ந்தளித்த சீவன் முதல் - பலவாகப் படைக்கப் பெற்ற உயிரினங்கள்; பா.வே. - 'பறந்து ஒளித்து வைத்ததுவும்' (ச.ம.நூ.); 'வாழ்ந்ததுவும்' (மா.தவநிலை, கை. பிரதி);

**1241.** மீதான பூவில் - பூமிக்கு மேலேயுள்ளதாகக் கருதப் பெறும் உலகங்களில்; விரிந்த பல சீவன் முதல் - வாழ்கின்ற பல உயிரினங்கள் முதலாக; பா.வே. - 'தாபரத்தில்' (ச.ம.நூ.);

**1242.** கல்லுக்குள் தேரை - பாறைக்குள்ளே தேரை காணப் பெறுத லும்; காணாத தாபரத்தில் - ஆனால் அது (வரி 23) வெளியே தெரியாது இருக்கின்ற இந்த உலகில்;

**1243.** வல்லுயிராய் - தேரையைப்போன்றுள்ள பல உயிரினங்கள்; எங்கு வகுத்து இருந்ததுவும் - எவ்விடத்தும் படைக்கப்பெற்று இருப்பது வும்;

**1244.** நான்முகனார் தான்படைத்தார் - இவ்வளவு இடங்களிலுமுள்ள உயிரினங்களை வேதன் படைத்தளித்தார்; நானும் அவை அறிந்து - எமனாகிய நானும் அவ்வுயிரினங்களின் விதி இயல்புகளைத் தெரிந்து; பா.வே. - 'ஆராய்ந்து' (ச.ம.நூ.);

**1245.** ஒரு கயற்றால் < ஒரு கயிற்றால் - பாசக்கயிறு ஒன்றால்; வான் முகத்தில் ஏற்றி - எமலோகத்திற்குக் கொண்டுசென்று; முகத்தில் < முகட்டில்; வதைப்பேன் - அவ்வுயிரினங்களின் உயிர்களைப் பறிப் பேன்; பா.வே. - 'முகட்டில்' (ச.ம.நூ.);

**1246.** நமனை அறியாமல் - காலனுக்குத் தெரியாமல்; நாடி உயிர் மாளாமல் - சீவன் இறப்பை நாடாமல்; பி.வே. - 'மாய்வதில்லை' (கை.பிரதி);

**1247.** சீவன் - உயிரானது; எமனை அறியாமல் - காலனுக்குத் தெரியாமல்; ஏகுமோடா எங்கும் - வேறு எங்கும் செல்லவியலாது;

படியில்வருஞ் சுருபம் பாங்காகவே யெடுற்று
மடிவதுதான் திண்ணமடா மானிடர்க்கு மாத்திரமோ
எல்லார்க்கு மூவ ரெனக்கு விதிகேளாய்

**மும்மூர்த்திகளுக்கும் இந்திரனுக்கும் எமனுக்கும் கால எல்லை**

அல்லாவெனு மொருத னாட்டிவிற்குஞ் சூத்திரங்கள்
நாலு யுகமும் நன்மையுடன் நிறைந்தால்
சாலவந்த நாலுஞ் சதிரயுக மொன்றாகும்
அப்படியே சதிரயுக மிரண்டாயிர மானால்
தப்பாமல் தேவர்கள்கோன் தானிறப்பான் கண்டாயே

*1248.* படியில் வரும் சுருபம் ( < சொரூபம்) - பூமியில் தோன்றும் உடல்; பாங்காகவே எடுற்று ( < எடுத்து) - முறையாக உருவம் தாங்கி; பா.வே. - 'படியில் செனனமது' (கை.பிரதி);

*1249.* மடிவதுதான் திண்ணமடா - இறப்பதுஉறுதி; மானிடர்க்கு மாத்திரமோ - இவ்வாறு மடிவது மனிதர்களுக்கு மட்டுமன்று;

*1250.* எல்லார்க்கும் - தேவர், கடவுளர் உள்ளிட்ட அனைவர்க்கும் இவ்விதி பொருந்தும்; மூவர் - மும்மூர்த்திகளுக்கும்; எனக்கு - எமனாகிய எனக்கும்; விதிகேளாய் - இதே முடிவினைத் தெரிந்து கொள்வாயாக; பி.வே. - 'மூலம்' (மா.தவநிலை);

*1251.* அல்லாவெனும் - அல்லா என அழைக்கப்பெறும்; ஒருதன் < ஒருத்தன் - இறைவன்; ஆட்டிவிற்கும் < ஆட்டுவிக்கும் - இயங்கச் செய்யும்; சூத்திரங்கள் - எந்திரங்கள்; பா.வே. - 'சூத்திரம்கேள்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1252.* நாலுயுகமும் - கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என வழங்கப் பெற்ற நான்கு யுகங்களும்; நன்மையுடன் நிறைந்தால் - ஒன்றுசேர்ந்தால்; பா.வே. - 'நளினமுடனே' (ச.ம.நூ.);

*1253.* சாலவந்த நாலும் - அவ்வாறு ஒன்றாகச் சேர்ந்த நான்கு யுகங்களும்; சதிர ( < சதுர) யுகம் ஒன்றாகும் - மகாயுகம் எனவழங்கப் பெறும், இது 43,20,000 ஆண்டுகள் கொண்டதாகக் கணக்கிடப்பெற்றுள்ளது; பா.வே. - 'காலமதில் நால்யுகமும்' (ச.ம.நூ.);

*1254.* அப்படியே சதிரயுகம் - ( < சதுர) மேற்சொன்ன மகாயுகம்; இரண்டாயிரமானால்; பா.வே. - 'தங்கும் சதுரயுகம்' (கை.பிரதி);

*1255.* தப்பாமல் - உறுதியாக; தேவர்கள்கோன் - இந்திரன்; தானிறப்பான் கண்டாயே - அவனது காலம் முடிந்து பதவி துறந்து இறந்துவிடுவான்;

இந்தப்படி யிரேழுபே ரிறந்தாரே யாமாகில்
செந்தா மரையிற் சிறந்த பிரமனுக்கு
ஓர்பொழுது காணு முலகுபடைத்தோன் தனக்கு
சீர்பொழுது மாலுஞ் சிறந்ததொரு னாளாம்
இந்தப்படி முப்பதுனாள் நிறைந்ததொரு மாதம்
அந்தப்படி பன்னிரண்டு மானதொரு வருஷம்
நூறு வருசம் நெருங்கி லொருபிரமம்
மாறிவிடும் பிரமம் வகுத்ததொரு கோடியென
செங்கண்மால் கண்ணன் சிறந்தபுகழ் மாலவர்க்கு

1256. இந்தப்படி - இவ்வாறு; ஈரேழுபேர் - பதினான்கு இந்திரர்கள்; இறந்தாரே யாமாகில் - மடிந்தார்கள் என்றால்;

1257. செந்தாமரையிற் சிறந்த - சிவந்த கமலத்திலுறையும்; பிரம னுக்கு - அயனுக்கு;

1258. உலகுபடைத்தோன் தனக்கு - பிரமனுக்கு; ஓர்பொழுது காணும் - 14 இந்திரர்களின் பதவிக் காலம் ஒருபொழுது ஆகும்; பா.வே. - 'உலகாண்ட வேதனுக்கு' (மா.தவநிலை, கை.பிரதி);

1259. சீர்பொழுது - அப்படியான ஒருபொழுதான; மால் + உம் - எல்லையும்; சிறந்ததொரு நாளாம் - ஒரு நாள் பொழுதாகும்; பா.வே. - 'சீர்பொழுது ராப்பகலும் திரண்டால்' (மா.தவநிலை, கை.பிரதி);

1260. இந்தப்படி - மேலேகூறிய கால அளவின்படி; முப்பதுனாள் < முப்பது நாள் - பிரமனுக்குரிய ஒரு நாள் போல முப்பது நாள்கள்; நிறைந்தது ஒரு மாதம் - சேர்ந்தவை ஒரு மாதம் எனப்படும்;

1261. அந்தப்படி - அக்கணக்கின்படி; பன்னிரண்டும் - மாதங்கள் பத்தும் இரண்டும்; ஆனது ஒரு வருஷம் - சேர்ந்தால் ஓர் ஆண்டு ஆகும்; பா.வே. - 'அப்படியே' (ச.ம.நூ.);

1262. நூறு வருசம் - நூறு ஆண்டுகள்; நெருங்கில் - சேர்ந்தால், நிறைந்தால்; ஒரு பிரமம் - ஒரு பிரமனுக்குரிய ஆயுள் முடிவு ஆகும்; பா.வே. - 'அந்தப்படி வருசம்' (மா.தவநிலை);

1263. மாறிவிடும் பிரமம் - ஒரு பிரமம் முடிந்து அடுத்தபிரமம் மாறும் இயல்பில்; வகுத்ததொரு கோடியென - ஒரு கோடி பிரம்மங்கள் நிறைந்தால்; பா.வே. - 'கோடி சென்றால்' (மா.தவநிலை, கை.பிரதி);

1264. செங்கண்மால் கண்ணன் சிறந்த புகழ் மாலவர்க்கு - சிவந்த, பெரிய (தாமரைக்) கண்ணனான புகழ்படைத்த திருமாலுக்கு;

தங்குமொரு னாளாய்த் தானுறையுமங் கவர்க்கு
இப்படியே முன்னூற் றறுவதுனாள் சென்றதென்றால்
செப்பமுடனோர் வயதாஞ் செங்கண்ணெடு மாலவர்க்கு
அந்தப்படி வருஷ மாயிரமே சென்றதென்றால்
கந்த மிகுந்த கருணை நெடுமாலவர்க்கு
சிந்தைமிகு மால்கோடி சென்றதென்றா லுருத்திரனும்
அந்தரத்தில் திக்கி லனைவோர் தவசிநின்றோர்
மய்யே சுபரனும் வகுத்த சதாசிவனும்
அய்யமறச் சூரியனு மானபுகழ் சந்திரனும்

1265. அங்கவர்க்கு - அத்திருமாலுக்கு; தங்கும் ஒருநாளாய்த் தானுறையும் - ஒரு நாள் பொழுதாக மாறி அவர்க்கு ஆகிவிடும்; பா.வே. - 'தரணியளந்த மாலவர்க்கு' (மா.தவநிலை, கை.பிரதி);

1266. இப்படியே - இவ்வாறே; முன்னூற்றறுவதுனாள் < முந்நூற்றறுபதுநாள் (360); சென்றதென்றால் - கழிந்தன எனில்; பி.வே. - 'சென்றாக்கால்' (ச.ம.நூ.); பா.வே. - 'இந்தப்படி' (மா.தவநிலை, கை.பிரதி);

1267. செங்கண்ணெடுமாலவர்க்கு - திருமாலுக்கு, நீண்டமாலுக்கு; செப்பமுடனே ஓர்வயதாம் - சிறப்புடன் ஒரு வயது பிராயம் நிறையும்;

1268. அந்தப்படி வருஷம் - அவ்வாறான ஆண்டு; ஆயிரமே சென்றதென்றால் - 1000 ஆண்டுகள் கழிந்தன எனில்; பா.வே. - 'வருஷம்' (மா.தவநிலை, கை.பிரதி);

1269. கந்தம் மிகுந்த - புகழ்மிக்க; கருணை நெடுமால் அவர்க்கு - மேற்சொன்ன ஆயிரம் வருசம் சென்றதெனில் ஒரு 'மால்' ஆகும்; இதனை விஷ்ணுகற்பம் என்றும் கூறலாம்; பா.வே. - 'அந்தமிகு... அவதாரம் வொன்றாம்' (மா.தவநிலை);

1270. சிந்தைமிகுமால்கோடி சென்ற தென்றால் - கோடி விஷ்ணு கற்பம் கழிந்தால்; உருத்திரனும் - அழிக்கும் கடவுள் உருத்திரசிவனும்;

1271. அந்தரத்தில் - ஆகாயத்திலுள்ள வானவர்களும்; திக்கில் - திசைகளிலுள்ள பாலர்களும்; அனைவோர் - பிற எல்லோரும்; தவசி நின்றோர் - தவரிஷிகளும்;

1272. மய்யேசுபரனும் < மயேசுவரனும் - மகேசுரனாம் சிவனும்; வகுத்த சதாசிவனும் - (வரி 1087) எல்லாவற்றையும் விதித்த சிவனும்; (ஐந்து சிவரூபத்துள் உயர்ந்த சிவம் 'சதாசிவம்' ஆகும்);

1273. அய்யம் அறச் சூரியனும் - குற்றமற்ற ஞாயிறும்; ஆனபுகழ் சந்திரனும் - புகழுடைய திங்களும்;

தாகமுறு தீவுந் தகமை புவனகடல்
பாகமுட னிற்கும் பல்லாயிரங் கோடியண்டம்
எல்லா வகையு மியல்வா யழிந்துவிடும்
அல்லாமொரு கோடி யாகிலுமோர் பார்பதிக்கு
கூந்த லவிழ்ந்து குழல்சொருகும் நேரமது
சிந்தைமிகு பார்பதிக்குச் சிறந்தவய தாயிரமாம்
சீராய்ச் சிவத்துள் சிறப்பாகவே வொடுங்கும்
நேராக யிவ்வசனம் நினவுடனே தானுரைற்று
எந்தனக்கு சங்கை யிதுமுன்னே தானிமிசம்

*1274.* தாகமுறு தீவும் - நீரால் சூழப் பெற்ற தீவுகளும்; தகமை < தகைமை - பெருமையுடைய; புவனகடல் - உலகமும் கடலும்;

*1275.* பாகமுடன் நிற்கும் - ஒவ்வொன்றின் பக்கத்தே நின்று கொண்டிருக்கும்; பல்லாயிரம் கோடி அண்டம் - பல ஆயிரம் கோடியான எண்ணவியலாத அண்டகோளங்களும்;

*1276.* எல்லா வகையும் - அனைத்துப் பொருள்களும்; இயல்வாய் தாமாகவே; அழிந்துவிடும் - இல்லாதாகிவிடும்;

*1277.* அல்லாம் ஒரு கோடி ஆகில் - இவ்வாறு கோடிமுறை அழிவு ஏற்படுகின்றகாலம்; ஓர் பார்பதிக்கு - *(வரி 251)* ஒரு சக்திக்கு;

*1278.* கூந்தல் அவிழ்ந்து - முடி அவிழ்ந்து; குழல்சொருகும் நேரம் அது - அந்த நேரம் அவிழ்ந்த முடி சொருகுவதற்குரிய நேரத்துக்கு ஒப்பாகும்; காண்க: 'கூந்தல்' *(462, 464)*;

*1279.* சிந்தை மிகு பார்பதிக்கு - அறிவு மிகுந்த சக்திக்கு; சிறந்த வயது ஆயிரமாம் - வயது ஆயிரமாகும்; *(அது கழிந்தால்)*;

*1280.* சீராய்ச் சிவத்துள் - ஒழுங்காகப் பரம்பொருளான சிவத்திடத்து; சிறப்பாகவே ஒடுங்கும் - உள்ளே ஒன்றிவிடும்;

*1281.* நேராக இவ்வசனம் - எமன் இவ்வாறான கால அளவுகளை மார்க்கண்டேயனிடம்; நினவுடனே < நினைவுடனே - எவ்விதத்திலும் விட்டுப் போகாமல் முழுமையாக; தான் உரைற்று < உரைத்து - கூறினான்;

*1282.* எந்தனக்கு - எனக்கு, (எமனுக்கு); சங்கை - ஐயமற விதித்த விதி; இது முன்னே தானிமிசம் - இதுவரை கழிந்த காலம் எனக்கு ஒரு நிமிச நேரம் ஆகும்; பா.வே. - 'யிதுக்கு முன்னேயேமன்' *(மா.தவ நிலை)*;

முந்திவிடு மிவ்வகைக்கு முதனாள் மடிந்திடுவேன்
கந்தனய்யா ரோங்கும் கடவுளர் ரன்னேரம்
1285 சிந்தையிது நிமிசம் திருநடனந்தான் புரிவார்
இந்தசெரி தட்டுமிகவு மெவையுண் டாகும்
அந்திமதி சூடு மரனிறைவர் தானிறைவார்

**விருத்தம்**

வெளிதினம் நிலைய தாகும்
விழியினில் கண்ட தெல்லாம்
அழியுனா ளெவையும் நீங்கு
மாதியும் வெளியில் நின்றார்
தெளிவிலா யுதார பூமன்
செடமெடுத் திருக்க வென்றால்
சுழிவயன் சூட்டும் விஞ்சைச்
சூஷ்த்திரம் விட்டி ராதே (36)

1283. முந்திவிடும் இவ்வகைக்கு - இது முன்னேவரும் கால அளவுக்கு; முதனாள் < முதல்நாள் - முன்னாள்; மடிந்திடுவேன் - எல்லா உயிர்களும் அழிந்தபின்பு நானும் இறந்து விடுவேன்;

1284. கந்தனய்யா - (வரி 968) முருகனின் தந்தை சிவன்; ரோங்கும் < ஓங்கும் - உயர்ந்த; கடவுளார் - இறைவன்; அன்னேரம் - அப்பொழுது;

1285. சிந்தையிது நிமிசம் - நான் சிறந்த அப்பொழுதில்; திருநடனந் தான் புரிவார் - ஊழி நடனம் புரிவார்;

1286. இந்த செரிதட்டு மிகவும் - இது முடியவும்; எவையும் உண்டாகும் - மீண்டும் பல பொருள்களும் உயிர்களும் தோன்றும்;

1287. அந்திமதிசூடும் அரன் - (வரி 771) பிறைசூடும் சிவனே; இறைவர் - கடவுளர் ஆவர்; தானிறைவார் - எல்லாவற்றிலும் அவரே நிறைந்திருப்பார்;

வி.36. வெளி - ஆகாயப் பரப்பு; தினம் நிலையதாகும் - எப்போதும் அழியாது நிலைத்திருப்பதாகும்; விழியினில் கண்டதெல்லாம் - கண்ணால் பார்க்கும் பொருள்கள் எவையும்; அழியும் நாள் எவையும் நீங்கும் - அழியக் கூடிய தினத்தில் எல்லாப் பொருள்களும் மறைந்துவிடும்; ஆதியும் - பரம்பொருளும்; வெளியில் நின்றார் - அவ்வாறான காலத்தில் பரந்த ஆகாய வெளியில் நிலைத்து நிற்பார்; தெளிவிலாயுதார பூமன் - தெளிவில்லாத பூமியினில்; செடம் எடுத்திருக்கவென்றால் - மீண்டும் உடல் எடுத்துப் பிறந்திருக்க வேண்டும் எனில்; சுழி அயன் - திருமாலின் உந்திக் கமலத்து உதித்த பிரமனின்; விஞ்சை சூஷ்த்திரம் ( < சூத்திரம்) - விந்தையான பிரமசூத்திரம்; விட்டிராதே - விட்டுவிடாதே;

**நடை**

பாருலகில் ரூபம் பாங்காய்ச் செனனம்வந்தால்
பாரை(ய்)க் கண்டுபின்னும் பாங்காய் வரவேணும்
அங்கவர்கள் தன்னிலும்நீ யரன்வரம் பெத்தவனோ
தங்கயுன்னால் பாரில்(த்) தரிக்கச் சடமோடா
என்று யிமகால னிவைகூறவே புதல்வன்

பா.வே. - 'வெளிதிண்', 'உனதாபூமன்', 'திடம் வாழ்ந்திருக்க', 'விட்டிடாதே' (ச.ம.நூ.); 'உனதால் பூவில் செனமே யெடுத்துயிருக்க வென்றால்' (மா.தவநிலை, கை.பிரதி);

1288. பாங்காய்ச் செனனம் வந்தால் - மீண்டும் பிறவி ஏற்பட்டால்; பாருலகில் ரூபம் - பூமியில் உருவமெடுத்துப் பிறந்திடலாம்; பி.வே. - 'சுருபம்' (மா.தவநிலை); காண்க: 'செனனம்' (1861, 2515);

1289. பாரை(ய்)க்கண்டு - உலகத்தைப் பார்த்து; பின்னும் பாங்காய் வரவேணும் - மீண்டும் மறுபிறவி எடுத்து வரவேண்டும்;

1290. அங்கவர்கள் தன்னிலும் - அவ்வாறு மானிடப் பிறவி வேண்டிப் பிறப்போர்களைக் காட்டிலும்; நீ - மார்க்கண்டேயா; அரன் வரம் - சிவவரம்; பெத்தவனோ < பெற்றவனோ;

1291. தங்கயுன்னால் பாரில் - (பூமியில்) இருந்துகொள்வதற்கு; தரிக்கச் சடமோடா - (வரி 44) உனக்கு உடம்பு வேண்டுமா?; பா.வே. - 'தங்குவோயென்றால் பாரில் தரிக்க சதமோதான்' (மா.தவநிலை);

1292. என்றுயிமகாலன் இவை கூறவே - எமன் இவ்வாறு கூறவும்; புதல்வன் - மார்க்கண்டேயன்;

காலத்தின் அளவைக் கணக்கதிகாரத்தில் காண்க:

''கண்ணிமை 2 கொண்டது கைந்நொடி. கைந்நொடி 2 கொண்டது மாத்திரை. மாத்திரை 2 கொண்டது குரு. குரு 2 கொண்டது உயிர். உயிர் 9 கொண்டது க்ஷணிகம். க்ஷணிகம் 12 கொண்டது விநாடி. விநாடி 60 கொண்டது நாழிகை. நாழிகை ஏழரை கொண்டது சாமம். சாமம் 4 கொண்டது பொழுது. பொழுது 2 கொண்டது நாள். நாள் 30 கொண்டது மாதம். மாதம் 12 கொண்டது வருஷம். வருஷம் பதினேழு லக்ஷத்து இருபத்தெண்ணாயிரம் கொண்டது கிருதயுகம். அந்த வருஷம் பன்னிரண்டு லக்ஷத்துத் தொண்ணூற்றாறாயிரம் கொண்டது திரேதாயுகம். எட்டு லக்ஷத்து அறுபத்து நாலாயிரம் கொண்டது துவாபரயுகம். நாலுலக்ஷத்து முப்பத்திரண்டாயிரம் கொண்டது கலியுகம். இந்நான்கு யுகமும் கூடிய வருஷம் நாற்பத்து மூன்று லக்ஷத்து இருபதினாயிரம். இது சதுர்யுகம், இதுவே மகாயுகம். இந்த மகாயுகம் பதினெட்டுச் சென்றால் ஒரு

## சிவனடியார்களிடம் எப்போதும் இறைவன் இருப்பான் என மார்க்கண்டேயன் கூறல்

இன்றுநீர் சொன்னவிதி எங்களுக்கு வாராது
சீரில் மிகுந்த சிவபூசையின் பெருமை
1295 காரினில் மாலோன் கருணைய் யன்றியார்
அவம்விதியைத் தள்ளாது ஆனவிதியே வலுவாம்

மனுவுக்கு ராச்சியம். இந்த மனுவுக்கு ராச்சியம் எழுபத்துநான்கு சென்றால் இந்திரனுக்கு ராச்சியம். இந்த இந்திரனுக்கு ராச்சியம் இருநூற்றெழுபது சென்றால் பிரமனுக்கு ஒரு நாள். இந்த நாள் முப்பது சென்றால் ஒரு மாதம். மாதம் பன்னிரண்டு சென்றால் ஒரு வருஷம். இந்த வருஷம் நூறு சென்றால் பிரமனுக்கு ஆயுள் முடிவு. இப்படி முந்நூற்றறுபது வருஷம் சென்றால் ஆதிப்பிரமனுக்குப் பிரளய காலம். இந்தப் பிரளயம் நூறு சென்றால் ஒருவிஷ்ணுகற்பம். இந்த விஷ்ணுகற்பம் நூறு சென்றால் உரோமச மகருஷிக்கு ஒரு உரோமம் உதிரும். இந்த உரோமச மகருஷிக்குப் பத்துக் கோடி என்றால் மீனசமகருஷிக்கு உடம்பில் ஒரு செதிள் உதிரும். இந்த மீனசமகருஷிக்கு ஒரு கோடி சென்றால் பரத்துவாச மகருஷிக்கு ஒரு நிமிஷம். இந்தப் பரத்துவாச மகருஷிக்கு முப்பதுகோடி சென்றால் சத்தி தலைமயிர் அவிழ்த்து முடிக்கும் நேரமாம். இந்தப்படி எழுநூற்றெண்பது கோடி சத்திகள் கூந்தலவிழ்ந்து முடிந்தால் மகாசக்திக்கு ஒரு நிமிஷமாம். (மேற்கோள்: *அபிதான சிந்தாமணி*, பக்.416-17).

*1293.* இன்று நீர் சொன்னவிதி - எம தர்மனாகிய நீவிர் இப்பொழுது கூறிய கால அளவும் அழிவும்; எங்களுக்கு வாராது - சிவபக்தர்களாகிய எங்களைப் போன்றவர்களுக்குப் பொருந்தாது (என்று மார்கண்டேயன் கூறினான்); பி.வே. - 'நீ' (ச.ம.நூ.); 'சொன்னபடி' (மா.தவநிலை);

*1294.* சீரில் மிகுந்த - எல்லாப் பெருமைகளிலும் சிறப்பானதான; சிவபூசையின் பெருமை - சிவனை வழிபடுதலால் ஏற்படும் சிறப்பு; பா.வே. - 'நிறைந்தசிவபூசையின்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*1295.* காரினில் - கருமையில்; மாலோன் - திருமால்; கருணைய் யன்றி - அருளையல்லாது; யார் - யாவர் அறிவார்? (இதில் மாலோன் சிவபூசை செய்து சிறப்படைந்த வரலாறு உணர்த்தப் படுகிறது); பா.வே. - 'காரிநிற' 'கருணை அயன் அறியான்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*1296.* அவம் - கேடு; விதியைத் தள்ளாது - ஊழை விலக்காது; ஆனவிதியே வலுவாம் - விதிக்கப் பெற்ற ஊழே வலிமையுடைத்தாம்; பா.வே. - 'அயன்', 'அரன்விதியே' (மா.தவநிலை); காண்க: 'அவம்' (1500, 1701, 1982, 2415, வி.46, வி.73, வி.77);

தவம்விதியைத் தள்ளிவிடும் தன்மமிகுவே வலுவாம்

**விருத்தம்**

வேதனார் விதியைத் தள்ள
மீறிய தவங்கள் செய்து
நீதமா முனிவர் பூவில்
நித்தலும் வாழ்வார் கண்டீர்
நாதனார் சூட்டு மாய்கை
னா[ன்]முகன் கண்டா னாகில்
ஏதுநீ சிரசு தன்னை
யீசுபரன் செங்கை ஆய்ந்தான் (37)

**நடை**

அண்டமொடுங்கி அரிவிரிஞ்சன் றான்னொடுங்கி
தெண்டிரை நீரெல்லாஞ் சிதறநீ மாண்டாலும்

1297. தவம் விதியைத் தள்ளிவிடும் - சிவபூசை ஊழ்வினையை விலக்கிவிடும்; தன்ம மிகுவே வலுவாம் - மிகுந்த தருமமே எங்களைப் போன்ற சிவபக்தர்களுக்கு வலிமை தரக்கூடியது; பா.வே. - 'தருமமிது வெல்லுவார்' (ச.ம.நூ.); 'தருமமதிலும்மே' (மா.தவநிலை);

வி.37. வேதனார் - பிரமன்; விதியைத் தள்ள - உயிர்களுக்குக் கற்பித்துள்ள ஊழை விலக்க; மீறிய தவங்கள் செய்து - விஞ்சி நிற்கக் கூடிய தவத்தை மேற்கொண்டு; நீதமா முனிவர் - அறநெறிகளை மேற்கொள்ளும் ரிஷிகள்; பூவில் நித்தலும் வாழ்வார் - இவ்வுலகில் நாளும் வாழ்ந்து வருகின்றனர்; கண்டீர் - நீர் காண்பீராக; நாதனார் - சிவபெருமான்; சூட்டு மாய்கை - விதிக்கும் மாயம்; நான் முகன் கண்டானாகில் - பிரமன் அறிந்தானானால்; ஏதுநீ - எமனாகிய நீர் எதற்கு?; சிரசு தன்னை - தலை (எழுத்து) தன்னை; செங்கை ஈசுபரன் ஆய்ந்தான் - சிவந்த கைகளையுடைய இறைவனே நிர்ணயிக்கின்றான்;

பா.வே. - 'பூவில் நிறைந்தனர் ஏது செய்வார்', நாதமாப் புழுவைத் தன் போல் நாட்டு வெட்டுவனுமாறாய்', 'சூதான தவத்தில் வேதன் சுருதியும் நீரும் ஏதோ?' (ச.ம.நூ.); 'செங்கை யீந்தார்' (மா.தவநிலை); 'சூட்டும் விஞ்சை', 'ஈவான்' (கை.பிரதி); காண்க: 'சிரசு' (1456, 1597, 1768); 'செங்கை' (1044, 1224, 1599, 2321, வி.25, வி.44, வி.50);

1298. அண்டம் ஒடுங்கி - இப்பரந்த பூகோளம் அழிந்து; அரிவிரிஞ் சன் - விஷ்ணுவும் பிரமனும்; தான் ஒடுங்கி - இருவர்தாமும் அழிந்து; காண்க: 'விரிஞ்சன்' (1121, 2131);

1299. தெண்திரை நீர் எல்லாம் சிதற - தெளிந்த அலைகடல் நீர் அனைத்தும் ஒடுங்கினாலும்; நீ மாண்டாலும் - எமனாகிய நீ இறந்தா

எங்கும் நிரந்தரமா யியல்தூளி யானாலும்
மங்கைபங்கன் னெங்களிடம் வாழ்ந்திருப்பா
ரென்னா[ளு]ம்
அப்படியா யோருகந்தான் னாகி முடிந்தாலும்
செப்பமுடன் வெள்ளிமலைச் சிவன்பாதத்தே
யிருப்போம்
உந்தன்னிடஞ் சேரோ முண்மையிது காலா
அந்திமதி சூடு மரன்பாத மெங்களுக்கு
எங்கள் பதியி லிறையோன் மகிழ்ந்திருப்பார்

லும்; பா.வே. - 'நீரேழும்' (ச.ம.நூ.); 'தெண்டிரையீரேழும்' (மா.தவ நிலை, கை.பிரதி); காண்க: 'தெண்டிரை' (999, 1005, 1367, 1542, 2544);

1300. எங்கும் நிரந்தரமாய் - எவ்விடத்தும் நிச்சயமாய்; இயல் தூளியானாலும் - இயல்பாகவே புழுதியாகித்தரை மட்டம் ஆனாலும்;

1301. மங்கை பங்கன் - (வரி 1187) உமையொரு பாகன்; எங்களிடம் வாழ்ந்திருப்பார் என்னா[ளு] ம் - (சிவன் மட்டும்) எங்களைப்போன்ற சிவபக்தர்களிடம் எப்போதும் தங்கியிருப்பார்; பா.வே. - 'மங்கைபங்கன் அன்பர்க்கு வாராது ஒருநாளும்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1302. அப்படியாய் ஓர் யுகந்தான் - மேலே கூறியவாறு கால அளவையுள்ள ஒருயுகம்; ஆகி முடிந்தாலும் - கழிந்த தென்றாலும்; பி.வே. - 'அப்படித்தான்' (ச.ம.நூ.); 'அப்படியேதானும் யெனதுயாவுள் முடிந்தாலும்' (மா.தவநிலை); 'யேகாந்தமாய் முடிந்தாலும்' (கை.பிரதி);

1303. செப்பமுடன் - செம்மையாக; வெள்ளிமலை - கையிலாய மலையிலுள்ள; சிவன்பாதத்தே இருப்போம் - சிவனின் இருபாதங்களில் அமர இடம்பெற்றிருப்போம்;

1304. உந்தன்னிடம் - உன்னிடம்; சேரோம் - சேரமாட்டோம்; உண்மையிதுகாலா - எமனே! இது மெய்யாகும்; பா.வே. - 'வாரதில்லை' (ச.ம.நூ.); 'உண்மையிதுயேமா' (மா.தவநிலை);

1305. அந்திமதிசூடும் - பிறையைத் தலைமுடியில் அணியும்; அரன்பாதம் எங்களுக்கு - சிவபெருமானின் திருப்பாதங்களின் துணை எங்களைப்போன்ற சிவபக்தர்களுக்கு உண்டு;

1306. எங்கள் பதியில் - எம் மனைகளில், இடத்தில்; இறையோன் -- சிவன்; மகிழ்ந்திருப்பார் - விரும்பியிருப்பார்; பா.வே. - 'எங்கள் மனதில்... ஒளிந்திருப்பான்' (ச.ம.நூ.); 'மனதில்... நிறைந்திருப்பார்' (மா.தவநிலை); காண்க: 'பதி' (397, 1630, 1709);

மங்கைபங்க னெங்களிடம் வாழ்ந்திருப்பா
ரென்னாளும்
கொஞ்சமிவ னென்றுங் கோபம் நினையாதே
அஞ்செழுத் தீச ரரனா ரடியார்மேல்
தீங்கு நினைத்தோர் திடனா யுயிரிழப்போர்
ஓங்கி யணுகாதே ஒதுங்கா[ய்] புகழ்மேமா
என்றுதான் பால னிவைகூறவே புதல்வன்

**மார்க்கண்டனைக் கொல்ல எமன் தயாராதல்**

இன்று பயலை யியல்வுடனே நான்விடுத்தால்
தேவர்களு மட்ட திசையெட்டுப் பாலகரும்

1307. மங்கைபங்கன் எங்களிடம் வாழ்ந்திருப்பார் என்னாளும் - (பார்க்க வரி விளக்கம் 1187) பா.வே. - 'மங்கை பங்கன் பாதம் மனது மறவாது' (மா.தவநிலை, கை.பிரதி);

1308. கொஞ்சம் இவன் என்றும் - சிறுவன் என்று என்மேல், கோபம் நினையாதே - கோபப்படாதே; பா.வே. - 'எண்ணிகோபம்' (ச.ம.நூ.); 'கோபம் நினையாதே' (மா.தவநிலை, கை.பிரதி);

1309. அஞ்செழுத்து ஈசர் - நமசிவாய எனும் நாமம் பெற்றுள்ள இறைவன்; அரனார் - சிவன்; அடியார்மேல் - சிவபக்தர்கள் மீது; பா.வே. - 'அஞ்செழுத்தில் ஈசன் அடியார்கள் தங்களுக்கு' (ச.ம.நூ., மா.தவ நிலை); காண்க: 'அஞ்செழுத்தீசர்' (1540);

1310. தீங்கு நினைத்தோர் - தீமைகளை எண்ணுவோர்; திடனாய் - உறுதியாய்; உயிரிழப்போர் - இறந்துபோவர்;

1311. ஓங்கி அணுகாதே - விரைந்து பக்கத்தில் வராதே; புகழ் ஏமா - புகழுடைய எமதர்மா!; ஒதுங்காய் - விலகிச் சென்றுவிடு; பா.வே. - 'என்னைக் கொல்லாது ஒதுங்கியே ஏகும் என்றான்' (ச.ம.நூ.); 'ஓங்கியெனைக் கொல்லாதே' (மா.தவநிலை, கை.பிரதி);

1312. என்றுதான் பாலன் - என மார்க்கண்டேயன்; இவை கூறவே புதல்வன் - இவ்வாறு சிறுவன் கூறவும்;

1313. இன்று - இப்போது; பயலை - சிறுவன் மார்க்கண்டேயனை; இயல்வுடனே நான் விடுத்தால் - மரணத்தினின்று தப்புமாறு இயல்பாக நான்விட்டுவிட்டால்;

1314. தேவர்களும் - வானிலுள்ளவர்களும்; அட்டதிசை எட்டுப் பாலகரும் - திக்குப் பாலகர் எண்மரும்;

யாவர்களுந் தானகைப்பா ரஞ்சிவிட்டா ரென்று சொல்லி
இந்தப் பயலை யியல்வுடனே னான்பிடித்து
சிந்தையிமை யெமபுரஞ் செல்லுவேன் னென்றுசொல்லி
கார்மே கம்போல் கனமலைபோல் நின்றசண்டன்
சீர்மேவும் காலன் திடுக்குமுறக் கோபமுற்றான்
பறுபதம் போலே பருத்த கருவுடலும்
திறமு(ம்)ஞ் சமத்துந் திண்டோள் மணிமார்பும்
அந்தரத்தில் மேகமென்ன யடந்த குழைக்காதும்

1315. யாவர்களும் தான் - மற்றுமுள்ள முனிவர்களும் பிறரும்; அஞ்சிவிட்டார் என்று - எமன் ஒரு சிறுவனிடம் பயந்து விட்டான் என்று பேசி; நகைப்பார் - 'கேலி' செய்து சிரிப்பர்;

1316. இந்தப் பயலை - இச் சிறுவன் மார்கண்டேயனை; இயல்வு டனே நான் பிடித்து - இப்போதே எளிதாகப் பற்றி;

1317. சிந்தையிமை - கண்ணிமைக்கும் நேரத்தில், உள்ளத்தில் எண்ணம் எழக்கூடிய பொழுதில்; எமபுரம் - எனது நகரான எமபுரத் துக்கு; செல்லுவேன் என்று சொல்லி - போவேன் எனக்கூறிக் கொண்டு; காண்க: 'எமபுரம்' (562, 1072, 1203, 1651, 2063, 2106);

1318. கார்மேகம் போல் - இருளடர்ந்த மேகத்தைப் போன்றும்; கனமலைபோல் - பெரிய மலைபோன்று உறுதியாயும்; நின்ற சண்டன் - (வரி 995) நின்று கொண்டிருக்கும் எமன்; காண்க: 'கார் மேகம்' (வி.41);

1319. சீர்மேவும் - புகழ், பெருமை விளங்கக்கூடிய; காலன் - எமன்; திடுக்குமுற - பிறர் அஞ்சுமாறு; கோபமுற்றான் - சினந்தான்;

1320. பறுபதம் < பருவதம் < பர்வதம் - மலை; போலே - போன்று; பருத்த கருவுடலும் - பெரிய கருமையான உடம்புடன்; பா.வே. - 'பருப்பதம் போல்மேனி' (ச.ம.நூ.);

1321. திறமும் - வீரமும்; சமத்துவம் - திறமைகளும்; திண்தோள் - வலிமைபொருந்திய அழகிய தோள்களும்; மணிமார்பும் - மணியாலா கிய மாலைகள் தொங்கிடும் அழகிய மார்பும்; பா.வே. - 'திரைபோல் எழுந்தகையும்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'தோளும் திரண்ட கை மார்பன்' கை.பிரதி);

1322. அந்தரத்தில் - ஆகாய வெளியில்; மேகம் என்ன - உலவும் மேகத்தைப் போன்று; அடந்த < அடர்ந்த - பரந்த; குழைக்காதும் - தோடுடைய காதுகளும்; பா.வே. - 'அடர்ந்த குழற்காடு' (ச.ம.நூ.); 'குமிள்ளோங்கி வந்ததுபோல்' (மா.தவநிலை);

சிந்திரத்தில் தீட்டுஞ் சிறந்த சிரமேழும்
வீசை முறிக்கி மின்னும் பிறையொளிவும்
நேசம் பதினாலும் நிறைந்த விழியக்கினியும்
பொங்குமுக மேழும் புயங்கள் பதினாலும்
தங்குபுகழ் பாலகன்முன் றான்காட்டினா னாடிபோல்

**காலனின் கோலம் கண்டு மார்க்கண்டேயன் பயந்து இலிங்கத்தைத் தழுவிஒளிதல்**

காலனுட கோலம் கண்டேங்கிப் பாலகனும்
சீலமிகு நெஞ்சந் திடுக்கிட் டிவனேங்கி
அழுது பயந்து அரனே யபையமென்றான்

1323. சிந்திரத்தில் < சித்திரத்தில் - ஓவியத்தில்; தீட்டும் - வரையும்; சிறந்த சிரம் ஏழும் - சிறப்பமைந்த தலைகள் ஏழும் விளங்க; பி.வே. - 'சிந்துரத்தின்' (மா.தவநிலை);

1324. வீசை < மீசை; முறிக்கி < முறுக்கி - திருக்கி; மின்னும் பிறை - ஒளிவீசக் கூடிய பிறைச் சந்திரன் போன்ற நெற்றிகளின்; ஒளிவும் < ஒளிர்வும் - பிரகாசமும்; பா.வே. - 'பிறை எயிறும்' (ச.ம.நூ.);

1325. நேசம் - அன்பு, கருணை சொரியும் விழிகள்; பதினாலும் - ஏழு முகத்திலும் பதினான்கு கண்களும்; நிறைந்த விழி அக்கினியும் - ஆனால் அவை கோபத்தால் தீயை நிறைத்து வைத்திருப்பதும்;

1326. பொங்கு முகம் ஏழும் - விளங்கக் கூடிய ஏழு முகங்களும்; புயங்கள் பதினாலும் - பதினான்கு தோள்களும்;

1327. புகழ் தங்கு பாலகன் முன் - பெருமை தங்கியுள்ள சிறுவன் மார்க்கண்டேயன் முன்பில்; தான்காட்டினான் ஆடி போல் - கண்ணாடியில் தெரிவதுபோல் தன் கோலத்தை எமன் பெரிதாகக் காட்டி நின்றான்; பா.வே. - 'இடிபோல்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1328. காலனுடை கோலம் - எமனுடைய தோற்றத்தை; கண்டு ஏங்கிப் பாலகனும் - மார்க்கண்டேயன் பார்த்து, மிகவும் பயந்து; பா.வே. - 'காலனுடைய ஏழுமுகம் கண்டு அலறியேபதறி' (ச.ம.நூ.); 'ஏமன் கனல்கோபம்... தான்வொடுங்கி' (மா.தவநிலை); 'ஒளித்து' (கை.பிரதி);

1329. சீலமிகுநெஞ்சம் - நல்லுள்ளம்; திடுக்கிட்டு இவன் ஏங்கி - சிறுவன் பயந்து நடுங்கி; பா.வே. - 'சீலநெறி... உடல்பதறி (ச.ம.நூ.); 'சீலகன்நெஞ்சம்' (மா.தவநிலை); 'சீலமுள்ள நெஞ்சம்' (கை.பிரதி);

1330. அழுது - கதறி; பயந்து - துணுக்குற்று; அரனே - சிவனே; அபையமென்றான் - என்னைக் காப்பாற்றுக, நான் உன் அடைக்கலம் என்றான்; காண்க: 'அபையம்' (1143);

பழுது வாராமல் பரனே வுனையடைந்தேன்
அரிகாணாப் பாத மடியே னடையாமல்
கரிபோ லெழுந்துவருங் காலனுட கைதனிலே
அகப்பட் டலைய அரனே விதித்தாயே
1335 சுகப்பட்டு யுன்பாதஞ் சொர்க்க மணுகாமல்
சண்டனிடம் போவதுவோ சங்கரனே நாயடியேன்
அண்டத் தமரர் அரும்பொருளே தஞ்சமென்று
அண்டத்தில் வாழு மனைஓர்களும் பிழைக்க
கண்டத்தில் நஞ்சைவைத்த காரணரே காத்திலையோ

1331. பழுதுவாராமல் - துன்பம் எதுவும் நேராமல்; பரனே - சிவனே; உனை அடைந்தேன் - கடவுளே! உம் தாளிணைகளைச் சேர்ந்துள்ளேன்;

1332. அரி காணாப் பாதம் - திருமாலே கண்டுபிடிக்க முடியாத உம் திருப்பாதங்களை; அடியேன் - சிறுவனான நான்; அடையாமல் - கண்டு அதனில் சேராமல்;

1333. கரிபோல் எழுந்துவரும் - பெரிய யானை போன்று தோன்றி வந்துள்ள; காலனுடகைதனிலே - எமனுடைய பிடியில்; காண்க: 'கரி' (509, 1727, 2438);

1334. அகப்பட்டு அலைய - சிக்குற்று அலைக்கழிய; அரனே - சிவனே!; விதித்தாயே - கற்பித்தனையோ?;

1335. சுகப்பட்டு - இன்பமுற்று; உன்பாதம் சொர்க்கம் - உம் திருப்பாதங்களில் உண்டாவதான சொர்க்கத்தை; அணுகாமல் - வந்தடையாமல்;

1336. சங்கரனே - சிவனே!; நாயடியேன் - நாயைப் போன்று கீழ்மையான சிறுவனான நான்; சண்டனிடம் போவதுவோ - எமனுடைய உலகுக்குச் செல்லுவதோ;

1337. அண்டத்து அமரர் அரும்பொருளே - வான வெளியிலுள்ள தேவர்களுக்கு அரிய பொருள் ஆனவனே; தஞ்சம் என்று - நான் உன் அடைக்கலம் என;

1338. அண்டத்தில் வாழும் அனைஓர்களும் (< அனைவோர்களும்) - வானில் வாழக்கூடிய வானவர் எல்லோரும்; பிழைக்க - உயிருடன் வாழவேண்டி;

1339. கண்டத்தில் நஞ்சை வைத்த காரணரே - (வரி 251) கடைதலின் போது கடலில் பொங்கிய கொடிய நஞ்சை விழுங்கி அதைத் தொண்டைக்குள்ளேயே தாங்கிக் கொண்ட மூலவனே; காத்திலையோ - என்னை மட்டும் காப்பாற்றாமல் விட்டு விட்டீரோ; பா.வே. - 'வையித்துக்

1340 அடுமை யுனது யடுமையெனவே யிருந்தேன்
படியி லெனைக்காற்கப் பரனேநீ வந்திலையோ
உந்தனருள் பெத்தவர்க்கு யுண்டோ யுலகில்நமன்
எந்தன்தனைக் காற்று லட்சிக்க வந்தருளீர்
என்றுதான் மார்கண்ட னேங்கியுடல் பதறி
1345 இன்றுவலு கால னெமைவிடா னென்றுசொல்லி
கால்கள் மிகப்பதறி கைகள் தடுமாறி
மேல்கள் நடுநடுங்கி மெய்கலங்கி யேற்க்கமுற்று
பொன்னுடலை நாயடியேன் போதவே கட்டுதற்கு

காத்தீரே யன்றவரை' (மா.தவநிலை); 'காத்திலையோயன்றவரை' (கை.பிரதி);

1340. அடுமை < அடிமை - அடியேன்; உனது அடுமை - உம் அடியேன்; எனவே இருந்தேன் - என எண்ணியிருந்தேன்; பி.வே. - 'உமது' (மா.தவநிலை);

1341. படியில் - பூமியில்; எனைக் காற்க்க (< காக்க) - எமனிட மிருந்து என்னைக் காப்பாற்றுவதற்கு; பரனே - சிவனே; நீ வந்திலையோ - நீவிர் வரவில்லையே; பி.வே. - 'வந்தீர்யில்லை' (மா.தவநிலை);

1342. உந்தன் அருள் - உமது கருணையை; பெத்தவர்க்கு < பெற்றவர்க்கு - அடைந்தவர்களுக்கு; உலகில் நமன் உண்டோ - உலகத்தில் மரணம் இருக்காது;

1343. எந்தன் தனைக்காற்று (< காத்து) - என்னைக் காப்பாற்றி; லட்சிக்க < ரட்சிக்க - காப்பாற்ற; வந்தருளீர் - (கருணையுடன் வந்து) சேர்க;

1344. என்றுதான் - இவ்வாறு சொல்லி; மார்க்கண்டேயன்; ஏங்கி - வருந்தி; உடல் பதறி - மெய் சோர்ந்து;

1345. இன்று - இப்போது; வலுகாலன் - வலிமை மிகுந்த எமன்; எமைவிடான் என்று சொல்லி - என்னை விட்டுவைக்காது பிடித்து விடுவான் என்று அரற்றி;

1346. கால்கள் மிகப்பதறி - கால்களிரண்டும் நிற்கவியலாது நடுக்க முற்று; கைகள் தடுமாறி - கைகளிரண்டும் நடுக்க மெய்தி;

1347. மேல்கள் நடுநடுங்கி - மேலுறுப்புகள் எல்லாம் நடுக்கமுற்று; மெய்கலங்கி - உடம்பு நடுங்கி; ஏற்க்கமுற்று < ஏக்கமுற்று - நினைத்து நினைத்துப் பெருமூச்சுவிட்டு;

1348. பொன்னுடலை - இறைவனின் பொன்னார் மேனியான இலிங்கத்தை; போதவே கட்டுதற்கு - பற்றுமானமாகக் கட்டிப்பிடித்துக்

என்னுடைய அய்யா யிருக்க முடியுதில்லை
கோபத் துடனே கொடியசண்டன் வாறதினால்
ஆபத்துக்குப் பாவ மறியே னடியேனும்
அந்திமதி சூடு மரனாரே தஞ்சமென்று
வந்து லிங்கங்கட்டி மறைந்துநின்று தானமுது
பூசைசெய்து நின்றேன் புகழ்பெரிய பாதமதை
ஆசையுத்த பாத மகல விதித்தீரே
ஏமனி டத்தி லியல்பாக யெந்தனையும்

கொள்வதற்கு; நாயடியேன் - நாய்போன்ற என்னால்; பா.வே. 'கட்டுகிறேன்' < (ச.ம.நூ.);

1349. என்னுடைய அய்யா - என் இறைவனே; இருக்கமுடியுதில்லை - நடுங்கும் என்னால் இயலவில்லை;

1350. கோபத்துடனே - சினத்துடன்; கொடிய சண்டன் - கொடுமையுடைய எமன்; வாறதினால் - என்னைப் பிடிக்க வருவதால்; பி.வே. - 'வருவதனால்' (ச.ம.நூ.);

1351. அடியேனும் - சிவபக்தனான நானும்; ஆபத்துக்குப் பாவம் அறியேன் - நெருக்கடியான இந்த நேரத்தில் இலிங்கத்தைக் கட்டித் தழுவுதலான செய்கையன்றி வேறொன்றும் செய்வதற்கு இயலாதவனாவேன்;

1352. அந்திமதிசூடும் அரனாரே தஞ்சமென்று - (வரி 771) பிறை சூடும் இறைவனே அடைக்கலம் எனக் கூறிக்கொண்டு;

1353. வந்து லிங்கங்கட்டி - மேலேறி வந்து இலிங்கத்தைப் பற்றுக் கோடாகக் கைகளால் கட்டிப் பிடித்துக் கொண்டு; மறைந்து நின்று தானழுது - எமனுக்குத் தெரியாதபடி மறைந்து அந்த இலிங்கத்தின் பின்புறம் நின்று கொண்டு; காண்க: 'லிங்கம்' (1168 - முதலியன); அழுது அரற்றி; பா.வே. - 'நின்றான் பாலகனும்' (ச.ம.நூ.);

1354. புகழ் பெரிய பாதமதை - பெருமை பொருந்திய தாள்களிரண்டையும்; பூசை செய்து நின்றேன் - துதித்து நின்றேன்;

1355. ஆசையுத்த பாதம் அகல (உத்த < உற்ற) - ஆசையுடன் உம் பாதம் சேரஇருந்த என்னை அவை கிடைக்காது நீங்குமாறு; விதித்தீரே - கற்பித்து விட்டீரோ;

1356. ஏமனிடத்தில் - சண்டனிடத்து; இயல்பாக எந்தனையும் - எளிதாக என்னையும்; பா.வே. - 'இயல்பாக யிந்த செனனம்' (மா.தவ நிலை, கை.பிரதி);

காமனைமுன் காய்ந்தோனே காட்டிக் கொடுத்ீரே
இன்னமொரு செண்ம மியல்வா யெடுத்தாலும்
பண்ணுபுக ளீசுபரனே பாதத்தில் சேத்தருளும்

1360 என்று மார்க்கண்ட னியல்வு சிவலிங்கமதை
சென்றுகட்டிக் கொண்டுயவன் திறமறந்து நிற்கையிலே

**எமன் பாசக் கயிற்றை வீசல்**

தங்குவலு காலன் தரணியிடி யெனவே

*1357.* காமனை முன்காய்ந்தோனே - முன்பொருமுறை மன்மதனை நெற்றிக்கண் பொறியாலே எரித்து நீராக்கியவரே; காட்டிக் கொடுத்தீரே - எமன் என்னைப் பிடித்துக் கொள்ளுமாறு விட்டுவிட்டு இருந்து கொண்டீரே; காண்க: 'காமனைக் காய்தல்' (1723);.

இறைவன் காமனைக் காய்ந்த வரலாறு வருமாறு:;

திருமாலின் மகனான காமன் உலகத்து உயிர்களிடம் இச்சையை உண்டாக்கி உற்பத்திக்குத் துணையாய் நிற்பவன். தேவர்களை வருத்திய சூர-பதுமன் அழிவிற்குக் குமார-முருகனைச் சிவன் பிறப்பிப்பதற்காக அவர்மேல் தன் கணைகளை ஏவினான். யோகத்திலிருந்த சிவன் கோபத் தால் கண்விழித்துப் பார்க்கவும் மன்மதன் சாம்பலாயினன். மன்மதனின் மனைவி இரதியின் வேண்டுதலுக்கிணங்கிய சிவன், உலகத்தோர் கண்க ளுக்குத் தெரியாதவாறும், இரதியின் கண்களுக்கு மட்டுமே தெரியுமாறும் மன்மதனுக்கு வரமளித்தார்.

*1358.* இன்னமொரு - இனிமேலும் ஒரு; செண்மம் < சென்மம் - (மற்றொரு) பிறவி; இயல்வாய் - இயல்பாகவே; எடுத்தாலும் - பிறந்தாலும்; பா.வே. - 'செனனம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'சென்மம்' (வி.48);

*1359.* பண்ணுபுகழ் ஈசுபரனே - புகழ் விளங்கக் கூடிய இறைவனே; பாதத்தில் சேத்தருளும் (< சேர்த்தருளும்) - உம் பாதத்தில் அப்பிறவியி லாவது வந்து இருக்கும் பாக்கியத்தை எனக்குக் கொடுத்தருளும்;

*1360.* என்று மார்க்கண்டன் - எனச் சிறுவன் மார்க்கண்டேயன்; இயல்வு சிவலிங்கத்தை - புகழ்விளங்கும் இலிங்கத்தை;

*1361.* சென்று கட்டிக் கொண்டு - அதன் அருகில் சென்று தன் கைகளால் தழுவிக் கொண்டு; அவன் திறமறந்து நிற்கையிலே - அவன் தன்னை மறந்து நிற்கின்றபோது;

*1362.* வலிதங்கு காலன் - வலிமை தங்கியுள்ள எமன்; தரணியிடி எனவே - பூமியில் இடிவந்து தோன்றுவதுபோல்;

எங்கே யொளித்தாலும் யினிவிடே னென்றுசொல்லி
யீசன்றன் மேலு மியல்புதல்வன் தன்மேலும்
பாச[க்] கயறிட்டான் பகிரண்டந் தானடுங்க

## இலிங்கத்தின் மீது கயிறு விழுந்ததால் உண்டான விளைவுகள்

அண்ட பாதாள மதிர்ந்து திடுதிடென
தெண்டிரை நீரேழுஞ் சிதறி வெகுண்டோட
அட்டவரை யெட்டு மானவரை யெட்டசைய
சிட்டர்களு மெட்டுத் திசையுங் கிடுகிடென

*1363.* எங்கே ஒளித்தாலும் - இலிங்கத்தின் மறைவில் ஒளித்தாலும், மற்றும் வேறு எங்கு ஒளித்தாலும்; இனிவிடேன் என்று சொல்லி - இனிமேல் உன்னைத் தப்பித்துச் செல்ல விடமாட்டேன் எனக் கூறிக் கொண்டே;

*1364.* ஈசன்தன்மேலும் - இலிங்கமாயுள்ள இறைவன்மீதும்; இயல் புதல்வன் தன்மேலும் - அங்கு நின்றிருந்த சிறுவன் மீதும்; பா.வே. - 'ஈசர் லிங்கம் மேலும்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1365.* பகிரண்டம் தான் நடுங்குமாறு - எல்லா அண்டங்களும் அதிருமாறு; பாச[க்]கயறிட்டான் (< கயிறு) - உயிர்களைப் பிடிக்கும் பாசக் கயிற்றை வீசினான்; பா.வே. - 'தானதிர' (மா.தவநிலை, கை. பிரதி); காண்க: 'பாசக்கயிறு' (1390, 1463, 1804); ஒப்பிடுக: 'பாசம்' (வரி 395), (வரி 1226);

*1366.* அண்ட பாதாளம் - அண்டமும் பாதாளமும்; அதிர்ந்து திடுதிடு என - 'கிடுகிடு' வென நடுங்கி அதிர; பா.வே. - 'அடுக்கு திடுதிடு என்றாட' (ச.ம.நூ.); 'அண்டம் முதல் பாதாளம்' (கை.பிரதி);

*1367.* தெண்டிரை நீரேழும் - திரைகள் எழும்பும் ஏழு கடல் நீர் எல்லாம்; சிதறி வெகுண்டோட - பயந்து தெறித்து வெவ்வேறு திசைகளில் செல்ல; பா.வே. - 'வெருண்டோட' (ச.ம.நூ.); 'ஈரேழும்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1368.* அட்டவரை எட்டும் - எட்டு மலைகளும்; ஆனவரை எட்டசைய - ஆகிய பிறமலைகள் எட்டும் அதிரவும்; பா.வே. - 'அட்ட கெசம்' (மா.தவநிலை); ஒப்பிடுக: 'அட்டமலை' (1439, 1545);

*1369.* எட்டுத்திசையும் - அஷ்டதிக்குகள்; சிட்டர்களும் - திசைகளைக்காக்கும் எண்மரும்; கிடுகிடென - 'கிடுகிடு' என அதிர; பா.வே. - 'திடுதிடென' (ச.ம.நூ.); 'திடுக்கிடவே' (மா.தவநிலை);

திட்டமுட னாகஞ் சென்னி தினுக்கிடவே
தொட்ட தெறிபுவனந் தொல்புவியெல்லா முழங்க
ஆயிரங் கோடி யடந்த யிடியெனவே
ஆயிரத் தெட்டண்ட மடங்கலுமே நின்றதிர
எங்குங் கிடுகிடென வியல்வுவலு வோசைபொங்க
பொங்கமுடன் வெள்ளி மலையு மிகவதிர
செங்கைமால் வைகுண்டஞ் சீர்பிரமன் பூவசைய

**இலிங்கத்துடன் மார்க்கண்டேயனை எமன் இழுத்தல்**

கங்கை யணிந்தோன் கருணைநெறிப் பாலகனை

*1370.* திட்டமுடன் - உறுதியுடன் இருக்கும்; நாகம் - பூமியைச் சுமக்கும் ஆதிசேடனின்; சென்னி - தலை; தினுக்கிடவே < திடுக்கிடவே அல்லது துணுக்கிடவே - பயப்படவே; காண்க: 'நாகம்' (1692, 1728);

*1371.* தொட்ட தெறி புவனம் - (1236) பல்வேறான உலகங்களும்; தொல்புவி எல்லாம் முழங்க - முன்பாக உண்டான பழம் பூமிகள் எல்லாம்; பா.வே. - 'தோட்டத்திறள் புவனம்... அதிர' (ச.ம.நூ.); 'தொட்டதிரள் புவனம் ... விளங்க' (மா.தவநிலை);

*1372.* ஆயிரங்கோடி - கோடிக்கணக்கான; அடந்த < அடர்ந்த -சேர்ந்த; இடி எனவே - இடி முழக்கம் போல;

*1373.* ஆயிரத்தெட்டு அண்டம் அடங்கலுமே - (பார்க்க வரி விளக்கம் 15) அண்டம் அனைத்தும் சேர்ந்து; நின்றதிர - அங்கங்கே அவை நின்று ஆட்டம்காண;

*1374.* எங்கும் கிடுகிடு என - எவ்விடத்தும் அதிர்வு ஏற்பட; இயல்வு வலு ஓசை பொங்க - அதிர்வு காரணமாக இயல்பாகவே ஓசை எவ்விடத்தும் நிறைய;

*1375.* பொங்கமுடன் - நிறைந்து விளங்கும்; வெள்ளி மலையும் - (1024) கைலாய மலையும்; மிக அதிர - அதிகமாக ஆட்டம் காண; ஒப்பிடுக: 'வெள்ளிவரை' (346, 393, 2399, 2545, 2665);

*1376.* செங்கைமால் - செம்மையான உள்ளங்கையுடைய திருமாலின்; வைகுண்டம் - சொர்க்கம்; சீர்பிரமன் பூ அசைய - பெருமை தங்கிய பிரமன் உறையும் தாமரைப் பூவும் ஆட்டம் காண; பி.வே. - 'செங்கண்மால்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'வைகுண்டம்' (1781, 2546);

*1377.* கங்கை அணிந்தோன் - கங்கை நதியைத் தலையில் தாங்கியுள்ள சிவபெருமான்; கருணை நெறிப் பாலகனை - அருளுடன் வரம் நல்கியதால் தோன்றிய மார்க்கண்டேயனை; பி.வே. - 'அணிஈசர்' (மா.தவநிலை, கை.பிரதி);

யிறுக்கிக் கயறிட் டிறுக்கி வுடல்பூட்டி
மறுக்கி யிழுத்தான் மகாதேவரைக் கூட
பரவைக் கடலில் பாரமலை போட்டு
அரவைக் கயறிட்டு அமர ரிழுத்தாப்போல்
பொங்கி மகாகால[ன்] பூட்டுங் கயறதனால்
சங்கரனார் மேலுஞ் சத்தே யசைந்ததுவே

**இலிங்கத்துக்கும் பழுது வந்ததே என**
**வருந்தி தன்னை மட்டும் கொண்டு செல்ல**
**மார்க்கண்டேயன் எமனிடம் வேண்டல்**

லிங்க மசைய நெறியில் வலுபாலகனும்

*1378.* இறுக்கி - அழுத்தமாக; கயறு< கயிறு - பாசக் கயிற்றால்; இட்டு இறுக்கி உடல் பூட்டி - மார்க்கண்டேயனின் உடம்பில் பிணைத்து, நெருக்கி; பா.வே. - 'உடலையும் தான்பூட்டி' (மா.தவநிலை); 'உடல் பூட்டி' (கை.பிரதி);

*1379.* மறுக்கி - மிகுந்த முயற்சியுடன்; மகாதேவரைக்கூட இழுத் தான் - (763) சிவன் உறையும் இலிங்கத்தையும் சேர்த்துத் தன்பக்கம் வர வலித்தான்; பா.வே. - 'மகாலிங்கத் தேவரையும்' (ச.ம.நூ., மா.தவ நிலை, கை.பிரதி);

*1380.* பரவைக் கடலில் - பாற்கடலில்; பாரமலைபோட்டு - மந்தர மலையை மத்தாக இட்டு; பா.வே. - 'பாவை' (ச.ம.நூ., மா.தவநிலை); 'பரவ... பாரவலை' (கை.பிரதி);

*1381.* அரவை - ஆதிசேடனாகிய பாம்பை; கயறிட்டு < கயிறிட்டு - மத்துக்கயிறாகச் சுற்றி; அமரர் இழுத்தாப் போல் - ஒருபக்கத்தில் அமரர்கள் முன்பு இழுத்ததைப்போல எமனும் ஒருபக்கமாக இழுத்தான்; பா.வே. - 'ஆவைக் கடலில்' (ச.ம.நூ.); 'கயிறாக்கி' (மா.தவநிலை);

*1382.* பொங்கி மகாகாலன் - எமன் கோபத்தால் மிகுந்து; பூட்டும் கயறதனால் - பிணிக்கும் கயிற்றால் (கயறு < கயிறு); பா.வே. - 'பூட்டியக் கயறதனால்' (மா.தவநிலை);

*1383.* சங்கரனார் மேலும் - சிவனுறையும் இலிங்கத்தின் உடம்பும்; சத்தே < சற்றே, சிறிதாக; அசைந்ததுவே - ஆடியதே; பா.வே. - 'சங்கரன்தன்' (ச.ம.நூ.);

*1384.* லிங்கம் அசைய - அவ்வாறு சிவலிங்கம் சற்றே அசைந்து கொடுக்கவும்; நெறியில் வலு - மிகுந்த சிவ ஒழுக்கத்தில் வந்த; பாலகனும் - மார்க்கண்டேயனும்; பா.வே. - 'நெறிசிறந்த' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

யங்கம் பதறி யரனேயென வழுது
வலையி லகப்பட்ட மானானே னென்னமறுகி
தலையி லெழுத்திதுவோ சாகு மடியேற்(க்)காய்
பாதிமதி சூடும் பரனே பராபரனே
ஆதியே பூவி லடியேன் தனக்காக
பாசக் கயறுமுடல் பட்டுதே யென்றழுதான்
வாச மணியீசா மகாபித்தா ஐமுகனே
எந்தனுட சீவ னிறக்குமெந்தன் கண்காண

1385. அங்கம் பதறி - இலிங்கத்தின் மேனி அசைகிறதே எனத் தன் மேனி முழுதும் நொந்து; அரனே என அழுது - சிவ நாமத்தைக் கூறிக் கதறி;

1386. வலையில் அகப்பட்ட மானானேன் - வேடன்விரித்த வலையில் அகப்பட்ட மான் ஏதும் செய்யவியலாது மறுகுவதுபோல் பாசக் கயிற்றால் கட்டுண்ட நான் வருந்துகிறேன்; என்ன மறுகி - என்று வருந்தி; பா.வே. - 'அகப்பட்ட மகரம் என்ன (நாயடியேன்)' (ச.ம.நு., மா.தவநிலை, கை.பிரதி);

1387. தலையில் எழுத்து இதுவோ - இவ்வாறு இலிங்கமும் அசையுமாறு நடப்பது என் தலையெழுத்தோ; சாகும் அடியேற்க்காய் - சாகப் போகின்ற அடியேனாகிய எனக்காகவேண்டி; பா.வே. - 'சாகும் இந்த வேளையிலே' (ச.ம.நு., மா.தவநிலை); 'தரித்ததிந்த வேளையிலே' (கை.பிரதி);

1388. பாதிமதிசூடும் பரனேபராபரனே - பிறைசூடும் சிவனே (வரி விளக்கம் 311); ஒப்பிடுக: 'பாதிப் பிறையணிந்தபரன்' (75, 754);

1389. ஆதியே - எல்லாவற்றுக்கும் முதலானவனே; பூவில் - இந்த உலகில்; அடியேன் தனக்காக - ஏழை பக்தனான எனக்காக;

1390. பாசக் கயறும் < பாசக் கயிறும் - உயிர்களைப் பிணைக்கும் எமனுடைய கயிறும்; உடல் பட்டுதே - உம்மேனியில் அழுத்தி இறுக்கியதே; என்று அழுதான் - என மார்க்கண்டேயன் கதறினான்; பா.வே. - 'கயறும் பூண்டு பட்டதோ' (மா.தவநிலை, கை.பிரதி);

1391. வாசமணி ஈசா - மணம் வீசும் மணி மாலைகள் சூடும் இறைவனே; மகாபித்தா - பித்தர்கள் போல் செய்யவல்ல பெரிய பித்தனே; ஐமுகனே - ஐந்து முகங்களையுடைய சிவபெருமானே;

1392. எந்தன் கண்காண - நான் பார்த்துக் கொண்டிருக்கும் போதே; எந்தனுட < எந்தன் உடைய - என்னுடைய; சீவன் இறக்கும் - என் உயிர் போகும்; பா.வே. - 'சீவன் இருக்கையிலே' (மா.தவநிலை); 'சீவன் தரிக்கில்' (கை.பிரதி);

கந்தனய்யா மீது கயறுபடக் காரணமோ
மங்கைபங்கா நாயடியேன் மாளுவது மன்றிலிலே
யிங்கிருந்து நீரு மிடஞ்சல் படுந்துயரம்
என்று தவிர்ப்பே னெனவழுதான் பாலகனும்
இன்றுதான் காலா யியலிங்கந் தன்னைவிட்டு
எந்தனைக் கொண்டுசென்று யியல்வுவலு யாக்கினைகள்
சிந்தையுடன் செய்நீ சிவலிங்கந் தன்னைவிட்டு
என்றுதான் பாலன் ஏங்கியிவை யுரைக்க

**மீண்டும் எமன் இழுத்தல்**

அன்றுவலு கால னதட்டியவ னேதுரைப்பான்

1393. கந்தனய்யா மீது - (239) முருகப் பெருமானின் தந்தையாகிய சிவன் மேனியில்; கயறு (< கயிறு) படக் காரணமோ - பாசக்கயிறு ஏன் பட்டு இறுக்கவேண்டும்;

1394. மங்கைபங்கா - (1187) உமையொரு பாகனே; நாயடியேன் - நாய்போன்ற நான்; மாளுவது மன்றிலிலே - உமது கோவில் இடத்திலேயே நான் இறப்பது நிச்சயம்;

1395. இங்கிருந்து நீரும் - உமது கோவிலிலிருக்கும் நீரும்; இடஞ்சல் படுந்துயரம் - எனக்காகச் சங்கடப்படும் துன்பத்தை; காண்க: 'இடஞ்சல்' (2211, 2214);

1396. என்று தவிர்ப்பேன் - இனி எப்போது நீக்கப் போகிறேன்; என அழுதான் பாலகனும் - சிறுவன் மார்க்கண்டேயனும் இவ்வாறு சொல்லிச் சொல்லிக் கதறினான்;

1397. இன்றுதான் - இப்போது; காலா - எமனே; இயல் லிங்கம் தனைவிட்டு - விளங்கக் கூடிய இலிங்கத்தை விட்டுவிட்டு;

1398. எந்தனைக் கொண்டு சென்று - என்னை மட்டும் எமலோகத்துக்கு எடுத்துச் சென்று; இயல்வு வலு ஆக்கினைகள் - என்னவென்ன பெரிய தண்டனைகள் ஆங்கு உள்ளனவோ அவற்றையெல்லாம்;

1399. சிவலிங்கம் தன்னைவிட்டு - இலிங்கத்தை இங்கேயேவிட்டுவிடுக; சிந்தையுடன் செய் நீ - உன் விருப்பப்படி என்னை என்ன வேண்டுமானாலும் செய்து கொள்வாயாக;

1400. என்றுதான் பாலன் - எனச் சிறுவன்; ஏங்கி இவை உரைக்க - வருந்தி இவ்வாறு கூறவும்; பி.வே. - 'மார்க்கண்டன்' (மா.தவநிலை, கை.பிரதி);

1401. அன்று வலுகாலன் - அப்போது மிக வலிமை பொருந்திய எமன்; அதட்டி - சிறுவன் மார்க்கண்டேயனை அடங்கச் செய்து; அவன்

பூசித்தோன் போகையிலே பூசைகொண்ட கல்லிதுவும்
ஆசையுத்துப் பாரிருந்தா லாரடா பூசைசெய்வார்
கல்லை நீவிட்டாலுங் கல்லுமுனை விடுமோ
1405 வல்லபுகட் கல்லுடனே வாடாவென விழுத்தான்

**இறைவன் மார்க்கண்டனுக்காக இலிங்கத்துள் வரல்**

கால னிழுக்க[க்] கயறுமது பூண்டிறிகி
வாலப் புதல்வன் மதிமயங்கி மெய்சோர்ந்து
இந்தவகை பாலகனை யீன்றதந்தை தாயறியார்

ஏதுரைப்பான் - எமன் சொல்வதாவது; பா.வே. - 'யமகாலன்... நகைத்து ஏதுரைப்பான்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1402. பூசித்தோன் போகையிலே - வழிபட்ட நீயே எமலோகம் போகவிருக்கிறாய்; பூசைகொண்ட கல்லிதுவும் - உன் வழிபாட்டை ஏற்றுக் கொண்ட இச் சிவலிங்கமும்;

1403. ஆசையுத்து < ஆசையுற்று - பூசைபெறும் ஆசையுடன்; பாரிருந்தால் - இந்த உலகத்தில் தங்கிவிட்டால்; ஆரடா பூசை செய்வார் - அதற்கு இனி யார் வழிபாடு செய்வர்; பா.வே. - 'பார்த்திருந்தால்' (ச.ம.நூ.); 'பாரில்' (மா.தவநிலை, கை.பிரதி);

1404. கல்லை நீவிட்டாலும் - இலிங்கத்தைவிட்டு நீ எமலோகம் சென்றாலும்; கல்லும் உனை விடுமோ - இலிங்கம் உன்னைவிடாது;

1405. வல்லபுகழ் கல்லுடனே - புகழ் மேவியிருக்கக்கூடிய இலிங்கத்துடனே; வாடா என இழுத்தான் - நீயும் எமலோகத்துக்கு என்னுடனேவா என எமன் கயிற்றை வலித்தான்; பா.வே. - 'வல்ல கல்லு தன்னுடனே' (ச.ம.நூ.);

1406. காலன் இழுக்க - எமன் தன்னைநோக்கி மார்க்கண்டேயனையும் சிவலிங்கத்தையும் வலிக்க; கயறுமது < கயிறும் அது - பாசக்கயிறு; பூண்டிறிகி < பூண்டு இறுகி - நன்றாக மாட்டி அழுத்தி; பா.வே. - 'கல்கயிறு' (ச.ம.நூ.); 'யேமன் இழுக்கப் பாசக்கயறும்' (மா.தவநிலை); 'கனகயறு' (கை.பிரதி);

1407. வாலப் புதல்வன் - 16 வயது நிரம்பிய சிறுவன்; மதிமயங்கி - நினைவிழந்து; மெய்சோர்ந்து - கயிறு அழுத்துவதால் உடம்பு வருந்தி வலிமை இழந்து கிடந்தான்; பா.வே. - 'பாலன் மார்க்கண்டன்' (ச.ம.நூ., கை.பிரதி); 'வாலை மார்க்கண்டன்' (மா.தவநிலை);

1408. இந்த வகை பாலகனை - இவ்வாறு மார்க்கண்டேயன் படும் துன்பத்தை; ஈன்ற தந்தை தாய் அறியார் - அவன் பெற்றோர்கள் அறியமாட்டார்;

வந்தவகை தனையு[ம்] வாகா யரனறிந்தார்
கந்தனய்யா மீது கருணை மிகவெகுண்டு
பந்துமுலை மாதுபங்கர் பண்பாயவர் நினைந்தார்
ஆனசடை மீது யம்புலியைத் தான்சூடி
மானு மொருகையும் மழுவும்மொரு கையேந்தி
உத்தரிக வெண்ணீறு உத்திராட்சத் தாவடமும்
எங்கும் நிறைந்து யிருந்த பரமேசொரியை
எங்கும் நிறைந்துவள ரீசுரனும் பாத்துரைப்பார்

1409. வந்த வகை தனையு[ம்] - இவ்வாறு ஏற்பட்ட காரணம் முழுவதையும்; வாகாய் அரன் அறிந்தார் - வகையாகச் சிவன் தெரிந்து கொண்டு பார்த்திருந்தார்; பா.வே. - 'மாது அரன் அறிந்து' (ச.ம.நூ.); 'வந்த வகையத்தனையும்' (மா.தவநிலை, கை.பிரதி);

1410. கந்தனய்யா - முருகன் தந்தை சிவபெருமானும்; மீது கருணை - பாலகன் மீது கருணை மிகுதியினால்; மிக வெகுண்டு - எமனது செயலுக்காக மிகக் கோபித்து; பா.வே. - 'கந்தனையா யீசர் கருணை மனஞ்சினந்து' (மா.தவநிலை, கை.பிரதி); - ;

1411. பந்துமுலைமாது பங்கன் - வட்டமான தனங்களையுடைய உமையை ஒரு பாகம் வைத்திருக்கும் இறைவன்; பண்பாய் அவர் நினைந்தார் - தன்னை நினைத்த சிறுவனுக்காக அவன்படும் துன்பத்தைக் கருணையுடன் எண்ணிப் பார்த்தார்; பா.வே. - 'பந்து தன மாது' (மா.தவநிலை);

1412. ஆனசடை மீது - விளங்கும் விரிசடையில்; அம்புலியைத் தான்சூடி - பிறையினை அணிந்து;

1413. மானும் ஒரு கையும் - (1045)தாருகாவனத்து இருடிகளால் ஏவப்பட்ட மானை ஒரு கையில் பிடித்தும்; மழுவும் ஒருகை ஏந்தி - (952) மற்றொரு கையில் மழுப்படையையும் தாங்கிக் கொண்டு;

1414. உத்தரிக வெண்ணீறு - (பார்க்க வரி 301) மேலாடை தரித்தும், வெண்மையான திருநீறு பூசியும்; உத்திராட்சத் தாவடமும் - (301) உருத்திராக்கக் கொட்டைகளால் கோர்த்த மாலையும் (தாவடம் < தாழ்வடம்) அணிந்துள்ள இறைவன்;

1415. எங்கும் நிறைந்து இருந்த பரமேசொரியை - இறைவன் எங்கெல்லாம் இருப்பானோ அவ்விடத்திலும் இருக்கும் உமையிடம்; காண்க: 'பரமேசொரி' (2378);

1416. எங்கும் நிறைந்து வளர் ஈசுரனும் - எங்கும் சிவலிங்கமாய் வளர்ந்து கோவில் கொள்ளும் சிவனும்; பாத்துரைப்பார் < பார்த்து

மார்க்கண்ட னெந்தன் மலரடியைப் பூசைசெய்தான்
தாக்குடனே யியமன் தான்பிடிக்கப் பாசம்விட்டான்
இங்கே யிருந்து யியல்வெளியிலே னான்போய்
தங்குபுகழ் சண்டன் தகமைலிங்கங் கல்லெனவே
சொன்னவுரை யாகுஞ் சொன்னவன்தன் முன்னேனாம்
கன்னலிங்க மூடுருவிக் காட்டுவோ நம்மாய்கை
ஈசுபரியே வாவெனவே யீச ரிடந்தரித்து
வாசமிகு மால்ரூபம் வாகாய் யொருபிறமும்

உரைப்பார் - பின் வருமாறு கூறுவார்; பா.வே. - 'திங்களணிந்த சிவனாரும்' (மா.தவநிலை, கை.பிரதி);

1417. மார்க்கண்டன்; எந்தன் மலரடியைப் பூசை செய்தான் - என்னுடைய மலர் போன்ற திருப்பாதங்களைத் துதித்தான்; பா.வே. - 'நம்முடைய மலரடியில்' (ச.ம.நூ., கை.பிரதி); 'நம்மள்' (மா.தவநிலை);

1418. தாக்குடனே - தாக்குதலுடன்; இயமன் - எமன்; தான்பிடிக்க - மார்க்கண்டேயனைத் தன்னுடன் பிடித்துச் செல்ல; பாசம் விட்டான் - பாசக் கயிற்றை வீசினான்; பா.வே. - 'தார்க்கண்டயமன்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1419. இங்கே யிருந்து - நம் இருப்பிடத்திலிருந்து; இயல் வெளியிலே நான் போய் - ஆகாய வெளியிலேயுள்ள பூமிக்குச் சென்று; பா.வே. - 'இயல் வெளி இவரும் போனால்' (ச.ம.நூ.); 'நாம் போனால்' (மா.தவநிலை, கை.பிரதி);

1420-1421. தங்குபுகழ் சண்டன் - புகழ் தங்கியிருக்கக் கூடிய எமன்; தகமை லிங்கம் கல்லெனவே சொன்னவுரையாகும் - சிறப்பமைந்த இலிங்கம் 'வெறும் கல்' எனச் சொன்னான்; சொன்னவன் தன் முன்னே னாம் - அவ்வாறு சொன்னவனான எமன் முன் நாம்; பா.வே. - 'அங்கே தான் யேமன் யருளிங்கம்' (மா.தவநிலை, கை.பிரதி);

1422. கன்னல் லிங்கம் ஊடுருவி - (253) எமக்கு இனிமையான இலிங்கத்துள் நுழைந்து; காட்டுவோம் நம்மாய்கை - (342) பின்பு வெளிப்பட்டு நமது தோற்றத்தை எமனுக்கு வெளிப்படுத்துவோம்; பா.வே. - 'நம் அழகை' (ச.ம.நூ.); 'கல்லில்லிங்கம் ஊடுருவி' (கை. பிரதி);

1423. ஈசுபரியே - உமையே!; வாவெனவே - எம்முடன் வருக என அழைத்து; ஈசர் இடம் தரித்து - இறைவன் தன் ஒரு பாகத்தில் உமையை வைத்துக் கொண்டு;

1424. வாசமிகு மால் ரூபம் - புகழ்மிக்க திருமாலின் வேடத்தை; வாகாய் ஒரு பிறமும் (< புறமும்) - மற்றொரு பக்கத்தில் திருமாலின் உருவுடனும்;

சங்குடனே சக்கரமுந் தங்குமிரு கைப்பிடித்து
கெங்கை மிகுகொன்றை கெணிதமிகு வெள்ளெருக்கும்
தங்குமுடி யணிந்து தானினைந்து போவதற்கு
எங்கும் நிறைந்தபொருள் யெவ்வுயிர்க்கு மொன்றான
மண்ணுலகில் பெண்ணுடனே வந்தாரு முக்கண்ணார்
எண்ணும் பலரூப மெடுத்தாடு மீசுபரனார்
அடியாருட கவலை யன்பாய்[த்] தவிர்க்கவென்று
படியில் மலரோனும் பாற்கடலில் மாலவனும்
நெடிய யண்டத்தெட்டுருவி நின்றஅரன் வாகாக
படிமீதி லிங்கம் புகுந்துஅர னூடுருவி

*1425.* சங்குடனே சக்கரமும் - *(1044, 1084)* சங்கையும் சக்கராயுதத்தையும்; தங்கும் இரு கைப்பிடித்து - தங்கியுள்ள மற்றிரு கைகளிலும் தாங்கிக் கொண்டு;

*1426.* கெங்கை < கங்கை - நதியையும்; மிகுகொன்றை - *(338)* மிகுந்த கொன்றையையும்; கெணிதமிகு < கணிதமிகு - எண்ணிக்கையில் நிறைந்த; வெள்ளெருக்கும் - வெண்மையான எருக்கம் பூக்களை;

*1427.* தங்கு முடியணிந்து - விளங்கக் கூடிய சடையில் சூடி; தானினைந்து போவதற்கு - மார்க்கண்டேயனிருக்கும் கோவிலுக்குப் புறப்படுவதற்கு விரும்பி;

*1428.* எங்கும் நிறைந்த பொருள் - எவ்விடத்தும் நிறைந்திருக்கக் கூடிய முழுமுதற் பொருள்; எவ்வுயிர்க்கும் ஒன்றான - எல்லா உயிரினங்களுக்கும் உரிய ஒரே இடமான;

*1429.*மண்ணுலகில் - *(431)* பூமியில்; பெண்ணுடனே - உமையுடன்; வந்தாருமுக்கண்ணார் - முக்கண்ணரான சிவன் வந்தடைந்தார்;

*1430.* எண்ணும் பலரூபம் - தாம் விரும்பும் பலப்பல வேடங்களில்; எடுத்தாடு மீசுபரனார் - உருமாறி ஆடும் இறைவனான நடராசர்;

*1431.* அடியாருட கவலை - சிவ பக்தர்களின் துன்பத்தை; அன்பாய் தவிர்க்க வென்று - அவர்கள் மீதுள்ள கருணையால் நீக்கவென்று;

*1432.* படியில் மலரோனும் - பிரமனும்; பாற்கடலில் மாலவனும் திருமாலும் முன்பு காணவியலாதபடி; காண்க: 'மலரோன்' *(வி. 57)*;

*1433.* நெடிய அண்டத்தெட்டுருவி நின்ற - நீண்ட மிகப் பெரிய அண்ட வெளியினை எட்டக்கூடிய அளவில் அன்று நின்ற; அரன் - சிவன்; வாகாக - தன் உருவைச் சுருக்கி ஏற்ற வகையில்; பா.வே. - 'நெடிய அண்டத்திட்டு நிறைந்தே அவர் காணார்' (ச.ம.நூ., கை.பிரதி);

*1434.* படிமீதில் லிங்கம் புகுந்து - பூமியில் வந்து இலிங்கத்துள் நுழைந்து; அரன் ஊடுருவி - சிவன் அதனுள் புகுந்து; பா.வே. - 'லிங்கம் பிளந்து' (ச.ம.நூ.); 'பகுந்து' (மா.தவநிலை); 'பருந்துயர' (கை.பிரதி);

சத்து மசையாதவிசை சண்டனுட பாசமது
அத்துப் பொடியாகு மாதியரன் வாறவிசை
தங்கு புவனமண்டந் தான்திக்கு மாகாசம்
எங்கு மசைய எமனுட னெஞ்சசைய
அட்டமலை யட்டகெசம் மண்ட[ம்] யெவையதிர
வட்ட வுலகீரேழும் வான முகடசைய
லிங்கமென மேதினியில் நின்றதொரு கல்லுருவம்
பொங்கிச் சினந்து புரமெரித்தோ னாகியதே

1435. சத்தும் < சற்றும் - சிறிதும்; அசையாத விசை - அசைந்து கொடுக்காத; சண்டனுட பாசமது - எமனுடைய பாசக்கயிறு; பா.வே. - 'அசையாதவலு' (ச.ம.நூ.);

1436. அத்து < அற்று - அறுந்து; பொடியாகும் - இற்றுவிடும் அளவுக்கு; ஆதி அரன் வாறவிசை - மூலமான ஈசன் இலிங்கத்துள் புகவந்த வேகம் அவ்வாறிருந்தது; பா.வே. - 'ஆதிலிங்கம் வர விசை' (ச.ம.நூ.); 'ஆதிலிங்கம் ஊடுருவ' (மா.தவநிலை); 'ஆதிலிங்கம் தான் பெருக' (கை.பிரதி); காண்க: 'விசை' (வி.44);

1437. தங்கு புவனம் அண்டம் - விளங்கக்கூடிய உலகமும் பிற அண்டங்களும்; தான்திக்கும் ஆகாசம் - (15) நிற்கும் திசைகளும் வானவெளியும்; பா.வே. - 'தரணியெங்கும் ஆகாசம்' (மா.தவநிலை);

1438. எங்கும் அசைய - எவ்விடத்தும் அதிர்வு ஏற்பட; எமனுட நெஞ்சசைய - எமதர்மனின் உள்ளத்தில் பயத்தால் அச்சம் ஏற்பட்டு அசையவும்;

1439. அட்டமலை - (வரி 1368) எட்டு மலைகளும்; அட்டகெசம் - (1071) எட்டுக் கயங்களும் (கெசம் < கசம் < கயம்); அண்ட [ம்] யெவையதிர - எல்லா அண்டங்களும் அசைய; பா.வே. - 'அட்டகெசம்.....யேழும் தானதிர' (மா.தவநிலை);

1440. வட்ட உலகு ஈரேழும் - வட்டவடிவமாக விளங்கக் கூடிய உலகம் ஈரேழு பதினான்கும்; வான முகடு அசைய - வானத்தின் உச்சியும் அசைந்து 'கிடுகிடு' என; காண்க: 'வட்ட உலகு' (1003, 1992, 2204);

1441. லிங்கம் என - சிவலிங்கம் என்று யாவராலும் வழிபடப் பெறும்; மேதினியில் நின்றதொரு - பூதலத்தில் அமைந்துள்ள ஒரு; கல்லுருவம் - கல்லாலாகிய சிவலிங்கம்;

1442. பொங்கிச் சினந்து - சிவனது நுழைவால் வீறடைந்து, கோபமுற்று; புரம் - முப்புரங்கள் (பார்க்க வரி விளக்கம் 871); எரித்தோன் ஆகியதே - முப்புராதியர்களோடு போர் தொடுத்த போது கொண்டிருந்த

## இலிங்கத்திலிருந்து எழுந்த இறைவன் தோற்றம்

அஞ்சு முகமு மகண்டபுயங்கள் பத்தும்
அஞ்சு சிரந்தன்னி லஞ்சுதிங்க ளஞ்சுகெங்கை
ஓர்முகத்தில் வெண்ணீறு மோர்முகத்தில் குவடம்
சீர்பிறத்தில் பார்பதியுஞ் செங்கைமழு மான்சூலம்
ஓர்பிறத்தில் நாமமிகு ஓர்பிறத்தில் குவடம்
சீர்மிகுத்த லச்சிமியு சீர்மேக மார்பிருக்க
பொங்கமுடன் மார்பில் பொன்னூலு மாபரணம்
சக்கரமுஞ் சங்குந் தானிருக்க யீர்கரத்தில்

சிவகோலமாக மாறியதே; பா.வே. - 'புரம் எரிக்க வந்ததுபோல்' (ச.ம.நூ.);

*1443.* அஞ்சு முகமும் < ஐந்து முகமும் - முகங்கள் ஐந்தும்; அகண்ட - விரிந்த; புயங்கள் பத்தும் - பத்துக் கைகளுடைய தோள்களும்;

*1444.* அஞ்சு ( < ஐந்து) சிரந்தன்னில் - ஐந்து தலைகளிலும்; அஞ்சு ( < ஐந்து) திங்கள் - ஐந்து பிறைகளும்; அஞ்சு கெங்கை < ஐந்து கங்கை - ஐந்து கங்கை நதிகளும்;

*1445.* ஓர் முகத்தில் வெண்ணீறும் - திருநீறு ஒரு முகத்திலும்; ஓர் முகத்தில் குவடம் - ஒரு முகத்தில் திரட்சியும்; பா.வே. - 'ஓங்கும் கங்கை திங்கள் சடை' (மா.தவநிலை, கை.பிரதி);

*1446.* சீர் பிறத்தில் < சீர்புறத்தில் - சிறப்பான இடது பக்கத்தில்; பார்பதி - உமையையும்; செங்கை மழுமான் சூலம் - (மூன்று) உள்ளங்கையில் மழுப் படையையும் மானையும் சூலத்தையும் ஏந்திக் கொண்டும்; பா.வே. - 'சீர்புயத்தில் சிறந்த இடை பார்பதியும்' (மா.தவ நிலை); 'சீர்புயத்திலொக்கும்' (கை.பிரதி);

*1447.* ஓர் பிறத்தில் (< புறத்தில்) - ஒரு பக்கத்தில்; மிகு நாமம் - மிகுதியாகத் திருநீற்றுப் பூச்சும்; ஓர் பிறத்தில் (< புறத்தில்) - மற்றொரு பக்கத்தில்; குவடம் - திரட்சியும்; காண்க: 'குவடம்' (1445, 1451, 1550);

*1448.* சீர் மிகுத்த - பெருமை அதிகமுடைய; லச்சிமியும் - (254) திருமகளும்; சீர்மேக மார்பிருக்க - பெருமை மிகுந்த மேகமனைய மார்பிலே தங்கியிருக்கவும்;

*1449.* பொங்கமுடன் - பொலிவுடன்; மார்பில் பொன்னூலுமாபர ணம் - தங்கக் கொடி மார்பிலே புரளவும்;

*1450.* ஈர்கரத்தில் - இருகைகளில்; சக்கரமும் சங்கும் தானிருக்க - சக்கராயுதமும் சங்கும் ஏந்தி இருக்கவும்;

ஓர்முகத்தில் கோப மோர்புயத்தில் குவடம்
சீர்மிகுத்த நாவிற் சிறந்த சரசுபதி
பொத்தகமு[ம்] கும்பம் புகழ்தே டிருகரமும்
சித்திரஞ்சேர் ரோர்முகத்தில் செஞ்சந்தனங் களபம்

1455 உத்தபுகழ் ரத்தினத்தா லோங்குமொரு புயத்தில்
சித்திர[ஞ்] சேரோடு சிரசுகடு விருகை
ஓர்முகத்தில் நிச்சளமாய் யோர்புயத்திலே யெலும்பு
சீர்கரத்தில் வேலுஞ் சிறந்த கண்டகோடாலி

1451. ஓர் முகத்தில் கோபம் - சினத்தை வெளிப்படுத்திக் கொண்டு ஒரு முகம் விளங்கவும்; ஓர் புயத்தில் குவடம் - ஒரு தோளில் (கையில்) குவடம் விளங்கவும்;

1452. சீர் மிகுத்த - பெருமை விளங்குகின்ற; நாவில் சிறந்த சரசுபதி - சிறப்பமைந்த கலைமகள் நாவில் விளங்கவும்; பா.வே. - 'சீர் சிறந்த' (ச.ம.நூ.);

1453. புகழ் தேடு இருகரமும் - பெருமை சேர்க்கக் கூடிய இரு கைகளில்; பொத்தகமு[ம்] - ஒரு கையில் கலைகளை உணர்த்தும் (ஏட்டை) புத்தகத்தை ஏந்தியும்; கும்பம் - மற்றொரு கையில் கும்பத்தைத் தாங்கியும் அமைந்து; பா.வே. - 'புகழ் தண்டு' (ச.ம.நூ.); காண்க: 'பொத்தகம்' (2542, 2614); ஒப்பிடுக: 'பொற்றகம்' (2146);

1454. சித்திரஞ்சேர் ஓர் முகத்தில் - ஓவியம் போல் விளங்கக்கூடிய ஒரு முகத்தில்; செஞ்சந்தனங்களபம்; செம்மையான சந்தனமும் களபச் சாந்தும் விளங்கவும்; பா.வே. - 'சித்திரரும் சேர்', 'சேர்சந்தனம்' (ச.ம.நூ.); காண்க: 'களபம்' (924, 2394, 2453);

1455. உத்த புகழ் < உற்ற புகழ் - புகழ் விளங்கும்; ரத்தினத்தால் - இரத்தினக் கற்கள்; ஒரு புயத்தில் ஓங்கும் - ஒரு தோளில் அணி செய்யவும்;

1456. சித்திர[ஞ்]சேர் ஓடு சிரசு - (பிரமன் தலையைக் கிள்ளி எடுத்த) பெருமைமிக்க கபால ஓடு பிச்சைப் பாத்திரமாக; கடுவிருகை - ஒரு கையில் ஏந்தியும்;

1457. ஓர் முகத்தில் நிச்சளமாய் (< நிச்சலம் + ஆய்) - ஒரு முகத்தில் எவ்வித அசைவுமின்றி; ஓர் புயத்திலே எலும்பு - ஒரு தோளில் எலும்பு (கபால) மாலையுமணிந்து பா.வே. - 'ஓர் புயத்திலே யெலும்பு வோங்கு சென்னி நாத சத்தி; (மா.தவநிலை, கை.பிரதி);

1458. சீர் கரத்தில் - பெருமைமிக்க ஒரு கையில்; வேலும் - வேலாயுதமும்; சிறந்த கண்ட கோடாலி - புகழ்மிக்க மழுஒருகையிலும்: காண்க: 'கண்டகோடாலி' (1916);

இந்த[ப்] படியாக யனேக முகத்துடனே
மைந்தன் தனக்காக வந்தா ரரனாரும்

**விருத்தம்**

ஓர்முக மீசுவரன் னோர்முகம் வேதன்
ஓர்முக நிச்சள மோங்கிய ரூபம்
ஓர்முகம் மாலவன் ஓர்முக மேமன்
சீர்முக மைந்து சிவன்வெளி வந்தார் (38)

அண்ட முதண்ட மடங்கல் நிறைந்தோன்
எண்டிசை எவ்வுயி ரெங்கு[ங்] கலந்தோன்
மண்டல நின்று வழங்கிய லிங்கம்
ஒண்டி யெழுந்து உசந்தனர் வந்தார் (39)

*1459. இந்தப் படியாக - இவ்வாறு; அனேக முகத்துடனே - பிரமா, விஷ்ணு, கலைமகள், திருமகள், மலைமகள் போன்ற அனைத்துக் கடவுளர்களின் உருவங்களையும் தாங்கிக் கொண்டு;*

*1460. மைந்தன் தனக்காக வந்தார் அரனாரும் - சிவனும் சிறுவன் மார்க்கண்டேயனுக்காகப் பூமியிலுள்ள அச் சிவாலயத்துள் தோன்றினார்;*

*வி.38. ஓர்முகம் ஈசுவரன் - ஐம்முகங்களுள் ஒன்றில் இறைவன் தன் தோற்றத்துடனும்; ஓர் முகம் வேதன் - மற்றொரு முகம் பிரமாவின் தோற்றத்துடனும்; ஓர் முகம் நிச்சளம் (< நிஷ்களம் < நிச்சலம்) ஓங்கிய ரூபம் - ஒரு முகம் அசைவு இன்றி விளங்கியும்; ஓர் முகம் மாலவன் - திருமாலின் உருவத்தினை ஒரு முகத்தில் தாங்கியும்; ஓர் முகம் ஏமன் - அழிக்கும் கடவுளான உருத்திரனின் உருவத்தை ஒரு முகத்தில் ஏற்றும்; சீர்முகம் ஐந்து - இவ்வாறான சிறப்பமைந்த ஐந்து முகங்களுடனும்; சிவன் வெளி வந்தார் -சிவபெருமான் தோற்றமளித்து வந்தார்;*

*பா.வே. 'நிச்சலம்' (ச.ம.நூ.); 'நிச்செளம்' (மா.தவநிலை); 'நிஸ்களம்' (கை.பிரதி);*

*வி.39. அண்ட முதண்டம் அடங்கல் நிறைந்தோன் - முதல் அண்டம் முதல் அனைத்து அண்டங்களிலும் விளங்குபவனான இறைவன்; எண் திசை - எட்டுத் திக்குகளிலும்; எவ்வுயிர் - அனைத்து உயிர்களிலும்; எங்குங் கலந்தோன் - எவ்விடத்தும் நிறைந்தவன்; மண்டல நின்று வழங்கிய லிங்கம் - பூமி மண்டலத்திலிருந்து எல்லோராலும் வணங்கப் பெற்று வரும் இலிங்கத்திலிருந்து; ஒண்டி < ஒன்றி -உறைந்து; எழுந்து - அதிலிருந்து முகிழ்த்தெழுந்து; உசந்தனர் < உயர்ந்தனர் - உயர்ந்த இறைவன்; வந்தார் - தோன்றினார்; (உசந்தனர் என்பதற்கு இலிங்கத்திலி ருந்து உயர்ந்து எழுந்தார் என்றும் பொருள் கொள்ளலாம்.);*

## இறைவன் எமனையும் மார்க்கண்டேயனையும் காணுதல்

நடை

சிவலிங்க மூடுருவிச் சிவனாருந் தானெழுந்து
தவஞ்செய்த பாலனையுஞ் சண்டனையும்
வந்துகண்டார்
பாச[க்] கயறிட்டதுவும் பாலன் மயங்கியதும்
வாசமிகு காலன் வந்ததட்டி நின்றதுவும்
1465 பூட்டுங் கயறு பொருந்தி யிருப்பதுவும்
வாட்டமுத்துப் பாலன் மதிமயங்கிச் சோர்வதுவும்

பா.வே. - 'அடங்கலும் பரந்தோன்', 'எங்கும் மிகுந்தோன்', 'மண்டலம் ரெம்பி', 'எண்டிசை வெவ்வுயிர்ரெங்கும் யிருந்தேர்' (மா.தவநிலை); 'அடங்கல் பறந்தோன்', 'எங்குமிருந்தோன்', 'மண்டலம் ரெம்பி', 'ஒண்டியே.....உயர்ந்தயரன் வந்தார்' (கை.பிரதி);

1461. சிவலிங்கம் ஊடுருவி - இலிங்கத்துள் நுழைந்து; சிவனாரும் தான் எழுந்து - அதினின்றும் சிவன் மேலெழும்பினார்;

1462. தவஞ்செய்த பாலனையும் - தன்னைப் பூசித்து நின்ற பாலன் மார்க்கண்டேயனையும்; சண்டனையும் - அவனைப் பிடித்துச் செல்ல வந்து நிற்கும் எமனையும்; வந்து கண்டார் - கோவிலில் வந்து பார்த்துத் தெரிந்து கொண்டார்;

1463. பாச[க்]கயறிட்டதுவும் - (கயறு < கயிறு) மார்க்கண்டேயனைப் பற்றப் பாசக் கயிற்றினை வீசியதும்; பாலன் மயங்கியதும் - அவன் பயந்து மயக்கமுற்றுக் கிடப்பதுவும்; பா.வே. - 'பாசக்கயற்றிட்டிமுக்க' (மா.தவநிலை);

1464. வாசமிகு காலன் - புகழ்மிக்க எமன்; வந்து அதட்டி நின்றதுவும் - பாலனைப் பிடிக்க வந்து அவனைப் பயமுறுத்தி நின்று கொண்டிருப்பதும்; பி.வே. - 'வாச நிறை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'அதட்டுதல்' (948, 1401, 1886, 2190);

1465. பூட்டுங் கயறு - பிணைக்கும் (கயறு < கயிறு); பொருந்தி இருப்பதுவும் - இலிங்கத்தின் உடலிலும் பாலன் உடலிலும் மாட்டி இருப்பதையும்; பா.வே. - 'கயிற்றைப் பொருந்த இழுத்ததுவும்' (ச.ம.நூ.); 'பொருந்தி யிழுப்பதுவும்' (மா.தவநிலை); 'பூட்டி யிழுத்தது வும்' (கை.பிரதி);

1466. வாட்ட முத்து < வாட்டமுற்று - வாடி; பாலன் மதிமயங்கிச் சோர்வதுவும் - சிறுவன் மனக் கலக்கத்துடன் சோர்ந்து செயலிழந்து கிடப்பதையும்;

நாச வருங்காலம் நமன்வந்து நின்றதுவும்
யீசு பரருங்கண்டு யியல்பாய் மனஞ்சினந்து

### இறைவனைக் கண்டு எமன் அஞ்சுதல்

அரன்வடிவைக் கண்டு யகோரமுத்து வந்தசண்டன்
வரமிகுத்த நெஞ்சன் மயங்கி திடுக்கமுத்தான்
கோபமாய் வந்தசண்டன் கோபம்விட்டுத் தான்பயந்து
சாபமுடன் வீசுந் தருள்பாசங் கீழ்ப்போட்டான்
மேலசைந்து கைகால் மிகப்பதறி நெஞ்சமஞ்சி
சீலமுடன் பேசத் தியங்கி யறிவழிந்து

*1467.* நாச வருங்காலம் - மரணம், (முடிவு, அழிவு) வரும் காலம்; நமன் - எமன்; வந்து நின்றதுவும் - பிடிக்கத் தோன்றியதையும்;

*1468.* ஈசுபரருங்கண்டு - இறைவனும் பார்த்து; இயல்பாய் மனஞ் சிவந்து - எளிதாய் உள்ளம் வெகுண்டு நின்றார்; பா.வே. - 'ஈசன் விழி நோக்கி' (ச.ம.நூ.); 'ஈசர் முகம் நோக்கி' (கை.பிரதி);

*1469.* அரன் வடிவைக்கண்டு - இவ்வாறு ஐம் முகத்துடனும் கடுஞ் சினத்துடனும் வந்த இறையோனைப் பார்த்து; அகோரமுத்து (< அகோர முற்று) வந்த ச்ண்டன் - (1026) சிறுவன் செயலால் கோபமுற்று வந்திருந்த எமன்;

*1470.* வரமிகுந்த நெஞ்சன் - உயிர்களைக் கொன்று நீதி நடத்துதற்கு இறையோனிடமிருந்து வரம் பெற்றிருந்த எமன்; மயங்கி - நிலை குலைந்து; கலக்க முத்தான் < கலக்கம் உற்றான் - வருந்தினான்; பா.வே. - 'வரமணிந்த நெஞ்சம்......நடுக்க முற்றான்' (ச.ம.நூ.); 'மயங்கி திடுக்க முற' (மா.தவநிலை); 'மயக்க முற்றான்' (கை.பிரதி);

*1471.* கோபமாய் வந்த சண்டன் - சினத்துடன் தோன்றிய எமன்; கோபம் விட்டுத்தான் பயந்து -இறையோனின் தோற்றத்தைப் பார்த்துத் தன் கோபத்தை மறந்து உடனே மிக அஞ்சி; பா.வே. - 'காலன்' (கை.பிரதி);

*1472.* சாபமுடன் வீசும் - உயிர்களைப் பற்றுவதாகக் கூறிக் கொண்டு செலுத்தும்; தருள் பாசம் கீழ்ப்போட்டான் - பாசக்கயிற்றைக் கீழே இட்டான்; பா.வே. - 'தரு பாசம்' (ச.ம.நூ.); 'தரும் பாசம்' (மா.தவ நிலை); 'தளர் பாசம்' (கை.பிரதி);

*1473.* மேல் அசைந்து - உடம்பெல்லாம் நடுங்கி; கைகால் மிகப்பதறி - கைகளும் கால்களும் அதிக நடுக்கமுற்று; நெஞ்சம் அஞ்சி - உள்ளமும் பயந்து;

*1474.* சீலமுடன் பேசத்தியங்கி - அத்தருணத்தில் எப்படிப் பேசுவது என்ன பேசுவது என்று அறியாது யோசித்து; அறிவு அழிந்து - சிந்திக்கக் கூடிய சக்தியையும் இழந்து;

சிங்கத்தைக் கண்ட சிறுநரிகள் போல்நடுங்கி
பொங்குங் கெருடன்முன்னே புத்தரவம் போல்நடுங்கி
கருமலைபோல் மீறுங் கனத்த வுடல்நடுங்கி

**இறைவன் எழுந்தருளியதை எண்ணி**
**எமன் வியந்து அச்சமடைதல்**

பரும்பகடு விட்டுப் பார்மீதிலே குதித்து
மைந்தன் தனக்காய் மகாபெரிய யீசுபரனார்
இந்தலிங்கந் தன்னி லிருந்தாரே யீசுபரனார்
கல்லென் றுரைத்தோமே காணாதரும் பொருளை

*1475.* சிங்கத்தைக் கண்ட சிறு நரிகள் போல் நடுங்கி - சிங்கத்தைப் பார்த்தவுடனே நரிகள் பயந்து நடுங்கினாற்போல் எமன் பயந்து; பா.வே. - 'சிறுபுலி போல்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1476.* பொங்கும் கெருடன் (< கருடன்) முன்னே - கோபத்துடன் எழுந்துவரும் கருடனுக்கு முன்பாக; புத்தரவம் < புற்றரவம் - புற்றிலே வாழும் நாகப்பாம்பு; போல் நடுங்கி - போன்று அஞ்சி, பதுங்கி; பா.வே. - 'போல் அஞ்சி' (ச.ம.நூ.); 'போல் கலங்கி' (மா.தவநிலை);

*1477.* கருமலைபோல் மீறும் கனத்தவுடல் - கரிய பெரிய வலுவான குன்றையும் விஞ்சக் கூடிய எமனின் பருத்த உடல்; நடுங்கி - பயத்தால் நடுக்க முற்றது; பா.வே. - 'கடுமலை' (ச.ம.நூ.); 'கனத்த சதிரம்' (மா.தவநிலை); 'உடல் ஒடிங்கி' (கை.பிரதி); காண்க: 'கருமலை' (1532);

*1478.* பரும்பகடுவிட்டு - (997-8) பருத்த பெரிய எருமைக் கடாவிலி ருந்து; பார்மீதிலே குதித்து -எமன் தரையிலே இறங்கி நின்றான்; (நின்று பின் வருமாறு எண்ணினான்); பா.வே. - 'பருப்பதம் போல் வந்து நின்ற பகடுவிட்டுக் கிழிறங்கி' (ச.ம.நூ); 'பருமலைபோல் ... தான் குதித்து' (மா.தவநிலை); 'பருமலைபோல்' (கை.பிரதி);

*1479.* மைந்தன் தனக்காய் - சிறுவன் மார்க்கண்டேயனுக்காக; மகா பெரிய ஈசுபரனார் - எல்லாவற்றிலும் பெரியோனான இறைவன்;

*1480.* இந்த லிங்கந்தன்னில் - சிறுவனால் வழிபடப் பெற்ற இக்கோவிலில் உள்ள இலிங்கத்தில்; இருந்தாரே ஈசுபரனார் - இறைவன் உறைந்துள்ளாரே; பா.வே. - 'இருந்து வந்தது யார் அறிவார்?' (ச.ம.நூ.); 'இருந்து வந்த மாய்கையிது' (மா.தவநிலை, கை.பிரதி);

*1481.* காணாத அரும் பொருளை - மாலவனாலும் மலரோனாலும் மற்றவர்களாலும் கண்டுகொள்ள வியலாத அருமையானவனை; கல் என்று உரைத்தோமே - வெறும் கல்லாலான இலிங்கம் என்று பாலகனி டம் பரிகாசம் செய்தோமே;

வல்லவர்க்குக் கோபம் வருவ தறிந்திலனே
என்று மனதிலெண்ணி யேங்கி மதிமயங்கி
மன்றில் விழுந்து மலரடியைத் தெண்டனிட்டு
வாயுலர்ந்து நாவுலர்ந்து வாயடைத்து[ப்] பேசாமல்
நேருலர்ந்து வாயுலர்ந்து நின்றான் நடுநடுங்கி

**இறைவன் எமனைக் கடிந்துரைத்தல்**

யேழை யமலர்க்கு மெரிபோல் வருங்கோபம்
கோழை யவர்க்குவலு கொள்கை வலுவெதிர்த்தார்

*1482.* வல்லவர்க்கு - இறையோனுக்கு; கோபம் வருவது அறிந்திலனே - கோபம் வந்து நான் இதுவரை பார்த்ததில்லையே; பா.வே. - 'அறியாது இங்கு வந்தோம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*1483.* என்று மனதில் எண்ணி - இவ்வாறு நடந்தவற்றை நினைத்து; ஏங்கி மதிமயங்கி - பெருமூச்செறிந்து, அறிவு இழந்து; பா.வே. - 'என்றே யேமன் யெண்ணியே' (மா.தவநிலை);

*1484.* மன்றில் விழுந்து - இலிங்கத்தின் முன்பாகவும் அந்த இலிங்கத்திலிருந்து முகிழ்த்தெழுந்து நிற்கும் இறையோனின் முன்பாகவும் (நெடுஞ்சாண் கிடையாகக்) கீழே விழுந்து; மலரடியைத் தெண்டனிட்டு - இறைவனின் மலர்ப்பாதங்களை வணங்கி; பா.வே. - 'மண்ணில் விழுந்து' (மா.தவநிலை); காண்க: 'மலரடி' (370, 682, 1417);

*1485.* வாய் உலர்ந்து - வாயானது காய்ந்து; நாவுலர்ந்து - நாவும் காய்ந்து; வாய் அடைத்து[ப்] பேசாமல் - நா உலர்ந்ததால் பேசுவதற்குச் சக்தி இழந்து, எதையும் பேசமுடியாது;

*1486.* நேருலர்ந்து - தன் நெறிகளை இழந்து; வாயுலர்ந்து - வாயடைத்து; நடுநடுங்கி நின்றான் - இறையோனின் அகோர கோலத்தைக் கண்டு எமன் பயந்து நின்றான்; பா.வே. - 'நேயுலர்ந்து நெஞ்சுருகி' (ச.ம.நூ.); 'நேயுலர்ந்து' (மா.தவநிலை, கை.பிரதி);

*1487.* ஏழை அமலர்க்கு - மூப்பு எதுவுமின்றி எப்போதுமே இளமைத் தோற்றத்துடனுள்ள புனிதமான இறைவனுக்கு; எரிபோல் வருங்கோபம் - சினம் கடுந்தீயைப் போன்று கனன்று வந்தது; பா.வே. - 'நாளை மேலார்க்கும்' (ச.ம.நூ.); 'ஏழைகள் மேல் யாருக்கும்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1488.* கொள்கைவலு எதிர்த்தார் - கொள்கை யளவில் அவரை எதிர்த்தவர்கள்; கோழையவர்க்கு வலு - அப்படியானவர்கள் கோழையாவர்; பா.வே. - 'கோளை வாரந்தன்னிலுமோ கொள்கை வலுவோ எதிர்த்தால்' (ச.ம.நூ.); 'கொள்கை யவர்தனிலும்' (மா.தவநிலை);

இந்தப்படி யஞ்சிநின்ற யிமனை[ப்] பாத்தீசுபரரும்
வந்ததென்னடா பாலன் மயங்கிப் பயமுறவே
ஏனடா காலா யியல்புதல்வன் றான்கலங்க
தானடா பாசந் தகமையில்லாதே வீசி
கொல்லயாடா காலா கொடியசினத் தோடிருந்தாய்
வல்லவனோ நீமுரண்டாய் மாளவென்றே யிங்குவந்தாய்
எந்தனடி யாருனக்கு எளிதோடா மாமறலி

1489. இந்தப்படி அஞ்சி நின்ற - இவ்வாறு இறையோனைக் கண்டு பயந்து நின்ற; இமனை - எமனை; பாத்தீசுபரரும் (< பார்த்து ஈசுபரரும்) - எதிராக அவன் முகத்தை நோக்கி இறையோனும்; பா.வே. - 'பார்த்து ஐமுகனார்' (ச.ம.நூ.);

1490. பாலன் மயங்கிப் பயமுறவே - மார்க்கண்டேயன் உன்னைப் பார்த்து அஞ்சி மயங்குமாறு சிவபூசையின்போது; வந்ததென்னடா - ஏன் வந்தாய், அடா!; பா.வே. - 'வந்தது என்னாம் என்று மலரோன் முகஞ்சினந்து' (ச.ம.நூ.);

1491. ஏனடா காலா - அடே! எமா!; இயல் புதல்வன் தான் கலங்க - உண்மை பக்தனான இச்சிறுவன் அஞ்சுமாறு; பா.வே. - 'இயல் தவத்தின் பாலன் அஞ்ச' (ச.ம.நூ.);

1492. தானடா - நீதானோடா!; பாசம் - பாசக்கயிற்றை; தகமையில் லாதே வீசி - யாரிடம் வீசவேண்டும் யாரிடம் வீசக்கூடாது எனத் தெரியாது பாசக்கயிற்றை வீசினாயோ;

1493. கொல்லயாடா - சிவபக்தனான சிறுவனைக் கொல்வதற்காக வாடா; காலா - எமனே; கொடிய சினத்தோடிருந்தாய் - கொடுமையான கோபத்துடனிருந்து இங்கு வந்தாய்; பா.வே. - 'கொல்லுவையாடா ... இழுத்தாய்' (ச.ம.நூ.);

1494. வல்லவனோ நீ முரண்டாய் (< மிரண்டாய்) - என்னிலும் நீ பெரியவனோ? ஏன் இவ்வாறு மிரண்டு நிற்கிறாய்; மாள வென்றே இங்கு வந்தாய் - என்னால் நீ இறக்கப் போகிறதுக்காகவா இங்கே வந்தாய்; பி.வே. - 'முரண்டால் மாளவோ பாலன் விதி' (ச.ம.நூ.); பா.வே. - 'நீ முறடாய்' (மா.தவநிலை, கை.பிரதி);

1495. மாமறலி - (546) மிகுந்த வலிமை படைத்த எமனே; எந்தன் அடியார் உனக்கு எளிதோடா - சிவபக்தர்கள் என்றால் உனக்கு அவ்வளவு இலகுவோ;

சிந்தைவைத்துப் பாலன் சிவபூசை பண்ணுகையில்
துட்டா மறலி துடந்தணுகிப் பாசம்விட்டாய்
கட்டி யிழுத்தெமையுங் கல்லென்றுஞ் சொன்னாயே
சிவபத்தர் தம்மைச் சிறப்பாய் வணங்காமல்
அவஞ்செய்து பாலகனை அஞ்சமிக விரட்டி
எந்தனுட மேலு மியல்புதல்வன் றன்மேலும்
இந்தக் கயறிட்டிழுத்த தென்னடா காலா
இந்த வசன மிறையோன் சினந்துரைக்க

**எமன் தான்வந்த காரணத்தை**
**இறைவனிடம் எடுத்துரைத்தல்**

சிந்தை கலங்கியெமன் சீவனெல்லாம் வேறாகி

1496. சிந்தைவைத்து - மனத்தைச் சிவத்தில் ஒன்ற வைத்து; பாலன் - சிறுவன்; சிவபூசை பண்ணுகையில் - இலிங்க வழிபாடு மேற்கொள்ளும்போது; பா.வே. - 'சிந்தை யன்புவைத்து' (மா.தவநிலை); காண்க: 'சிவபூசை' (1179);

1497. துட்டா - கொடுமையானவனே; மறலி - எமனே; துடந்தணுகி < தொடர்ந்தணுகி; பாசம்விட்டாய் - பாசக் கயிற்றை வீசினாய்; பா.வே. - 'தொட்டு மறலி' (மா.தவநிலை, கை.பிரதி);

1498. கட்டி இழுத்து எமையும் - நானுறையும் இலிங்கத்தின்மீதும் கயிற்றால் கட்டிப் பின் உன்னை நோக்கி இழுத்து; கல்லென்றுஞ் சொன்னாயே - இலிங்கம் வெறும் கல் தான் என்று கூடச் சொன்னாய் அன்றோ?;

1499. சிவபத்தர் தம்மை - சிவபக்தர்களை; சிறப்பாய் வணங்காமல் - போற்றித் துதிக்காது;

1500. அவம் செய்து பாலகனை - (1296) சிறுவனுக்குக் கேடு செய்து; அஞ்சி மிகவிரட்டி - அவன் பயந்து நடுங்குமாறு அதிகமாக அதட்டினாய் அல்லவா? பா.வே. - 'நீ மிரட்டி' (கை.பிரதி);

1501. எந்தனுடமேலும் - நானாகிய இலிங்கத்தின் மீதும்; இயல்புதல்வன் தன்மேலும் - சிறுவன் மார்க்கண்டேயன் மீதும்;

1502. இந்தக் கயறிட்டு இழுத்தது - இந்தப் பாசக் கயிற்றால் (கயறு < கயிறு) வலித்தது; என்னடா காலா - ஏன் (இழுத்தாய்) எமா!; பா.வே. - 'கயிறு இட்டவலு ஏதடா' (ச.ம.நூ.);

1503. இந்த வசனம் - (459) இவ்வாறான கோப மொழிகளை; இறையோன் - சிவன்; சினந்துரைக்க - வெகுண்டு கூற;

1504. சிந்தைகலங்கி எமன் - எமதர்மராசன் தன் உள்ளம் வேதனையுற்று; சீவனெல்லாம் வேறாகி - உயிர்த்துடிப்பு எல்லாம் பிறிதுபட்டு;

அந்திமதி சூடு மரனார் சி[ன]ந்ததினால்
கெந்தம்பட நஞ்சு கிட்டுகைபோல் மெய்மறந்தான்
பொருப்பி லிருக்கும் புனிதன் சினந்ததினால்
நெருப்பிலிடு மெழுகாய் நெஞ்சுநம னேதுரைப்பான்
முப்புரத்தைத் தீயெரித்த மூர்த்தியே பாலனிடம்
தப்பிதமாய் நாயடியேன் தான்பிடிக்க நல்குவனோ
முன்னா ளவர்க்கு மொழிந்த யீரெட்டுவிதி
இன்னாளிலே யாச்சு யெள்ளளவும் தப்பாது

1505. அந்திமதி சூடும் அரனார் சினந்ததினால் - பிறைசூடும் இறையோன் தன்னைக் கோபித்ததால்; பா.வே. - 'திங்கள் அணிந்த சிவனார் சினந்ததனால்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1506. கெந்தம் பட நஞ்சு கிட்டுகைபோல் - வாசனைக்கு விடம் கிடைத்தாலெப்படியோ அப்படி; மெய்மறந்தான் - தன்னிலை மறந்திருந் தான்;

1507. பொருப்பிலிருக்கும் புனிதன் - கைலாய மலையில் உறையும் சிவன்; சினந்ததினால் - கோபித்ததால்; பா.வே. - 'புனிதனை நோக்கி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'பொருப்பு' (1944);

1508. நெருப்பிலிடும் மெழுகாய் நெஞ்சு நமன் - தீயிலே மெழுகை வைத்தால் அது உருகுதல் போல் இறைவனது கோபத்தால் வெந்து உருகிய நெஞ்சினனான எமன்; ஏதுரைப்பான் - இறையோனுக்குப் பதிலாகச் சொல்வதாவது; பா.வே. - 'நெஞ்ச மஞ்சி' (ச.ம.நூ., கை. பிரதி); 'நெஞ்சியிழகியே' (மா.தவநிலை);

1509. முப்புரத்தைத் தீயெரித்த மூர்த்தியே - (விளக்கம் வரி.871) திரிபுரம் எரித்த சிவனே!; பாலனிடம் - சிறுவனிடம்; பா.வே. - 'தீயாக்கும்' (ச.ம.நூ., கை.பிரதி); 'தீயால் யெரிக்கும்' (மா.தவநிலை);

1510. தப்பிதமாய் - தவறாக; நாயடியேன் தான் பிடிக்க நல்குவனோ - உமக்கு அடிமையான நான் சிறுவனைப் பிடிக்கச் செல்வேனோ; பா.வே. - 'வந்தடியேன்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி); 'கிட்டுவ னோ' (ச.ம.நூ.); காண்க: 'தப்பிதமாய்' (1526);

1511. முன்னாள் - முன்பு; அவர்க்கு மொழிந்த - சிறுவனுக்கு விதித்த; ஈரெட்டுவிதி - பதினாறு வயது ஆயுள்; பா.வே. - 'அவர்க்கும் ஒளிந்தீர் விதியறிவீர்' (ச.ம.நூ.);

1512. இன்னாளிலே - இன்றுடன்; ஆச்சு - முடிந்தது; எள்ளளவும் தப்பாது - இக்கணக்கில் எள் அளவுகூடப் பிசகு இல்லை; பா.வே. - 'இன்னாள் அடியேனால் ஏதுகுறைகள் செய்தேன்' (ச.ம.நூ.);

அன்று யவர்க்கு அரனேநீர் சொன்னமொழி
இன்று முகிந்து இறையோனே பாசம்விட்டேன்
எல்லார்க்கு முன்செயலா யேகவுயிர் சங்கரிப்பேன்
அல்லாவே சங்கைசரி யாச்சுதே பாலனுக்கு
நடுவாகச் சங்கரியேன் ஞாயமியல் மறவேன்
வடுவாகக் குத்தமென்மேல் வாராது காரணரே
என்று யிமன்கூற மீசுபரருங் கோபமுற்று

## மார்க்கண்டேயனுக்குச் சிரஞ்சிவித்துவம் நல்கி எமனை இறைவன் உதைத்தல்

கொன்றை யணிந்தசடைக் கோமான்மிக வெகுண்டு

1513. அன்று - முன்பு; அவர்க்கு - சிறுவனுக்கு; அரனே நீர் சொன்னமொழி - இறைவனே நீவிர் அளித்த வரம்; பா.வே. - 'சொன்ன விதி' (ச.ம.நூ., மா.தவநிலை); 'சொன்ன மொழி' (கை.பிரதி);

1514. இறையோனே; இன்று முகிந்து - இன்னாளில் முடிந்துவிட்ட தால்; பாசம் விட்டேன் - பிடித்துச் செல்ல பாசக் கயிற்றை வீசினேன்;

1515. எல்லார்க்கும் உன் செயலாய் - இறைவனே! உமது ஆணையின் படி எல்லோரிடம் பாரபட்சமின்றி; ஏக உயிர் சங்கரிப்பேன் - (660) உயிரானது பிரிந்து மரணம் ஏற்பட அவர்களைச் செய்வேன்;

1516. அல்லாவே - இறையோனே; சங்கை - விதி (அளவு); சரியாச்சுதே பாலனுக்கு - இன்றுடன் முடிந்துவிட்டது; பா.வே. - 'அல்லல் யரவே' (மா.தவநிலை); 'அல்லவே' (கை.பிரதி); காண்க: 'சங்கை' (1112, 1186, 1282, 1633);

1517. நடுவாகச் சங்கரியேன் - அகால மரணம் யார்க்கும் செய்வ தில்லை; ஞாயமியல் மறவேன் - தர்மத்தை மறக்க மாட்டேன்; பா.வே. - 'நடுவாக வந்ததல்லால் ஞாயம் மறந்ததில்லை' (மா.தவநிலை); 'நடுவாக வந்ததில்லை நாதா உன் செயல் மறவேன்' (கை.பிரதி);

1518. வடுவாக - மாறாத, எப்போதும் நீங்காத; குத்தம் < குற்றம் - அவச்சொல்; என்மேல் வாராது காரணரே - எல்லாவற்றுக்கும் காரணமானவரே! என்மீது அப்படி எதுவும் இதுவரை வந்ததில்லை; இனியும் வாராது; பா.வே. - 'வடுவளவுக் குத்தம் யென்மேல்' (மா.தவ நிலை);

1519. என்று இமன் கூற -இவ்வாறு எமதர்மராசன் கூறவும்; ஈசுபரருங் கோபமுற்று - இறையோனும் வெகுண்டு; பா.வே. - 'நன்று யேமன் கூற' (மா.தவநிலை); 'என்று நமன் கூற' (கை.பிரதி);

1520. கொன்றை யணிந்த சடைக் கோமான் - (181, 403) சரக் கொன்றை மலர்களைச் சடையிலே சூடிய இறையவன்; மிக வெகுண்டு எமனை அதிகமாகக் கோபித்து;

தங்குஞ் சிவபூசை தவத்திலினி திருப்போம்
லிங்க சிவபூசையிலே நீவரவு னீதியுண்டோ
தவஞ்செய்யாப் பாதகரைத் தானிழுக்கு முன்பாசம்
சிவம்நம்பிப் பூசைசெய்வோர் சிக்குவரோ
நின்கயற்றில்

1525 அன்னா ளவர்க்கு யருளும் விதியறியாய்
இன்னாளில் தப்பிதமாய் யேனடா பாசமிட்டாய்
எண்ணும் பதினாறா யீய்ந்தோமென[ப்] பாலனுக்கு
மண்ணுமிண்ணும் போயிடினு மைந்தனுக்குச்
சாவில்லையே

1521. தங்கும் சிவபூசை தவத்தில் - சிவநெறிச் செல்வர்கள் செய்யும் வழிபாட்டில்; இனிதிருப்போம் - மகிழ்ந்து, நீங்காது தங்குவோம்;

1522. லிங்க சிவபூசையிலே - இலிங்க பூசையின்போது; நீவரவு - நீ வர; நீதியுண்டோ - தர்மமாகுமா?;

1523. உன் பாசம் - உனது பாசக்கயிறு; தவஞ்செய்யாப் பாதகரைத் தானிழுக்கும் - சிவபூசை செய்யாதோரையே பற்றக் கூடியது;

1524. உன் கயற்றில் - உனது பாசக் கயிற்றில்; சிவம் நம்பிப் பூசை செய்வோர் சிக்குவரோ - என்னை முழுதுமாக நம்பி வழிபாடியற்றுவோர் அகப்படுவரோ (அகப்படார் அன்றே!) பி.வே. - 'சிவனை' (மா.தவ நிலை, கை.பிரதி);

1525. அன்னாள் - அன்று; அவர்க்கு - மார்க்கண்டேயனுக்கு; அருளும் விதி அறியாய் - விதித்திருக்கக் கூடிய ஆயுளை நீ அறிய மாட்டாய்; பா.வே. - 'நீ கேளாய்' (கை.பிரதி);

1526. இன்னாளில் - இன்று; தப்பிதமாய் - (1510) தவறாய்; ஏனடா - அடே! எமா! ஏன்?; பாசம் இட்டாய் - பாசக் கயிற்றை வீசிப் பிடிக்கச் சென்றாய்;

1527. பாலனுக்கு - மார்க்கண்டேயனுக்கு; எண்ணும் பதினாறாய் ஈய்ந்தோம் என - (676) என்றும் சிரஞ்சீவியாக நிலைத்து நிற்கக் கூடிய பதினாறு வயது ஆயுளை வரமாக அளித்தோம் என்று இறைவன் கூறினார்; பா.வே. - 'என்றும் பதினாறு வயது ஈந்தோம் இப் பாலனுக்கு' (ச.ம.நூ., கை.பிரதி);

1528. மண்ணுமிண்ணும் (< மண்ணும் விண்ணும்) - (243) பூமியும் வானும்; போயிடினும் - மறைந்தாலும்; மைந்தனுக்குச் சாவில்லையே - மார்க்கண்டேயனுக்கு மரணமிலா வாழ்வுதான் (சிரஞ்சீவிதான்); பா.வே. - 'மரணமில்லா பாலனுயிர்' (ச.ம.நூ.);

தானடா யென்னடியார் தான்கலங்க நீசினந்து
ஏனடா யிங்குவந்தா யேமாயெனச் சினந்து
திருநடன மாடுந் திருத்தாள் தனைவோங்கி
கருமலைபோல் வந்துநின்ற காலன்தன் மார்புதனில்
கத்தச் சடையார் கடுங்கோபத்தோ டுதைற்றார்

**காலன் இறத்தலும் விளைவுகளும்**

அத்த ருதைபட்டு யலறிவிழுந்தான் காலன்
பொற்(க்)கிரீடந் தத்திவிழப் பூசனங்கள் தான்கழர
நற்கனக மாலையெல்லாம் நானிலத்தி லத்துவிழ

1529. தானடா என்னடியார் தான் கலங்க - சிவனடியார்கள் பயமுறத் தான் அடா!; நீ சினந்து - நீ கோபித்து;

1530. ஏனடா எமா இங்கு வந்தாய் - சிவன் கோவிலுக்குள் ஏன் அடா வந்தாய்; எனச் சினந்து - எமன் மேல் இறையோன் கோபித்து; பா.வே. - 'ஏனடா பாசம் விட்டாய்' (மா.தவநிலை, கை.பிரதி);

1531. திருநடனம் ஆடும் திருத்தாள் தனை ஓங்கி - நடனமிடும் பாதமொன்றைத் தூக்கி; பி.வே. - 'திருக்கால்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1532. கருமலைபோல் வந்து நின்ற - (1477) கருமையான குன்றை யொத்து அங்கு வந்து நின்றுகொண்டிருந்த; காலன் தன் மார்புதனில் - எமனுடைய மார்பில்; பி.வே. - 'காலனுடைய' (ச.ம.நூ.); 'யேமன்தன் மார்பில்' (மா.தவநிலை); ;

1533. கத்தச் சடையார் - அடர்ந்த சடைமுடி கொண்ட இறைவன்; கடுங்கோபத்தோடு - மிகுதியான கோபத்துடன்; உதைற்றார் < உதைத்தார் - மிதித்துத் தள்ளினார்; பா.வே. - 'சடைமுடியார்' (ச.ம.நூ., மா.தவ நிலை); 'சடையீசர்' (கை.பிரதி);

1534. அத்தர் உதைபட்டு - சிவன் உதைத்தலால்; காலன் - எமன்; அலறிவிழுந்தான் காலன் - மரணவேதனையால் கீழே விழுந்தான்; பா.வே. - 'அந்தவுதைபட்டு' (கை.பிரதி);

1535. பொற்க்கிரீடந் தத்திவிழ - எமன் அணிந்துள்ள தங்கக் கிரீடம் தெறித்துக் கீழே விழவும்; பூசனங்கள் தான் கழர - அனைத்துக் கவசங்க ளும் அற்றுவிழ (பூசனங்கள் < பூசணங்கள்) பா.வே. - 'ரத்தின பூஷணங்கள் தானங்களால்' (ச.ம.நூ.); 'கழன்றோட' (கை.பிரதி);

1536. நற்கனக மாலையெல்லாம் - அணிந்திருந்த பொன் ஆபரணங் கள் எல்லாம்; நானிலத்தில் - தரையில் எல்லாப் பகுதிகளிலும்; அத்துவிழ

கால னலறிவிழக் கார்குருதி மேலோட
சீல மெழுவாயில் செங்குருதி தானோட
நெஞ்சி லெலும்பு நெறுநெறென்று தானொடிய
அஞ்செழுத் தீச ரரனா ருதைத்ததினால்
அண்ட பகிரண்ட மதிர்ந்து திடுதிடென
தெண்டிரை நீரேழுஞ் சிதறி வெகுண்டோட
பாதாள லோகம் பகிரண்டங் கோடியண்டம்
மீதாக வோருதையில் மேதினியெல்லாம் நடுங்க

< அற்றுவிழ - அறுந்துவிழ; பா.வே. - 'நைந்துவிழ' (ச.ம.நூ.); 'நற்க்கனக கவசம் நல்ல வச்சிராங்கி தகடு பொடிதூளாய்' (மா.தவநிலை); 'நற்கரக வச்சிராங்கி நூறுப் பொடித்தூளாய்' (கை.பிரதி);

1537. காலன் அலறிவிழ - எமன் வீறிட்டுக் கீழே விழவும்; கார் குருதிமேலோட - அவன் உடம்பிலிருந்து பச்சை இரத்தம் பாய்ந்து செல்லவும்; பா.வே. - 'காலன் அறிவின்' (ச.ம.நூ.); 'ஏமன் யலரிவிழ' (மா.தவநிலை);

1538. சீலம் எழுவாயில் - நற்குணம் எழுகின்ற வாயிலிருந்து; செங்குருதி தானோட - சிவந்த இரத்தம் ஒழுகவும்; பா.வே. - 'சீலம் ஏழுவாய் தன்னிலே' (ச.ம.நூ.); 'சீலமுள்ள வாய்தனில்' (கை.பிரதி);

1539. நெஞ்சி< நெஞ்சு - மார்பு; எலும்பு - எலும்புகள்; நெறுநெறு என்றுதான் ஒடிய - ஓசையுடன் முறியவும்;

1540. அஞ்செழுத்து ஈசுஅரனார் - (1309) 'நமசிவாய' எனும் ஐந்தெழுத்துகளுக்குரிய இறைவன்; உதைத்ததினால் - மிதித்ததினால்; பா.வே. - 'அஞ்செழுத்து லிங்கம்' (ச.ம.நூ.);

1541. அண்ட பகிரண்டம் - எல்லா அண்டங்களும்; அதிர்ந்து திடுதிடென - கிடுகிடு என்று நடுங்கி; பா.வே. - 'கிடுகிடென' (கை.பிரதி);

1542. தெண்டிரை நீர் ஏழும் - அலை அடிக்கும் ஏழு கடல்களும்; சிதறி - தெறித்து; வெகுண்டோட - பயந்து அகலவும்; பா.வே. - 'எழுந்தோட' (ச.ம.நூ.);

1543. பாதாள லோகம் - (1070) பாதாளத்திலுள்ளதான உலகங்களும்; பகிரண்டம் கோடியண்டம் - இப் பூகோளத்திலுள்ள அனைத்து அண்டங் களும்; பா.வே. - 'பகிரண்டவிருமான அண்டம்' (ச.ம.நூ.);

1544. மீதாகவே ஓர் உதையில் - ஒரு மிதியில் எல்லாவற்றின் மீதும்; மேதினியெல்லாம் நடுங்க - எல்லா இடங்களும் அதிர; பா.வே. - 'ஒருகையால் ... அதிர' (ச.ம.நூ.); 'மீதான வோர் வுதையில்' (மா.தவ நிலை, கை.பிரதி); காண்க: 'மேதினி' (536, 1024, 1144, 1829);

அட்டமலை யட்டகெசம் யானபடி நெளிய
தட்டு மண்டதிக்கும் தானுங் கிடுகிடென
மலைகள் பொடியாகி மரங்கள் ளொடிந்துவிழ
தலையால் மிகப்படி[ை]யத் தாங்கும் பொடியரவம்
உடலை நெளித்து ஒதிங்கிப் பயமுறவே
வடமோ குவடசைய வான்முக டதிர
ஆயிரங் கோடியிடி அண்டத்தில் வீழ்ந்தாப்போல்
பாயிர ஞாலமெல்லாம் பண்ம்பாய்த் திடுக்கிடவே

1545. அட்டமலை - எட்டு மலைகளும்; அட்டகெசம் (< கசம்< கயம்) - எட்டுக் கசங்களும்; ஆன படி நெளிய - விளங்குகின்ற உலகம் எல்லாம் வேதனையால் நகர்ந்து கொடுக்கவும்; பா.வே. - 'நெறிய' (ச.ம.நூ.); 'அட்டமலை யதிர யரவம் யெட்டும் யசைந்து நெரிய' (மா.தவநிலை);

1546. தட்டு மண்டதிக்கும் - தொடுகின்ற அண்டத்துத் திசைகள்; தானுங் கிடுகிடு என - (திசைகள்) தாமும் நடுநடுங்க; பா.வே. - 'அண்டத் திட்டங்கல் தரணி' (ச.ம.நூ.); 'தட்டுயண்டத் திக்கசைய' (மா.தவநிலை);

1547. மலைகள் பொடியாகி - பெரிய பெரிய வரைகள் பொடிந்து மணலாகவும்; மரங்கள் ஒடிந்துவிழ - பெரிய பெரிய மரங்கள் முறிந்து கீழே விழவும்; பா.வே. - 'வனங்கள் பொடியாக' (ச.ம.நூ.); 'வனங்கள் னொருங்கிவிழ' (மா.தவநிலை);

1548. தலையால் மிகப் படி[ை]யத் தாங்கும் - தன் தலையில் பூமியைத் தூக்கிக் கொண்டுள்ள; பொடி அரவம் - ஆதிசேடன்;

1549. உடலை நெளித்து - வலிபொறுக்க முடியாது தன் உடம்பைச் சுருக்கி; ஒதிங்கி< ஒதுங்கி - அகன்று; பயம் உறவே - பயந்து கிடக்கவே; பா.வே. - 'ஒதுங்கி அரவகேசம்' (ச.ம.நூ.);

1550. வடமோகுவடசைய - வடபாலிலுள்ள மலையுச்சிகள் அசைந்து கொடுக்கவும்; வான் முகடதிர - வானத்தின் உச்சிகளும் நடுநடுங்கவும்; (மோ - அசை); பா.வே. - 'வடமேற்குவடசைய' (ச.ம.நூ.); 'வடமேல்க்குவடசைய' (மா.தவநிலை);

1551. ஆயிரம் கோடி இடி - அனேக இடிகள்; அண்டத்தில் வீழ்ந்தாப்போல் - இந்தப் பூகோளத்துள்ள அண்டங்களில் விழுந்து விளைவுகளைச் செய்தால் எப்படியோ அப்படி;

1552. பாயிர ஞாலமெல்லாம் - உலகத்திலுள்ள எல்லா எல்லைக ளும்; பண்ம்பாய்த் திடுக்கிடவே - வலிமிகுதியால் செயலற்றுப் போய் நிற்கவும்; காண்க: பாயிரலோகம்' (794, 1843, 2131); ஒப்பிடுக: 'பாயிரம்' (1235, 1594, 1646, 2139);

அந்திர லோக மதிர்ந்து மிகமூவுலகோர்
இந்த அதிர்த்தி யிதுயேதென்று தான்பயந்து
1555 சந்திரருஞ் சூரியருந் தாரகை நஷ்சேத்திரமும்
அந்தரத்தி லில்லாம லவர்பயந்து போயொளித்தார்
பாரமலை யுடம்பு பஞ்சாய்ப் பொடியாகி
தீர மிழந்து சினந்த புகழ்[க்]காலன்
அஞ்ஞூரத்துக் காத மகண்டபடி பாதாளம்
1560 மெஞ்ஞான காலுதையில் விழுந்தான் வலுகாலன்

*1553.* அந்திரலோகம் < அந்தரலோகம் - ஆகாய லோகம்; அதிர்ந்து - நடுங்கி; மிக மூவுலகோர் - மூவுலகில் ஆங்காங்கேயுள்ள வானவரும், அசுரரும், மற்றோரும்; பா.வே. - 'அதிர்ச்சி கண்டு மூவுலகோர்' (ச.ம.நூ.); 'அதிர்ந்து பிரமாண்டம் முட்டி(ச.ம.நூ.); ஒப்பிடுக: 'அந்தரம்' (913 முதலியன);

*1554.* இந்த அதிர்த்தி - இந்நடுக்கம்; இது யேதென்று - எதனால் இது ஏற்பட்டது; தான் பயந்து - மிகவும் அஞ்சி;

*1555.* சந்திரரும் - நிலவும்; சூரியரும் - ஞாயிறும்; தாரகை நஷ்சேத்திரமும் - விண்மீன்களும் (நஷ்சேத்திரம்< நட்சத்திரம்); பா.வே. - 'தாரகையும் விண்ணுலகோர்' (ச.ம.நூ.); 'தாரகையும் ராசிகளும்' (கை.பிரதி); காண்க: 'தாரகை' (வி.66); ஒப்பிடுக: 'நச்சேற்றிரம்' (238); 'நட்சேற்றிரம்' (2552); 'நட்சேத்திரம்' (வி.60);

*1556.* அந்தரத்தில் இல்லாமல் - (913) ஆகாயத்தில் தங்காது; அவர் பயந்து - அவர்கள் அஞ்சி; போயொளித்தார் - சென்று மறைந்து கொண்டனர்; பா.வே. - 'அந்தரத்தில் நிற்க' (ச.ம.நூ.); 'நிற்கரிதாய்' (மா.தவநிலை);

*1557.* பாரமலையுடம்பு - (1380) வலுத்த மலைபோன்ற உடம்பு கொண்டிருந்த எமன்; பஞ்சாய்ப் பொடியாகி - பஞ்சுபோன்று இலகுவாகி;

*1558.* தீரம் இழந்து - வலிமை அற்று; சினந்த - முன்பு பாலனிடம் கோபப்பட்ட; புகழ்[க்]காலன் - பெருமை நிறைந்த காலனானவன்; பா.வே. - 'வந்தகால நமன்' (ச.ம.நூ.); 'சினந்துவந்த யேமனை யன்னாள்' (மா.தவநிலை);

*1559.* அஞ்ஞூரத்துக்காதம் (< ஐந்நூற்றுக் காதம்) - 500 காததூரத்தில் (ஒருகாதம் 10 மைல்); அகண்ட< அகன்ற - விரிந்த; படி பாதாளம் - பூமிக்கும் கீழுள்ள பாதாள உலகில்; ; ஒப்பிடுக: 'அஞ்ஞூறு' (2018, 2125);

*1560.* மெஞ்ஞான கால்உதையில் - (< மெய்ஞ்ஞான) இறைவனின் பலமான மிதியால்; வலுகாலன் விழுந்தான் - வலிமை நிரம்பிய காலன்

### விருத்தம்

அண்ட முதண்ட மடங்கல் குலுங்க
தெண்டில வென்றிரை நின்று தியங்க
கொண்ட லதிர்ந்திடி கொடிய தொப்பாய்
வெண்டர ளத்துடை மார்பினன் வீழ்ந்தான் (40)

### இறைவன் மார்க்கண்டேயனை எழுப்பி வரமளித்தல்

#### நடை

காலன் மயங்கிக் கலங்கி விழுந்ததினால்
பாலன் மனதில் பயம்வருமென்றே யீசன்
பாலன் முதுகைப் பரனார் மிகத்தடவி

விழுந்து இறந்தான்; பா.வே. - 'வீழ்ந்தானே எமனுந்தான்' (ச.ம.நூ.); 'மெய்ஞானர்' (மா.தவநிலை);

வி. 40. அண்டமுதண்டம் - பல அண்டங்கள்; அடங்கல் குலுங்க எல்லாமும் சேர்ந்து அதிர; தெண்டில வென்றிரை - தெளிவான அலைகளுள்ள கடலும்; நின்று தியங்க - அலை அடங்கி நிற்க; கொண்டல் - கார்மேகம்; அதிர்ந்து - முழங்கி; இடி கொடியதுஒப்பாய் கடுமையான இடியோசை எழுவதுபோல்; வெண்தரளத்துடை - வெண்மையான முத்துக்களாலான மாலையணிந்த; மார்பினன் - மார்பினையுடைய காலன்; வீழ்ந்தான் - இறைவன் கால்உதைபட்டுப் பாதாளத்தில் விழுந்து இறந்தான்;

பா.வே. - 'தெண்டிரை எண்டிசை', 'தோள் மார்பன்' (ச.ம.நூ.); 'அடங்கலும் பரந்தோன்', 'தெண்டிரை யீரேழும்', 'கொண்டல் வந்த', 'வெண்டாளத் தொடையான் மார்பினில்' (மா.தவநிலை); காண்க: 'கொண்டல்' (1991); 'வெண்டரளம்' (2037);

1561. காலன் - எமன்; மயங்கிக் கலங்கி விழுந்ததினால் - வருந்தி, மயக்கமுற்று இறந்து பாதாளத்தில் விழுந்ததினால்; பா.வே. - 'ஏமன்' (மா.தவநிலை);

1562. பாலன் மனதில் - (அதைப் பார்த்து) மார்க்கண்டேயன் மனத்து உள்ளே; பயம் வரும் என்றே ஈசன் - அச்சம் ஏற்படும் என இறைவன் எண்ணி;

1563. பாலன் முதுகை - மயங்கிய நிலையிலிருக்கும் சிறுவனின் முதுகில்; பரனார் மிகத்தடவி - இறைவன் அன்பாய் நீவி விட்டார்; பா.வே. - 'பரமேஸ்பரனார்' (மா.தவநிலை); 'மிகத்தழுவி' (கை.பிரதி);

சீலமிகு பாலகனைச் செண்மமிற வாமல்
எண்ணும் பதினாறா யீய்ந்தோ முனக்குவரம்
விண்ணு மண்ணுமின்றி வெளிதான் நிலைத்திடினும்
காலனுனக் கில்லைஎன்று கருணைமிக மகிழ்ந்து
வாலவய தெண்ணாளு மைந்தனே வீத்திருப்பாய்
உந்தன்றனைப் பிடிக்க யுறுதியுட னேகி
வந்தயிமன் பட்டான் மார்க்கண்டா கண்டாயே

**சிவனடியார்க்கு எமன் இல்லை எனல்**

ஆராகிலு முலகி லன்புசிவபூசை செய்தால்

1564. சீலமிகு பாலகனை - நல்லொழுக்கமுள்ள சிறுவன்; செண்மம் இறவாமல் - (செண்மம் < சென்மம்) ஆயுள் முழுதும் மரணம் அடையாமல்; பா.வே. - 'செனனம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1565. எண்ணும் பதினாறாய் - 16 வயது சிரஞ்சீவியாய்; ஈய்ந்தோம் உனக்கு வரம் - அருள்செய்தோம் என்றும்; பா.வே. - 'யீந்தோம் வயதுனக்கு' (மா.தவநிலை); 'வயதீந்தோ முனக்கு' (கை.பிரதி);

1566. விண்ணும் மண்ணு மின்றி - ஆகாயமும் பூமியும் அழிந்து; வெளிதான் - பரந்த வெளிமட்டுமே; நிலைத்திடினும் - அழியாதிருந்தாலும்; பா.வே. - 'மண்ணும் ஒன்றாய்' (ச.ம.நூ.); 'ஒன்றாய் வெளியாகி நின்றிடினும்' (மா.தவநிலை, கை.பிரதி);

1567. காலன் உனக்கில்லை என்று - உனக்கு மரணமே நேராது என; கருணை மிக மகிழ்ந்து - கருணையுடன் சிறுவனை மகிழச்செய்து; பா.வே. - 'மனம் மகிழ்ந்து' (ச.ம.நூ.); 'ஏமன் வுனக்குயில்லை என்னாளும் மனம் மகிழ்ந்து' (மா.தவநிலை);

1568. மைந்தனே - சிறுவனே; வாலவயது - இளம் வயதுடன்; எண்ணாளும் < என்னாளும்< எந்நாளும் - எப்போதும்; வீத்திருப்பாய்< வீற்றிருப்பாய் - வாழ்வாய் என்று வரம் அருளி; பா.வே. - 'வாரமுடன் எந்நாளும் மைந்தனாய் வீற்றிருப்பாய்' (ச.ம.நூ.); 'வாலவயதாக யென்னாளும் மையிந்தனா வீத்திருப்பாய்' (மா.தவநிலை);

1569. உந்தன்தனைப் பிடிக்க - உன் உயிரைப் பற்றுவேன் எனும்; உறுதியுடன் ஏகி - வீறாப்புடன் புறப்பட்டு; பா.வே. - 'உறுதிவலுப்பேசி' (ச.ம.நூ., கை.பிரதி); 'உற்றவலு தான் பேசி' (மா.தவநிலை);

1570. வந்த இமன் - இங்கு வந்த எமன்; பட்டான் - என் உதையால் இறந்தான்; மார்க்கண்டேயா; கண்டாயே - நீயும் பார்த்தாய் அல்லவா? பி.வே. - 'நமன்' (ச.ம.நூ., கை.பிரதி); 'யேமன்' (மா.தவநிலை);

1571. ஆராகிலும் - யாராவது; உலகில் - பூமியில்; அன்பு சிவபூசை செய்தால் - உண்மையுடனும் பக்தியுடனும் இறையோன்மேல் அன்பு

காராயு மேனிமிகு காலனினி யணுகான்
உந்தன் றனக்காக உதைபட்ட மாமறலி
எந்த னடியார்மே லினியணுகான் பூவுலகில்
உந்தன் புகழை யுலகில் படிப்பவர்க்கும்
சிந்தைவைத்துக் கேட்டவர்க்குஞ் செல்வனே தர்மமிவர்
காலனிடம் போவதில்லை கால னவர்களிடம்
சீலமுடன் போவதில்லை சேர்வா ரினதுபதம்
உந்தன் றனக்கு உனது சிவபூசைவலு

வைத்துச் சிவ வழிபாடு இயற்றினால்; பா.வே. - 'ஆரேனும் இவ்வுலகில்' (கை.பிரதி);

1572. கார் ஆயும் மேனி மிகு காலன் - கருமையான மேகத்தைக் கூடப் பழிக்கக் கூடிய கருமை நிற உடல்கொண்ட எமன்; இனி அணுகான் - உன் உயிரைப் பறிக்க வாரான்; பா.வே. - 'காரானை மேனி யேமன்' (மா.தவநிலை); 'காராம்பு மேனியுற்ற' (கை.பிரதி);

1573. உந்தன் தனக்காக உதைபட்ட மாமறலி - சிறுவன் உனக்காக என்னால் மார்பில் மிதிக்கப்பெற்ற எமதர்மன்;

1574. எந்தன் அடியார் மேல் - சிவபக்தர்கள் உயிரைப்பறிக்க அவர்கள் அருகே; இனி அணுகான் பூவுலகில் - மனிதர்கள் வாழும் பூலோகத்தில் இனி வரமாட்டான்; பா.வே. - 'இனியேகான் வொருநாள்' (மா.தவநிலை, கை.பிரதி);

1575. உந்தன் புகழை - மார்க்கண்டேயனின் இக்கதையை; உலகில் படிப்பவர்க்கும் - உள்ளன்போடு தாங்களும், பிறருக்காகவும் வாசிப்பவர் களும்;

1576. சிந்தை வைத்துக் கேட்டவர்க்கும் - மனத்தை ஒன்றிப் பக்தியுணர்வோடு கேட்பவர்களும்; செல்வனே - மார்க்கண்டேயனே; தர்மமிவர் - சிறந்த நீதிபரிபாலிக்கும்;

1577. காலனிடம் - எமனிடம்; போவதில்லை - மரணமடைவ தில்லை; காலன் அவர்களிடம் - எமன் அவர்கள் பக்கம்கூட;

1578. சீலமுடன் போவதில்லை - (702) மரியாதை காரணமாக நெருங்குவதில்லை; சேர்வாரினது பதம் - என்னுடைய (இனது < எனது) பாதங்களுக்கும் கீழே வீற்றிருக்கும் பேறு அடைவர்;

1579. உந்தன் தனக்கு - உனக்கு மரணமிலா சிரஞ்சீவித்துவம்; உனது சிவபூசைவலு - நீ உள்ளன்போடு புரிந்த சிவவழிபாடுதான் வன்மையாக நின்று உன்னைக்காத்தது;

1580 சிந்தையுடன்ஞ் சொல்வோர் சிறந்தகதை
கேட்டவர்க்கும்
எந்தனுட பாத மியல்பாகவே கொடுப்போம்
இந்தவுரை தப்பா தெனவுரைத்தா ரீசுபரரும்

**மார்க்கண்டேயன் இறைவன்**
**செயலைப்புகழ்ந்து துதித்தல்**

அந்தவுரை சொன்ன யரனா ரிருபாதம்
சிந்தைபத்தி மைந்தன் சிறந்துகண்டு தெண்டனிட்டு
1585 எந்தன் றனக்காய் யிறையோனே பூவில்வந்து
கந்தமிகு தாள்தனால் காலனையுந் தானுதைத்தீர்
அப்பைத் தரித்த யரனே யடியேற்காய்

1580. சிந்தையுடன்ஞ்செல்வோர் - அதைப்போன்ற வலுவான சிவ பூசை செய்து உன் வழி நடப்போர்களுக்கும்; சிறந்த கதை கேட்டவர்க்கும் - உனது வரலாற்றினைப் படித்தோ கேட்டோ இருப்பவர்களுக்கும்;

1581. எந்தனுட பாதம் - என்னுடைய திருத்தாள்களின் கீழிருக்கும் பேற்றை; இயல்பாகவே கொடுப்போம் - எளிதாகவே நல்குவோம்;

1582. இந்தவுரை தப்பாது - இந்த நியதி என்றும் விலகாது; என உரைத்தார் ஈசுபரரும் - இறைவனும் இவ்வாறு கூறினார்;

1583. அந்தவுரை சொன்ன - அவ்வாறுரைத்த; அரனார் இருபாதம் - சிவ பெருமானின் திருப்பாதங்களிரண்டினையும்; பா.வே. - 'திருப்பா தம்' (கை.பிரதி);

1584. சிந்தை - உள்ளன்புடன்; பத்தி< பற்றி - பிடித்து; சிறந்துகண்டு - சிறப்பாகப் போற்றி செய்து, அத்தாள்களைக் காணும் பெருமைபெற்று; தெண்டனிட்டு - (144) கிடந்து வணங்கினான்; பா.வே. - 'சிறப்பாகத் தெண்டனிட்டு' (கை.பிரதி);

1585. எந்தன் தனக்காய் - சாதாரணச் சிறுவன் எனக்காக வேண்டி; இறையோனே - கடவுளே; பூவில்வந்து - பூமியில் தோன்றி; காண்க: 'இறையோன்', 'இறையவன்', 'இறைவன்' (726, 1122, 1148, 1166, 1306, 1503, வி.55);

1586. கந்தமிகு தாள்தனால் - புகழ்மிக்கக் கால் ஒன்றால்; காலனையுந் தானுதைத்தீர் - என்னைப் பிடிக்க வந்த எமனை மிதித்துக் கீழே விழச் செய்து கொன்றீர்; பி.வே. - 'கந்த மலர்த்தாள் அதனால்' (ச.ம.நூ.); 'கந்தம் நிறைந்ததாள்' (மா.தவநிலை, கை.பிரதி);

1587. அப்பைத் தரித்த அரனே - (349) சுடலை எலும்புகளை மாலையாக்கி அணிந்த பித்தனே; அடியேற்காய் - ஏழை பக்தனான எனக்காக;

இப்பா ருலகி லியல்வுடனே வந்தீரே
செங்கமலக் கண்ணன் திசைமுகத்தோன் காணாத
தங்குமடி யிணையை[த்] தான்கண்டே னீசுபரரே
அந்திமதி சூடு மரனே பராபரனே
இந்த வயசு யெவர்க்குங் கிடையாது
ஆயிரங் கோடி யனந்தயண்ட மெவ்வுலகும்
பாயிரத்திற் திக்கில் படர்ந்த நிறைபாதம்
எந்தன் முகத்தி லியல்பாய் மிகயணைக்க
எந்தன் தவத்துவலுவா யாவெருக்குமில்லை யென்று
சங்கரனார் தாளிணையைத் தான்சிரசின்
மீதில்வைப்பான்

*1588.* இப்பாருலகில் இயல்வுடனே வந்தீரே - பூமியில் இதற்காகவே தோன்றினீரே;

*1589.* செங்கமலக் கண்ணன் - திருமால்; திசைமுகத்தோன் - நான்முகன்; காணாத - தேடியும் கண்டுபிடிக்க வியலாத;

*1590.* தங்கும் அடி இணையைத்தான் - அவ்வாறு நிலைத்திருக்கும் திருத்தாளிணைகளையே; கண்டேன் ஈசுபரரே - நான் இன்று பார்த்துவிட்டேன் இறையோனே! பா.வே. - 'தங்கும் இருதாள் சிரசு' (ச.ம.நூ.); 'தங்க அடியிணையை' (மா.தவநிலை);

*1591.* அந்திமதி சூடும் அரனே - பிறைசூடி; பராபரனே - சிவனே;

*1592.* இந்தவயசு - இந்தப் பதினாறு வயது ஆயுள்; எவர்க்கும் கிடையாது - வேறு யார்க்கும் கிடைக்காது; பா.வே. - 'இந்த தவசு' (மா.தவநிலை, கை.பிரதி);

*1593.* ஆயிரம் கோடி அனந்த அண்டம் - ஆகாய வெளியிலே உண்டாகியிருக்கின்ற அனைத்து அண்டங்களிலும்; எவவுலகும் - உலகம் எவற்றிலும்;

*1594.* பாயிரத்தில் - (1235) அவ்வவற்றின் எல்லைகளிலும்; திக்கில் - திசைகளிலும்; படர்ந்த நிறைபாதம் - பரவியுள்ள நிறைந்த திருப்பாதங்கள்;

*1595.* எந்தன் முகத்தில் - என் தலையுறுப்புக்களால்; இயல்பாய் மிக அணைக்க - தழுவிக்கொள்ள;

*1596.* எந்தன் தவத்து வலுவாய் - நான் மேற்கொண்ட பூசை வன்மையால்; யாவெருக்கும் < யாவருக்கும்; இல்லை என்று - வேறு எவர்க்கும் இப்பாக்கியம் கிடைக்காது என;

*1597.* சங்கரனார் தாள் இணையைத்தான் - இறையோனின் திருப்பா

தங்கு முகத்தில் தகலையுட னணைப்பான்
செங்கையொடு தாங்கிச் சிறந்த மகிழ்ச்சிபொங்கி
1600 பொங்கு தமிழ்மாலை பூட்டுவா னப்பாதமதில்

**விருத்தம்**

சீர்மேவு மே[ரு]ஞ்ச் சிலையாக னாணி
திறமாக நாத நிலையாய்
கார்மேக மேவு யரியோனும் மன்பு
கனவேக தேய்வு முனையாய்
பார்மே தீரப் புரமே யெரித்த
பரனே பரந்த பொருளே
நீர்மேவு கற்றை மலர்சூடி நின்ற
நிமலா நிறைந்த சிவனே (41)

தங்கள் இரண்டையுமே; சிரசின்மீதில் வைப்பான் - மார்க்கண்டேயன் தன் தலைமேல் சுமத்தி வைத்து ஆறுதல் கொண்டான்;

1598. தங்கு முகத்தில் - அப்பாதங்களைத் தன் முகத்தில் அணைத்து; தகலையுடன் அணைப்பான் - தகுதியோடு தழுவுவான்;

1599. செங்கையொடு தாங்கி - (1224) தன் சிறிய இளம்கைகளால் அத்திருப்பாதங்களைத் தூக்கி; சிறந்த மகிழ்ச்சி பொங்கி - அவ்வாறு தாங்கிப் பிடிப்பதில் சிறப்பாக இன்பமுற்று; பா.வே. - 'செங்கை இரண்டால் பாதம் சிறப்பாகவே அழுத்தி' (ச.ம.நூ.);

1600. அப் பாதமதில் பொங்கு தமிழ்மாலை - தன் உள்ளத்திலிருந்து பக்தியுடன் வீறிட்டுவருகின்ற தமிழ்ப்பாக்களை இறைவன் திருப்பாதங்களில் மாலையாக; பூட்டுவான் - பாடிச் சூட்டினான்; பா.வே. - 'பூட்டுவான் சென்னிதனில்' (ச.ம.நூ.); பா.வே. - 'பாதமதில்' (மா.தவ நிலை, கை.பிரதி);

வி.41. சீர்மேவும் - பெருமை தங்கும்; மேரும் - மேரு மலையை; சிலையாக - வில்லாக வளைத்து; நாணி திறமாக நாத நிலையாய் -வாசுகி எனும் பாம்பை வலுவாக விளங்குமாறு வில்லின் நாண் ஆக ஆக்கி; கார்மேக மேவும்- இருண்ட மேக நிறவண்ணனான; அரியோனும் - திருமாலை; அன்பு கனவேக தேய்வு முனையாய் - எதிரிகளைத் துளைக்கும் கூரிய நுனியுடைய அம்புவாக ஆக்கி; பார்மேதீரப் புரமே எரித்த - பூமியின் மேலிருந்த வலிமையுடைய முப்புரங்களைத் தீக்கிரை யாக்கிய; பரனே - இறைவனே; பரந்த பொருளே - எல்லாவிடங்களிலும் நிறைந்த பரம்பொருளே; நீர்மேவு கற்றை - கங்கை தங்கக்கூடிய சடையில்; மலர்சூடி நின்ற நிமலா - கொன்றை மலர்களை அணிந்திருக்

கடலே கொடுத்த கடுவா லிருண்ட
கனலே மிகுத்த பரனே
படமே விரித்த வடமாலை யற்கு
பணிநீள் தரித்த யரனே
யிடமே தரித்த யுமைபாதி தங்கு
மிமையோர்கள் மூவர் முதல்வா
திடமே வகுத்த புகழே யெவைக்குஞ்
சிவமாய் விளைந்த சிவனே (42)

க்கூடிய இறைவனே; நிறைந்த சிவனே - எங்கும் நிறைந்துள்ள இறைவனே;

பா.வே. - 'திரமாக நாகநிலையாய்', 'கனமாய்த் தேய்வு நுனியாய்', 'படர்ந்த பொருளே', 'கங்கை முடிசூடி' (ச.ம.நூ.); 'மார்க்கண்டன் சொன்ன திருவாசகம்' (மா.தவநிலை) எனும் தலைப்பும் காணப்படுகிறது. 'மேர்பு சிலையாக', 'நாகநிலையாய்', 'கார்மேவும் மேனி', 'தெய்வ மலையாய்', 'பரமே பொழித்த', 'படர்ந்த' (மா.தவநிலை); 'நாகநிலை யாய்', 'நம்புகனவேக', 'கொன்றை' (கை.பிரதி);

வி.42. கடலே கொடுத்த - கடலைக் கடைந்தபோது அதினின்றும் தோன்றிய; கடுவால் இருண்ட - கொடிய நஞ்சினை எடுத்து உண்டதால் கறுத்த கண்டமும்; கனலே மிகுந்த பரனே - தீயை அதிகமாக நெற்றிக் கண்ணினின்றும் மிகுப்பவனுமான சிவனே; படமே விரித்த வடமாலை அற்கு (< அல்கு) - தாருகாவனத்து இருடிகளால் தன்மேல் ஏவப்பட்ட விரிந்த படத்துடன் வந்த பாம்பினை அதன் வேகம் குறையுமாறு செய்து; பணி நீள் தரித்த பரனே - அப் பாம்பினை வடமாலையாக அணிந்து கொண்ட சிவனே; இடமே தரித்த - தன் இடப்புறத்தில்; உமைபாதி தங்கு - உமையினை வைத்துள்ள (இறைவனே); இமையோர்கள் மூவர் முதல்வா - கண்ணிமைக்காத வானவர்களுக்கும் பிரமா, மால், ருத்திரன்; ஆகிய மூவருக்கும் முதல்வனாகத் திகழ்பவனே; திடமே வகுத்த புகழே - திண்ணமாயும் விரிந்த பெருமையுடைத்தாயும்; எவைக்கும் சிவமாய் விளைந்த சிவனே - எப்பொருளுக்கும் எவ்வுயிர்க்கும் கடவுளாய் விளங்குபவனே;

பா.வே. - 'களனே எவைக்குள் அரனே', 'அக்கு பணியே தரித்த அரனே', 'இடமே யடுத்த', 'திடமே உயிர்க்குள்ளுயிர் ஆகி' (ச.ம.நூ.); 'கரனே மிகுந்தபரனே', 'வடமாலையார்க்கு பனிநீர்', 'இடமேயடுத்து வுமை பாதிதங்கும் யியலான மூவர்', 'புகழே நினைத்த' (மா.தவநிலை); 'கழலே', 'வடமே விரிந்த... யழகு', 'இடமேயடுத்த' (கை.பிரதி);

வித்தாய் விளைந்த விரையாகி வேரின்
விரிவான கண்ணி னளவாய்
கொத்தாய் மலர்ந்த மலர்மீது பிஞ்சு
குறியாகி நின்ற கனியாய்
சுத்தாய் தூதர் படியா யியங்குந்
துடரான யண்ட வெளியாய்
சித்தா யோரஞ்சு பெரிதா கிரஞ்[சு]
சிவமாய் விளைந்த சிவனே (43)

விசையான சூல மழுபாச நேமி
விதமான சங்கு மிகுவாள்
யிசை மீறு தொண்டு யியல்வீர கண்டத்
திதமீறு செங்கை மழுவாம்

வி.43. வித்தாய் - விதையாகவும்; விளைந்த விரையாகி - அது விளைவித்த விரை ஆகவும்; வேரின் விரிவான கண்ணின் அளவாய் - அது உருவாக்கிய வேர்களும் கிளைகளுமாகி; கொத்தாய் மலர்ந்த மலர் மீது - கிளைகளில் பூத்துக் குலுங்கும் கொத்தான மலர்கள் ஆகிய அம் மலர்கள் மீது; பிஞ்சு குறியாகி நின்றகனியாய் - வரும் பிஞ்சுகளாகவும், காயாகவும் பழமாகவும் ஆகிய இறைவனே; சுத்தாய்< சுற்றாய் - சுற்றிவந்து; தூதர் - வானவர்கள்; படியாய் இயங்கும் - ஒவ்வோரிடமாய் சஞ்சரிக்கும்; துடரான - தொடர்ச்சியான; அண்டவெளியாய் - ஆகாய மாய்; சித்தாய் - சித்திகளுடன்; ஓர் அஞ்சு பெரிதாக இரஞ்[சு] - ஐந்து வளர்ந்து; சிவமாய் விளைந்த சிவனே - சிவனாக வளர்ந்த இறையோனே;

பா.வே. - 'காயாகி நின்ற கனியாய்', 'சுத்தால் நிறைந்த படியாகி', 'இரண்டு சிவமாய்' (ச.ம.நூ.); 'கண்ணின் ஒளியாய்', சுத்தாகிதூரபடியா யியங்கு', 'ஓர்ரைந்து பெரிதாகி நின்று' (மா.தவநிலை); 'கண்ணினொளி யாய்', 'சற்றாய்த் தூரபடியாகி', 'சித்தாய் யுரைந்தும் பெரிதாகி ரெண்டும்' (கை.பிரதி);

வி.44. விசையான - வேகமுள்ள; சூலம் - சூலாயுதம்; மழு - கோடரி; பாசம் - பாசப்படை; நேமி - சக்கராயுதம்; விதமான சங்கு - வகையான சங்கும்; மிகுவாள் - பெரியவாளும்; இசைமீறு தொண்டு - ஓசையை விஞ்சக்கூடிய பழமையும்; (தண்டும்); இயல்வீர கண்டத் தித மீறு செங்கை - இயல்பான வீரமுள்ள கண்டமும் அதினின்று வந்துள்ள செங்கையில்; மழுவாம் - மழுப்படையைத் தாங்கியும்; கசவீர< கசைவீர - கசைபோன்று உறுதியான; பாசக்கவனே - பாசம் எனும் கவச ஆயுதமும்; கறங்கு - சுழலும்; கனவீர கண்டி - கனத்த வீரகண்டி எனும் அணியும்; விதினூல் - விதிநூலும்; திசையில்வைக்கும்

கசவீர பாசக் கவனே கறங்கு
கனவீர கண்டி விதினூல்
திசையா லவைக்கு மருள்கால கால
சிவமாய் விளைந்த சிவனே (44)

உருவான காய மெவையே சிறந்த
யொளியாகி நின்ற வெளியே
மருவான வாச மலரால் நிறைந்த
வளமேவு யந்து கிதிரே
தருவாகு மாய்கை யெவர்காண வல்லர்
தமியேன் நினைந்த நினைவாய்
திருவான லிங்க மதனூடு வந்த
சிவமாய் விளைந்த சிவனே (45)

- எத்திசையிலுள்ளவற்றுக்கும்; அருள் கால சிவமாய் - அருளுகின்ற சிவமாய்; விளைந்த சிவனே - விளங்குகின்ற இறையோனே;

பா.வே. - 'சங்கு இடிவாள்', 'மீளும் தண்டு அயில் வீர கண்டி இலைமீறு செங்கை தனுவாம்', 'கசைவீர வாளி கவண் இலங்கு கடுதீர விஞ்சை', 'திசையிலை ஈரேழ் அதல' (ச.ம.நூ.); 'சங்கும் யில்லாடி வாழ்க', 'தெண்டு', 'கண்டுயிதன் மீறு செங்கை தனுவாய்', 'வீரவாளி', 'கனல்லுதிர விஞ்சை', 'திசையிவை யிதன்' (மா.தவநிலை); 'இடிவாள்', 'தண்டு', இயல்நீர சுண்டி.... தனுவாம்', 'வாளி', 'கனதீர', 'திசையிவை யீரேன் கருகாலம்' (கை.பிரதி);

வி.45. உருவான காயம் - உருவாகியுள்ள உயிர்களின் உடல்கள்; எவையே சிறந்த - எவற்றைக் காட்டிலும் மேலான; ஒளியாகி நின்ற வெளியே - சோதிமயமாக நிற்கும் வெளிபோன்றவனே; மருவான வாசமலரால் - மணமுள்ள பூக்களால்; நிறைந்த - மிகுந்துள்ள; வளமேவு - வளம் மிகுகின்ற; அந்துகிதிரே - கதிரே; தருவாகுமாய்கை - உனது மாயச் செயலை; எவர்காண வல்லார் - அறிந்து கொள்ள வல்லவர்யார்?; தமியேன் நினைந்த நினைவாய் - நான் எப்போதும் உன் நினைவுடனே இருந்தேனாதலின்; திருவான லிங்கம் அதனூடுவந்த - எனக்கு அருள வேண்டி இலிங்கத்தினின்றும் எழுந்து வந்த; சிவமாய்; விளைந்த சிவனே - விளங்கிய இறையோனே;

பா.வே. - 'அருவான... இந்து கதிரே', 'வள்ளல் தனையே நினைந் த', 'லிங்க மருளூடு' (ச.ம.நூ.); 'மலர்தாகி' நிறைந்து வளமேவுயிந்து கதிரோன்', 'தருவான', 'இதனூடுவந்த' (மா.தவநிலை);

அவமாய்கை யாசை புலனால் விளைந்த
யதிரூப கற்றை யெவையோர்
தவமே நினைந்து னிருதாள் பணிந்[து]
தமியோர்கள் வஞ்ச வினையால்
நவமீறு கால னவனேது செய்வான்
நகைசீத சத்தி பரனே
சிவமாய்கை கண்ட வெளியாகி நின்ற
சிவமாய் விளைந்த சிவனே (46)

காடும் பரந்த மலையுஞ் சிறந்த
கடலும் பரந்த பரனே
வீடும் கலந்த துறவும் கலந்து
விமலாய் பித்தா வினையாய்
ஓடுங் கலந்த பொருளுங் கலந்து
யெவையாகி யண்ட வெளியாய்
தேடுஞ் சிறந்த சிவஞான ரூப
சிவமாய் விளைந்த சிவனே (47)

வி.46. அவமாய்கை ஆசை புலனால் விளைந்த - கேடுவிளைவிக்கும் ஐம்புலன்களின் நுகர்ச்சியால் வந்த; அதிரூபகற்றை (< கத்தை) எவை யோர் - உயர்ந்த வடிவத்தை எவரும்; தவமே நினைந்து - தவசு புரிந்து; இருதாள் பணிந்[து] - இறைவனின் திருத்தாள்களை வணங்கி; தமியோர் கள் - அவ்வாறு வழிபாடு இயற்றுவோர்களை; வஞ்சவினையால் நவமீறு காலன் அவன் ஏது செய்வான் - மாயவினைகளால் உயிர்களை மீறும் எமன் எதுவும் செய்ய இயலாது; நகைசீதசத்திபரனே - குளிர்ந்த நகை புரியும் உமா மகேசுரனே; சிவமாய்கை கண்ட வெளியாகி நின்ற சிவமாய் விளைந்த சிவனே - சிவமாய்கையுடன் எங்கும் பரந்து நின்று கொண்டும் சிவமாய் அமைந்த இறைவனே;

பா.வே. - 'புனலால்... அதிரூபகந்தம் எவையோ', 'தவமே புரிந் துன்', 'நளிர் சிவசக்தி பரனே', 'சிவமேயகண்ட' (ச.ம.நூ.); 'புனலால்', 'உன்னிருதாள்', 'யேமன்', 'நகசீல சத்திபரனே', 'சிவன் மெய்கண்டு' (மா.தவநிலை);

வி. 47. காடும் பரந்த மலையும் - வனங்களாகவும் மலைகளாகவும்; சிறந்த கடலும் - கடலாகவும்; பரந்த பரனே - ஆகியுள்ள இறைவனே; வீடும் கலந்த - இல்லறத்தையும் மேற்கொண்டும்; துறவும் கலந்து - துறவறத்தையும் மேற்கொண்டும்; விமலாய் - விளங்குகின்ற விமலனே; பித்தா - பித்தனே; வினையாய் - வினைகளாகவும் உள்ளவனே; ஓடும் கலந்த பொருளும் கலந்து - ஒன்றுக்கும் உதவாத உடைந்த மண் ஓடும்

எட்டான சாணி னொருசா ணதுள்ளி
னிதமாய்கை யாறு யிருசாண்
கட்டான சென்மங் குகையே சிறந்த
கழல்தேடு யோகி யிவராய்
மெட்டான வாச லதுவே நுழைந்து
வெளியாகி யோசை யொளியில்
திட்டான மேடை மனதே புகுந்து
சிவமாய் விளைந்த சிவனே (48)

எங்கு னிறைந்த யரன்மாலும் வேத
னியல்வான மூவர் முதல்வா

ஆகி மேலும் எதற்கும் பயன்பெறும் பொருளாகவும் ஆகி; எவையாகி - வேறு எதுவும் ஆகி; அண்ட வெளியாய் - பரந்த வானாக ஒன்று இல்லாமலும் ஆகி; தேடும் சிறந்த சிவஞான ரூப - எதிலிருக்கிறாய் எனத் தேடக்கூடிய சிவஞான வடிவில்; சிவமாய் விளைந்த சிவனே - சிவமாய் விளங்குகின்ற இறைவனே;

பா.வே. - 'காடுஞ் சிறந்த மலையும் புரந்த கடலும் நிறைந்த', 'வீடுங் கடந்த.... வெளியான பித்தா', '....கடுக்கலந்த பொருளுங் கலந்த', 'சிவஞான சிந்தை' (ச.ம.நூ.); 'வீடும் கடந்து...கடந்து', 'ஏடுங்கலந்த', 'யாகிய விஞ்சை', 'சிறந்த மனதே' (மா.தவநிலை);

வி.48. எட்டான சாண் - எண்சாண் அளவுள்ள மனித உடம்பில்; ஒரு சாண் அது உள்ளி - ஒரு சாண் அளவே உள்ள வயிற்றை நினைத்து; இதமாய்கை - இந்த விதமான மாயங்கள் நடக்கின்றன; ஆறு இருசாண் - ஆறும் இரண்டுமான எண்சாண் அளவுள்ள; கட்டான சென்மம் குகையே - ஒழுங்கான தேகமுள்ள இப்பிறப்பு ஒரு குகையாகும்; சிறந்த கழல்தேடு யோகியிவராய் - சிறப்பமைந்த இறைவன் திருத்தாள்களைத் தேடித் தவ மேற்கொள்ளக் கூடிய முனிவர்களிடம் விரும்பிச் செல்வார் இறைவன்; மெட்டான வாசல் அதுவே நுழைந்து - (மெட்டு மெத்து) மென்மையான வாசல் வழியே சென்று; வெளியாகி - பரந்த வெளியாகி; ஓசை யொளியில் - ஒலியாகவும், வெளிச்சமாகவும் ஆகி அவற்றின் மூலம்; திட்டான மேடை மனதே புகுந்து - அடியவர்களின் உள்ளத்தில் நுழைந்து தங்கி; சிவமாய் விளைந்த சிவனே - சிவமாய் ஆகியுள்ள இறைவனே;

பா.வே. - 'இதயமாம் கையாடும் இருசாண்', 'கட்டாய்ச் செனங்கு கையே நிறைந்து கனல் தேடு யோகி', 'வெளியாகி நேசப் புனலுள்' (ச.ம.நூ.) 'எட்டாயரசாணி', 'கட்டாய செனனம்', 'திறந்து', 'மெட்டாகி ய', 'விதமாய்கை ', (மா.தவநிலை);

வி.49. எங்கும் நிறைந்த அரன் மாலும் வேதன் - எவ்விடத்தும் நிறைந்துள்ள (மூர்த்திகளான) அரி அரன் அயன்; இயல்வான மூவர்

பங்கும் பிறந்த பலவா ரூப
பரமாகி யேக முகமாய்
லிங்கஞ் சிறந்த வெளியே மிகுந்த
நிலையோக யேழு முகவன்
செங்கண் சிவந்த வினையோட வேண்டு[ம்]
சிவமாய் விளைந்த சிவனே (49)

மானில் சிறந்த மழுவோடு செங்கை
மலரோது மாலு மறியார்
கானின் சிறந்த மலையுங் கடந்து
கனபாரு ரோம்பு மிருதாள்
நானின் புகழ்ந்த யிவையோக வல்லர்
நலயோக தஞ்சம் நடுவில்
தேனின் மிகுந்த மனதே புகுந்த
சிவமாய் விளைந்த சிவனே (50)

முதல்வா - இவ்வியல்புடைய மும்மூர்த்திகளுக்கும் முதலாவதாக இருப்பவனே; பங்கும் பிறந்த பலவா ரூப - பலவாறான உயிரின உருவங்களுடன் பிறந்தும்; பரமாகி ஏக முகமாய் - ஒன்றே ஆகி எல்லாவற்றுக்கும் மூலமாகி; லிங்கஞ்சிறந்த வெளியே மிகுந்த நிலையோக - சிறந்த இலிங்கமாகவும், பரந்த வெளியுமாகவும், யோக நிலையாகவும் ஆனவனே; ஏழுமுகவன் - எமன்; செங்கண் சிவந்த வினையோட வேண்டு[ம்] - சிவந்த கண்களுடன் பற்றவரும் மரணவினை ஒழிய வேண்டும்; சிவமாய் விளைந்த சிவனே - எல்லாமாய் விளங்குகின்ற இறைவனே;

பா.வே. - 'இமையோர்களவர் முதலாய்', 'பங்கும் புரிந்து பலவான ரூபம் பரமாகி ஏக ரூபமாய்', 'வெளியே வளைந்து', 'வினையோவென்று', (ச.ம.நூ.); 'மூவர் முதாய்', 'பலவான', 'லிங்கம் புகுந்து', 'என் வினையோடவேணும்' (மா.தவநிலை);

வி.50. மானில் சிறந்த மழுவோடு செங்கை - செம்மையான கைகளில் மானையும் அதிற் சிறந்த மழுவையும் தாங்கியுள்ள இறைவனை; மலரோது மாலும் அறியார் - திருமால் தேடியும் காணமுடியவில்லை; கானின் சிறந்த மலையும் - வனமும் அதிற் சிறந்த மலையும்; கடந்து - தாண்டி; கனபாரு ரோம்பும் இருதாள் - கனத்த பூமியிலுள்ளவர்கள் போற்றக்கூடிய இருதிருத்தாள்கள்; நானின் புகழ்ந்த இவையோக வல்லர் - நான் எனும் அகந்தை அகற்றி இறைவனின் திருத்தாள்களை வணங்கும் முனிவர்களின்; நலயோக தஞ்சம் நடுவில் - இறைவனை அடைக்கலமாக எண்ணியிருக்கும் அவர்களின் இடையே; தேனின் மிகுந்த மனதே புகுந்த - தேனைவிடவும் இனிமையுள்ள அவர்கள்

### நடை

அருள்விருத்தங் கேட்டு யரனாரும் பார்பதியும்
தருமநெறிப் பாலகனைத் தான்மகிழ்ந்து யின்பமுற்று
தங்குனே மிந்தலிங்கம் தாபரித்தே முந்தன்மனம்
தங்குஞ் சிவபூசை தவமா முனக்குவலு
சிந்தைவைத்து நீயுஞ் சிவபூசை செய்யுமென்று
அந்தலிங்கந் தன்னி லரனாரினி திருந்தார்
அன்னாளில் மார்க்கண்ட னானசிவபூசை செய்து

**மார்க்கண்டேயன் பெற்றோர் மகிழ்தல்**

தன்னோர் தவம்நிறைந்து தந்தைதாய்[ப்] பக்கல்வந்தான்

உள்ளத்துள் நுழைந்து தங்கியிருக்கக்கூடிய; சிவமாய் விளைந்த சிவனே - சிவமாய் விளங்கக் கூடிய இறைவனே;

பா.வே. - 'மலரோனும் மாலும்', ரெம்பும் இருதாள்', 'ஞானம் புகந்த', 'கஞ்ச மலரான்', 'தேனின் கலந்த' (மா.தவநிலை);

1601. அருள் விருத்தம் கேட்டு - மார்க்கண்டேயன் துதித்துப் பாடிய பாக்களைக் கேட்டுக் கொண்டிருந்த; அரனாரும் பார்பதியும் - சிவமும் சக்தியும்;

1602. தருமநெறிப் பாலகனை - அறநெறிகளின் அடிப்படையில் வளர்ந்து வந்துள்ள சிறுவனை; தான் மகிழ்ந்து இன்ப முற்று - மிக்க மகிழ்ச்சியுடன் பாராட்டி;

1603. இந்த லிங்கம் தங்குனேம் - நீ வழிபட்ட இந்த இலிங்கத்தில் வந்து இருந்தேன் என்றும்; தாபரித்தேம் உந்தன் மனம் - உன்னை எமனிடமிருந்து காத்தேன் என்றும் இறைவன் கூறினார்;

1604. தங்கும் சிவபூசை தவமாம் - நிலைத்து நிற்கும் சிவ வழிபாடு தான்; உனக்கு வலு - சிறுவனே! உந்தனக்கு வலிமை தந்தது;

1605. சிந்தை வைத்து நீயும் - உள்ளன்பு கொண்டு இனியும் நீ; சிவபூசை செய்யும் என்று - சிவ வழிபாடு செய்து வருக என;

1606. அந்த லிங்கம் தன்னில் - அங்குள்ள இலிங்கத்துள்; அரனார் இனிது இருந்தார் - சிவபெருமான் மீண்டும் உறைந்து கொண்டார்; பா.வே. - 'அனலுருவில் தானிருந்தார்' (ச.ம.நூ.);

1607. அந்நாளில் - அன்றைய தினம்; மார்க்கண்டன் - சிறுவன்; ஆன சிவபூசை செய்து - நிலைத்து விளங்கக்கூடிய அச் சிவபூசையினை மேற்கொண்டான்; காண்க: 'சிவபூசை' (1179, 1496, 1604, 1605);

1608. தன் ஓர் தவம் நிறைந்து - தனது சிவபூசையை முடித்துக் கொண்டு; தந்தை தாய்[ப்] பக்கல் வந்தான் - தன் பெற்றோர்களிடம்

அந்தமிகு பாலகனை யன்னைதந்தை யாவர்களும்
சிந்தையுடன் கண்டு சிறந்தபுகழ் மகனை
சிவரூபமான வதன[ம்] சிறந்த தவவலுவோ
அவவிதிகள் போச்சுதென்று யன்பாய் மனமகிழ்ந்து
அன்று மகிழ்ச்சிபொங்கி யன்னைதந்தை யாவருக்கும்
இன்றுவந்த மாய்கை யெவையு மியம்பலுற்றான்
மைந்தனுரை கேட்டு மாதாபிதா யெவரும்
சிந்தை மகிழ்ந்து சிறந்தணைத்துப் பாலனையும்

மார்க்கண்டேயன் சென்றான்; பா.வே. - 'தவம் நிறைந்தோர்' (ச.ம.நூ.); 'தவம் முடித்து' (கை.பிரதி);

1609. அந்தமிகு பாலகனை - அழகு மிகுந்த மகனை; அன்னை தந்தை யாவர்களும் - பெற்றோரும் சுற்றமும்; பா.வே. - 'அந்த நிறை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1610. சிறந்த புகழ் மகனை - மரணத்திலிருந்து மீண்டதால் புகழ் பெற்றவனை; சிந்தையுடன் கண்டு - உள்ள மகிழ்ச்சியுடன் பார்த்து; பா.வே. - 'மதலை' (ச.ம.நூ., கை.பிரதி);

1611. சிவரூபமான வதன[ம்] - சிவனைப் போல ஒளிமிகுந்த வடிவமுள்ள தம் மகனின் மேனி எழில்; சிறந்த தவவலுவோ - அவன் மேற்கொண்ட சிவபூசையின் பயனாகக் கிடைத்ததுவோ;பா.வே. - 'சிவரூபமானான்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1612. அவவிதிகள் - பதினாறு வயதில் மரணம் என முன்பு விதித்த கெட்ட விதிகள்; போச்சுது - முடிந்துவிட்டன; என்று - என; அன்பாய் மனமகிழ்ந்து - மிகுதியாக மகிழ்ச்சியுற்றனர்; (போச்சுது போய்விட்டது); பா.வே. - 'அவன் விதியும்' (மா.தவநிலை); 'அவமாம் விதி' (கை.பிரதி);

1613. அன்று மகிழ்ச்சிபொங்கி - மரணத்தை வென்ற அன்றைய தினத்தில் மார்க்கண்டேயன் மகிழ்ந்து; அன்னை தந்தை யாவருக்கும் - பெற்றோர், சுற்றத்தார்களுக்கு;

1614. இன்று வந்த மாய்கையெவையும் - கோவிலில் அன்று நடந்த இறைவனின் அற்புதச் செயல்கள் எல்லாவற்றையும்; இயம்பலுற்றான் - அவர்களிடம் கூறினான்;

1615. மைந்தன் உரைகேட்டு - மார்க்கண்டேயன் கூறுவதைக் கேட்ட; மாதாபிதாயெவரும் - பெற்றோரும் மற்றோரும்;

1616. சிந்தை மகிழ்ந்து - உள்ளம் உவகையடைந்து; பாலனையும் சிறந்தணைத்து - சிறுவனையும் பெற்றோர் பாசத்தால் தழுவினர்;

உந்தன் தவம்போலே யொருவருக்கு
மில்லையென்றார்
மைந்தன் தவத்தால் மகிழ்ந்தோம் பெருமையுற்றோம்
அந்திமதி சூடு மரனாரே தஞ்சமென்று
சந்தோச மாகத் தவத்தின் பெருமைகளை[ச்]
சிந்தைமிக மகிழ்ந்து செப்புவா ரோர்வசனம்
தங்கு சிவபூசை தரும்வலு வெனவே
பொங்குஞ் சிவபூசைசெய்து போத மகிழ்ந்திருந்தார்

**மார்க்கண்டேயன் கதையும் மக்கள் அடையும் பலனும்**

இந்தக் கதையை யியம்புவர்க்குங் கேட்டவர்க்கும்
மைந்த[ன்] தனக்கு யாவர்க்காக யிய்ந்தவரம்

1617. உந்தன் தவம்போலே - நீ செய்த சிவபூசையின் பயன் போன்று; ஒருவருக்கும் இல்லை என்றார் - வேறு எவர்க்கும் கிடைக்காது எனப் பெற்றோரும் பிறரும் கூறினர்;

1618. மைந்தன் தவத்தால் - மகனின் சிவபூசை மகிமையினால்; மகிழ்ந்தோம் - கவலையை நீக்கி மகிழ்ச்சி அடைந்தோம்; பெருமையுற்றோம் - இப்படியான மகனைப் பெற்றமைக்காகப் பெருமிதம் கொள்கிறோம் என்றனர்;

1619. அந்திமதி சூடும் அரனாரே தஞ்சமென்று - பிறை சூடும் சிவனே அடைக்கலம் என; பா.வே. - 'அரன் அருளே என்று இருந்தார்' (ச.ம.நூ.);

1620. சந்தோசமாக - மகிழ்ச்சியாகக் கூறினர்; தவத்தின் பெருமைகளை - சிவபூசையின் மகிமைகளை;

1621. சிந்தை மிக மகிழ்ந்து - உள்ளம் பூரித்து; செப்புவார் ஓர் வசனம் - சிவபூசை இயல்புகளைப்பற்றி எடுத்துரைக்கத் தொடங்கினர்;

1622. தங்கு சிவபூசை - நாம் செய்யும் இறை வழிபாடு; வலுதரும் எனவே - நமக்கு மிக்க வலிமையைச் சேர்க்கும் என்று எல்லோருக்கும் எடுத்துக் கூறி;

1623. பொங்கும் சிவபூசை செய்து - மிகுந்த இறை வழிபாடுகளை மேற்கொண்டு; போத மகிழ்ந்திருந்தார் - பக்தி ஞானம் பெற்றுச் சந்தோசமாக வாழ்ந்தனர்;

1624. இந்தக் கதையை - மார்க்கண்டேயன் தவ வலிமையை; இயம்புவர்க்கும் கேட்டவர்க்கும் - எடுத்துச் சொல்வோருக்கும் அதைக் கேட்போருக்கும்;

1625. மைந்த[ன்] தனக்கு - சிறுவன் மார்க்கண்டேயனுக்கும்; யாவர்க்

ஏமனொரு னாளு மிவர்களிட மணுகான்
சோமனணி யீசர் துணைப்பதந் தான்தப்பாது
மன்றுலகில் தர்ம[ம்] வளருங் கயிலைவரும்
குன்று மிருபாவங் கூட்டோடே நாசமறும்
1630 பக்குவமுஞ் செல்வம் பதியும் நிலைக்குமது
தற்குந் தவமேற்கு[ந்] தங்கிநிற்(ப்)பா ரீசுபரரும்
பாலன் தனக்காய்ப் படியில்வதை யுண்டநமன்
சாலப் புவியோரைத் தான்விட்டான் சங்கைசென்றான்
முந்தப் பிரமன் முகிந்தவிதி வருமுன்

காக ஈய்ந்த வரம் - சிவபூசை செய்யும் பிறர்க்கும் பொருந்தக்கூடியவாறு அமைகின்ற வரத்தால்;

1626. எமன் ஒரு நாளும் இவர்களிடம் அணுகான் - மரணம் இப் பக்தர்களை என்றும் அணுகாது;

1627. சோமன் அணி ஈசர் - சந்திரனைச் சடையில் சூடும் இறைவ னின்; துணைப் பதம்தான் தப்பாது - இணைப் பாதங்களை அடையும் பேறு தப்பாமல் கிடைக்கும்;

1628. மன்றுலகில் - இப்பூமியில்; தர்மம் வளரும் - நீதி, நியாயம், அறம் போல்வன தழைத்தோங்கும்; கயிலை வரும் - கைலாச பதவி நம்மைத் தேடி வரும்;

1629. இருபாவம் குன்றும் - தீவினைகளால் ஏற்படும் இருவகைப் பாவங்களும் சிவபூசையால் நீங்கிவிடும்; நாசம் கூட்டோடே அறும் - அழிவானது முழுதாக அற்றுவிடும்;

1630. பக்குவமும் - தகுதியும்; செல்வம் - பொருளும்; பதியும் - உறையும் இடமும்; நிலைக்கும் - நீடித்து நின்று பெருமை தரும்; அது - அப் பெருமை;

1631. தற்கும் தக்கும் - தகுதியானதாயிருக்கும்; தவம் ஏற்கும் - செய்யும் சிவவழிபாடு ஏற்றுக் கொள்ளப்படும்; ஈசுபரரும் தங்கிநிற்பார் - இறைவனும் உள்ளத்தில் நீங்காது உறைவார்;

1632. பாலன் தனக்காய் - மார்க்கண்டேயனுக்காக; படியில் வதை யுண்ட நமன் - பூமியில் இறைவனால் வதைக்கப்பெற்று உயிர் நீத்த காலன்;

1633. சாலப் புவியோரைத் தான் விட்டான் - உலகில் வாழும் மிகுந்த மனிதர்களை வதைத்து உயிர் பறிப்பதை ஒழித்து (இறந்து போனான்); சங்கை சென்றான் - தன் கடமையான வழக்கத்தையே நிறுத்திப் பாதாளத் தில் இறந்து கிடந்தான்;

1634. முந்தப்பிரமன் - முன்பு, படைக்குங்காலத்து, வேதன்; முகிந்த விதி வருமுன் - விதித்திட்ட ஆயுள் முடிவு அதாகவே வருவதற்கு முன்பு;

சிந்தைமிகு நல்ல தவஞ்செய்தா லிமனணுகான்
செங்கண் நெடுமால்வேதன் தேவரிஷியோ ரெவரும்
தங்கியவர் செய்ததவம் தன்னளவாய் நின்றதுவே
மார்க்கண்டன் யோகதவ மானிலமெல்லாம் வளர்ந்து
தாக்குடனே யண்டந் தரணியெங்கும் வீசியதே
ஆகையினா லிக்கதையை யன்புகந்தோர் யாவருக்கும்
மாய்கை யுடக்கில் மரணம்வந்து நல்கிடினும்
காய மழிந்து கலங்காமலே சீவன்
சியநமா வென்ற சிவபாதஞ் சேருமென
சிவாய நமபாதந் திரமா யுதவுகையால்

**1635.** சிந்தைமிகு நல்ல தவம் செய்தால் - உள்ளன்புடன் இறைவழிபாடு மேற்கொண்டால்; இமன் அணுகான் - எமனால் மரணம் ஏற்படாது;

**1636.** செங்கண் நெடுமால் வேதன் - தாமரைக் கண்ணனான திருமாலும், பிரமனும்; தேவரிஷியோர் எவரும் - வானுலகத்துள் இருப்பவரான முனிவர்களும் பிறவானவர்களும்;

**1637.** தங்கி அவர் செய்த தவம் - காத்திருந்து அவர்கள் மேற்கொண்ட தவங்கள்; தன்னளவாய் நின்றதுவே - அவர்களுக்கு மட்டுமே பயன் படுமாறு இருந்தன;

**1638.** மார்க்கண்டன் யோக தவம் - ஆனால் பாலகன் செய்த இறை வழிபாடும் அதற்குக் கிடைத்த பயன்களும்; மானிலமெல்லாம் வளர்ந்து - பல இடங்களிலும் பரவி;

**1639.** தாக்குடனே - ஆணித்தரமாக; அண்டம் தரணி எங்கும் வீசியதே - பூமியிலும், பிற கோளங்களிலும் (அப்புகழ்) பரந்தது;

**1640.** ஆகையினால் இக்கதையை - எனவே மார்க்கண்டேயன் கதையை; அன்பு உகந்தோர் யாவருக்கும் - இறைவன் மீது அன்பு கொண்டோர் எவரும்;

**1641.** மாய்கை உடக்கில் - மாயத்தின் சூழ்ச்சி வசத்தால்; மரணம் வந்து நல்கிடினும் - இறந்துபட்டாலும்;

**1642.** காயம் அழிந்து - உடம்பானது கெட்டுப் போனாலும்; கலங்காமலே சீவன் - உயிரானது எவ்வித அச்சமும்படாது;

**1643.** சியநமா என்ற சிவபாதம் சேரும் என - 'நமசிவாய' எனும் பஞ்சாட்சர மகிமை கொண்ட சிவனின் திருப்பாதங்களைச் சென்று அடையும் என்று; காண்க: 'சிவாய நமா' (2390);

**1644.** சிவாய நமபாதம் - 'நமசிவாய' எனும் இறைவன் திருத்தாள்கள்; திரமாய் உதவுகையால் - உறுதியாய்க் கிடைத்து விளங்கும் ஆகையால்;

1645 அவாயமிகு மாய்கை யகலு[ம்] யிமனணுகான்

**எமன் இறந்ததால் உயிரினங்கள் இறவாதிருத்தல்**

**விருத்தம்**

வாலிப மனுத ரெல்லாம்
வாழ்ந்தனர் சாவில் லாமல்
காலனும் பால னாலே
கயிலையோன் பாதஞ் சேர்ந்தான்
சாலவே தாழி வைத்துத்
தரணியில் புதைக்க லுத்தார்
பாலக னீதி யாலே
படியெல்லாம் வளந்து ஓங்கும் (51)

**நடை**

பாயிரத்தி லெங்கும் பல்லாயிரங் கோடியண்டம்
மாயிர ஞாலமெல்லாம் மாகலோக மெவ்வுலகும்

**1645.** அவாயம்< அபாயம் - துன்பம்; மிகு மாய்கை - மிகுந்த மயக்கம்; அகலும் - இறைவன் நாமத்தால் நீங்கிவிடும்; இமன் அணுகான் - மரணம் சிவபக்தர்களை நெருங்காது;

**வி.51.** வாலிப மனுதர் எல்லாம் - இளைஞர் அனைவரும்; (மனுதர்< மனிதர்); சாவில்லாமல் வாழ்ந்தனர் - மரணம் ஏற்படாது உயிர்வாழ்ந்த னர்; காலனும் - எமனும்; பாலனாலே - மார்க்கண்டேயனால்; கயிலை யோன்பாதம் சேர்ந்தான் - இறைவனின் திருவடிகளில் சேர்ந்துவிட்டான்; சாலவே தாழிவைத்து - வயதாகியும் சாகாதவர்களை மிகுந்த அளவிலே பெரிய மண் பானைகளில் இருக்கவைத்து; தரணியில் - நிலத்தில்; புதைக்கலுத்தார் < புதைக்கலுற்றார் - மண்ணுள் வைத்து மூடினார்; பாலகன் நீதியாலே - மார்க்கண்டேயன் இறைவனிடம் பெற்ற வரபலத் தால் (காலன் இறந்து பட்டதால்); படியெல்லாம் வளந்து ஓங்கும் - உலகிலுள்ள உயிரினம் அனைத்தும் பெருகின;

பா.வே. - 'சாலவே பானை வைத்து', படியெல்லாம் வாழ்ந்து பொங்கும்' (ச.ம.நூ.); 'ஏமனும் ... இயல் கையிலையோன்', 'வளர்ந்த னர்', 'பானையில் வையித்து', 'பாலகன் பூசையோகம்' (மா.தவநிலை கை.பிரதி);

**1646.** பாயிரத்தில் எங்கும் - இப் பூகோளத்தில் எவ்விடத்தும்; பல்லாயிரங்கோடி அண்டம் - பல எண்ணிக்கையுடைய அண்டங்களி லுள்ள உயிரினங்களும்;

**1647.** மாயிர ஞாலமெல்லாம் - (834) மாயமுள்ள உலகுகளிலும்; மாகலோகம் எவ்வுலகும் - ஆகாயத்துள் உள்ள அனைத்து உலகுகளிலு முள்ள உயிரினங்களும்;

தங்கு புகழரனுந் தான்மிகுத்த பூவுலகும்
எங்குந் திசைபுவன மெல்லாம் வளந்ததுவே
சீராரு மார்க்கண்டன் செய்த தவசுதனாலே
தாராரு மெமபுர(ம்)ந் தான்பாழ் கிடந்ததுவே
பார்மீதி லோர்புதல்வன் பண்ணுஞ் சிவதவசு
சீர்மேவு மண்டந் திசையெட்டும் வீசியதே
நல்லோ ரிருந்தயிடம் நாதனருள் பெருகும்
பொல்லா ரிருந்தயிடம் பொங்குகனல் பட்டதொற்கும்

*1648.* தங்கு புகழ் அரனும் - புகழ் தங்கியிருக்கக் கூடிய அரனாரின்; தான் மிகுந்த பூவுலகும் - கைலாயமும்;

*1649.* எங்கும் திசைபுவனம் எல்லாம் - எவ்விடத்தும், எல்லாத் திசைகளிலுள்ள உலகங்களிலும்; வளந்ததுவே < வளர்ந்ததுவே - உயிரினங்கள் இறவாமல் ஆயுள் நீண்டன; பா.வே. - 'புவிபுவனம்', 'நிறைந்தது வே' *(ச.ம.நூ.);*

*1650.* சீர் ஆரும் மார்க்கண்டன் - சிறப்பு விளங்கும் பாலகன்; செய்த தவசுதனாலே - மேற்கொண்ட சிவபூசையின் பயனாலே; பா.வே. - 'சீர்உறு' *(ச.ம.நூ.);*

*1651.* தார் ஆரும் எமபுர(ம்)ந்தான் - மணம் வீசும் மலர் மாலைகள் விளங்கும் எமலோகம்; பாழ்கிடந்ததுவே - பாழாகிக் கிடந்தது; பா.வே. 'தார் உறு', 'பாழாகி விட்டதுவே' *(ச.ம.நூ.);*

*1652.* பார்மீதில் ஓர் புதல்வன் பண்ணும் - பூமியில் ஓரிடத்தில் சிறுபாலகன் ஒருவன் செய்யும்; சிவதவசு - சிவபூசை; பா.வே. - 'தவசு எங்கும்' *(ச.ம.நூ., மா.தவநிலை);* 'தவமதனால்' *(கை.பிரதி);*

*1653.* சீர்மேவும் அண்டம் திசை எட்டும் - சிறப்பு விளங்கும் பல அண்டங்களின் எண் திசைகளிலும்; வீசியதே - பரவியதே; பா.வே. - 'மீறியதே' *(கை.பிரதி);*

*1654.* நல்லோர் இருந்த இடம் - சிவநேசச் செல்வர்களாகிய நல்லவர்கள் உள்ள இடத்தில்; நாதன் அருள் பெருகும் - இறைவனின் திருவருள் நிறைந்து விளங்கும்; பா.வே. - 'பொங்குகனல்' *(ச.ம.நூ.);*

*1655.* பொல்லார் இருந்த இடம் - பொல்லாதவர்கள் உள்ள இடம், பொங்குகனல் பட்டது - மிகுந்த தீபற்றி யெரிந்து பாழாகிய இடம்; ஒற்கும்< ஒக்கும் - போல விளங்கும்; பா.வே. - 'கனல் போற்றதுவே' *(மா.தவநிலை);*

காலன் புரத்தைக் கதவடைத்துத் தாழ்ப்பூட்டி
சீலமிகு கிங்கிலவர் சேரவே போயொளிற்றார்
வேதாவு முன்னாள் விதித்தபடி மானிடர்க்கு
ஆதரவாய் நூறு வயதுக் களவாகய[க்]
கலியுகத்தில் கட்டிவைத்தால் காயந் திசையடங்கும்
மெலியாமல் சாகாமல் மெத்த வளந்ததுவே
யெடுத்த சுருப மெண்பத்து நாங்காயிரமும்
அடுத்த சுருப மனேகமா யண்டமெங்கு[ம்]

1656. காலன் புரத்தை - எமபுரத்தை; கதவடைத்துத் தாழ்ப்பூட்டி - கதவுகளை மூடி, தாழிட்டுப் பூட்டி வைத்தனர்; பா.வே. - 'ஏமபுரத்தை' (மா.தவநிலை);

1657. சீலமிகு - சிறப்பு மிகுந்த; கிங்கிலவர் - கிங்கிலியர்; சேரவே போயொளிற்றார் - எல்லோரும் ஒன்று சேர்ந்து மறைந்து கொண்டனர் (ஒளிற்றார் < ஒளித்தார்); பா.வே. - 'சீலநிறை கிங்கரர்' (ச.ம.நூ.); (மா.தவநிலை, கை.பிரதி);

1658. முன்னாள் வேதாவும் - முன்னாளில் பிரமனும்; மானிடர்க்கு விதித்தபடி - மனிதர்களின் ஆயுளை வரையறுத்ததற்கு; பா.வே. - 'விதித்த வுடலை' (ச.ம.நூ.);

1659. ஆதரவாய் நூறு வயதுக்கு அளவாக - (அதற்கு) ஏற்றாற்போல் மானிடர்க்கு நூறு வயதளவும் ஆனபின்பும்; பா.வே. - 'மீதாக நூறு வயதுக்கு' (ச.ம.நூ.);

1660. கலியுகத்தில் கட்டி வைத்தால் - வயதானவர்களைக் கலியுகம் நடக்கும் போது கட்டிவைத்திருந்தால்கூட; காயம் திசை அடங்கும் - அவர்கள் உடம்பு மரணம் வந்து அடங்கிப் போய்விடும்; பா.வே. - 'கட்டிவைத்த நால் திசை' (ச.ம.நூ.); 'திசையெங்கும்' (மா.தவநிலை); 'திசையனைத்தும்' (கை.பிரதி);

1661. மெலியாமல் - உடம்பு மெலிந்து போகாமல்; சாகாமல் - மரணமும் வந்துறாமல்; மெத்த வளந்ததுவே - எல்லாம் நீடித்து வளர்ந்து கொண்டேயிருந்தன; பா.வே. - 'மெலிதலின்றி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1662. எடுத்த சுருபம் (< சுரூபம்) - உயிர்கள் ஒவ்வொன்றாக ஏடுத்துக்கொண்ட வடிவங்கள்; எண்பத்து நாங்காயிரம் (< நான்காயிரம்); பா.வே. - 'எண்பத்து நான்கு லட்சம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1663. அடுத்த - நெருங்கிய; சுருபம் (< சுரூபம்) - வடிவம்; அனேகமாய் அண்டமெங்கும் - அண்டங்கள் எல்லாவிடத்தும் (அவை நெருங்கி வளர்ந்தன);

நஞ்சுவிடமும் நோக்காடு நாடாது சீவனுக்கு
வஞ்சக்குலைகுற்று வெட்டில் மாளாது சீவனெல்லாம்
மெத்தப் பிரமன் மிகப்படைத்தான் பூவுலகில்
சத்துமொரு சீவன் சாகாது காரணமாய்
பிறப்பதுவே கோடி பிறந்து திரிவதல்லால்
இறப்ப தொன்றுமில்லை யிப்புவியி லண்டமெங்கும்
திட்டிப்பார் வேதன் சிறப்பாகச் சங்கரிக்க
அட்ட திசையி லருளெம னில்லாமல்
வீணுடலை விட்டு வெளியில் வளருமுடல்

1664. சீவனுக்கு - உயிருக்கு; நஞ்சு விடமும் - சாகடிக்கக் கூடிய கொடிய நஞ்சுகளும்; நோக்காடு - பயங்கரப் பிணிகளும்; நாடாது - அவற்றை நெருங்கா; பா.வே. - 'நோக்காது நாடாது' (ச.ம.நூ.);

1665. சீவனெல்லாம் - உடம்புகள் எல்லாம்; வஞ்சக் குலைகுற்று - வஞ்சகமாகக் கொலையுண்டு குத்துண்டு, (குற்று < குத்து; குலை < கொலை); வெட்டில் மாளாது - வெட்டினாலும் சாகா; பா.வே. - 'பஞ்சம், கொலை, குத்து வெட்டில் மாளாது' (ச.ம.நூ.);

1666. மெத்தப் பிரமன் - படைப்புத் தொழிலைச் செய்யும் பிரமாவும்; மிகப் படைத்தான் பூவுலகில் - பூமியில் தோன்றுமாறு மிகுதியான உயிரினங்களைப் பிறப்பித்தான்;

1667. சத்துமொரு< சற்றுமொரு - ஒன்றாவது; சீவன் சாகாது காரணமாய் - காரணத்துடன் எவரும் இறக்க மாட்டார்;

1668. பிறப்பதுவே கோடி - பிரமாவின் படைப்பால் கோடி அளவுள்ளவர்கள் பிறப்பர்; பிறந்து திரிவதல்லால் - உயிர்கள் பிறந்து வளர்ந்து பெருகுவதன்றி; பா.வே. - 'பிறப்பதுவோ எண்ணஅரிது' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1669. இப்புவியில் - இந்த உலகத்திலும்; அண்டம் எங்கும் - வேறு அண்டங்களிலும்; இறப்பது ஒன்றும் இல்லை - ஓர் உயிராவது மரணமடைவதில்லை; பா.வே. - 'இறப்பதொன்று கண்டதில்லை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1670. சிறப்பாகச் சங்கரிக்க - உயிர்கள் நன்முறையில் பிறக்க; திட்டிப்பார்< சிருஷ்டிப்பார் - படைப்பார்; வேதன் - பிரமா; பா.வே. - 'சிட்டித்தான்' (ச.ம.நூ.); 'சிருட்டிப்பான்' (கை.பிரதி);

1671. அட்டதிசையில் - எண்திசைகளில்; அருள் எமன் இல்லாமல் - மரணத்தை உண்டாக்கும் எமதர்மன் இறந்து விட்டதால் உயிர்களைக் கொல்ல யாருமின்றி; பா.வே. - 'அடர் யமன்' (ச.ம.நூ., கை.பிரதி);

1672. வீண் உடலைவிட்டு - உடம்புகளை நீங்கி; வெளியில் வளரும் உடல் - புறம்பாக நின்று வளர்ந்து உடம்புகள் பெருகும்;

## மூப்புற்ற உடல்களின் தோற்றம்

சாணளவி லெட்டுச் சமைந்த ஒடக்கதுவும்
ஒன்பது வாசலுக் கைகண் பிண்டமிது
1675 இன்பமிகு பாக்கியமு மிருந்துணர்வுக் கோர்பாண்டம்
நூறு வருஷம் நோர்பமுள்ள கூடிதுவும்
நூறு வயதப்பால் நுடங்கு மறிவகலும்
ஆக்கை கழன்று யானயுடம் பிளக
சேர்க்கைதசை தோல்நரம்பு சிறந்திருக்கும் பூட்டுவிட்டு

*1673. சாண் அளவில் எட்டு - எட்டுச் சாண் அளவுள்ள; சமைந்த - வளர்ந்த; ஒடக்கதுவும்< ஒடுக்கதுவும் - இறுக்கமான உடலதுவும்; பா.வே. - 'சமைத்த உடற்கதவும்' (ச.ம.நூ.); 'உடல்லிதுவும்' (மா.தவநிலை); 'உடலதற்கு' (கை.பிரதி);*

*1674. ஒன்பது வாசலுக் கைகண் - ஒன்பது நுழைவுகளைக் கொண்டும், கை கண் உடைத்தாயும் உள்ள; பிண்டமிது - இம் மனித உடம்பு வெறும் மாமிசத் துண்டமே; பா.வே. - 'உடைய நல்பிண்டமதில்' (ச.ம.நூ.); 'உகந்தகன்மபிண்டம்' (கை.பிரதி);*

*1675. இன்பமிகு பாக்கியமும் இருந்து - ஆயினும் அவ்வுடல் சிற்றின்பத்துக்குரிய தாயுமிருந்து; உணர்வுக்கோர் பாண்டம் - இன்ப உணர்வுக்கும் ஒரு பாத்திரமாக விளங்குகிறது; பா.வே. - 'இன்பமதில் செந்தீயிருந்து உணர்வு கொள் பாண்டம்' (ச.ம.நூ.); 'இன்பம் நுகர செங்குருதி யிருந்துலவு கூழ்பாண்டம்' (கை.பிரதி);*

*1676. நூறு வருஷம் - நூறு ஆண்டுகள்; நோர்பமுள்ள கூடு இதுவும் - வலிமையுள்ள வடிவம் இது ஆகும்; (நோர்பம் < நூர்பம்); பா.வே. - 'நூர்ப்பமுள்ள கூடுயிதுவும்' (மா.தவநிலை); 'நுணுக்கமுள்ள கூடுதிவும்' (கை.பிரதி);*

*1677. நூறு வயது அப்பால் - நூறு வயதைத் தாண்டிவிட்டாலோ; நுடங்கும் - தளர்வு அடையும்; அறிவு அகலும் - சிந்தனை குறைந்து பின் நீங்கிவிடும்; பா.வே. - 'முன்போல் நுடங்கு கட்டடை யாக்கைவிட்டு' (ச.ம.நூ.); 'கட்டுயாக்கைவிட்டு' (மா.தவநிலை); 'நூறுவயது சென்றால் நோக்காடுமே நோக்கி' (கை.பிரதி);*

*1678. ஆக்கை - உடம்பு; கழன்று - தசைகள் எலும்புகள் பிரிந்து; ஆன உடம்பு இளக - உடம்பானது தளர்ச்சியடைய; பா.வே. - 'அக்கையுடன் மூட்டு அடரும் பொருத்து இளகி' (ச.ம.நூ.); 'ஆனவுடல் பிழவாகி' (மா.தவநிலை); 'வலுவானவுடலிளகி' (கை.பிரதி);*

*1679. தசைதோல் சேர்க்கை - தோலும் தசையும் சேர்ந்த நிலையும்; நரம்பும் - நரம்பு எலும்புகளும்; சிறந்து இருக்கும் பூட்டு விட்டு -*

பூட்டுக் கழன்று பொருத்து மிசவுவிட்டு
தீட்டும் புகழ்க்கூடு சேர்ந்துமிகச் சுருக்கும்
நெருங்கி வளந்து நிமிர்ந்தவுடல் பூட்டுவிட்டு
சுருங்கி நெருங்கித் தோல்நரம்பு கொத்தளமாய்
மெத்தவே கூனு மிகுத்ததலை தட்டைமொட்டை
வத்துகின்ற மேலுடம்பு வாகான தேரைகள்போல்
ஆந்தை முழியு மட்டைதேரை தான்வடிவாய்

பொருத்துகளிலிருந்து விலகிநிற்கும்; பா.வே. - 'சக்கை... எலும்பு சேர்ந்த நரம்புவிட்டு' (ச.ம.நூ.);

1680. பூட்டு - பொருத்துகள்; கழன்று - இழுகி; பொருத்தும் - இசவு சேர்க்கைகளும்; இசைவு (< இசைவு); விட்டு - அவை கழன்று; பா.வே. - 'அசைவு விட்டு' (கை.பிரதி);

1681. தீட்டும் புகழ்க் கூடு - நல்ல வடிவமாகத் தீட்டவல்ல மனிதக் கூடானது; சேர்ந்து மிகச் சுருக்கும் - எல்லாம் சேர்ந்து குறுகும்; பா.வே. - 'சிதறிச் சுருங்கிச் சுருங்கி' (ச.ம.நூ., மா.தவநிலை); 'சுருக்கே விழுந்து' (கை.பிரதி);

1682. நெருங்கி - அடுத்தடுத்து; வளந்து< வளர்ந்து - பெருகி; நிமிர்ந்த உடல் பூட்டுவிட்டு - வளர்ந்த உடல் மெலிந்து பொருத்துகள் கழன்று விழவும்; பா.வே. - 'உடற்கட்டு விட்டு' (ச.ம.நூ.);

1683. சுருங்கி - தசைதோல் முதலியன குறுகி; நெருங்கி - சுருங்கி யவை மிக மிக அடுத்து; தோல் நரம்பு கொத்தளமாய் - தோலும் நரம்புகளும் சுருண்டும் புடைத்தும் விளங்கி; பா.வே. - 'கொத்தளமாய்' (ச.ம.நூ.);

1684. மெத்தவே கூனும் - வளைந்த உடலுடனும்; மிகுந்ததலை - தலையோ; தட்டை மொட்டை - தட்டையாகவும், வழுக்கை விழுந்தும் ஆகி; பா.வே. - 'சொட்டை மொட்டை' (கை.பிரதி);

1685. வத்துகின்ற மேல் உடம்பு - சுருங்குகின்ற உடம்பானது; வாகான தேரைகள் போல் - உடம்பும் காலும் மெலிந்து காணப்படும் தேரைத்தவளை போன்று ஆகி; (வத்து< வற்று); பா.வே. - 'தேரையன்' (ச.ம.நூ.); 'மேலும் புழுவான தேரையைப் போல்' (கை.பிரதி);

1686. ஆந்தை முழியும் - ஆந்தையின் கண்களைப்போல் முன்னே துருத்திய கண்களுடன்; அட்டை தேரைதான் வடிவாய் - அட்டை எனும் உயிரினம் போன்று சுருங்கியும், தேரை போன்று மெலிந்தும் ஆகி; பா.வே. - 'அடற் தேரைதன்' (ச.ம.நூ., மா.தவநிலை); 'அரைத் தேரைக் கண்' (கை.பிரதி);

மந்தர தேவாங்கின் வடிவாயுடல் மெலிந்து
இருந்த யிடம்விட்டு எழுந்திரிக்க மாட்டாமல்
வருந்தியே சீவன் மயங்கிப் பரதவிக்கும்
துருத்திபோல் வத்திச் சுரித்தவுடல் சீவன்
வருத்தமுட னுழன்று வருந்திப் பரதவிக்கும்
புகையி லகப்பட்ட பு[த்]துநாகம் போலுழன்று
திகைமுட்டிச் சீவன் தியங்கி யறிவழிந்து
மெலிந்து கலங்கி மெலியுமிவர் களைத்தான்

*1687.* மந்தர தேவாங்கின் வடிவாய் உடல் மெலிந்து - விழிகள் மட்டும் பெரிதாயுள்ளதும் வைத்தியத்துக்குப் பயன்படுவதுமான தேவாங்கு எனும் சிறுவிலங்கினைப் போன்று ஆகி; பா.வே. - 'மாந்தர்' *(ச.ம.நூ.);*

*1688.* இருந்த இடம்விட்டு எழுந்திரிக்க மாட்டாமல் - தாமிருந்த இடத்திலிருந்து அசையக் கூட முடியாதவாறு; (எழுந்திரிக்க< எழுந்திருக்க);

*1689.* வருந்தியே சீவன் - உயிருள்ள உடம்புகள் எல்லாம் வேதனையடைந்து; மயங்கிப் பரதவிக்கும் - நிலைகுலைந்து ஒன்றும் செய்யவியலாது வருந்தும்; பா.வே. - 'உடல் சீவன் மறுகிப் பரிதவிக்கும்' *(ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);*

*1690.* துருத்திபோல் - காற்று இழந்த துருத்திகளைப் போல; வத்தி< வற்றி - சுருங்கி; சுரித்தவுடல் சீவன் - சுருங்கிய உடல்களுடன் உயிர்கள் எல்லாம்; பா.வே. - 'சுருண்ட உடல்கள எல்லாம்' *(ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);*

*1691.* வருத்தமுடன் உழன்று - வேதனையுடன் இருந்து; வருந்திப் பரதவிக்கும் - ஒன்றும் செய்ய முடியாது நிலைகுலையும்; பா.வே. - 'மயங்கி (மருகி - கை.பிரதி) மேல் மூளப்பாய்' *(மா.தவநிலை, கை.பிரதி);*

*1692.* புகையில் அகப்பட்ட பு[த்]து நாகம்போல் - புடைக்குள்ளிருக்கும் நாகப்பாம்பு புகைவந்துற்றால் மூச்சுத் திணருவது போன்று; உழன்று - திணரி; (புத்து< புற்று); பா.வே. - 'போல் உலைந்து' *(ச.ம.நூ.);* 'பூநாகம்' *(மா.தவநிலை, கை.பிரதி);*

*1693.* திகைமுட்டிச் சீவன் தியங்கி - உயிர்கள் செல்வதற்குப் போக்கிடமின்றித் தத்தளித்து; அறிவழிந்து - சிந்திக்கும் ஆற்றலை இழந்து; பா.வே. - 'தியங்கி யிருமி நொந்து' *(மா.தவநிலை);* 'தகைமுட்டி' *(கை.பிரதி);*

*1694.* மெலிந்து கலங்கி - உயிர்கள் வாடி, உள்ளம் வருந்தி; மெலியும் உயிர்களைத்தான் - வாடிவருந்தும் சீவன்களை;

1695 வலியப் பிடித்து வளர்கழுத்தை வெட்டிகிலும்
தலையிலுள்ள சீவன் தலையில்நின்றே தான்துடிக்கும்
மலையுமுடல் சீவன் மறுகியுடலிற் துடிக்கும்
அந்தப் படியே யழன்றிருந்தார்க் காலம்

**முதுமக்கள் தாழி ஏற்பட்ட வரலாறு**

கந்தமொரு வீட்டில் கனக்கநரு ளாயிரமாம்
1700 சாவிடைக்கு நாறிச் சாவில்லா மானிடர்க்கு
ஆவமாய்ப் புலால் ஆகமெங்குந் தான்வீச

1695. வலியப் பிடித்து - வலிந்து கைப்பற்றி; வளர்கழுத்தை - வளர்கின்ற கழுத்தினை; வெட்டிகிலும்< வெட்டுகிலும் - அறுத்தாலும்; பா.வே. - 'அவர் கழுத்தை' (ச.ம.நூ.); 'வண்கழுத்தை' (மா.தவநிலை);

1696. தலையில் உள்ள சீவன் - தலையில் இருப்பதான உயிரானது; தலையில் நின்றேதான் துடிக்கும் - கழுத்தை வெட்டினாலும் கழுத்துக்கு மேலுள்ள உயிர் தலையிலிருந்தே துடித்துக் கொண்டிருக்கும்; பா.வே. - 'தலையிலிருந்தே' (ச.ம.நூ.);

1697. மலையும் உடல் சீவன் - கழுத்துக்குக் கீழேயுள்ள துடிக்கும் முண்டத்தில் உள்ள உயிரானது; மறுகி உடலிற் துடிக்கும் - வருந்தி உடலில் நின்றே துடித்துக் கொண்டிருக்கும்; பா.வே. - 'வலையில் உடல்' (ச.ம.நூ.); 'வலியவுடல்' (மா.தவநிலை); 'வளையவுடல்' (கை.பிரதி);

1698. அந்தப் படியே அழன்றிருந்தார்க் காலம் - தலையிலிருந்தும் உடலிலிருந்தும் உயிர்கள் துடித்துக் கொண்டிருந்தவாறே பலர் வேதனை யடைந்து பலகாலம் வாழ்ந்து கொண்டிருந்தனர்; பா.வே. - 'அடர்ந்திருந் தார்' (மா.தவநிலை, கை.பிரதி); 'சீவரெல்லாம்' (கை.பிரதி);

1699. கந்தம் ஒரு வீட்டில் - நெருக்கமான வீடுஒன்றில்; கனக்க நருள் ஆயிரமாம் - மிகுந்த மனிதர்கள் ஆயிரம் பேர் யாரும் இறவாமல் வாழ்ந்தனர்; (நருள்< நரள்); பா.வே. - 'காணுதிஒர் ஆயிரமாம்' (ச.ம.நூ.); 'கந்தன் யருள்வீட்டில்' (மா.தவநிலை);

1700. சாவிடைக்கு நாறி - சாகும் அளவிற்கு உடம்புகள் சவக்களை யால் நாற்றமெடுத்து; சாவில்லா மானிடர்க்கு - காலன் இல்லாததால் மரணமில்லாது வாழ்ந்து வரும் மனிதர்களுக்கு; பா.வே. - 'சவவிடக்கு நாறி' (ச.ம.நூ.); 'சாவக்குணம்திடம்' (மா.தவநிலை);

1701. ஆவமாய்ப் புலால் - துர்நாற்றமாய் மனித உடம்பிலுள்ள மாமிசம்; ஆகம் எங்கும் தான்வீச - உடம்பு முழுதும் நாற்றமெடுக்கவும்; பா.வே. - 'புணனாத்தம்' (மா.தவநிலை);

சஞ்சார மில்லாத வீடொன்றில் தான்போட்டு
செஞ்சாறுஞ் சோற்குழைத்துத் தின்னக் கொடுப்பார்கள்
யிந்தப் படியு மிருந்துவெகு னாளானால்
அந்த மனுத ரடங்கலுமோ தான்கூடி
பலனாளைத் துக்கமதில் ஒருநாளைத் துக்கம்நன்று
தலமான பாரிற் தான்புதைக்க வேணுமென்று
முதுமக்கள் தாழி முறைமையுடன் சமைத்து
பதிமொக்க மானிடரைப் பாங்காயதினுள் வைத்து
விந்தையுடன் மண்ணை விரைவாகவே தோண்டி

1702. சஞ்சாரம் இல்லாத வீடு ஒன்றில் - ஆளரவம் இல்லாத ஓர் இல்லத்தில்; தான் போட்டு - அப்படிப்பட்ட உடல்களை இட்டு; பா.வே. - 'சஞ்சாரம் பண்ணாத' (ச.ம.நூ., மா.தவநிலை);

1703. செஞ்சாறும் சோற் குழைத்து - சிவந்த குழம்புடன் சோற்றைப் பிசைந்து; தின்னக் கொடுப்பார்கள் - அவ்வாறான மனிதர்கள் உண்ணு மாறு அளிப்பர்; பா.வே. - 'சஞ்சாரமாய்க் கிடத்தி' (மா.தவநிலை, கை.பிரதி);

1704. இந்தப் படியும் இருந்து - இவ்வாறு சாகாமல் இருந்து; வெகுநாள் ஆனால் - பலகாலம் ஆனாலும்; பா.வே. - 'வெகுகாலம்' (ச.ம.நூ.); 'வெகுநாளாய்' (மா.தவநிலை, கை.பிரதி);

1705. அந்த மனுதர் அடங்கலுமோ - அவ்வாறான மனிதர் எல்லா ரும்; தான் கூடி - சேர்ந்து; (மனுதர் < மனிதர்);

1706. பல நாளைத் துக்கமதில் - பல நாள்கள் துக்கப் படுவதைக் காட்டிலும்; ஒரு நாளைத் துக்கம் நன்று - ஒரேநாளில் முடிந்துவிடக் கூடிய வருத்தம் நல்லது ஆகும்;

1707. தலமான பாரில் தான்புதைக்க - மண்ணுக்குள் குழிதோண்டி வைத்து; வேணுமென்று < வேண்டும் என்று - மூடிவிடவேண்டும் என; பா.வே. - 'புதைக்கத்தோசம்' (ச.ம.நூ.);

1708. முதுமக்கள் தாழி - முதியவர்களை வைத்து அடக்கம் செய்வதற் கான அகன்ற மட்பாத்திரம்; முறைமையுடன் சமைத்து - முறையாக உண்டாக்கி; பா.வே. - 'முகமதக் காத்தானி' (ச.ம.நூ.);

1709. பதிமொக்க மானிடரை - வீடுமுழுவதுமுள்ள சாகாத முதுமக் களை; பாங்காய் அதினுள் வைத்து - வாகாகத் தாழிக்குள் இருக்க வைத்து, அடக்கம் செய்து; பா.வே. - 'மதமதக் காத்தாளி என்று மானிடர் அடங்குவது' (ச.ம.நூ.);

1710. விந்தையுடன் மண்ணை விரைவாகவே தோண்டி - தாழிகள் அமையும் விதத்தில் மண்ணுக்குள்ளே குழிபறித்து; பா.வே. - 'விதமாக வே' (மா.தவநிலை, கை.பிரதி);

சிந்தைமிகு பேரைச் சிறப்பாய்[ப்] பொதைத்தார்கள்
பாங்கிணறு தானிறையப் பண்பா மானிடரை
தாங்கி மிகப்போட்டுத் தான்மூடுவார் சிலபேர்
சாம வேதயெமன் தான்பிழைக்க வேணுமென்று
பூமிதானம் பண்ணிவைத்தார் போதமிகு மானிடரை
அந்தப்படி சீவ னடங்கலுமோ சாகாமல்
விந்தைமிகு பார்கீழ் மிகுந்துவெகு பேரிருந்தார்

**பூலோக பாரம் மிகுதல்**

கூத்தனவ னில்லாமல் குவலையத்திலே வெகுவாய்

1711. சிந்தை மிகுபேரை - சாகாத மானிடரை; சிறப்பாகவே - நல்ல முறையில்; பொதைத்தார்கள்< புதைத்தார்கள் - மண்ணுக்குள் மூடினார்கள்; பா.வே. - 'கனபோரை' (மா.தவநிலை); 'பலபேரை' (கை.பிரதி);

1712. பாங்கிணறு< பாழுங்கிணறு - பாழ்அடைந்த, உபயோகமின்றித் தூர்ந்த கிணறு; தான் நிறைய - நிறைந்து வழியும் அளவிற்கு; பண்பா மானிடரை - ஒழுங்காக அம் மனிதர்களை; பா.வே. - 'பாங்குழி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1713. தாங்கி மிகப்போட்டு - கைத்தாங்கலாய்க் கொண்டு வந்து கிணற்றுள் இட்டு; தான் மூடுவார் சிலபேர் - வேறு சிலர் இவ்வாறு மனிதர்களை அடக்கம் செய்வர்;

1714. சாமவேத எமன் - கருமை நிறங்கொண்ட காலன்; தான் பிழைக்க வேணும் என்று - மீண்டும் உயிர்பெற்று வந்து உயிர்களை மரணமடையச் செய்ய வேண்டும் என; ஒப்பிடுக: 'சாமவேதபாலன்' (1077);

1715. போதமிகு மானிடரை - ஆறறிவுள்ள மனிதர்களை; பூமிதானம் பண்ணிவைத்தார் - மண்ணுக்குக் கொடையாக மிகுதியான அவர்களை வழங்கினர் (புதைத்தனர்);

1716. அந்தப்படி சீவன் - அவ்வாறும் உயிர்கள்; அடங்கலுமோ சாகாமல் - எல்லாமும் இறவாமல்; பா.வே. - 'அந்தப்படி புதைத்து' (கை.பிரதி);

1717. விந்தைமிகு பார் கீழ் - விநோதம் நிரம்பிய மண்ணுக்குள்; மிகுந்து வெகு பேரிருந்தார் - மிகுதியான மனிதர் இறவாது உயிர்த்துடிப்பில் சாகாமல் இருந்தனர்; பா.வே. - 'விந்தை நிறை பார்க்கின்' (ச.ம.நூ.);

1718. கூத்தன் அவன் இல்லாமல் - (452) எமன் இல்லாது; குவலையத்திலே வெகுவாய் - பூமியில் மிகுதியாக; பா.வே. - 'கூத்தன் எமன் ... குளம்புவி அண்டமெல்லாம்' (ச.ம.நூ.);

நாத்தம் பெருத்து நற்பூமி பாரமிஞ்சி
பூலோக மெங்கும் பொறுக்க முடியாமல்
தாலோக பாதாளந் தாங்கரிதா யிப்பாராம்
பூமி பொறுக்கரிதாய்ப் பூவையவள் மயங்கி
காமன்றனைக் காய்ந்த கண்ணுதலே தஞ்சமென்றாள்

**பூமியைச் சுமக்கும் அரவும் கரியும் ஆமையும் அஞ்சுதல்**

அரவு சுமைகனத்து ஆத்த முடியாமல்
பரவும் புவினாகம் பாரம்பெருத்தே யுயிர்த்து
சேட னளன்று சிறந்தகரி மேல்நெருங்க

1719. நாத்தம்< நாற்றம் - வீச்சம்; பெருத்து - மிகுதியாகி; நற்பூமிபா ரம் மிஞ்சி - சுத்தமாக இருந்த நல்ல பூமியானது நாற்றமெடுத்த சடலங்களின் பாரத்தால் கனமாகி; பா.வே. - 'மிகப்பெருத்து நாற்றிசை யும் பாரம்' (ச.ம.நூ.); 'நருள்கள் கனதிபாரம் மிஞ்சி' (மா.தவநிலை); 'நரர்' (கை.பிரதி);

1720. பூலோகம் எங்கும் - உலகம் எங்கணும்; பொறுக்க முடியாமல் - கனம் அதிகரித்து, சுமக்க இயலாமல்;

1721. தாலோக பாதாளம்< தால் உலக பாதாளம் - பூமியும் அதற்குக் கீழே இருப்பதான பாதாள உலகமும்; தாங்க அரிதாய் இப்பாராம் - சுமக்க இயலாது துன்பப்பட்டன; பா.வே. - 'தாங்கரிதாமிப்பாரம்' (ச.ம.நூ.);

1722. பூமி பொறுக்க அரிதாய் - பூபாரம் தாங்க இயலாமல்; பூவை அவள் மயங்கி - பூமாதேவி நிலைகுலைந்து; காண்க: 'பூவை' (1739);

1723. காமன் தனைக் காய்ந்த கண்ணுதலே - (1357) மன்மதனைத் தீப்பொறியால் எரித்த நெற்றிக் கண்ணர் சிவனே; தஞ்சம் என்றாள் - உன் அடைக்கலம் என்று முறையிட்டாள்;

1724. அரவு - பூமியைத்தாங்கும் பாம்பு; சுமைகனத்து - பூபாரம் அதிகரித்து; ஆத்த< ஆற்ற - சுமக்க; முடியாமல் - இயலாமல்;

1725. பரவும் புவிநாகம் - படம் விரித்து நகரும் பூ அரவம்; பாரம் பெருத்தே உயிர்த்து - கனம் அதிகரித்துப் பெருமூச் செறிந்து; பா.வே. - 'பரவு வலுசேடன்' (ச.ம.நூ.); உரைத்து' (மா.தவநிலை); 'பொறுக்காம லுழன்று' (கை.பிரதி);

1726. சேடன் - பூமியைத்தாங்கும் அரவு; அழன்று - வருந்தி; சிறந்த கரிமேல் நெருங்க - திசைகளிலுள்ள யானைகள் மேல் பாரத்தை விடுவதற்குச் செல்ல; பா.வே. - 'உழன்று சினந்து' (ச.ம.நூ.); 'உழன்று' (மா.தவநிலை, கை.பிரதி);

ஆடரவந் தாங்கரிதாய் யானை மிகநெழிய
நாகத்தைத் தாங்கரிதாய் நாகமெட்டுந்தான் கலங்கி
வேகத்துடன் துதிக்கை வீசி யகோரமுற்று
பொங்கு கரியெட்டும் புகழாமை தன்முதுகில்
தங்கி வலுத்துரத்து தானின்ற யாமையது
நீரில்முங்கித் தானெழும்பும் நினவுதடுமாறி நொந்து
வீரியமாய்ப் பின்னு மிகுந்தெழும்பித் தான்சுமக்கும்
பாதாள யாமை பரந்து கிரியாவும்

*1727.* ஆடு அரவம் தாங்க அரிதாய் - ஆடுகின்ற பாம்பின் பாரத்தைத் தாங்க இயலாது; யானை மிக நெழிய - திசையானைகள் அசையவும்; பா.வே. - 'நாகமெட்டுந்தான் கலங்கி' (ச.ம.நூ.);

*1728.* நாகத்தைத் தாங்க அரிதாய் - பாம்பின் பாரத்தையும் சேர்த்துச் சுமக்க இயலாமல்; நாகம் எட்டும்தான் கலங்கி - திசையானைகள் எட்டும் வருந்தவும்; பா.வே. - 'நல்லகரிமெட்டும்' (மா.தவநிலை);

*1729.* வேகத்துடன் துதிக்கை வீசி - விரைவாகத் தம் தும்பிக்கைகளை அசைத்து; அகோரமுற்று - தம் இயல்புகளிலிருந்து கொடுமை யடைந்து; பா.வே. - 'வீசியகோபமுற்று' (ச.ம.நூ.);

*1730.* பொங்குகரி எட்டும் - அவ்வாறு அகோரம் உறும் திசையானை கள் எட்டும்; புகழ் ஆமை தன் முதுகில் - பூலோகத்தைத் தன் முதுகில் சுமந்து கொண்டிருப்பதான ஆமையின் முதுகில்;

*1731.* தங்கிவலுத்து உரத்து தான்நின்ற யாமையது - அதிகமாக அழுத்துமாறு நிற்கவும் அதனை ஏற்றுக்கொண்ட ஆமையானது;

*1732.* நினவு < நினைவு - சுயநினைவு; தடுமாறி நொந்து -தவறியும் மிகவும் வருந்தியும்; நீரில் முங்கித்தான் எழும்பும் - தான் படுத்திருக்கும் நீரில் அமிழ்ந்தும் எழுந்தும் நிலை குலையும்; பா.வே. - 'தடுமாறு உன்னி' (ச.ம.நூ.);

*1733.* வீரியமாய்ப் பின்னும் - சுமக்க வேண்டும் என்ற வேகத்துடன் மீண்டும்; மிகுந்து எழும்பித்தான் சுமக்கும் - நீரிலிருந்து மேல் எழுந்து பூமியைத் தன் முதுகில் சுமந்து கொண்டிருக்கும்; பா.வே. - 'வீரியமதாக வெண்டு உரத்தே' (ச.ம.நூ.);

*1734.* பாதாள ஆமை - பூமியைத்தன் முதுகில் சுமக்கும் பாதாளத்து ஆமை அவ்வாறு; பரந்து - அசையவும்; கிரியாவும் - அதன் முதுகில் அச்சாக நிற்கும் மலைகள் எல்லாம்; பா.வே. - 'படர்ந்தகரியரவும்' (மா.தவநிலை);

சீதாள பாரிற் திடுக்கிட் டிடிபோலதிரும்
பாரமிகுதி யினால் பைய்நாகந் தாங்கரிதாய்

**சேடன் பூமாதேவியிடம் உரைத்தல்**

சீர்மேவுஞ் சேடன் சிரங்கனத்து யுள்ளுடைந்து
பொங்குவலு பூமி புகழ்மாதைத் தான்னோக்கி
மங்கையே பூவை மலரின்விழி மாதே
இன்றுசனம் வந்த திதுயேது பார்மாதே
என்றுதான் சேட னிவைகேள்க்கப் பூமிசொல்வாள்
மார்க்கண்டன் றன்னால் மறலிதனை யீசுபரன்
தாக்குடனே கொண்டுவிட்டான் தானிறந்தான் மாமறலி

*1735. சீதாள பாரில் - (< சீதளம்) குளிர்ச்சி நிரம்பிய உலகில்; திடுக்கிட்டு - 'திடுக்' எனப்பயந்து; இடிபோல் அதிரும் - மலைகள் அசைதலின்போது பூமியில் இடியோசை போல் கேட்கும்;*

*1736. பாரமிகுதியினால் - மனிதர்களின் மிகுந்த பெருக்கத்தால்; பைய்நாகம் - அரவு; தாங்க அரிதாய் - பூமியைத் தாங்கிக் கொள்ள இயலாமல்; பா.வே. - 'பயநாகம்' (ச.ம.நூ.);*

*1737. சீர்மேவும் சேடன் - புகழுடைய ஆதிசேடனானது; சிரம்கனத்து - தலைச்சுமை அதிகரித்து; உள் உடைந்து - உள்ளம் நொந்து; பா.வே. - 'சீரில் வருசேடன்' (ச.ம.நூ.); 'நிறைசேடன்' (மா.தவநிலை);*

*1738. பொங்கு வலு பூமி - அதிகப் பொறுமையுள்ள பூமாதேவியான; புகழ்மாதைத் தான் நோக்கி - புகழுடைய அவளைப் பார்த்து; பா.வே. - 'பொங்கும் பாதாள மென்னும் பூமாதை' (ச.ம.நூ.);*

*1739. மங்கையே பூவை - பூமாதேவியே; மலரின் விழிமாதே - மலர்போன்ற அழகான விழிகளை உடைய பெண்ணே; பா.வே. - 'மால்தேவி' (கை.பிரதி);*

*1740. இன்று சனம் வந்தது - இன்று மக்கள் பாரம் ஏற்பட்டது; இது ஏது பார்மாதே - இது ஏன் இவ்வாறு நடக்கிறது, பூமாதே; பா.வே. - 'கனதி வந்த வகை' (மா.தவநிலை); 'கனம் வந்த காரணம்' (கை.பிரதி);*

*1741. என்று தான்சேடன் இவை கேள்க்க - காரணத்தை ஆதிசேடன் பூ மடந்தையிடம் கேட்கவும்; பூமி சொல்வாள் - பூமகள் அதற்கான காரணம் உரைப்பாள்; பா.வே. - 'என்று அரவம் இயம்ப' (ச.ம.நூ., கை.பிரதி); 'அரவம் கேள்க்க' (மா.தவநிலை);*

*1742. மார்க்கண்டன் தன்னால் - சிறுவனுக்காக; மறலிதனை ஈசுபரன் - இறைவன் எமதர்மராசனை; பா.வே. - 'மார்க்கண்டனுக்காக' (ச.ம.நூ.);*

*1743. தாக்குடனே - சிவபக்தனான சிறுவனைப் பிடிக்க வந்ததற்காகக் கோபமுற்று எதிர்த்து; கொண்டுவிட்டான்< கொன்றுவிட்டான் - உதைத்*

சண்ட னிறந்தான் தரணியுயிர் மாள்வதில்லை
எண்டலையில் பாரம் மெனக்குப் பொறுக்கரிது
என்றுதான் மாது யிவையுரைக்கவே சேடன்
நன்றுதா மாதே நளினமுடன் காலனையும்
பொங்கமுட னெழுப்பாய் பொங்குங் கனதிதன்னை
தங்குபுகழ்க் காலன் றவிப்பானென வுரைத்தான்
அந்தவுரை கேட்டு யரவினையு மேதுசொல்வாள்
கந்தனய்யா கொன்றுவிட்ட காலன்றனை யெழுப்ப

துச் சாகடித்துவிட்டான்; தானிறந்தான் மாமறலி - எமனும் இறந்துபோவான்; பா.வே. - 'தார்க்கண்டமீறு மொருதாளதனால்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1744. சண்டன் இறந்தான் - எமன் இறந்துபோனான்; தரணியுயிர் மாள்வதில்லை - அவனால் கொல்லப்படும் உலகினர் யாரும் இறப்பதில்லை; பா.வே. - 'மடிந்தான்' (மா.தவநிலை, கை.பிரதி);

1745. எண்டலையில்< என்றலையில்< என் தலையில் - என் சிரசு மீது; பாரம் - கனம்; எனக்குப் பொறுக்கரிது - என்னால் தாங்க முடியவில்லை; பா.வே. - 'எண்டிசையில் பாரமிஞ்சி இடுகாடு நாடாச்சு' (ச.ம.நூ.); 'எண்டிசையில் பாரம்' (மா.தவநிலை, கை.பிரதி);

1746. என்றுதான் மாது இவை உரைக்கவே - இவ்வாறு பூமாது கூறவும்; சேடன் - ஆதிசேடன்;

1747. நன்றுதான் மாதே - நீங்கள் சொன்னது நல்லதுதான்; நளினமுடன் காலனையும் - இறந்துபோன எமனை எளிதாக;

1748. பொங்கமுடன் எழுப்பாய் - (காலனை) விரைவாக உயிர் எழுப்புங்கள்; பொங்கும் கனதிதன்னை - மேலும் மேலும் கூடும் பூபாரத்தை; பா.வே. - 'பொங்கும் மறலிதனை' (கை.பிரதி);

1749. தங்கு புகழ்க்காலன் - புகழ்நிலைத்திருக்கக் கூடிய எமன்; தவிப்பான்< தவிர்ப்பான் - உயிர்களைக் கொன்று அதை நீக்குவான்; என உரைத்தான் - ஆதிசேடன் இவ்வாறு கூறினான்;

1750. அந்த உரை கேட்டு அரவினையும் - இவ்வாறான ஆலோசனையைக் கேட்டு, சேடனிடம்; ஏது சொல்வாள் - பூமாது கூறுவதாவது; பா.வே. - 'ஆயிளை' (மா.தவநிலை); 'ஆரணங்கு ஏதுரைப்பாள்' (கை.பிரதி);

1751. கந்தன் அய்யா - சிவ பெருமான்; கொன்றுவிட்ட - சாகடித்துவிட்ட; காலன்தனை எழுப்ப; பா.வே. - 'அய்யர்' (ச.ம.நூ.);

என்னால் முடியா தெனவுரைத்தாள் பூமாது
அன்னாளில் சேட னழன்றுபின்னு மேதுரைப்பான்
நன்று சிவன்பாதம் நாடியே னீயணுகி
நின்று முறையிட்டு நிமலனுட னுரைற்று
தங்கு வலுயெமன் றனையெழுப்பு மென்றுரைத்தார்

**பூமாதேவி திருமாலைக் காணச் செல்லுதல்**

பொங்கு மரவுரைக்கப் பூமாது நல்லதென்று
மண்ணுலகில் மாய்கை யுருவாம் மனுயுருவாய்
பெண்ணுருவங் கொண்டு பிறப்பட்டாள் பூமாது
ஆடரவஞ் சூடுகின்ற யரனை நிலமாது

1752. என்னால் முடியாது - எமனை எழுப்ப என்னால் இயலாது; எனஉரைத்தாள் பூமாது - பூமாதேவி இவ்வாறு கூறினாள்; பா.வே. - 'என்னால் முடியும்மதோ' (மா.தவநிலை);

1753. அன்னாளில் - அப்போது; சேடன் அழன்று - அரவு வருந்தி; பின்னும் ஏதுரைப்பான் - மேலும் உரைப்பதாவது;

1754. நன்று - நீங்கள் உரைத்தது நல்லது; சிவன் பாதம் நாடியே நீ சென்று - சிவபெருமானின் திருவடிகளை நீங்கள் சென்று தேடி;

1755. நின்றுமுறையிட்டு - அவர்முன் சென்று நின்று தொழுது உங்கள் குறைகளைக் கூறி; நிமலனுடன் - சிவனிடம்; உரைற்று உரைத்து - சொல்லி;

1756. தங்குவலு எமன் தனை - வலிமை விளங்கக் கூடிய காலனை; தனை எழுப்பும் என்றுரைத்தார் - மீண்டும் உயிர்பெற்று எழச்செய்யும் என ஆதிசேடன் கூறினான்;

1757. பொங்கும் அரவு உரைக்க - விரிந்து எழும் ஆதிசேடன் இவ்வாறு கூறவும்; பூமாது நல்லது என்று - நீ கூறிய அறிவுரை நல்லது எனப் பூமாதேவியும்;

1758. மண்ணுலகில் மாய்கை உருவாம் - இப்பூமியில் மயக்கந்தரும் உருவமான; மனுஉருவாய் - மானிட உருவாய் பா.வே. - 'மன்னுருவில்' (ச.ம.நூ.);

1759. பெண் உருவங்கொண்டு - பெண்வேடம் பூண்டு; பிறப்பட்டாள் புறப்பட்டாள் - சிவனைத் தேடிச் சென்றாள்; பூமாது - பூமாதேவி;

1760. ஆடுஅரவம் சூடுகின்ற அரனை - படம் விரித்து ஆடும் பாம்பினை அணிகலனாகச் சூடியுள்ள இறைவனை; நிலமாது - பூமா தேவி;

தேடியே சுத்தித் திரிந்தெங்குங் காணாமல்
ஆடிதனைக் காணரிது யாழியிடம் போவோமென
நாடியே பாற்கடலில் நாயகன்பால் சென்றுரைப்பாள்

**திருமால் அவதாரச் செய்திகள்**

நாராயண னாரே நான்முகனார் தந்தையரே
வீரமிகு வெண்ணை வெத்திகொள்ளுஞ் சேவகனே
பச்சை வண்ணன்றன்மேனி பவளயிதழ் தாமரையில்
லச்சிமியை மார்பில்வைத்த லட்சிமி நாராயணனே
மாவிலி வாணன் வளர்சிரசில் காலைவைத்து
தாவியொரு பாதந் தனைநீட்டி யந்தரத்தில்

1761. தேடியே - எங்கும் பார்த்து; சுத்தி< சுற்றி - திரிந்து; திரிந்து எங்கும் காணாமல் - பலவிடத்தும் அலைந்தும் பார்க்கமுடியாமல்;

1762. ஆடிதனை - நாட்டிய மாடும் சிவனை; காணரிது - வேதனும் மாலும் காணவியலாத இறைவனை நம்மாலும் பார்க்க இயலாது; ஆழியிடம் - கடல் விண்ணனான திருமாலிடம்; போவோம் என - சென்று சொல்லுவோம் என்று; பா.வே. - 'ஆண்டிதனைக் காணயரிதாய்' (மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'ஆழி' (1792, 1905);

1763. நாடியே - தேடி; பாற்கடலில் நாயகன்பால் - தன் மணாளனான திருமால் சயனம் கொண்டிருக்கின்ற பாற்கடலில்; சென்று உரைப்பாள் - போய் நடந்தவற்றைப் பூமாதேவி கூறுவாள்;

1764. நாராயணனாரே - (879) கணவரே; நான்முகனார் - பிரமாவை; தந்தையரே - ஈன்றெடுத்தவரே;

1765. வீரமிகு - மிகுந்த ஊட்டமுள்ள; வெண்ணை - வெண்ணெயை; வெத்திகொள்ளும்< வெற்றிகொள்ளும் - மிகுதியாக உண்டுகளித்த; சேவகனே - பாண்டவர்களின் துணைவனே; இது கிருஷ்ணாவதாரம்;

1766. பச்சை வண்ணன்றன்மேனி - பச்சை நிற வண்ணத்தானே; பவள இதழ் தாமரையில் - பவளம் போன்ற நிறமுடைய தாமரைப்பூவில்;

1767. லச்சிமியை< லட்சுமியை - திருமகளை; மார்பில்வைத்த - நெஞ்சில் வைத்துள்ள; லட்சிமி நாராயணனே - லட்சுமி எனும் திருமகள் பெயரால் சிறப்படைந்தவனே;

1768-1769. மாவிலி வாணன் - மாபலி சக்கரவர்த்தியின்; வளர்சிரசில் - புகழ் வளர்கின்ற அவன் தலையில்; காலை வைத்து - பூமியையும் வானையும் ஈரடியால் அளந்து மூன்றாவது அடிக்கு இடமாக அவன் தலையில் ஒருகாலைவைத்துப் பூமிக்குள் அமுக்கினார்; தாவியொரு

1770 செங்கை சிதறுங் கிருவை மறைமுதலே
தங்குதரி செங்கை தாமரைக்கண் மாலவனே
இரணியன்தன் மார்பை இமைத்து முழிப்பளவில்
தரமுகிராலே பிளந்து சதையும் விரித்தோனே

பாதம் அந்தரத்தில் தனை நீட்டி - ஓரடிக்காக ஒரு காலைத்தூக்கி வானில் அளந்தார்; இது வாமன அவதாரச் செய்தி;

மாபலி சக்கரவர்த்தி வரலாறு: (வாமன அவதாரச் செய்தி)

திருவாரூர் இறைவன் ஆலயத்தில் இரவில் வந்த எலியொன்று, அணையவிருக்கும் விளக்கின் திரியை ஏதேட்சையாகத் தன் மூக்கால் நிமிர்த்த அவ்விளக்குத்திரி தூண்டப் பெற்று மீண்டும் நன்றாக எரிந்தது. அதனால் அவ்வெலியை மாபலி சக்கரவர்த்தியாக அடுத்த பிறவியில் பிறக்குமாறு இறைவன் வரமளித்தார் எனப் புராணங்களிலும் கதைப் பாடல்களிலும் கூறப்பட்டுள்ளது.

மாபலி (மாவேலி) சக்கரவர்த்தியைப் பிரகலாதனின் பேரன் என்றும், அவன் வானவர்களை வெற்றி கொண்டு ஆண்டு வந்ததாகவும், அவனின் கர்வத்தை அடக்க விஷ்ணு வாமன அவதாரமெடுத்து அவனிடம் தமக்கு மூன்றடிமண் யாசித்து, அது கிடைத்தபின் விசுவரூபம் எடுத்து, ஈரடியால் பூமியையும் விண்ணையும் அளந்து, மூன்றாவதடிக்கு இடம்கேட்க அவன் தன் தலையில் வைக்குமாறு கூறவும் அவ்வாறு தலையில் மூன்றாவது அடியைவைத்து அவனைப் பூமிக்குள் அமுக்கினார் எனவும் புராணங்கள் கூறுகின்றன.

மாபலி சக்கரவர்த்தி பூமிக்குள் அழுந்தும்போது ஆண்டுக் கொருமுறை மேலேவந்து தம் நாட்டு மக்களைக் காணும் வரத்தைப் பெற்றார் என்றும், அந்த நாளைச் சிறப்பாகக் கொண்டாடும் விதத்தில் மலையாள நாட்டில் ஓணம் எனும் பண்டிகை சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது என்றும் கூறுவர். இன்றும் மலையாள நாட்டில் திருவோணம் சிறந்த விழாவாக நடந்து வருவது இதற்குச் சான்றாகும்.

1770. செங்கை< கங்கை; சிதறும் - எற்றும்; கிருபை கருணை; மறைமுதலே - வேதங்களுக்கு முதன்மையானவனே;

1771. தங்குதரி செங்கை - செம்மையான உள்ளங்கை கொண்டவனே; தாமரைக் கண் மாலவனே - செந்தாமரையொத்த கண்களையுடைய திருமாலே; பா.வே. - 'தங்கும் திகிரி செங்கை' (மா.தவநிலை, கை.பிரதி);

1772-1773. இரணியன் தன் மார்பை - பிரகலாதனின் தந்தை இரணியனை, நரசிங்கக் கோலத்தில் வந்து, மடியில் வைத்து அவனது மார்பை; இமைத்து முழிப்பளவில் - ஒரு நொடியில்; தரம் உகிராலே பிளந்து

ஆழிகடைந்த யரவின்மேற் கண்துகிலும்
காளிக்கு மூத்த கருணை நெடுமாலே
வேலா லசுரர்குலம் வேரறுத்தோன் தன்மாமே
ஆலிலையில் கண்துகிலு மாழிநெடு மாலே
ஈரேழு லோக மிய[ல்]வாக வுண்டோனே

- தன்னுடைய கூர்மையான கை நகங்களால் குத்தி வகிர்ந்து; சதையும் விரித்தோனே - மார்பை இரு கூறுகளாக்கியவனே;

இது நரசிங்க அவதாரச் செய்தி — அதுவருமாறு:

இரணியன், தன் மகன் பிரகலாதன் தன் நாமம் ஓதாது அரிநாமம் ஓதியதால் வெகுண்டு, அவனைப் பலவாறு பயமுறுத்தியும் எவ்விதப் பலனுமில்லாததால், அந்த அரி எங்குள்ளான் எனச்சினந்து கேட்கவும், அவன் அதற்கு, 'தூணிலுமுள்ளான் துரும்பிலுமுள்ளான்' என்று கூறி னான்; இரணியன் தூணை உதைக்க அதனுள்ளிருந்து நரசிங்க வடிவில் வந்த விஷ்ணு, பூமியும் விண்ணுமன்றி இரணியனைத் தன்மடியில் கிடத்தி, இரவும் பகலும் சேரும் நேரத்தில் உள்ளும் வெளியுமன்றி வாசற் படியில் இருந்து, எவ்வித ஆயுதத்தையும் பயன்படுத்தாது தம் நகத்தால் அவன் மார்பைப் பிளந்து இரு கூறாக்கி அவனைக் கொன்றார் எனக் கம்பராமாயணத்திலிருந்தும் பிற கதைகளிலும் அறிந்து கொள்ளலாம்.

1774. ஆழி கடைந்த அரவின் மேல் - கடலைக் கடைந்து அமுதம் எடுத்தபோது கடைவதற்கு மத்தாகப் பயன்பட்ட பாம்பின் மீதான படுக்கையில்; கண்துகிலும் (< துயிலும்) - உறங்கும்; (திருமாலே);

1775. காளிக்கு - பார்வதிக்கு; மூத்த கருணை நெடுமாலே - அண்ணனாக விளங்கும் அருள் திருமாலே; பா.வே. - 'காளிதனக்கு அண்ணா' (மா.தவநிலை);

1776. வேலால் அசுரர் குலம் - வேலாயுதத்தால் அரக்கர் குலங்களை; வேர் அறுத்தோன் தன் - கிளையொன்றுமில்லாது கொன்ற முருகனின்; மாமே - தாய் மாமனே;

1777. ஆலிலையில் கண் துகிலும் - (< துயிலும்) பிரளயத்தின் போது, எல்லாம் அழிந்துவிட, குழந்தை வடிவில் ஆலிலையில் கிடந்தவன்; ஆழிநெடுமாலே - கடல் வண்ணத் திருமாலே;

1778. ஈரேழுலோகம் - பதினான்கு உலகங்கள்; இய[ல்]பாக உண் டோனே - எளிதாக விழுங்கியவன்;

இது கிருஷ்ணாவதாரத்திலும் வரும் செய்தி; அண்டங்களை எல் லாம் காப்பதற்காக அவற்றை உண்டு காத்தார் எனவும், மண்ணையுண்டு, வாயைத் திறக்கச் சொன்ன யசோதாவுக்கு அண்டங்களை எல்லாம் தம் வாய்க்குள்ளேயே காட்டினார் எனவும் கூறுவர்.

ஆராலுங் காணாதான் தனக்கு மைத்துனனே
1780 கைகொண்டு சாத்தாவைக் காரணமா யீன்றோனே
வைகுண்ட மாலே மதனுட தந்தையரே
பாலாச் சமுத்திரத்தில் பள்ளிகொள்ளு மச்சுதனே
மாலே யெனது மணாளா மிகுகணவா

*1779.* ஆராலுங்காணாதான் தனக்கு - சிவனுக்கு; (திருமாலால் சிவனின் அடியையும், பிரமாவால் முடியையும் கண்டுபிடிக்க இயலாதபடியினால் இவ்வாறு கூறினார்); மைத்துனனே - உமையின் அண்ணனாதலால் திருமால் சிவனுக்கு மைத்துனன் உறவு ஆவார்;

*1780.* கை கொண்டு - தூண்டுமாமுனி என்பானை வெற்றி கொண்டு, சிவனின் விந்துவைத் தம் கைகளில் ஏந்தி; சாத்தாவை - அரிஹரபுத்திரனான சாத்தனை; காரணமாய் ஈன்றோனே; சைவ - வைணவ ஒற்றுமை தொடர்பாகவும், மகிஷியின் சம்ஹாரம் தொடர்பாகவும் பெற்றெடுத்தவனே; இது மோகினி அவதாரச் செய்தி.

இதன் வரலாறு:

வல்லரக்கன் என்பவன் கடுந்தவம் செய்து இறைவனிடம் வரத்தைப் பெற்றான். அதன்படி அவன் யாருடைய தலையைநோக்கித் தன் விரல்களை நீட்டுகிறானோ அவர்கள் தலை அற்றுப்போகும். வரம் ஈந்த இறைவனிடமே வல்லரக்கன் அதைச் சோதிக்க முயன்ற போது இறைவன் மறைந்தார்; மாயவர் உதவியை நாடினார்; மாயவர் அழகிய மோகினி வடிவெடுத்து அவ் வல்லரக்கனைத் தன் வலையில் வீழ்த்தி அவன் தலை அவன் விரல்களாலேயே அற்றுவிடுமாறு செய்து அவனைக் கொன்றார்.

மோகினி வடிவமெடுத்து மீண்டும் வரச்செய்த இறைவனே அம்மோ இனியான விஷ்ணுவுடன் மைய்யலுற்றபோது மீறிய விந்துவைத் தம் கைகொண்டு தாங்கி அரி-அர புத்திரனான அய்யனாரைப் பெற்றார் என நாட்டுப்புறக்கதைகள் வழங்கும்.

*1781.* வைகுண்ட மாலே - வைகுண்டம் எனும் சொர்க்கத்தில் உறையும் திருமாலவனே; மதனுட - மன்மதனுடைய தந்தையரே - பிதாவே;

*1782.* பாலாச்சமுத்திரத்தில் - பாலால் ஆகிய கடலில், பாற்கடலில்; பள்ளி கொள்ளும் - கண்துயிலும்; அச்சுதனே - திருமாலே; பா.வே. - 'சீதரனே' (ச.ம.நூ., மா.தவநிலை); 'ஸ்ரீதரனே' (கை.பிரதி);

*1783.* மாலே - திருமாலே; எனது மணாளா மிகுகணவா - பூமாதேவியான என் கணவனே; பா.வே. - 'புகழ் கணவா' (மா.தவநிலை, கை.பிரதி);

நித்திரையை விட்டு நினவினுடனென் வருத்தம்
சித்திரமாய்த் தீர்த்தருளும் தேவேயென வுரைத்தாள்

**திருமால் பூமாதேவி உரையாடல்**

சென்ங்கண்மால் தா[ன்]விழித்து[த்] திறியை முகம்பார்த்து
தங்கு மனைவிமுகம் தான்பாத்தங் கேதுரைப்பார்
மாது வுனதுமனம் வாடா தொருனாளும்
தீதுனக்கு வந்தவகை செப்பாயென வுரைற்றார்
அந்தவுரை கேட்டு ஆரணங்கு மேதுரைப்பாள்
எந்தன் கனதி யியல்பா யமையுமென்றாள்
அந்தவுரை கேட்டு யாழிமா லேதுரைப்பார்

*1784.* நித்திரையை விட்டு - உறக்கத்திலிருந்து எழுந்து; நினவினுடன்< நினைவினுடன் - உணர்வுடன்; என் வருத்தம் - பாரம் மிகுந்ததினால் ஏற்பட்ட சுமை;

*1785.* சித்திரமாய்த் தீர்த்தருளும் தேவே - கடவுளே, விரைவாய் எனது சங்கடத்தை நீக்குக;

*1786.* சென்ங்கண்மால்< செங்கண்மால் - திருமால்; தான்விழித்து - துயிலெழும்பி; திறியை முகம் பார்த்து - (< திரி< திரீ< ஸ்திரீ) பெண்ணை நோக்கி; பா.வே. - 'செங்கமலக்கண்' (ச.ம.நூ.);

*1787.* தங்குமனைவி முகம்தான் பார்த்து - தன் மனைவியாக விளங்கும் பூமாதேவியை நோக்கி; அங்கே ஏதுரைப்பார் - உரைப்பதாவது;

*1788.* மாது - பெண்ணே; உனது மனம் வாடாது ஒரு நாளும் - நீ ஒருநாளாவது உள்ளம் வருந்தியதில்லை;

*1789.* தீது உனக்கு வந்தவகை - நீ வருந்தும் அளவு தீமை வந்ததற்கான காரணத்தை; செப்பாய் - உரைப்பாய்; என - என்று; உரைற்றார்< உரைத்தார் - கேட்டார்; பா.வே. - 'செல்வியே கூறும் என்றார்' (ச.ம.நூ.);

*1790.* அந்தவுரை கேட்டு - திருமால் வினவுவதைக் கேட்டு; ஆரணங்கும் ஏதுரைப்பாள் - பூமாதேவியும் உரைப்பதாவது;

*1791.* எந்தன் கனதி - என்னுடைய பாரம்; இயல்பாய் அமையும் என்றாள் - எப்போதும் முன்பு எளிதாய் இருக்கும்; பா.வே. - 'கனம்' (ச.ம.நூ.);

*1792.* அந்தவுரை கேட்டு - பூமாதுரைப்பதை அறிந்து; ஆழிமால் ஏதுரைப்பார் - கடல் வண்ணத் திருமால் உரைப்பதாவது;

கந்தம் நிறைந்த கனமேது சொல்லிடென்றார்
கால னிறந்தான் கனயுயிர்கள் மாளாமல்
சீலமிகு பூவுலகில் சுமைமிகுந்து தென்றுரைத்தாள்
என்றுதான் மாது யிவைகூறவே நெடுமால்
என்று மழியா திருந்தவலு பிலவான்
ஆல முண்டகண் டரனு மறியாமல்
கால னிறக்கவந்த காரணமேதென் றுரைற்றார்
செந்தா மரைக்கண் திருமா லிவைகேட்க
அந்தமுள்ள பூமாதேவி யவற்கே துரைப்பாள்
மார்க்கண்ட னென்றொருவன் வாகுசிவ பூசைசெய்தான்

1793. கந்தம் நிறைந்த கனம் - இப்போது அதிகப் பாரம்; ஏது - ஏன் வந்தது; சொல்லிடு என்றார் - காரணம் கூறு என்றார்;

1794. காலன் - எமன்; இறந்தான் - செத்தான்; கன உயிர்கள் - மிகுந்த உயிரினங்கள்; மாளாமல் - இறவாமல்;

1795. சீலமிகு பூவுலகில் - பெருமைமிகுந்த உலகத்தில்; சுமை மிகுந்துது என்றுரைத்தாள் - பாரம் அதிகரித்தது எனக் கூறினாள்; (மிகுந்துது< மிகுந்தது);

1796. என்றுதான் மாது இவைகூறவே - இவ்வாறு பூமாதேவி பாரம் மிகுந்த காரணம் கூற; நெடுமால் - திருமால்;

1797. என்றும் அழியாது இருந்த - எப்போதுமே மரணம் என்பது கிடையாத; வலுபிலவான் - வலிமைமிக்க எமன்;

1798. ஆலம் உண்ட கண்டன் அரனும் - (417, 636) நஞ்சுண்டகண்டத்தினனான சிவனுக்கு; அறியாமல் - தெரியாமல்;

1799. காலன் இறக்கவந்த காரணம் ஏது - எமன் செத்ததற்குரிய காரணம் என்ன; என்றுரைற்றார்< என்றுரைத்தார் - எனக்கேட்டார்; பா.வே. - 'இறந்து விட்ட' (ச.ம.நூ.);

1800. செந்தாமரைக் கண் திருமால் - தாமரைக் கண்ணன் மால்; இவைகேட்க - காலனிறந்த காரணம் கேட்கவும்;

1801. அந்தம் உள்ள பூமாதேவி - அழகு நிறைந்த நிலமடந்தை; அவர்க்கு ஏது உரைப்பாள் - திருமாலுக்குக் கூறும் பதிலாவது;

1802. மார்க்கண்டன் என்றொருவன் - மார்க்கண்டேயன் என்ற பெயருள்ள சிறுவன்; வாகு சிவ பூசை செய்தான் - மரணபயத்தால் சிவபூசை செய்து கொண்டிருந்தான்;

தாக்குடனே யேமன் றான்பிடிக்க நல்கிவந்து
பாசக் கயறிட்டான் பரமேசுபர னுதைற்றார்
1805 வாசமிகு காலன் மடிந்தான் சுமைபாரம்
செங்கமலக் கண்ணா சுமைபாரந் தீருமென்றாள்
தங்குபுகழ் மாதுரைக்கத் தானுரைப்பார் மாலவரும்
திங்களணி யீசர் சிவனார் வதைப்படுத்தில்
இங்கிவனை நாமெழுப்ப யிறையோனுக் கோராது
1810 அரனாருட கோப மன்பாக யாதரித்து[ப்]
பரனாருட னுரைற்றுப் பாங்கா யெழுப்புகிறோம்

**இறைவனிடம் முறையிட எல்லோரும் வருதல்**

அரனாரிடம் போக ஆனபுகழ் வேதனையும்

*1803.* தாக்குடனே யேமன்றான் - எமன் அச்சிறுவனை எதிர்த்து; பிடிக்கநல்கி வந்து - அவனைப் பற்றிச் செல்ல வந்தான்;

*1804.* பாசக் கயறிட்டான் (< கயிறு) - உயிர்களைப் பற்றும் கயிற்றை மார்க்கண்டேயன் மீதும் அவன் பிடித்திருந்த இலிங்கத்தின் மீதும் படுமாறு வீசினான்; பரமேசுபரன் உதைத்தார் - அதனால் கோபமுண்ட இறைவன் தன் காலால் காலனை எற்றினார்;

*1805.* வாசமிகுகாலன் மடிந்தான் - புகழ்மிக்க எமனும் இறந்தான்; சுமைபாரம் - (அதனால் உயிர்கள் இறவாமல் அதிகரித்ததால்) இந்தப்பா ரம் பூமிக்கு ஏற்பட்டது; காண்க: - 'சுமை' (1724, 1795);

*1806.* செங்கமலக் கண்ணா - தாமரைக் கண்ணனே; சுமைபாரம் தீரும் என்றாள் - பூமிபாரத்தைக் குறையும் எனப் பூமாதேவி முறையிட் டாள்;

*1807.* தங்கு புகழ் மாதுரைக்க - புகழ்தங்குகின்ற பூமாதேவி இவ்வாறு முறையிடவும்; தானுரைப்பார் மாலவரும் - திருமால் கூறுவதாவது;

*1808.* திங்களணி ஈசர் சிவனார் - பிறைசூடும் இறைவன்; வதைப்ப டுத்தில் - கொன்ற;

*1809.* இங்கிவனை நாம் எழுப்ப - இன்று காலனை நாம் உயிர் எழுப்பினால்; இறையோனுக்கு ஓராது - சிவ்னுக்கு நல்லதன்று;

*1810.* அரனாருட < அரனாருடைய - சிவனின்; கோபம் -கோபத்தை; அன்பாக ஆதரித்து - அன்புடன் தணித்து;

*1811.* பரனாருடன் - இறைவனிடம்; உரைற்று< உரைத்து - காரணங்களை எடுத்துக்கூறி; பாங்காய் எழுப்புகிறோம் - பக்குவமாய்க் காலனை உயிர்பெறச் செய்விக்கிறோம்;

*1812.* அரனாரிடம் போக - எனவே, இறைவனிடம் நேரில் செல்வ

வரம்பெருகுந் தேவர்களு மாமுனிவர் யாவர்களும்
சூரியனுஞ் சந்திரனும் சொல்லரிய மூர்த்திகளும்
பாரில்(த்)திசை பாலரையும் பாங்கா யழையுமென்றா
நன்றென்று பூமாதேவி யெங்குந் தானேகி
சென்றவரை யெல்லாஞ் சிறப்பா யழைத்துவந்தாள்
வந்து வணங்குவரை மாலோனும் பாற்றுரைப்பார்
அந்திமதி சூடு மரனாரிட மணுகி
மன்றுலகிற் காலனுக்கு வரங்கே(ள்)க்க வாருமென்று

தற்கு; ஆனபுகழ் வேதனையும் - புகழ் விளங்கக் கூடிய பிரமனையும்; பா.வே. - 'வேதாளம்' (ச.ம.நூ.);

1813. வரம் பெருகும் தேவர்களும் - மேலும் மேலும் வரம் பெறக் கூடிய வானவர்களும்; மாமுனிவர் யாவர்களும் - எல்லா ரிஷிகளும்;

1814. சூரியனும் சந்திரனும் - சூரியசந்திர தேவர்களும்; சொல்லரிய மூர்த்திகளும் - புகழ் பெற்ற பிற மூர்த்திகளும்; பா.வே. - 'சொல்லரிய தேவர்களும்' (கை.பிரதி);

1815. பாரில்த்திசை பாலரையும் - எண்திசையிலுள்ள பாலர்களை யும்; பாங்காய் அழையுமென்றார் - பூமாதேவியே! முறையாகச் சென்று அவர்களை அழைத்து வருக எனத்திருமால் கூறினார்;

1816. நன்று என்று - இவ்வாறு செய்வது நல்லதுதான் என; பூமாதேவி எங்குந்தானேகி - நிலமடந்தை எல்லோரிடத்திலும் நேராகச் சென்று; பா.வே. - 'எங்குந்தான் ஓடி' (ச.ம.நூ.); 'நால் திசையும் தான்னேகி' (மா.தவநிலை);

1817. சென்று அவரை எல்லாம் சிறப்பாய் அழைத்து வந்தாள் - திருமால் குறிப்பிட்ட அத்தனை பேர்களையும் நேரில் சென்று அவரிடம் கூட்டிவந்தாள்;

1818. வந்து வணங்குவரை - தன்னை வணங்கும் அவர்களை; மாலோனும் - திருமாலும்; பாற்றுரைப்பார் < பார்த்துரைப்பார் - கூறுவதாவது; பா.வே. - 'ஏதுரைப்பார்' (மா.தவநிலை);

1819. அந்திமதிசூடும் அரனாரிடம் அணுகி - பிறைசூடும் சிவனிடம் நேரில் சென்று;

1820. மன்றுலகில் - இந்த உலகத்தில் மீண்டும் உயிர்பெற்றுவர; காலனுக்கு - எமனுக்காக; வரங்கேள்க்க - சிவனாரிடம் வரம்பெற; வாருமென்று - நீங்கள் எல்லோரும் என்னுடன் வருக என்று; பா.வே. - 'மன்னுலவு' (ச.ம.நூ.); 'மண்ணுலகில் சென்ற' (மா.தவநிலை); 'மன்றுலவு' (கை.பிரதி);

அன்று கயிலைக் கனைவோரும் வாருமென்று

**விருத்தம்**

நாரணன் றேவர் கூட
நளின நாமுகனு மன்பாய்
காரண மாக வாழுங்
கடவுளார் திக்குப் பாலர்
வாரண முரித்துப் போத்தி
யரவணிந் தவனைத் தேடி
ஆரணி வேத மோ[டு]
அனைவரும் வந்து கண்டார் (52)

1821. அன்று கயிலைக்கு - அன்றையப் பொழுதிலேயே சிவனார் இருப்பிடமான கயிலாசத்துக்கு; அனைவோரும் வாருமென்று - அனைவரும் வருக எனத் திருமால் அழைப்புவிடுத்தார்; பா.வே. - 'அனைவோரும் போகலுற்றார்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

வி.52. நாரணன் - திருமாலும்; தேவர் - வானுலகத்தோரும்; கூட - இவர்களுடன்; நளின நான்முகனும் அன்பாய் - மென்மைத் தன்மை கொண்ட பிரமாவும்; காரணமாக வாழும் கடவுளார் - படைப்பு, காப்பு, அழித்தல் போன்ற தொழில்களைச் செய்கின்ற தெய்வங்களும்; திக்குப்பாலர் - எண்திசைக் காவலர்களும்; வாரணம் - யானையை; உரித்து - தோலைநீக்கி; போத்தி < போர்த்தி - தன்மேனியை மூடிக்கொண்ட; அரவு அணிந்தவனை - பாம்பை அணியாகச் சூடிக்கொண்ட இறைவனை; தேடி - நாடி; ஆர்அணி வேதமோடு - சிறப்பினையுடையதான நான்மறைகளுடன்; அனைவரும் வந்து கண்டார் - எல்லோரும் கைலாயம் வந்து பார்த்தனர்;

பா.வே. - 'மகாப்பித்தனடியைத் தேடி', (ச.ம.நூ., மா.தவநிலை); 'ஆரணம் யாவும் ஓதி' (ச.ம.நூ.); 'ஆரணர் வேதம் மோதி' (மா.தவநிலை, கை.பிரதி);

வாரணம் உரித்துப் போர்த்திய வரலாறு:

வானவர்களை வருத்திய கயாசுரன் என்பான் அவ்வானவர்கள் சிவமூர்த்தியிடம் சென்று அடைக்கலமானபோது சிவமூர்த்தியையும் எதிர்த்தான். சிவமூர்த்தி உக்கிரத் திருவுருவுடன் தோன்றிக் கயாசுரன் தலையில் தன் காலை யூன்றி அவனது யானைத் தோலை உரித்துத் தம் மேல் போர்த்திக் கொண்டார்; அவ்வசுரன் அவரை விழுங்கிய போது அவன் உடலைக் கிழித்து வெளிப்பட்டார்;

## இறைவன் வினாதலும் எல்லோரும் விடையிறுத்தலும்

நடை

சிந்தை மகிழ்ந்து சிறப்பா யனைவோரும்
வந்து தெண்டனிட்டார் மகாதேவர் தன்மனையில்
வந்தவரைப் பார்த்து மகாதேவ ரின்பமுற்று[ச்]
சந்தோச மாக சகலோருஞ் செச்சையிட
செங்கண் நெடுமாலே செயல்வேதா தேவர்களே
இங்கு வந்தவாறு மியல்பா யுரையுமென்றார்
அந்தவுரை கேட்டு யனைவோரு மேதுரைப்பார்
விந்தைமிகு காலன் மேதினிக்கு ளில்லாமல்
சரராசி யாகச் சனித்த வுயிர்களெல்லாம்

1822. சிந்தை மகிழ்ந்து - எல்லோரும் இன்புற்று; சிறப்பாய் அனைவோரும் - இறைவனிடம் போகவேண்டி எல்லோரும் தங்களைச் சிறப்புச் செய்து கொண்டும்;

1823. மகாதேவர் தன் மனையில் - சிவன் உறையுமிடமான கயிலாயத்தில்; வந்து தெண்டனிட்டார் - அவர் முன்பில் வந்து வணங்கினர்; பா.வே. - 'தன் வரையில்' (கை.பிரதி);

1824. வந்தவரைப் பார்த்து - தம் முன் வந்து வணங்கிநின்ற அனைவரையும் நோக்கி; மகாதேவர் இன்பமுற்று - இறைவன் மகிழ்ச்சியடைந்து;

1825. சந்தோசமாக - இன்பமாக; சகலோரும் - எல்லோரும் செச்சையிட - திருநீற்றை அணிய;

1826. செங்கண் நெடுமாலே - சிவந்த தாமரைபோன்ற நிறத்தனவான கண்களையுடைய திருமாலே!; செயல் வேதா - படைக்கும் தொழிலைச் செய்து வரும் பிரமதேவா!; தேவர்களே - மற்றுமுள்ள வானவர்களே;

1827. இங்கு - கயிலாயத்துக்கு; வந்தவாறுமியல்பாயுரையும் வந்தகாரணத்தைப் பக்குவமாய்க் கூறுக; என்றார் - என இறைவனும் கேட்டார்;

1828. அந்தவுரை கேட்டு - அவ்வாறு இறைவன் கேட்கவும்; அனைவோரும் ஏதுரைப்பார் - எல்லோரும் கூறுவதாவது;

1829. விந்தைமிகு காலன் - உயிர்களைப் பறிக்கும் விந்தையான செயல்களைச் செய்யும் எமன்; மேதினிக்குள் இல்லாமல் - பூமியில் இறந்துபட்டதால்; பா.வே. - 'விந்தை விஞ்சை காலன்' (கை.பிரதி);

1830. சரராசியாகச் சனித்த உயிர்கள் எல்லாம் - ஒழுங்காகப் பிறந்த சீவன்கள் எல்லாம்;

யிறவா திருக்கையினா லென்கோவே யீசுபரரே
பார்மாது மண்டலமும் பாரம் பொறுக்குதில்லை
தார்மீது சேடனுமோ தாங்கரிதாய் மெய்மறந்தான்
பார புவனம் பகிரண்டந் தாங்கரிது
தாராரு மேமன் றனைநீ ரெழுப்புமென்று
நாராயண னாரும் நளினமுட னுரைக்க
சீராயும் நீதிச் சிவனாரு மேதுரைப்பார்

**ஆதிசேடனுக்கு அதிகவரம் நல்குவதாக இறைவன் கூறல்**

பாரம் வராதபடி பார்மாது சேடனுக்குச்
சீராக யண்டஞ் சிறப்பாகத் தாங்கிநிற்க
முன்னா ளவர்க்கு முகித்தபடி பிலம்போல்

1831. இறவாதிருக்கையினால் - சாகாமலிருப்பதால்; என்கோவே ஈசுபரரே - எம் தலைவனாகிய ஈசனே;

1832. பார்மாது மண்டலமும் - பூமாதேவியின் மண்டலமான பூமியும்; பாரம் பொறுக்குதில்லை - கனம் தாங்கமுடிவதில்லை;

1833. தார்மீது - தரணியிலுள்ள; சேடனுமோ - ஆதிசேடனும்கூட; தாங்க அரிதாய் - பாரம் மிகுந்துவரும் பூமியைச் சுமப்பதிலிருந்து; மெய்மறந்தான் - மயங்கிய நிலையை அடைந்துள்ளான்; பா.வே. - 'தார்மாது' (மா.தவநிலை, கை.பிரதி);

1834. பார புவனம் பகிரண்டம் - இந்தச் சுமையை உலகமும் மற்றும் பல அண்டங்களும்; தாங்க அரிது - சுமக்க இயலாது;

1835. தார் ஆரும் ஏமன்தனை - மாலை சூடும் எமதர்மனை; நீர் எழுப்பும் என்று - நீவிர் மீண்டும் உயிர்பெற்று வரச் செய்யும் என;

1836. நாரயணனாரும் - திருமாலும்; நளினமுடன் உரைக்க - பக்குவமாய்ச் சிவபெருமானிடம் கூற;

1837. சீர் ஆயும் நீதிச் சிவனாரும் - சீர்செய்து ஆராய்ந்து பார்க்கும் நீதி நிறைந்த இறைவனும்; ஏதுரைப்பார் - கூறுவதாவது;

1838. பார் மாது சேடனுக்கு - பூமாதேவிக்கும் ஆதிசேடனுக்கும்; பாரம் வராதபடி - சுமை கனக்காதவாறு;

1839. சீராக அண்டம் சிறப்பாகத் தாங்கிநிற்க - அவர்கள் இருவரும் ஒழுங்காகப் பல அண்டங்களையும் பூமியையும் சுமந்து நிற்குமாறு;

1840. முன்னாள் அவர்க்கு முகித்த படி - தாங்கும் பணியை முன்பு அவர்களிருவருக்கும் கொடுத்த காலத்தில் நல்கிய; பிலம்போல்< பலம் போல் - வலுவைப் போல; பா.வே. - 'முகிர்த்த பலனதிகம்' (கை.பிரதி);

இன்னா ளவர்க்கு யியல்வு கனமில்லாமல்
ஆயிரங் கோடிபில னன்பா யவர்க்களித்து[ப்]
பாயிர லோகமெல்லாம் பண்பாக வாக்குகிறோம்
என்று மரனா ரியம்பநெடு மாலுரைப்பார்

## உயிர் போகாது உயிரினங்கள் ஏங்குவதாக இறைவனிடம் கூறல்

1845 இன்று கனதிவலு யீசுபரனே நீயமைற்றாய்
மண்ணிற் பிறந்த வலுசீவன் மாளாமல்
எண்ணிப் பரதவி(ற்)த்து யேங்குது காணவ்வுலகில்
தாழியிலே வைத்ததுவும் தான்பாரில் போட்டதுவும்
தூளியாய்ச் சீவன் துடிக்கிதுகாண் போகாமல்

1841. இன்னாள் அவர்க்கு - இப்போது அவ்விருவருக்கும்; இயல்வு கனமில்லாமல் - சுமையின்றி எளிதாக ஆக;

1842. ஆயிரம் கோடி; பிலன்< பலன் - சக்தி; அன்பாய் அவர்க்களித்து - கருணையுடன் அவர்களுக்கு வரம் நல்கி;

1843. பாயிர லோகம் எல்லாம் - எல்லா உலகத்தையும்; பண்பாக ஆக்குகிறோம் - சீர்மைப்படுத்தி விடுகிறேன்; பா.வே. - 'பண்பாய் லெகுவாக்குகிறோம்' (மா.தவநிலை);

1844. என்றும் அரனார் இயம்ப - இவ்வாறும் சிவன் கூறவும்; நெடுமால் உரைப்பார் - நாராயணர் பதில் கூறுவதாவது;

1845. இன்று கனதிவலு - இப்போது பூமிப்பாரச் சுமையை; ஈசுபரனே நீ அமைற்றாய் (< அமைத்தாய்) - இறைவனே! நீர்தான் அமைத்தீர்; உம்மால்தான் அமைந்தது பா.வே. - 'இன்று அதிகபலம்' (கை.பிரதி);

1846. மண்ணிற்பிறந்த - பூமியில் தோன்றிய; வலு சீவன் - அதிகமான உயிர்கள்; மாளாமல் - சாகாமல்; பா.வே. - 'மனுச்சீவன்' (கை.பிரதி);

1847. எண்ணிப் பரதவித்து - இவ்வாறு துன்பப்படுவதைக் காட்டிலும் எப்போது இறந்து போகலாம் என; ஏங்குதுகாண் அவ்வுலகில் - அங்குள்ள உலகங்களில் வருந்துகின்றன;

1848. தாழியிலே வைத்ததுவும் - முதுமக்கள் தாழி எனும் மட்கலசத்துள் அடக்கம் செய்யப்பட்டனவும்; தான் பாரில் போட்டதுவும் - அதற்கும் மீறிப் பூமியிலே கிடப்பனவும்;

1849. தூளியாய் - சிறிதாக; சீவன் போகாமல் - உயிர் நீங்காது; துடிக்கிது காண் - துடித்துக் கொண்டிருக்கின்றன;

யென்று நெடுமா லியம்ப யரனாருரைப்பார்

### ஒரு எமனுக்குப் பதில் பலரைப் படைப்பதாக இறைவன் கூறல்

மன்றுலகில் சீவன் மயங்கியுயிர் மாளாட்டால்
திருமாலே மாமறலி செத்திறந்து போனதினால்
ஒருயெமன் பட்டதுக்கு ஒன்றுநூ றாயிரம்பேர்
சீரணியுங் காலனிமன் திட்டிப்பேன் பாருமென்றார்
நீரணியு மீச னிமல னிவையுரைக்க[க்]
காரனைய மேனி கமலவிழி மாலுரைப்பார்

### எமன் குற்றமற்றவன் எனத்திருமால் எடுத்தியம்பல்

தாரனைய செங்கைத் தருமவரை யீசுபரரே

1850. என்று நெடுமால் இயம்ப - இவ்வாறு திருமால் கூறவும்; அரனார் உரைப்பார் - சிவன் பதில் கூறுவதாவது;

1851. மன்றுலகில் - நிலவுலகில்; சீவன் - உயிர்கள்; மயங்கியுயிர் மாளாவிட்டால் - வருந்தி சீவன் போகாது இறவாவிடில்; பா.வே. - 'மண்ணுலகில்' (மா.தவநிலை, கை.பிரதி);

1852. திருமாலே - நாராயணரே!; மாமறலி - வலுவான எமன்; செத்து இறந்து போனதினால் - மடிந்து விட்டதால்;

1853. ஒருயெமன் பட்டதுக்கு - காலன் ஒருவன் இறந்ததற்கு ஈடுசெய்வதற்கு; ஒன்று நூறாயிரம் பேர் - ஒரு நூறாயிரம் எமன்களை; பா.வே. - 'ஒன்பது நூறு ஆயிரம்பேர்' (கை.பிரதி);

1854. சீர் அணியும் காலன் இமன் - புகழ்பெறும் எமன்களை; திட்டிப்பேன்< சிருட்டிப் பேன் - படைப்பேன்; பாரும் என்றார் - இப்போது நேரிலே காணும் என்று சிவன் கூறினார்;

1855. நீர் அணியும் ஈசன் நிமலன் - கங்கையைத் தலையிலே கொண்டுள்ள குற்றமில்லா இறைவன்; இவையுரைக்க - இவ்வாறு மறுப்புக் கூறவும்;

1856. கார் அனைய மேனி - கறுத்த மேகம் போன்ற நிறமுடைய தேகமும்; கமல விழி - தாமரைக் கண்களும் பெற்றுள்ள; மால் உரைப்பார் - திருமால் பின்னும் ஈசனிடம் கூறுவதாவது;

1857. தார் அனைய செங்கை - மலர் போன்ற மென்மையான சிவந்த கைகளையுடைய; தருமவரை - நீதிவிளங்கும் கயிலாய; ஈசுபரரே - இறைவனே; பா.வே. - 'தருமவினை' (மா.தவநிலை);

ஓரெமன் றானிருந்து யுண்டான் லோகமெங்கும்
சீராய்ப் பலவுயிருஞ் சிறப்பாகச் சங்கரிற்றார்
1860 பட்டயிமன் போலே பார்மீதி லட்சியென்றார்
திட்டமுடன் பூவில் செனமெடுக்க வொட்டார்
எள்ளளவு சென்ம மெடுக்கவுந்தா னொட்டுவனோ
பள்ளத்தில் வீழ்ந்த பாரூர்மறலி இன்னாள்
செய்தகுத்த மேது சிவனே யுனக்குநமன்

**எல்லாம் இறைவன் செயல்**

1865 எய்தவனும் நீயே யெடுத்தவனும் நீயேகாண்
பாசக் கயறிட்டதுநீ பாலனாய் நின்றதுநீ

*1858.* ஓர் எமன் தான் இருந்து - காலன் ஒருவன் இதுவரை இருந்தே; உண்டான் லோகமெங்கும் - உலகம் எங்கணும் சங்கரித்தான்;

*1859.* சீராய்ப் பல உயிரும் - ஒழுங்காக, தர்மப்படி பல சீவன்களை யும்; சிறப்பாக - நியாயமாக; சங்கரிற்றார் < சங்கரித்தார் - வதைத்துப் பராமின்றிச் செய்தான்;

*1860.* பட்டயிமன் போலே - செத்த ஒரு காலனைப் போன்று; பார்மீதில் - பூமியில்; லட்சியென்றார் - சிருட்டித்தால்; பா.வே. - 'லட்சம் மென்றால்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1861.* திட்டமுடன் - நிச்சயமாக; பூவில் - பூமியில்; செனனம் - பிறப்பு; எடுக்கவொட்டார் - தோன்றவிட மாட்டார்கள்; காண்க: 'சென னம்' (1288, 2515);

*1862.* எவ்வளவு சென்மம் - எத்தனை பிறவிகள்; எடுக்கவுந்தான் - பிறக்கவும்; ஒட்டுவனோ - விடுவானோ, விடமாட்டான்; காண்க: 'சென்மம்' (வி.48);

*1863.* பள்ளத்தில் வீழ்ந்த - இறைவன் மிதித்ததால் பாதாளத்தில் விழுந்து இறந்து கிடக்கும்; பாரூர்< பார் + ஊர்; மறலி - எமன்; இன்னாள் - இப்போது;

*1864.* சிவனே - ஈசனே; உனக்கு - உமக்கு; நமன் - எமன்; செய்த - புரிந்த; குத்தம்< குற்றம் - தவறு; ஏது - என்ன?;

*1865.* எய்தவனும் நீயே - வினையை அனுப்பியவரும் நீர்தான்; எடுத்தவனும் நீயேகாண் - அவ்வினையைப் பெற்றுக் கொண்டவரும் நீர்தான்; பா.வே. - 'ஏத்தவரும்' (மா.தவநிலை); 'ஏற்றவரும்' (கை.பிரதி);

*1866.* பாசக் கயறு இட்டது நீ - (< கயிறு) எமனுடைய பாசக் கயிற்றை வீசவைத்தவரும் நீர்தான்; பாலனாய் நின்றது நீ - மார்க்கண்டே

வீசுகின்ற பாசம் விழாம லுதைத்ததுநீ
பாரம் பெருத்துப் பயந்ததுநீ பாரமும்நீ
வேதம் பரத்தில் விளைந்த பொருள்நீயே
அண்ட மெவைபலவு மான வுடலாக
எண்டிசையில் வாய்வு மியல்வருண னக்கினியும்
விண்ணு மண்ணோடைய்ந்து விரிந்தயஞ்சு பூதமதாய்
கண்ணு முதல்யாவு[ம்] கருணை யுனதுசெயல்
சந்திரனுஞ் சூரியனுந் தாங்குமிரு விழியாய்
இந்தப்படி சிறந்தீ ரேக வுருவாக
வந்து கயற்வீச வலுவேது யீசுபரரே

யனாய் வந்து நின்றது நீர்தான்; பா.வே. - 'பாலகனாய் அஞ்சினதும் நீர்' (மா.தவநிலை, கை.பிரதி);

1867. வீசுகின்றபாசம் - எமன் வீசிய பாசக்கயிறு; விழாமல் - படாமல்; உதைத்தது நீ - அந்த எமனைக்காலால் மிதித்ததும் நீர்தான்;

1868. பாரம் பெருத்து - பூ பாரம் மிகுந்து; பயந்தது நீ - கலக்கம் அடைந்ததும் நீர்தான்; பாரமும் நீ - சாகாமலிருந்த உயிர்களால் வந்த கனமும் நீர்தான்;

1869. வேதம் பரத்தில் - வேதப்பொருளாய்; விளைந்த - உருவாகிய; பொருள் நீ - திரண்ட உண்மைப் பொருள் நீரே ஆவிர்; பா.வே. - 'வேறம் பலத்தில்' (மா.தவநிலை, கை.பிரதி);

1870. அண்டம் எவைபலவும் - பல அண்ட கோளங்களும்; ஆன உடலாக - உமது உடம்பு ஆகவும்;

1871-72. எண்டிசையில் - எட்டுத்திக்குகளிலும்; வாய்வும் - காற்றாக வும்; இயல் வருணன் - விளங்கும் நீராகவும்; அக்கினியும் - தீயாகவும்; விண்ணு மண்ணோடு அய்ந்து - விசும்பாகவும், நிலமாகவுமான ஐந்து; விரிந்த - பரந்த; அஞ்சு பூதமதாய் - பஞ்சபூதங்களாய்;

1873. கண்ணுமுதல் யாவும் - கண்முதல் எல்லாப் பொறிகளும்; கருணையுனது செயல் - எல்லாம் உமது அருள் காரணமாக நடப்பன;

1874. சந்திரனும் சூரியனும் - சூரியசந்திரர்கள்; தாங்கும் இரு விழியாய் - இறைவனே! உமது இரு கண் ஒளிகளாக விளங்கவும்; பா.வே. - 'சர்வமும் நீயே யாகும்' (கை.பிரதி);

1875. இந்தப்படி சிறந்தீர் ஏக உருவாக - இவ்வாறு அனைத்துப் பொருள்களும் உமது உறுப்புக்களாக விளங்கி ஒரே உருவமாக நின்றீர்;

1876. வந்து கயற்வீச - நீர் இருந்த கோயிலுக்கு வந்து இலிங்கத்தின் மீது பாசக் கயிற்றை வீச; வலு ஏது ஈசுரரே - எமனுக்கு வலிமை எங்கேயுள்ளது?;

சூட்ச முடனிருந்து தொல்புவியெல்லா மாட்டி
காட்சி யிருந்தோர்களிடங் காணாமலே யிருப்பீர்

**விருத்தம்**

அஞ்சினில் நின்றாய் நீயே
யண்டமும் மணுவும் நீயே
பிஞ்சினில் காய தாகிப்
பெருத்ததும் சிறுத்தாய் நீயே
கஞ்சமா மலரின் வேதன்
கற்பினை தனக்கு நீயே
அஞ்சேலென் றாட்டு கின்ற
யாதியு மனாதி நீயே (53)

**நடை**

யேழை யிமன்பேரி லித்தனையு வேணுமதோ

1877. சூட்சமுடன் இருந்து - சூத்திரதாரியாக இருந்து; தொல்புவி எல்லாம் ஆட்டி - பழைமையான இந்த உலகுமுதல் அனைத்தையும் ஆடச்செய்து; காண்க: 'சூட்சம்' (571, 1928, வி.56, வி.66);

1878. காட்சி யிருந்தோர்களிடம் - பார்வை உள்ளவர்களிடம்; காணாமலே யிருப்பீர் - அவர்கள் காணவியலாது உறைவீர்;

வி.53. அஞ்சினில்< ஐந்தினில் - நமசிவாய எனும் ஐந்தெழுத்தினில் அல்லது நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் எனும் பஞ்சபூதங்களில்; நின்றாய் நீயே - இறைவனே நீர் நின்றீர்; அண்டமும் அணுவும் நீயே - பெரிய அண்டகோள மாகவும் சிறிய அணுத் திரளாகவும் ஆகியுள்ளது நீர்தான்; பிஞ்சினில் காயதாகிப் பெருத்ததும் - சிறு பிஞ்சாக இருந்து அது பெரிய காய் ஆக வளர்ந்து; சிறுத்தாய் நீயே - பின்பு வற்றியதும் நீர்தான்; கஞ்சமா மலரின் வேதன் - தாமரை மலரின்மீது உறையும் பிரமன்; கற்பினை தனக்கு நீயே - படைக்கும் விதிக்குக் காரணமானவரும் நீர்தான்; அஞ்சேல் என்று - பயப்படவேண்டாம் என; ஆட்டுகின்ற - எல்லோரையும் இயங்கச் செய்கின்ற; ஆதியும் - எல்லாவற்றுக்கும் காரணமான முதலாமவரும்; அனாதியும் - பிறப்பிறப்பில்லாதவரும்; நீயே - நீரே ஆவிர்;

பா.வே. - 'பஞ்சினில்' 'ஆதியே நீ நரனும் நீயே' (மா.தவநிலை); 'ஆதியே நீயும் நானே' (கை.பிரதி); ஒப்பிடுக: 'கஞ்சமலர்' (739, 2433, வி.65);

1879. ஏழை யிமன் பேரில் - பாவம்! எமன்மீது; இத்தனையும் வேணுமதோ - இவ்வளவு நிகழ்ச்சிகளும் அவனுக்கு மரணமும் வேண்டுமோ?; பா.வே. - 'கோபமாமோ' (கை.பிரதி);

காளைதனி லமர்ந்த காரணரே காலனின்னாள்
குத்தமிகச் செய்தாலுங் கொள்கையுடனே பொறுத்து
சித்தனே காலன் சிறக்க யருள்வீர்மகிழ்ந்து
என்று நெடுமால்கூற யீசுபரரு மேதுரைப்பார்

**இறைவன் மேனியில் விழுந்த தழும்பு**

மன்றுலகி லென்னடியார் வாகுசிவ பூசைசெய்வார்
பொங்கமுட னங்கவர்பால் போயிருப்போ[ம்] மாமறலி
அங்கு மியமன்வந்து யதட்டி யெனைச்சினந்து
கல்லென்று சொல்லிக் கனத்த கயற்போட்டு

1880. காளைதனில் அமர்ந்த - (1210) விடை வாகனத்தில் இருக்கும்; காரணரே - மூலவரான சிவனே; காலன் இன்னாள் - எமன் இப்போது;

1881. குத்தம்< குற்றம் - தவறு; மிகச் செய்தாலும் - அதிகமாக ஏதும் செய்திருந்தாலும்; கொள்கையுடனே பொறுத்து - கடவுளுக்குரிய மன்னிக்கும் இயல்பால் அதை மன்னித்து;

1882. சித்தனே - சித்துக்களில் வல்ல இறைவனே; காலன் சிறக்க அருள்வீர் மகிழ்ந்து - எமன் மீண்டும் புகழுடைய அன்புடன் அருளும்;

1883. என்று நெடுமால் கூற - இவ்வாறு நாராயணனார் எடுத்துக் கூறவும்; ஈசுபரரும் - இறைவனும்; ஏதுரைப்பார் - கூறுவதாவது;

1884. மன்றுலகில் - விளங்கும் பூமியில்; என்னடியார் - சிவனடியார் கள்; வாகு - வாகான; சிவபூசை செய்வார் - சிவ வழிபாட்டினை மேற்கொள்ளுவர்; பா.வே. - 'மண்ணுலகில் விஞ்சையிலும்' (மா.தவ நிலை); 'மன்றில்' (கை.பிரதி);

1885. பொங்கமுடன் - நிறைவுடன்; அங்கவர்பால் - அத்தகு அடியார்களிடம்; போயிருப்போம் - தங்கியிருப்பேன்; மாமறலி - மிக்க வலிமையுடைய எமன்;

1886. அங்கும் இயமன் வந்து - அவ்வாறு மார்க்கண்டேயன் சிவபூசை செய்த இலிங்கத்துள்ளும் தங்கியிருந்தபோது, எமன் அங்கேயும் வந்திருந்து; அதட்டி - சிறுவனைப் பயமுறுத்தி; எனைச் சினந்து என்னையும் வெகுண்டு;

1887. கல் என்று சொல்லி - இலிங்கம் கடவுள் அல்ல வெறும் கல்தான் எனக் கூறி; கனத்த கயற்போட்டு - பாரமிகுந்த பாசக் கயிற்றை என் மீதும் என்னைக் கட்டிக் கொண்டிருந்த சிறுவன் மீதும் வீசி இழுத்தான்;

வல்லகயற்றின் தழும்பு மாலோனே பாருமென்று
காட்டினா ரெல்லோருங் கண்டார்கள் தழும்பு

**இறைவன் கோபம் நீங்கல்**

தா[ர்]ட்டிமை சீர்மார்பில் தழும்புகண்டு மாலவனும்
பூட்டிறிகி யத்துவிழும் போதாது யத்தழும்பு
ஆண்டியே நின்மாய்கை யாரறிவார் மூவுலகில்
மைந்தர்கொஞ்சி யன்னையரை வைதாலு மன்னையர்கள்
சிந்தை மகிழ்வதல்லால் சேயையன்னை தான்வெகுண்டு
கும்ப முலைப்பால் குழவி குடிக்கையிலே

*1888.* வல்ல கயற்றின் (< கயிற்றின்) தழும்பு - அப்படியான வலிய பாசக்கயிற்றால் ஏற்பட்ட வடுவை; மாலோனே - மைத்துனனான திருமாலே; பர்ரும் என்று - நீர் பார்ப்பீராக என;

*1889.* காட்டினார் - சிவன் தன் மார்பை எல்லோருக்கும் காண்பித்தார்; எல்லோரும் கண்டார்கள் தழும்பு - பாசக் கயிறு இறுக்கியதால் ஏற்பட்ட வடுவை எல்லோரும் கண்டனர்; பா.வே. - 'காட்டினார் யாவருக்கும்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1890.* தா(ர்)ட்டிமை சீர் மார்பில் - வலிமை மிகுந்த நெஞ்சில்; தழும்புகண்டு - வடுவைப் பார்த்து; மாலவனும் - திருமாலும்;

*1891.* பூட்டிறிகி < பூட்டு இறுகி - கயிற்றுப் பிணிப்பு அதிகரித்து; அத்துவிழும்< அற்றுவிழும் - அறுந்துவிழும்; போதாது அத்தழும்பு - அந்தவடு காணாமலாகிவிடும்;

*1892.* ஆண்டியே - இறைவா!; நின்மாய்கை - உமது மாயவிளையாடல்களை; ஆரறிவார் மூவுலகில் - மூவுலகத்திலும் - வான், பூமி, பாதாளத்தில் உள்ள வானவரும், மனிதரும், அசுரரும் - யாரும் அறிய மாட்டார்; பா.வே. - 'பூவுலகில்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1893.* மைந்தர் - மக்கள்; அன்னையரைக் கொஞ்சி - தாயிடம் மகிழ்ந்து பேசினாலும்; வைதாலும் - ஏசினாலும்; அன்னையர்கள் - தாய்மார்;

*1894.* சிந்தை மகிழ்வதல்லால் - உள்ளம் உவப்பதன்றி; சேயை அன்னை தான் வெகுண்டு - பிள்ளைகளைத் தாயர் கோபித்து எதுவும் செய்வது இல்லை; பா.வே. - 'சினந்து அன்னையே வெகுண்டு' (மா.தவநிலை);

*1895.* கும்ப முலைப்பால் - தனது குவிந்த தனத்தில் வாய் வைத்துப் பாலினை; குழவி குடிக்கையிலே - பிள்ளைகள் அருந்தும் போது;

வெம்புகைகள் பூட்டி வினையமதால் கொன்றுவிட்டால்
அன்னைதனை யார்தடுப்பா ரன்னைகொன்ற தாரறிவார்
நின்னை யெவரும் நினைந்து மனதுருகும்
இப்படியிற் குத்தமதை யீசுபரரே நீர்பொறுத்து
செப்பமுட னெமனையுஞ் சீக்கரமா யிங்கழையும்
ஆதினா ளுண்டான யானவலு யேமனையும்
சோதியே நீயகத்தத் துணிந்தால் விடுவோமோ
என்று நெடுமா லிவைகூற யீசுபரரும்

பா.வே. - 'குழவிகுடிக்க வில்லையோ' (ச.ம.நூ.); 'கும்ப தனப்பாலை' (மா.தவநிலை); 'குழவிக்கியாமல்' (கை.பிரதி);

1896. வெம்பு கைகள் பூட்டி - முதிராத இளம் கைகளைப் பிடித்துக் கொண்டு; வினையமதால் - பழியோடு; கொன்றுவிட்டால் - சாகடித்து விட்டால்; பா.வே. - 'வெம்பு விடம் (விசம்) மூட்டி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1897. அன்னை தனையார் தடுப்பார் - அவ்வாறான போதில் அத்தாயினை யார்தடுக்க வியலும்; அன்னை கொன்றது ஆர் அறிவார் - தாய்தான் பிள்ளையைக் கொன்றாள் என்பது யாருக்குத் தெரியும்;

1898. நின்னை - சிவனே! உம்மை; எவரும் நினைந்து - எல்லா உயிரினங்களும் எண்ணி எண்ணி; மனதுருகும் - உள்ளம் உருகுவர்;

1899. இப்படியில் - இந்த பூமியில்; குத்தமதை< குற்றமதை - தவறு இருக்குமாயின் அத்தவற்றை; ஈசுபரரே - இறைவா!; நீர்பொறுத்து - நீவிர் மன்னித்து; பா.வே. - 'இப்புவியில்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1900. செப்பமுடன் - செவ்வையுடன், ஒழுங்காக; எமனையும் - காலனையும்; சீக்கரமாய் - விரைவாய்; இங்கு அழையும் - இவ்விடத்துக்குக் கூப்பிடும்;

1901. ஆதினாள் உண்டான - தொடக்க காலத்திலிருந்தே இருந்துவரும்; ஆன வலு ஏமனையும் - மிகுந்த வலிமைகொண்ட எமதர்மனை;

1902. சோதியே - ஒளியாக இருக்கும் ஈசனே; நீ; அகத்த< அகற்ற - நீக்க; துணிந்தால் - தீர்மானித்தால்; விடுவோமோ - நாங்கள் எல்லோரும் அவ்வாறு செய்ய விடமாட்டோம்; பா.வே. - 'நீர்காத்துவிடாமல்' (மா.தவநிலை); 'சற்று சினந்தால்' (கை.பிரதி);

1903. என்று நெடுமால் இவைகூற - இவ்வாறு திருமால் இவற்றை எடுத்து இயம்பவும்; ஈசுபரரும் - இறைவனும்;

அன்று பெருமையுற்றா ரல்லோர்களும் மகிழ்ந்தார்

**விருத்தம்**

சமைத்தன னெமனுக் காகச்
சங்கரன் கோபந் தன்னை
அமைத்த னன்மா லெல்லா
மமைச்சனே யரனே வேந்தர்
உமைக்கொரு பாகம் நல்கு
உலகத்தில் வெகுளி நீங்கி
நிமைக்குமுன் புரத்தைத் தீய்க்கும்
நிமலனும் பொறுதி யானார் (54)

**நடை**

1905 ஆதியரன் பாத மாழிமால் மந்திரியாய்
**எமன் எழுந்துவருதல்**
நீதி சிறக்க நிறைந்த மகிழ்ட்சிபொங்கி

*1904.* அன்று பெருமை உற்றார் - அன்றைய நாளில் தேவர்களாலும் முனிவர்களாலும் மிகுந்த புகழ் அடைந்தார்; அல்லோர்களும் மகிழ்ந்தார் - இறைவன் கோபம் நீங்கப் பெற்றதால் அனைவரும் இன்புற்றனர்;

*வி.54.* எமனுக்காக - இறந்துபட்ட காலனுக்காக; சங்கரன் - இறைவன்; கோபம் தன்னை - எமன்மீது கொண்ட சினத்தை; சமைத்த னன் - பொறுத்துச் சினம் தணிந்தார்; அரனே வேந்தர் - இறைவனான அரசனுக்கு; அமைத்தனன்மாலெல்லாம் அமைச்சனே - நல்ல மந்திரியாகத் திருமால் அமைந்தனன்; உமைக்கொரு பாகம் நல்கு உலகத்தில் - பார்வதிக்குத் தன் இடப்பாகத்தை அளித்த இறைவன் இப்பூமியில்; வெகுளி நீங்கி - கோபத்தை விட்டு; நிமைக்குமுன் - கண்ணிமைக்கும் நேரத்தில்; புரத்தைத் தீய்க்கும் - முப்புரங்களை எரித்த; நிமலனும் - இறைவனும்; பொறுதியானார் - கோபத்தை விட்டுப் பொறுமையானார்;

பா.வே. - 'அமைத்தனன் மாலோன் நல்ல அமைச்சனே' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*1905.* ஆதி அரன் பாதம் - மூலமுதற் கடவுளாம் சிவனுடைய பாதத்திலிருந்து; ஆழிமால் - கடல்வண்ணன் திருமால்; மந்திரியாய் - அமைச்சனாக இருந்து நீதிகளை எடுத்துக் கூறினார்; பா.வே. - 'ஆதிஅரன் அரசன்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1906.* நீதி சிறக்க - உலகத்தில் தர்மம் நிலைக்கவும்; நிறைந்த மகிழ்ட்சி (< மகிழ்ச்சி) பொங்கி - இன்பம் மிகுந்து விளங்கவும்; பா.வே. - 'சிறந்த மகிழ்ச்சி' (மா.தவநிலை);

தத்தி விழுந்த தாரணியி லேமனையும்
சித்திரமா யீசர் சிறுவா வாவென்றுரைத்தார்
செவ்வி லெழுந்தான் சிறந்தெழுந்த திங்களைப்போல்
ஏழு முகமு மிலங்குபுய மீரேழும்
சூழுங் கிரீடம் துலங்குங் கதிரெனவே
சூழுங் குழையுந் துலங்குசுடர்க் குண்டலமும்
சூலவேல் பாசஞ் சுடர்வாள் கனகதண்டு
ஏழு பிறைப்போ லெய்யிறுஞ் சிலை நுதலும்

1907. தத்தி விழுந்த தாரணியில் - உதைபட்டு விழுந்து கிடந்த பாதாள இடத்திலிருந்து; ஏமனையும் - காலனையும்; பா.வே. - 'விழும் சிறந்த' (ச.ம.நூ.); 'விழுந்திறந்த' (மா.தவநிலை); 'சண்டனெனும் காலனையும்' (கை.பிரதி);

1908. சித்திரமாய் - ஓவியம் போன்று மிக அழகாக; சிறுவா - எமனே; ஈசர் வா என்று உரைத்தார் - உயிர் பெற்று இங்கே வருவாய் என அருளி அழைக்கலுற்றார்; பா.வே. - 'சிரித்து வா' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1909. சிறந்தெழுந்த திங்களைப்போல் - தண்மையுடன் புதுப்பொலிவுடன் முழுமதி எழுவதுபோன்று; செவ்வில் எழுந்தான் - ஈசர் அழைக்கவும் எமன் செம்மையாக உயிர்பெற்று எழுந்து வந்தான்;

1910. ஏழு முகமும் - அவ்வாறு புதுப்பொலிவுடன் எழுந்து வந்தபோது ஏழு முகத்துடனும்; இலங்குபுயம் ஈரேழும் - விளங்கக் கூடிய புயங்கள் பதினான்குடனும்;

1911. சூழும் கிரீடம் - ஏழுதலைகளிலும் சூடியிருக்கக் கூடிய பொற்கிரீடம்; துலங்கும் கதிர் எனவே - பிரகாசிக்கும் சூரியனைப் போன்று விளங்கவும்; பா.வே. - 'கதிரவன் வொளிபோல்' (மா.தவநிலை); காண்க: 'கிரீடம்' (1535);

1912. சூழும் குழையும் - விளங்கக்கூடிய காதுகளில் மகரக் குழைகளும்; துலங்கு சுடர்க்குண்டலமும் - அத்துடன் ஒளிவீசக் கூடிய குண்டலங்கள் விளங்கவும்; பா.வே. - 'இரத்தின குண்டலமும்' (ச.ம.நூ.); காண்க: 'குழை' (1322);

1913. சூலவேல் பாசம் - கைகளில் சூலாயுதம், வேலாயுதம், பாசக்கயிறு; இவைகளையும்; சுடர்வாள் - ஒளிமின்னும் வாட்படையும்; கனக தண்டு - பொன்னாலான தண்டாயுதமும் தரித்து; பா.வே. - 'எமபாசம்', 'தொடர்வாள்' (ச.ம.நூ.); 'துடிவாள்கள் யெமத்தண்டு' (மா.தவநிலை); 'துடிவாள்' (கை.பிரதி);

1914. ஏழு பிறைப்போல் - ஏழு பிறைச் சந்திரர்கள் போல்;

ஆலு மரவு வாகுநிமிச சக்கரமும்
கண்ட கோடாலி கனமமு வாயுதமும்
செண்டு மிடியுஞ் சிறந்த மழுவேந்தி
முண்டன் மிகுயெமன் முகடுமுட்டித் தானெழுந்து
கொண்டல் நிறத்தில்மிகு கோலமலை போலே
சூரியனுங் கீழ்[த்]திசையில் தோன்றி யெழுந்தாப்போல்
வீரியமாய் யோர்சுருப மீண்டு யரனார்போல்
ஆதி யரனாரு மானலிங்க மூடுருவி
நீதி யுடனே நிமன்வந்த வாறதுபோல்

எய்யிறும்< எயிறும் - பற்களும்; சிலை நுதலும் - வளைந்த வில் போன்ற நெற்றிகளும்; பா.வே. - 'ஏழ்இருஞ்சிலை' (ச.ம.நூ.);

1915. ஆலும் அரவும் - ஆடக்கூடிய பாம்பும்; வாகுநிமிச சக்கரமும் - வாகான சிமிட்டக் கூடிய சக்கராயுதமும்; பா.வே. - 'ஆலமறவு அடர் நேமி' (ச.ம.நூ.); 'அலறநேமி' (மா.தவநிலை);

1916. கண்டகோடாலி - (1458) தரிக்கக் கூடிய சிறு கோடரியும்; கனமழு ஆயுதமும் - கனத்த மழுப்படையும்;

1917. செண்டும் - செண்டாயுதமும்; இடியும் - இடிப்படையும்; சிறந்த மழு ஏந்தி - சிறப்பான மழுக்கருவியையும் தாங்கிக் கொண்டு; பா.வே. - 'கொண்டல் இடி' (மா.தவநிலை, கை.பிரதி);

1918. முண்டன் மிகு எமன் - உருவம் பெருத்த எமதர்மன்; முகடு முட்டித் தான் எழுந்து - பாதாளத்திலிருந்து வான் வரை உயர எழும்பி;

1919. கொண்டல் நிறத்தில் - கறுத்த மேகம் போன்ற நிறத்தையுடைத் தும்; மிகு கோல மலைபோல - பெரிய உறுதியான குன்றைப் போன்றும்; காண்க: 'கொண்டல்' (வி.40);

1920. சூரியனும் - கதிரவனும்; கீழ்[த்]திசையில் - உதயதிசையில்; தோன்றி - உதித்து; எழுந்தாப்போல் - கடலிலிருந்து மேல் எழுந்து;

1921. வீரியமாய் - முன்னைவிடவும் மிக்க ஊக்கத்துடன்; ஓர் சுருபம் (< சுரூபம்) - ஒரு வடிவம்; மீண்டு - மறுபடியும்; அரனார்போல் - மற்றொரு சிவனைப் போன்று;

1922. ஆதிஅரனாரும் - மூலமுதற்சிவனும்; ஆனலிங்கம் ஊடுருவி - கோவிலில் இருக்கக்கூடிய இலிங்கத்திலிருந்து முகிழ்ந்து எழுந்தாற் போல்;

1923. நீதியுடனே நிமன் வந்தவாறு - தர்மத்தை நிலைநாட்டும் எமன் பாதாளத்திலிருந்து வந்தவிதம்; அதுபோல் - சிவன் சிலையிலிருந்தும் வந்ததுபோலிருந்தது;

விளக்கு மறுவிளக்கில் விசையாகப் பத்துகைபோல்
1925 துளக்கும் புகழ்ஏமன் தோன்றினா ரீசரிடம்

**விருத்தம்**

அத்தனார் கோபந் தன்னி
லான பாதாளஞ் சேர்ந்தான்
சித்தனார் மகிழ யேமன்
சிறப்புட னெழுந்து நின்றான்
பத்தனார் தனக்கு நல்ல
பரகதி யருளுந் தேவர்
கத்தனார் மாய்கை செய்த
காரண விறைவன் றானே (55)

**நடை**

யீசரிடந் தன்னி லிருந்தயந்த யெமனையும்
வர்சமிகு மால்பிரமன் வாரணனும் வேலவரும்

**1924.** விளக்கும் மறுவிளக்கில் - எரிந்து கொண்டிருக்கும் தீபம் மற்றொரு தீபத்தை; விசையாகப் பத்துகைபோல் - வேகத்துடனும் பொலிவுடனும் ஏற்றுதல் போல்; (பத்துகை< பற்றுகை); பா.வே. - 'விளக்கமதில்' (ச.ம.நூ.);

**1925.** துளக்கும் புகழ் எமன் - புகழ் விளங்கக்கூடிய எமதர்மன்; தோன்றினான் ஈசரிடம் - கயிலாயத்திலிருந்த இறைவன் முன்பில் வந்து நின்றான்; பா.வே. - 'துலங்கும்' (மா.தவநிலை);

**வி.55.** அத்தனார் - இறைவன்; கோபந்தன்னில் - சினத்தால்; ஆன பாதாளஞ்சேர்ந்தான் - உதைத்ததால் பாதாள உலகத்தில் விழுந்திறந்த எமன்; சித்தனார் - அந்த இறைவனே; மகிழ - கோபந்தணிந்து கூப்பிட; யேமன் சிறப்புடன் எழுந்து நின்றான் - மீண்டும் உயிர்த் தெழுந்தான்; பத்தனார் தனக்கு - பக்தியுடைய அடியவர்களுக்கு; நல்லபரகதி அருளும் தேவர் - கயிலாயத் திலிருக்கும் வரத்தை இறைவன் நல்குவார்; கத்தனார் - அந்த இறைவனுடைய; மாய்கை - திருவிளையாடலை; செய்த காரண விறைவன்றானே - புரிந்த காரணத்தை அவரே அறிவார்;

பா.வே. - 'பாதந்தன்னால்', 'மாய்கை தன்னை காணுவார் யெவரே' (மா.தவநிலை, கை.பிரதி); காண்க: 'பாதாளம்' (1734);

**1926.** ஈசரிடம் தன்னில் - இறைவனின் முன்பு; இருந்த அந்த எமனையும் - நின்று கொண்டிருந்த எமதர்மராசனை; பா.வே. - 'எழுந்தி ருந்த காலனையும்' (கை.பிரதி);

**1927.** வாசமிகு - புகழ் மிகுந்த; மால் - திருமால்; பிரமன் - வேதன்;

சுத்துபுகழ்த் தேவர்களுஞ் சூட்சமிவை கண்டுரைப்பார்

விருத்தம்

படியின்கீழ்ப் பதைத்து வீழ்ந்து
பாரின் கிழிருந்த யேமன்
அடியின் கீழிருந்து வந்த
யதிசெய மெவருங் கண்டு
மடிவதும் பிறப்பு மாய்கை
யாவர்க்கு முற்ற சூட்சம்
நெடியில் நின்றாடும் மீசன்
யாவர்க்கும் பெரியோ னென்றார் (56)

எமன் இறைவனைத் துதித்தல்

நடை

கால னெழுந்திருந்து காரணனார்[ப்] பாதமதில்

வாரணனும் - விநாயகனும்; வேலவரும் - முருகப் பெருமானும்; பா.வே. - 'வானவரும் வேலவரும்' (மா.தவநிலை);

......'மெத்தநிறையோர் (தேவர்-கை.பிரதி) முனிவர் மீறு திங்கள் சூரியனும்' (மா.தவநிலை, கை.பிரதி);

1928. சுத்து< சுற்று - சூழ்ந்து நின்று கொண்டிருக்கும்; புகழ்த் தேவர்களும் - புகழினையுடைய வானவரும்; சூட்சம் இவை கண்டுரைப் பார் - காலன் வந்த புதுமையினைப் பார்த்து இவ்வாறு கூறுவர்; காண்க: 'சூட்சம்' (571, 1877, வி.56, வி.66);

வி.56. படியின் கீழ் - பூமியின் கீழ்; பதைத்து வீழ்ந்து - உதைபட்டு விழுந்திறந்து; பாரின்கீழிருந்த யேமன் - பாதளத்தில் கிடந்த எமதருமன்; அடியின் கீழிருந்து வந்த - மீண்டும் உயிர்பெற்றுக் கீழிருந்து மேலே வந்து இறைவனிடம் வந்த; அதிசெயம் எவரும் கண்டார் - விந்தையை அங்கு நின்றிருந்த தேவர், முனிவர் எல்லோரும் பார்த்தனர்; மடிவதும் - இறப்பதும்; பிறப்பதும் - மறுபிறவி எடுப்பதும்; மாய்கை - இப்படி யான மாயச் செய்கை; யாவர்க்கும் உற்ற சூட்சம் - மனிதர்க்கும் மற்றவர்களுக்கும் உரிய ஊழ்வினைதான்; நெடியில் - எப்போதும் புகழுடன்; நின்றாடும் ஈசன் - திருநடனம் புரிந்து கொண்டுள்ள இறை வனே; யாவர்க்கும் - எல்லோரையும்விட; பெரியோன் என்றார் - உயர்ந்தவர் என ஆங்கு நின்றிருந்த அனைவரும் புகழ்ந்தனர்;

பா.வே. - 'அமரர்கண்டு', 'மாய்கையில் விளைந்த காட்சி', 'நொடி யில் நின்றாடும்' (ச.ம.நூ.); 'மதத்தான் காலகாலன்', 'நொடியில் நின்று யாட்டும் சோதி' (மா.தவநிலை, கை.பிரதி);

1929. காலன் எழுந்திருந்து - எமன், பாதாளத்திலிருந்து மீண்டும்

1930 சீலமுடன் தெண்டனிட்டு[ச்] சிந்தைமிக மகிழ்ந்து
லிங்கத்துக் குள்ளே நிமலனே நீயிருந்த
அங்கத்தை நானு மறியாமல் பேனேனே
மைந்தன் றனக்காய் மகிழ்ந்துபடி லிங்கமதை
அந்திமதி சூடு மரனேநீர் வீத்திருந்தீர்

1935 திங்க ளணிந்தசடை சீர்பாத மென்றறிந்தால்
சங்கம் நிறையரனே தான்வரவு வஞ்சினையோ
கண்டு னடியேன் கருணை சிவபூசைதவம்
கொண்டெனது நெஞ்சங் கோலமிகு பாதம்

உயிர் பெற்று வந்து; காரணனார்ப் பாதமதில் - எல்லாவற்றுக்கும் மூலமாக விளங்குகின்ற இறைவனின் திருப்பாதங்கள் மீது;

1930. சீலமுடன் - சிறப்புடன்; தெண்டனிட்டு - கிடந்து வணங்கிப் போற்றி; சிந்தை மிகமகிழ்ந்து - உள்ளம் உவகையுற்று;

1931. லிங்கத்துக்குள்ளே - சிவலிங்கத்துள்ளே; நிமலனே - மாசற்ற இறைவனே; நீ இருந்த - நீவிர் உறைந்திருந்த;

1932. அங்கத்தை - (453) உருவை; நானும் அறியாமல் போனேனே - நான் தெரிந்து கொள்ளாது இருந்துவிட்டேனே; பா.வே. - 'அறியாது உழன்றேனே' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1933. மைந்தன் தனக்காய் - ஒரு சிறுவனுக்காக; மகிழ்ந்து - அவன் செய்த சிவபூசையில் இன்பமுற்று; படிலிங்கமதை - கல்லால் உருவான இலிங்கத்துள்;

1934. அந்திமதி சூடும் அரனே - பிறையினைத் தலையிலணியும் இறைவனே; நீர் வீத்திருந்தீர் (< வீற்றிருந்தீர்) - உறைந்திருந்தீர்;

1935. திங்கள் அணிந்த சடை - திருமுடியில் சந்திரனைச் சூடியுள்ள; சீர்பாதம் என்று அறிந்தால் - இறைவனின் திருத்தாள்கள் இலிங்கத்துள் இருந்ததை அறிந்திருந்தால்;

1936. சங்கம் நிறை அரனே - மன்றில் நிறைந்துள்ள ஈசனே; தான்வரவு வஞ்சினையோ - இலிங்கத்துள் வந்து இருந்த உமது வரவு எனக்கு வஞ்சனை உண்டாக்கி விட்டதோ;

1937. கண்டு உன் அடியேன் - உன் திருப்பாதங்களைப் பார்த்து; கருணை சிவபூசைதவம் - அன்பான சிவவழிப்பாட்டினை; பா.வே. - 'கண்டேன் அடியேன்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1938. கொண்டு எனது நெஞ்சம் - என் உள்ளம் ஏற்றுக் கொண்டது; கோலமிகு பாதம் - எழில் பொருந்திய உம் திருப்பாதங்கள்; பா.வே. - 'கொண்டேன் எனது நெஞ்சம்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

பூவுலகில் யாவர்களும் பூசைசெய்தா ராமாகில்
தேவே யவர்களிடஞ் செல்லே னொருநாளும்
மார்க்கண்டன் பூசைநெறி வாகுடனே கேட்டவர்மேல்
தாக்குடனே னாணுகேன் தாண்ட[வ]மாடுஞ் சிவனே
திருப்பாதம் மேல்படவுஞ் செய்தென் வலுதவங்கள்
பொருப்பி லிருக்குகின்ற பொற்பாதம் பட்டதினால்
எந்தன் தவமுயர்ந்து யீடேற நானடியேன்
மைந்தனுக்காய் வந்தகுத்தம் வாகாய்ப் பொறுத்தருளீர்
என்று வலுகால னீசர்மன மகிழ

*1939.* பூவுலகில் - பூமியில்; யாவர்களும் - எவரும்; பூசை செய்தார் ஆமாகில் - வழிபாடு செய்வார்களே எனில்; பா.வே. - 'பூசை சிவனிதை வம்' (மா.தவநிலை, கை.பிரதி);

*1940.* தேவே - தேவனே; அவர்களிடம் ஒருநாளும் செல்லேன் - அப்படியான சிவனடியார்கள் பக்கம் ஒருநாளாவது மரணத்தை மேற் கொண்டு செல்லமாட்டேன்;

*1941.* மார்க்கண்டன் பூசை நெறி - மார்க்கண்டேயன் செய்த சிவபூசையின் கதையை; வாகுடனே கேட்டவர்மேல் - விரும்பிக் கேட்ட பக்தர்கள் பக்கமும்;

*1942.* தாக்குடனே நான் அணுகேன் - அவர்களை எதிர்த்து அருகில் செல்லமாட்டேன்; தாண்ட[வ]மாடுஞ்சிவனே - நடராசனே;

*1943.* திருப்பாதம் - உமது சிறப்பான கால்; என் வலுதவங்கள் - நான் செய்த வலுவான தவங்களினால் தான்; மேல் படவும் - என்மீது தொடவும்; செய்த - செய்துள்ளன; பா.வே. - 'கனதவங்கள்' (மா.தவ நிலை, கை.பிரதி);

*1944.* பொருப்பில் இருக்குகின்ற - கயிலை மலையில் இருக்கும்; பொற்பாதம் பட்டதினால் - என்மேல் தொட்டதால்; பா.வே. - 'புகழ்பா தம்' (மா.தவநிலை); 'திருப்பாதம்' (கை.பிரதி); காண்க: 'பொருப்பு' *(1507)*;

*1945.* எந்தன் தவம் உயர்ந்து - நான் மேற்கொண்டு ஒழுகிய தவக மேன்மையுற்று; ஈடேற நானடியேன் - உம் அடியவனான நான் கடைத்தே றுவதற்கு;

*1946.* மைந்தனுக்காய் வந்த - சிறுவனுடைய உயிரைப் பறிக்க நானே வந்த; குத்தம்< குற்றம் - பிழையை; வாகாய்ப் பொறுத்தருளீர் - வகையாக மன்னித்து அருளுவீராக;

*1947.* என்று வலுகாலன் - இவ்வாறு எமதர்மன்; ஈசர் மனமகிழ - இறைவன் இன்பமுற;

நின்று திருவிருத்தம் நேசமுட னோதலுற்றான்

## திருவிருத்தம்

அகரமுத லாதியா யவ்வே யண்ட
ரண்ட வெளிபுவன மவ்வே யான
மகரவிழியோன் மலரோ னிருவர் சூட்டு
மாய்கை கடந்து பின்னுவெகுமாய்கை திட்டி
சிகரநிறை புவனடக்கி யடக்க மாட்டித்
திடுக்கிடவுங் குடல்வழியே சென்னி முட்டி
நிகரவிழி யெவையுமவை யறியா நின்ற
நிமலனே நின்பெருமை நினவுத் தோனே (57)

வேதனே மாலவனே யீசா காலா
வினைபலவும் பரந்துநின்று மாடும் வேடா

*1948.* நின்று திருவிருத்தம் நேசமுடன் - இறைவன் முன்பில் பக்தியுடன் நின்று, திருவிருத்தங்களை; ஓதலுற்றான் - பாடத் தொடங்கினான்; காண்க: 'திருவிருத்தம்' *(325)*;

*வி.57.* அகரமுதல் ஆதியாய் அவ்வே - தமிழ் எழுத்துகளில் முதலாவதாக 'அ' விளங்குகிறது; அண்டரண்டம் வெளிபுவனம் அவ்வேயான - அதைப்போன்றே அண்டங்களுக்கும் வெளியில் நிறைந்துள்ள உலகங்களுக்கும் இறைவனான நீவிர் முதன்மையாய் அமைந்துள்ளீர்; மகரவிழியோன் - திருமால்; மலரோன் - பிரமா; இருவர் சூட்டும் மாய்கை கடந்து - இவ்விருவரும் நிகழ்த்தக்கூடிய வினைகளையும் விஞ்சி; பன்னும் மாய்கை மேலும் பல மாயங்களை; திட்டி< திஷ்டி< திருஷ்டி< சிருஷ்டி - தோற்றுவித்து; சிகரநிறை - கயிலை மலைவரையும் நிறைந்துள்ள; புவனடக்கி - புவனங்களான உலகங்களை அடக்கி ஆண்டு; அடக்கம் ஆட்டி - அப்புவனங்களிலுள்ள அனைத்தையும் ஆட்டுவித்து; திடுக்கிடவுங் குடல்வழியே சென்னி முட்டி - திடீரென வலிவந்து கர்ப்பப்பையிலுள்ள குழந்தை வெளியேறுவதற்குரிய கர்ப்பக் குடல் வழியாகத் தன் தலையை முதலில் இடித்து வெளியேறு மாறு செய்து, படைப்புகளைப் படைத்து; நிகரவிழி எவையும் - பின்பு விழித்துப் பார்க்கும் உயிரினங்கள் எல்லாம்; அவை அறியா நின்ற - அவற்றின் பார்வைக்குத் தெரியாதவாறு உயர்ந்து விளங்கும்; நிமலனே - குற்றமற்ற இறைவனே; நின் பெருமை - உமது பெருமைகளை நினவுத்தோனே < நினைவுற்றோனே;

பா.வே. - 'நினைவுற்றேனே' (ச.ம.நூ.); 'நினவுற்றோனே' (மா.தவநிலை, கை.பிரதி);

*வி.58.* வேதனே - பிரமனாகவும்; மாலவனே - திருமாலாகவும், ஈசா - இறைவனாகவும்; காலா - அழிக்கும் தெய்வம் ருத்திரனாகவும்,

நாதனே மயல்பெரும் பேயா பித்தா
நளினமிகு யறிவுடைய அழிவி லானே
சூதனே யழகுடயா யழகில் லானே
சுகமறியா யறிவுயர்த்துந் துறவு வீடாய்
நீதனே யெவைபகரும் பேசா நின்ற
நிமலனே நின்பெருமை நினவுத் தோனே. (58)

காயாகி விளைபழமாய் விரையி னூடே
கலந்த முகிலே கருணை யானுள்
நாயாகி யுனதுபதம் நல்கி யுந்தன்
நளினமலர்ப் பாதமென் கருணை னாதா
சேயாகி முகமாகி யருளே கொண்டு
சிறந்தவலு சூரற் பகைவா தேவதேவே
நீயாகி நின்றதேவை யெவருங் காண
நிமலனே நின்பெருமை நினவுத் தோனே (59)

ஆக மும்மூர்த்திகளாயும் அவர்களுக்கு முதல்வனாகவும் விளங்குபவனே; வினைபலவும் பரந்து நின்றும் - எல்லாத் தொழில்களிலும் நிறைந்து விளங்கியும்; ஆடும் வேடா - நடனமும் ஆடும் வேடதாரியாகிய இறைவனே; நாதனே - (நாதமாக) ஒலியாக விளங்குபவனே; மயல் பெரும் பேயா - மயக்க நிலையினையுடைய பெரிய பேய்போன்று உலாவுவோனே; பித்தா - பித்தனைப் போன்று திரிவோனே; நளினமிகு - மென்மைமிகுந்தும்; அறிவுடைய - ஞானம் மிகுந்தும்; அழிவு இலானே - இறுதி என்பது இல்லாத இறைவனே; சூதனே - சூத்திரதாரியே; அழகுடயாய் < அழகுஉடையாய் - அழகான சொரூபமானவனே; அழகில் லானே - அழகு இல்லாத பித்தன் சொரூபமும் உள்ளவனே; சுகமறியாய் - இன்பம் அறியாதவனே; அறிவுயர்த்தும் துறவு வீடாய் - ஞானத்தால் உயர்ந்து துறவு காத்து வீட்டின்பம் பெறுபவனே; நீதனே - தர்மவானே; எவை பகரும் - பேசுவன எல்லாம் பேசியும்; பேசா நின்று - பேசாது மௌனமாயும் நின்ற; நிமலனே - குற்றமற்றவனே; நின்பெருமை - உனது பெருமைகளை; நினவுத்தோனே < நினைவுற்றோனே;

வி.59. காயாகி - பிஞ்சு வளர்ந்து காயாகவும்; விளைபழமாய் - முற்றிய கனிந்த கனியாகவும்; விரையின் ஊடே - அப்பழத்தினுள்ளே இருக்கும் விதையிலும்; கலந்த - சேர்ந்த; முகிலே - மேகமனையவனே; கருணை யான் உள் - அன்பினனே! நான் உள்ளே; நாயாகி - நாயடியே னுக்கு உனதுபதம் நல்கி - உனது திருவடிப் பேற்றைத் தந்து; உந்தன் - உம்முடைய; நளினமலர்ப் பாத மென் - மென்மையான பூக்களைப் போன்ற திருப்பாதங்களான; கருணை - அன்பான; நாதா - நாதமான

காரை விண்ணிலே நடத்தி மின்னில்வெட்டுக்
கருணைநெடு விலைநாட்டிச் சரத்துட் டாக்கி
சீரையெண்ணி மழைபொழிய எவையுண் டாக்கி
திசைசூழ மதிபகலாய்த் தினமா நாளாய்
பாரைமண்டிப் பக்கமிகு வார மாகிப்
பலவித நட்சேத்திரமாய்ப் படந்தொன் றாகி
நீரையீந்து சடையணிந்து நீறு பூசும்
நிமலனே நின்பெருமை நினவுத் தோனே (60)

வாசமிகு மலராகி வாச மாகி
மகிழ்வு படிலிங்கமதே யீச னாகி

இறைவனே; சேயாகி - குழந்தையுமாகி; முகமாகி - இனியமுகமும் ஆகி; அருளே கொண்டு - கருணை நிறைந்து; சிறந்தவலு சூரர் - பெரிய வலிமையுடைய அசுரர்களின்; பகைவா - பகைவனே; தேவ தேவே - வானவர்களுக் கெல்லாம் முதன்மையானவனே; நீயாகி நின்ற தேவை எவருங்காண - இறைவனான நீயே வந்து தோன்றிநின்றதை எல்லோரும் பார்க்க; நிமலனே - குற்றமற்ற கடவுளே; நின்பெருமை - உனது பெருமைகளை; நினைவுத்தோனே < நினைவுற்றோனே;

வி.60. காரை - மேகக் கூட்டங்களை; விண்ணிலே நடத்தி - வானத்தில் காற்றால் ஓடச் செய்து; மின்னில் வெட்டு - அவை ஒன்றோடொன்று உராயும்போது பளிச்சென மின்னல்களைத் தோன்றச் செய்து; கருணை நெடு - மிகப்பெரிய; விலை< வில்லை (வானவில்); நாட்டி - வானத்திலே ஏற்படச்செய்து; சரத்துட்டாக்கி< சரத்துள் தாக்கி - அம்புகளால் படச்செய்து; சீரை எண்ணி மழைபொழிய - நன்மை கருதி மழை பெய்ய; எவையுண்டாக்கி - நீரால் செழிக்கும் உயிரினங்க ளையெல்லாம் படைத்து; திசை சூழ - பல திசைகள் சூழ்ந்து நிற்கவும்; மதி - நிலவு (இரவு); பகலாய் - கதிரவன் (பகல் பொழுதாய்); தினமாநாளாய் - இரவுபகல் மாறி வரும் நாள்களாய்; பாரை - பூமியை; மண்டி - நெருங்கி; பக்கமிகு வாரமாகி - ஏழுநாள்கள் ஒரு வாரம் என ஆகி; பலவித நட்சேத்திரமாய் - பல வகையான விண்மீன்களுமாக; படந்தொன்றாகி< படர்ந்து ஒன்றாக ஆகி - பலவிடத்தும் விரிந்து கிடந்தவை உன்னிடத்திலே அவை ஒன்றாக ஆகிக்கிடக்கும்; நீரை ஈந்து - கங்கை எனும் நீரை வழங்கி; சடையணிந்து - விரிசடையிலே அவற்றைச் சூடி; நீறுபூசும் - மேனிமுழுவதும் திருநீற்றைப்பூசும்; நிம லனே - குற்றமற்ற இறைவனே; உன் பெருமை - உனது பெருமைகளை; நினவுத்தோனே < நினைவுற்றோனே;

வி.61. வாசமிகு மலராகி - மணம் மிகுந்து வீசும் பூக்களாகி; வாசமாகி - அந்த வாசமாயும் ஆகி; மகிழ்வு படிலிங்கமதே - விரும்பத் தக்க இலிங்கமாகக் கல் ஆகி; ஈசனாகி - அக்கல் இலிங்கத்துள்ளே

பாசமிகு நெறியுடையார் மனதில் நின்று
பாங்குடனே பூசைசெய்யப் பூசை செய்தாய்
தேசமெவை யவையாகத் தேட னின்று
தேடியவை காணாத தேவ தேவே
நேசமுடன் மைந்தனுக்காய் வந்தா யாதி
நிமலனே நின்பெருமை நினவுத் தோனே (61)

தாங்காம லோனிவழி விந்து வோடி
தாபரிளை யதைத்திருத்தி வாசல் பூட்டி
ஏங்காம லுதிரமெல்லாந் தாது வாக்கி
யிவ்விரையிலே பாச்சி யிறைவை மாத்தி
வாங்காம லுடன்பொருத்தி விதியுமூட்டி
வளமை ஐந்துபூதமதை வைத்து யாட்டி
நீங்காமல் கொண்டுவந்து வெளியி லாட்டும்
நிமலனே நின்பெருமை நினவுத் தோனே (62)

கடவுளாக இருந்து; பாசமிகு நெறியுடையார் - அன்புடைய நல்ல நெறியில் வந்த பக்தர்களின்; மனதில் நின்று - உள்ளத்திலே நீங்காது உறைந்து; பாங்குடனே பூசை செய்ய - அவர்கள் ஒழுங்குடன் உன்னை வழிபட; பூசைசெய்தாய் - அவ்வன்பர்களுக்கு அருளினாய்; தேசம் எவையாகத் தேட நின்று - எல்லாத் தேசங்களிலும் நிறைந்து நின்ற உன்னை எங்கிருக்கிறாய் எனத்தேடுமாறு நிற்பவனே; தேடியவை காணாத - அவ்வாறு தேடும்போது கண்டுபிடிக்கவியலாத; தேவ தேவே - தேவர்களுக்கெல்லாம் கடவுளாக நிற்பவனே; நேசமுடன் மைந்தனுக் காய் வந்தாய் - சிறுவன் செய்த சிவபூசையில் மகிழ்ந்து அவன்பால் அன்புடன் இலிங்கத்துள்ளிருந்து வெளியில் வந்து அருளினாய்; ஆதி - முதலே; நிமலனே - குற்றமற்ற ஈசனே; நின்பெருமை - உன்பெருமை களை; நினவுத்தோனே - நினைவுற்றோனே;

வி.62. தாங்காமலோனி வழி விந்து ஓடி - ஆண்பெண் உறவின் போது, ஆணின் விந்து பெண்ணின் லோனி வழியாகச் சென்று கருப்பை யினுள் அடைந்து; தாபரிளையதைத் திருத்தி - அங்கு நிலைபெற்றுள்ள கருவைச் சேர்ந்து; வாசல் பூட்டி - கருப்பையினை மூடச் செய்து; ஏங்காமல் உதிரமெல்லாம் தாதுவாக்கி - தாயின் குருதி கருவுற்ற உயிரை வளர்ப்பதற்காக ஆகி; இவ்விரையிலே பாச்சி - அவ்வுயிரின் மீது வந்தடைந்து; இறைவை - அச் சிறு உருவை; மாத்தி - மாற்றி - உருமாற்றி வளர்ச்சியடையச் செய்து; வாங்காமல் உடன் பொருத்தி விதியும் ஊட்டி - அவ்வாறு வளர்ந்த உடலுடன் அதற்கான விதியையும் சேர்த்துப் படைத்து; வளமை ஐந்து பூதத்தை - விளங்குகின்ற ஐம்பூதங்களான நிலம், நீர், காற்று, தீ, விசும்பு என்பவற்றால்; வைத்து ஆட்டி -

ஓராறு சமையமெவை யவையு மாகி
யுலகமெவை ஐந்துமுகம் ஐந்தா நின்றாய்
ஆறாறு தத்துவங்க ளாடி யோங்கி
அப்பிரமுந் தான்படர்ந்து கொழுந்து விட்டு
சீராறு கடந்தகன்று ஒளியா யோங்கித்
திருவுருவாய் நாதாந்தச் சிகர மேறி
நீராறு சூடியது கடந்து நின்ற
நிமலனே நின்பெருமை நினவுத் தோனே (63)

ஆதியா யகண்டவெளி புவனத் தோங்கி
யலைகடலா யவ்வையாகி யரனு மாகிச்

அவ்வுயிருடன் இணைத்து அவற்றால் கட்டுப் படுத்தி; நீங்காமல் கொண் டுவந்து வெளியில் ஆட்டும் - வளர்ச்சி அடைந்த நிலையில் அவ்வுயிரைத் தவறாது தாயின் வயிற்றிலிருந்து வெளியே, உலகத்தில் கொண்டு வந்து, பின்பு அவ் உலகத்தில் அதனை ஆட்டிவைக்கின்ற; நிமலனே - குற்றமற்ற இறைவனே; நின்பெருமை - உனது பெருமைகளை; நினவுத்தோனே< நினைவுற்றோனே;

வி.63. ஓர் ஆறு சமையம் - அறுவகை மார்க்கங்கள், சைவர்களால் ஏற்றுக் கொள்ளப்படும் உட்சமையம் ஆறு ஆவன: வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம்; எவை அவையுமாகி - எவையெல்லாம் உள்ளனவோ அவ்வச் சமயங்களும் நீ ஆகி; உலகம் எவை ஐந்துமுகம் ஐந்தாய் நின்றாய் - எவ்வெவ் உலகங்கள் உள்ளனவோ அங்கெல்லாம் ஐந்து முகத்தோற்றத்துடன் ஐந்து ரூபங்களுடன் விளங்கு கின்றாய்; ஆறாறு தத்துவங்கள் - 36 வகை தத்துவங்கள்; ஆடி யோங்கி - அவற்றில் திளைத்து; (ஆமன் தத்துவங்கள் 24, வித்தியா தத்துவங்கள் 7, சுத்த தத்துவங்கள் 5, ஆக 36 தத்துவங்கள் சைவசிந்தாந்தம் கூறுவன ஆகும்); அப்பிரமும் தான் படர்ந்து - மேலும் எல்லையற்று விரிந்து; (அப்பிரமும்< அப்புறமும் - 'அவற்றிற்கு அப்பாலும்' என்றும் பொருள் விரிக்கலாம்); கொழுந்துவிட்டு - நெருப்பாகக் கனன்று; சீர் ஆறு கடந்து அகன்று - சிறந்த ஆறு மார்க்கங்கள் அல்லது ஒழுக்கங்களையும் கடந்து மேலும் விரிந்து; ஒளியாய் ஓங்கி - சோதியாய் உயர்ந்து; திருவுருவாய் - சிறந்த வடிவாய், இறைவடிவாய்; நாதாந்தச் சிகரமேறி - ஒலியெனும் நாதத்தின் உச்சியினையும் அடைந்து; நீர் ஆறு சூடி - கங்கை என்ற நீரைத் தலையிலே அணிந்து; அது கடந்துநின்ற - அதையும் விஞ்சிநிற் கின்ற; நிமலனே - குற்றமற்ற இறைவனே; உன்பெருமை - உனது பெருமைகளை; நினவுத்தோனே< நினைவுற்றோனே;

வி.64. ஆதியாய் - எல்லாவற்றுக்கும் மூலவனாய்; அகண்ட வெளி புவனத்து ஓங்கி - விரிந்த விசும்பிலுள்ள அனைத்து உலகங்களிலும்

சோதியாய் சுடரொளியாய் யிருள தாகிச்
சூழ்புவியாய்த் தாபரமாய்த் துடர தாகிச்
சாதியாய்ப் பெண்ணுருவா யாண தாகிச்
சகலகலை மந்திரமுஞ் சருவ மாகி
நீதியா யுயிரிலரு ளுயிராய் நின்ற
நிமலனே நின்பெருமை நினவுத் தோனே (64)

வஞ்சகமாய்ப் பலபலவும் மாய்கை சூட்டி
மாலாகி மாலயனாய் வாது மூட்டி
கஞ்சமலர்த் தேனாகி வண்ட தாகி
கருணையொளி விழியாகி காட்சி கூட்டி
விஞ்சமகிழ் பகைவினையை விரிவு காட்டி
விதியில் வினையதுவழியே வீறு காட்டி
நெஞ்சகத்தில் விளையாடி நின்ற சோதி
நிமலனே நின்பெருமை நினவுத் தோனே (65)

நிறைந்து; அலைகடலாய் அவ்வையாகி - திரைகள் அலையும் கடலா கவே ஆகி; அரனும் ஆகி - இறைவனாகவும் அமைந்து; சோதியாய் சுடரொளியாய் - தீயாகவும் தீயின் ஒளியாகவும் அமைந்து; இருளதாகி - இருட்டாகவும் ஆகி; சூழ்புவியாய் - பல்வேறு திக்குகளில் சூழ்ந்து நிற்கக் கூடிய உலகங்களாகவும் ஆகி; தாபரமாய் - அவ்றை நிலைநிறுத் தும் ஆதாரமாகவும் ஆகி; துடரதாகி< தொடரதாகி - அவற்றை ஒன்றுடன் ஒன்று ஈர்த்து நிற்கும் சங்கிலித் தொடராகவும் ஆகி; சாதியாய் - பல்வேறுவகை உயிரினங்களாய் ஆகி; பெண்ணுருவாய் - பெண் வகை யாகவும்; ஆணதாகி - ஆண்வகையாகவும்; சகலகலை மந்திரமும் - ஆயகலைகளுக்குரிய சக்திப் பொருளாகவும் ஆகி; சருவமாகி - அனைத்து மாகி; நீதியாய் - தருமமாகவும்; உயிரில் அருளுயிராகவும் நின்ற - உயிர்களில் கருணை உயிராகவும் நின்ற; நிமலனே - குற்றமற்ற இறை வனே; நின்பெருமை - உனது பெருமைகளை; நினவுத்தோனே< நினை வுற்றோனே;

வி.65. வஞ்சகமாய் - சூதுடன்; பலபலவும் - அனேக; மாய்கை சூட்டி - மாயங்களைத் தோன்றச் செய்து; மாலாகி - மயக்கநிலையில் பித்துப்பிடித்து; மாலயனாய் - திருமாலாகவும், பிரமனாகவும் ஆகி; வாது மூட்டி - அவர்களுக்குள் வாதங்களைப் புரிவித்து; கஞ்சமலர்த்தேனாகி - தாமரை மலரிலுள்ள இனிமையான தேன்ஆகி; வண்டதாகி - அத்தே னைப் பருகவரும் வண்டாகவும் ஆகி; கருணையொளி விழியாகி - அருள் சுரக்கும் பார்வையுடைய கண்ணாகவும் ஆகி; காட்சி கூட்டி - காணுதலை யும் செய்து; விஞ்சமகிழ் பகைவினையை - கல்வி எனும் வித்தையால்

அந்தரத்தில் தாரகையு மீய்ந்து வெய்யோ
னதிருமிடி மின்மேகம் வந்த ராசன்
வந்தவழி போவர்களோ போனால் பின்னும்
வருவார்களோ போனவழி மாய்கை நீயே
எந்தனக்கு விதியறியா வாறும் னீயே
எவ்வுயிருமா நானணுக யேகுஞ் சூட்சம்
தந்தவனே கந்தனய்யா சரண மென்று
தாள்தொழுதான் எழுமுகத்துத் தரும ராசன் (66)

## இறைவன் எமனுக்கு அறிவுறுத்தல்

### நடை

சங்கரரும் மாமறலி தனையரு கழைத்து

வரும் இன்பத்தையும் எதிர்ப்புகளையும்; விரிவு காட்டி; பெரிதாகச் செய்து; விதியில் - ஊழில்; வினையது வழியே - கருமத்தின் ஊடே; வீறுகாட்டி - எழுச்சியைச் செய்து; நெஞ்சகத்தில் - அன்பர்கள் உள்ளத்தில்; விளையாடி - திருவிளையாடல்கள் செய்து; நின்ற சோதி - தங்கி நிற்கின்ற ஒளிமயமானவனே; நிமலனே - குற்றமற்ற இறைவனே; நின்பெருமை - உனது பெருமைகளை; நினவுத்தோனே< நினைவுற்றோனே;

வி.66. அந்தரத்தில் - ஆகாயத்தில்; தாரகையும் ஈய்ந்து - விண்மீன்களையும் தோன்றச் செய்து; வெய்யோன் - கதிரவன்; அதிரும் இடிமின் மேகம் - முழங்கும் இடியையும், பளிச்சிடும் மின்னலையும், மழைபொழியும் மேகங்களையும்; வந்தராசன் - இவற்றைப் படைத்த இறைவன்; வந்த வழி போவார்களோ - மனிதர்கள் பிறந்து வந்த வழியாகத் திரும்பவும் நுழையவியலாது; போனால் பின்னும் வருவார்களோ - இறந்துபோன உடலோடு திரும்பவும் இப்பூமிக்கு வரமாட்டார்கள்; போன வழி மாய்கை நீயே - அவ்வாறு அவர்கள் மரணமுற்று ஏகும் வழியாகிய மாயம் நீயே ஆகும்; எந்தனக்கு - எமனாகிய எனக்கு; விதியறியாவாறும் - நீதிகளை அறிந்து கொள்ள வியலாதபடிச் செய்தவனும்; நீயே - நீவிர் தான்; எவ்வுயிருமா நானணுக ஏகும் - எந்த உயிரானாலும் அதனுயிரைப் பறிக்க நான் செல்லுதற்கு; சூட்சம் - விதிகளை; தந்தவனே - அளித்தவனும் நீவிர்தான்; கந்தனய்யா - முருகனின் தந்தையானவனே; சரணம் என்று - நீவிரே என் அடைக்கலம் என; எழுமுகத்துத் தருமராசன் - ஏழு முகங்களுடன் விளங்கும் தோற்றம் உள்ள எமன்; தாள் தொழுதான் - இறைவனின் திருப்பாதங்களில் விழுந்து வணங்கினான்;

1949. சங்கரரும் - சிவனும்; மாமறலி தனை - எமனை; அருகழைத்து - பக்கத்தில் வருமாறு கூறி;

திங்களணி யீசுபரனார் செங்கையினாலே தழுவி
நடந்தநாள் விட்டுவிடு நாளிலினி நல்லோர்பால்
துடந்தே யணுகாதே தூரத்தில் போயகலு

**மரணம் அணுகாதவர்கள்**

கடந்த தவஞானங் கருணைசிவபூசை வல்லோர்
துடந்து நெறிநீதி துலங்கும் விரதமுள்ளோர்
பாரில்மிகு சீவன் பலவுமெமைத் தன்னுயிர்போல்
சீரில்மிகு குடையோர் சிந்தை வெகுளியில்லார்
அய்ய மெடுத்து யடைந்தோர் பசியமைற்றோர்

*1950.* திங்கள் அணி ஈசுபரனார் - சந்திரனைச் சடையில் சூடும் இறைவன்; செங்கையினாலே தழுவி - *(1044, 1224)* தமது சிவந்த மென்மையான கைகளால் எமனை அணைத்து அன்பு காட்டி;

*1951.* நடந்த நாள் விட்டுவிடு - கடந்துபோனதைப்பற்றி எண்ணாதே; நாளில் இனி - இனிவரும் நாள்களில்; நல்லோர்பால் - நல்லவர்களாகிய சிவனடியார்கள் பக்கத்தில்; பா.வே. - 'முன்போக நானிலத்தில் நல்லவர் மேல்' *(மா.தவநிலை, கை.பிரதி);*

*1952.* துடந்தே< துடர்ந்தே< தொடர்ந்தே; அணுகாதே - நெருங் காதே; தூரத்தே போய் அகலு - வேறுகாரியமாகக் கூட அப்பக்தர்கள் அருகில் செல்லாதே; பா.வே. - 'துலைதூரம்போய்' *(மா.தவநிலை, கை.பிரதி);*

*1953.* கடந்த தவஞானம் - ஆசைகளை அகற்றி; தவத்தால் ஞானநி லையை யுற்றவர்கள்; கருணை சிவபூசைவல்லோர் - என்மீது அன்புடன் சிவவழிபாட்டினை மேற்கொள்வோர்; பா.வே. - 'கடந்தவன் ஞானம்' *(ச.ம.நூ.);*

*1954.* துடந்து< துடர்ந்து< தொடர்ந்து - பலநாளாக; நெறிநீதி - சிவ நீதிநெறிகளை; துலங்கும் - விளங்கச் செய்யும்; விரதமுள்ளோர் - நல்லொழுக்கமுள்ள பக்தர்கள்;

*1955.* பாரில்மிகு சீவன் பலவுமெமை - இப்பூமியில் உயிர்வாழும் அனைத்து ஜீவராசிகளையும்; தன்னுயிர்போல் - தன்னைப் போலவே எண்ணி மதிக்கக் கூடியவர்கள்; பா.வே. - 'சீவன் பலஉயிர்கள்' *(ச.ம.நூ.);*

*1956.* சீரில் மிகு - நற்குணங்களிலேயே பெரிதான; குடையோர்< கொடையோர் - தானம் செய்வோர்; சிந்தை வெகுளியில்லார் - உள்ளத் தில் கோபம் இல்லாதவர்கள்; பா.வே. - 'சீரில் நிலையுடையார்' *(கை.பிரதி);*

*1957.* அய்யம் எடுத்து அடைந்தோர் - பிச்சை எடுத்தலை ஒழுக்கமா கக் கொண்டு வாழ்வோர்; பசி அமைற்றோர் - பிறருடைய பசியை

பொய்யில்லா மெய்யாய்ப் புகழில் நிலைத்து நின்றார்
நன்றி மறவாமல் நளினகுரு பக்தியுள்ளோர்
மன்றிலன்னை தந்தைபுத்தி வாகுதமிழ்க்
கேட்டிருப்போர்

**விருத்தம்**

பன்னுயிர் பலபல வகுத்த யாக்கையை
புன்னி மிருபொருள் போத்த வாழ்ந்தபேர்
மன்னுயி ரெவைகளை வருந்தி யாவையும்
எண்ணுவர் தன்னுயி ரனைய தாகவே (67)

பங்கவன் புதல்வன் பூவில்
பகர்ந்த சொல்தமிழ் நூலாய்ந்த

அமர்த்தி (-நிறுத்தி) யவர்கள்; (அமைற்றோர்< அமைத்தோர்< அமர்த்தி யோர்; பா.வே. - 'அகதிபசி அமைத்தோர்' (ச.ம.நூ.); 'அகதிபசி தணித்தோர்' (மா.தவநிலை, கை.பிரதி); ஒப்பிடுக: 'அய்யம்< ஐயம்' (847, 1273);

1958. பொய்யில்லா மெய்யாய் - மாறான பொய்களைக் கூறாது, உண்மைகளையே பேசி; புகழில் நிலைத்து நின்றோர் - உடம்பு அழிந்தாலும் புகழ் விளங்கக் கூடிய அளவில் பெருமை சேர்த்தவர்கள்;

1959. நன்றிமறவாமல் - செய்நன்றிமறவாது; நளின குருபக்தியுள்ளோர் - தமக்குக் கற்றுத்தந்த உயர்ந்த குருவின்மேல் (நன்றி மறவாத) என்றும் மதிப்பு வைத்திருப்போர்;

1960. மன்றில் - இவ்வுலகில்; அன்னைதந்தை புத்தி - பெற்றோர்களின் அறிவுரைகளையும்; வாகு தமிழ் - நல்ல தமிழ் நூல்களையும்; கேட்டிருப்போர் - கேட்டு அவற்றின்படி நடந்துவரும் நல்லோர்; (இவ்வாறானவர்களிடம் எமனே! நீ அணுகவேண்டாம்); பா.வே. - 'மண்ணில்... பத்திவாகும்யன்ன தானம் முள்ளோர்' (மா.தவநிலை); 'பக்தி அன்னதானஞ் செய்தோர்' (கை.பிரதி);

வி.67. பன்னுயிர் பல பல வகுத்த - பல உயிரினங்களை வெவ்வேறாகப் படைத்து; யாக்கையை - உடம்பை; புன்னி மிருபொருள் - விரும்பக்கூடிய கல்வி, செல்வம் எனும் இருபொருள்களையும்; போத்தி< போற்றி - பாராட்டி; வாழ்ந்தபேர் - வாழ்கின்ற நல்லவர்கள்; மன்னுயிர் எவைகளை - விளங்கக் கூடிய அனைத்து உயிரினங்களை; வருந்தி - இரக்கப்பட்டு; எண்ணுவர் தன்னுயிர் அனையதாகவே - அவ்வுயிரினங்களைத் தன்னைப் போல நேசிக்கின்றவர்களையும்;

வி.68. பங்கவன்< பங்கயன் புதல்வன் - பிரமா புதல்வனான அகத்தியன்; பூவில் - பூமியில்; பகர்ந்த சொல் - மொழிந்தனவாகிய;

தங்கிய புராண நீதந்
தான்கத் தோராத ரிட்டோர்
பொங்கி மகிழ்சேர் மெய்யார்ப்
புவிதனி லெவர்க்கு நல்லோர்
தங்கிய பூசை யோர்பால்
தருமனே யணுக வேண்டாம் (68)

சோலையும் வாவி கூவல்
சொரியலர் தரும சாலை
ஆலையம் வீடு தூப
மாதிசீர் மாலை பூசை
மேலையம் பசியை[க்] கண்டு
மேவினார் தம்மை[க்] கண்டால்
ஆலையம் நாமே யென்று
ஆழியா தகண்டு போவாய் (69)

தமிழ்நூலாய்ந்த - தமிழிலக்கண இலக்கியங்களை; தங்கிய - நிலைத்துள்ள; புராண நீதந்தான் - புராணங்கள் எடுத்துக் கூறுகின்ற நீதிகளை; கத்தோர்< கற்றோர் - படித்தோர்; ஆதரிட்டோர்< ஆதரித்தோர் - புராணங்களைப் போற்றும் அன்பர்கள்; பொங்கி மகிழ்சேர் மெய்யார் - மிகுதியான இன்பம் சேர்கின்ற உண்மையானவர்கள்; புவிதனில் எவர்க்கும் நல்லார் - இந்த உலகத்திலுள்ளவர்கள் பலருக்கும் நல்லவர்களாக உள்ள அன்பர்கள்; தங்கிய பூசையோர்பால் - சிவபூசையினை மேற்கொள்ளுவோர்கள், ஆக இவர்களருகே; தருமனே - எமனே; நீ அணுகவேண்டாம் - நீ (இவர்களை) நெருங்கவேண்டாம்;

பா.வே. - 'புகழின் நீதந்தான் கற்றோர்', 'அணுக வேண்டாம்' (ச.ம.நூ.); 'தமிழ்நூல் ஞானம்' , 'தங்கிய புராண நீதிதான் கற்றோர் வோதக் கேட்டோர்', 'பொங்கிய வணக்கம் முள்ளோர்' (மா.தவநிலை);

வி.69. சோலையும் - நல்ல மரங்களும் பூக்களும் விளங்கி மக்களுக்கு மகிழ்ச்சி தரும் பூங்காக்களை உருவாக்கியவர் பாலும்; வாவி - மக்கள், உயிரினங்களின் தாகத்தையும் பிறதேவைகளையும் ஈடுசெய்யும் நல்ல நீர்த் தடாகங்களை உருவாக்கியவர்பாலும்; கூவல் - நல்ல ஊற்றுகள் நிரம்பிய கிணறுகளை வெட்டியவர் பாலும்; சொரியலர் தரும சாலை - நன்னீர் வழங்கிப் பயணிகளின் தேவைகளை நிறைவு செய்யும் தரும சத்திரங்களைக் கட்டியவர்கள் பாலும்; ஆலையம் - கோவில்களைக் கட்டியவர்பாலும்; வீடு - பிறர் தங்குவதற்கு வீடு கட்டிக் கொடுத்தவர்கள் பாலும்; தூபம் ஆதி சீர் மாலை பூசை - அக்கோவில்களில் தீபம் அமைத்து, இறைவனுக்கு மலரால் வழிபாடு செய்வித்தவர்கள் பாலும்;

பொங்கு தவத்தினில் போகவும் வேண்டாம்
தங்கு தவத்தி லிருப்பவர் னாடும்
எங்கு மவர்க்கு யிணையில்லை மெய்யே
லிங்க மவர்க்கியல் நிற்பது நாமே (70)

**மரணம் அணுகக் கூடியவர்கள்**

**நடை**

எனக்கொத்த பேரிடத்தில் லேகாதே யென்னாளும்
உனக்கொத்த பேரை யுரைப்பே னவர்களிடம்
இரக்கமில்லா நெஞ்ச ரியல்தவங்கள் செய்யாதார்

மேலையம் பசியைக் கண்டுமேவினார் - மற்றவர்களின் வறுமையைக் கண்டு அதைப் போக்குவோர் பாலும்; தம்மை - இன்னோரன்னவர்களை; கண்டால் - பார்த்தால்; ஆலையம் நாமேயென்று - அவர்களே வழிபடக் கூடிய கோவிலாகுவர், அவர்களிடம் நாம் உறைந்துள்ளோம் என; ஆழியாது - அப்படிப் பட்டவர்களை வருத்தாது; அகண்டு< அகன்று - அணுகாது நீங்கி; போவாய் - போய்விடு;

பா.வே. - 'சோறிடும் தருமசாலை' (ச.ம.நூ.);

வி.70. பொங்குதவத்தினில் - தவம் மிகுதி செய்வோர் அருகில்; போகவும் வேண்டாம் - எமனே! நீ செல்லாதே; தங்கு தவத்தில் இருப்பவர் - எப்போதும் வழிபாட்டில் மேவியிருப்பவர்கள்; நாடும் - என்னையே அவர்கள் நாடியிருப்பர்; எங்கும் அவர்க்கு இணையில்லை - அப்படியானவர்களுக்கு எவ்விடத்திலும் யாராலும் ஈடுசொல்வது இயலாது; மெய்யே - இது உண்மையாகும்; லிங்கம் - சிவலிங்கம்; அவர்க்கியல் நிற்பது - அவர்களுக்குத் துணையாக விளங்குவது; நாமே - சிவமாகிய நானேயாம்;

1961. எனக்கொத்த பேரிடத்தில் - எனக்கு விருப்பமான பக்தர்களிடம்; ஏகாதேயென்னாளும் - எந்தப் பொழுதிலும் நெருங்கக் கூடாது;

1962. உனக் கொத்த பேரை - நீ சென்று பற்ற வேண்டியவர்களை; உரைப்பேன் அவர்களிடம் - உன்னிடம் நான் கூறுவேன், நீ அப்படிப் பட்டவர்களிடம் செல்வாய்; பா.வே. - 'அவரை வதை' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1963. இரக்கமில்லா நெஞ்சர் - உள்ளத்திலே கருணை கொஞ்சமும் இல்லாதவர்கள்; இயல் தவங்கள் செய்யாதார் - விளங்கக்கூடிய பூசைகள் எதுவும் மேற்செ ாள்ளாதவர்கள்; பா.வே. 'இயல் கொடுமை ஈவறியார்' (ச.ம.நூ.); 'ஈரமில்லா நெஞ்சர்' (கை.பிரதி);

பறர்க்கப் பதைபதைக்கப் பாரிலுயிர்
கொன்றுதின்போர்

1965 ஈவதுவு மில்லாதா ரினியதமிழ்க் கேளாதார்
பாவ மிகுந்தோர் பரமெவையு மெண்ணாதார்
நெஞ்சி லவிபேகம் நினவுசத்து மில்லாதார்
வஞ்சகரை யெல்லாம் வதைவதைத்துக் கொன்றுவிடு

**விருத்தம்**

பங்கையன் விதித்த பாரில்
பலபல னூல்பு ராணம்
தங்கிய மனது கொள்ளார்
தருமத்துக் கிடுக்கண் செய்வார்

*1964.* பறர்க்க< பறக்க - விரைந்து; பதை பதைக்க - சித்திரவதை அடைய; பாரில் - இந்த உலகில்; உயிர் கொன்று தின்போர் - தம்பசிக்காக உயிரினங்களைச் சாகடித்து உண்ணுபவர்கள்;

*1965.* ஈவதுவும் இல்லாதார் - தம்மிடமிருந்தும் இல்லாத பிறர்க்கு வழங்காதவர்கள்; இனிய தமிழ்க் கேளாதார் - மதுரத் தமிழின்பத்தைக் கேட்டு மகிழாதவர்கள்;

*1966.* பாவம் மிகுந்தோர் - கெடுதல்களைச் செய்து அதனால் ஏற்பட்ட மிகுந்த பாவங்களைப் பெற்றிருப்பவர்கள்; பரம் எவையும் எண்ணாதார் - மோட்சத்துக்குரிய நல்வழிகள் எதையும் நினைக்காதவர் கள்;

*1967.* நெஞ்சில் - உள்ளத்தில்; அவிபேகம்< அவிப்பாகம் - உணவு, தெய்வங்களுக்கிடும் பொங்கல்; நினவு< நினைவு, சத்தும்< சற்றும் - (பொங்கல்) படைக்க வேண்டுமென்ற எண்ணம் கூடச் சிறிதும்; இல்லா தார் - இல்லாதவர்கள்; பா.வே. - 'விவேகம் நிறைந்த அறிவில்லாதார்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*1968.* வஞ்சகரையெல்லாம் - இப்படிப்பட்ட கொடியவர்கள் எல் லோரையும்; வதை வதைத்துக் கொன்றுவிடு - கொடுமைப் படுத்தி அவர்கள் உயிர்களைப் போக்கிவிடு;

*வி.71.* பங்கையன் - பிரமா; விதித்த பாரில் - உயிர்களைப் படைத்து அவர்களுக்குரியதையும் அமைத்த இவ்வுலகில்; பலபல நூல் புராணம் - பல்வேறான தமிழ் நூல்களையும் புராண காவியங்களையும்; தங்கிய மனது கொள்ளார் - விளங்குகின்ற தம் மனத்தில் ஏற்றுக் கொள்ளாதவர் கள்; தருமத்துக்கிடுக்கஞ்செய்வார் - நீதிக்குத் தடைகளை ஏற்படுத்து வோர்; பொங்கிய கோபர் - அதிகமான சீற்றமுடையவர்கள்; வஞ்சர்

பொங்கிய கோபர் வஞ்சர்
பொய்யினர் நம்மை யெண்ணார்
மங்கிய மரண னாளில்
மறலியே யணுகி டென்றார் (71)

சென்றுநீ யவர்க ளாவி
திட்டென வாங்கு முன்னே
அன்றவ ரென்பேர் சொல்லா
தயவுற மயக்க மூட்டி
வென்றுநீ கொடுபோ வாதை
வீறுடன் செய்யுன் னாணை
நின்றிடோ மவரைக் கண்டால்
நீங்குவோம் மெந்த னாணை (72)

நடை

நீதம் புராண[ந்]தமிழ் நீதியறி வில்லார்தான்

- வஞ்சனைகளைச் செய்வோர்; பொய்யினர் - பொய்களையே பேசுபவர் கள்; நம்மையெண்ணார் - சிவமாகிய என்னை நினைக்காதவர்கள்; மங்கிய மரணநாளில் - அவர்களின் ஆயுள் இறுதியில்; மறலியே - எமனே; அணுகிடென்றார் - நீ அவர்களை அணுகி உயிர்வதைப்பாய் என இறைவன் கூறினார்;

பா.வே. - 'தருமத்து இழுக்கம் செய்வோர்' (ச.ம.நூ.);

வி.72. சென்று நீ - அவ்வாறானவர்களிடம் நீ அடைந்து; அவர்கள் ஆவி - அவர்களின் உயிரை; திட்டென - திடீரென; வாங்குமுன்னே - பறித்துக் கொள்வதற்கு முன்; அன்று அவர் என்பேர் சொல்லாது - சாகப்போகும் அந்த நாளில் அப்படியானவர்கள் 'சங்கரா சங்கரா' என என்னுடைய திருநாமத்தை எவ்வகையிலும் கூறாதவாறு; அயர்வுற மயக்கமூட்டி - அவர்களை வாட்டி மயக்கமுறச் செய்து; வென்று நீ கொடுபோ - அவர்களைக் கொன்று அவர்கள் உயிரை எமலோகத்துக்குக் கொண்டு செல்க; வாதை - சித்திரவதையை; வீறுடன் - மிகுந்தவலியுடன் செய் - செய்வாய்; உன் ஆணை - இது உன்மேல் ஆணைசெய்து நான் தெரிவிப்பது ஆகும்; அவரைக் கண்டால் நின்றிடோம் - அப்படியானவர் கள் அழைத்தாலும் நிற்கமாட்டேன்; நீங்குவோம் - அவர்களிடமிருந்தும் அகன்று செல்லுவேன்; எந்தன் ஆணை - என் ஆணையாகும் இது;

**1969.** நீதம் புராணம் தமிழ் - நீதிக் கருத்துக்களையுடைய தமிழ்ப் புராணங்களையும் நூல்களையும் கற்றும்; நீதியறிவில்லார்தான் - தருமம் எதுவும் இல்லாதவர்கள்; பா.வே. - 'நிரம்ப புராணநெறி' (ச.ம.நூ.);

1970 பாதஞ் சிவகருத்துப் பாசமில்லா மோடர்களை
பொங்க வதைத்துப் பிடித்துக் கயறிறுக்கி
சங்கிலியில் தூக்கித் தவிடுபொடி யாக்கி
என்னாணை கீழ்நரகி லெய்யக் கித்திவிடு
உன்னாணை யங்கவர்பால் ஒருநிமிச னாமுமிரோம்
1975 பாச மறிவில்லார்க்குப் பாங்காய்ப் பயப்படுவோம்
னீசர் வாகாய் நெடுந்தூரம் போயொளிப்போம்
கன்மஞ் செய்யுநெஞ்சங் கனவு மெமைத்தொடாது

'நீதினூலை தூசினித்தோர்' (மா.தலநிலை); 'பகர்வேதம் தூசணித்தோர்' (கை.பிரதி);

*1970.* பாதஞ் சிவகருத்து - சிவ பெருமானாகிய எனது பாதங்கள் தொடர்பான வற்றில்; பாசமில்லா - அன்பில்லாத; மோடர்களை< மூடர்களை - அறிவிலிகளை; பா.வே. - 'பரந்த சிவகருத்து பண்பில்லா மூடரிடம்' (ச.ம.நூ.);

*1971.* பொங்க - நிறைய; வதைத்துப்பிடித்து - உயிர்களைச் சித்திர வதை செய்து, பற்றி; கயறிறுக்கி< கயிறு இறுக்கி - கயிற்றால் பிணித்து, கட்டி;

*1972.* சங்கிலியில் தூக்கி - இரும்புச் சங்கிலியால் கட்டி இழுத்து, மேலே தூக்கி; தவிடுபொடியாக்கி - நிர்மூலம் செய்து; பா.வே. - 'இருக்கி' (கை.பிரதி);

*1973.* கீழ்நரகில் எய்ய - அப்படிப் பட்டவர்கள் பல நரகங்களுள் பாதாள நரகத்தில் சேருமாறு; கித்திவிடு - எத்தித்தள்ளி விடுவாய்; என் ஆணை - இது நான் உனக்குத் தரும் கட்டளை ஆகும்; பா.வே. - 'கிடத்திவிடு' (கை.பிரதி);

*1974.* அங்கவர்பால் - அப்படிப்பட்டவர்களிடம்; ஒரு நிமிசம் நாமும் இரோம் - ஒரு நிமிட நேரமாவது தங்கி இருக்க மாட்டேன், அதனால் அவர்களை வதைத்துக் கொண்டுசெல்க; உன் ஆணை - இது உன்மேல் ஆணையிட்டு நான் சொல்லுகிறேன்;

*1975.* பாசம் அறிவில்லார்க்கு - அன்பும் ஞானமும் இல்லாத மூடர்களுக்கு; பாங்காய்ப் பயப்படுவோம் - பக்குவமாகப் பயந்து ஒதுங்கிக் கொள்வேன்;

*1976.* நீசர் - கெட்டவர்களைக் கண்டால்; வாகாய் - பக்குவமாய்; நெடுந்தூரம் போய் ஒளிப்போம் - அருகில் நில்லாது தொலைவில் சென்று ஒளிந்து கொள்வேன்; காண்க: 'நீசர் 166, 2530, 2530);

*1977.* கன்மம் செய்யும் - தீய செயல்களைப் புரிவோர்; நெஞ்சம் - உள்ளத்தாலும்; கனவும் - கண்மூடிக் காணும் கனவாலும்; எமைத் தொடாது - என்னை அவர்கள் பார்க்க வியலாது;

### கைலாயம் வரும் சிவனடியார்

தன்ம நீதிகல்வி தன்னி லிருப்போம்நாம்
என்னாணை காலா யிவர்களிட மேகாதே
1980 உன்னாணை காலா யுலகில் வாதாக
சிவகெணத்தை யேவி சிந்தமதி நல்லோரை
தவஞ்செய்த பேரையவந் தான்செய்யாதே
யழைப்போம்

### விருத்தம்

தவமுள்ளோர் கலங்கி டாமல்
தவமிகு கணங்க ளேவி
அவமில்லா தழைப்போ மெந்தன்
னாணை நீயணுக வேண்டாம்
சிவமெனு மாய்கை யாதி
சிறப்பி ......................
அவமுள்ளோ ருனது பக்க
மடுப்ப ருன்நரக மீளதாக (73)

1978. தன்மம் - தருமம்; நீதி - அறம்; கல்வி - ஒழுக்கம்; நாம் - நான்; தன்னிலிருப்போம் - இவைபோன்றவை உள்ள இடங்களில் தங்கியிருப்பேன்;

1979. என் ஆணை - நான் உனக்கு இடும் கட்டளையாவது; காலா - எமனே; இவர்களிடம் ஏகாதே - இப்படிப்பட்ட பக்திநிறைந்த மனிதர்களிடம்; ஏகாதே - அணுகிச் சென்று அவர்களைப் பிடிக்காதே; பா.வே. - ' போகாதே (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

1980-1982. காலா - எமனே; உலகில் - இந்தப்பூமியில்; தவஞ்செய்த பேரை - சிவபூசை செய்கின்ற அடியார்களுக்கு; அவம்தான் செய்யாதே - கெடுதல்கள் புரியாதே; வாகாக - வகையாக; சிவகெணத்தை - கைலாயத்திலுள்ள எனது ஏவலர்களை; ஏவி - அனுப்பி; சிந்தமதி நல்லோரை - பக்திஞானமுள்ள சான்றோரை; அழைப்போம் - எனது இருப்பிடத்துக்கு, சிவலோகத்துக்கு அழைத்துக் கொள்வேன்; உன் னாணை - இது உன் மேல் ஆணையிட்டுக் கூறுவது ஆகும்;

வி.73. தவமுள்ளோர் - சிவபூசைமேற்கொள்ளும் அடியார்கள்; கலங்கிடாமல் - மரணபயம் வருமோ என எண்ணி வருத்தப்படாமல்; தவமிகு கணங்கள் ஏவி - சிவபக்திமிகுந்த சிவகணங்களை அனுப்பி; அவம் இல்லாது அழைப்போம் - அவர்களுக்கு எவ்விதத் துன்பமும்

## இறைவனுக்கு எமன் உறுதியளித்தல்

### நடை

என்று மரனா ரியம்புமொழி கேட்டு
அன்று யெமன்மகிழ்ந்து யாதியே நின்னாணை
1985 நல்லோர்பால் செல்லேன் நலமில்லா[ர்]
தன்னைவிடேன்
வல்லயிருவகுப்பில் மால்பிரமா சாச்சி யென்றார்

### விருத்தம்

இருவகுப் பாக யின்னா
ளியம்பிய கருணை தப்பி

நேரிடாமல் கைலாயத்துக்கு அழைத்துக் கொள்வேன்; எந்தன் ஆணை நீ யணுக வேண்டாம் - அப்படிப் பட்டவர்களிடம் நீ செல்ல வேண்டாம் என்று நான் உனக்குக் கட்டளை இடுகிறேன்; சிவமெனும் மாய்கை ஆதி-சிவம் என்று நிலவக்கூடிய மாயம் முதலானவற்றை; சிறப்பி........- சிறப்பினை (உணராதவர்கள்); அவமுள்ளோர் - கெட்டோர்; உனது பக்கம் அடுப்பர் - உன்னருகில் வந்துசேருவர்; உன் நரகம் மீளதாக - அவர்களை உன் நரகத்தில் சேர்க்க;

பா.வே.- 'மயலுறாமல் தருநெறி கணங்களேவி'; 'சிவமெனும் புராண நூலை செகமதில் தூசணித்தோர்' (மா.தவநிலை, கை.பிரதி);

1983. என்றும் அரனார் - இவ்வாறும் இறைவன்; இயம்புமொழி கேட்டு - ஆணையிட்டுக் கூறுவதைக் கேட்ட எமதருமன்;

1984. அன்று எமன் மகிழ்ந்து - அப்போது காலன் சந்தோசமடைந்து; ஆதியே - மூலவனே; நின் ஆணை - உமது மீது ஆணையிட்டுக் கூறுகிறேன்;

1985. நல்லோர் பால் செல்லேன் - நீவிர் கூறிய நல்ல மானிடர் அருகில் சென்று வருத்தமாட்டேன்; நலமில்லா[ர்]தன்னை விடேன் - நல்லோரல்லாதவர்களை விட்டுவைக்கமாட்டேன்;

1986. வல்ல இருவகுப்பில் - சிவனடியாரானவர், அல்லாதார் என்ற இரண்டு பிரிவினரில்; மால் பிரமா - திருமால், பிரமன்; சாச்சி < சாட்சி - அவர்கள் இருவரும் காணுமாறு மேலே உறுதியளித்தது போன்று நடந்து கொள்வதாக இதைக் கூறுகிறேன்; என்றார் - என்று எமன் கூறினான்;

வி.74. இருவகுப்பாக - நல்லார், பொல்லார் எனும் இருபிரிவுகளில்; இன்னாள் இயம்பிய கருணை தப்பி - இப்போது கூறியவாறு நல்லோரை

ஒருகுறை செய்தா யாகில்
உலகு எவையேந் தீரா
மருவளர் பூவி லெந்தன்
வாசகஞ் சோர்வு றாமல்
தருமனென வாழ்ந்தி ரென்று
சங்கரன் மகிழ்ச்சி கூர்ந்தார் (74)

நடை

இந்த மொழி யரனா ரியம்ப வலுகாலன்
சிந்தை மகிழ்ந்து சிறக்க யனைவோர்மகிழ்ந்தார்

விருத்தம்

ஆதியா ருரைக்க[க்] கேட்டு
யனைவரும் பிரமன் தேவன்
நீதியார் சியலி னாண்டு
நின்றபகல் தங்கள் சுற்றோர்
கோதில்லா முனிவர் யாவர்
குணமிகு குணமே தென்றார்
சேதியாய் நடப்பே னென்று
சியல்சண்டன் மகிழ்ச்சி யுற்றான் (75)

விடுத்தும் பொல்லார் பால் மட்டுமே சென்றும் செய்யும் நியதி தவறி; ஒரு குறை செய்தாயாகில் - ஏதாவது இடுக்கண் நல்லோர்க்குச் செய்துவி டுவாயாகில்; உலகு எவையேந்தீரா - எந்த உலகுக்கும் ஓராது; மருவளர் பூவில் எந்தன் - புகழ் மிகும் பூமியில் என்னுடைய; வாசகம் - ஆணை; சோர்வுறாமல் - எவ்விதப் பங்கமும் ஏற்பட்டுத் தளர்ச்சியடையாமல்; தருமனென வாழ்ந்திரென்று - தருமராசனாக என்றும் நிலைத்து வாழ்ந்தி ருப்பாய் எனச் சங்கரன் மகிழ்ச்சி கூர்ந்தார் - இறைவன் ஆசிவழங்கி மகிழ்ந்தார்;

1987. இந்தமொழி அரனார் இயம்ப - இவ்வண்ணம் இறைவன் மகிழ்ச்சியடைந்து பேசவும்; வலுகாலன் - மகாபலமுள்ள எமன்;

1988. சிந்தை மகிழ்ந்து சிறக்க - உள்ளம் உவகையுற்று உய்வடைந் தான்; அனைவோர் மகிழ்ந்தார் - அங்கு நின்று இவற்றைக் கண்டு கொண்டிருந்த கடவுளரும், தேவரும், முனிவரும் மற்றுமுள்ளவர்களும் மகிழ்ச்சியடைந்தனர்;

வி.75. ஆதியார் உரைக்கக் கேட்டு - இறைவன் எமனிடம் இவ்வாறு கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்த; அனைவரும் - தேவர்கள் உள்ளிட்ட

## எமனுக்கு ஈசன் பட்டாபிசேகம் செய்தல்

### நடை

இந்தவுரை கேட்டிருந்தவ ரெல்லா மகிழ்ந்தார்
1990 எந்தனுரை தப்பா னியல்கால னென்றுரைற்றார்
திட்டமிகு காலனையும் சிந்தைமகிழ்ந் தீசுபரனார்
வட்டவுல கெட்ட[ா]ண்டம் வாகுபல கோடியண்டம்
பட்டாபி சேகம் பாங்குடனே செய்துரைத்தார்
பொற்கிரீடம் தன்னைப் புனைந்தார் திருமுடிமேல்

எல்லோரும்; பிரமன்தேவன் - பிரமதேவர், (திருமால்) முதலியோரும்; நீதியார் செயலின் - தருமமுள்ள இறைவனின் செயலால்; ஆண்டு நின்ற பகல் தங்கள் சுற்றோர் - ஆண்டு நின்று கொண்டிருந்த சூரியன் மற்றுமுள்ள கிரகங்கள் அனைவரும்; கோதில்லா - குற்றமற்ற; முனிவர் யாவர் - தவரிஷிகள் எல்லோரும்; குணமிகு குணமேதென்றார் - இறைவனின் நற்குணம் எத்தகையது என வியந்துரைத்தனர்; சேதியாய் நடப்பேன் என்று - புதுமையாகச் செயல்படுவேன் என; சியல் < செயல் - திறமையான; சண்டன் - எமன்; மகிழ்ச்சியுற்றான் - உவகையடைந்தான்;

*1989.* இந்தவுரை கேட்டிருந்தவர் - இறைவனுக்கும் காலனுக்கும் நடந்துமுடிந்தவற்றையும் காலனின் உறுதிகளையும் கேட்டவர்கள்; எல்லா மகிழ்ந்தார் - அனைவரும் இன்பமுற்றனர்;

*1990.* இயல்காலன் - எமதருமனானவன் எந்தன் உரை தப்பான் - இறைவனான நான் கூறும் அறிவுரைகளை இனி மீறிநடக்க மாட்டான்; என்று - என; உரைற்றார் < உரைத்தார் - கூறினார்;

*1991.* திட்டமிகு - தன் தொழில் வல்ல; காலனையும் - எமனையும்; ஈசுபரனார் சிந்தை மகிழ்ந்து - இறைவன் உவகை அடைந்து;

*1992.* வட்டவுலகு எட்டு அண்டம் - வட்டமான உலகுகளையும் அதனருகில் உள்ள எட்டு அண்டங்களையும்; வாகுபல கோடி அண்டம் - மேலும் விளங்கக்கூடிய கோடிக்கணக்கான அண்டங்களையும் (ஆட்சி செய்யும் அதிகாரத்தை) எமனுக்கு இறைவன் நல்கினார்;

*1993.* பட்டாபிசேகம் - காலன் மீண்டும் முடிசூடுதலை; பாங்குடனே செய்துரைத்தார் - விமரிசையாக நடக்க ஆணையிட்டார் இறைவன்;

*1994.* பொற்கிரீடம் தன்னை - கனக கிரீடத்தை; திருமுடிமேல் புனைந்தார் - காலனின் தலைமேல் சூட்டினார்; காண்க: 'பொற்கிரீடம்' *(1037)*;

நற்கனக தங்கம் நளினமிகு மாபரணம்
முற்றுமிகு பச்சை முகப்பில் வயிரவட்டம்
கொத்துச் சரப்பளியுங் கோல மாணிக்கவடம்
பீதாம்பரத் துடனே பெரியதொரு சல்லடமும்
போத அலங்கரித்து[ப்] பொற்கவசம் நற்கலிசம்
ஏமன்றனக்கு மீசுபரனார் யெமபட்டந்தான் கொடுத்து
நாமெனவே யேகி நளினமுடன் வாழ்ந்திரென்றார்

**எமன் தென் திசைக்குப் புறப்படுதல்**

யீசுபரனுங் கூற யிறஞ்சி மகாஎமன்
வாசமுட னெழுந்தான் மாமறலி தன்திசைக்கு

1995. நற்கனக தங்கம் - நல்ல ஆணிப்பொன்னாலான; நளினமிகுமா பரணம் - வனப்பான அணிகலன்களும்;

1996. முற்று < முத்து; மிகு பச்சை - மிகுதியான பச்சைக்கற்கள்; முகப்பில் - முன் பக்கத்தில்; வயிரவட்டம் - வைரங்களால் வட்டமாகப் பதித்துள்ள ஆபரணங்களும்;

1997. கொத்துச் சரப்பளியும் - கொத்தாகத் தொங்கும் சரப்பணி என்னும் அணிகலனும்; கோல - எழிலான; மாணிக்க வடம் - மாணிக்கங்கள் பதித்த தங்கவடங்களும்; காண்க: 'சரப்பளி' (1031);

1998. பீதாம்பரத்துடனே - தோளிலிருந்து தொங்கும் பட்டுநேரியலுடன்; பெரியதொரு சல்லடமும் - 'தொளதொள' வாக விளங்கும் முழங்கால் சட்டையும்; (போன்றவற்றை அணிந்து);

1999. போத அலங்கரித்து - மிகுதியாக எமனை அலங்காரஞ் செய்து; பொற்கவசம் - பொன்னாலான மார்புக் கவசத்தையும்; நற்கலிசம் - நல்ல (< கலசம்) பொற்பாத்திரமும் நல்கி;

2000.ஏமன்றனக்கு - எமனுக்கு; ஈசுபரனார் - இறைவன்; எமபட்டந் தான் கொடுத்து - சங்கரித்தலுக்குரிய உரிமை பெறும் 'எமன்' (தருமன்) எனும் பதவியையும் நல்கி;

2001. நாம் எனவே ஏகி - என் மற்றொரு வடிவமாகவே உன் இடத்துக்குச் சென்று; நளினமுடன் - பெருமையுடன்; வாழ்ந்திரென்றார் - நீடுழி வாழ்வாயாக என வாழ்த்தினார்; பா.வே.-'நமனெனவே' (மா.தவநிலை);

2002. ஈசுபரனும் கூற - இறைவன் வாழ்த்தவும்; இறஞ்சி - பணிவாக வணங்கி; மகா எமன் - பெரிய எமதருமன்;

2003. தன் திசைக்கு - எமபுரம் விளங்கும் தென்திசை நோக்கிப் புறப்பட; வாசமுடன் எழுந்தான் மாமறலி - புகழுடனே எமன் தயாரானான்;

செங்கண்மால் வேதன் சிறந்தமிகுஞ் சாத்தான்
எங்கு மிகுந்த யியல்நால்வரை வணங்கி
பொன்னின் தேரேறிப் பிறப்பட்டான் மாமறலி
தன்னிக ரில்லாயீசர் தானீய்ந்த நல்வார்த்தை
கேட்டு யிமதூதர் கிருபை மனமகிழ்ந்து
தீட்டும் புகழாற் சிறப்புடனே வந்துகண்டு

**பரிவாரங்களும் படைகளும் போதல்**

வெங்கலத்தேர் கோடி வெள்ளவெள்ளித் தேர்கோடி
தங்கத்தேர் கோடி தகமைரற்றினத் தேர்கோடி

2004. செங்கண்மால் - திருமாலையும்; வேதன் - பிரமாவையும்; சிறந்த மிகுஞ்சாத்தான் - புகழ் மிகுந்து சிறப்படையும் சாத்தாவையும்;

2005. எங்குமிகுந்த இயல் நால்வரை - எவ்விடத்தும் புகழ் விளங்கக் கூடிய நால்வர்களான சிவ அன்பர்களையும் (நாயன்மார் நால்வர் என்றும் கொள்ளலாம்); வணங்கி - வழிபட்டு;

2006. பொன்னின் தேரேறி - பொன்னாலான தேரில் ஏறி அமர்ந்து; மாமறலி - அதிக வலியுள்ள எமன்; பிறப்பிட்டான் < புறப்பட்டான்; பா.வே.—'ரதமேறி' (கை.பிரதி);

2007. தன்னிகரில்லாயீசர் - ஈடு இணையற்ற இறைவன்; தானீய்ந்த நல்வார்த்தை - தாமே தம் வாயால் கூறிய அறிவுரைகளை; பா.வே.- 'நல்வ்ரத்தை' (ச.ம.நூ., மா. தவநிலை);

2008. கேட்டு - செவியுற்று; இமதூதர் - காலதூதன், மற்றும் கிங்கிலியர் போன்றோர்; கிருபை மனம் மகிழ்ந்து - கருணையினால் மனமகிழ்ச்சி அடைந்தனர்;

2009. தீட்டும் புகழால் - மேலும் எமனுக்குப் பெருமை சேர்க்குமுக மாக; சிறப்புடனே வந்துகண்டு - எமதூதர்கள் போன்றோர் புறப்பட்டுக் கொண்டிருக்கும் எமனிடம் வந்து சேர்ந்து கொண்டனர்;

2010. வெங்கலத்தேர்கோடி - கைலாயத்திலிருந்து எமபுரத்துக்கு அவர்கள் புறப்பட்ட வெங்கலத்தாலான இரதங்கள் கோடிக்கணக்கா னவை; வெள்ளிவெள்ளித் தேர்கோடி - அதைப் போன்றே வெள்ளியா லான தேர்களும் கோடிக் கணக்கானவை;

2011. தங்கத் தேர்கோடி - பொன்னாலான தேர்கள் கோடிக்கணக்கா னவை; தகமை - தகுதிவாய்ந்த; ரற்றினத் தேர் கோடி - இரத்தினக் கற்களாலான தேர்கள் கோடிக்கணக்கானவை;

ஏமன்தேர் கோடி யியல்தூதர் தேர்கோடி
தாமமிகு தகமை தடிவீரர் தேர்கோடி
நீதிப் படியசைய நீண்ட முகடசைய
வீதிவர கோடிதிண்டோள் வீர[ர்] மலைபோல் நடக்க
அறுபதி னாயிரங்கோடி யானை புடைசூழ
செருவில் படைவீரர் சேர யணியாக
அஞ்ஞூறு கோடிலட்ச மடர்சிவிகை தண்டிகையும்
மெஞ்ஞூறு லட்ச மிகுந்தகோடி யாலவட்டம்
மூழுமிகு கோடேறி முன்னேறியே நடக்க

2012. ஏமன் தேர் கோடி - எமனுக்குரிய தேர்கள் கோடிக்கணக்கானவை; இயல்தூதர்தேர் கோடி - விளங்கக் கூடிய எமதூதர்களுக்குரிய தேர்கள் கோடியானவை; பா.வே.- 'காலதூதர் தேர்கள் கோடி' (மா. தவநிலை);

2013. தாமமிகுந்த தகமை - பூக்களால் அலங்கரிக்கப்பெற்றுச் சிறப்பு மிகுந்த; தடிவீரர் - தடிகளை ஏந்திய கிங்கிலியர்; தேர்கோடி - அவர்களுக்குரிய தேர்கள் கோடிக்கணக்கானவை; பா.வே.- 'தாமநிறைந்தோங்கும்' (மா. தவநிலை);

2014. நீதிப் படி அசைய - தரும பூமியானது அவர்களின் பவனிகண்டு அசையவும்; நீண்டமுகடு அசைய - பெரிய பெரிய மலையுச்சிகளுங்கூட அசையவும்; பா.வே.- 'அதிர' (ச.ம.நூ);

2015. வீதிவர - வீதிகளில் வருகின்ற; கோடி திண்டோள் வீர[ர்] - வலிமையான தோள்களையுடைய கோடிக்கணக்கான கிங்கிலியர்; மலைபோல் நடக்க - ஒவ்வொருவரும் ஒரு குன்றைப் போல் தோற்றத்துடன் நடந்து செல்லவும்; பா.வே.- 'வீதி பல கோடி' (ச.ம.நூ.);

2016. அறுபதினாயிரங்கோடியானை - பல எண்ணிக்கையுள்ள யானைகள்; புடைசூழ - அக் கிங்கிலியர் மருங்கில் சூழ்ந்து நடக்கவும்;

2017. செருவில் படைவீரர் - போர்ப்படை வீரர்கள்; சேர அணியாக வரிசையாகச் சேர்ந்தும்;

2018. அஞ்ஞூறு கோடி லட்சம் - மிக அதிகமான எண்ணிக்கையுள்ள; அடர் சிகை தண்டிகையும் - செறிவான உச்சிகளுடன் கூடிய சிவிகைகளும்;

2019. மெஞ்ஞூறு லட்சம் - ஒரு கோடி அளவிலான; மிகுந்த கோடி ஆலவட்டம் - மிகுதியான ஆலவட்டக் குடைகளும், (சூழ்ந்து வரவும்);

2020. மூழும் மிகு கோடு ஏறி - சூழ்ந்துள்ள பெரிய மலைமுகடுகளில் ஏறிப் பயணம் செய்து; முன்னேறியே நடக்க - தென்திசை நோக்கி எமகணங்கள் நடந்து சென்றன;

ஏழுலட்சங் கோடி யீயத் தடிக்காரர்
வெள்ளித் தடிக்காரர் வேண்டும் பலகோடி
தெள்ளிமை சீர்தண்டு சிறந்தவேல் கோடிலச்சம்
தங்க மழுத்துந் தடிக்காரர் கோடிவெள்ளம்
2025 பொங்குவலு கிங்கிலியர் போதக் கடலெனவே
வெள்ளமெனக் காலாள்க்கள் மேகமெனத் திரண்டு
தள்ளமரும் பாம்புகளுந் தாங்குகின்ற நோய்பிணியும்
நாலாயிரத்து நானூற்று நாற்பத் தெட்டும்
மேலாயிரத்து வெள்ளம் வேண்டுங் குலதேவர்

*2021. ஈயத்தடிக்காரர் - கைகளில் ஈயத்தாலான தடிகளைச் சுழற்றி வருவோர்; ஏழுலட்சங்கோடி; (அளவினர் ஆவர்);*

*2022. வெள்ளித் தடிக்காரர் - வெள்ளியாலான தடிகளைச் சுழற்று வோர்; வேண்டும் பலகோடி - வேண்டிய பலகோடி அளவினர் ஆவர்;*

*2023. தெள்ளிமைசீர் - தெளிவு பொருந்திய; தண்டு - தண்டுப்படைக ளும்; சிறந்த வேல் - சிறப்பான வேலாயுதங்களும்; கோடி லச்சம் (< லட்சம் ) - மிகுந்த அளவில் (வீரர்கள் எடுத்து வரவும்); பா.வே.- 'வேல் பட்டயமும்' (ச.ம.நூ);*

*2024. தங்கம் அழுத்தும் - பொன் பதித்துள்ள; தடிக்காரர் - தடிகளைச் சுமந்துவரும் வீரர்; கோடி வெள்ளம் - ஒருகோடி வெள்ளமென்ற அளவு சேனை வீரர்கள் வரவும்; பா.வே.- 'கோடி லட்சம்' (ச.ம.நூ., மா.தவ நிலை);*

*2025. பொங்கு வலு கிங்கிலியர் - வலிமை நிறைந்து விளங்கும் எமகணங்களான கிங்கிலியர் என்போர்; போதக் கடல் எனவே - மிகுந்து பரந்த கடல்கள் போல் பரந்து வரவும்; பா.வே.-'திசைக்கிங்கரர்' (ச.ம.நூ.);*

*2026. காலாள்க்கள் < காலாள்கள் < கால் ஆட்கள் - தரைப் படைவீரர்; மேகமெனத் திரண்டு - அனைத்து மேகங்களும் ஒன்று சேர்ந்து நிற்பது போல் ஓரிடத்தில் கூடிவரவும்; பா.வே.- 'காலன்கள் மேகம் எனத்திரண்டார்' (ச.ம.நூ);*

*2027. தள்ளமரும் - அசையக்கூடிய; பாம்புகளும் - உயிர்களைக் கொடுமைப் படுத்துதலுக்குப் பணிக்கப் பெற்ற அரவுகளும்; தாங்குகின்ற நோய்பிணியும் - உயிர்களைப் பிணித்துக் கொல்வதற்காகப் பணிக்கப் பெற்ற நோய் வகைகளும்; பா.வே.- 'தள்ளவே' (மா.தவநிலை);*

*2028. நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டும் - இந்த அளவினவான வையும் (சேர்ந்து வரவும்);*

*2029. மேலாயிரத்து வெள்ளம் - அதற்கும் மேலான ஆயிரம்*

காலன் றனைச்சூழ்ந்து கருணை யுடன்வரவே
மேலான வெள்ளம் வேண்டினபேர் சூழ்ந்துவர
அந்தமிகு தேவ ரடங்கலுமே சூழ்ந்துவர
சிந்தை மகிழ்ந்தெமன் சிறப்பா யிமதிசைக்கு
வார பவனி மாகர்லோகந் தானிறைய

### கொற்றக் குடைகள் வகை

வீரமிகு குடைகள் மேகம் வளைந்தாப்போல்
வெள்ளிக் குடைகோடி வெங்கலக் குடைகோடி
ஒள்ளியதோர் வெண்டரள மோங்குங்குடை
கோடிவெள்ளம்

வெள்ளம் அளவிலான; வேண்டுங்குலதேவர் - எமனுக்கு வேண்டியவர்களான வானவர் குலத்தினர்;

2030. காலன்றனைச் சூழ்ந்து - தங்கள் தலைவனான எமனைச் சுற்றி; கருணையுடன் வரவே - அவன் மேல் பாசத்துடனும் அன்புடனும் தென்திசை நோக்கிச் செல்லவும்; பா.வே.- 'கண்கோடி முன் நடக்க' (ச.ம.நூ.);

2031. மேலான வெள்ளம் - அதற்கும் மேலாக ஒரு வெள்ளம் அளவு; வேண்டினபேர் - எமனுக்குச் சொந்தக்காரர்கள்; சூழ்ந்துவர - நெருங்கிவரவும்;

2032. அந்தமிகுதேவர் - அழகு மிகுந்த வானவர்கள்; அடங்கலுமே - எல்லோரும் சேர்ந்து; சூழ்ந்துவர நெருங்கி வர; பா.வே.- 'முன் நடக்க' (ச.ம.நூ.);

2033. எமன் - எமதருமன்; சிந்தை மகிழ்ந்து - உவகையுற்று; சிறப்பாய் - விமரிசையாக; இம திசைக்கு - எமபுரம் வீற்றிருக்கும் தென்திசைக்கு;

2034. வாரபவனி - பவனி(உலா) வருகின்ற காட்சி; மாகலோகம் தான் நிறைய - ஆகாய முழுவதும் நிறைந்து விளங்கவும்;

2035. வீரமிகு குடைகள் - அவர்கள் பிடித்துவரும் வெண்கொற்றக் குடைகள்; மேகம் வளைந்தாப்போல் - ஆகாயத்தில் மேகங்கள் கவிந்து கிடந்ததைப் போல் விளங்கவும்; பா.வே.- 'டால் சுருட்டி' (ச.ம.நூ.);

2036. வெள்ளிக் குடை கோடி - கோடி அளவில் வெள்ளியாலான குடைகள் வரவும்; வெங்கலக் குடைகோடி - வெங்கலத்தாலான குடைகள் கோடி எண்ணிக்கையுடையனவாக வரவும்;

2037. ஒள்ளியதோர் - பளபளக்கக்கூடிய; வெண்டரளம் - வெண்முத்துக்கள்; ஓங்கும் - விளங்கும்; குடை - குடைகள்; கோடிவெள்ளம் - கோடி வெள்ள அளவின;

மின்னி னொளிபோலே மிகுந்தகுடை கோடிவெள்ளம்
பொன்னின் குடைகோடி பொருத்துக் குடைகோடி
2040 காவிமிகு பூச்சக்கிர கனகக் குடைகோடி
மேவியிரு பிறமும் மேகமெனத் திரளாய்

**நயினாரின் பரிவாரங்கள்**

சித்திர புத்திரனார் தேரேறி முன்வரவே
பத்தியாய்க் கணக்கர் பதினாயிரங் கோடி
பட்டோலைக் காரர் பதினாயிரங் கோடி

**2038.** மின்னின் ஒளி போலே - 'பளிச்' என மின்னும் மின்னல் ஒளியைப் போன்று; மிகுந்த குடை - ஒளி வீசக் கூடிய குடைகள்; கோடி வெள்ளம் - கோடி வெள்ள அளவுள்ளன; பா.வே. - 'கோடி லட்சம் (ச.ம.நூ.);

**2039.** பொன்னின் குடை கோடி - தங்கக் குடைகள் ஒருகோடி அளவின; பொருத்துக் குடைகோடி - ஒன்றோடொன்று பொருத்துக் குடைகோடி - ஒன்றோடொன்று பொருந்தக் கூடிய குடைகள் ஒரு கோடி அளவின;

**2040.** காவிமிகு - காவி வண்ணத்தில் விளங்கும் மிகுதியான; பூச்சக்கிர - பூக்கள் வரையப் பெற்ற; கனகக் குடை கோடி - பொற்குடைகள் ஒரு கோடி அளவின; பா.வே. - 'காவினிறை' - (மா.தவநிலை);

**2041.** மேவி - விளங்கி; இருபிறமும் < இருபுறமும் - இரண்டு பக்கத்திலும்; மேகம் எனத் திரளாய் - மேகக் கூட்டங்களாய்; பா.வே. - 'திரண்ட' (ச.ம.நூ.);

**2042.** சித்திரபுத்திரனார் ★ - ஜனனமரண, பாவ-புண்ணியக் கணக்கெழுதும் நயினார்; தேரேறி முன்வரவே - தேரில் அமர்ந்து முன்வரிசையில் வரவும்; பி.வே. - 'சித்திரை புத்திரனார்' (மா.தவநிலை);

**2043.** பத்தியாய் - வரிசையாக வரும்; கணக்கர் - நயினாரின் உதவியாளர்கள்; பதினாயிரங்கோடி - பத்தாயிரம் கோடி அளவினர் ஆவர்; பா.வே. - 'பத்திரமாய்' (மா.தவநிலை, கை.பிரதி);

**2044.** பட்டோலைக்காரர் - ஆணை ஓலைஎழுதும் பணியாளர்; பதினாயிரங்கோடி - பத்தாயிரம் கோடி அளவினர்;

---

★ (சித்திரபுத்திரனார் கதை இந்நூலிறுதியில் பாடப்பெற்றுள்ளது. தனியொரு கதைப்பாடலாகவும் உள்ளது).

2045 அட்ட வணைக்கார ராயிரங் கோடி
மாதாந்தங் கோடிவெள்ளம் வாக்காட்டினோர் கோடி
நீதாந்தமாம் விரிசு நீட்டோலை மீரனந்தம்
ஒழுகுக் கணக்கர் ரொருநூறு லட்சவெள்ளம்
புழுகுக் கணக்கர் போதக் கடலெனவே
2050 கணக்கை யெடுக்குங் கிரிகள்லட்சங் கோடிவெள்ளம்
மணக்கும் புகழ்க்கணக்கர் வாகாய் வளைந்துவர
ஓமனிறை சாம்பிராணி ஓங்கும் புகைமேகமென
தாமமணி யிமையோர் தங்குதிசை[க்] காவலரும்

2045. அட்டவணைக்காரர் - பட்டியலிடுவோர்; ஆயிரங்கோடி - இந்த அளவினர் ஆவர்; பா.வே. - 'அறுபதினாயிரங்கோடி'(ச.ம.நூ.); 'அட்டவுடன் தூதர்' (மா.தவநிலை);

2046. மாதாந்தம் - பெரிய கொம்புப் பேரிகைகள்; கோடிவெள்ளம் - ஒரு கோடி வெள்ள அளவின; வாக் காட்டினோர் கோடி - வாயால் 'பராக்' கூறுவோர் கோடி அளவினர்; பா.வே. - 'வர வெட்டினோர் கோடி' (ச.ம.நூ.);

2047. நீதாந்தமாம் விரிசு - நீதியுடன் விரைவாகப் பணியாற்றும்; நீட்டோலை மீரனந்தம் - பணியாளர்கள் மிகுதியானவர்; பா.வே. - 'சித்தாந்தமாவிரசு' (ச.ம.நூ.); 'சீதாந்தமாய் விரசு' (மா.தவநிலை);

2048. ஒழுகுக் கணக்கர் - கணக்குகளில் விட்டு விடக்கூடிய எழுத்தர்; ஒரு நூறு லட்ச வெள்ளம் - மிகுந்த அளவினர்;

2049. புழுகுக் கணக்கர் - பொய்களைச் சேர்த்து எழுதக்கூடிய கணக்கர்கள்; போதக்கடல் எனவே - மிகுந்த கடலளவினர்;

2050. கணக்கையெடுக்கும் கிரிகள் - கணக்கு ஏடுகளைச் சுமக்கும் பிணையாளிகள் அல்லது அடிமைகள்; லட்சங்கோடி வெள்ளம் - அதிக வெள்ள அளவினர்; பா.வே. - 'கரிகள்' (ச.ம.நூ.); 'கணக்கேடுதான் சுமக்க (மா.தவநிலை);

2051. மணக்கும் புகழ்க்கணக்கர் - புகழ் நிரம்பியுள்ள எழுத்தர்கள்; வாகாய் வளைந்துவர - சிறப்பாய்ச் சுற்றிலும் வர; பா.வே. - 'வாசனை யாய்'(ச.ம.நூ.);

2052. ஓமனிறை சாம்பிராணி - ஓமம் வளர்க்கும் போது தூவக்கூடிய அகில் காரணமாக; ஓங்கும் புகை - வெளியாகும் நறுமணப்புகை; மேகமென - வெண்மேகக் கூட்டம் போல் விளங்க; காண்க; 'சாம்பிரா ணி' (2094, 2396);

2053. தாமம் அணி இமையோர் - பூக்களைச் சூடும் வானவர்களும்; தங்குதிசைக் காவலரும் - எண்திசைகளையும் தாங்குகின்ற எல்லைக்

ஆலத்திப் பெண்ங்க ளறுபதினாயிரங் கோடி
வேலொத்த கண்மடவார் வெண்ஞ்சாமரை வீச
ஆடும் பெண்கள்கோடி யருவையர்கள் சூழ்ந்துவர
பாடும் பெண்கள்கோடி பக்கத்தில் சூழ்ந்துவர
மெத்த யலங்கரித்து வெகுதிரளாய்த் தான்திரண்டு
பித்தன் கிருபைகொடு பிறப்பட்டார் வெள்ளமென

**எமபுரத்தை அலங்கரித்தல்**

இயமதன்ம ராசா யியல்வுடனே வாறதினால்
யியம புரந்தன்னை யியல்பா யலங்கரித்து
தந்த னமருந் தன்மராசன் வருகையிலே

காவலர்களும்; பா.வே. - 'தாமமணிப்பாவாடை' (ச.ம.நூ., மா.தவ நிலை);

*2054.* ஆலத்திப்பெண்ங்கள் < (ஆலாத்தி) - (833) திருஷ்டி கழிக்கும் நிமித்தம் ஆரத்தி எடுக்கும் பெண்கள் அறுபதினாயிரங்கோடி - பல கோடித்தொகையினர் ஆவர்; பி.வே. - 'ஆலாத்திப்பெண்கள்' (மா.தவ நிலை);

*2055.* வேலொத்த கண்மடவார் - வேல் போன்ற கூரிய கண்களையுடைய பெண்கள்; வெண்ஞ்சாமரை வீச - சாமரம் விசிறவும்;

*2056.* ஆடும் பெண்கள் கோடி - நடன மாதர்கள் ஒரு கோடியினர்; அருவையர்கள் (< அரிவையர்கள்) சூழ்ந்துவர - பிற மாதர்களும் அருகில் நெருங்கி நடக்கவும்;

*2057.* பாடும் பெண்கள் கோடி - பாடுபவர்கள் ஒரு கோடிப் பெண்கள்; பக்கத்தில் சூழந்துவர - அருகில் நடந்து வரவும்; பா.வே. - 'பகர் அடப்பங்கட்டி நிற்க' (ச.ம.நூ.);

*2058.* மெத்த அலங்கரித்து - மிகுதியான அலங்காரத்துடன்; வெகுதிரளாய்த்தான் திரண்டு - மிகுந்த கூட்டமாய்க் கூடி;

*2059.* பித்தன் - இறைவன்; கிருபை கொடு - கருணையுடன்; வெள்ளமென - ஒரு வெள்ளஅளவினர்; பிறப்பட்டார் < புறப்பட்டார் - சென்றார்;

*2060.* இயமதன்ம ராசா - எமதருமராசன்; இயல்வுடனே வாறதினால் - இயன்ற புகழுடன் எமபுரிக்கு வருகை செய்வதால்;

*2061.* யியமபுரந்தன்னை - எமபுரத்தை; இயல்பாய் அலங்கரித்து - சிறப்பாய் அலங்காரம் செய்து;

*2062.* தந்தனமரும் - விளங்கக்கூடிய; தன்மராசன் - எமதருமன்; வருகையிலே - வருகின்ற அந்நேரத்தில்;

சிந்தைமகிழ்ந் தெமபுரஞ் சிங்காரஞ் செய்யலுற்றார்
அடைத்துவைத்த பொற்கதவை யன்பாகவே திறந்து
சடைத்திருந்த காவலவர் சந்தோஷமாய் மகிழ்ந்தார்
நாலுவாசல் கதவும் நன்றாகவே திறந்து
காலனுட கிங்கிலியர் காட்சிபெற சிங்காரம்
கோவில்கால் சிங்காரம் கோபுரமும் சிங்காரம்
தாழ்வில்லா மேடைகளுந் தாங்கு புகழ்க்கூடம்
சுத்துக் கோமேதகமுந் தூணழுத்துஞ் சாவடியும்
பச்சைமிகு னீலம் பளிங்குமா மண்டபமும்

2063. சிந்தைமகிழ்ந்து - உள்ள மகிழ்ச்சியுடன்; எமபுரம் - எமனின் இருப்பிடமான எமபுரியை; சிங்காரம் செய்ய - அலங்காரஞ்செய்து அழகுபடுத்தினர்;

2064-2065. அடைத்து வைத்த பொற்கதவை - முன்பு எமன் மாண்ட பின்பு; பூட்டிவைத்த எமபுரியின் தங்கக் கதவை; அன்பாகவே - இன்ப முற்று; சடைத்திருந்த காவலவர் - இதுவரை வேலையின்றிச் சோம்பியிருந்த வாசல் காவலர்கள்; சந்தோஷமாய் திறந்து மகிழ்ந்தார்கள் - மிக மகிழந்து திறந்து வைத்துக் கொண்டிருந்தனர்; பா.வே. - ‘வெகுண்டு’ (ச.ம.நூ.);

2066. நாலுவாசல் கதவும் - எமபுரத்தின் நான்கு பக்கத்திலும் விளங்கும் கதவுகளை - நன்றாகவே திறந்து - அகலத் திறந்து வைத்தனர்;

2067. காலனுட < காலனுடைய - எமதருமனின்; கிங்கிலியர் - ஏவலர்; காட்சிபெற - விளங்குவது சிங்காரம் - அழகானதாகும்; காண்க: ‘சிங்காரம்’ (1039);

2068. கோவில் கால் சிங்காரம் - எமபுரத்துத் தூண்கள் அலங்கரிக்கப் பெற்று அழகாக விளங்கின; கோபுரமும் சிங்காரமும் - அங்குள்ள கோபுரமும் அழகாக விளங்கியது;

2069. தாழ்வில்லா மேடைகளும் - உயர்ந்த திண்ணைகளும்; தாங்கு புகழ்க்கூடம் - சிறப்பு மிகுந்த கூடங்களும்; பா.வே. - ‘தாவில் நிறைமேடைகளும்’ (ச.ம.நூ.);

2070. சுத்து < சுற்று - சுற்றிலும்; கோமேதகமும் கோமேதக் கற்கள்; தூணழுத்தும் - பதிக்கப்பெற்ற தூண்கள் உள்ள; சாவடியும் - அறையும்;

2071. பச்சை மிகு நீலம் - பச்சைக்கல் போன்றும் நீலமாயும் விளங்கும்;பளிங்குமா மண்டபமும் - பளிங்காலான மண்டபமும்; பா.வே. - ‘பச்சை புட்பராகம்’ (ச.ம.நூ.);

பத்தி சிறந்த பசும்பொன் மணிமண்டபமும்
வெத்தி ரற்றினவெள்ளி விரைவுசுத்து மண்டபமும்
வச்சிரத் தினூடே வயிரமுக மண்டபமும்
பச்சிரத் தினாலே பவளமணி மேடைகளும்
மாணிக்கந் தன்னால் வயிரகும்பந் தானிறைத்து
ஆணிக் கனகமதால் அலங்கிருத மண்டபமும்
சித்திரஞ்சேர் தூணில் சிறந்தரற்றினந் தான்பதித்து
கொத்துலவு கும்பக் குடமழுத்து மண்டபமும்
அரமலை யுப்புரிக்கை யகண்ட வெளியாகாசம்
வரமனையுந் திருக்கா வாகு திருக்கூடம்

2072. பத்தி < பக்தி சிறந்த - வழிபாடு மிகுந்த; பசும் பொன் மணி மண்டபமும் - பசும் பொன்னால் செய்த மன்றமும்;

2073. வெத்தி < வெற்றி; ரற்றின - இரத்தினத்தாலானதும்; வெள்ளி - வெள்ளியாலானதுமான; விரைவுசுத்து (< சுற்று) மண்டபமும் - சுற்றிலும் அமைந்த மன்றமும்;

2074. வச்சிரத்தினூடே - இரத்தினத்துள்ளே அமையும்; வயிர முக மண்டபமும் - வைரத்தாலாகிய முன் மன்றமும்; காண்க: 'வச்சிரம்' (2583);

2075. பச்சிரத்தினாலே - பச்சைக் கல்லாலாகிய; பவளமணி மேடைகளும் - பவளமணித் திண்ணைகளும்;

2076. மாணிக்கந்தன்னால் - (1016) மாணிக்கத்தால்; வயிரகும்பம் தான் நிறைத்து - வைரத்தால் ஆன கலசங்களை முழுமையாக்கி;

2077. ஆணிக்கனகமதால் - ஆணிப் பொன்னாலான; அலங்கிருத மண்டபமும் - அலங்கார மண்டபமும்; ஒப்பிடுக: 'ஆணிப்பொன்' (1017);

2078. சித்திரஞ் சேர் தூணில் - அழகான ஓவியம் தீற்றப்பெற்ற தூண்களில்; சிறந்த - மிக உயர்ந்த; ரற்றினம் தான் பதித்து - இரத்தினக் கற்களை அப்பி;

2079. கொத்துலவு - திரளாக; கும்பக்குடம் - (1453) கும்பக் கலசங்களை; அழுத்து மண்டபமும் - பதித்து வைத்துள்ள மன்றமும்;

2080. அரமலை - பாதாள அறையும்; அகண்ட வெளி ஆகாசம் - அகலமானதாக அமைந்து விண்ணை நோக்கும் வகையில் அமைந்த; உப்புரிக்கை < உப்பரிகை - உலவுதற்குரிய மேல்தளமும்; பா.வே. - 'அரமனை' (ச.ம.நூ.);

2081. வரமனையும் < அரமனையும் - மாளிகையும்; திருக்கா - சிறந்த பூங்காவும்; வாகு திருக்கூடம் - சிறந்த கூடங்களும்;

பள்ளி யறையும் பவளக்கால் மேடைகளும்
ஒள்ளியதோர் மஞ்ச[ம்] யுலாவுபுகழ் மாளிகையும்
நாடகச் சாலை நளினயறை மாளிகையும்
வாடாமல் தீபம் வளரு மியலரங்கும்
இந்தவகை யெல்லா மியல்பாய் மிகுதூதர்
விந்தை பலர்செய்து விரைய வலங்கரித்து
சுண்ணமிகுங் குமுகஞ் சொங்குபச்சை நீலமுடன்
வண்ணமுடன் தீத்தி வளமா யலங்கரிற்றார்

**வாசனைப் பொருள்கள் நிறைத்தல்**

சாந்து சவாதுபுழுகு சந்தன முமமைரற்று

2082. பள்ளியறையும் - சயன அறைகளும்; பவளக்கால் மேடைகளும் - பவளத்தால் உண்டான தூண்களுள்ள இருப்பிடங்களும்;

2083. ஒள்ளியதோர் மஞ்ச(ம்) - அழகு நிறைந்த படுக்கையும்; உலாவு புகழ் மாளிகையும் - காலாற நடப்பதற்குரிய மாளிகையும்;

2084. நாடகச்சாலை - கூத்து நடத்துமிடமும்; நளின அறை மாளிகையும் - விகட நிகழ்ச்சிகள் நடத்தும் மாளிகையும்;

2085. வாடாமல் - அணையாமல்; தீபம் - (வாடா) விளக்கு; வளரும் - எரியும்; இயல் அரங்கும் - விளங்குகின்ற விளக்கு மண்டபமும்; பி.வே. - 'வாடாததீபம்' (ச.ம.நூ.);

2086. இந்தவகையெல்லாம் - இவ்வாறன்ன அலங்காரங்களை; இயல்பாய் - எமனது வருகையால் ஏற்பட்ட உந்துதலால்; மிகுதூதர் - அதிகமான பணியாளர்கள் ஈடுபட்டு;

2087. விந்தை பல செய்து - புதுமையான அலங்காரத் தோற்றங்கள் பலவற்றைப் புனைந்து; விரைய அலங்கரித்து - விரைவாகச் சிங்காரித்து; பா.வே. - 'வர்ணமலர் செய்து' (மா.தவநிலை);

2088. சுண்ணமிகும் குமுகம் - சுண்ணப் பொடிகளும் மிகுதியான; (சுங்கு < ) சொங்கு பச்சை நீலமுடன் - சேலையின் கொய்சகம் நீலம் பச்சை நிறங்களுடன் தொங்கவிடப்பட்டன; பா.வே. - 'சுண்ணம் சந்தனம்' (ச.ம.நூ.); 'சுண்ணசாந்து' (மா.தவநிலை);

2089. வண்ணமுடன் தீத்தி - சுவர்களைப் பல நிறங்களில் பூசி; (தீத்தி < தீற்றி); வளமாயலங்கரித்தார் - சிறப்பாகச் சோடித்தனர்; பாவே. -'நீத்து' (ச.ம.நூ.);

2090. சாந்து - நறுமணச் சாந்துப் பொடிகளும்; சவாது - (சவ்வாது) சவாதி எனும் நறுமணப் பொருளும்; புழுகு - புனுகும்; சந்தனமும்

சேந்த களபந் திமிர்ந்து விதானமிட்டார்
களப பவளவளங் கனககவுள் தவழ
துளப தழல்நீழல் சூழப் பளபளென
தங்குபுகழ்[க்] கஷ்த்தூரித் தானிறைத்துச் சாம்பிராணி
பொங்குமிகு தூபம் புகைத்து யிவையடங்கும்
மானத்தை முட்ட மகாமணித் தோரணமும்
தானமளவே தவந்த தங்கும் விதானமதாய்

### பூத்தோரணம்

வெட்டி யிலாமிச்சி மிகுத்த மருக்கொழுந்து
கட்டுமலர் சுகந்தங் கானிலிரு வாச்சிபிச்சி

- சந்தனப்பசையும்; அரைற்று < அரைத்து - கூழாக்கி; பா.வே. - 'சாந்து புனுகு' (மா.தவநிலை);

2091. சேந்த களபம் திமிர்ந்து - இவை எல்லாம் சேர்ந்த நறுமணக் கலவையைப் பூசி; விதான மிட்டார் - மேற்கட்டி அமைத்தனர்;

2092. களப பவள வளம் - பவளம் போன்ற நறுமணக் கலவை; கனக கவுள் தவழ - பொற் கன்னங்களில் தவழுமாறு அப்பி; பா.வே. - 'அழகு ஒளி தவழ' (ச.ம.நூ.);

2093. துளபதழல் நீழல் (< துளவம்) - துளசியின்; சூழப் பளபளென - சுற்றிலும் பளபளக்கவும்; பா.வே. - 'துளப தளப நிழல்' (ச.ம.நூ.);

2094. தங்கு புகழ்க் கஷ்த்தூரி தானிறைத்து - மணம் தங்கக் கூடிய கத்தூரியை நிறைவாகச் சேர்த்து; பா.வே. - 'தங்கு பரிமளமும்' (ச.ம. நூ.,மா.தவநிலை);

2095. பொங்குமிகுதூபம் புகைத்து - மிகுந்த தீபாராதனை இட்டு; இவையடங்கும் - இவ்வாறான வாசனை எல்லாம் சேர்ந்து; பா.வே. - 'புகழ்தூதர் புகைத்தார்' (ச.ம.நூ.);

2096. மானத்தை < வானத்தை - விண்ணை; முட்ட - நெருங்க, இடிக்க; மகாமணித் தோரணமும் - பெரிய பெரிய மணிகள் தொங்கும் தோரணங்களும்; பா.வே. - 'மகரமணி' (மா.தவநிலை);

2097. தானமளவே - சொர்க்கம் போன்ற இந்திரலோகத்தைத் தொடும் அளவு; தவந்த< தவழ்ந்த - படிந்த; தங்கும் - முட்டும்; விதானமதாய் - மேற்கட்டியுடையதாய் அலங்கரித்தனர்;

2098. வெட்டியிலாமிச்சி - (வரி 819) வெட்டிவிலாம் பிச்சை எனும் நறுமண வேரும்; மிகுந்த மருக் கொழுந்து - (வரி 819) மணமிகுந்த கொழுந்தும்; பா.வே. - 'விரிதாமரைக் கொழுந்து' (ச.ம.நூ.);

2099. கட்டுமலர் சுகந்தம் - வாசமிகுந்த மலர்களும்; கானில்

பாரிச[ா]த புற்பம் பாங்குடனே செந்தாமரை
தாரிச் சோகமெனுந் தாழை மலர்நிறைத்து
பந்தி பந்தியாகப் பாங்காய் விதானமிட்டார்
விந்தைமிகு கோர்த்து விரிந்த சரந்தூக்கி
தெரிந்து புகழாய்ச் சிறக்க விதானம்வைத்தார்
குறிஞ்சித்தேர் வீதியெங்கும் கொத்தவர்கள்
செய்துவைத்தார்

### மங்கல முழக்கங்கள்

ஏமபுரம் நோக்கி யியல் தன்ம ராசாவும்
காமமுடன் வாற தகமை யதிரொலியின்
கும்பி திமலை குமுறுங் கடலெனவே

இருவாச்சி பிச்சி - காட்டில் மலரும் இருவாச்சி, பிச்சி எனும் மலர்களும்; பா.வே. - 'முல்லை... நெட்டி' (மா.தவநிலை);

2100. பாரிசாத புற்பம் - பாரிசாத மலரும்; பாங்குடனே செந்தாமரை - அழகுடன் விளங்கும் தாமரைப் பூக்களும்;

2101. தாரிச் சோகம் எனும்; தாழை மலர் நிறைத்து - மிகுதியான தாழம் பூக்களைத் தொடுத்துக்கட்டி;

2102. பந்தி பந்தியாக - வரிசை வரிசையாக; பாங்காய் - அழகாய்; விதானமிட்டார் - மேற்கட்டிகளை அமைத்தனர்;

2103. விந்தைமிகு கோர்த்து - புதுமையாக விளங்குமாறு மிகுதியாகப் பூக்களைத்தொடுத்து; விரிந்த சரந்தூக்கி - பெரிய பெரிய மாலைகளாகத் தொங்கவிட்டு;

2104. தெரிந்து புகழாய்ச் சிறக்க - எல்லோருக்கும் எல்லாவிடமும் தெரியுமாறு; விதானம் வைத்தார் - மேற்கட்டிகளை வைத்தனர்;

2105. குறிஞ்சித்தேர் - ஈந்தங் குலைகளால் அலங்காரங்களை; வீதியெங்கும் - எல்லாச் சாலைகளிலும்; கொத்தவர்கள் < கொற்றவர்கள் - எமபுரத்தார்; செய்துவைத்தார் - ஏற்படுத்தினர்; பா.வே. - 'கோலமுடன் நாட்டிவைத்து' (ச.ம.நூ.); 'தெருவீதியெங்கும்' (மா.தவநிலை);

2106. ஏமபுரம் நோக்கி - தனது எமபுரியைப் பார்த்து; இயல் தன்மராசாவும் - புகழுடைய எமதருமனும்;

2107. காமமுடன் வாற - விருப்பமுடன் வருகின்ற; தகமை - நேர்த்தியின்; அதிரொலியின் - வருகின்ற ஆரவாரத்தால் எழும் ஒலிமுழக்கம்;

2108. கும்பி - கும்மி ஒலியும்; திமலை - திமிலை எனும் மேள ஒலியும்; குமுறும் கடலெனவே - கடல் கொந்தளித்தால் ஏற்படும் ஒலிபோன்று கேட்டன;

தெம்பி கெடிபம்பை திடிமுரசு நின்றதிர
செண்டை யொடுபம்பை செகண்டமிக முழங்க
கண்ட நறுதண்டங் காண்டீப பேரிகையும்
மத்தளமும் வீணை வாகு பிறையதிர
தித்தி கணவொத்துச் சிறுமென்தான் முழங்க
கொம்பு கனபூரிகையுங் குமுறி யலறிவர
தம்பமணிச் சின்னந் தானூத ஓசையது
மாமறலி என்று மகாசண்டன் காலனென்று
ஏமனிவ னென்று மியல்தன்ம ராசனென்று
நடுவ னிவனெல்லார்க்கும் நன்றாய் அதிகாரி

**2109.** தெம்பி கெடிபம்பை - தெம்மாங்கும், அதிரும் பம்பை எனும் வாத்தியத்தின் ஒலியும்; திடிமுரசு நின்றதிர - தடாரி எனும் முரசின் ஒலியும் சேர்ந்து முழங்கவும்; பா.வே. - 'கெருப்பை' (மா.தவநிலை);

**2110.** செண்டையொடும் பம்பை - செண்டை பம்பை எனும் வாத்தியங்களின் முழக்கமும்; செகண்டமிக முழங்க - சகண்டை எனும் முரசின் அதிர்வும் முழங்க;

**2111.** கண்ட நறுதண்டம் காண்டீப பேரிகையும் - பேரளவினதான வாச்சியத்தின் முழக்கமும்;

**2112.** மத்தளமும் - மத்தள ஓசையும்; வீணை - வீணையின் ஒலியும்; வாகுபிறையதிர - முறையாக நின்று முழங்க; பா.வே. - 'வாகுபெறயலற' (மா.தவநிலை);

**2113.** தித்தி கனவொத்து - தித்தி எனும் துளைக்கருவியின் ஒலியும், ஒத்து எனும் குழலோசையும்; சிறுமென்தான் முழங்க - சிறு முழக்கமாகக் கேட்டுவர; பா.வே. - 'கண்வோசை சிறுதாளமும்' (மா.தவநிலை);

**2114.** கொம்பு - கொம்புவாச்சிய ஒலியும்; கனபூரிகையும்< கணபேரிகையும் - பேரிகையின் ஓசையும்; குமுறியலறிவர - முழங்கிவர;

**2115.** தம்பமணிச் சின்னம் - தம்பட்டம் எனும் சிறு பறையின் ஓசையும், 'இழும்' எனும் ஓசையுள்ள சின்னம் எனும் கருவி; தானூத - ஒலிக்க; ஓசையது - அதன் ஓசையும்; ஆக இவ்வாறான பல முழக்கங்களும்;

**2116.** மாமறலி என்று - பெரியஎமன் எனவும்; மகாசண்டன் - பெரிய சண்டன் எனவும்; காலன் என்று - மகா காலன் எனவும்;

**2117.** எமனிவ னென்று - எம தருமராசன் இவன்தான் எனவும்; இயல்தன்மராசனென்று - விளங்கக்கூடிய தருமன் இவன்தான் எனவும்;

**2118.** எல்லார்க்கும் இவன் நடுவன் - அனைத்துயிரினங்களுக்கும்

நடுவனிம தூதன் நடுவான தன்மனென்று
என்று திருச்சின்ன மேழாயிரங் கோடி
வெற்றியிவை கூறிவர வெற்றி வலுவுடையான்
திடமுற்றோர் தேவர் சிறப்பாகவே சூழ
வடக்கு வாசல்தனிலே வந்தான் வலுகாலன்

**எமன் அரியணை ஏறி அமர்தல்**

பத்துலட்சங் கோடி பண்புட னாலத்திசுத்தி
தத்தெட்டுக் காதந் துலங்கு மஞ்ஞூறாயிரமாம்
தங்கமுடன் கோட்டை தகமையுடன் சேர்ந்து
பொங்கு புகழான் புயங்கள்விம்மியே மகிழ்ந்தான்

இவன் நடுநிலையானவன் என்றும்; நன்றாய் அதிகாரி - நல்ல நீதிபதி எனவும்;

**2119.** நடுவன் இமதூதன் - எப்பககமும் சாராது நீதிவழங்கக்கூடிய வன்; நடுவான தன்மனென்று - நீதிபதியான தருமன் என்றும்;

**2120.** என்று திருச்சின்னம் - இவ்வாறு மங்கல வாச்சியங்கள்; ஏழாயிரம் கோடி - பல கோடி அளவின முழங்கி அவனை வரவேற்றன;

**2121.** வெற்றியிவை கூறிவர - பலர் எமனுக்கு விருதுகள் கூறினர்; வெற்றிவலுவுடையான் - மிகுந்த பலமுள்ள எமதருமனை;

**2122.** திடமுற்றோர் தேவர் - திடமிகுந்த வானவர்கள் அவனை; சிறப்பாகவே சூழ - மிகுந்த மதிப்புடன் அருகில் சூழ்ந்துவர;

**2123.** வடக்கு வாசல் தனிலே - எமபுரியின் வடக்கு நுழைவின் முன்பு; வந்தான் வலுகாலன் - வலிமையுள்ள எமன் வந்து நின்றான்;

**2124.** பண்புடன் - முறையாக; பத்துலட்சங்கோடி - அந்த அளவு பெண்கள்; ஆலத்தி சுத்தி < ஆலாத்தி சுற்றி - மங்கலகரமாக வரவேற்று, (கண்ணேறு (திருஷ்டி) கழித்து என்றும் கூறலாம்);

**2125.** தத்து எட்டுக் காதம் - அவ்வாறான ஆலத்தியின் ஒளி எண்காதஅளவு பாய்ந்து தெரிந்தது; துலங்கும் ஐஞ்ஞூறாயிரம் - 'பளிச்' என விளங்கும் ஐந்நூறாயிரம் எண்ணிக்கைகொண்ட; பா.வே. - 'சுத்துக்கு' (மா.தவநிலை);

**2126.** தங்கமுடன் கோட்டை - தங்கத்தால் செய்யப்பெற்ற கோட்டைகள்; தகமையுடன் சேர்ந்து - சிறப்பாக அமைந்து விளங்க;

**2127.** பொங்கு புகழான் - புகழ் மிகுந்து விளங்கக்கூடிய எமன்; புயங்கள் விம்மியே - புளகாங்கிதமடைதலால் தோள்கள் பருத்து; மகிழ்ந்தான் - சந்தோசமடைந்தான்;

மங்காத யின்ம்பம் மகிழ்ச்சிபெற்று ராசாங்கம்
சிங்காசன மேறித் தீரன் கொலுவிருந்தான்

### நயினார் தம் இருக்கையில் அமர்தல்

ஆயிரங் கோடி அனந்த கணக்கருடன்
பாயிர லோகம் படைக்கும் விரிஞ்சகனும்
அரனார் தமக்கு மரிதேவர் யாவருக்கும்
வரமீறுங் காலனுக்கு வாகாய்க் கணக்கெழுதும்
கணக்கருக் கெல்லா[ம்]ங் கத்த னதிகாரி
இணக்கம் நமனா ரிருக்குமிட மருகே
சித்திர புத்திரனார் சிறப்பாக வீத்திருந்தார்

*2128.* மங்காதயின்பம் மகிழ்ச்சிபெற்று - இனி என்றும் மாறாத சந்தோச மடைந்து; ராசாங்கம் - ஆட்சி;

*2129.* சிங்காசன மேறி - எமதருமராசன் எனப் பட்டத்துடன் எமபுரத்துக்கு ஆட்சிபீடத்திலேறி அமர்ந்து; தீரன் - எமன்; கொலுவிருந் தான் - காட்சியளித்தான்;

*2130.* ஆயிரங்கோடி - மிகப்பெரிய அளவிலான; அனந்த கணக்கரு டன் - அளவில்லாத எழுத்தர்களுடன்; பா.வே. - 'அனந்தன்கருடன்' (ச.ம.நூ.); 'அழகு கணக்கருடன்' (கை.பிரதி);

*2131.* பாயிரலோகம் - இவ்வுலகிலுள்ள எல்லையற்ற உயிரினங் களை; படைக்கும் - உருவாக்கும்; விரிஞ்சகனும் - பிரமாவுக்கும்; பா.வே. - 'படைக்கும் யேமன் தூதர் (மா.தவநிலை);

*2132.* அரனார் தமக்கும் - சிவனுக்கும்; அரி தேவர் யாவருக்கும் - வானுலகோர் எல்லோருக்கும்; பா.வே. - 'அரிமூவர் மூன்று தோளில் (ச.ம.நூ.); 'தொழில்' (மா.தவநிலை, கை.பிரதி);

*2133.* வரமீறும் - உயிர்களுக்குரிய விதிகளை மீறி அவர்களை வதைக்கும்; காலனுக்கும் - எமனுக்கும்; வாகாய் - வகையாய்; கணக்கெ ழுதும் - ஜனன-மரணக் கணக்குகளை வரையறுக்கக்கூடிய; பா.வே. - 'வரம் ஈகும்' (ச.ம.நூ.);

*2134.* கணக்கருக்கெல்லாம் - எல்லா எழுத்தர்களுக்கெல்லாம்; கத்தன் < கருத்தன் - செய்விப்பவனான; அதிகாரி - தலைவனாக மேல்பதவியில் இருப்பவன்; பா.வே. - 'அரசன் கரத்தன் அதிகாரி' (ச.ம.நூ.);

*2135.* இணக்கம் - பொருத்தமாக; நமனார் - எமன்; இருக்கு மிடமருகே - பக்கத்தில்; பா.வே. - 'எனக்கும்' (மா.தவநிலை);

*2136.* சித்திரபுத்திரனார் -சித்திரபுத்திர நயினார்; சிறப்பாக - நன்றாக விளங்குமாறு; வீத்திருந்தார் < வீற்றிருந்தார் - அமைந்திருந்தார்;

பத்திரமா யெமசபை பாங்காய் விலாசமதாய்
ஆயிரங் காத மகல விலாசமதாய்
பாயிரமாய்க் கிங்கிலியர் பாங்காகச் சூழ்ந்துநின்றார்

**பூமாதேவி முறையிட நயினார் எமனிடம் உரைத்தல்**

இந்தப் படியே யிருக்குஞ் சபைதனிலே
வந்த பார்மாதும் வாயிதிறந்தங் கேதுரைப்பாள்
சித்திர புத்திரரே சீர்கணக்கை நீர்பார்த்து
பத்திரமா யிக்கனதி பாங்காகத் தீருமென்றாள்
அந்தவுரை கேட்டு யானபுகழ்க் கணக்கர்
வந்த கனதி வாகாய்த் தவிர்க்கவென்று

2137. பத்திரமாய் - பாதுகாப்பாய்; எமசபை - எமனின் தர்பார்; பாங்காய் - ஒழுங்காய்; விலாசமதாய் < விசாலமதாய் - பிரிந்து அகன்று பெரிதாய்; (அழகாய் என்றும் கூறலாம்);

2138. ஆயிரங்காதம் - ஆயிரங்காதத் தொலைவில்; அகல விலாசம தாய் - அகன்று பரந்து விரிந்து கிடந்திட; பா.வே. - 'அகல நிறைந்தர மாய்' (மா.தவநிலை);

2139. பாயிரமாய் - எல்லையில்லாத அளவு; கிங்கிலியர் - எமகணத் தினர்; பாங்காகச் சூழ்ந்து நின்றார் - வரிசையாக எமனின் கட்டளைக்காக அவனைச் சுற்றி நின்று கொண்டிருந்தனர்;

2140. இந்தப்படியே - இவ்வாறு கணக்கர்களும் கிங்கிலியரும் நயினாரையும், எமனையும் சூழ்ந்து நின்று கொண்டிருக்கின்ற; இருக்குஞ் சபைதனிலே - விளங்கக்கூடிய மண்டபத்தில்; பா.வே. - 'சபை நடுவே' (மா.தவநிலை);

2141. வந்த பார்மாதும் - அங்கு வந்து தோன்றிய பூமாதேவியும்; வாயி < வாய்; திறந்தங்கேதுரைப்பாள் - கூறுவதாவது;

2142. சித்திரபுத்திரரே - கணக்கரே; சீர்கணக்கை - உயிரினங்களின் மரணக் கணக்குகளை; நீர் பார்த்து - நீவிர் ஆராய்ந்து;

2143. பத்திரமாய் - மிகவும் கவனமாய்; இக்கனதி - பூமியின் பாரத்தை; பாங்காக - முறையாக; தீருமென்றாள் - தவிரும் என்று பூமாதேவி கூறினாள்; பா.வே. - 'என் கனதி'(மா.தவநிலை);

2144. அந்த உரைகேட்டு - அவ்வாறு அவள் கூறுவதைக் கேட்டு; ஆன புகழ்க்கணக்கர் - கணக்கெழுதுவதில் பெயர்பெற்ற சித்திரபுத்திர நயினார்; பா.வே. - 'அடங்கல் நிறைகணக்கர்' (ச.ம.நூ.);

2145. வந்தகனதி - பூமிக்குப் புதிதாக வந்து சேர்ந்து கொண்ட பாரம்; வாகாய்த் தவிர்க்கவென்று - முறையாக நீக்க வேண்டி; பா.வே. - 'வந்த நிறை கனதி' ' (கை.பிரதி);

*பொற்றகற்றை முன்புவைத்துப் பூட்டுங் கயற்நெகிழ்த்து*
*சித்திரமாய் மீறுஞ் சிறந்த கணக்கெடுத்து*
*எமதன்ம ராசனுட னெடுத்து மிகவுரைப்பார்*
*தர்மமிகு பாரில் தவஞ்செய்தோர் தன்னைவிட்டு*
*பாதகரை யெல்லாம் பதியைவிட்டு இப்பதிக்கு*
*மீதா யழையும் விடுவுனாள் பின்விடுவோம்*
*தங்குவலு கண்டந் தாரணியிலே வுயிரும்*
*எங்குந் திரட்டி யியல்பாக யிப்பதிக்கு*
*பழைய கணக்கெடுத்துப் பார்க்கவே தேவையில்லை*

**2146.** பொற்றகற்றை < பொத்தகத்தை < புத்தகத்தை - கணக்கு ஏட்டை; முன்பு வைத்து - தனக்கு எதிரில் வைத்து; பூட்டுங்கயற்நெகிழ்த்து - ஏட்டை அவிழ்த்து; (கயிற் < கயிறு); பா.வே. - 'பொக்கிஷத்தைத் தான் பரப்பி... கயருயவிழ்த்து (மா.தவநிலை);

**2147.** சித்திரமாய் - அழகாய் எழுதியுள்ள; மீறுஞ்சிறந்த கணக்கெடுத்து - பலவாக விரிந்துகிடக்கும் ஒழுங்கான கணக்குகளைப்பார்த்து;

**2148.** எம தன்மராசனுடன் - எமனிடம்; எடுத்து மிகவுரைப்பான் - பின்வருமாறு எடுத்துச் சொல்வார்;

**2149.** தர்மமிகுபாரில் - உண்மை மிகுந்த உலகில்; தவம்செய்தோர் - சிவபூசை மேற்கொண்டோர்; தன்னைவிட்டு - அப்படியானவர்களை விடுத்து;

**2150.** பாதகரை எல்லாம் - தீயவர்கள் எல்லோரையும்; பதியைவிட்டு இப்பதிக்கு - அவரவர்கள் தங்கியுள்ள இடங்களிலிருந்து எமபுரிக்கு;

**2151.** மீதாய் அழையும் - இங்கே, மேலே கூப்பிடும்; விடுவுனாள் - அவர்களை என்று, எங்கு அனுப்பவேண்டுமோ; பின் விடுவோம் - பின்னால் தீர்மானிப்போம்; பா.வே. - 'போதமிகயழையும்' (மா.தவநிலை); 'போத முடளழையும்' (கை. பிரதி);

**2152.** தங்குவலுகண்டம் தாரணியிலே - விளங்கக்கூடிய கோளங்களில் பெரிதான பூமியில்; உயிரும் - சீவன்களும்;

**2153.** எங்கும் திரட்டி - எல்லாப் பதிகளிலும் பிடித்துச் சேர்த்து; இயல்பாக இப்பதிக்கு - எப்போதும் போல் இந்த எமபுரிக்குக் கொண்டுவர வேண்டும்;

**2154.** பழைய கணக்கெடுத்து - முன்பு எழுதிவைத்துள்ள கணக்குகளை மீண்டும் எடுத்து; பார்க்கவே தேவையில்லை - பார்வையிட வேண்டிய அவசியமே இல்லை; பி.வே. - 'தேள்வையில்லை' (மா.தவநிலை);

அழையு மவர்கள்தனை யாதாய மீயாதால்
தங்குஞ் சிலவழிவும் தானே சரிவிடுவேர்
மங்கு மவரை வரவழையு மென்றுரைத்தார்

**உயிரினங்களைக் கொல்ல எமன் ஆணையிடல்**

அந்தவுரை கேட்டு ஆனபுகழ்க் காலன்
சிந்தைவலு யேவல்நமன் செங்கோலவர்க் களித்து
செல்லாயென அனுப்பச் செல்லவே யேவல்நமன்
கல்லான திண்டோள் கருணைவலு தூதனுக்கு
செங்கோ லளித்துச் சிறப்புடனே யேவிவிட்டார்
வெங்கோபத் தூதன் மிகுந்தவனை யேவிவிட்டான்

2155. அழையும் அவர்கள்தனை - எமலோகத்துக்கு அவ்வாறான பேர்களைக் கொண்டு வரச் செய்யும்; ஆதாயம் - பயன்எதுவும்; ஈயாதால் - இல்லாததால்;

2156. தங்கும் சிலவழிவும் - (< செலவழிவு) - விளங்கக்கூடிய செலவை தானே சரிவிடுவேர் - அவர்களே செய்து கொள்வர்; பா.வே. - 'சிலவும் வழிவும்' (மா.தவநிலை); 'வரவு செலவு ' (கை.பிரதி);

2157. மங்கும் அவரை - அப்படியான புகழில்லாதவர்களை; வரவழையும் என்றுரைத்தார் - உடனே எமலோகத்துக்கு ஏகுமாறு செய்க என்று சித்திரபுத்திர நயினார் கூறினார்;

2158. அந்தவுரைகேட்டு - கணக்கருடைய ஆலோசனைகளைக் கேட்ட பின்பு; ஆனபுகழ்க்காலன் - புகழ் விளங்கக்கூடிய எமனானவன்;

2159. சிந்தைவலுயேவல்நமன் - மனத்திலே திடமுள்ள ஏவல் நமனுக்கு; செங்கோல் அவர்க்கு அளித்து - அதிகாரத்துக்குரிய கோலினை நல்கி; பா.வே. - 'வரிசை சீர் நமனுக்கே கொடுத்தான்' (ச.ம.நூ.); 'கோல்பட்டம் சீராகவே கொடுக்க' (மா.தவநிலை);

2160. செல்லாய் என அனுப்ப - 'போவாய்' என எமனும் அவனைப் பணித்தான்; யேவல் நமன் செல்லவே - அதற்குடன்பட்டு ஏவல் நமனும்;

2161.கல்லான திண்டோள் - கல்லைப்போன்ற உறுதியான திரண்ட தோள்களையுடைய; கருணை வலுதூதனுக்கு - கருணை நிறைந்த காலதூதன் என்பவனுக்கு;

2162. செங்கோலளித்து - அதிகாரக் கோலினை நல்கி; சிறப்புடனே ஏவிவிட்டார் - எல்லா வசதிகளும் அளித்துச் 'செல்க' எனப் பணித்தான்;

2163. வெங்கோபத்தூதன் - கொடிய கோபம் நிறைந்த காலதூதன்; மிகுந்தவனை ஏவிவிட்டான் - அவனுடைய தூதுவர்களை அனுப்பினான்;

மாயப் பிணியும் வஞ்சினையும் பாம்புகளும்
காயத்தில் சென்று கடுகி வதையுமென்றார்
நூறாயிரங் கோடி நூறனந்த தூதுவர்கள்
வீறாயிரங் கோடி வெங்கோபக் கிங்கிலியர்
ஆளும் பலதேவாருத் தவர்கள் சொல்க்கேட்டு
வாழுங் குடிகெடுத்து வாட்டும் பலதேவர்
பாருலகில் சென்று பக்கத்தில் தானேகி
சீருலவு மண்டந் திசையுயிரைக் கொள்ளைகொண்டான்

**உயிரினங்களின் மரணம்**

தாயைவிட்டுச் சாவோருந் தந்தைவிட்டுச் சாவோரும்

*2164.* மாயப் பிணியும் - மாயமாகச் சென்று தாக்கும் நோய் வகைகளும்; வஞ்சினையும் - கொடிய சூதுவாதுகளும்; பாம்புகளும் - வேதனை செய்யும் அரவுகளும்;

*2165.* காயத்தில் சென்று - மனிதர்களின் உடம்பில் நுழைந்து; கடுகி - விரைந்து; வதையுமென்றார் - துன்பப்படுத்திக் கொல்லுக என்று கூறினான்;

*2166.* நூறாயிரங்கோடி நூறு - இந்த அளவிலான; அனந்த தூதுவர்கள் - அளவில்லாத கிங்கிலியர்; பா.வே. - 'ஊர் அளந்த தூதுவர்கள்' (ச.ம.நூ.);

*2167.* வீறு - வீறாப்பு மிகுந்த; ஆயிரங்கோடி - இந்த அளவிலான; வெங்கோபக் கிங்கிலியர் - கடுங்கோபத்துடன் விளங்கும் தூதுவர்கள்;

*2168.* ஆளும் பல தேவாருத்தவர்கள் - வானுலகை ஆட்சிசெய்யும் தேவர்களைப் போன்றோர்களின்; (உத்தவர்கள் < உற்றவர்கள்); சொல்க் கேட்டு - பேச்சைக்கேட்டுக் கொண்டு அதன்படி; பா.வே. - 'ஆளும் பல தேவதைகள் யருத்துவரங்கள் சொல்லி' (மா.தவநிலை);

*2169.* வாழும் குடிகெடுத்து - நன்றாக வாழ்ந்து கொண்டிருக்கும் குடும்பங்களை நோகடித்து; வாட்டும் - அவர்களைத் துன்பத்தில் உழலச் செய்யும்; பலதேவர் - பல தேவர்களின்; பா.வே. - 'குலதேவே' (மா.தவநிலை);

*2170.* பாருலகில் சென்று - பூமியை அடைந்து; பக்கத்தில் தானேகி - அப்படிப்பட்டவர்கள் அருகே சென்று;

*2171.* சீர் உலவும் அண்டம் திசை - பெருமை விளங்கக்கூடிய எல்லாத் திசைகளிலுமுள்ள; உயிரை - சாகவரம் பெற்ற உயிரினங்களை; கொள்ளை கொண்டார் - சங்கரித்தான்;

*2172.* தாயைவிட்டுச் சாவோரும் - ஈன்ற அன்னை வாழ்ந்து கொண்டி

சேயைவிட்டுப் பேடைவிட்டுச் செற்றுக் கிடப்போரும்
வகுத்துவலி நோவால் வதையுண்டு போவோரும்
சகுத்துரண காச்சலிலே தானுருண்டு போவோரும்
தந்தையன்னை போச்சுதென்பார் தன்குழவி
போச்சுதென்பார்
எந்தன்பெண்டீர் போச்சுதென்பா ரென்புருசன்
போச்சுதென்பார்
தங்கும் பிணிக்குத் தருமருந்து செய்திறப்பார்
பொங்குவெட்டில் குத்தில் புழுகுமுயிர் மடிவார்

ருக்கத் தாமே சாகின்ற குழந்தைகளும்; தந்தைவிட்டுச் சாவோரும் -அதைப்போன்றே பிதா உயிரோடிருக்கப் பிள்ளைகள் மட்டும் சாவதுவும்;

2173. சேயை விட்டு - தாம் பெற்ற குழந்தைகள் உயிரோடிருக்கத் தாம் மட்டும் சாகின்ற பெற்றோர்களும்; பேடைவிட்டு - பெண்களை வாழவிட்டு விட்டு ஆடவர்களானவர்; செற்று (< செத்து)க்கிடப்போரும் - சாகின்றவர்களும்; பா.வே.- 'பெண்டிர் விட்டுச் செத்து கிடப்பாரும்' (மா.தவநிலை);

2174. வகுத்து வலி < வவுத்துவலி < வயிற்றுவலி; நோவால் -வேதனையால்; வதையுண்டு போவோரும் - எமலோகப் பிணிகளால் பீடிக்கப்பெற்றுச் சாகின்றவர்களும்; பி.வே.- 'வயத்து வலிவாதம்' (மா. தவநிலை);

2175. சகுத்துரண காச்சலிலே - ஒருவகை சுரத்தால்; தானுருண்டு போவோரும் - சேர்ந்து சாவோர்களும்; பா.வே.- 'சமயத்தில் அரணக் காய்ச்சலிலே' (ச.ம.நூ); 'சயத்தினில் காச்சலிலே' (மா.தவநிலை);

2176. தந்தையன்னை - பெற்றோர்கள்; போச்சுதென்பார் - செத்துப் போய்விட்டார்கள் என அழுவோரும்; தன்குழுவி போச்சுதென்பார் -தாங்கள் இருக்கத் தங்கள் குழந்தைகள் செத்துப் போய்விட்டன என அழுவோரும்; பா.வே.- 'மாண்டு தென்பார்' (மா.தவநிலை);

2177. எந்தன் பெண்டீர் போச்சுதென்பார் - எங்கள் மனைவியர் செத்துப்போய் விட்டனர் என்று அழுவோரும்; என் புருசன் போச்சுதென் பார் - எங்கள் கணவன்மார் இறந்து விட்டனர் என அழுவோரும்; பா.வே.- 'என் புருசன் செத்துதென்பார்' (மா.தவநிலை);

2178. தங்கும் பிணிக்கு - உடம்பில் தங்கியுள்ள நோய்க்கு; தருமருந்து - தரக்கூடிய மருந்துகள்; செய்து இறப்பார் - அவ்வாறு செய்தும் சாகின்றவர்களும்; பா.வே. - 'செய்திடுவார்' (மா.தவநிலை);

2179. பொங்கு - நிறைந்து; வெட்டில் - வாள், அருவாள் வெட்டுக ளால்; குத்தில் - கத்தி, வேல் போன்றவற்றால் குத்துப்பட்டு; புழுகும்

2180 விம்மிப் பொருமி விரைந்து யிறுமாந்து
செம்மைமிகு வீட்டில் சிறந்த கனகிழடாய்
யேங்கி யழுது யிருக்கையிலே யங்கவரை
ஓங்கு குலதெய்வ முயிர்வதைக்க வேணுமென்று
பக்கத்திலோர் முரடன் பாரமிகு தெண்டுடனே
2185 ஒக்க வுடனிருந்தா னுத்தமனைக் கண்டுதெய்வம்
யின்று யிவன்மனதி லேகயிவரை யெல்லாம்
கொண்டு விடுவோமெனவே கொல்லயிமன்
கற்பினையாய்

- அம்பால் தைக்கப்பெற்று; உயிர் மடிவார் - இறந்து போவார்களும்; பா.வே. - 'பொங்கி யெட்டிக்குத்தி' (மா.தவநிலை);

*2180.* விம்மிப் பொருமி - அழுது, ஏங்கி; விரைந்து இறுமாந்து - வேகமாய்ப் பெருமையடைந்து; பா.வே. - 'உயிர்மாய்ந்து' (ச.ம.நூ.); 'உயிர் மாளுதென்பார்' (மா.தவநிலை);

*2181.* செம்மை மிகுவீட்டில் - வசதிமிக்க இல்லங்களில்; சிறந்த கனகிழடாய் - மிகுதியான வயோதிகமாய்; பா.வே. - 'செணம்நிறை வீட்டில்... கணதீபமுடன்' (மா.தவநிலை);

*2182.* ஏங்கி அழுது இருக்கையிலே சாக்காலம் வாராதோ என எதிர்பார்த்து வருந்தி அழுதுகொண்டிருக்கும் பொழுது; அங்கவரை - அப்படியான முதியவர்களை;

*2183.* ஓங்கு குல தெய்வம் - அவர்கள் வணங்கும் குடும்ப தெய்வங்கள்; உயிர்வதைக்க வேணுமென்று - கொல்ல வேண்டும் என;

*2184.* பக்கத்திலோர் முரடன் - அவர்கள் அருகில் ஒரு போக்கிரி; பாரமிகுதெண்டுடனே (< தண்டு) - எடைமிகுந்த தண்டாயுதத்தைக் கையிலே வைத்துக் கொண்டு; பா.வே. - 'முடவன்' (ச.ம.நூ.); 'மூடன்' (மா.தவநிலை);

*2185.* ஒக்க உடனிருந்தான் - தன்னருகில் இருந்தவனை; உத்தமனைக் கணடு தெய்வம் - அப்படியானவனைப் பார்த்த குலதெய்வமானது; பா.வே. - 'உற்றவனை' (ச.ம.நூ., மா.தவநிலை);

*2186.* இன்று இவன் மனதில் ஏக - இவனுடைய எண்ணத்தில் இப்போது புகுந்து; இவரையெல்லாம் - அங்குக் கிடந்த மனிதர்களை யெல்லாம்;

*2187.* கொண்டு < கொன்று விடுவோமெனவே - வதைத்துக் கொல்வோம் என்று முடிவு செய்து; கொல்ல இமன் கற்பினையாய் - எமனுடைய விதிக்கேற்ப அவர்களைக் கொல்ல நினைத்து;

பாரந்தக் காம்பில் பறந்துசென்று ரோமவழி
வீரமு னிறைந்து மீறுமனதைக் கலக்கி
ஆங்கார மாக யதட்டித் தடியெடுத்து
ஓங்கி யடித்து யுயிர்மடிய யங்கவர்கள்
வாய்குழறி கைப்பதறி வாகுவிடை காலுதைந்து
தாயலறப் பிள்ளையளை தங்கள்தெய்வங்
கொன்றுதென்று
இப்படி யெங்கெங்கு மெமையவர் கொல்லவஞ்சி
செப்பமுடன் பல்க்காட்டி[ச்] செற்றாரிது சிலபேர்
தங்கு புவனந் தரணியெவை பலவும்
பொங்கமுடன் கொள்ளையிட்டார் பொற்பெரிய
தூதுவர்கள்

2188. பாரந்தக் காம்பில் பறந்து சென்று ரோமவழி - அவர்களின் மயிர்க்கண் வழியாக உடம்பினுள் புகுந்து;

2189. வீரமுனிறைந்து - வலிமைமிகுந்து; மீறுமனதைக் கலக்கி - அவர்களுடைய உள்ளத்தில் பயமேற்படச் செய்து;

2190. ஆங்காரமாக - மிகுந்த கொடூரமான வகையில்; அதட்டி உயிர்களைப் பயமுறச் செய்து; தடியெடுத்து - அம்மனிதன் கையில் வைத்திருந்த தண்டால்;

2191. ஓங்கி அடித்து - பலமாகத் தாக்கி; அங்கவர்கள் உயிர்மடிய - ஆங்குள்ளவர்கள் இறக்கவும்;

2192. வாய் குழறி - அவர்கள் இறக்கும் போது வாய் உழறிப்பேசியும்; கைப்பதறி - கைகள் நடுங்கியும்; வாகுதண்டை காலுதைந்து - தண்டையணிந்துள்ள கால்களை எறிந்தும்;

2193. பிள்ளையளை < பிள்ளைகளை - தம் குழந்தைகளை; தங்கள் தெய்வம் கொன்றுதென்று - தம்முடைய குல தெய்வமே வதைத்துக் கொன்றுவிட்டது என; தாய் அலற - தாய்மார்கள் அழவும்;

2194. இப்படியெங்கெங்கும் - எல்லாவிடத்திலும் இவ்விதமாக உயிரினங்கள்; எமையவர் கொல்ல அஞ்சி - எமகிங்கிரர் வதைத்து உயிர்போக்குவதைப் பார்த்துப் பயந்த;

2195. சிலபேர் - சிலர்; செப்பமுடன் பல்க்காட்டி - பல் தெரியுமாறு நடுங்கி; செற்றார் < செத்தார் - இறந்தனர்; பா.வே. - 'பலக்காட்டில் செத்தார்' (மா.தவநிலை);

2196. தங்கு புவனம் தரணியெவை பலவும் - நிலவக்கூடிய அனைத்து உலகங்கள் பலவற்றிலும்;

2197. பொங்கமுடன் - மிகுந்த அளவில்; பொற்பெரிய தூதுவர்கள்

தாழிதனில் வைத்ததுவும் தான்கிணத்தில்
போட்டதுவும்
வாழி யிமனெனவே வந்துவெளி யேறியதே

**பூமிபாரம் குறைதல்**

2200 மானிடர்தன் னாக்கையெல்லாம் வாகாய்க் கனலில்
வைத்து
கானிடத்தில் நீறாய்க் கடும்பார மாறியதே
சேர்த்துப் பிடித்துச் சிறந்தவலுச் சீவனெல்லாம்
ஆர்த்து முழங்கி யதட்டி நடந்தார்கள்

**உயிர்கள் எமலோகம் போதல்**

வட்ட வுலகெங்கு மாளாத சீவனெல்லாம்

கொள்ளையிட்டார் - சாகாமலிருக்கும் உயிரினங்களையெல்லாம் கொன்று உயிர்களை எமதூதர்கள் எடுத்துச் சென்றனர்; பா.வே. - 'புகழ்பெரிய' (ச.ம.நூ.);

2198. தாழிதனில் வைத்ததும் - முதுமக்கள் தாழிகளில் வைத்து அடக்கம் செய்யப்பெற்றவர்களும்; தான் கிணத்தில் போட்டதுவும் - இடமின்றிக் கிணற்றில் எறியப்பெற்றனவும்; பா.வே. - 'தாழிதனில் போட்டதுவும்' (மா.தவநிலை);

2199. வாழியிமனெனவே - வருந்தும் தங்களுக்கு விடிவு எமனால் வந்ததே என அவனை வாழ்த்தி; வந்து வெளியேறியதே - எமலோகத்துக் குச் சென்றன; பா.வே. - 'வாசல் வந்து கரையேறியதே' (மா.தவநிலை);

2000. மானிடர் தன்னாக்கை யெல்லாம் - மனித உடம்புகளையெல் லாம்; வாகாய் - முறையாக கனலில் வைத்து - தீக்கங்கில் வைத்துச்சுட வும்; பா.வே. - 'வெந்து வாகும் மிறுக சீவ செந்து' (மா.தவநிலை);

2201. கானிடத்தில் - வெளியில் அவை; நீறாய் - வெறும் சாம்பலாய் மாறின; கடும்பாரம் மாறியதே - அதன் காரணமாகப் பூமியின் கனம் குறைந்தது;

2202. சிறந்தவலுச் சீவனெல்லாம் - பலமிகுந்த உயிர்கள் எல்லாவற் றையும்; சேர்த்துப் பிடித்து - ஒன்றாகப்பிடித்து;

2203. ஆர்த்து - ஆரவாரம் செய்து; முழங்கி - ஒலி செய்து; அதட்டி - மற்றவர்களைச் சத்தமிட்டு அடங்கச் செய்து; நடந்தார்கள் - சென்றார்கள்;

2204. வட்டவுலகெங்கும் - வட்டவடிவமான பூமியிலுள்ள; மாளாத சீவனெல்லாம் - சாகாத உயிர்கள் அனைத்தும்; பா.வே. - 'வட்ட வுலகண்டரண்டம்' (மா.தவநிலை); 'வட்டவுலகண்டதிசை' (கை.பிரதி);

திட்ட முடனேமன் திசைநோக்கிப் போனதுவே
நமன்கோட்டை வாசல் நாலில் சனமிகுத்து
எமன்கோட்டை வாச லிடஞ்சல்படும் வாதை
கண்டு யிமதூதர் கடுகியே யோடிவந்து
அண்ட முகடுமுட்டு மான பெருவாசல்
பதினாறு வாசலையும் பாங்காய்த் திறந்துவிட்டார்
அதிர நடந்தா ரதுவில்மிகுந்தே யிடஞ்சல்
ஆறாயிரங் காத மகலமொவ்வா ரதன்வாசல்
நீறாகுஞ் சீவன் நெருங்கி நடந்ததுவே
இந்த யிடஞ்ச லிருநூறு நாள்நடந்தார்

**உயிர்களை வகைப்படுத்தல்**

அந்தந்தச் சீவ னடங்கலையுந் தானிறுத்தி

2205. திட்டமுடன் - உறுதியுடன்; ஏமன் திசைநோக்கி - எமலோகத் துக்கு; போனதுவே - சென்றன;

2206. நமன் கோட்டை வாசல் நாலில் - எமன் கோட்டையின் நான்கு வாசல்கள் முன்பு; சனமிகுந்து - உயிரினங்கள் மிகுந்து கூட்டமாக நின்றதால்; பா.வே. - 'நாவில் சனம் மிகுத்து (மா.தவநிலை);

2207. எமன் கோட்டை வாசல் - எமபுரி நுழைவாசல்; இடஞ்சல் படும் வாதை - நெரிசல் ஏற்பட்டதால் உண்டான துன்பம்;

2208. கண்டு யிமதூதர் - கிங்கிலியர் இந்நிலையைப் பார்த்து; கடுகியே யோடிவந்து - விரைந்து அவ்வாசலுக்குச் சென்று;

2209. அண்டமுகடு முட்டும் - ஆகாய உச்சியையே தொடக்கூடிய; ஆனபெருவாசல் - அப்படியான அக்கோட்டை வாசலை;

2210. பதினாறு வாசலையும் - அதன் பதினாறு நுழைவிடங்களை யும்; பாங்காய்த் திறந்துவிட்டார் - அவ்வுயிர்கள் நுழைவதற்கு வசதியாகத் திறந்து விட்டனர் - பா.வே. - 'ஈரெட்டு வாசல்' (ச.ம.நூ., மா.தவநிலை);

2211. அதிர நடந்தார் - வாசலூடே நுழைந்து அது நடுநடுங்க அனைவரும் உள்ளே சென்றனர்; அதுவில் - அப்படியும்; இடஞ்சல் மிகுந்தே - நெருக்கடி மிகுதியாயிற்று;

2212. ஆறாயிரங்காதம் - அந்த அளவு; அகலம் ஒவ்வா - நீள அகலத்தையும் மீறிய; அதன் வாசல் - எமபுரியின் நடைபாதை;

2213. நீறாகும் சீவன் - பொடியாகக் கூடிய உயிர்கள் எல்லாம்; நெருங்கி - நெருக்கமாக; நடந்ததுவே - பாதையில் சென்றன;

2214. இந்த இடஞ்சலில் இருநூறு நாள் - இப்படியான நெரிசலான பயணத்தை இருநூறு நாள்கள்; நடந்தார் - மேற்கொண்டன;

2215. அந்தந்தச் சீவனடங்கலையும் - வெவ்வேறு வகையான உயிரினங்களை எல்லாம் சேர்த்து; தானிறுத்தி - நிற்கச் செய்து;

இருபத்தெண் ணாயிரங்கோடி யிளங்கணக்கர்
தானெழுந்து
வருமந்தச் சீவன் வகுப்பாகவே வகுத்து
ஏடெடுத்துப் பாற்று யியல்வுடனே பாதகரை
கூடெடுத்துப் பார்போட்டுக் கொண்டுவந்தார்
யாவருக்கும்

2220 நடுவாக யெல்லோர்க்கும் நன்றாய்ப் பரிகாரம்
வடுவுடனே செய்வார் வகைவகையாய்த் தூதுவர்கள்

**செக்கில் அரைபடும் உயிர்கள்**

மாதாபிதாக் குருவை வஞ்சினைகள் செய்வோரை
ஆதரவாய்ச் சேரு மடைக்கலத்தைக் கொண்டவர்கள்

*2216.* இருபத்தெண்ணாயிரங்கோடி இளம்கணக்கர் - பெரிய அளவி லான புதிய எழுத்தர்கள்; தானெழுந்து - உயிர்களருகில் வந்து சேர்ந்து;

*2217.* வருமந்தச் சீவன் - எமபுரிக்குள் வந்து கொண்டிருக்கும் உயிர்களை எல்லாம்; வகுப்பாகவே வகுத்து - வகை வகைகளாகப் பிரித்து;

*2218.* ஏடெடுத்துப் பாற்று (< பார்த்து) -கணக்கு ஏட்டை நெகிழ்த்து அவ்வவற்றின் விபரங்களை நோக்கி; இயல்வுடனே பாதகரை - தீயவர் களை உடனடியாக; பா.வே. - 'இயல்பில்லாப் பாதகரை' (மா.தவநிலை, கை.பிரதி);

*2219.* கூடெடுத்துப் பார்போட்டு - வரிசை வரிசையாக்கி; கொண்டு வந்தார் - அழைத்து வந்தனர்; யாவருக்கும் - அப்படியானவர்களுக்கு;

*2220.* நடுவாக - மத்தியில் நிறுத்தி; எல்லோர்க்கும் - தீயவர் அனைவர்க்கும்; நன்றாய்ப் பரிகாரம் - ஒழுங்காகத் தண்டனைகள் கிடைக்குமாறு; பா.வே. - 'நாடும் பரிகாரம்' (ச.ம.நூ.);

*2221.* வகைவகையாய்த் தூதுவர்கள் - அவரவர் கர்மங்களுக் கேற்ற வற்றை எமகிங்கிலியர்; வடுவுடனே செய்வார் - நிலைத்து நிற்குமாறு செய்தனர்;

*2222.* மாதா பிதா - பெற்றோரையும்; குருவை - ஆசானையும்; வஞ்சினைகள் செய்வோரை - பாதகஞ்செய்யும் பாவிகளை;

*2223.* ஆதரவாய்ச் சேரும் அடைக்கலத்தை - அபயம் எனத் தன்னிடம் வந்து சேரும்பொருளை அல்லது சேர்வோர்களை; கொண்ட வர்கள் - தங்களாக்கிக் கொண்டவர்களை;

கோவை வதைசெய்வோர் குழந்தைமிக வதைப்போர்
தாவமுடன் நன்றி தனைமறந்த பாதகரை
தங்கள் கணவன் தனையிழந்தோர் கோபமுள்ளோர்
பொங்குபசித்தோரை வைத்துப் பொருந்தமுது
செய்தோர்
காதலினால் பெண்ணால் கலந்துமிக வுண்டோரை
தீதான செக்கில் திரித்தார் சிலதூதர்

**ஈயத்தைக் காய்ச்சி விடுதல்**

ஆய வழியி லனியாயஞ் செய்தோரை
வாயிலொன்று சொல்லி மனதிலொன்றை வைத்தோரை

2224. கோவை வதைசெய்வோர் - பசுக்களைக் கொல்வோர்; குழந்தைமிக வதைப்போர் - சிசுவதை புரிவோர்களை; பா.வே. - 'கோவை வதையக் கொன்று (மா.தவநிலை);

2225. தாவமுடன் < தாபமுடன் - கோபத்துடன்; நன்றிதனை மறந்த பாதகரை - செய்நன்றி மறந்த வஞ்சகரை; பா.வே. - 'அரிதனை மறந்த' (கை.பிரதி);

2226. தங்கள் கணவன் தனை - தங்களுடைய புருசன்மாரை; இழந்தோர் - சாவில் பறிகொடுத்த பெண்களும்; கோபமுள்ளோர் - சின மிகுதியானவர்கள்; பா.வே. - 'கணவன் தனைமறந்த கோபபெண்டிர்' (மா.தவநிலை);

2227. பொங்கு பசித்தோரை - பசிமிகுந்த ஏழைகளை; வைத்து - பார்க்க வைத்து; பொருந்தமுது செய்தோர் - விருப்பமாகத் தாம் மட்டும் உண்போர்;

2228. காதலினால் - விரும்பிக் காதலித்த மங்கையராலும்; பெண்ணால் - விரும்பப்பட்ட பெண்களாலும்; கலந்து மிக - மிகுந்து கூடிக் களித்து; உண்டோரை - அப்படி உண்டவர்களை;

2229. தீதான செக்கில் - துன்பம் விளைவிக்கக் கூடிய கல்செக்குகளில் இட்டு; சிலதூதர் திரித்தார் - சிலகிங்கிலியர் அரைத்துக் கூழாகச் செய்தனர்; பா.வே. - 'தீதடைந்த செக்கில்' (ச.ம.நூ.); 'திரியாத அந்தசெக்கில்' (மா.தவநிலை);

2230. ஆய வழியில் - வழிப் பிரயாணத்தில்; அனியாயம் செய்தோரை - வழிப்பறி செய்த திருட்டுப் பாவிகளை;

2231. வாயிலொன்று சொல்லி - வெளியில் ஒரு விதமாகக் கூறி; மனதிலொன்றை வைத்தோரை - உள்ளத்தில் அதற்கு மாறான எண்ணங்களையுடையவர்களை;

நல்லோர்கள் தங்கள்மனம் நாடிமிகப் பதறி
பொல்லாங்காய்த் தூசணித்துப் போட்டி
பறைந்தோரும்
பொல்லாத வாற்றை பொருத்துவோர் குண்டனியோர்
எல்லா யுயிரு மியல்பதைக்கக் கொன்றுதின்போர்
நல்வாக்கு மில்லாமல் நாடியுதா சினமாய்
சொல்வோர்கள் தன்னை துணிக்குமுறை நீயறியாய்
நீதி பலஞானம் நிறைந்ததமிழ்ச் சொல்சவையில்
இப்படியாம் பாரும் யியல்வுமிகு பெண்ணாகும்
செப்பமுடன் [தூதுவர்கள்] சிறந்த பரிகாரம்

2232. நல்லோர்கள் தங்கள் மனம் - நல்ல மனிதர்களுடைய உள்ளம்; நாடிமிகப் பதறி - அவர்கள் பதற்றமடையுமாறு விரும்பிச் செய்து;

2233. பொல்லாங்காய் - நல்லதற்குப் பதில் பொல்லாப்பு வருவதாய்; தூசணித்து - வைது; போட்டிபறைந்தோரும் - எதிர்ப்பாகச் சொன்னவர்களும்;

2234. பொல்லாத வாற்றை (வார்த்தை) - தீய சொற்களை; பொருத்துவோர் - பொருத்தமான இடத்தில், நேரத்தில் கூறுவோர்; குண்டனியோர் - பிறரைக் கெடுக்கும் பெண்கள்;

2235. எல்லா உயிரும் - உண்பதற்குரிய பிராணிகளை; இயல்பதைக்கக் கொன்றுதின்பார் - அவ்வுயிர்கள் துடிதுடிக்கச் சாகடித்து உண்போர்;

2236. நல்வாக்கும் இல்லாமல் - நல்லசொற்களைப் பேசாது; நாடி உதாசினமாய் - விரும்பிப் புறக்கணிக்கக்கூடிய கெட்ட வார்த்தைகளை;

2237. சொல்வோர்கள் தன்னை - இப்படியான கோள்சொல்பவர்களை; துணிக்குமுறை நீ அறியாய் - தண்டிக்கக்கூடிய முறைகளை நீ அறிந்துள்ளாய்;

2238. நீதி பலஞானம் - தருமமும் பல அறிவுகளும் நிரம்பப் பெற்று; நிறைந்த தமிழ்ச் சொல்சவையில் ( < சபையில்) - மிகுந்த தமிழ் நூல்கள் வழங்கும் அரங்கில்; பா.வே. - 'நீதிபுராணம் (மா.தவநிலை, கை.பிரதி);

2239. இப்படியாம் பாரும் - இவ்வாறான பூமியும்; இயல்பு மிகு பெண்ணாகும் - சிறப்பு மிகுந்த பெண்ணான பூமி மாது என வழங்கும்; பா.வே. - 'செய்பாவம் இகலில் பெண்ணாளை' (ச.ம.நூ.) 'பாவம்' (மா.தவநிலை);

2240. செப்பமுடன் - அப்படியானவர்களைச் சிறந்த முறையில்; தூதுவர்கள் - இங்கிலியர்; சிறந்த பரிகாரம் - கொடுக்கும் தண்டனையாவது;

ஈயக் கட்டிதன்னை யியல்வுடனே தான்காட்சி
வாயிலே விட்டு மறுக்க[க்] கிடத்திவிட்டார்

**இரும்பைக் காய்ச்சி விடுதல்**

புராண வலுநீதம் புகழுமெவை கேளாதார்
புராணந் தவிர்த்துப் புகழ்கொள்படாச் செவியர்
2245 இல்லாத வார்த்தைகளை யியல்செவியில்
கேட்டேனென்பார்
பொல்லாத வார்த்தைகளைப் போதம(றை)றந்தே
கேட்டோர்
மாலோன் புகழை மகாதேவர் தன்புகழை

2241. ஈயக் கட்டி தன்னை - பெரிய ஈயத்துண்டை; இயல்வுடனே தான் காட்சி - நன்றாகக் கொதித்து உருகச் செய்து; பி.வே. - 'இய்யம்' (மா.தவநிலை);

2242. வாயிலே விட்டு - ஒவ்வொருத்தர் வாயுள்ளும் செலுத்தி; மறுக்கக் கிடத்திவிட்டார் - அது வாயிலிருந்து வெளியேறாதபடி அவர்களை மல்லாக்கத் தள்ளிப் படுக்க வைத்தனர்; பா.வே. - 'மலக்க கிடத்தி' (மா.தவநிலை);

2243. புராண வலு நீதம் - தமிழ்ப் புராண நூல்களில் கூறப்பட்டுள்ள நல்ல நீதிக் கருத்துக்களையும்; புகழுமெவை கேளாதார் - அவை பாராட்டக் கூடிய நல்ல கருத்துக்களையும் கேட்டு அறிந்து கொள்ளாதவர் கள்; பா.வே. - 'புகழ்நீதிபுனித நூல்' (ச.ம.நூ.); 'தமிழ் நீதம்' (மா.தவ நிலை, கை.பிரதி);

2244. புராணம் தவிர்த்து - நல்ல புராணக் கருத்துக்களைக் கேட்பதை விடுத்தும்; புகழ் கொள்படாச் செவியர் - அவ்வாறான நூல்களின் பெருமைகளை இதுவரை தெரிந்து கொள்ளாத அறிவிலிகள்;

2245. இல்லாத வார்த்தைகளை - உண்மையில்லாது கூறப்படாத சொற்களை; இயல் செவியில் கேட்டேனென்பார் - விளங்குகின்ற காதால் கேள்விப்பட்டதாகக் கூறுவர்; பா.வே. - 'ஏனோ கேட்டேன்' (ச.ம.நூ.); 'என் செவியில்' (மா.தவநிலை, கை.பிரதி);

2246. பொல்லாத வார்த்தைகளை - தீய சொற்களை; போதம் மறைந்தே கேட்டார் - ஞானமிழந்து கேட்டவர்கள்;

2247. மாலோன் புகழை - திருமாலின் பெருமைகளை, அதாவது வைணவ சமயத்தின் பெருமைகளை; மகாதேவர் தன் புகழை - சிவனின் பெருமைகளை, அதாவது சைவத்தின் பெருமைகளை;

வேலோன் புகழை விரும்பியே கேளாதார்
ஞாய நடுக்கெழாமல் நன்றிதப்பும் பாதகரும்
மாயச் சடலநம்பி வஞ்சகஞ் செய்பாதகரும்
தன்மமெனும் வாற்றை தன்செவியில் கேளாதார்
கன்ம மிருபேர் கடுகி யிவர்களுக்கு
யிருப்புச் சிலாகை யியல்வுடனே தான்காட்சி
விருப்பமுடன் காதில் விரையவே வூதிடுவார்

**உயிர்களை அடித்தலும் மிதித்தலும்**

கண்ணில் காணாத கடும்பிழைகள் சொன்னோரும்
மண்ணில் குலையழிப்போர் வாகுடனே பார்த்திருந்தோர்

*2248.* வேலோன் புகழை - முருகனின் பராக்கிரமங்களை; விரும்பியே கேளாதார் - விருப்பமுற்றுக் கேட்காதவர்கள்; பா.வே. - 'மேலோன் புகழை' (மா.தவநிலை);

*2249.* ஞாயம் - நேர்மை; நடுக்கு - நடுவு நிலைமை; எழாமல் - பார்க்காது; நன்றிதப்பும் பாதகரும் - செய்நன்றி மறந்த வஞ்சகர்களும்; பா.வே. - 'நடுக் கேளாமல்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

*2250.* மாயச் சடல நம்பி - அழிந்துபோகும் இந்த உடலை நம்பி; வஞ்சகம் செய் பாதகரும் - தீவினைகள் செய்கின்ற துரோகிகளும்; பா.வே. - 'மாயுஞ் சடலம் நம்பி' (ச.ம.நூ., மா.தவநிலை);

*2251.* தன்மம் < தர்மம் - நீதி; எனும் - என்ற; வாற்றை < வார்த்தை - சொல்லை; தன் செவியில் - தங்கள் காதுகளால்; கேளாதார் - கேட்டறியாத மூடர்கள்; பா.வே. - 'தாமமெனும்' (மா.தவநிலை);

*2252.* கன்மம் < கர்மம் < கருமம் - தீ வினைகள்; மிருபேர் - மிகுந்த மனிதர்கள்; கடுகி யிவர்களுக்கு - இப்படியானவர்களை;

*2253.* இருப்பு - இரும்பு; சிலாகை < சலாகை (இரும்புக்) கம்பி; இயல்வுடனே தான் - எப்போதும் போல் பொருத்தமானதாக; காட்சி < காச்சி - உருக்கி; பா.வே. - 'சிலாக்கை' (ச.ம.நூ.); 'சலாகை' (மா.தவநிலை);

*2254.* விருப்பமுடன் - கிங்கிலியர் இன்பமுற்று; காதில் - துரோகிகள் செவியில்; விரையவே - வேகமாக; ஊதிடுவார் - செலுத்துவர்;

*2255.* கண்ணில் காணாத - நம் கண்களால் காணாத உண்மை நிகழ்ச்சிகளை; கடும்பிழைகள் - கொடிய செயல்களை; சொன்னோரும் - கூறியவர்களும்;

*2256.* மண்ணில் - பூமியில்; குலை ( < கொலை) அழிப்போர் கொடிய கொலைப் பாதகங்களைப் புரியக்கூடியவர்கள்; வாகுடனே

மாலோன் பதியும் மகாதேவர் தன்பதியும்
வேலோன் பதியும் விரைந்தணுகிப் பாராதார்
இந்தப்படி பெண்ணான யியல்வுடைய பாதகரை
சிந்தையுட னுயிர்தான்பிடிங்கிச் சிதற யடித்திடுவார்
பழிகளவு குலையள்வெகு பாவங்கள் செய்தோரை
வழியிலடித்தே பறித்து வஞ்சினைசெய் பாதகரை
வாங்கி மறுசீவன் வளத்து வதைவதைப்போர்
வாங்கி யடுத்தோர் மனதைக் கலக்கிடுவார்

- அவ்வாறு செய்வதை; பார்த்திருந்தோர் - கண்கூடாகக் கண்டுகொண்டிருந்தவர்கள்;

2257. மாலோன் பதியும் - விஷ்ணு ஆலயங்களிலும்; மகாதேவர் தன்பதியும் - சிவ ஆலயங்களிலும்;

2258. வேலோன் பதியும் - முருகன் கோவில்களிலும்; விரைந்தணுகிப் பாராதார் - விரும்பிச்சென்று வழிபடாத இறைப்பற்று இல்லாத நாத்திகர்கள்;

2259. இந்தப்படி பெண்ணான - இவ்வாறு பேடித் தன்மையுடைய; இயல்வுடைய பாதகரை - விளங்கக் கூடிய கொடியோரை; பா.வே. - 'பெண் ஆண்' (ச.ம.நூ., மா.தவநிலை);

2260. சிந்தையுடன் - கிங்கிலியர் விரும்பியே; உயிர்தான் - அப்படியான பாவிகள் உயிர்களை; பிடிங்கி < பிடுங்கி - பறித்து; சிதறயடித்திடுவார் - துண்டு துண்டாகச் சிதறிப்போகுமாறு அடித்து நொறுக்குவர்; பா.வே.- 'கண்பிடுங்கி' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

2261. பழி - பாவங்கள்; களவு - திருட்டுச் செயல்கள்; குலையள் < கொலைகள் - வதைகள்; வெகுபாவங்கள் - இவ்வாறான தருமத்துக் கொவ்வாத செயல்களை; செய்தோரை - புரிந்த கொடியவர்களை; பா.வே. - 'கள் உண்டல்' (ச.ம.நூ.);

2262. வழியில் அடித்தேபறித்து - பயணம் செய்வோர்களிடம் வழிப்பறி செய்து; வஞ்சினை செய்பாதகரை - வஞ்சிக்கும், ஏமாற்றும் கொடியவர்களை;

2263. வாங்கிமறுசீவன் - குழந்தைகளைப் பிறரிடமிருந்து பெற்று; வளத்து < வளர்த்து - ஆளாக்கி; வதைவதைப் போர் - அடிமைகளாக்கிச் சித்திரவதை செய்வோர்களையும்; பா.வே. - 'வாஞ்சிமறுசீவன்' (மா.தவநிலை);

2264. வாங்கி - பொருள்களைப் பிறரிடமிருந்து பெற்று; அடுத்தோர் மனதைக் கலக்கிடுவார் - அவ்வாறு கொடுத்தவர்களுக்குத் திருப்பிக்

கன்றிடித்துத் தள்ளிக் கறப்போர் கொளுத்துகின்றோர்
மன்றி[ல்] பறித்தோர் வழக்கில் வழச்சாய்ப்புரைத்தோர்
இந்தப் படியே யியல்வுடைய பாதகரை
விந்தை ... மீறி மிகவே பொருத்தி
பாங்காய்க் கிடத்திப் பதைக்கவேதான் மிதிப்பார்

### உயிர்களை ஊசித்தூணில் நிறுத்துதல்

ஓங்கு முள்ளுப்பீறி யுழறுகின்ற பாதகரை
நீதி புராணம் நிறையவே கோளாமல்

கொடுக்காது அவர்கள் மனம் புண்படும் படியாகச் செய்யும் கயவர்களை யும்;

2265. கன்றிடித்துத் தள்ளி - பால் குடிமாறாத பச்சிளம் குட்டிகளைப் பால் குடிக்கவிடாது அடித்துத் துன்புறுத்தி அப்பால் நிறுத்திவிட்டு; கரப்போர் - தாய்மாட்டிடமிருந்து எல்லாப் பாலையும் ஒட்டக் கறந்துவி டும் ஈவு இரக்கமில்லாதவர்களையும்; கொளுத்துகின்றோர் - பிறர் உடைமைகளுக்குத் தீயிடும் பாதகர்களையும்; பா.வே. - 'கன்றடித்துத் தள்ளி' (கை.பிரதி);

2266. மன்றி(ல்) பறித்தோர் - பொதுவிடங்களில் அப்பாவிகளின் பொருள்களைத் தீயவழிகளில் தமதாக்கிக் கொள்பவர்களையும்; வழக் கில் வழச்சாய்ப்புரைத்தோர் - வழக்குகள் பாரபட்சமாக, ஒரு தலையாகக் கூறுவோர், பொய்சாட்சி கூறுவோர்; பா.வே. - 'வழிசாய்ப்போர்' (மா.தவநிலை);

2267. இந்தப்படியே - இவ்வாறெல்லாம்; இயல்வுடைய பாதகரை - இழிதொழில்களைச் செய்யக்கூடிய பண்புகள் கொண்டவர்களை;

2268. விந்தை... மீறி மிகவே பொருத்தி - வினோதமான (இரும்பா லான முட்களை) மிகுதியாகச் செய்து; பா.வே. - 'விந்தை இருப்பு முள்ளுமிரிமிகவே விரித்து (ச.ம.நூ., மா.தவநிலை);

2269. பாங்காய்க் கிடத்தி - அவர்களைப் பக்குவமாகப் படுக்க வைத்து; பதைக்கவேதான் - அவர்கள் நன்றாக வதைபடுமாறு; மிதிப்பார் - கிங்கிலியர்கள்தம் கால்களால் நன்றாய் உதைப்பர்;

2270. ஓங்குமுள்ளுப் பீறி - கூர்மை மிகுந்த இரும்பு முட்கள் தைத்தலால்; உழறுகின்ற பாதகரை - வலியால் துடிக்கின்ற கொடியவர் களை;

2271. நீதி புராணம் - நீதிக்கருத்துக்களைக் கூறும் அறநூல்களையும் பெரியோர், கடவுளர்களின் சரிதங்களைக் கூறும் காவியங்களையும்; நிறையவே கேளாமல் - எல்லாம் கேட்டு அறிந்து கொள்ளாது;

பாதி விடுத்தோரும் பாங்கா யிகழ்ந்தோரும்
மண்ணுலகிலே கருவை மாத்திவிக்கும் பாதகரை
மண்ணில்லமுது மனையர் மணாளன்முன்பே
யுண்டோரும்
2275 யெரியை விடுவோர் யியல்குளங்கள் காலுடைற்றோர்
வரிசைசெய்ய மன்னவனை வாகாய் வினையில்விட்டு
உயிர்பிழைத்து யப்பா லொதுங்கியே வோடினபேர்
வயிரமுடன் தன்குலையால் மாண்டுவிடும் பாதகரும்
இந்தப் படியே யியல்வுடைய பாதகரை

2272. பாதி விடுத்தோரும் - இடையிலேயே விட்டுவிட்ட வர்களும்; பாங்காய் - பக்குவமாய் இகழ்ந்தோரும் - அவற்றைத் தூற்றுபவர்களும்;

2273. மண்ணுலகிலே - பூமியில்; கருவை - உயிரணுக்களை; மாத்தி < மாற்றி; விக்கும் < விற்கும் - வியாபாரமாக்கும்; பாதகரை - கொடியவர்களை;

2274. மண்ணில் அமுது - உலகிலே வாழும்போது உணவினை; மனையர் - மனைவியர்; மணாளன் முன்பே உண்டோரும் - கணவன் உண்ணுவதற்கு முன்பே உண்ணக்கூடியவர்களையும்; பி.வே. - 'மணவாளன்' (மா.தவநிலை); 'மனையாளன்' (கை.பிரதி);

2275. எரியை விடுவோர் - அடுத்தவர்கள் இல்லங்களிலும், பொருள்களிலும் தீவைப்போர்; இயல் குளங்கள் கால் - விளங்குகின்ற நீர் நிலைகளையும்; கால்வாய்களையும்; உடைற்றோர் < உடைத்தோர் வீணடிப்போர்;

2276. வரிசை செய்ய - தங்களுக்கு எல்லாமளித்துக் காப்பாற்றிய மன்னவனை - அரசனை; வாகாய் வினையில் விட்டு - வகையாகப் போர்களிலும், பிற இடுக்கண்களிலும்; பா.வே. - 'வரிசையுள்ளராசர்களை' (கை.பிரதி);

2277. உயிர்பிழைத்து - தங்கள் உயிர்களை மட்டும் காப்பாற்றிக் கொண்டு; அப்பால் - வேறிடங்களுக்கு; ஒதுங்கியே ஓடினபேர் - நீங்கிப் புறமுதுகிட்டு ஓடிப்போன கோழைகள்;

2278. வயிரமுடன் - உறுதியுடன்; தன் குலையால் < தற்கொலையால் - தாங்களே தங்களைக் கொன்று; மாண்டுவிடும் - செத்துப்போகும்; பாதகரும் - கோழைகளும்;

2279. இந்தப்படியே - இவ்வாறும்; இயல்புடைய - குணங்களையுடைய; பாதகரை - தீயவர்களை;

நித்திரையில் குத்தில்வெட்டில் நீண்ட கழுத்தறுப்போர்
எற்றி யெவர்க்கு மிடைகூறு தானிடுவோர்
பத்தி மிருகம் பறவை பிடித்தடைப்போர்
யிருப்புத் தகடு யியல்வுடனே தான்காச்சி
விருப்பமுடன் காச்சி விரைய்யதில் போட்டிடுவார்

**தீயில் வீசுதல்**

ஓடி யொளிப்பாரை ஓடவிடாதே துரத்தி
கூடிவெட்டிக் குத்திக் குலைசெய்யும் பாதகரை
வழிக்கிடராய் விட்டு மயங்க வுயிர்வதைப்போர்

கூறியோர்; தன்கணவனை வதைத்தோர் - தம் புருசர்களைக் கொன்றோர்;

2298. நித்திரையில் - தூக்கத்தில்; குத்தில் - கத்தியால் குத்தியும்; வெட்டில் - வெட்டியும்; நீண்டகழுத்தறுப்போர் - மனிதர்களின் கழுத்த றுத்துக் கொல்லும் கொலைகாரர்களையும்;பா.வே. - 'கருத்திவெட்டி' (மா.தவநிலை);

2299. எற்றி < எத்தி - இடறி; எவர்க்கும் - எல்லோருக்கும்; இடைகூறு < இடையூறு - இடுக்கண்; தானிடுவோர் - தாமேசெய்பவர்க ளையும்;

2300. பத்தி < பற்றி - பிடித்து; மிருகம் பறவைபிடித்தடைப்போர் - விலங்குகளையும் பட்சிகளையும் கூண்டுக்குள் அடைப்போர்களையும்; பா.வே. - 'அடிப்போர்' (மா.தவநிலை);

2300. இருப்புத்தகடு - இரும்புத்தகட்டை; இயல்வுடனே தான்காச்சி - நன்றாகப் பழுக்கவைத்து; (காச்சி < காய்ச்சி);

2302. விருப்பமுடன் காச்சி - மேலும் நன்றாகப் பழுக்க வைத்து; விரைய்யதில் - விரைவாக; போட்டிடுவார் - அதில் தூக்கி எறிவார்கள்; பா.வே. - 'வெருப்புடனே தூக்கி' (மா.தவநிலை, கை.பிரதி);

2303. ஓடி ஒளிப்பாரை - பயந்து ஓடி மறைபவர்களை; ஓடவிடாதே துரத்தி - அவர்கள் ஓடி மறைந்து விடாதபடி பிடித்து;

2304. கூடிவெட்டிக் குத்தி - கூட்டமாகச் சூழ்ந்து கொண்டு அப்படி யானவர்களை வெட்டியும் குத்தியும்; குலை < கொலை செய்யும் பாதகரை - கொலைகாரர்களை;

2305. வழிக்கு இடராய் - பயணம் செய்யும் பாதைக்குத் தடையாய்; விட்டு - நின்று; மயங்க உயிர் வதைப்போர் - அப்பயணிகள் உடைமை களை அபகரித்து அவர்களைக் கொன்றும் விடக்கூடிய கொலைகாரர் களை; பா.வே. - 'வழிக்கிடங்கில்' (மா.தவநிலை);

பழிக்கஞ்சா வேறுயிரைப் பாங்காய்க் கழுத்தறுப்போர்
நம்பிக்கை சொல்லி நடுங்கயுயிர் வதைப்போர்
கும்பிக்காய வேற்றுடமை கொள்ளைகொண்டு
தின்றிடுவோர்
இந்தப் படியாய் யியல்வுடைய பாதகரை
2310 அந்தகனார் தூத ரவர்க்குப் பரிகாரம்
மண்ணைக் குகையாக்கி மண்ணினுள்ளே தானுமுக்கி
வண்ணக் கனதீயில் வைத்து யுருக்கிடுவார்

அடித்துப் பொடியாக்குதல்

பொங்கு புராணகதை போதமிகு நீதியருள்

2306. பழிக்கஞ்சா வேறுயிரை - பழிபாவங்களுக்குப் பயப்படாமல் பிற உயிரினங்களை; பாங்காய் - எளிதாய்; கழுத்தறுப்போர் - கழுத்தை அறுத்துக் கொலை செய்வோர்; பா.வே. - 'பழிக்கிடாய் போலே' (மா.தவநிலை);

2307. நம்பிக்கை சொல்லி - அடைக்கலமளித்து; நடுங்க உயிர் வதைப்போர் - அதனால் பயமில்லாதிருந்த போது அவர்கள் பயமுறு மாறு செய்து கொலை செய்பவர்களையும்;

2308. கும்பி - பிறர் வயிறு; காய - பசியால் நோக; வேற்றுடமை - அவர்களுடைய பொருள்களை;கொள்ளை கொண்டு - திருடி; தின்றிடு வோர் - உண்டவர்களையும்;

2309. இந்தப் படியாய் - இப்படிப்பட்ட கொடிய; இயல்வுடைய - பண்புகளையுடைய; பாதகரை - தீயவர்களை; பா.வே. - 'இயல்கொடி ய' (மா.தவநிலை); 'இயல் பெரிய' (கை.பிரதி);

2310. அந்தகனார் தூதர் - எமதூதர்கள்; அவர்க்குப் பரிகாரம் அப்படியானவர்களுக்குத் தண்டனையாக;

2311. மண்ணைக் குகையாக்கி - பூமியில் குழிதோண்டி; மண்ணி னுள்ளே தானுமுக்கி - குழிக்குள் தள்ளி உயிரோடு புதைத்து; பா.வே. - 'மண்ணைக் குழியாக்கி' (கை.பிரதி);

2312. வண்ணக் கனதீயில் - கொழுந்துவிட்டெரியும் நெருப்பில்; வைத்து - இட்டு; உருக்கிடுவார் - எரித்திடுவர்; பா.வே. - 'வண்ணக் கொடுகுகையில்' (மா.தவநிலை); 'வண்ணக் கொடுங்கனலில்' (கை. பிரதி);

2313. பொங்கு புராண கதை - நிறைந்து விளங்கும் புராணங்களின் கதைகளில் வரும்; போதமிகு நீதியருள் - ஞானம் மிகுந்துவிளங்கும் தர்மக் கருத்துக்கள்;

தங்குமெவை பலவுந் தாரணியில் தூசணிந்தான்
யூரும் புழுப்பூச்சி யுத்தமிருகம் பறவை .
வேறுமிவை நெருப்பில் வெண்புகையில் கொல்வோரை
கழுக்கள் மிகநாட்டிக் கதற யுயிருடனே
மழுப்போலும் மானிடரை வாகாயிடத்தில் வைப்போர்
யிடிக்கி தனிலு மியல்விசைய கண்ணியிலும்
படிக்குள் பலசீவன் பாங்காய் வதைப்பவரை
செங்கை தனில் கிட்டிச் சிறப்பாகவே பூட்டி
அங்கை யிருதுண்டா யடித்து நொறுக்கிடுவார்

**2314.** தங்கும் எவை பலவும் - விளங்கக் கூடிய அனைத்தும்; தாரணியில் - பூமியில உள்ள; தூசணிந்தான் - புழுதியில்;

**2315.** ஊரும் - ஊர்ந்து செல்லக் கூடிய; புழுப்பூச்சி - ஓரறிவு ஈரறிவு படைத்த சிறு புழுக்களும்; பூச்சிகளும்; உத்த < உற்ற; மிருகம் பறவை - விலங்குகளும் பட்சிகளும்;

**2316.** வேறும் இவை - இவற்றையன்றிப் பிற உயிர்களையும்; நெருப்பில் வெண்புகையில் - தீயிலும் புகையிலும் சாகடிப்போர்களை; பா.வே. - 'வேறும் கொடுநெருப்பில்' (கை.பிரதி);

**2317.** கழுக்கள் மிக நாட்டி - பல கழுமரங்களை நட்டி; உயிருடனே கதற - உயிரோடு அவர்கள் வேதனையுறுமாறு செய்வர்;

**2318.** மழுப்போலும் - மழுவைப்போல; மானிடரை - மனிதர்களை; வாகாயிடத்தில் வைப்போர் - முறையான இடங்களில் வைத்தனர்; பா.வே. - 'மாண்டவரை வாகாய் கிடத்தி' (கை.பிரதி);

**2319.** இடிக்கிதனிலும் - பற்றிப் பிடிக்கும் கருவிப் பொறிகளாலும்; இயல்விசைய கண்ணியிலும் - கண்ணிப் பொறிகளை வைத்துப் பிடித்தும்; பா.வே. - 'இயல்புசெவி கண்ணதிலும்' (கை.பிரதி);

**2320.** படிக்குள் - பூமியில்; பலசீவன் - பல உயிரினங்களையும்; பாங்காய் வதைப்பவரை - சித்திரவதை செய்து கொல்வோரை; பா.வே. - 'பிடிக்கும் பலசிவன்' (ச.ம.நூ.); 'வலுசீவன்' (கை.பிரதி);

**2321.** செங்கைதனில் கிட்டி - உள்ளங்கையில் தாங்கி; சிறப்பாகவே பூட்டி - விழுந்து, விலகிவிடாதபடி நன்றாகக் கைவிரல்களால் பிடித்து; பா.வே. - 'செங்கைவிரல் கிட்டி' (ச.ம.நூ.);

**2322.** அங்கை - அங்கத்தை, உடலை; இருதுண்டாய் - இரண்டு கூறுகளாய், துண்டுகளாய்; அடித்து நொறுக்கிடுவார் - வெட்டிப் பிரித்திடுவர்; பா.வே. - 'அங்கைவிரல்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

இந்தப்படி செய்யு மிப்பாவி தங்களையும்
சிந்த யடித்துத் திரணப் பொடியாக்கி
இக்கூட்டில் நிறைய மியற்சூத்திரக் கூடு
அக்கூட்டி லச்சீவ னடிக்கி யவர்தெண்டினையில்
இந்தவுடல் வேதினை யிலட்சிக்க மந்தவுடல்
அந்தவுடல் வேதினையை யாரால் பொறுக்கரிது
அந்த வுயிரை யடுத்த வுடலிதுவை
சிந்தை மனுதர் சிதறயெரியில் சுடுவார்
பாதகர்தன் சீவனுக்கும் பாரவுடல் தனக்கும்
வேதினையைச் சொல்லரிது வேதினையைப் பண்ணியபின்

2323. இந்தப்படி செய்யும் இப்பாவி தங்களையும் - இவ்வாறு இரு துண்டங்களாக்கப் பட்ட பாவிகளின் உடல்களை;

2324. சிந்த அடித்து - சிதறிவிழுமாறு நொறுக்கி; திரணப்பொடி யாக்கி - சிறு சிறு துகள்களாக்கி;

2325. இக்கூட்டில் நிறைய இயல் சூத்திரக்கூடு - இதைப்போன்ற வெறும் கூடுகள் பலவற்றில்; பா.வே. - 'இக்கட்டில் நூற்பாம்' (ச.ம.நூ.); 'நொற்ப்பம்' (மா.தவநிலை);

2326. அக்கூட்டில் - அப்படியான வெறுங்கூட்டில்; அச்சீவன் - அவ்வாறான உயிர்களை; அடிக்கி < அடுக்கி - ஒன்றன்மேல் ஒன்றாக இட்டு; தெண்டினையில் < தண்டனையில்;பா.வே. - 'அக்கட்டில்' (ச.ம.நூ.); 'சீவன்யடக்கி' (மா.தவநிலை);

2327. அந்தவுடல் வேதினையை - அப்படியான உடம்புபடும் வலியை; யாரால் பொறுக்கரிது - எவராலும் தாங்கிக் கொள்ளவியலாது;

2328. அந்தவுயிரையடுத்த வுடலிதுவை - உயிரையும், உயிரைவைத்தி ருந்த அவர்களின் வெற்றுடம்பையும்;

2330. சிந்தை மனுதர் - சில மனிதர்கள்; சிதற - பொடியாகுமாறு; எரியில் சுடுவார் - தீயில் கருக்குவர்; பா.வே. - 'சிந்தை மனதில்' (மா. தவநிலை);

2331. பாதகர்தன் சீவனுக்கும் - கொடியவர்களின் உயிருக்கும்; பாரவுடல் தனக்கும் - அவர்களின் கனத்த உடம்புகளுக்கும்;

2332. வேதினையை - ஏற்பட்ட வலியை; சொல்லரிது - இவ்வாறு என அறுதியிட்டுக் கூறவியலாது; வேதினையைப் பண்ணியபின் - அவ்வாறு துன்பத்தை உண்டாக்கியபின்பு; பா.வே. - 'வேதனைகள் ஆனதின்பின்' (கை.பிரதி);

## உயிர்களை நரகத்தில் அடைத்தல்

சூத்திரத்தி னகத்தையினுள் சுத்தியிந்தச் சீவனையே
ஆத்த நரகமதி லதிரவே தள்ளிடுவார்
மண்ணுலகி லாக்கை வருவிதிரி தெவ்வுகமேல்
விண்ணுலகி லாக்கை மிகுத்தார் நரகடைந்தார்

## நரகங்களின் இயல்பு

அந்த நரக மதின்பெருமை சொல்லுகையில்
எந்த விதமென்று யியம்ப முடியாதெனதே
முழங்கிச் சுருளின் முறைநாத்த யக்கினியாய்
விளங்கும் நரகயிவை விஷ்த்தார மோரேழும்
ஆயிர யோசினையி னாழமிகப் பாரில்
ஆயிரங் கோடி யடரும் புழுக்குழியும்

*2333.* சூத்திரத்தின் - எந்திரத்தின்; அகத்தையினுள் - உள்ளே செலுத்தி; சுத்தி < சுற்றி - சுரங்கச்செய்து; இந்தச் சீவனையே - இப்படியான பாதகர்களின் உயிரை;

*2334.* ஆத்த நரகமதில் - தாழ்ந்த நரகலோகத்தில்; அதிரவே தள்ளிடு வார் - கிடுகிடு வெனப் பிடித்துக் கீழே விழச் செய்வார்; பா.வே. - 'அதில்விழுக தள்ளிடுவார்' (கை.பிரதி);

*2335.* மண்ணுலகில் - பூமியில்; ஆக்கை - உடம்புபால்; வருவிதிரி தெவ்வுகமேல் - ( < வருவெதிரி) பகைபாராட்டியவர்கள்;

*2336.* விண்ணுலகில் - எமலோகத்தில்; ஆக்கை - உடம்பு; மிகுந்தார் - நிறைந்தவர்கள்; நரகடைந்தார் - நரகலோகத்தைச் சேர்ந்தார்கள்;

*2337.* அந்த நரகம் - அப்படியான நரகலோகத்தின்; அதின் பெருமை சொல்லுகையில் - அதன் இயல்புகளைக் கூறுங்கால்;

*2338.* எந்தவிதம் என்று - எவ்விதமென; இயம்ப முடியாதெனதே - சொல்லவியலாது;

*2339.* முழங்கி - ஓலமிட்டு; சுருளின் - மயிர்ச்சுருள்களின்; முறை நாத்த அக்கினியாய் - ( < முடை நாற்றம்) தீய்ந்த மணமாய்; பா.வே. - 'முடிநாத்தம்' (மா.தவநிலை);

*2340.* விளங்கும் நரகம் இவை - அமைந்திருக்கக்கூடிய இவ்வாறான நரகங்கள்; விஷ்த்தாரம் < நீளஅகலம்; ஓரேழும் - ஏழு நரகங்களும்;★

*2341.* மிகப்பாரில் - மிகுந்த வெளியில்; ஆயிரம் யோசினையின் ஆழம் - ஆயிரம் யோசனை அளவிலும் மிகுதியான ஆழத்தில் இருக்கும்;

*2342.* ஆயிரம் கோடி - அந்த ஆழ நரகங்களில் ஆயிரம் கோடியான; அடரும்புழுக்குழியும் - பரந்திருக்கக்கூடிய புழுக்கள் மிகுந்துள்ள பள்ளங் களும்; பா.வே. - 'புழு நரகம்' (ச.ம.நூ.);

---

★ (இருபத்தொரு நரகங்களின் இயல்பை நான் பதிப்பிக்கும் சோழன் பககக்கதைப்பாடலில் காண்க)

சிந்தையுடன் வீழ்ந்து திகைப்பார் வெகுகாலம்
**தண்டனைக்குப்பின் மறுபிறவி அடையும் உயிர்கள்**
அந்த நரகில்விழு[ந்] தழுந்து வெகுகாலம்
கொஞ்சமிகு பாவங் குறையவே செய்தவரை
அஞ்சமிக்க கையாலு மான சவுக்காலானும்
யடித்து யவரை யலக்கழித்துத் தூதுவர்கள்
மடித்து யுலகில் மறுபிறவியில் விடுவார்
கூனர் குருடர் குறளர் செவிடூமை
ஈனர் பெருநோய்விதி யேங்கியலை சப்பாணி

**2343.** சிந்தையுடன் வீழ்ந்து - மனித உயிர்கள் விழுந்து; திகைப்பார் வெகுகாலம் - வெளியேற வழியில்லாது பல காலம் தவிக்கும்; பா.வே. - 'திகைத்தார் ஒரு கோடி' (ச.ம.நூ.);

**2344.** அந்த நரகில் - அப்படியான கொடூர நரகத்தில்; விழு(ந்)தழுந்து - வீழ்ந்து, வருந்தி; வெகுகாலம் - பலகாலங்கள் ஆனபின்னர்; பா.வே. - 'அழுந்துவார் பாவியர்கள்' (மா.தவநிலை);

**2345.** கொஞ்சமிகு பாவம் குறையவே செய்தவரை - கொடிய செயல்கள் குறைவாகச் செய்தவர்களை; பா.வே. - 'கொஞ்சமற்ற' (ச.ம.நூ.);

**2346.** அஞ்ச மிக்க கையாலும் - அச்சம் தரக்கூடிய வலுவான கைகளாலும்; ஆனசவுக்காலானதாலும் - வலுவான சாட்டையாலும்; பா.வே. - 'அஞ்சவே' (ச.ம.நூ.);

**2347.** அடித்து அவரை - அவ்வுயிர்களை இம்சைசெய்து; அலக்கழித்து - இங்குமங்கும் ஓடுமாறு விரட்டி; தூதுவர்கள் - கிங்கிலியர்; பா.வே. - 'அலங்கரித்து' (ச.ம.நூ.); 'அவரை ஏசி' (கை.பிரதி);

**2348.** மடித்து உலகில் - மீண்டும் உலகில் மறுபிறவியில் விடுவார் - பிறக்குமாறு அனுப்புவர்; பா.வே. - 'வடித்த உலகில்' (ச.ம.நூ., மா.தவநிலை, கை.பிரதி);

**2349.** கூனர் - கூன்விழுந்த முதியோர்; குருடர் - பார்வை இல்லாதோர்; குறளர் - வளர்ச்சியில்லாத குட்டையர்கள்; செவிடூமை - காதுகேளாதவர், வாய்பேசாதவர்; பா.வே. - 'குறளி' (ச.ம.நூ.);

**2350.** ஈனர் - அற்பர்கள்; பெருநோய் விதி - ஊழ்வினையால் பெருநோய்களைப் பெற்றோர்; ஏங்கி அலைசப்பாணி நடப்பதற்குத் துன்பப்படும் நொண்டிகள்; பா.வே. - 'ஏங்கி அலைச்சலப்பா' (ச.ம.நூ.); ★

---

★ இத்துடன் ச.ம.நூ. கதை முடிகிறது.

ஆறாத நோயர் யரும்பிணியர் யேழையளும்
வீறான கோபம் விளைத்த வெகுபாதகரும்
வெட்டுண்டோர் குத்துண்டோர் மீறுங்
கழுக்கிடப்போர்
ஒட்டி யடிபட்டு யுதைபடுவார்க் கினயோர்
2355 இந்தப்படி யழிவார் யிவர்கள் தனைவிடுத்து
விந்தையுடன் மாடாய் மிகுந்தமரமாய்ப் புழுவாய்
கழுதையாய் நாயாய்க் கடையாய் மிருகமதாய்
பழுதாய்ப் பலசீவன் பலவகையி லுள்ளதுவாய்
மண்டலத்தில் நஞ்சில் வதைப்படுவார் தன்சாவு

2351. ஆறாத நோயர் - சுகமடையாத நோய்களை உடையவர்கள்; அரும்பிணியர் - இன்னதென்று அறியாத நோய்களை உடையவர்கள்; ஏழையளும் - பாவப்பட்ட மக்களும்;

2352. வீறான கோபம் - மிகுந்த சினத்தை; விளைத்த - செய்த; வெகு பாதகரும் - கொடியவர்களும்;

2353. வெட்டுண்டோர் - வெட்டப்பட்டுக் கொடுமை செய்யப்பெற்ற வர்களும்; குத்துண்டோர் - குத்திக் கொடுமை செய்யப்பெற்றவர்களும்; மீறும் கழுக்கிடப்போர் - கழுவேற்றப்பட்டவர்களும்;

2354. ஒட்டி - சேர்ந்து; அடிபட்டு - அடிகள் பட்டு; உதைபடுவார்க்கி னயோர் - உதைகள் ஏற்பதற்கு உரியோர்;

2355. இந்தப்படி அழிவார் - இவ்வாறு கெட்டுப்போகும்; இவர்கள் தனைவிடுத்து - இப்படியான உயிர்களை நீக்கி; பா.வே. - 'இவர்கள் தனை வகுத்து' (மா.தவநிலை);

2356. விந்தையுடன் - விநோதமாக; மாடாய் - மாடுகளாகவும்; மிகுந்த மரமாய் - பல்வேறு மரங்களாகவும்; புழுவாய் - ஊர்வனவாக வும்; பா.வே. - 'மாடாடாய்' (மா.தவநிலை); ' மரம் பூவாய்' (கை.பிரதி);

2357. கழுதையாய் - பொதிசுமக்கும் கழுதைகளாகவும்; நாயாய் - கேவலமான நாய்களாகவும்; கடையாய் - கீழான விலங்குகளாகவும்; மிருகமதாய் - இன்னும் பலவான விலங்குகளாகவும்;

2358. பழுதாய் - அங்கம் குறையுடன் (ஊனமுற்றவர்களாய்); பல சீவன் - பல உயிர்கள்; பல வகையில் உள்ளதுவாய் - விநோதமான உருவம் பெற்று விளங்குபவர்களாய்ப் பிறக்கச் செய்வர்;

2359. மண்டலத்தில் - பூமியில்; நஞ்சில் - விடத்தால்; வதைப்படு வார் தன் சாவு - வேதனையுற்று மரணமடைவோர்களை;

கண்ட துண்டமாக்கிக் கதற யடித்திடுவார்
இந்தப்பிறவி யிட்டார் யிப்பாவ மிட்டவரை
சிந்தையுடன் பூவில் சிறந்தமனுவா விதித்தார்
எண்ணரிய பூவி லெவையுமிவை சீவனுக்கு

**எமதருமன் ஆட்சி செய்தல்**

புண்ணியவர் னீதிமுறை பூட்டிநடுவாய் விதித்து
சிங்கா சனத்தில் சிறந்ததன்ம ராசாவும்
தங்கி யினிதிருக்கத் தானவரெல்லாம் வாழ்த்தி

**நயினாரும் இறைவன் அருகில் இருத்தல்**

சித்திர புத்திரனார் சேர்கணக்கன் விதி

2360. கண்டதுண்டமாக்கி - துண்டுதுண்டுகளாக வெட்டி; கதற யடித்திடுவார் - அவர்கள் துடித்து அழுந்துமாறு கிங்கிலியர் செய்வர்;

2361. இந்தப்பிறவி இட்டார் - இப்பொழுதுள்ள பிறவியை ஒழித்தவர்கள்; இப்பாவம் இட்டவரை - மேலே கூறிய பாவங்களை ஒழித்தவர்களை;

2362. சிந்தையுடன் - அன்புடன்; பூவில் - பூமியில்; சிறந்த - குணங்கள் பொருந்திய; மனுவா - மானிடர்களாய்; விதித்தார் - பிறக்கச் செய்தார்;

2363. எண்ணரிய பூவில் - உயிர்கள் உள்ளதான பல உலகங்களிலும்; எவையுமிவை சீவனுக்கு - எல்லா உயிரினங்களுக்கும்;

2364. புண்ணியவர் - கருணைமிகுந்த தருமராசன்; நீதிமுறை பூட்டி - நியாயமான விதிகளை அமைத்து; நடுவாய் விதித்து - தருமம் நடுநிலையாக விளங்குமாறு செய்து; பா.வே. - 'நடுவாய் விரித்து' (மா.தவநிலை);

2365. சிங்காசனத்தில் - தருமம் விளங்கும் அரியணையில்; சிறந்த தன்மராசாவும் - தருமம் நிலைக்குமாறு விளங்கும் எமதர்மரும்; பா.வே. - 'சிங்காதனத்தில்' (கை.பிரதி);

2366. தங்கி இனிதிருக்க - மகிழ்ச்சியாக வீற்றிருக்க; தானவர் எல்லாம் வாழ்த்தி - கொற்றவர்கள் எல்லோரும் நல்வாழ்த்துக்களைக் கூறினார்;

2367. சித்திரபுத்திரனார் - ஜனன - மரணக் கணக்குகளை எழுதும் நயினார்; சேர்கணக்கன் - எல்லா உயிரினங்களின் கணக்குகளையும் ஒருங்கே எழுதும் கணக்கன் எனும் நயினார்; விதி - உயிர்களின் முடிவுகளை;

பத்திரமாய்ச் செய்தார் படர்ந்தபுகழ்க் கணக்கர்
மங்கு கணக்கெவையும் வாகாகவே கிழித்து
தங்கு கணக்கைத் தகமையுட னிறுத்தி
தன்மங் கொடுத்துச் சங்கரனார் தன்னருகே

**கயிலாயச் சிறப்பு**

தங்குபுக ழீசுபரனார் தானிருக்கும் மேருகிரி
பொங்கு கடலெனவே போதவே சூழ்ந்திருக்க
சூரியனுஞ் சந்திரனுஞ் சொல்லரிய மூர்த்திகளும்
நாரிபங்கன் தன்சபையில் நன்றாகக் காற்றிருக்க
அத்தி முகனு மறுமுகனும் நந்தீசர்

2368. படர்ந்த புகழ்க் கணக்கர் - தன் தொழிலில் சிறந்த நயினார்; பத்திரமாகச் செய்தார் - கவனமாக எழுதிவைத்தார்;

2369. மங்கு கணக்கெவையும் - முடிகின்ற கணக்குகளை; வாகாகவே கிழித்து - முறையாகவே ஏட்டில் எழுதி;

2370. தங்கு கணக்கை - நடைமுறையிலுள்ள கணக்குகளை; தகமையு டனிறுத்தி - சிறப்பாக விளங்குமாறு செய்து: பா.வே. - 'தறுகியே யெழுதி வைத்தார்

2371. தன்மங்கொடுத்து - நீதி நிலைக்குமாறு செய்து; சங்கரனார் தன்னருகே - இறைவன் பக்கத்தில் இருந்தார்; பா.வே. - 'தன்மகணக்கெ டுத்து' (கை.பிரதி);

2372. தங்குபுகழ் - புகழ் எப்போதும் நிலைத்திருக்கக்கூடிய ஈசுபர னார் - இறைவன்; தானிருக்கும் மேருகிரி - அமர்ந்திருக்கக்கூடிய கைலாயமானது;

2373. பொங்கு கடலெனவே - அலைகள் பெருகும் பரந்த சமுத்திரம் போன்று; போதவே சூழந்திருக்க - இறைவனை நன்றாகச் சுற்றி விளங்கவும்;

2374. சூரியனும் சந்திரனும் - கதிரவனும், நிலவும்; சொல்லரிய மூர்த்திகளும் - கணக்கில்லாத வானவர்களும் மும்மூர்த்திகளும்;

2375. நாரிபங்கன் - உமையொருபாகனான இறைவன்; தன்சபையில் மன்றில்; நன்றாகவே - சிறப்புடன்; காற்றிருக்க < காத்திருக்க - அமர்ந்திருக்கவும்;

2376. அத்திமுகனும் - ஆனைமுகக்கடவுளான பிள்ளையாரும்; ஆறுமுகனும் - சண்முகக் கடவுளும்; நந்தீசர் - நந்திமுனிவரும்;

சித்த மகிழ்ந்தன்ம்பாய்த் திருமுன்ம்பே தானிருக்க
பரமேசொரி மகிழ்ந்து பாக மினிதிருக்க
தரும நெறியோர்கள் சங்கரனைப் போற்றிநிற்க
தும்புரரும் நாரதருங் சோதிராகம் பாட
உம்பர் மிகு ... ஓங்கும் வேதமோத
மையேசு பரனு மாலோன் சதாசிவனும்
துய்யதொரு ருற்றிரனுஞ் சோதிதனைச் சூழ்ந்திருக்க
பக்கம் நச்சேற்றிரமும் பாங்கான சாத்திரமும்
திக்கெட்டுப் பேரு(ம்)ஞ் சிறந்த கெணனாதர்களும்
கலைமகளும் லட்சிமியுங் காரணனைப் போற்றிநிற்க

2377. சித்தம் மகிழ்ந்து - மகிழ்ச்சியுள்ளத்தோடு; அன்பாய் - பாசத்துடன்; திருமுன்ம்பே தானிருக்க - இறைவன் முன்பு வீற்றிருக்கவும்;

2378. பரமேசொரி மகிழ்ந்து - பார்வதி விருப்பமுடன்; பாகம் இனிதிருக்க - ஈசனின் இடப்பாகத்தே இருக்கவும்;

2379. தரும நெறியோர்கள் - அறநெறிச் செல்வர்களான முனிவர்கள்; சங்கரனைப் போற்றி நிற்க - இறைவனைத் துதித்து நிற்கவும்;

2380. தும்புரரும் - இசைவிற்பன்னரான கிம்புரர்களும்; நாரதரும் - நாரதமுனிவரும்; சோதிராகம் பாட - ஒளிமயமான இறைவனின் புகழை இசைத்து நிற்கவும்;

2381. உம்பர் மிகு - மேலோகத்தில் நிறைந்துள்ள; ...ஓங்கும் வேதம் ஓத - புகழ்மிகும் வேதங்கள் செபித்து நிற்கவும்; பா.வே. - 'உம்பர்புகழ் மலரோன்' (மா.தவநிலை); 'மாலோன்' (கை.பிரதி);

2382. மையேசுபரனும் - ஈசனும்; மாலோன் - திருமாலும்; சதாசிவனும் - சிவனும்; பா.வே. - 'மகேஸ்வரன்' (கை.பிரதி);

2383. துய்யதோர் - விளங்கக்கூடிய; ருற்றிரனும் - உருத்திரனும்; சோதிதனைச் சூழ்ந்திருக்க - ஈசனைச் சுற்றி அமர்ந்திருக்கவும்; பா.வே. - 'துய்யகனவுருத்திரனும்' (மா.தவநிலை); 'துய்ய கண' (கை.பிரதி);

2384. பக்கம் - ஈசனருகில்; நச்சேற்றிரமும் - விண்மீன்களும்; பாங்கான சாத்திரமும் - புகழ்பெற்றச் சாத்திரங்கள் பலவும் விளங்கவும்;

2385. திக்கெட்டுப் பேரும் - எண்திசைகளிலுள்ள பாலர்களும்; சிறந்த கெணனாதர்களும் - நல்ல சிவகணங்களும்;

2386. கலைமகளும் - கல்விக்கு அதிபதியான சரசுவதியும்; லட்சிமியும் - செல்வத்துக்கு அதிபதியான திருமகளும்; காரணனைப்போற்றி நிற்க - எல்லாவற்றுக்கும் மூலமான இறைவனைத் துதித்து நிற்கவும்;

சிலைனுதலின் மங்கையர்கள் சேவடியைப்
பூசைசெய்ய
ஆலத்தி தூப மரன்பணி மாற
கோலத் திசைகளெங்குங் கும்பயேய்க்கியந்தான்
வளக்க

2390 சிவாய நமாவென்று திருச்சங்கு ஓசையிட
தவமாய்கை யுன்னித் தவஞ்செய்வோர் கோடிவெள்ளம்
தருசுரவி சிந்தாமணி தகமை கற்பகமும்
பருவமிக்கு மிச்சப் பதாத்தம் பகுந்தளிக்க
சந்தணமும் பன்னீர் சாந்துகளப கஷ்த்தூரி
2395 கந்தமிகு தெங்கு கமழ்வாசந் தான்வீச

2387. சிலைநுதலின் மங்கையர்கள் - வளைந்த வில்லைப் போன்ற புருவங்களுள்ள நெற்றிகளையுடைய அழகிய பெண்கள்; சேவடியைப் பூசை செய்ய - சிவனின் சிவந்த பாதங்களைத் துதிக்கவும்;

2388. ஆலத்தி தூபம் - சிவபாத பூசையின்போது அப்பெண்கள் எடுக்கும் ஆலத்தியினுள்ள கற்பூர தீபம்; அரன் பணி மாற - இறைவ னுக்கு அமைய;

2389. கோலத்திசைகளெங்கும் - எல்லாத் திசைகளிலும்; கும்பயேய்க் கியந்தான் வளக்க - கும்பக்கலசமிட்டுப் புனிதத்தைச் சேர்க்கவும்;

2390. சிவாயநமா என்று - 'நமசிவாய' என; திருச்சங்கம் ஓசையிட - சிறந்த சங்கு ஒலிக்கவும்;

2391. தவமாய்கை உன்னி - இறைவனின் அருள் நினைந்து; தவஞ் செய்வோர் கோடி வெள்ளம் - தவத்தினை மேற்கொள்ளும் பக்தர்கள் ஒரு கோடி வெள்ள அளவினராவர்; பா.வே. - 'தவமீறும் யோகந்தவம்' (மா.தவநிலை);

2392. தரு - கற்பக விருட்சமும்; சுரவி < சுரபி - காமதேனும்; சிந்தாமணி - எல்லாவற்றையும் தரும் மணியும்; தகமை கற்பகமும் - நற்குணக் கற்பகப் பசுவும்;

2393. பருவமிக்கு - தம்தம் இயல்புக்கு மிகுதியாக; மிச்சம் - ஏனைய தேவைகளுக்குப் போக எஞ்சிய; பதாத்தம் - பண்டங்களை; பகுந்தளிக்க - ஆங்குக் கூடியுள்ள அனைவருக்கும் வழங்கவும்;

2394. சந்தணமும் பன்னீர் சாந்து களப கஷ்த்தூரி - நறுமணப் பொருள்களான சந்தணமும், பன்னீரும், பலநிறச் சாந்துக் கலவைகளும், களபமும், கத்தூரியும்; பா.வே. - 'சந்தனமுங் கஸ்தூரி' (கை.பிரதி);

2395. கந்தமிகு தெங்கு - மேலேயுள்ள அவற்றுடன் நல்ல இளநீரும்;

கற்பூர வாசங் கனத்தகமழ் சாம்பிராணி
அற்புதமாந் தென்றல் லரும்தமிழ் வீச
அந்தரத்தில் மேக மழகுபொற்பந் தான்சொரிய
மந்திரங்க ளோத மகிழ்ந்திருக்கும் வெள்ளிவரை
திங்க ளணியுஞ் சிவனா ரினிதிருக்கும்
பொங்கு ... ராமம் பூவுலகில் சொல்லரிது

### சித்திரபுத்திர நயினார் இறைவனிடம் கூறுதல்

இந்தப் படியே யிருக்குஞ் சபைதனிலே
வந்தணுகி யீசர் மலர்ப்பாதம் தெண்டனிட்டு
படிமீதில் மானிடர்க்குப் பாங்காய்க் கலியுகத்தில்

கமழ்வாசம் தான்வீச - மணம் கமழ்கின்ற வாசமுள்ள தென்றல் வீசவும்; பா.வே. - 'கந்தம் நிறைந்தோங்கி' (கை.பிரதி);

2396. கற்பூரவாசம் - கற்பூர தீபத்தின் மணமும்; கனத்த - மிகுதியாக; கமழ்சாம்பிராணி - மணக்கக்கூடிய அகில்புகையும்; பா.வே. - 'கனதாபம் சாம்பிறாணி' (மா.தவநிலை);

2397. அற்புதமாம் தென்றல் - நல்ல தென்றல் காற்றும்; அரும் தமிழ் வீச - நல்ல தமிழ் நூல்களின் புகழும் உண்டாகவும்;

2398. அந்தரத்தில் - விண்ணில்; மேகம் - கார்மேகமானது; அழகு பொற்பம் தான் சொரிய - எழிலான புட்பராகக் கற்களைத் தெளிக்கவும்; பா.வே. - 'அழகு புஸ்பம்' (கை.பிரதி);

2399-2400. மந்திரங்கள் ஓத - இறைவனைக் குறித்த மந்திரங்களை விற்பனர்கள் இசைக்கவும்; திங்கள் அணியும் சிவனார் இனிதிருக்கும் - தலையிலே பிறையினைச் சூடியுள்ள ஈசன் மகிழ்ந்து உறையும்; வெள்ளிவரை மகிழந்திருக்கும் - வெள்ளி மலை எனும் கைலாயம் இவ்வாறு சிறந்து விளங்கிநின்றது;

2401. பொங்கு... ராமம் - விஞ்சி நிற்கும் சிவபெருமானின் புகழை; பூவுலகில் சொல்லரிது - உலகத்து மனிதர்களால் கூறவியலாது;

2402. இந்தப்படியே யிருக்குஞ்சபைதனிலே - இவ்வாறிருக்கும் கயிலாயத்தில்;

2403. வந்தணுகி - வந்து சேர்ந்து; ஈசர் மலர்ப்பாதம் தெண்டனிட்டு - இறைவனின் மென்மையான தாளிணைகளில் விழுந்து வணங்கி;

2404. படிமீதில் மானிடர்க்கு - இம்மண்ணிலுள்ள மக்களுக்கு; பாங்காய்க் கலியுகத்தில் - கலியுகம் நடக்கின்ற இந்த நாளிலும் தவறின்றி;

அடியேன் கணக்கி லணுவளவு தப்பாது
உள்ளபடி தானு முறுதியுட னாராய்ந்து
தள்ளி யடிமாமல் தானளைத்து வோடிவந்து
சிவகிணங்கள் தன்னைச் சிவனாருந் தான்பாற்று
அவகுணங்க ... த ஆனசிவ கெணத்தை
ஏவிவிட்டார் பாரி லிமைப்பொழுதில் தூதுவர்கள்
தாவியே யெல்லாந் தகமையுடன் சென்றணுகி

**நல்லோரைக் கயிலாயம் சேர்த்தல்**

இறக்க வரமில்லாம லிறந்ததொரு நல்லோரை[ச்]
சிறக்க வரம்பூசை செய்வோர் சலியாமல்

**2405.** அடியேன் கணக்கில் - நான் எழுதியுள்ள உயிர்களின் பாவ-புண்ணிய-மரணக் கணக்கில்; அணுவளவும் தப்பாது - சிறிதளவும் மாறாது எனச் சித்திரபுத்திர நயினார் கூறவும்; பா.வே. - 'அடியேன் தனக்கு' (மா.தவநிலை);

**2406.** உள்ளபடி தானும் - கணக்கில் எழுதியிருந்தவாறே; உறுதியுடன் ஆராய்ந்து - உயிர்களைச் சரியாகச் சோதனைசெய்து; பா.வே. - 'உள்ளபடி நீதி வுறுதிதவம்' (மா.தவநிலை, கை.பிரதி);

**2407.** தள்ளி அடியாமல் - எவரையும் வதை செய்யாது; தானளைத்து ஓடிவந்து - அழைத்தவுடனே அருகில் சேர்ந்த; பா.வே. - 'தானழைத்து வாறதற்கு' (மா.தவநிலை, கை.பிரதி);

**2408.** சிவகிணங்கள் - ( < சிவ கணங்கள்) ஏவலரை; சிவனாரும் - இறைவனும்; தான்பாற்று - ( < பார்த்து) - நோக்கி; பா.வே. - 'சிவனாரும் யேவிவிட்டார்' (மா.தவநிலை, கை.பிரதி);

**2409.** அவகுணங்கள் ... த - கேடுஇல்லாத; ஆனசிவ கெணத்தை - சிவனடியார்களை;

**2410.** ஏவி விட்டார் பாரில் - பூமிக்குப் போகுமாறு அனுப்பினார்; இமைப்பொழுதில் தூதுவர்கள் - அவ் ஏவலர்கள் கண்ணிமைக்கும் நேரத்தில்;

**2411.** தாவியே எல்லாம் - எல்லோரும் விரைந்து சென்று; தகமையுடன் சென்றணுகி - சிறப்புடன் பூமியிலுள்ள உயிர்களிடம் நெருங்கி;

**2412.** இறக்க வரமில்லாமல் - மூப்பு வந்தும் சாவு வராத; இருந்ததொரு நல்லோரை - பக்தியிற் சிறந்த அடியார்களை;

**2413.** சிறக்க வரம்பூசை செய்வோர் சலியாமல் - எவ்விதச் சலிப்புமின்றி எப்போதும் சிவ பூசையினைச் செய்யும் பக்தர்களை;

சிவனை நினைந்தோருஞ் சிவபூசை செய்தோரும்
அவமில்லா மெய்யே ரரியை நினைந்தோரும்
குஞ்சரனை வேதாக் குமர குருபரனை
நெஞ்ச முருக நினைத்தோர் விரதமுள்ளோர்
புண்ணிய தானம் புவிதானஞ் செய்தவரும்
வண்ணமுலை மங்கையரை வாகுதானங் கொடுற்றோர்
பசித்திளைத்து வந்தவர்க்குப் பாங்காய்ப் பசியமைற்றோர்
விசித்தமுடன் கோவில் வியன்சிகரங் கட்டினபேர்

2414. சிவனை நினைந்தோரும் - மனத்திலே எப்போதும் இறைவனை எண்ணியிருப்பவர்களும்; சிவபூசை செய்தோரும் - சிவலிங்கத்திற்கு வழிபாடு நடத்துபவர்களும்;

2415. அவமில்லா மெய்யோர் - கேடு எதுவுமில்லாத நேர்மையான பக்தர்கள்; அரியை நினைந்தோரும் - திருமாலை வழிபடக்கூடிய பக்தர்களும்;

2416. குஞ்சரனை - ஆனைமுகக்கடவுளை; வேதா - பிரமனை; குமரகுருபரனை - முருகக் கடவுளை; பா.வே. - 'மாலைக் குமாரன் அயனாரை' (மா.தவநிலை, கை.பிரதி);

2417. நெஞ்சமுருக நினைத்தோர் - உள்ளம் உருக நினைத்து வணங்குவோர்; விரதமுள்ளோர் - விரதங்களை மேற்கொண்டு ஒழுகுபவர்; பா.வே. - 'நெஞ்சில் நிறைசேம நினைந்தோர்' (மா.தவநிலை, கை.பிரதி);

2418. புண்ணிய தானம் - நல்ல காரியங்களுக்குத் தருமம் செய்பவர்கள்; புவிதானம் செய்தவரும் - ஏழை எளிய குடிகளுக்கு இலவசமாக இருப்பிடம் கொடுப்போர்;

2419. வண்ணமுலை மங்கையரை - அழகு நிறைந்த தனங்களையுடைய கன்னியரை; வாகுதானங்கொடுற்றோர் - நல்ல முறையில் கன்னிகாதானம் செய்பவர்கள்; (கொடுற்றோர் < கொடுத்தோர்); பா.வே. - 'வற்ணமுடன் மங்கையரை' (மா.தவநிலை);

2420. பசித்து இளைத்து வந்தவர்க்கு - உணவின்றி வாடி வருந்தி வருவோரான ஏழைகளுக்கு; பாங்காய் - அவர்கள் நிலையறிந்து; பசியமைற்றோர் - ( < அமைத்தோர் < அமர்த்தியோர் - அவர்கள் பசியைத் தணித்தவர்கள்; பா.வே. - 'பசியில்' (மா.தவநிலை); 'பசிதவித்தோர்' (கை.பிரதி);

2421. விசித்தமுடன் - மேன்மையுடன்; கோவில் - ஆலயங்களும்; வியன் சிகரம் கட்டினபேர் - பெரிய கோபுரங்களை அமைத்தவர்கள்; பா.வே. - 'விதித்தசிவன் கோவில்' (கை.பிரதி);

இடைந்தோரை யஞ்சாம லென்னாளு மாதரித்தோர்
அடைந்தோர் கலங்காம லன்பாக வைத்திருந்தோர்
புராணந் தமிழ்ஞானம் புகழ்நீதங் கேட்டிருப்போர்
கிராணம் விடும்போது கேசதானங் கொடுப்பார்
வேதியர்க்கு நல்லமுர்தம் வேண்டுஞ்சத்திர
சாலைவைற்றோர்
நீதியுடன் கிணறு நீர்வாவி வெட்டினவர்
நந்தவனம் வைத்தோர் நளினசுமை தாங்கிவைற்றோர்
விந்தை மிகுதானம் விரிந்தயிடங் கொடுப்போர்

**2422.** இடைந்தோரை - பயந்து பின்னடைந்தவர்களை; அஞ்சாமல் - துணிவுடன்; என்னாளும் - எக்காலத்திலும்; ஆதரித்தோர் - காப்பாற்றுப வர்கள்; பா.வே. - 'இன்பவுதவி செய்தோர்' (மா.தவநிலை); 'அடைந் தோரை' (கை.பிரதி);

**2423.** அடைந்தோர் - தம்மிடம் அடைக்கலமாக வந்து சேர்ந்தவர் களை; கலங்காமல் - அவர்கள் வருந்தாதவாறு; அன்பாக - கருணையு டன்; வைத்திருந்தோர் - வைத்துப் பாதுகாத்தவர்கள்; பா.வே. - 'அஞ்ச லென' (மா.தவநிலை); 'இடைந்தோர் கலங்காமல்' (கை.பிரதி);

**2424.** புராணந்தமிழ் ஞானம் - புராணங்களில் கூறப்பெறும் நல்ல தமிழ்ச்சுவையினை உணர்ந்தவர்கள்; பெறும் புகழ்நீதம் கேட்டிருப்போர் - அவற்றில் கூறப்பெறும் நீதிகளைக் கேட்டு அவ்வாறு வாழ்பவர்கள்;

**2425.** கிராணம் விடும்போது ( < கிரகணம்) - சூரிய சந்திர கிரகணங்கள் விலகும் போது; கேசதானம் கொடுப்போர் - தலைமுடிக ளைக் காணிக்கையாகக் கொடுப்பவர்கள்;

**2426.** வேதியர்க்கு - அந்தணர்களுக்கு; நல்லமுர்தம் - வேண்டும் நல்ல உணவு கிடைக்கும்; சத்திரசாலை - தரும சத்திரங்களை; வைற்றோர் < வைத்தோர் - ஏற்படுத்தியவர்கள்; பா.வே. - 'நல்லதர்மம்' (கை.பிரதி);

**2427.** நீதியுடன் - தரும சிந்தனையுடன்; கிணறுநீர்வாவி - நல்ல நீர்தரும் கிணறுகளையும், குளங்களையும்; வெட்டினவர் - தோண்டி அமைத்தவர்கள்; பா.வே. - 'நீதிபுகழ் கூபல் நீள் சாலைகட்டினவர் (மா.தவநிலை); நீதிபுனல் கிணறு' (கை.பிரதி);

**2428.** நந்தவனம் வைத்தோர் - பூங்காக்களை ஏற்படுத்தியவர்கள்; நளின சுமைதாங்கி - தேவைக்குரிய சுமைதாங்கிக் கற்களை; வைற்றோர் < வைத்தவர்கள்;

**2429.** விந்தைமிகுதானம் - இன்னும் சிறப்பாக விளங்கும் தானங்க ளையும்; விரிந்தஇடம் கொடுப்போர் - தாராளமாக இடம் கொடுத்து உதவியவர்கள்;

2430 சேலைமிகு தானஞ் சிறந்த பசுத்தானம்
ஆலையங்கள் தூத்து யழகாய் விளக்கிடுவோர்
மிஞ்சும் பிணியும் விரிந்தவிடந் தவிள்போர்
கஞ்ச மலரோங்குங் கனத்தகுடை தங்குமிடம்
சீப்புடனே வீசறியள் சிறந்தசுண்ணம் பாதலட்ச்சை
2435 தாப்புடனே யெண்ணை தகமை யரப்பிடுவோர்
நல்லோர் தமக்கு நல்முகமாய் யேவல்செய்வார்

2430. சேலைமிகுதானம் - உடுக்க ஒன்றுக்குமேல் சேலை இல்லாத ஏழைப்பெண்களுக்குச் சேலை எடுத்துக் கொடுப்போர்; சிறந்த பசுத்தானம் - அந்தணர்களுக்கு நல்ல பசு மாடுகளைத் தானமாக வழங்குவோர்; பா.வே. - 'சேலை பணிதானம்' (மா.தவநிலை); 'சோலைபணிதானம்' (கை.பிரதி);

2431. ஆலையங்கள் - கோவில்களை; தூத்து - கூட்டிச் சுத்தம் செய்து; அழகாய் விளக்கிடுவோர் - அக் கோவில்களில் இருள் நீங்குமாறு நல்லவிளக்குகளை அமைப்போர்; பா.வே. - 'ஆலையங்கள்யெங்கும்' (மா.தவநிலை);

2432. மிஞ்சும் பிணியும் - அதிகமாகத் தொல்லைதரும் நோய்களையும்; விரிந்தவிடம் - ஏறிய நச்சுத்தன்மையையும்; தவிள்போர் < தவிர்ப்போர் - உடலினின்று வெளியேற்றும் நல்ல மருத்துவர்கள்; பா.வே. - 'விசம் யவதிதான் தீர்ப்போர்' (மா.தவநிலை); 'விடய வதிதான் தீர்ப்போர்' (கை.பிரதி);

2433. கஞ்சமலரோங்கும் - தாமரை மலர்கள் பூத்திருக்கும் தடாகத்தின் அருகில்; கனத்தகுடை - மக்கள் ஓய்வெடுப்பதற்குரிய நிழற்குடை வைப்போர்; தங்குமிடம் - வழிநடந்து நெடுந்தூரம் செல்வோர் தங்கிச் செல்வதற்கான மடங்கள் கட்டிவைப்போர்;

2434. சீப்புடனே - தலைவாரிக் கொள்வதற்குச் சீப்புகளும்; வீசிறியள் - காற்றில்லாதபோது வீசிக் கொள்வதற்கு விசிறிகள் நல்குவோர்; சிறந்த சுண்ணாம்பு - வெற்றிலை போடுவோர் கேட்கின்றபோது சுண்ணாம்பை இல்லை எனக்கூறாது ஈவோர்; பாதலட்சை < பாதரட்சை - செருப்புகளை ஈவோர்;

2435. தாப்புடனே - குறிப்பறிந்து; எண்ணை - தலையில் தேய்க்கும் எண்ணெய் அளிப்போர்; தகமை அரப்பிடுவோர் - தலையில் தேய்த்துக் குளிப்பதற்குரிய அரப்பு ( < அரைப்பு) - சீயக்காய்ப்பொடி கொடுப்போர்;

2436. நல்லோர்தமக்கு - குணவான்களுக்கு; நல்முகமாய் - நல்லெண்ணத்துடன்; ஏவல் செய்வோர் - பணிபுரிவோர்; பா.வே. - 'நகைமுகமாய்' (மா.தவநிலை, கை.பிரதி);

வல்லபுகழ்த் தன்மவகை வகையே ஆராய்ந்து
தேருங் கரியுஞ் சிறந்தபரி தண்டிகையும்
சீருந் தழைத்தோங்கத் தேவர் புவிவளர
2440 விற்றாரமாக விரிவுபுகழ் நல்லோரை
சிற்றிரமாய் நல்ல சிறந்தகுடை சாமரையும்
மெத்தத் தவஞ்செய்தோரை மெத்தவே யாதரிப்போம்
சத்துந் தவமும் தருமமது மாதரிப்போம்
செய்தோர்க்குச் செய்த பலனென்றே கற்பினையால்

*2437.* வல்லபுகழ்த் தன்மவகை - பெரிய தான தருமங்கள் (தன்மம் < தருமம்); வகையே ஆராய்ந்து - தகுதியை அறிந்து செய்வோர்; பா.வே. - 'வகை பிறவின் (மா.தவநிலை);

*2438.* தேரும் கரியும் சிறந்தபரி தண்டிகையும் - தேர், யானை, குதிரை, பல்லக்கு போன்றவற்றை அனுப்பி மேலேகூறியுள்ள நல்லவர்களை;

*2439.* சீரும் தழைத்தோங்க - சிறப்பு மிகுந்து வருமாறும்; தேவர் புவி வளர - அவ்வாறானவர்கள் வருவதால் வானுலகும் சிறப்படையவும்;

*2440.* விரிவுபுகழ் நல்லோரை - புகழ்மிகுந்த இத்தகு நல்லவர்களை; விற்றாரமாக < வித்தாரமாக - பெரிய அளவில் சிறப்புச் செய்து; பி.வே. - 'விஷ்த்தாரமாய் யழைத்து' (மா.தவநிலை);

*2441.* சிற்றிரமாய் < சித்திரமாய் - நல்ல ஓவியம்போல் அமையும்; நல்ல சிறந்த குடைசாமரையும் - வெண்கொற்றக் குடையின் கீழ் வரச் செய்து; அமரச் செய்து; சாமரையும் - மயிற்தோகை (கவரி) (யால்) விசிறியும்;

*2442.* மெத்தத் தவஞ்செய்தோரை - நிறைவாகத் தவவொழுக்கத்தை மேற்கொண்டவர்களை; மெத்தவே ஆதரிப்போம் - மிகுந்த அளவில் அவர்களுக்கு மரியாதை கிடைக்குமாறு செய்வோம் என இறைவன் கூறலுற்றார்;

*2443.* சத்தும் < சற்றும் - கொஞ்சம் தவமும் - தவவொழுக்கத்தைக் குறைவாக மேற்கொண்டிருந்தால்; தருமமது ஆதரிப்போம் - தரும சிந்தையுடன் துணையிருப்போம் என்றார்; பா.வே. - 'சத்தும் தருமம் தருமமளவும் யாதரிப்பார்' (மா.தவநிலை); 'தரியாமலாதரிப்போர்' (கை.பிரதி);

*2444.* செய்தோர்க்குச் செய்த பலன் - யார்யார் நல்லவற்றைச் செய்கிறார்களோ அவ்வவர்களுக்கு அவ்வாறே நல்லவை கிடைக்கும்; என்றே கற்பினையால் - என்னும் நீதியால்;

மெய்த்தவத்துக் கொப்பாய் விதவிதமா யாதரிப்போர்
தவஞ்செய்தோர் யாவர்களுந் தன்கருமஞ்
செய்தவர்களை[த்]
தவத்துக் களவாகத் தான்புகழ்ந்து கூட்டிவந்தார்

**சிவனடியார்களுக்குக் கயிலாயத்தில் வரவேற்பு**

தேவர் மகிழச் சிவனடியார் வாறவழி
யாவர்களுந் தூத்து யழகா யலங்கரிப்பார்
அரனா ருலகு மரிவேதன் தன்னுலகும்
வரமான தேவர்நிறை வான்னெவை பலவும்
ஆகாசப் பந்த லழகா நிரைத்திடுவார்
வாகாய்க் களப மகிழ்ந்து மிகவிரைப்பார்

**2445.** மெய்த் தவத்துக் கொப்பாய் - உண்மையான தவவொழுக்கத் துக்கு ஏற்ப; விதவிதமாய் - தகுதியறிந்து; ஆதரிப்போர் - பிறப்பை அடைவர்;

**2446.** தவஞ்செய்தோர் யாவர்களும் - நல்லொழுக்கங்களை மேற் கொள்வோர் அனைவரும் தன்கருமஞ் செய்தவர்களை - தங்களாலான நல்லவற்றைப் புரிந்தவர்களை; பா.வே. - 'தான் தர்மம் செய்தாரும்' (கை.பிரதி);

**2447.** தவத்துக்களவாகத் தான் புகழ்ந்து கூட்டிவந்தார் - அவரவர்கள் செய்த நல்லவற்றுக்கு ஏற்பக் கயிலாயத்துக்கு அவர்களை அழைத்துவந்த னர்;

**2448.** தேவர் மகிழ - வானுலகோர் மகிழுமாறு; சிவனடியார் வாறவழி - சிவபக்தர்கள் கயிலாயத்துக்கு வரும் வழி எல்லாம்; பா.வே. - 'தேவர் மன மகிழ்ந்து' (கை.பிரதி);

**2449.** யாவர்களும் தூத்து - எல்லோரும் சுத்தம் செய்வதில் ஈடுபட்டு; அழகாய் அலங்கரிப்பார் - எழிலடையுமாறு செய்தனர்; பா.வே. - 'அன்பாக தெளித்து'(மா.தவநிலை); 'யாவர்களும் சேர்ந்து' (கை.பிரதி);

**2450.** அரனாருலகம் - சிவலோகத்தையும்; அரிவேதன் தன்னுலகும் - திருமாலின் வைகுண்டத்தையும், பிரம்மாவின் இருப்பிடத்தையும்; பா.வே. - 'அருள்வேதன்' (மா.தவநிலை);

**2451.** வரமான தேவர்நிறை - வரமிகுந்த வானவர்கள் மிகுந்துள்ள; வான்னெவை பலவும் - வானவீதிகள் பலவற்றையும்;

**2452.** ஆகாசப்பந்தல் - வானில் பல பந்தல்கள்; அழகா - எழிலுடன்; நிரைத்திடுவார் - அமைத்திட்டார்கள்;

**2453.** வாகாய் - வகையாக; களபம் - மணமுள்ள சாந்துகள்; மகிழ்ந்து

சாந்து சவாதுபன்னீர் சந்தனங்களும் பூசி
சேர்ந்து மலர்மாலைச் சிறப்பாய்ச் சொரிந்திடுவார்
பானக்க மோரு பாங்கான பால்தயிரும்
தேனொற்ற முக்கனியுஞ் சேர்ந்தகறி சோறுடனே
வாரணங்கள் தேர்கரிமேல் வாறபுகழ் நல்லோர்க்கும்
தாழைமலர் நிரைப்பார் தாமரைப்பூத் தூக்கிடுவார்
பாளைநிறை நெட்டிப் பவள முற்றால்சிங்காரம்
வெட்டியிலா மிச்சி மிகுந்த மருக்கொழுந்து

மிக - விரும்பி மிகுதியாக; விரைப்பார் - வாரி எறிவர்; பா.வே. 'மகிழ்ந்து நிரைத்தார் வீதியெங்கும்' (மா.தவநிலை);

**2454.** சாந்து - கலவைச் சாந்துகளும்; சவாது - மணமுள்ள புழுகும்; பன்னீர் - நறுமணமுள்ள நீரும்; சந்தனங்களும் பூசி - சந்தனக் குழம்பும் தடவி;

**2455.** சேர்ந்து - இவற்றுடனே; மலர்மாலை - பூமாலைகளையும்; சிறப்பாய்ச் சொரிந்திடுவார் - மதிப்போடு வீசுவர்;

**2456.** பானக்கம் - பானக்காரம் எனப்பெறும் இன்சுவைநீரும்; மோரு - மோரும்; பாங்கான பால் தயிரும் - பக்குவமான பாலும் தயிரும்; பா.வே. - 'பாலுபழம்' (மா.தவநிலை);

**2457.** தேனொற்ற < தேனொத்த - தேனைப்போன்று சுவைதரும்; முக்கனியும் - மா, பலா, வாழை எனும் மூன்றுபழங்களும்; சேர்ந்த கறி சோறுடனே - இடம்பெறும் உணவும் படைத்து; பா.வே. - 'தேனையொத்த சர்க்கரையும்' (மா.தவநிலை);

**2458.** வாரணங்கள் தேர்கரிமேல் - யானை மேலும் தேரிலும்; வாறபுகழ் நல்லோர்க்கும் - கயிலாயம் வரும் சிவபக்தர்களுக்கும்; பா.வே. - 'வாகனங்கள் மேலேறி' (மா.தவநிலை);

**2459.** தாழைமலர் நிரைப்பார் - தாழைமலர்க் கொத்துக்களை மிகுதியாகக் கட்டுவர்; தாமரைப்பூத்தூக்கிடுவார் - தாமரை மலர்களைக் கட்டித்தூக்கிவைப்பர்;

**2460.** பாளை நிறைநெட்டி - தென்னை, கமுகு, ஈச்சம் பாளைகளையும், நெட்டிப் பூக்களையும் மிகுதியாகத் தோரணமாகக் கட்டியிருப்பர்; பவளம் - பவளத்தாலும்; முற்றால் < முத்தாலும்; சிங்காரம் - அலங்காரம் செய்வர்;

**2461.** வெட்டி - நறுமண வெட்டி வேரும்; இலாமிச்சி மணமுள்ள இலாமிச்சம் வேரும்; மிகுந்த மருக்கொழுந்து வாசனை மிகுந்த பச்சைநிறக் கொழுந்தும்;

கெட்டிநன்றாச் சேர்த்துக் கிருபை யலங்கரித்தார்
சீதளம் பூவோங்குஞ் சிறந்தபுகட்ப் பட்டுவர்ணம்
மாதளம் பூப்பட்டும் மகிழம் பூப்பட்டாடை
முற்றுப் பவள முகப்பு நல்லபட்டாடை
கொற்று மிகுந்த கோலமணிப் பட்டாடை
சந்திர காவி தரிசுமுகப் பட்டாடை
இந்திரனீல மியல் நீலப் பட்டாடை
கொத்துலவு சித்திரத்தில் குமுழம்பூப் பட்டாடை
சுத்து மலர்க்குச்சுத் துட்டெழுத்துப் பட்டாடை

2462: நன்றாகச் சேர்த்துக் கெட்டி - இவையனைத்தையும் மாலை போன்று கட்டி; கிருபை அலங்கரித்தார் - நன்றாக அலங்காரம் செய்தனர்;

2463. சீதளம் பூவோங்கும் - தண்மை நிறைந்த பூக்களைப் போன்று; சிறந்த புகழ்ப்பட்டுவர்ணம் - பெயர்பெற்ற வர்ணப்பட்டாடைகளும்; (புகட்ப்பட்டு < புகழ்ப்பட்டு);

2464. மாதளம் பூப்பட்டும் - மாதளம் பூப்போன்ற நிறமுடைய பட்டாடைகளும்; மகிழம்பூப்பட்டாடை - மகிழம்பூ நிறமுடைய பட்டாடைகளும்; பா.வே. - 'பூப்பச்சை (மா.தவநிலை);

2465. முற்று < முத்து - முத்தாலும்; பவளம் - பவளத்தாலும்; முகப்பு நல்லபட்டாடை - முகப்பில் தைக்கப்பெற்றப் பட்டாடைகளும்; பா.வே. - 'முகப்பமுத்தும்' (மா.தவநிலை);

2466. கொற்று < கொத்து; மிகுந்த - நிறைந்த; கோலமணிப் பட்டாடை - அழகுமணிகளாலான பட்டாடைகளும்;

2467. சந்திரகாவி - செந்நிறம் அமைந்த; தரிசு முகப்பட்டாடை - ஓரத்தில் பரல்கள் வைத்துத் தைக்கப்பெற்றப் பட்டாடைகளும்;

2468. இந்திர நீலம் - ஒருவகை நீலநிறத்தில் உள்ள பட்டாடைகளும்; இயல் நீலப்பட்டாடை - சாதாரண நீலநிறப் பட்டாடைகளும்; பா.வே. - 'இந்திராணி நீலத்தில்' (மா.தவநிலை);

2469. கொத்துலவு சித்திரத்தில் - திரளாக அமைந்துள்ள ஓவியத்துடன்; குமுழம்பூ < குமிழம்பூ - சிவப்பு, நீல நிறமுடைய குமிழம்பூப் போன்ற; பட்டாடை - பட்டாலும்;

2470. சுத்துமலர்க்குச்சு - ( < சுற்று) சேலையின் கரைக்கட்டு முழுவதும் மலர்கள் தொங்குமாறு சுருக்குகள் வைத்தும்; துட்டெழுத்துப் பட்டாடை - நாணயங்கள் எழுதப்பெற்றப் பட்டாடைகளும்; (குச்சு - கொய்சகம்);

கந்தஞ் சிறந்தமலர்க் காயாம்பூப் பட்டாடை
அந்த மிகுந்த யருண்மணிப் பட்டாடை
பொன்னுருக்கி யுள்நாடும் பூமணக்கும் பட்டாடை
தன்னிகரில்லா வழகின் தங்கரற்றினப் பூமாலை
இந்தவகை யாடை யிலங்கு மொழிப்பாவை
அந்த மேல்கட்டி யலங்கிருதமாய் விரித்து
தங்கச் சரமு(ம்)ந் தாளிரெட்டினத்தின் சரமும்
எங்கு மலர்ச்சரங்க ளெங்கு விதானமிட்டார்
கும்ப முலைமடவார் கோலச் சுருளுதவ
செம்பவள வாயார் சிறந்த கவரிசுத்த

2471. கந்தம் சிறந்தமலர் - வாசனை மிகுந்த மலரான; காயாம் பூப்பட்டாடை - காயாம்பூவின் நீல நிறத்திலுள்ள பட்டாடைகளும்;

2472. அந்தமிகுந்த - அழகு மிகுந்த; அருள் மணிப் பட்டாடை -மணிகள் மிகுதியாகச் சேர்த்துக் கட்டிய பட்டாடைகளும்;

2473. பொன்னுருக்கி - தங்கத்தை உருக்கி, சிறு கம்பிகளாகச் செய்து; உள்நாடும் - இழைகளாக உள்ளே பாவியுள்ள; பூமணக்கும் பட்டாடை - மணம் வீசும் பட்டாடைகளும்;

2474. தன்னிகரில்லா அழகின் - ஒப்பில்லாத; தங்க ரற்றின (ரற்றின < ரத்தின). - தங்கமும் ரத்தினமும் பதித்த; பூமாலை - மலர் ஆரங்களும்;

2475. இந்தவகை ஆடை - இவ்வகை நிறமும் அழகுமுள்ள ஆடைகளும் பூக்களும்; இலங்கு மொழிப்பாவை - விளங்கக்கூடிய சித்திரப் பாவைகளும் நிரம்பி;

2476. அந்த மேல் கட்டி - அழகான விதானங்களை; அலங்கிருதமாய் விரித்து - அலங்காரமாக அமைத்து;

2477. தங்கச் சரமு(ம்) - தங்கத்தாலான கொத்தும்; தாளி - கொடி போன்ற; ரெட்டினத்தின் < ரெத்தினத்தின் < இரத்தினத்தின்; சரமும் - கொத்தும்;

2478. எங்கு மலர்ச்சரங்கள்; பூங்கொத்துகளின் தோரணம் எவ்விடத்தும் தொங்கவும்; எங்கு விதானமிட்டார் - மேற்கட்டிகளை எவ்விடத்தும் கட்டி வைத்தனர்; பா.வே. - 'மலர் சாத்தியேவியே தானமிட்டார்' (மா.தவநிலை);

2479. கும்ப முலைமடவார் - குவிந்த தனங்களையுடைய சிறுவயதுப் பெண்கள்; கோலச் சுருள் உதவ - வெற்றிலை மடித்துக் கொடுக்கவும்; பா.வே. - 'கோலமுடன் சுருள் ளெடுத்து' (மா.தவநிலை);

2480. செம்பவள வாயார் - சிவந்த, பவளம் போன்ற இதழ்களையுடைய பெண்கள்; சிறந்த கவரிசுத்த - அடியார்களுக்கு மயிற்தோகையால்

வட்டமுலை மாதர் மகிழ்ந்து மாலாத்திசுத்த
..................................
வேலொத்த கண்ணார் வேண்டுமுப சாரமிட
சேலொத்த மின்னார் சிறந்த நடனமிட

**சிவனடியார்க்குச் சிவலோக பதவி கிடைத்தல்**

இந்தப் படியா யியல்வு தவத்தோரை
2485 விந்தை மிகுந்த விளங்குமவ ரேகமதை
அந்த விடக்கி லடைத்து யளவாக
முந்து முடக்கில் முறமைசுகம் பெத்திருக்க
பொங்கு புகழ்சொக்கம் புகழ்பாக்கிய மெனவே
தங்குந் தவற்றோர்கள் தான்மகிழக் கொண்டுசென்றார்

விசிறவும்; பா.வே. - 'கவறிவீச(மா.தவநிலை); 'செம்பவள மாதர்' (கை.பிரதி);

*2481.* வட்டமுலை மாதர் - வட்டமான தனங்களையுடைய பெண்கள்; மகிழ்ந்துமாலாத்திசுத்த - களிப்புற்று ஆலாத்தி தட்டுகளை ஏந்தி அடியார்கள் முன்பு சுற்றி திருஷ்டி கழிக்கவும்;

...'கட்டு முகமாதர் கனத்த வீசரி வீச' (மா. தவநிலை);

*2482.* வேலொத்த கண்ணார் - வேல் போன்ற கூரிய விழிகளையுடைய பெண்கள்; வேண்டுமுபசாரமிட - தேவையான நல்வரவு கூறவும்;

*2483.* சேலொத்த மின்னார் - மின்னல் போன்ற கொடியிடையுடைய கெண்டை விழிப் பெண்கள்; சிறந்த நடனமிட - மிகச் சிறப்பான நாட்டியஞ்செய்யவும்;

*2484.* இந்தப்படியாய் இயல்வு தவத்தோரை - இவ்வாறான சிறப்புக் களுக்குரிய சிவனடியார்களை;

*2485.* விந்தைமிகுந்த - சிறப்பு மிகுந்து; விளங்குமவர் - திகழும் அடியார்களின்; ரேகமதை < திரேகமதை - உடம்புகளை;

*2486.* அந்தவிடக்கில் - அவ்விடத்தல்; அடைத்து - உள்ளிருத்தி; அளவாக - தேவைக்குத் தகுந்தவிதத்தில்; பா.வே. - 'அந்தவடக்கில் (மா.தவநிலை);

*2487.* முத்து முடக்கில் - மடிந்து கிடந்த; முறமை சுகம் - சுகமான வாழ்க்கையை; பெத்திருக்க < பெற்றிருக்க - கொண்டிருக்கவும்;

*2488.* பொங்கு புகழ்ச் சொக்கம் - அவ்வாறிருக்கும் மிகுந்த சொர்க்க வாழ்வு; புகழ்பாக்கியமெனவே - தங்களுக்குக் கிடைத்த கொடுப்பினை என;

*2489.* தங்கும் தவற்றோர்கள் ( < தவத்தோர்கள்) - தவவொழுக்கம்

## விருத்தம்

பொருள்படைத் தோரைப் பாரில்
போத்துவார் தூவில் மீறி
அருள்படைத் தோருக் கெல்லா
மானமுத் தெனக்குச் சொன்ன
குருமொழி யதனை வைத்துக்
குவலைய மீதில் தூதர்
தரும மில்லாரை யங்கே
தள்ளியே யடித்துப் போகும் (76)

## சிவனடியார் சிவன் பாதத்தில் வீழ்ந்து வணங்குதல்

### நடை

**2490** வாசமிகு இன்பநல்லோர் வந்தாரென மகிழ்ந்து
வாசம்நிறைந்த சொக்க வாசல்தனைத் திறந்து
தங்க மிகுந்த தருமசொக்க வாசல்சென்று

தங்கியுள்ள மேன்மையாளர்கள்; தான்மகிழ - இன்புற்றிருக்குமாறு; கொண்டுசென்றார் - கயிலாயத்துக் கூட்டிச் சென்றனர்;★

வி. 76. பொருள் படைத்தோரை - செல்வர்களை; பாரில் - வையகத்தில்; போத்துவார் < போற்றுவார் - புகழ்வர்; தூவில் மீறி - பகையையும் மீறி; அருள் படைத்தோருக்கெல்லாம் - கருணையுடைய எல்லோருக்கும்; ஆன முத்தெனக்குச் சொன்ன - என்னிடம் கூறிய; குருமொழி அதனை வைத்து - குருவின் வேதவாக்கை வைத்து; குவலைய மீதில் - பூமியில்; தூதர் - கிங்கிலியர்; தருமமில்லாரையங்கே - கெட்டவர்களை அங்கங்கே; தள்ளியேயடித்துப் போகும் - அடித்தே கொண்டு செல்வர்;

பா.வே. - 'போற்றுவார் யது யல்லாமல்' (மா.தவநிலை);

*2490.* வாசமிகு - புகழ்மிக்க; இன்ப நல்லோர் - சிறந்த அடியார்; வந்தாரென மகிழ்ந்து - பூமியிலிருந்து கயிலாயம் சேர்ந்தனர் என அறிந்து;

*2491.* வாசம் நிறைந்த - புகழ் மிகுந்த; சொக்க < சொர்க்க - சிவலோக; வாசல் தனைத் திறந்து - கதவுகளை அகல நீக்கி;

*2492.* தங்க மிகுந்த - மிகுதியான தங்கத்தால் இழைத்துச் செய்யப் பெற்ற; தரும சொக்க ( < சொர்க்க) வாசல் சென்று - அடியார்களுக்கும் நல்லவர்களுக்கும் திறக்கும் சொர்க்க லோகத்தின் கதவுகளுக்கு அருகில் சென்றடைந்து;

---

★ இத்துடன் கைப்பிரதி முடிவடைகிறது.

சங்கரனார் பாதந் தனில்வீழ்ந்து தெண்டனிட்டார்
திங்களணி யீசர் சிறந்துமகிழ்வார் யோங்கி

## இறைவன் நல்லோர் நலம் பற்றி வினாதலும் நயினார் விடையும்

பொங்கு தவப்பெரியோர் போனகரி லெப்போது
தங்கியிருந் தனரோ யென்றுரைத்தார் சங்கரரும்
பொங்கமுட னீசர் புகழ்ந்த மொழிகேட்டு
அன்று கணக்கு ரரனாருட னுரைப்பார்
நின்றுமெள்ள வாய்புதைத்து நீதியுட நின்றவரும்
அத்தனே யண்ட[த்] தமரருக்கெல்லா மரசே
சித்தனே யுந்தன் சியலறிய வல்லவரார்

2493. சங்கரனார் பாதந்தனில் வீழ்ந்து தெண்டனிட்டார் - இறைவனின்திருத்தாள்களில் பணிந்து வணங்கினர்; பா.வே. - 'சங்கரரையும் மாதுமையை...' (மா.தவநிலை);

2494. திங்களணி ஈசர் - பிறையினைத் தலையில் சூடியுள்ள இறைவன்; ஓங்கி - மிகுந்து; சிறந்து மகிழ்வார் - அடியவர்கள் வரவு கண்டு ஆனந்தமுற்றார்;

2495. பொங்குதவப்பெரியோர் - தவவொழுக்கம் மிகுந்த நல்லோர்; போனகரிலெப்போது - பொறியில், பிடியில் எப்போதாவது;

2496. தங்கியிருந்தனரோ - தடைபட்டுக் காத்திருந்தனரா? என்றுரைத்தார் சங்கரரும் - அங்கே இருந்த சித்திரபுத்திர நயினாரிடம் கேட்டார்;

2497. பொங்கமுடன் ஈசர் - விளக்கமுடன் இறைவன்; புகழ்ந்த மொழிகேட்டு - உரைத்தவற்றைக் கேட்டுக் கொண்டிருந்த;

2498. அன்று கணக்கர் - அப்போது சித்திரபுத்திரர்; அரனாருடன் உரைப்பார் - சிவனாரிடத்தல் கூறுவதாவது; பா.வே. - 'அரன் மாதுக்கே துரைப்பார்'

2499. நின்று மெள்ள ( < மெல்ல) வாய் புதைத்து - பக்கத்தில் பணிவுடன் நின்று கொண்டு, வாய்மேல் கை வைத்து; நீதியுட நின்றவரும் - எவருக்கும் சாராது கணக்கு எழுதுபவரான நயினார்;

2500. அத்தனே - இறைவனே! அண்டத் தமரருக்கெல்லாம் அரசே - வானத்திலுள்ள அனைத்துத் தேவர்களுக்கெல்லாம் தலைவரே!; பா.வே. - 'பார்பதியே யானயருள் ரூபியே' (மா.தவநிலை);

2501. சித்தனே - சித்துகளில் தேர்ந்த இறைவனே!; உந்தன் - உம்முடைய; சியல் < செயல் - வினையை; அறியவல்லவரார் - தெரிந்து கொள்ளக் கூடியவர் எவருமில்லை;

பொங்குபுகழ் காலபுரம் போயடைந்தார் பாதகர்தான்
தங்கு மலையாந் தரும மணுவளவும்
பதினாயிரங் கோடிப் பார்நிறைய வங்கேவுயிர்
நீதியணி பித்தகனே நின்னடியைப் போத்துகின்றோர்
ஒருபங்கு தானிவையு முண்டில்லை யென்பதுபோல்
தருமமுடையா ரிவர்கள் தான்வந்தா ரீசுபரரே
ஆறாயிரங் கோடிகாத விலாச மதாய்
வீறாக நின்ற மிகுந்ததவத்தோர்க ளென்றார்

**நல்லோர் வரவால் எல்லாம் விளக்கம் பெறுதல்**

அந்தவுரை கேட்டு அரனார் மனமகிழ்ந்து

2502. பொங்கு புகழ் - புகழ் மிஞ்சி விளங்கக்கூடிய; காலபுரம் - எமலோகம், நரகம்; பாதகர்தான் போயடைந்தார் - நல்லோரல்லார் சென்று அடைந்தனர்;

2503. தங்கு மலையாம் - புகழ்தங்கக்கூடிய மலையாகிய கயிலாய மாம்; தருமம் அணுவளவும் - நீதி சிறிதுகூடத் தவறாது;

2504. பதினாயிரங்கோடிப் பார்நிறைய - அதிக அளவுள்ள உலகுகள் நிரம்பி வழியுமாறு; அங்கே உயிர் - அங்குள்ள நல்லோர்களின் சீவன்; பா.வே. - 'பாரனந்தம் பங்கவையில்' (மா.தவநிலை);

2505. நீதியணிபித்தகனே - தருமத்தையுடைய பித்தனாகிய இறைவனே; நின்னடியை - உமது தாளை; போத்துகின்றார் < போற்றுகின்றார் - துதிக்கின்றனர்;

2506. ஒரு பாங்கு தானிவையும் - இப்போது வந்திருப்பவர்களோ ஒரு பகுதியினரே; உண்டில்லை என்பது போல் - இனியும் இவரைப் போன்றவர்கள் உண்டோ இல்லையோ என்னுமாறு;

2507. தரும முடையாரிவர்கள் - புண்ணியவான்களான இவ்வடியார்கள்; தான் வந்தாரீசுபரரே - இறைவனே இவர்கள் கயிலாயத்துக்கு வந்து சேர்ந்தனர்;

2508. ஆறாயிரங் கோடி காதவிலாசமதாய் - அதிக அளவுள்ள காத தூரம் அகன்று பரந்த இடத்தில்;

2509. வீறாக நின்ற - பெருமையுடனின்ற; மிகுந்த தவத்தோர்கள் - இவர்கள் அதிக ஒழுக்க வாழ்வினைக் கடைப்பிடித்தவர்; என்றார் - என இறைவனிடம் கணக்கரான நயினார் கூறினார்;

2510. அந்தவுரை கேட்டு - அவர் கூறுவதைக்கேட்டு; அரனார் மனமகிழ்ந்து - இறைவன் உவகையடைந்து;

விந்தைமிகு நல்லோர் விரிந்ததவந் தன்னளவாய்
சொக்கங் கயிலாசந் துலங்குமணி மந்திரமாம்
பக்கம்நிறை நட்சேத்திரப் படலமிவை பூவுலகும்
மாலோன் பதமு மலரோ னறுமுகவன்
சீலகுண முடையார் செய்யுந் தவப்பெரியோர்
பாரில் செனனம் பரந்தபுகழ் வேந்தரென்னும்
நீரில் நிறைசெல்வம் நிறைந்த புகளோரெனவும்
இப்படியே பின்னும் யியல்வுசிலபேர் பிறந்தார்
செப்பமுடன் மீறுஞ் சிறந்ததவந் தன்னளவாய்
உள்ளபடி யோங்குமொரு யுகமையெண்ணி யோராது

*2511.* விந்தைமிகு நல்லோர் - சிறப்பமைந்த சிவனடியாரான அவர்கள்; விரிந்த தவம் தன்னளவாய் - அவர்கள் மிகுதியாகச் செய்த தவத்தினால்; பா.வே. - 'விந்தையுள்ள நல்லார்' (மா.தவநிலை);

*2512.* சொக்கம் < சொர்க்கம்; கயிலாசம் - சிவலோகம்; துலங்குமணி மந்திரமாம் - நன்றாகப் புகழுடன் விளங்கின; பா.வே. - 'துலங்கும் யண்டம் விண்ணில்யேழும்' (மா.தவநிலை);

*2513.* பக்கம் நிறை நட்சேத்திரப் படலமிவை - மேலும் அங்கங்கே விளங்கிநின்ற நட்சத்திர மண்டலமும்; பூவுலகும் - பூமியும் நன்றாக விளங்கின;

*2514.* மாலோன் பதமும் - திருமாலின் அழகும்; மலரோன் - பிரமா; அறுமுகவன் - முருகன் போன்றவர்களும் நல்லோர் வரவால் சிறந்தனர்;

*2515.* சீலகுணமுடையார் - நற்குணமுள்ளவர்கள்; செய்யுந் தவப்பெரியோர் - தவவொழுக்கத்தில் மேம்பட்டவர்கள்;

*2516.* பாரில் செனனம் - பூலோகத்தில் மறுபிறவியாக; பரந்த புகழ் வேந்தரென்னும் - புகழ் சிறக்கும் அரசர்களாகவும்;

*2517.* நீரில் நிறை செல்வம் - தண்ணீரிலும் பெரிதான பாக்கியமும்; பொருளும் பெற்ற; நிறைந்த புகழோர் எனவும் - மிகுந்த பெருமையுள்ளவர்கள் என்றும்;

*2518.* இப்படியே - இவ்வாறான பேர்களாகவும்; பின்னும் - வேறு சில சிறப்புடையவர்களாகவும்; இயல்பு சிலபேர் பிறந்தார் - சிவனடியார்களில் சிலர் மறுபிறவியாகத் தோன்றினர்;

*2519.* செப்பமுடன் - சிறப்பாக; மீறும் - விஞ்சும்; சிறந்ததவம் தன்னளவாய் - அவர்கள் மேற்கொண்ட நல்ல தவத்தினால்;

*2520.* உள்ள படியோங்கும் - இயல்பாகவே சிறக்கும்; உகமை( < யுகமை) - மகிழ்ச்சியை; எண்ணியோராது - கணக்கிட்டுக் கூறவியலாது;

தள்ளப் படாது தவற்றையொரு யெள்ளவும்

### விருத்தம்

மரத்தின் குலமாங் கனிரசனை
மாத்தும் ரசனை வராது
கரத்தி னளவார் தனதுவுடல்
கண்டோ ரசனுக் கொவ்வாது
வரத்தி னளவா மெடுத்த செல்வம்
வாஞ்சி பலவு மீறாது
பரத்தி னளவாம் தரும வலுப்
பலவுங் கணக்கில் சேராதே 77

### கலியுகம் பிறத்தல்

### நடை

இந்தக் கணக்குவலு யீசுபரர் முன்னானதற்பின்
சிந்தை மகிழ்ந்து சிறந்தபுகழ்க் கணக்கர்

2521. தவற்றை < தவத்தை - அடியார்களின் தவவொழுக்கத்தை; ஒரு எள்ளளவும் தள்ளப்படாது - சிறிதளவு கூடப் புறக்கணிக்கமுடியாது;

வி. 77. மரத்தின் குலமாம் கனிரசனை - பழத்தின் சுவை அது காய்க்கும் மரத்தின் தன்மையைப் பொறுத்தது; மாத்தும் < மாற்றும் - வேறான; ரசனை < இரசனை - சுவை; வராது - அக்கனியில் ஏற்படாது; கரத்தின் அளவார் தனது உடல் - ஒவ்வொருவரின் உடலின் உயரம் அவரவர்களின் கையின் எண் சாணாகும்; கண்டோரசனக் கொவ்வாது - அவரவர் கண்ணுக்கெட்டிய அளவு இராது; வரத்தின் அளவாம் எடுத்த செல்வம் - அவரவர்கள் தவத்தின் அளவே அவரவர்களுக்குக் கிடைக்கும் செல்வத்தின் அளவாகும்; வாஞ்சி பலவும் மீறாது - ஆசைப்பட்டாலும் எது மேலும் கிடைக்காது; பரத்தின் அளவாம் தருமவலு - தருமத்தின் வலிமை பூமியின் அளவாம்; பலவும் கணக்கில் சேராதே - வேறு எதுவும் அதில் வந்து சேரவியலாது;

பா.வே. - 'மாத்தின்யளவாங்குலராசன்' 'காத்தின்யளவாம் தனதுவுடல்', 'வரத்தின் வரமாம் மேடு செல்வம்', 'பரத்தின் (மா.தவநிலை);'

2522. இந்தக் கணக்குவலு - இப்படியான கணக்கின் வலிமை; ஈசுபரர் முன்னானதற்பின் - இறைவன்முன்னே தெரியப்படுத்தியதன் பின்னால்;

2523. சிறந்த புகழ்க்கணக்கர் - புகழ் நிரம்பிய சித்திரபுத்திரனார்; சிந்தைமகிழ்ந்து - உவகையடைந்து;

அத்தனே பித்தா யரனே பராபரனே
சித்தனே யுந்தன்(ஞ்) சியலின் கணக்குரைற்றேன்
பாரில் கலியுகமும் பாங்காக வந்திதுகாண்
வேரில்லா தே[ ா]ங்கினார் வீணர் வரம்புதப்பி
நீதியறி வில்லை நிறைந்தமயல் மானிடர்கள்
சாதி வகுப்பில்லைத் தாரணியில் மானிடர்க்கு
ஆசார மில்லை யரனே வுலகுதனில்
நீச ராசாரம் நெறியழிந்து விட்டார்கள்
சிந்தைநிலை பாதகர்கள் சிவகருத்து மெண்ணார்கள்

2524. அத்தனே பித்தா யரனே பராபரனே - தலைவனாகவும், பித்தனாகவும் எல்லோர்க்கும் இறைவனாகவும் விளங்கும் சிவனே;

2525. சித்தனே - சித்துக்களில் வல்ல இறைவனே; உந்தன் - உம்முடைய; சியலின் < செயலின் - வினையின்; கணக்குரைற்றேன் < கணக்குரைத்தேன் - உம்மிடம் நான் நல்லோர்களின் கணக்குகளை எடுத்துக் கூறினேன்;

2526. பாரில் - பூமியில்; கலியுகமும் - தருமம் குறைந்து பாவம் மிகுதியாகும் கடையுகமான நாலாம் யுகம்; பாங்காக வந்திதுகாண் - முறையாகப் பிறந்துவிட்டது;

2527. வீணர் - பாதகர்கள்; வரம்புதப்பி - விதிகளை மீறி; வேரில்லா தோங்கினார் - எவ்விதப் பிடிப்புமின்றி மிகுதியாயினர்;

2528. நிறைந்த மயல் மானிடர்கள் - பூமியில் பெருகிவிட்ட மனிதர்களிடம்; நீதியறிவில்லை - தருமமும் ஞானமும் குறைந்துவிட்டன;

2529. தாரணியில் - பூமியில்; மானிடர்க்கு - மனிதர்களுக்கு; சாதிவகுப்பில்லை - சாதிப்பிரிவுகள் இல்லாதுள்ளன; பா.வே. - 'தரும முறை மாறாட்டம்' (மா.தவநிலை);

2530. உலகுதனில் - பூமியில்; அரனே - சிவனே; ஆசாரமில்லை - ஒழுக்க நடைமுறைகள் இல்லாதுள்ளன;

2531. நீசராசாரம் < நீசர் ஆசாரம் இழிந்தவர்களின் சகவாசம் மிகுந்துவிட்டது; நெறியழிந்து விட்டார்கள் - நேர்மை இல்லாதாகிவிட்டனர்; பா.வே. - 'நீசர்சவசாரம்' (மா.தவநிலை);

2532. சிந்தைநிலை பாதகர்கள் - உள்ளத்தில் இழிவுடையவர்கள்; சிவகருத்துமெண்ணார்கள் - சிவனின் பெருமைகளையும் எண்ணிப் பார்க்க மாட்டார்கள்;

விந்தை நெறிநீதி விரிவுலகில் தப்பிவிட்டார்
அந்திமதி சூடு மரனே யென்வுரைற்றார்

### சித்திரபுத்திர நயினாரின் திருஅவதாரம்

அந்த வுரையை! பரனாருந் தான்கேட்டு
சித்திர புத்திர3ீரே சிந்தை நிறைகணக்கா
பத்திரமாய் நீரேகிப் பண்பாய் [ப்] பிறவுமென்றார்
திருவவ தாரந் திருப்பசுவின் பாலகனாய் [ப்]
பருவமுட னீரேகிப் பண்பாய்ப் பிறவுமென்றார்
அந்தவுரை கேட்டு ஆனபுகழ்க் கணக்கர்
சிந்தை மகிழ்ந்து சிவனாரே நல்லதென்று

2533. விந்தைநெறி நீதி - நீதிநெறிகளைஎல்லாம்; விரிவுலகில் தப்பிவிட்டார் - அகன்ற, பரந்த பூமியில் தவறிவிட்டனர்;

2534. அந்திமதிசூடுமரனே - பிறையினைச் சடையில் தரித்தவனே; என வுரைற்றார் < என உரைத்தார் - கணக்கர் இவ்வாறு கலியுகத்தில் நடப்பனவற்றைத் தெரிவித்தார்;

2535. அந்தவுரையை அரனாருந்தான் கேட்டு - நயினார் கூறியவற்றை இறைவனும் கேட்டறிந்தபின்பு; பா.வே. - 'அரனும் உமையும்' (மா.தவ நிலை);

2536. சித்திரபுத்திரரே - நயினாரே; சிந்தைநிறை கணக்கா - என் உள்ளம் நிறைந்த கணக்கரே;

2537. பத்திரமாய் நீர் ஏகி - கவனமாக நீர் சென்று; பண்பாய் - முறையாய்; பிறவுமென்றார் - அவதாரம் செய்க என இறைவன் பணித்தார்;

2538. திருப்பசுவின் - தேவேந்திரனின் பசுபெற்ற; பாலகனாய் - மகனாய்; திருஅவதாரம் - மறு பிறவி; பா.வே. - 'பால்கறமாய்' (மா.தவநிலை);

2539. பருவமுடன் நீரேகி - நீர் சரியான பருவத்தில் பசுவினுள் சென்று; பண்பாய்ப் பிறவுமென்றார் - முறையாகப் பிறந்து நன்மை செய்க என் இறைவன் பணித்தார்;

2540. அந்தவுரை கேட்டு - திருவவதாரஞ்செய்க என இறைவன் பணிக்கவும் அதைக்கேட்டபின்பு; ஆனபுகழ்க் கணக்கர் - கணக்குகளில் வல்லவரான நயினார்;

2541. சிந்தை மகிழ்ந்து - உவகையடைந்து; சிவனாரே - இறைவனே!; நல்லதென்று - அவ்வாறு பிறக்கச் சொன்னது நல்லதே என உடன்பட்டு;

மெத்த மகிழ்ந்து விரையவே தானெழுந்து
பொத்தகமுந் தானெடுத்துப் பூவுலகந் தான்வளர
அண்டந் தழைத்தோங்க யரன்புகழ் தழைக்க
தெண்டிரை யோரேழுஞ் சிறப்பாய்த் தழைத்தோங்க
வெள்ளி வரையுடனே மேருகிரி வளர
தெள்ளிமைசீர் வைகுண்டஞ் செந்தாமரை வளர
தேவர் சபையுஞ் சிறந்தமுனிவோர் சபையும்
யாவர்களு மட்டதிசை யண்டத் திமையோரும்
அஞ்சுகரக் குஞ்சரனு மாறுமுக வேலவரும்
மிஞ்சு யண்டகோடி விரிந்தயீ ரேழுலகும்

2542. மெத்தமகிழ்ந்து - மிகவும் களிப்படைந்து; வீழையவே தானெழுந்து - சீக்கிரமாகப் புறப்பட்டு;

2543. பொத்தகமும் < புத்தகமும் - கணக்கு ஏட்டையும்; தானெடுத்து - தூக்கிக் கொண்டு; பூவுலகந்தான் வளர - உலகத்து உயிர்கள் நன்மைய டைவதற்காக; பி.வே. - 'புத்தகமும்' (மா.தவநிலை);

2545. தெண்டிரை ஓர் ஏழும் - ஏழு கடல்களிலுள்ள உயிர்களும்; சிறப்பாய்த் தழைத்தோங்க - நன்றாய்ச் செழிக்கவும்; பா.வே. - 'ஈரே ழும்' (மா.தவநிலை);

2546. வெள்ளிவரையுடனே - இறைவன் எழுந்தருளியுள்ள கைலாய மலையுடன்; மேருகிரி வளர - வடமேரு மலையும் ஓங்கவும்; பா.வே. - 'வெள்ளிமலையுடனே மேற்புகிரி வாழ்க' (மா.தவநிலை);

2547. தெள்ளிமைசீர் - தெளிவான நீர்நிலை சிறந்த பாற்கடலின்; வைகுண்டம் - திருமாலின் இருப்பிடமான வைகுண்டலோகம்; பா.வே. - 'செந்தாமரை வாழ்க' (மா.தவநிலை);

2548. தேவர்சபையும் - வானவர் உலகும்; சிறந்த முனிவோர் சபையும் - தவவொழுக்கத்தில் சிறந்த ரிஷிகளின் இருப்பிடமும்;

2549. யாவர்களும் - மேலோகத்தினர் அனைவரும்; அட்டதிசை - எண்திசைகளிலுள்ளோரும்; அண்டத்து இமையோரும் - அண்டங்கள் பலவற்றில் வாழும் விழிகள் மூடாத வானவர்களும்; பா.வே. - 'பிரமாண் டமுதல்' (மா.தவநிலை);

2550. அஞ்சுகரக் குஞ்சரனும் - ஐங்கரனான விநாயகனும்; ஆறுமுக வேலவரும் - ஆறு முகங்கள் கொண்ட சுப்பிரமணியக் கடவுளும்;

2551. மிஞ்சு - மீதியுள்ள; அண்டகோடி - பல அண்டங்களும்; விரிந்த ஈரேழுலகும் - விரிந்துபரந்துள்ள மேலும் கீழும் சேர்ந்த பதினான்கு உலகங்களும்;

சூரியனுஞ் சந்திரனுஞ் சொல்லரிய சாத்தாவும்
வீரிய நட்சேற்றிரமு மீறுபுகழ் ராசிகளும்
அட்டகெசஞ் சேடன் யலர்ந்த பலவாண்மை
வட்டமெவை யந்திரமும் வாரம் நிறைந்தபக்கம்
சங்கரியும் லட்சிமியுந் தமிழிற் கலைமகளும்
பொங்கு தெய்வ மங்கையருள் கற்ப்புக்கருந்துதியும்
வேதகலை ஞானம் மிக்காறு சாஷ்த்திரமும்
ஆதர வான யறமும் நெறிதவமும்
பொங்குஞ் சடைமுடியார் புண்ணியனார் தம்மருளால்

2552. சூரியனும் சந்திரனும் - ஞாயிறும் திங்களும்; சொல்லரிய சாத்தாவும் - கூறுவதற்கு அருமையான புகழுடைய அய்யனாரும்;

2553. வீரிய - மிகுந்த ஒளியுடைய; நட்சேற்றிரமும் < நட்சேத்திரமும் - விண்மீன் கூட்டங்களும்; மீறுபுகழ் ராசிகளும் - புகழ் மிகுந்துள்ள 12 கோள்களும்;

2554. அட்டகெசம் - மிகுந்த ஆழமுள்ள எட்டுக் கயங்களும்; சேடன் - மிகுந்தபலமுள்ள ஆதிசேடனும்; அலர்ந்த பலவாண்மை - விரிந்த வீரியுமுள்ள பிற கோள்களும்;

2555. வட்டமெவை அந்திரமும் - அந்தரத்தில், விண்ணில் உள்ள வட்டமான உலகுகளும்; பாரம் நிறைந்த பக்கம் - வேறு மிகுதியான இடங்களும்;

2556. சங்கரியும் - பார்வதியும்; லட்சிமியும் - திருமகளும்; தமிழிற் கலைமகளும் - தமிழ்த் தெய்வமாக விளங்கும் சரசுவதியும்; பா.வே. - 'தங்கும் கலைமாது' (மா.தவநிலை);

2557. பொங்கு தெய்வ மங்கையருள் - மிகுந்த புகழுடைய தெய்வப் பெண்களிலெல்லாம் சிறந்தவளான; கற்ப்புக்கருந்துதியும் - கற்புக்கரசியான அருந்ததி என்பாளும்; பா.வே. - 'பொறப்புக்கு' (மா.தவநிலை);

2558. வேத கலை ஞானம் - நான்கு வேதங்களும், எல்லாக் கலைகளும், பல வகை ஞானங்களும்; மிக்காறு சாஷ்த்திரமும் - பெரிய சாத்திரங்கள் ஆறும்; பா.வே. - 'கலைக்கியானம்' (மா.தவநிலை);

2559. ஆதரவான அறமும் - அவற்றுக்கெல்லாம் உதவுகின்ற தருமமும்; நெறி தவமும் - நல்ல தவ ஒழுக்க முறைகளும்; பா.வே. - 'நெறிநீதிதவம்' (மா.தவநிலை);

2560. பொங்குஞ் சடைமுடியார் - விரிந்த கற்றையான முடியுடைய சிவனாரான; புண்ணியனார் தம்மருளால் - தருமவானான இறைவன் கருணையால்;

எங்குந் தழைக்க யியல்கணக்க ரன்னேரம்

**சித்திரையில் நயினார் பசுவில் பாலகனாய்ப் பிறத்தல்**

சித்துருவ மாகச் சிறந்தகெங்கை யுள்(ப்)புகுந்து
வெத்தி முளரிமலர் மேவி யவதரித்து
தெய்வேந்திரன் பசுவில் சீராக வுள்(ப்)புகுந்து
தெய்வேந்திரன் மகிழத் தேவர் புவிவளர
சித்திரையில் வெய்யோனாட சித்திரை நட்சேத்திரத்தில்
சித்திர புத்திரனார் செங்கமலம் போல்(ப்)பிறந்தார்
தங்கு மதலையெனத் தாரணியிலே பிறந்தார்

**இந்திரனும் இந்திராணியும் நயினாரை வளர்த்தல்**

மங்கை யிந்திராணி மகிழ்ந்தெடுத்து முத்தமிட்டு

2561. எங்கும் தழைக்க - எல்லா இடங்களும் செழிக்க; இயல்கணக்கர் அன்னேரம் - விளங்குகின்ற சித்திரபுத்திர நயினார் அப்பொழுதே;

2562. சித்துருவமாக - தம் உடலைக் குறுக்கிச் சிறு உருவுடன்; சிறந்த கெங்கையுள்(ப்) புகுந்து - புகழ்மிக்க தடாகத்துள் சென்று;

2563. வெத்தி < வெற்றி - சிறப்புடைய; முளரிமலர் மேவி தாமரைமலரில் புகுந்து; அவதரித்து - அதனுள் அமர்ந்து;

2564. தெய்வேந்திரன் பசுவில் - இந்திரனின் பிரியமான பசு ஒன்றின்; சீராக உள்(ப்)புகுந்து - அதன் வாயின் வழியாக எளிதாக வயிற்றுனுள் சென்று தங்கி;

2565. தெய்வேந்திரன் மகிழ - குழந்தை இல்லாது வருந்திய இந்திரன் இப்போது இன்புறவும்; தேவர் புவி வளர - இந்திரன் மகிழ்ந்ததால் இந்திரலோகமே சிறக்கவும்;

2566. சித்திரையில் - தமிழ் ஆண்டின் முதல் மாதமான சித்திரைமாதத்தில்; வெய்யோன் ஆட - கதிரவன் சிறப்பாக விளங்கும் நாளில்; சித்திரை நட்சேத்திரத்தில் - சித்திரை நட்சத்திரம் தோன்றும் சித்திரா பௌர்ணமி தினத்தன்று;

2567. செங்கமலம் போல் சிவந்த - ஒளி மிக்க தாமரைமலர் போன்று; சித்திரபுத்திரனார் - நயினார்; பிறந்தார் - அவதரித்தார்;

2568. தங்கு மதலையென - சிறு குழந்தையாக; தாரணியிலே பிறந்தார் - இந்திரனின் உலகில் தோன்றினார்;

2569. மங்கை இந்திராணி - இந்திரனின் மனைவி; மகிழ்ந்தெடுத்து முத்தமிட்டு - தங்கள் பசு ஈன்ற குழவியாதலால் இன்பமடைந்து அக்குழவியைத் தன் குழந்தையாகப் பாவித்துத் தூக்கிமுத்தம் சொரிந்து;

வள்ளைக் குழயும் வா.. யுஞ் செங்கனிவாய்
பிள்ளைக் கலிதீத்த பிள்ளையென வேந்தி
ஏந்தி மகிழ்ந்து யியல்பாய்த் தண்களபம்
சாந்துகமழ் கொங்கை தனில்நிறையப் பாலமுர்தம்
மைந்தனுக்கு வூட்டி மகிழ்ந்து பிரிசமுற்று
சிந்தை மகிழ்ந்து சிறந்துமிக இந்திராணி
மைந்தன் முகநோக்கி வாகாய்ப் புரந்தரனும்
சிந்தை மகிழ்ந்தான் தேவர்களு மின்பமுற்று

**சித்திரபுத்திரருக்கு அலங்காரம் செய்தல்**

பாலகனை யிந்திராணி பாங்காகவே யேந்தி
சீலமிகுந் தோங்குஞ் சிறந்தமஞ்ச னீராட்டி

2570. வள்ளைக் குழயும் ( < குழையும்) - வள்ளைக் கொடியில் தோன்றிய இளம் தளிர் போன்றும்; ....செங்கனிவாய் - சிவந்த கனி போன்ற இதழும் கொண்டு விளங்கி; பா.வே. - 'வள்ளக்குள்ளணையும்' (மா.தவநிலை);

2571. பிள்ளைக்கலி தீத்த ( < தீர்த்த) - பிள்ளையில்லாத குறையினைப் போக்குவதற்காகப் பிறந்த; பிள்ளை என ஏந்தி - குழந்தை எனத் தூக்கி;

2572. ஏந்தி - எடுத்து; மகிழ்ந்து - இன்பமுற்று; இயல்பாய் -சிறப்பாக; தண்களபம் - குளிர்ச்சியான சாந்துக் குழம்பு பூசிய;

2573. சாந்துகமழ் கொங்கைதனில் - தன்னுடைய மணக்கும் மார்பகத்திலூறிய; நிறையப் பாலமுர்தம் - மிகுந்த தாய்ப்பாலை;

2574. மைந்தனுக்கு ஊட்டி - குழந்தைக்குக் கொடுத்து; மகிழ்ந்து பிரிசமுற்று - களிப்புற்றுக் குழந்தைமேல் மேலும் மேலும் ஆசைவைத்து; (பிரிசம் < பிரியம்);

2575. சிறந்து மிக இந்திராணி - புகழ்மிக்க இந்திராணியானவளும்; சிந்தை மகிழ்ந்து - உள்ளம் உவந்தாள்;

2576. புரந்தரனும் - அவள் கணவன் இந்திரனும்; வாகாய் -சிறப்பாக; மைந்தன் முகநோக்கி - புத்திரனின் அழகிய மெல்லிய கனிந்த முகத்தைப் பார்த்து;

2577. சிந்தை மகிழ்ந்தான் - உள்ளத்தில் உவகையுற்றான்; தேவர்களும் இன்பமுற்று - பிற வானவர்களும் அதைப்பார்த்து மகிழ்ந்தனர்;

2578. பாலகனை - புத்திரனை; இந்திராணி; பாங்காகவேயேந்தி -பக்குவமாக எடுத்து;

2579. சீலமிகுந்து ஓங்கும் - பெருமைமிகுந்து விளங்கும்; சிறந்த

சிந்தூரந் தீட்டித் திருவரைஞாண் தான்பூட்டி
நந்தூர வெண்டரளம் நற்சரங்கள் தானணிந்து
பொன்னின் சதங்கை புலம்ப மணிச்சிலம்பு
மின்னுகின்ற காப்பும் விரிபாத மீதணிந்து
வச்சிரத்தின் சுட்டிகட்டி மாணிக்கக் கொற்றணிந்து
வச்சிரத்தின் தங்கம் வழங்கும் கடுக்கனிட்டு
செங்கமலக் கையில்(ச்) சிறந்தபுகழ்த் தங்கவளை
தங்கு விரலில் தகமைநிறை மோதிரமும்
இந்தக் குழவியென யீசுபரனு மீசுபரியும்

மஞ்சள் நீராட்டி - நல்லவகையில் புத்திரனைக் குளிப்பாட்டி; பா.வே. - 'மஞ்சனம் மாட்டி' (மா.தவநிலை);

2580. சிந்தூரம் தீட்டி - நெற்றியில் குங்குமப் பொட்டிட்டு; திரு அரைஞாண் தான் பூட்டி - அரையிலே தங்கக் கொடியை அணிவித்து; பி.வே. - 'செந்தூரம்' (மா.தவநிலை);

2581. நந்தூர வெண்டரளம் - சங்காலும் வெண்முத்தாலுமான; நற்சரங்கள் தானணிந்து - நல்ல மாலைகளைக் குழந்தைக்கு அணிவித்து; பா.வே. - 'நல்லதொரு வெண்டாள நல்ல' (மா.தவநிலை);

2582. பொன்னின் சதங்கை புலம்ப - தங்கத்தாலான காற்சலங்கை 'கணீர் கணீர்' என ஆர்ப்ப; மணிச் சிலம்பு - மணிகள் இடப்பட்ட காற்சிலம்புகளும்;

2583. மின்னுகின்ற காப்பு - ஒளிவீசக்கூடிய காப்புகளை; விரிபாத மீது அணிந்து - நன்றாக விரிந்து அழகு நிரம்பிய காலில் அணிவித்து;

2584. வச்சிரத்தின் - வயிரத்தினால்; சுட்டி கட்டி - நெற்றியில் இடும் சுட்டியை அணிந்து; மாணிக்கக் கொற்றணிந்து (< கொத்து) - மாணிக்கத் தால் கொத்தான மாலை அணிவித்து; பா.வே. - 'வச்சிரற்றினம் கட்டி' (மா.தவநிலை);

2585. வச்சிரத்தின் தங்கம் வழங்கும் கடுக்கனிட்டு - தங்கத்துள் வைத்த வயிரக்கடுக்கனைக் காதுகளில் அணிவித்து;

2586. செங்கமலக் கையில் - சிவந்த தாமரை போன்ற அழகுள்ள கைகளில்; சிறந்த புகழ்த் தங்கவளை - தங்கத்தாலாகிய சிறப்புமிக்க வளையல்களை இட்டு; பா.வே. - 'சிறந்தரறறின செயன்யணிந்து' (மா.தவநிலை);

2587. தங்குவிரலில் - விளங்கக் கூடிய கைவிரல்களில்; தகமைநிறை மோதிரமும் - சிறப்புமிக்கக் கணையாழிகளும் இட்டு;

2588. இந்தக் குழவியென - இங்கு வந்து பிறந்த இந்தக் குழந்தையை.

சிந்தை மகிழ்ந் ... வினா ரெனவே

**சித்திரபுத்திரர் வளர்தல்**

கோதானம் பூதானம் கூறும் பலதானம்
மீதானந் தான மிகுந்து திரளாயிருந்து
இந்திராணி தானு மியல்வு புரந்தரனும்
தந்திரஞ்சீர்ப் பாலகனைத் தான்வளத்தான் னாளில்
தங்கத்தொட்டி லாட்டுந் தாதியர்க ளாயிரம்பேர்
மங்கையர்க ளாயிரம்பேர் வாகாய்ப் புனலாட்ட
இந்தப்படி செவ்வா யியல்கணக்கர் தான்வளந்தார்
சங்கரனார் தன்மகனைத் தகமையுடன் வளத்தார்

ஈசுபரனும் ஈசுபரியும் - இறைவனும் பார்வதியும்; பா.வே. - 'இந்தக் குழவிதன்னை' (மா.தவநிலை);

*2589.* சிந்தைமகிழ்ந்...வினாரெனவே - உள்ளன்புடன் வரச் செய்து பிறக்கச் செய்துள்ளனர் என்று எண்ணி; பா.வே. - 'சிந்தைமகிழ்' (மா.தவநிலை);

*2590.* கோதானம் - பசுமாடுகளைத் தானமாக வழங்கியும்; பூதானம் - நிலங்களை வழங்கியும்; கூறும் பலதானம் - வேறும் உள்ள பல தானங்களைச் செய்தும்; பி.வே. - 'பூமிதானம்' (மா.தவநிலை);

*2591.* மீதானந்தானம் மிகுந்து - மேலும் மேலும் மகிழ்ச்சி பொங்கி; திரளாயிருந்து - எல்லோருமாகச் சேர்ந்து இன்புற்று;

*2592.* இந்திராணி தானும் இயல்பு புரந்தரனும் - இந்திராணியும் இந்திரனும்;

*2593.* தந்திரஞ்சீர் பாலகனை - சித்திரபுத்திரனை; தான் வளத்தான்நாளில் - அப்பொழுது நன்றாக (வளத்தான் < வளர்த்தான்) ஆளாக்கினான்;

*2594.* தங்கத் தொட்டிலாட்டும் தாதியர்கள் - புத்திரனைப் பொன்னாலான தொட்டிலில் இட்டு ஊஞ்சலாட்டும் பணிப்பெண்கள்; ஆயிரம்பேர் - ஆயிரம் எண்ணிக்கையினர்;

*2595.* வாகாய்ப் புனலாட்ட - அக்குழந்தையைக் குளிப்பாட்டுபவர்கள்; மங்கையர்கள் ஆயிரம்பேர் - ஆயிரம் பெண்கள் ஆவர்;

*2596.* இந்தப்படி - இவ்வாறு; செவ்வாய் - செம்மையாக; இயல்கணக்கர் - சித்திரபுத்திர நயினார்; தான் வளந்தார் ( < வளர்ந்தார்) - ஆளாகிவந்தார்;

*2597.* சங்கரனார் தன் மகனை - சித்திரபுத்திரனை; தகமையுடன் வளத்தார் ( < வளர்த்தார்) - சிறப்பாக வளர்த்து வந்தனர்;

### சித்திர புத்திரர் வளர்ந்து பருவம் எய்துதல்

எங்கணக்கர் ... விதி கணக்கர்
ஆன புவன மடங்கு கணக்கர்
வானமண்டங் கொன்றை மறலியுடன் கணக்கர்
வேலோன் கணக்கர் விரிந்த புவனமெங்கும்
பூலோக மெங்கும் புவனம்நிறை கணக்கர்
தள்ளி நடையிட்டுத் தவழ்ந்து விளையாடி
தெள்ளியசீர் தங்கஞ் சிறந்த புகழாகி
கோல வயசு குவிந்து மிகுந்ததற்பின்
வால வயசு வளர்ந்து மிகுந்ததற்பின்

2598. எங்கணக்கர் ...விதிகணக்கர் - உயிர்களின் பாவபுண்ணிய கணக்குகளை எழுதுபவரான சித்திரபுத்திரர்; பா.வே. - 'எங்கும் கணக்கர் இயல்பாய் விதிகணக்கர்' (மா.தவநிலை);

2599. ஆன புவன மடங்கு கணக்கர் - விளங்குகின்ற உலகுகள் எல்லாவற்றுக்கும் கணக்கராக விளங்குகின்ற அவர்;

2600. வானம் அண்டம் கொன்றை மறலியுடன் - வானத்திலுள்ளவர்களுக்கும், பிற அண்டங்களிலுள்ளவர்களுக்கும், கொன்றை சூடுபவனான இறைவனுக்கும், எமனுக்கும்; கணக்கர் - அவ்வவர்கள் விதியை எழுதுகின்ற சித்திரபுத்திரனார்;

2601. வேலோன் கணக்கர் - கையில் வேலாயுதம் தாங்கியுள்ள முருகக் கடவுளுக்கும் கணக்கர் அவர்தான்; விரிந்தபுவனமெங்கும் - பரந்துபட்ட உலகம் முழுவதற்கும்;

2602. பூலோக மெங்கும் - பூமியிலுள்ள உலகங்களுக்கெல்லாம்; புவனம் நிறைகணக்கர் - நிறைந்துள்ள புவனங்களுக்கெல்லாம் ஒரே கணக்கர் அவர்தான்;

2603. தள்ளி நடையிட்டு - அப்படியானவர் அவதாரம் செய்ததால் குழந்தையாகப் பிறந்து பின்பு தத்தி நடைபயின்று; தவழ்ந்து விளையாடி - கைகளையும் கால்களையும் தரையில் ஊன்றித் தவழ்ந்து களித்து, மகிழ்ந்து;

2604. தெள்ளிய சீர் தங்கம் - சிறந்த பொன்போன்று; சிறந்த புகழாகி - பெருமை சிறந்து;

2605. கோலவயசு ( < வயது) - அ ான பருவம்; குவிந்து மிகுந்ததற்பின் - உருவாகிய பின்பு;

2606. வாலவயது ( < வயது) - இள ாமப் பருவம்; வளர்ந்து மிகுந்ததற்பின் - வந்து சேர்ந்தபின்பு;

## சித்திர புத்திரர் பெற்றோரிடம் விடைபெறுதல்

அண்ட புவன மடங்க லெவையேகி
மண்டலங்க ளட்டதிசை வாகு கணக்கெழுத
இந்திரனைப் பாற்று யியல்வுமிகு கணக்கர்
தந்திரமாய் யெங்குந் தகமைக் கணக்கெழுத
செல்லநான் வேணுமென்றார் தெய்வேந்திரன் மகிழ்ந்து
வல்லபுக ழிந்திராணி மாது மனமகிழ்ந்து
தங்குபுகழ் புற்பரதந் தானேறி யேகுமென்றார்
பொங்குபுகழ்ப் புண்ணியனும் பொன்னின் ரதமேறி
பொத்தகமுங் கையுமாகிப் பொன்னி
னெழுத்தாணியுடன்

2607. அண்டபுவன மடங்கல் எவை - அனைத்து உலகங்களுக்கெல் லாம்; ஏகி - அடைந்து;

2608. மண்டலங்கள் - அனைத்துக் கோளங்களிலும்; அட்டதிசை - எண் திசைகளிலும்; வாகுகணக்கெழுத முறையாக உயிரினங்களின் ஜனன-மரண, பாவ-புண்ணிய கணக்குகளைக் குறிக்க;

2609. இந்திரனைப் பாற்று (< பார்த்து) - தேவேந்திரனிடம்; இயல்வு மிகுகணக்கர் - நற்குணம் நிரம்பிய சித்திரபுத்திரனார்;

2610. தந்திரமாய் எங்கும் தகமைக் கணக்கெழுத - எல்லா விடங்களி லும் கவனமாகச் சென்று அவரவர்களின் விதியை அவர்கள் அறியாவகை யில் எழுதுவதற்குரிய பணிக்கு;

2611. செல்லநான் வேணுமென்றார் - நான் போகவேண்டும் எனத் தந்தை இந்திரனிடம் கூறினார்; தெய்வேந்திரன் மகிழ்ந்து - இந்திரனும் உவந்து;

2612. வல்லபுகழ் இந்திராணிமாது - வளர்த்த தாயான இந்திராணி யும்; மனமகிழ்ந்து - மகன் செல்லவிருப்பதை அறிந்து சந்தோசமடைந்து;

2613. தங்குபுகழ் - புகழ்நிறைந்த; புற்பரதம் < புட்பரதம் < புஷ்பரதம் - பூக்களால் அலங்கரிக்கப்பெற்ற பூந்தேரில்; தானேறி - ஏறி அமர்ந்து; யேகுமென்றார் - செல்க என்று கூறினாள்; பா.வே. - 'புஸ்பத்தேர்யேறி' (மா.தவநிலை);

2614. பொங்கு புகழ்ப் புண்ணியனும் - நேர்மையானவன் எனப் புகழ் பெற்ற சித்திரபுத்திரரும்; பொன்னின் ரதமேறி - பெற்றோரில் அமர்ந்து சென்று;

2615. பொத்தகமும் < புத்தகமும் - கணக்கு ஏட்டை; கையுமாகி - கையிலே ஏந்தி; பொன்னின் எழுத்தாணியுடன் - தங்க எழுத்தாணியைக்

சித்த மகிழ்ந்தோங்குஞ் சித்திர புத்திரரும்
தவமாங் கண ...... யறிய

**சித்திர புத்திரர் கணக்கு எழுதி உரையாற்றுதல்**

சிவகணங்கள் தன்னைச் சிறப்பாய் வரவழைத்தார்
பாவக் கணக்கின்விதம் பாங்கா யறிவதற்கு[க்]
கோபநிறை காலகணங்கள் கொள்கையுட னழைத்தார்
தங்கு புகழேவல் தகமைக் கணக்கரையும்
எங்குங் கணக்க ரியல்பாகவே யழைக்க
ஆறாயிரங் கோடி யான கணக்கர்களும்
நூறாயிரங் கோடி நுண்மைவலு கிங்கிலியர்
பதினாயிரம் கோடி... மீசர் கெணம்

கையில் ஏந்தி; பா.வே. - 'ஏடும் யெழுத்தாணியுமாய்' (மா.தவநிலை);

2616. சித்த மகிழ்ந்தோங்கும் - உள்ளத்தில் உவகை மிகுந்து செல்லும்; சித்திரபுத்திரரும் - நயினாரும்;

2617. தவமாங்கண... யறிய - மேன்மை பொருந்திய கணக்குகளை அறிந்துகொள்வதற்காக; பா.வே. - 'தவமும் நிரையும் தரும நெறியழ காய்' (மா.தவநிலை);

2618. சிவகணங்கள் தன்னை - சிவனுக்குரிய ஏவலர்களை; சிறப்பாய் வரவழைத்தார் - வருமாறு அழைத்தார்;

2619. பாவக்கணக்கின் வீதம் - தீவினைகளின் விபரங்களை; பாங் காய் அறிவதற்கு - முறையாக அறிந்து கொள்வதற்கு;

2620. கோபநிறை - மிகுந்த சினமுடைய; கால கணங்கள் - எமகிங்கிரரை; கொள்கையுடன் அழைத்தார் - முறையாகக் கூப்பிட்டார்;

2621. தங்குபுகழ் ஏவல் தகமைக் கணக்கரையும் - புகழ் தங்குகின்ற துணைக் கணக்கர்களையும்;

2622. எங்கும் கணக்கர் - வேறு இடங்களிலுள்ள சிறப்புடைய எழுத்தர்களையும்; இயல்பாகவே அழைக்க - முறையாகக் கூப்பிடவும்;

2623. ஆறாயிரம் கோடியான - பெரிய அளவிலான; கணக்கர்களும் - எழுத்தர்களும்;

2624. நூறாயிரங்கோடி - பெரிய அளவிலான; நுண்மைவலு கணக்கர் - சிறந்த திறமையுடைய எழுத்தர்கள்;

2625. பதினாயிரம் கோடி - பெரிய அளவிலான;... மீசர் கெணம் ( < கணம்) இறைவனின் ஏவலர்கள்; பா.வே. - 'பத்து லட்சம் நீசக்கணக்கர்' (மா.தவநிலை);

இதினாலு கோடி .. படகெணமும்
வந்து தெண்டனிட்டு .. வாகுமிகு கணக்கர்
சிந்தை மகிழ்ந்து சித்திர புத்திரனாரும்
பொன்னின் ரதமேறிப் போனார் புவனமண்டம்
கன்னல் சிறந்த கருணை யெனவேகி
அண்டம் புவன மடங்கலுமே சென்றணுகி
மண்டலங்கள் தன்னில் வகுத்தார் நிறைசாதி
நீதி தவம்வகுத்து நீண்டகணந் தான்வகுத்து
சாதி வகுத்தார் தருமகலை நாள்வகுத்தார்
தன்மக் கணக்கெழுதிச் சங்கரனார் தூதர்கைய்யில்

2626. இதினாலு கோடி... படகெணமும் - நாலு கோடிப் பேய்களும் மேலும் பூதப்படைகளும்; (படகெணம் < படைகணம்);

2627. வந்து தெண்டனிட்டு -சித்திரபுத்திரர் அழைத்ததனால் அவரிடம் அடைந்து பணிந்து வணங்கி; வாகுமிகு கணக்கர் - நீதியுள்ள சித்திரபுத்திரரும்;

2628. சிந்தை மகிழ்ந்து சித்திரபுத்திரனாரும் - நயினார் உள்ளம் களித்து;

2629. பொன்னின் ரதமேறி - பொற்றேரில் ஏறிஅமர்ந்து; போனார் புவனமண்டம் - உலகு பலவற்றுக்கும் அண்டங்களுக்கும் சென்றார்;

2630. கன்னல் சிறந்த - மிகவும் இனிமையான; கருணை எனவேகி - அறச்செயல் எனச்சென்று;

2631. அண்டம் புவனம் அடங்கலுமே - அண்டங்களும் உலகங்களும் ஆகிய எல்லாவிடமும்; சென்றணுகி - சென்று சேர்ந்து;

2632. மண்டலங்கள் தன்னில் - எல்லா உலகங்களிலும்; வகுத்தார் நிறைசாதி - பல இனங்களாக, வகையாகப் பகுத்தார்; பா.வே. - 'மண்டலங்கள் தரணியில்' (மா.தவநிலை);

2633. நீதிதவம் வகுத்து - தருமத்தையும், ஒழுக்கத்தையம் எற்படுத்தி; நீண்ட கணம் தான் வகுத்து - நீளமான கால நுட்பங்களைப் பகுத்து;

2634. சாதி வகுத்தார் - குலங்களைப் பகுத்தார்; தருமகலைநாள் வகுத்தார் - அறத்தையும், கலைகளையும் தினங்களையும் பலவாறாகப் பகுத்தார்;

2635. தன்மக் கணக்கெழுதி - நீதி தவறாதவாறு உயிர்களின் பாவ-புண்ணிய, ஜனன-மரண பலாபலன்களை எழுதி; சங்கரனார் தூதர் கைய்யில் - இறைவனின் ஏவலர் கையில்;

தன்மமுடன் கொடுத்தார் தார்கணக்கர் தன்கையிலே
கன்மக் கணக்கெழுதிக் கவலையுடன் தூதர்கைய்யில்
வன்மமுடன் கொடுத்தார் வாழ்கணக்கர் தன்கணக்கர்
இருவர் கணக்கு மியல்பாகவே யெழுதி
2640 தரும நடுக்கணக்கர் தாமிருவர் கைக்கொடுத்தார்
என்கணக்கி லுள்ளபடி எள்ளளவுந் தப்பாமல்
பன்கணக்காய் நீங்கள் பதைபழிகள் செய்யாமல்
தரும நடுவாகத் தாரணியி லாராய்ந்து
பொறுமை நெறியோடு போயறிந்து வாருமென்று

*2636. தார்கணக்கர் தன் கையிலே - கூட்டமாக வந்துள்ள கணக்கர்களிடம்; தன்மமுடன் கொடுத்தார் - நல்லவர்கள் பற்றி நீதியுடன் கூடிய மொத்த கணக்கையும் அளித்தார்;*

*2637. கன்மக் கணக்கெழுதி - கொடியவர்கள் பற்றித் தீய கணக்குகளை எழுதி; கவலையுடன் தூதர் கைய்யில் - இறைவனின் ஏவலரிடம் வருத்தத்துடன் அளித்தார்;*

*2638. வன்மமுடன் - மனத்தில் உறுதியுடன்; வாழ்கணக்கர் தன் கணக்கர் - மிகுதியான புகழ் வளரக் கூடிய நயினார்; கொடுத்தார் - அளித்தார்; பா.வே. - 'வண்மையுடன் கொடுத்தார்' (மா.தவநிலை);*

*2639. இருவர் கணக்கும் - நல்லவர் அல்லாதவர் எனும் இரு சாரார்களின், முறையே நல்லவற்றையும் தீயவற்றையும்; (சிவன்-பார்வதி எனும் இருவர் கணக்கு எனவும் கூறலாம்); இயல்பாகவே எழுதி - உள்ளதை உள்ளபடி அமைத்து;*

*2640. தரும நடுக்கணக்கர் - நீதியுடன் எல்லோருக்கும் பொதுவான கணக்கர்; தாமிருவர் கைக்கொடுத்தார் - சிவன்பார்வதி என்போர் கைகளில் கணக்கு ஏட்டை அளித்தார்;*

*2641. என் கணக்கிலுள்ளபடி - எனது கணக்கு ஏட்டில் குறித்துள்ளவாறு; எள்ளளவும் தப்பாமல் - சிறிதளவும் தவறாது;*

*2642. பன் கணக்காய் நீங்கள் - பல கணக்குகளாய் நீங்கள் அதைஆக்காது; பதைபழிகள் செய்யாமல் - அஞ்சத் தக்க எதுவும் செய்யாது;*

*2643. தரும நடுவாக - நீதியே எதற்கும் மையமாக அமையுமாறு; தாரணியில் ஆராய்ந்து - இப்பூமியிலுள்ளவற்றை நன்கு தேர்ந்து;*

*2644. பொறுமை நெறியோடு - எல்லாவகையானவர்களுடனும் ஒரே போன்றும் சகிப்புத்தன்மையோடும் நடந்து; போயறிந்து வாருமென்று - அவர்களிடம் சென்று அவர்கள் பண்பை அறிந்து வருக என;*

வ ..... வகுப்பாய்
வீரம் பலவுயிரை வித்தாரமா யழையும்
அந்த வுரையி லரனார் சிவதூதர்
சிந்தை மகிழ்ந்தார் சிறந்த யிமகிணங்கள்
நன்றென்று சொல்லி நளின மகிட்சியுற்றார்
அன்று மிகுத்தா ரானவகுப்பு ரண்டாய்
சிந்தை மகிழ்ந்தோங்குஞ் சித்திர புத்திரரும்
அந்திமதி சூடு மருளிலிவை வகுத்து
வள்ளு வனையே முரசிற் பறைசாத்திடென்றார்

**சித்திர புத்திரனார் தன் பெற்றோரிடம் கூடி இருத்தல்**

தெள்ளு முரசிற் ... பறைசாத்தி

*2645.* வ... வகுப்பாய் - வகையாக; பா.வே. - 'வாரும் யிருபேரும் வகுத்து யிருவகுப்பாய்' (மா.தவநிலை);

*2646.* வீரம் பலவுயிரை - பலமுள்ள பல சீவன்களை; வித்தாரமாய் - விரிவாக ஆராய்ந்து இங்கு அழைத்துக் கொள்க; பா.வே. - 'வீறாய் நீர்யழையும்மென்றார்' (மா.தவநிலை);

*2647.* அந்தஉரையில் - சிந்திரபுத்திரனார் ஆற்றிய அறிவுரையைக் கேட்டு; அரனார் சிவதூதர் - இறைவனின் ஏவலர்கள்;

*2648.* சிறந்த யிமகிணங்கள் ( < எம கணங்கள்) - இறைவனின் நல்ல தூதர்கள்; சிந்தை மகிழ்ந்தார் - உவகை அடைந்தனர்; பா.வே. - 'சிரித்தாரேயெமகணக்கனார்' (மா.தவநிலை);

*2649.* நன்றென்று சொல்லி - நயினார் கூறிய அறிவுரை தங்களுக்கு நல்லதே எனக் கூறி; நளின மகிட்சியுற்றார் - தாமரை போன்று தங்கள் முகங்கள் மலர்ந்து இன்பமுற்றனர்;

*2650-2651.* சிந்தை மகிழ்ந்தோங்கும் சித்திரபுத்திரரும் - தூதர் கூறிய தைக் கேட்டு மகிழ்ந்த நயினாரும்; ஆன வகுப்பு ரண்டாய்( < இரண் டாய்) - இரு பிரிவுகளாக; அன்று மிகுத்தார் - அப்போது ஏற்படுத்தினார்;

*2652.* அந்திமதிசூடும் அருளில் - பிறைச் சந்திரனைச் சடையில் தரித்த சிவனாரின் அன்பால்; இவை வகுத்து - மேலேயுள்ள கணக்குகளையும் பகுப்புகளையும் நயினார் பிரித்து; பா.வே. - 'அரனார் திருவகுப்பில்' (மா.தவநிலை);

*2653.* வள்ளுவனையே முரசில் பறைசாத்திடென்றார் - யானை மீதமர்ந்து முரசறைந்து நாடெங்கும் கூறும் வள்ளுவனை வரவழைத்து மேற்சொன்ன நியதிகளைக் கூறுமாறு ஆணையிட்டார்;

*2654.* தெள்ளு முரசிற்பறைசாத்தி - மேற்கூறியவற்றைத் தெளிவாக எங்கும் முரசடித்துக் கூறுமாறு(சாத்தி < சாற்றி);

2655 இந்தக் கணக்கு யியல்வா யெழுதியபின்
சிந்தை மகிழ்ந்து சித்திர புத்திரனாரும்
இந்திரனார் தன்மனையி லேகி மகிழ்ச்சிபொங்கி
வந்த மைந்தன்றன்னை மகிழ்ந்தா ரிருவர்களும்
பாலுடனே சக்கரையும் பாங்காகவே யருந்தி
2660 சீலமுட னமுதுஞ் சிறந்த யிலையருந்தி

**சித்திரபுத்திரர் இறைவனிடம் சென்று இனிதிருத்தல்**

அந்திமதி சூடு மரனாரிடம் போக[ச்]
சந்தோசமா யெழுந்தார் தன்ம நெறிக்கணக்கர்
அற்புதமாந் தங்க மழகு விதானமிட்டு
புற்பரத மேறிப் போயினார் வெள்ளிவரை

2655. இந்தக் கணக்கு - பாவ-புண்ணிய கணக்குகளை; இயல்வாய் எழுதியபின் - தம் ஏட்டில் குறித்த பின்பு;

2656. சித்திரபுத்திரனாரும் - நயினாரும்; சிந்தை மகிழ்ந்து - களிப்புற்று;

2657. இந்திரனார் மனையில் ஏகி - தன் பெற்றோரிடம் சென்று; மகிழ்ச்சி பொங்கி - அவர்களுடன் கூடி மகிழ்ந்தார்;

2658. வந்த மைந்தன்றன்னை - தங்களிடம் வந்து சேர்ந்த புத்திரனைக் கண்டு; மகிழ்ந்தார் இருவர்களும் - இந்திரனும் இந்திராணியும் மகிழ்ச்சியடைந்தனர்;

2659. பாலுடனே சக்கரையும் பாங்காகவே அருந்தி - புத்திரனுக்குப் பாலும் சர்க்கரையும் அளித்து நன்றாக அருந்தச் செய்து;

2660. சீலமுடன் அமுதும் - நல்ல உணவும் உண்டு; சிறந்த இலை அருந்தி - அதன்பின் வெற்றிலையும் தின்று மகிழ்ந்து; பா.வே. - 'வெள்ளிலையும் சிறந்த அடைக்காய்யருந்தி' (மா.தவநிலை);

2661. அந்திமதிசூடும் அரனாரிடம் போக - பிறைசூடியான இறைவனிடம் செல்வதற்கு;

2662. தன்மநெறிக் கணக்கர் - கணக்கினை நீதியுடன் எழுதுபவரான நயினார்; சந்தோசமா எழுந்தார் - மகிழ்ச்சியுடன் பெற்றோர்களிடம் விடைபெற்றுப் புறப்பட்டார்;

2663. அற்புதமாம் தங்க அழகு விதானம் இட்டு - தங்கத்தால் அழகான, விந்தையான விதானங்கள் இட்டு அலங்கரித்து;

2664. புற்பரதம் ஏறி - புஷ்பத்தேரில் ஏறி அமர்ந்து; போயினார் வெள்ளிவரை - இறைவன் எழுந்தருளியுள்ள இடமான கையிலாயம

சிந்தை மகிழ்ந்து சிவனாரை யடிதொழுதார்
வந்த கணக்கர்தம்மை மகாதேவர்தான் மகிழ்ந்து
கந்த மிகுந்த கணக்கை யுரையுமென்றார்
அந்த நிறையாக அக்கணக்கைத் தானுரைத்து
வாலமதி சூடு மகாதேவர்தான் மகிழ்ந்து

**வாழ்க வாழ்க**

சீலமிகு தன்மஞ் சிவபூசை வாழியதே

**விருத்தம்**

சீர்சிவ பூசை யாலே
சிவனார் லிங்க மாகி
பார்தவம் ... நிறைந்து
பலவித மகிழ்ட்சி பொங்கி

லைக்கு எழுந்தருளினார்; பா.வே. - 'புஸ்ப்பத் தேர்யேறி' (மா.தவநிலை);

2665. சிந்தை மகிழ்ந்து - உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கி; சிவனாரை அடிதொழுதார் - இறைவனைப் பணிந்து வணங்கினார்;

2666. வந்த கணக்கர்தம்மை - தம்மிடம் வந்த சித்திரபுத்திரனாரைப் பார்த்து; மகாதேவர்தான் மகிழ்ந்து - இறைவன் சந்தோசமடைந்தார்;

2667. கந்தமிகுந்த - புகழ்மிக்க; கணக்கை உரையுமென்றார் சித்திரபுத்திரனாரிடம் அவர் எழுதியவற்றைக் கூறுமாறு சொன்னார்;

2668. அந்த நிறையாக - முதலிருந்து முடிவுவரை; அக்கணககைத் தானுரைத்து - தாம் எழுதிய கணக்குகளை நயினார் இறைவனிடம் எடுத்துக் கூறினார்; பா.வே. - 'அந்தம் நிரைக் கணக்கையும்' (மா.தவ நிலை);

2669. வாலமதிசூடும் - இளம் சந்திரனைச் சடையில் அணியும்; மகாதேவர் தான் மகிழ்ந்து - இறைவன் சந்தோசமடைந்தார்; பி.வே. - 'வாலைமதி' (மா.தவநிலை);

2670. சீலமிகு தன்மம் ( < தர்மம்) - நல்லொழுக்கமுடன் கூடிய தருமமும்; சிவபூசை - இறைவனை வழிபட்டுப் போற்றுதலும்; வாழி யதே - என்றென்றும் நிலைப்பதாக;

வி. 78. சீர்சிவ பூசையாலே - மார்க்கண்டேயனின் சிறப்பமைந்த சிவ வழிபாட்டின் காரணமாக; சிவனார் லிங்கமாகி - இறைவன் இலங்கத்துள் எழுந்தருளினார்; பார்தவம் நிறைந்து - அதனால் பூமி எங்கும் தவவொழுக்கம் மிகுந்தது; பலவிதமகிழ்ட்சி பொங்கி - பல்

........................

.........ணி யிவையு மோங்க
தார்புக ழீவு மின்பத்
தருமமு பொறுமை வாழி

**நடை**

பூவில் மார்க்கண்டன் புனித சிவபூசைதவம்
நாவி லுரைப்போர்க்கும் நளினமுடன் கேட்போர்க்கும்
தங்குமே தன்மந் தவமுமிது வலுவாய்
பொங்கு நிறைசெல்வம் புனிதமாய் வாழியதே
2675 பரமேசுபரன் வாழி பார்பதியும் வாழியதே
அரனடியார் வையகத்தி லனைபேரும் வாழியதே
இந்தக் கதையை யியல்வுடனே கேட்டவர்க்கும்

வேறு உயிரினங்களும் மகிழ்ந்தன;...ணியிவையும் ஓங்க - மற்ற நன்மைகளும் பெருகின; தார்புகழீவும் இன்ப - தொடர்ந்து வரும் மகிழ்ச்சியும்; தருமமும் - நீதியும்; பொறுமை - பொறுமையும்; வாழி - வாழ்வதாக;

2671. பூவில் - பூமியில்; மார்க்கண்டன்; புனித சிவபூசை தவம் - பக்தியுடனும் ஒழுக்கத்துடனும் செய்து பெற்ற வரத்தைக் கூறும் இக்கதையினை;

2672. நாவில் உரைப்போர்க்கும் - பிறரும் நன்மை அடையுமாறு எடுத்துப்பாடுவோர்க்கும், பேசுவோர்க்கும்; நளினமுடன் கேட்போர்க்கும் - மிகுந்த பக்தியுடனும் பக்குவத்துடனும் கேட்டு அறிந்து அனுபவித்தவர்களுக்கும்;

2673. தன்மமும் ( < தர்மமும்) தவமும் இது - நீதியும் பக்தியும் எனும் இவை; வலுவாய் - மிகச் சிறப்பாக; தங்குமே - வந்தடைந்து எப்போதும் அவர்களிடத்தே நிறைந்திருக்கும்;

2674. பொங்கு நிறைசெல்வம் - அப்படியானவர்களிடம் மிகுந்து வந்துசேரும் அருட்செல்வமும் பொருள் செல்வமும்; புனிதமாய் வாழியதே - நன்றாக வாழ்வதாக;

2675. பரமேசுபரன் வாழி - இறைவன் புகழ் நீடூழி வாழ்வதாக; பார்பதியும் வாழியதே - இறைவனிடப்பாகத்தே விளங்கும் தேவியின் புகழ் நீடூழி வாழ்வதாக;

2676. அரனடியார் - சிவபக்தர்கள்; வையகத்தில் - இந்த உலகத்தில்; அனைபேரும் - எல்லோரும்; வாழியதே - வாழ்வதாக;

2677. இந்தக் கதையை - மார்க்கண்டேயன் தவம், எமன் வரலாறு, நயினார் அவதாரம் என்பவற்றைக் கூறும் இக்கதைப் பாட்டை; இயல்வு

சிந்தை .... சிவன் செயல்தான்
பாலன் தனக்குப் பரனார் சொன்னபடி
2680 சீலமிகு சொக்கஞ் சிறந்துநிறை வாழியதே
வாழி தமிழ்வாழி மானில மெல்லாம்வாழி
2682 வாழி தரும மதியுடையோர் தான்வாழி

★ ★ ★

டனே கேட்டவர்க்கும் - நற்குணத்தோடு பொறுமையுடன் கேட்டுப் பயனடைந்தவர்களுக்கும்;

2678. சிந்தை.... சிவன் செயல்தான் - இறைவன் கருணை வந்தடைவ தாக;

2679. பாலன் தனக்கு - மார்க்கண்டேயனுக்கு; பரனார் சொன்னபடி - இறைவன் வரம் தந்து சிரஞ்சீவி நிலை அருளியவாறு;

2680. சீலமிகு - நன்மை மிகுந்துள்ள; சொக்கம் < சொர்க்கம் - சிவலோகம்; சிறந்து நிறைவாழியதே - நன்றாகக் கிடைத்து அவர்கள் வாழ்வதாக;

2681. வாழி தமிழ் வாழி - இக்கதைப்பாடல் பாடப்பெற்ற இனிய தமிழ் என்றும் நிலைத்து நீடூழி வாழ்வதாக; மானிலமெல்லாம் வாழி - அத் தமிழ் மொழி வழங்கும் நாடும் நன்றாகச் செழித்து வாழ்வதாக;

2682. வாழி தரும மதியுடையோர் - நீதியிற் சிறந்த பக்தர்களும்; தான் வாழி இனிதே வாழ்வதாக.

★ ★ ★

## மார்க்கண்டேயன் கதைப்பாடல் சொல்லகராதி

### அ


அக்கணம் 954
அக்கினி 621, 622, 989, 1090, 1871, 2339
அக்கை அணியும் அரன் 249
அகண்டபடிபாதாளம் 1559
அகண்ட வெளியானவன் வி.64
அகண்ட வெளி 2080
அகண்டு ஓடுதல் 781
அகம் வி.7
அகர முதலாதியாய் வி.57
அகோரம் 1026, 1469, 1729
அங்கங்காய் நின்ற லிங்கம் 1221
அங்கம் 453, 778, 1932, வி.23
அங்கம் பதறல் 1385
அங்கமே சத்தி வி.35
அங்கை வி.8
அங்கை இருதுண்டாய் நொறுக்குதல் 2322
அங்கை விரல் 1468
அசுரர் குலத்தை வேலால் ஒறுத்தவன் 1776
அசைத்தல் 137
அஞ்சதாகும் வி.28
அஞ்சமிக்க கை 2346
அஞ்சல் 549
அஞ்சல் எனல் 241
அஞ்சேல் என ஆட்டுபவன் வி.53
அஞ்சாமல் 975
அஞ்சி 859, 860, 923, 986, 989
அஞ்சிலஞ்சு வி.13
அஞ்சு வி.43
அஞ்சு (பஞ்சபூதம்) வி.53
அஞ்சுகர் 2549
அஞ்சு சிகரம் 1444
அஞ்சு செங்கை 1444
அஞ்சு திங்கள் 1444
அஞ்சு பஞ்சபூதம் 122
அஞ்சு பூதம் வி.28, 1872
அஞ்சு முகம் 1443
அஞ்செழுத்தீசர் அரன் 1540
அஞ்செழுத்தீசரரன் 1309
அஞ்செழுத்து 229, 282, 319
அஞ்செழுத்தை நெஞ்சில் வைத்தல் 759
அஞ்ஞூத்துக் காதம் 1559
அஞ்ஞூறாயிரம் 2125
அஞ்ஞூறு கோடிலட்சம் சிவிகை 2018
அட்ட கசம் 1071
அட்டகிரி 1002
அட்டகெசம் 2553
அட்டகெசம் அதிர்தல் 1439
அட்டகெசம் நெழிதல் 1545
அட்டதிசை 1671, 2548, 2607
அட்டதிசை எட்டுப் பாலர் 1314
அட்டமலை அதிர்தல் 1439
அட்டமலை நெழிதல் 1545
அட்டவணைக்காரர் ஆயிரங்கோடி 2045
அட்டவரை எட்டு 1368
அட்டை 1686
அடங்கல் 1375, 1705, வி.40
அடர்காலன் 1131
அடி-பாதம் 145, 220, 279
அடி வி.4
அடிக்கில் ஏது பலன் 1231
அடிதப்பல்-கால் தடுமாறல் 840
அடி தொழுதல் 956
அடிபட்டு வுதை படுவார் 2354
அடிமை 455
அடிமைத் தொழில் வி.21
அடியவர் 1226
அடியன் வி.24
அடியாமல் 2407
அடியார் 62, 1214, 1309, 1431, வி.5

அடியேன் 352, 598, 965, 1332, 1336, 1351, 1387, 1587, 1937
அடியேன் கணக்கு 2405
அடுக்குதல் 227
அடு[த்]தோர் மனதைக் கலக்கிடுவார் 2264
அடுமொழி வி.30
அடைக்கலத்தைக் கொண்டவர்கள் 2223
அடைக்கலம் 1140
அடைந்தார் (அடைக்கலம்) 2423
அடைந்தோரை வைத்திருந்தோர் 2423
அண்டகோடி 2550
அண்டங்கள் உடல் 1870
அண்ட(த்) தமரருக்கெல்லாமரசே 2499
அண்டத்திமையோர் 2548
அண்டதிக்கு 1546
அண்டந் திசை 2171
அண்ட பகிரண்டம் அதிர்தல் 1541
அண்ட பாதாளம் 1366
அண்டம் 172, 351, 737, 1068, 1298, 1337, 1338, 1551, 1593, 1639, 1646, 1653, 1663, 1669, 1839, 1870, 2599
அண்டம் அசைதல் 1437
அண்டம் எட்டு 1992
அண்டம் எட்டு ஊடுருவி நின்ற அரன் 1433
அண்டம் தளைக்க சித்திர புத்திரனார் தோன்றல் 2543
அண்டம் புவனம் அடங்கல் 2630
அண்டமும் அணுவும் வி.53
அண்டமுகடு முட்டும் பெருவாசல் 2209
அண்டமுதண்டம் வி.40
அண்டமுதண்டம் அடங்கல் நிறைந்தோன் வி.39
அண்டர்க்கரசன் 787
அண்டர் பிரான் 1135
அண்டபுவன மடங்கல் 2606
அண்டரண்டம் 13, 319, வி.24, வி.35
அண்டரண்டவெளி புவனம் வி.57
அண்டவெளி வி.43, வி.47
அண்டவெளியீசன் 1171
அண்டி 965
அண்டை 620
அணியாக 2017
அணு 843
அணுகாமல் 1311
அணுகிச் செல்லல் 2630
அணுகுதல் 632, 940
அணுவுக்கு அணு 13
அணுவெனும் அண்டம் 795
அத்தர் உதை 1534
அத்தன் 25, 336, 2499, 2523
அத்தனார் கோபம் வி.55
அத்துப் பொடியாதல் 1436
அதட்டல் 948, 1401, 1886
அதட்டித் தேடல் 2190
அதட்டுதல் 1464
அதிக தவஞானம் 638
அதிகாரி (எமன்) 2134
அதிசயம் வி.56
அதியார் (சிவன்) வி.75
அதிர்த்தி-அதிர்ச்சி 1554
அதிர்தல் 1003, 1026, 1069, 2334
அதிர நடத்தல் 913, 2211
அதிரூபகற்றை வி.46
அதிரொலி 2107
அந்தகன் 870
அந்தகனார் தூதர் 2280, 2292, 2310
அந்தம் 655, 1801, 2032, 2472
அந்தரம் 913, 1271, 1302, 1556, 2398, வி.66
அந்தர லோகம் அதிர்தல் 1553
அந்தவுரை 428

அந்திமதி 54
அந்திமதி சூடும் அரன் 1819
அந்திமதி சூடுமரன் 1178, 1352, 1591, 1934, 2533
அந்திமதி சூடும் அரன் அடி(பாதம்) 173, 1305
அந்திமதி சூடுமரனடி 893
அந்திமதி சூடுமரனார் 771, 1190, 1619
அந்திமதி சூடும் அரனார் விளி அனல் 1505, 941
அந்திமதி சூடுமரனாரிடம் போதல் 2660
அந்திமதி சூடுமரனிறைவர் 1287
அந்திமதி சூடும் அருளினால் வகுத்தல் 2651
அந்திமுகன் 2376
அப்பைத் தரித்த அரன் 349, 1587
அபயஞ் செய்தவர் 2286
அபையம் 1143, 1330
அபையமிடல் 859, 862
அம்புலியைச் சூடல் 1412
அம்மா 901
அம்மானை 708, 710, 866, 997
அமத்திவிடல்(அமுக்குதல்) 251
அமரர் 275, 351, 1337, 1381
அமுது 2659
அமுர்தசுகம் 260, 268
அமுர்தம் 227, 258-9, 686, 1091
அமைச்சன் வி.54
அய்ங்கரன் 38, 42, 45
அய்ந்து முகத்து அரனார் 576
அய்யம் 847
அய்யமறச் சூரியன் 1273
அய்யமெடுத்து யடைந்தோர் 1957
அய்யன் 96, 170, 364, 554, 757
அய்யா (சிவன்) 304, 1349
அயன் 117
அயிராபதம் 1019
அரசே 878
அரமலை 2080
அரமென்ற குதிரையில் ஏற்றல் 2293
அரவணிந்தவன் வி.52
அரவம் 453, 581
அரவம் நெளித்தல் 1548-9
அரவு 79, 1750
அரவு உரைத்தல் 1757
அரவு சுமைகனத்தல் 1724
அரவுப் படுக்கைமேல் துயில் கொள்ளுதல் 1774
அரவைக் கயறிடல் 1381
அரன் 236, 252, 407, 590, 594, 679, 707, 737, 825, 1142, 1162, 1192, 1330, 1385, 1436, 1601, 1648, 2523, 2529, வி.5, வி.34, வி.54
அரன் அருள் மைந்தன் 614
அரன் அறிதல் 1409
அரன் உரைத்தல் 1850
அரன்ஞ்சாலை 837
அரன்ஞ்சியல் 898
அரன் துணை 1201
அரன் பணிமாற கோலம் 2388-9
அரன் பாதம் 333, 584, 678
அரன் பாதம் அகல விதியோ 1355
அரன் புகழ்க் கணக்கர் (சித்திரபுத்திரனார்) 2144
அரன்புகழ் தழைக்க சித்திரபுத்திரனார் தோன்றல் 2543
அரன் புதல்வன் 54
அரன் சொன்னமொழி 1513
அரன் நினைத்தல் 1411
அரன்மால் வி.49
அரன் லிங்கத்திலிருத்தல் 1606
அரன் வரம் 1290
அரன் வரவு 1469
அரன் விதித்த விதி 1124, 1334
அரனடியார் 2284

அரனடியார் வையகம் 2675
அரனருள் பெற்றவர்க்கு
நமன் இல்லை 1342
அரனிடம் போதல் 1812
அரனார் 1, 108, 250, 261, 327, 604, 772, 1460, 1983, 2132, வி.54
அரனார் இயம்பல் 1844
அரனார் கோபம் தணித்தல் 1810
அரனார் கோபம் 225, 1810
அரனார் சிவதூதர் மகிழ்தல் 2644
அரனார் போல் எமன் 1921
அரனார் மனமகிழல் 833, 2509
அரனார் அந்தவுரை கேட்டல் 2543
அரனார் உலகு 2450
அரனார் சித்திரபுத்திரைப் பிறப்பெடுக்கச் சொல்லல் 2535-2539
அரனார் மொழி 1983, 1987
அரிஅயன் காணாத அடியிணை 1589-90
அரிகாணாப்பாதம் 1332
அரிதேவர் 2132
அரியோன் வி.41
அரிவேதன் தன்னுலகு 2450
அரிவிரிஞ்சன் 1298
அருட்கோவில் 292
அருண்மணிப் பட்டாடை 2472
அருந்துதி 460, 693
அரும்பிணியர் 2351
அரும் பொருள் 207, 209, 1481
அருமை 455, 457, 718, 1340
அருவி வி.4
அருவையர், அருவையர்கள் 510, 520, 2056
அருள் 94, 97, 104, 299, 404, 578, 596, 638, 707, 790, 963, 1162, 1178, 1342, 1472, 1671, 1874, வி.5, வி.10, வி.15, வி.16, வி.34, வி.44, வி.59
அருள்க்கடல் 674
அருள்க்குண்டலம் 1081
அருள்தல் 1525
அருள்நிலை 294, 329
அருள்படைத் தோர்க்குக் குருமொழி வி.76
அருள்மிகு யெமன் 957
அருள் முனிவன் 108
அருள் விருத்தம் 1601
அருள் விளக்கு 237
அருளின் வாறு 739
அருளுதல் 339
அருளேயாம் வி.28
அரைனாழிகை 798
அல்லல் 390
அல்லலகத்து மருள் 816
அல்லா (எல்லாம்) 1516
அல்லா-இறைவன் 1251
அல்லாம் 1277
அல்லுக்குளீசன் 1171
அலங்கரித்தல் 1011, 1019, 2058, 2089, 2061, 2087
அலைகடல் 230
அலை கடலானவன் வி.64
அவகுணங்கள் 2409
அவஞ்செய்தல் 1500
அவதரித்தல் 2563
அவந்தான் செய்யாது அணைத்தல் 1982
அவம் 1296, 1701
அவமாய்கை வி.46
அவமில்லாது சிவன் அழைப்பார் வி.73
அவமில்லா மெய்யோர் 2415
அவமுள்ளோர் காலன் பக்கம் அடுப்பர் வி.77
அவாயம் 1645
அவுணன் 57
அவை (எல்லாம்) வி. 5

அவ்வயமிடல் 862
அழகு 699, வி. 22, வி. 58
அழகுடையான் 713
அழகுமுகலட்சணம் 478
அழியுனாள் வி. 36
அழுதல் 113
அளன்று 857
அளவு 1232, 1233, 1659
அற்புதம் 2397, 2662
அறந்தவங்கள் 378
அறம் 617, 2558
அறிவு 166, 418, 628, வி.4, வி.27, வி.58
அறிவு அகலுதல் 1677
அறிவு அழிதல் 1693
அறிவுமதி 602, 625
அறுகைகள் வி.27
அறுசுவை 196-7
அறுபத்து நாற்கோடி யிருஷி 881
அறுபதினாயிரங்கோடி 2054
அறுமுகவன் 90,2376, 2513
அறுமுகவன் தந்தையர் 1142
அறுமுக வேலவர் 2549
அன்பாகத் திறத்தல் 2064
அன்பாய் 1078, 1431
அன்பு 309, 386, 401, 407, 412, 2124, 2423, வி.41
அன்பு குணமாதா 457
அன்புகந்தோர் 1640
அன்பு சிவபூசை 1571
அன்ன நடைமாது 693
அன்பு வைத்து 181
அன்ற வொட்டுதில்லை (அண்ட விடுவதில்லை) 906
அன்னம் 152
அன்னை 157, 278, 410, 420, 490, 625, 730, வி.8
அன்னை தந்தை 163, 608, 615, 702, 1609,1613, 1960
அன்னையர் 424
அன்னையர்கள் சேயை வெகுளல் இல்லை 1893-4
அன்னையர் குழவி பால் குடிக்கும் போது கொன்றுவிட்டால் தடுப்பாரில்லை 1896-7
அனந்தம் 1593
அனல் 309, 807, 906, 916, 950
அனல் குழல் 898
அனல் விரட்டல் 922
அனல் சூழல் 919
அனாதி வி. 53
அனுதினம் 128
அனைபெரும்வாழி 2675
அனைவோர் 299
அனேகம் 1663
அனேகவரம் 1196

## ஆ

ஆக்கினைகள் 1398
ஆக்கை 1678, வி.67
ஆகம் 348
- உடம்பு 412
ஆகாசத்தை நிறைத்தல் 2452
ஆகாசம் 15, 1068, 1437, 2081
ஆகாசப் பந்தல் 2452
ஆங்காரஞ் சூறை 291
ஆங்காரம் 948, 954, 965, 2190
ஆங்காரமாய்ச் சிறல் 854
ஆங்காரமான அரன் 767
ஆசி (ஆசை) 83
ஆசை 119, 389, 1355, 1403, வி.25, வி.46
ஆசைமனம் 765
ஆசைமோகம் வி.26
ஆசை யுறல் 357
ஆசை வெள்ளம் 367
ஆசை வைத்தல் 653
ஆட்டிவிற்குஞ் சூத்திரங்கள் 1251

ஆடரவஞ்சூடும் அரன் 1760
ஆடல் மதனன் 699
ஆடி-சிவன் 1762
ஆடினவர் 212
ஆடுகின்ற ஈசரனார் 751
ஆடுதல் 24
ஆடும் பெண்கள் கோடி 2056
ஆடை வகைகள் 2475
ஆண்டி (சிவன்) 1892
ஆண்டு (வருடம்) 116
ஆண் மூங்கில் 620
ஆண்மை வி.22
ஆணிக் கனகம் 1033, 2077
ஆணிப் பொன் விதானம் 1017
ஆணை 1974, வி.72
ஆத்த நரகம் 2334
ஆதரவு 632, 650, 1659, 2223, 2558
ஆதாய மீயாதால் (சலுகை காட்டாது அழைத்தல்) 2155
ஆதி236, 642, 1139,1389, வி.34, வி.36
ஆதி அனாதி வி.53
ஆதி சிறப்பு வி.73
ஆதி சீர் மாலை பூசை வி.69
ஆதி நிலை தவசு 404
ஆதி மேல் எமன் ஆணையிடல்1984
ஆதியரன் பாதம் 1905
ஆதியரனார் 724, 1922
ஆதியருள் வடிவு 312
ஆதியானவன் வி.64
ஆதிவிதி 1194
ஆதினாளுண்டான அரன் 1901
ஆதிசேடன் பூமிமாதுவிடம் கூறல் 1738
ஆந்தை முழி 1686
ஆபத்துக்குப் பாவம் 1351
ஆபரணம் 1995
ஆமை 220
ஆமை நினைவு தடுமாறல் 1732
ஆமை நீரில் எழும்புதல் 1732
ஆமை பூமியைச் சுமத்தல் 1733
ஆமை முதுகில் கரிகள் தங்கல் 1731
ஆமை முதுகு 1730
ஆயிரங்கோடி 1593, 2167
ஆயிரங்கோடி அடந்த இடி 1372
ஆயிரங்கோடி அடி 1551
ஆயிரங்கோடி யடரும் புழுக்குழி 2342
ஆயிரத் தெட்டண்டம் 15, 795, 1373
ஆயிரத் தெட்டண்டம் அடங்கல் 15, 234
ஆயிரம் காதம் அகலம் 2138
ஆயிரம்கோடி தூதர் 996
ஆயிரம்கோடி பிலன் 1842
ஆயிரம் பேர் 869, 1006
ஆயிரம்பேர் தொட்டில்
ஆட்டல் 2593
ஆயிரம்பேர் புனலாட்டல் 2594
ஆயிரம்வருஷம் 1268
ஆயிரம் வெள்ளம் குலதேவர் 2029
ஆயிரம் யோசினை ஆழும் 2341
ஆயிளை 724
ஆயுதங்கள் 1047
ஆரணங்கு (பூமாதேவி) 1790
ஆரணி வேதம் வி.52
ஆராலும் காணாதான் (சிவன்) 1779
ஆல் வி.20
ஆலங்கிறுத மண்டபம் 2077
ஆலத்திப் பெண்கள் 2054
ஆலத்தி 833, 2388
ஆலம் 1049
ஆலமரவு 1915
ஆலமுண்டகண்டர் 636
ஆலமுண்டகண்டரரன் 417, 583, 588, 1798
ஆலையம் வி.69
ஆலையங்களைத் தூத்தல் 2430
ஆலையங்களில் விளக்கிடுவோர் 2430

ஆலிலையில் கண்துகிலுமாழி 1777
ஆவத்து (ஆபத்து) வி.24
ஆழி கடைந்த அரவு 1774
ஆழி (மால்) 1763; 1792
ஆழிமால் மந்திரி 1905
ஆற்றிணை 2078
ஆறாத நோயர் 2357
ஆறாயிரம் காதம் அகலம் 2212
ஆறாயிரம் கோடி கணக்கர் 2622
ஆறாயிரங்கோடி காத விலாசம் 2507
ஆறாறு தத்துவங்கள் வி. 63
ஆறு இருசாண் வி.48
ஆனவரை எட்டு 1368
ஆனை 510, 557
ஆனை அறுபதினாயிரங்கோடி 2016
ஆனைக் குட்டிகள் 984
ஆனையுரித்த அரன் 37

இ

இங்கிதம் வி.25
இச்சை 258, வி.18
இசை வி.44
இட்டயெழுத்து 1118
இடஞ்சல் 2211
இடஞ்சல்ப்படுதல் 1395
இடஞ்சலில் சீவன்கள் நடத்தல் 2214
இடப்பாகம் வைத்தல் 302
இடம் 242, 1654-5, 1688
இடர் 238, வி.7
இடி 942, 1917, வி.31, வி.40
இடிக்கிதனில் உயிரை வதைப்போர் 2319
இடிக்கு எதிராய் குடை வி.37
இடித்துத் தள்ளல் 2265
இடிபோலதிர்தல் 1735
இடியேறென நகைத்தல் 976
இடியோசை 690
இடைகூறு தானிடுவோர் 2299
இடைகொஞ்சம் 468
இடைந்தோர் 2422
இடைந்தோரை ஆதரித்தோர் 2422
இணக்கம் 2135
இணை 699
இந்திரர் 20, 648
இந்திர சுகம் 163
இந்திராணி 2574, 2577, 2591
இந்திராணி மனம் மகிழல் 2611
இந்து 1082, 2487
இமகணங்கள் மகிழல் 2647
இமகாலன் 1292
இமதிசை 2033
இமதூதர் ஓடிவரல் 2208
இமதூதர் 2008
இமதூதன் 775, 911
இமயன் 2128
இமன் 360, 642, 667, 1074, 1143, 1519, 1645
இமன் அணுகான் 1635
இமன் அஞ்சி நிற்றல் 1489
இமன் படுதல் 1570
இமன் கற்பினை 2187
இமன்வாழி என உயிர்கள் வெளியேறல் 2199
இமனார் 1051
இமை 1317
இமைப்பளவில் 875, 883
இமைப்பொழுது 354, 937, 2410
இமையோர் 2053, வி.34
இமையோர்கள் தேடரிய சுந்தரன் 1157-8
இமையோர்கள் முதல்வன் வி.42
இயக்குதல் வி.66
இயம்படா 966
இயம்பல் 1614, வி.74
இயம தன்மராசா 2060
இயம புரம் 2061
இயமன் 1886
இயமன் பாசம்விடல் 1418

